# வின்ஸ்டன் சர்ச்சில்

(WINSTON CHURCHILL)

எம். எக்ஸ் - மிராண்டா



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண் - 484

# வின்ஸ்டன் சர்ச்சில்

ஆசிரியர்
எம். எக்ஸ். மிராண்டா, எம்.ஏ., பி.டி.,
துணைப் பேராசிரியர், வரலாற்றுத் துறை,
இலயோலாக் கல்லூரி,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—June, 1973

T.N.T.B.S. (C.P.) No. 464



# WINSTON CHURCHILL

M. X. MIRANDA

Price Rs. 8·65

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

*Printed by*
VENSAN PRESS,
48, Vythianatha Mudali St.,
Madras-1.

# அணிந்துரை

**திரு. இரா. நெடுஞ்செழியன்**
**(தமிழகக் கல்வி-உள்ளாட்சித்துறை அமைச்சர்)**

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதின்மூன் ருண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி. ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழி லேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.) 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரண மாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத் தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக் கழகம் ஆண்டுதோறும் எடுத்து வரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்ருன **'வின்ஸ்டன் சர்ச்சில்'** என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **464** ஆவது வெளியீ டாகும். கல்லூரித் தமிழ்க்குழுவின் சார்பில் வெளியான **35** நூல் களையும் சேர்த்து இதுவரை **499** நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரியதாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# பொருளடக்கம்

# 1. கருவிலே திருவுடைய ஒருவர்

வின்ஸ்டன் சர்ச்சிலுக்கு வரலாற்றில் சிறப்பான இடம் உண்டு. இரண்டாவது உலகப்போரில் இங்கிலாந்தின் பிரதமராக இருந்து இணையற்ற சாதனைகளைப் புரிந்த பெருமகனாக அவர் எண்ணப்படுகிறார். ஆனால், உண்மையில் உலகப்போர் தொடங்குவதற்கு வெகு காலத்திற்கு முன்னரே அவர் வரலாற்றில் நிலையானதோர் இடத்தைத் தமதாக்கிக் கொண்டார். நாற்பதாண்டுகளாகப் பொது வாழ்வில் நாடறிந்தவல்லவர் அவர். பல்வேறு அமைச்சரவைப் பொறுப்புகளை வகித்த புகழ்பெற்ற அரசியல் வல்லுநர் சர்ச்சில். இன்று உயர்ந்த படைப்புகள் என்று கருதப்படுகின்ற சிறந்த நூல்களை ஆக்கிய வரலாற்றறிஞர் அவர். இவைமட்டுமல்ல. தெளிவான, திண்ணமான பல் திறப்பட்ட இயல்புகளைக் கொண்ட ஆன்று அவிந்து அடங்கிய சான்றோர் சர்ச்சில். சர்ச்சைக் குரியவர் சர்ச்சில் என்று கூறினால் அதுவும் மிகையன்று. அவரை வியந்து பாராட்டுவோர் பலர். அவர்வழிச் செல்லும் தொண்டர் பலர். அவருடன் கருத்து வேறுபாடு கொண்ட மாற்றார்களும், அவர் அறிவுத்திறத்தையும், ஆற்றல்களையும் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

தமது அரசியல் வாழ்வு முழுவதிலும் சர்ச்சில் தலைசிறந்த மனிதனாகத் திகழ்ந்தார். முன்னணிக்கு உந்தித் தள்ளும் காந்த சக்தி அவரிடம் இருந்தது. தோல்விகளையும், தொல்லைகளையும் கண்டு கலங்குவது அவரது இயல்பன்று. அவரோடு சம காலத்தில் வாழ்ந்தவர்கள் அவரைச் சார்ந்திருந்திருக்கலாம் அல்லது அவரை எதிர்த்திருக்கலாம். ஆனால், அவரை விலக்கி விட்டு மட்டும் யாரும் செயல்படுவதில்லை. சர்ச்சிலின் பொது வாழ்வில் அவரிடம் நம்பிக்கையைவிட ஆர்வமே அதிகம் வெளிப்பட்டது. அதனையே அவரும் பெரும் அளவில் ஊட்டிவந்தார். அவரது அறிவுக் கூர்மையும், அசாதாரணத் துணிச்சலும் சில வேளைகளில் அவருக்கு இடையூறாக இருந்தன. அமைதிக் காலத்தில் ஓர் அரசியல் வல்லுநரிடம் இத்தகைய பண்புகளை ஒரு மக்களாட்சி

அரசியல் விரும்பும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. அதிலும் பிரிட்டிஷ் மக்களாட்சி முறையில் தமது ஆட்சியாளர் ஒருவரிடம் அறிவுத்திறம் இருந்தாலே ஐயப்பாடுகள் எழுவதுண்டு. துணிச்சலும், தன்முனைப்பும் பொதுவாக வரவேற்கப்படும் பண்புகள் அல்ல. வன்மையான ஆற்றல்கள், விழிப்புணர்ச்சி, நடைமுறை அறிவு ஆகிய அரசியல் பண்புகளில்தாம் நாட்டுமக்கள் நம்பிக்கை கொள்வார்கள். சர்ச்சிலிடம் பின்னர்க் கூறப்பட்ட பண்புகள் இருந்தனவா வென்பது ஆய்விற்குரிய வொன்று.

இரண்டாவது உலகப்போர் தொடங்கியதும் சர்ச்சில் தமது சிறப்பான ஆற்றல்களைப் பயன்படுத்துவதற்குத் தக்க வாய்ப்புக் கிடைத்தது. அவற்றை அவர் முழுமையாகப் பயன்படுத்தினர். போர்க் காலத்தில் அவர் நாட்டுமக்களின் அன்பான பற்றுதலையும், நம்பிக்கையையும் பெற்றிருக்க முடிந்தது. இங்கிலாந்தை இருள் மூடிக்கொண்டிருந்த மிக நெருக்கடியான நேரம் அது. எதிரியின் திட்டங்களை முரியடிக்கக் கூடிய முன்னேக்கும், கற்பனையாற்றலும் தேவைப்பட்ட நேரம். எத்திக்கிலும் ஆபத்தும், அழிவும் எதிர் நோக்கியிருந்த நேரம். துணிவே வெற்றியின் வழியாக இருந்த நேரம். இந் நிலையில்தான் வெற்றித் திருமகன் சர்ச்சிலின் ஆற்றல்களை மக்கள் ஒப்புக்கொண்டனர். வளமான அவரது அறிவுத்திறம், இளமை பொங்கும் வீரம், தன்னம்பிக்கையுள்ள உறுதியான முடிவுகளின் சக்தி ஆகிய பண்புகளே போர்க்காலத்தில் தலைவர்களிடம் மக்கள் எதிர்பார்க்கும் பண்புகள். துணிவு, அறிவு, தன்முனைப்பு ஆகியவை குறிப்பிட்ட காலத்திற்குப் பொருத்தமான தேவைகள்.

கடுகடுத்த முகம், கழுகுப் பார்வை, யாவரையும் கவர்ந்திழுக்கும் புன்முறுவல், உறுதியான இதழ்களின் பிடியில் புகைந்து கொண்டிருக்கும் சுருட்டு, பரந்த தலைக்குப் பொருத்தமான தொப்பி, உயர்த்திய கரங்கள், கைகளில் சுழலும் ஊன்றுகோல் அல்லது ‘V’ என்ற வடிவில் வெற்றிச் சின்னமாகக் காட்டப்படும் இருவிரல்கள், இத்தகைய மகிழ்ச்சியூட்டும் தோற்றம் போர்க் காலத்தில் ஆங்கில நாட்டுமக்களுக்கு மட்டுமன்று, இருகோளங்களில் வாழும் உலக மக்களுக்கும் பழக்கமான காட்சி. உண்மையில் அவரது பிடிவாதமுடைய சுதந்திரமான முடிவுகள், அன்புள்ள உள்ளம், தாராளகுணம், ஆழ்ந்த நாட்டுப்பற்று ஆகியவை பரம்பரையான பிரிட்டிஷ் பண்புகள். அவரது நகைச்சுவையிலும், பேச்சிலும் மிளிர்ந்த மிடுக்கும், போரார்வம் ஊட்டும் பேச்சாற்றலும், பிரிட்டிஷ் மக்களின் உள்ளத்தில் எதிரொலித்தன.

வெளியுலகம் ஆங்கில நாட்டின் உறுதியையும், இயல்பையும் சர்ச்சிலிடம் காணத் தவறவில்லை.

நாஸிச, ஃபாஸிச வல்லாட்சியாளர்களை எதிர்த்து நடத்தப் பட்ட போராட்டத்தைப்பற்றி எழுதும் வருங்கால வரலாற்றாசிரியர்கள், பிரிட்டன் வல்லாட்சியை எதிர்த்து உரிமைக் குரலெழுப்பிய சக்திகளின் நிலைக்களனாகத் திகழ்ந்த தென்று குறிப்பிடுவார்கள். அந்தப் போராட்டத்தை நடத்திய மக்கள் தலைவர்களில் சர்ச்சில் சிறப்பிடம் பெற்ற தனிப்பெரும் தலைவர் என்பதனையும் குறிப்பிடாமல் இருக்க முடியாது. அமெரிக்காவும், பிரிட்டனும் பிரமாண்டமான அளவில் இப் போராட்டத்தில் ஈடுபட்டன. பிரிட்டனின் எதிர்ப்பும், உறுதியுமின்றி, ஹிட்லருக்கு எதிராகப்பெற்ற இறுதி வெற்றிச் சூழ்நிலை உருவாகி இருக்க முடியாது. பிரிட்டன் வீழ்ந்திருந்தால் அதன் தொழில்களும், ஆற்றல்களும் நாஜிகளின் ஆதிக்கத்திற்குள் இணைக்கப்பட்டிருக்கும். ருஷ்யாப் படையெடுப்பு வேறு விதமாக முடிவுற்றிருக்கும். ஐரோப்பா மட்டுமன்று, ஆசியாவும், ஆஃபிரிக்காவும், ஜெர்மனிக்கும், இத்தாலிக்கும் அடிமையாகி இருக்கும். ஏன்? அமெரிக்காவுங்கூட அழிவைச் சந்தித்திருக்கும். இன்றும் நின்று நிலவுகின்ற மேலைய நாகரிகம் சர்ச்சிலுக்கு மிகவும் கடமைப் பட்டுள்ளது. ஏனெனில், அவர் பிரிட்டனின் எதிர்ப்பை ஊக்குவித்து வழி நடத்தியதோடு நின்றுவிடவில்லை. நேச நாடுகளையெல்லாம் வன்மையாக இணைத்து நின்று, அவர்களின் சக்திகளைப் பேரணியாக உருவாக்கி, அந்த ஒற்றுமையையும் கூட்டுறவையும் போர்க்காலம் முழுவதிலும் தமது உழைப்பினாலும், உறுதியினாலும் காப்பாற்றிய பெருமையும் சர்ச்சிலையே சாரும்.

## தள்ளப்பட்ட கல்லே தலைக்கல்லானது

பல திறப்பட்ட அவரது பொதுவாழ்வில் சர்ச்சில் ஒரு சமயம் ஓர் அரசியல் கட்சியால் ஒதுக்கித் தள்ளப்படுவார். வன்மையாகத் தாக்கப்படுவார். அவர்மீது குறை கூறுவார்கள். பொறுப்புடன் முடிவுகளைச் செய்யும் பெரியவர்கள்கூட அவரை இகழ்வதுண்டு. அதே நபர்கள் வேறு சில சமயங்களில் அவரை ஏற்றுக்கொண்டு வியந்து பாராட்டுவதும் உண்டு. இத்தகைய முரண்பட்ட நிலைகளுக்குக் காரணங்கள் உண்டு. குற்றம் குறை இல்லாத மனிதன் இருக்கமுடியாது. அதிலும் பெரிய மனிதன் என்றால் பெரிய குறைகள் இருக்கும். சிலையின் தலையில் பொன்னைக் கொட்டிப் புதைத்து வைத்தாலும், அதன் காலடி மண்ணாகத்தானே இருக்கும். இந்தப் பொதுவிதிக்குச் சர்ச்சில் விலக்கு அல்லர். பொதுவாகப் பெரியவர்களின் குறைகளை மிகைப்

படுத்தி அவர்களின் பெருமைகளைக் களங்கப்படுத்துவது அன்றாட வாழ்க்கையாகி விட்டது. இத்தகைய பொழுதுபோக்கில் அவர்களுக்கு ஓரளவு மனநிறைவு கிடைக்கலாம். எனினும் தமது காலத்தில் வாழ்ந்திருந்த தலைவர்கள் யாவரையும்விடத் தமது ஆற்றல்களாலும், சாதனைகளாலும் தனியிடத்தைப் பிடித்துக் கொண்ட ஒரு பெருமகனைத் தரக்குறைவாகக் கருதுவது அறிவுடைமையாகாது. அவர்களிடம் காணப்பட்ட குறைகளே நல்லியல்புகளாகவும் இருந்தால், பெருமக்கள் பெருமக்களே ஆவர்.

வின்ஸ்டன் தலைசிறந்த பெருமகன். 'மன வலிமையிலும், உயிரோட்டத்திலும் சர்ச்சில் இந் நாட்டின் தலைசிறந்த மக்களில் ஒருவர்'[1] என்று போனூர்லா (Bonarlaw) ஒப்புக்கொண்டிருக்கிறார். அவரது அறிவுத்திறம் தவறுத்தன்மை பெற்றது என்பதன்று. அவருடைய குறைகளையும், நிறைகளையும் நடுநிலைமையோடு காணவேண்டும். அவரது வாழ்வைச் சம நிலையோடு ஆராய்கின்றபோது குறைகளைவிடக் குணங்களே மேலோங்கி நிற்பதைக் காணலாம். சர்ச்சிலின் பண்புகளை ஆராய்கின்றபோது அவர் உள்ளத்தால் ஒரு போர்வீரர் என்ற உண்மை எளிதில் புலப்படும். போர்ப்பயிற்சிதான் அவர் காதலித்த முதல் தொழில். போர்ச் செயல்களை அவர் விரும்பித்தேடி மனமார அனுபவிப்பார். குண்டுமாரி பொழிந்து கொண்டிருக்கும் நிலையிலுங் கூட அவர் அச்சமின்றி அங்குமிங்கும் அலைந்து ஏற்பாடுகளைக் கவனிப்பார். சர்ச்சில் செயலில் ஈடுபடுவதில் உள்ளம் திளைத்தார் என்பதுதான் இதன் இரகசியம். உயிரையும் பணயம் வைத்து விளையாடுகின்ற போர்ச்செயல்கள் அவர் போன்றவர்களுக்கு இடைவிடா மனநிறைவுதரும். செயலாக்கம் சர்ச்சிலின் குணச் சிறப்புகளின் திறவுகோல் போன்றது. அவரை ஒரு சிந்தனைச் சிற்பி என்று கூறுவிடினும், தெளிவாகவும், வன்மையாகவும் சிந்திக்கக் கூடியவர் என்று கூறலாம். ஆக்க ரீதியான சாதனைகளில் ஈடுபடவேண்டுமென்பதுதான் அவரது சிந்தனையின் விளைவு ஆகும். மோன நிலையில் தியானம் செய்வதென்பதெல்லாம் அவரது இயல்பிற்கு அப்பாற்பட்டது. உள்ளத்தைச் சார்ந்தவைகளை அவர் இயல்பு நாடவில்லை. ஒரு முறை சர்ச்சில் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்திற்குச் செல்லவேண்டுமென்று ஆசைப்பட்டாராம். ஆனால், அவரது ஆசை நிறைவேறவில்லை. 'ஆக்ஸ்போர்டு அவரது ஆன்மீக இல்லமாக' இருக்கவில்லை.

[1] Churchill–His Life and Times, Malcolm Thomson, p. 12.

**பல்கலை வல்லவர் - சொல்லின் செல்வர்**

வின்ஸ்டன் ஒரு தத்துவ மேதையல்லர். அவர் ஒரு கலைஞர். 'வெறும் செயல்மட்டும் நிறைவு தராது, அது முழுமை பெற்ற சாதனையாக இருக்கவேண்டும்' என்னும் உயரிய நோக்கம்படைத் தவர் சர்ச்சில். எது செய்தாலும் கலைநுணுக்கத்துடனும், வருந்தி உழைக்கும் குறைவற்ற திறமையுடனும் செய்து முடிப்பது அவரது வழக்கம். இது கருவிலே திருவுடைய பெருமக்களைக் காட்டும் தவறில்லாத அடையாளமாகும். சர்ச்சில் திறமை மிக்க எழுத்தாளர். அக்காலத்திய பேனா மன்னர்களில் புகழ் மிக்கவர். பண்டை இலக்கியங்களின் அழகைப் பயன்படுத்து வதில் வல்லவர். அவரது எழுத்துக் கிளர்ச்சியூட்டும்; களிப் பூட்டும். பயணக்கட்டுரைகள், வாழ்க்கை வரலாறு, சுயசரி தைகள் வரலாறு இத்தனையும் அவர் படைத்திருக்கிறார். எழுத்துப் பணியின் தொடக்க காலத்தில் ஒரு புதினமும் அவர் புனைந்திருக்கிறார்.

சொல்லின் செல்வர்என்ற முறையில் சர்ச்சிலின் சாதனைகளைப் பற்றி இரு கருத்துகள் இருக்கமுடியா. சிறுவயதில் சில சொற் களை உச்சரிப்பதில் அவரிடம் இருந்த குறைபாட்டை போக்கிக் கொள்ளவேண்டு மென்ற ஆர்வம்தான் சர்ச்சிலின் பேச்சாற்றலை வளர்க்கத் தூண்டியது. இத் துறையில் அவர் பெற்ற புலமை அவருடைய சொற்பொழிகளைக் கேட்போரை வியக்கத்தூண் டியது. வெள்ளருவிபோல் ஓடிவரும் அவரது சொற்பெருக்கு மக்களைக்கவர்ந்து, மகிழ்வித்து உயிரூட்டும் சக்திவாய்ந்தது. மக்கள் உள்ளத்தைத்தொடும் கம்பீரமான நேரடியான நடையில் அவர் பேசுவார். வருந்தி உழைத்துத் தமது சொற்பொழிவுகளைத் தயாரிப்பார். சில சொற்றொடர்களைப் படைப்பதில் அவருக்கு இணை அவரேதான். தம்முடைய கருத்துகளுக்கு வடிவம் தருவ தற்காக அவர் உருவாக்கியிருக்கும் சில சொற்றொடர்களை யாரும் என்றும் மறக்கமுடியாது. 'இரும்புத் திரை' (Iron curtain) 'எலும்பில்லா அதிசயம்' (Boneless wonder) போன்ற சொற் றொடர்களும், போர்க்காலத்தில் பிரிட்டனைக் காப்பாற்றிய வான் படை வீரருக்கு அவர் சூட்டிய புகழ்மாலையும் வரலாற்றில் நீங்கா இடம் பெற்றவை.

சர்ச்சிலின் கைத்திறம் பல வழிகளில் ஒளிவிட்டது. ஓய் வின்றி ஏதாவது செய்துகொண்டிருப்பது அவரது இரத்தத்தில் கலந்த தொன்று. ஓவியம் எழுதுவதில் அவரிடம் விளங்கிய ஆற்றல் குறிப்பிடத்தக்கது. அவர் தீட்டியுள்ள இயற்கைக் காட்சிகள் சிறந்த கலை ரசிகர்களின் வீடுகளில் இடம் பெற்

றுள்ளன. விடுமுறைக்குச் செல்லும் இடங்களிலெல்லாம் அவர் ஓவியம் எழுதுவதில் ஈடுபடுவார். அவர் தமது சொந்த விமானத்தை ஓட்டிச்செல்லவும் பயிற்சி பெற்றிருந்தார். அறிவுலக மேதைகளாக விளங்கிய பலர் நடைமுறை ஆற்றல்களைப் பெற்றிருக்கவில்லை. சர்ச்சிலிடம் கைவினைஞரின் திறமையும் இயல்புகளும் இணைந்து காணப்பட்டன.

உலைவில்லாத உழைப்பிற்குப் புகழ்பெற்ற சர்ச்சிலிடம் அசாதாரணமான பிடிவாதமும் இருந்தது. விரும்பியதைப் பெறும் வரை அவர் ஓய்வதில்லை. எதுவும் அவரைத் தடுத்து நிறுத்த முடியாது. சூடான் படையெடுப்பில் தமக்கு இடம் கிடைக்கும் வரை அவர் தமது முயற்சிகளை விடவில்லை. தன்னம்பிக்கையின் துணையுடன் அவர் உலகில் நடமாடினார். வருவது நோக்கும் முன்னுணர்வுசர்ச்சிலிடம் அடிக்கடி வெளிப்பட்டவோர் அருங்கொடையாகும். சில வேளைகளில் அவர் வருவது உரைப்பார். அவர் உரைப்பவை யூகமாகவும், நுண்ணறிவின் ஆய்வுத்திறனாகவும் இருக்கலாம்; அல்லது இல்லாமலும் இருக்கலாம். ஆனால், அவரது சொற்கள் உண்மையாக நிறைவேறும். சர்ச்சில் அடிக்கடி கட்சிமாறிக்கொண்டிருந்ததால் அவர்மீது சிலருக்கு வெறுப்புணர்ச்சி ஏற்பட்டது. கட்சியுடன் அவர் கொள்ளும் கருத்து வேறுபாடு, முரண்பட்ட கொள்கைகளை அவர் வற்புறுத்துவது போன்ற செயல்கள் அவரை ஒரு நம்பத்தகாதவராக எண்ணத் தூண்டின. சர்ச்சில் முதலில் தந்தையாரின் ஜனநாயக டோரிக் கட்சியில் சேர்ந்திருந்தார். அதன் தலைவர்களுடன் கருத்து வேறுபாடு கொண்டார். அவர்களுடன் போராடினார். இறுதியில் எதிர்க் கட்சியாக இருந்த லிபரல்களுடன் சேர்ந்து கொண்டார். தீவிரவாதிகளுடன் கலந்து உறவாடினார். லிபரல் கட்சிக் கூட்டு அமைச்சரவை கவிழ்ந்தவுடன் மீண்டும் கட்சி மாறிக்கொண்டு தம்மை கன்சர்வேடிவ் என்று கூறிக்கொண்டார். அதனை அடுத்து டோரிக் கட்சியில் உறுப்பினரானார். பின்னர் இந்தியப் பிரச்சினையின்போது தலைவராக இருந்த பால்ட்வினை (Baldwin) எதிர்த்தார். இவ்வாறு டோரி அரசை எதிர்க்கும் சுயேச்சையான எதிர்ப்பாளர் என்ற நிலையை அடைந்தார்.

### மாற்றம் கண்டு மருளவேண்டா

சர்ச்சில் அடிக்கடி கட்சிமாறியது வரலாற்று உண்மை. இது பற்றிப் பாராளுமன்றத்தில் யாரோ குறிப்பிட்டபோது, 'மாற்றம் கண்டு மருளவேண்டா. மாற்றம் வளர்ச்சியின் அறிகுறி-

மாற்றங்கள் மூலம்தான் ஒருவன் முழுமை பெறமுடியும்'[1] என்று அவர் பதிலிறுத்தார். இப் பதில் அவருடைய மாற்றங்களின் உண்மையான விளக்கம் அன்று. சர்ச்சில் தமது கட்சிப்பற்றில் நிலையில்லாமல் இருந்த போதெல்லாம், அவர்தம் மனச்சாட்சிக்கு முரணாக நடக்கவில்லை; நல்ல கட்சித் தொண்டனாகவும் இருக்க வில்லை என்பது உண்மை. எந்தக் கட்சியும் அவர்மீது திணிக் கின்ற கொள்கைகளை அப்படியே விழுங்கிவிடுவது அவரது வழக்கமன்று. அவரைப் பொறுத்தவரை கொள்கைகளை அவரே தெரிந்து தெளிவு பெறவேண்டும். அவரது கட்சியில் சர்ச்சில் என்ற ஒருவருக்குத்தான் இடமுண்டு.

கட்சி வழியில் அவரை அழைக்கவேண்டு மென்றால் 'டோரி ஜனநாயகவாதி' (Tory Democrat) என்பதே பொருத்தமுடையது. கோமகனார் மாளிகையில் பிறந்த சர்ச்சிலின் உடலில் உயர்குடி இரத்தம் ஓடியது. மனித நலத்தில் ஆர்வமும், பிறரிடம் அன் பான நல்லெண்ணமும், மக்களின் மாண்பில் நம்பிக்கையும் அவர் கொண்டிருந்தார். மக்கள் அவரைத் தலைவராக ஏற்றுக்கொள் ளும் வரையில் அவர்களின் காப்பாளராக இருக்க அவர் தயா ராக இருந்தார். அவர் தம்மை லிபரல் என்று கூறிக் கொள்ள லாமே தவிர, ஒரு சோஷியலிஸ்டு என்று அழைத்துக்கொள்ள விரும்பவில்லை. தொழிலாளர் வர்க்கத்தின் வல்லாட்சி என்பதே சர்ச்சிலுக்கு வெறுப்பை யூட்டும். தலைமை தாங்குவதென்பதற்குத் தொண்டு செய்தல் என்பதுதான் உண்மையான பொருள். அதி காரத்தில் இருப்பவர்கள் தங்களின் சொந்த நலன்களை வளர்த்தல், தனிநபர் வசதிகளை உருவாக்கிக்கொண்டு தம்மால் ஆளப்படு கின்ற மக்களை வறுமையிலும், துன்பத்திலும், அவலத்திலும் ஆழ்த்துதல் ஆகியவையெல்லாம் சர்ச்சிலுக்கு உடன்பாடு இல்லை. சர்ச்சிலுக்குப் பல முறை தம் கட்சிக்காரர்களையே எதிர்க்க வேண்டிய சூழ்நிலைகள் உருவாயின. வர்த்தக வரிச் சீர்திருத்தப் பிரச்சினையில் டோரிகளுடன் தொடர்பை அறுத்துக்கொண்டார். லிபரல்கள் சோஷியலிஸ்டுகளுக்காக நாட்டைப் பலியிடுகிறார்கள் என்ற காரணத்திற்காக அவர்களின் உறவை விட்டொழித்தார். பிரிட்டிஷ் பேரரசைச் சிதைக்கிறார்கள் என்பதற்காக டோரித் தலைவர் பால்ட்வினைச் சாடினார். அவரது போக்கு அடிக்கடி மாற்றங்களுக்கு உட்பட்டிருந்தாலும் தம்மைப் பொறுத்தவரை யில் கொள்கை மாறாதவர் என்று கருதிக்கொண்டிருந்தார்.

குறிப்பிட்ட பிரச்சினைகளிலும், சூழ்நிலைகளிலும் தமது இயல்பிற்கும் உடனடி முடிவுகளுக்கும் ஏற்ற முறையில் செயல்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson p. 18.

படுவது அவரது வழக்கம். அதுவே அவரது கொள்கை உறுதியின் அடிப்படையுமாகும். அன்றாட நிகழ்ச்சிகளைப்பற்றி அவரது கருத்துகள் விரைவாகவும், வன்மையாகவும் வெளிவரும். நீண்டகாலத் திட்டங்களில் ஈடுபடும் மறைமுகத் தந்திரங்களும் சூழ்ச்சிகளும் அவரிடம் இருக்கவில்லை. ஒளிவு மறைவின்றி எதையும் வெளியே பேசிவிடும் வெள்ளை மனம் படைத்தவர் சர்ச்சில். தன்மானத்தை விட்டுக் கொடுக்காமல் பரிவுடனும் நேர்மையுடனும் பிரச்சினைகளை அவர் அணுகுவார். குறிப்பிட்ட கட்சிப்பற்று தலை அளவுகோலாகக் கொண்டவர்கள் அவரைச் சந்தர்ப்பவாதியாகவும், நம்பத்தகாதவராகவும் கருதினார்கள்.

## கொண்டது விடாக் கொள்கை வீரன்

குறிப்பிட்ட பிரச்சினைகள்பற்றித் தம் கொள்கைகள்மீது அவர் கொண்டிருந்த பற்றுதல் அவர்தம் சகாக்களை மலைக்கவும், அவர்மீது சினங்கொள்ளவும் தூண்டியது. பிறருடன் ஒத்துழைக்கும் பண்பு அவரிடம் இல்லை என்பதை அவர்கள் கண்டனர். லாயிட் ஜார்ஜைப் (Lloyd George) போல் சர்ச்சில் பிறரின் எண்ணங்களை அறிந்துகொள்ளவில்லை. அவர் தீவிரமான தற்சார்பு உடையவர். அவர் நினைப்பதும், திட்டமிடுவதும், அனுபவிப்பதும் மட்டுமே அவருக்கு முக்கியமானவைகளாகத் தோன்றின. மற்றவர்கள் நினைப்பதைப்பற்றி அவர் அக்கறைப்படவில்லை. அவரைப் பொறுத்தவரையில் அவரது தனிப்பட்ட கருத்து மிக அழுத்தமாக இருந்தது. எதிலும் முன்னின்று இயக்குவது அவரது இயல்பு. பிறர் விரும்பினால் அவரைப் பின் செல்லலாம்.

மனித குலத்தைப்பற்றிய ஆய்வின் பொருள் மனிதனாகத்தான் இருக்கமுடியும். அதுபோன்று, சர்ச்சிலுக்கு அவர் மட்டுமே முக்கியமானவராகத் தோன்றினார். எனவே, தம்மைப் பற்றி ஆழ்ந்த ஆர்வத்துடனும், ஆவலுடனும் ஆராய்வதில் ஈடுபட்டார். ஒரு முறை அவர் அமெரிக்காவிலிருந்தபோது ஒரு விபத்திற்குள்ளானார். அதனால் அவரிடம் ஏற்பட்ட உணர்ச்சிகளைப் பற்றிப் படுக்கையில் இருந்துகொண்டே விவரமாக எழுதினார். அவர் தம் உடலில் ஏற்பட்ட மாறுதல்களைத் தெளிவாகப் படம் பிடித்துக்காட்டினார். இஃது அவரிடம் இருந்த குறைபாடன்று. அக் காலத்திய தலைவர்களில் எவரையும்விடச் சர்ச்சிலிடம் தீவிரச் செயலாக்கமும், செய்வினைத்திறனும் இருந்தன. அவர் உள்ளக் கிளர்ச்சி யூட்டும் தலைவர். இஃது அவருக்கு நன்றாகத் தெரியும். பொய் வேடத்தையோ, உண்மையில்லாத அடக்கத்தையோ வெளிக்காட்டுவது அவரது இயல்பிற்கு ஒவ்வாதது. தமது

கருத்துகளைப்போல் பிறரது கருத்துகளும் முக்கியமானவை, சரியானவை என்று கருதுவதாகச் சர்ச்சில் நடிப்பதில்லை.

சர்ச்சில் தாராளகுணமும், அன்பான பண்பும் பிறரிடம் நல்லெண்ணமும் கொண்டவர். எனினும் அவரிடம் விளங்கிய தீவிரத் தற்சார்பின் காரணமாகப் பிறரிடம் அவர் நட்புறவை வளர்த்துக்கொள்ள முடியவில்லை. தம் சொந்தக் கருத்துகளுக்கும் எண்ணங்களுக்கும் முக்கியத்துவம் கொடுக்கும் சர்ச்சில் திடீரெனத் தம் சகாக்களைவிட்டுத் திசைமாறுவது அவருக்கே வியப்பாக இருக்கும். அவர்களின் வெறுப்புச் சர்ச்சிலுக்குப் புரியாத புதிராகத் தோன்றும். ‘என்னிடம் உள்ளதெல்லாம் என் சொந்த உழைப்பின் பயன்தான். எனினும் எல்லாராலும் அதிகமாக வெறுக்கப்படுகிறவன் நான்தான்’[1] என்று ஒருமுறை சர்ச்சில் குறிப்பிட்டார்.

இவ்வாறு அவர்களிடம் மனக்கசப்பு ஏற்படுவதற்குச் சர்ச்சிலே காரணமாவார். அவரிடம் பேராவல் வெளிப்படையாக இருந்தது. தம்மைத் தவறுகளுக்கு அப்பாற்பட்டவன் என்று அவர் கருதினர். இதனல் பிறர் அவர்மீது வெறுப்புக் காட்டியதில் வியப்பில்லை. இத்தகைய நிலைகண்டு அரசியல்வாதிகள் மலைத்தனர். எதிலும் அவர் தன்முனைப்பான போக்கிலே செல்வதை வலியுறுத்துவார். 1910ஆம் ஆண்டு விசுவியஸ் (Visuvius) எரிமலையைக் காணச்சென்ருர். வழக்கமான வழியைத் தெரிந்துகொள்ளாமல் அவருக்குப் பிடித்தமான வழியில் செல்லவேண்டுமென்று வற்புறுத்தினர். இதன் விளைவாகக் கீழே விழுந்து கழுத்தை முரித்துக் கொள்ளுகின்ற அபாயம் நிகழவிருந்தது. சர்ச்சிலிடம் சிறுவயது முதலே இருந்துவந்த தன்னிச்சையாக நடக்கும் அடங்காத தன்மையும், குறும்புத்தனமும் அவர் தமது வாழ்வில் பகையைத் தேடிக்கொள்வதற்குக் காரணமாய் இருந்தன.

‘சர்ச்சிலிடம் தீய விளைவுகள் வெளிப்படுகின்ற வேளைகளும் உண்டு’ என்று ஒருமுறை எச். ஜி. வெல்ஸ் (H. G. Wells) குறிப்பிட்டார். அந்த வேளைகளில் சர்ச்சிலை அபாயகரமான குறும்புத்தன முள்ளவராக வெல்ஸ் கருதுவாராம். அதனல் சர்ச்சிலை அவர் மிகவும் விரும்பவும் முடிந்தது. அவரிடம் இருந்த குறும்புத்தனம் வயது காரணமாகக் குறைந்துவிடவில்லை. அவரது குறும்புத்தனமான துடுக்கான பேச்சுகள் மக்களை வியப்பிலாழ்த்தி நண்பர்களை நிலைகுலையச் செய்யும். எதிர்ப்புகளை

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 22.

விரும்பி அனுபவிக்கும் வின்ஸ்டன் பிறர் தம்மைக் குறைகூறு வதைத் தாங்கமாட்டார். சர்ச்சிலைச் சிறந்த பெருமகனுக்கிய பண்பு எது? வாழ்வில் சிறப்புப்பெற விரும்பும் எவனும் ஓர் உயர்ந்த குறிக்கோளுக்குத் தன்னை அர்ப்பணித்துத் தன்னுடைய ஆற்றல்களை மகத்தான முயற்சிகளில் ஈடுபடுத்தவேண்டும். மிக உன்னதமான குறிக்கோளுக்காகத் தன் உயிரைத் தியாகம் செய்கிறவன்தான் முடிவில்லாத வாழ்வின்மூலம் இழந்த உயிரை மீண்டும் பெறுகிருன். சர்ச்சிலிடம் சிறந்த ஆற்றல்கள் இருந்தன. இவற்றுடன் எல்லையில்லாப் பேராவல் அவரை உந்தித் தள்ளியது. இத்தகைய பேராவலின்றி எவரும் சிறப்புப் பெற முடியாது. ஆனல் தமது சகாக்களைத் தோற்கடித்து, எல்லாப் பரிசுகளையும் தட்டிக் கொண்டுபோவதையே ஒரே எண்ணமாகக் கொண்ட ஆணவக்காரராகமட்டும் அவர் இருந்திருந்தால், சர்ச்சில் சிறந்த மனிதர் என்னும் தகுதியைப் பெற்றிருக்க முடியாது. தம்மைவிடச் சிறந்ததும், பெரியதுமாகிய வொன்றைக் குறிக்கோளாகக் கொண்டாலன்றி ஒருவன் நிலையான புகழ்பெற முடியாது.

மக்கள் எந்தக் குறிக்கோளுக்காகப் பணிசெய்து கிடக்கிருர்களோ அதன் வழியாகவே அவர்கள் சிறந்த மனிதர்கள் ஆகிருர்கள். அமெரிக்க மக்களின் விடுதலைப்பணி ஜார்ஜ் வாஷிங்டன் பெருமை பெறத் தூண்டியது. அடிமைகள் விடுதலைபெற்று, ஒற்றுமை குலையாத அமெரிக்க மக்களாட்சியை நிறுவுவதற்காகப் போராடியதால் லிங்கன் அழியாப் புகழ்பெற்ருர். சிறு நாடுகள் உரிமைபெறக் கிளாட்ஸ்டன் தணியாத விடுதலை வேட்கை கொண்டிருந்தார். சாதாரண மக்களுக்குப் பணிபுரிய வேண்டுமென்ற இயல்பான இரக்கம் லாயிட் ஜார்ஜிடம் மேலோங்கி நின்றது. இவர்கள் யாவரும் சிறந்த ஆற்றல்களைப் பெற்றிருந்தார்கள். எனினும் தாங்கள் தெரிந்துகொண்ட குறிக்கோள்களை அடையும் பணியில் தம்முடைய ஆற்றல்களைப் பயன்படுத்தியதால்தான் இப் பெருமக்கள் வரலாற்றில் நிலையான புகழைத் தேடிக்கொண்டார்கள். வின்ஸ்டனிடம் விளங்கிய ஆழ்ந்த வேட்கை என்ன? அவர் தமது சிறந்த ஆற்றல்களைப் பலகாலங்களில் பல்வேறு குறிக்கோள்களுக்காகப் பயன்படுத்திஞர். கட்சிப்பற்றுக்களைத் தியாகம் செய்யும் அளவிற்குச் சில கொள்கைகளை அவர் எதிர்த்தார். அதே நேரத்தில் வேலையற்றோருக்கு வாழ்வுதேடத் தம்மை முழுவதுமே அவர் அர்ப்பணித்ததுண்டு. ஆனல், இக் குறிக்கோள்களில் எவையும் அவரது உள்ளத்தின் ஆழ்த்தில் பிடிப்பை ஏற்படுத்தவில்லை. இவையெல்லாம் காலத்திற்கேற்ற பொருளாதாரக் கொள்கைகள் அல்லது அவருடன் நெருங்கிப் பழகிய பெரிய மனிதர்கள் ஆகியோரைப்

பொறுத்து அவரைப் பாதித்தன. கால மாற்றத்தால் கொள்கைகள் மாறும்போது அவரது வீரமும் வேட்கையும் ஒரே நிலேயில் இருக்கவில்லே.

## நாட்டுப்பணியே ஆண்டவன் பணி

தன்னலம் நாடும் பேராவலேவிட ஒரு சிறந்த தலேயாய வேட்கையை வின்ஸ்டனிடமிருந்து உயர்ந்த நிலேயில் வெளிப்படுத்த இரண்டாம் உலகப்போர் வாய்ப்பளித்தது. இந்த வேட்கையே இன்று அகில உலகமும் அவரை வியந்து போற்றி மகத்தான மனிதராக ஏற்றுக்கொள்ளுகின்ற நிலேயையும் உருவாக்கியது. இடைவிடாது போராடுபவர், சீர்திருத்தவாதி, கலேஞர் வின்ஸ்டன் என்பனவெல்லாம் உண்மைதாம். ஆனுல், இவை யாவற்றிற்கும் மேலாக அவர் அப்பழுக்கற்ற நாட்டுப்பற்றுக் கொண்டவர். அவரது கட்சிப்பற்றில் குறைகாண முடியும். அவர் தம் சகாக்களே விட்டுவிட்டு எதிர்முகாமில் சேர்ந்துகொள்வார். வழிவழியாக வந்த கொள்கைகளே அவர் மறந்துவிடலாம். அவரே ஒரு காலத்தில் புகழ்ந்து பாராட்டிய கொள்கைகளேத் தள்ளிவிடலாம். ஆனுல், ஒரே ஓர் ஆணிவேரில் அவர் அசையாது ஊன்றி நின்ருர். புகழ்பெற வேட்கை, வெற்றி நம்பிக்கைகள், பெருமைக் கனவுகள் இவை யாவற்றையும்விடத் தாய்நாட்டின் மீது அவர் கொண்டிருந்த வரையறுக்கமுடியாத பற்றுதல் உயர்ந்து நின்றது. சர்ச்சிலின் ஆர்வங்கள் பிரிட்டிஷ் பேரரசையும், அனேத்துலக நடவடிக்கைகளேயும் சுற்றி ஊறிக்கிடந்தன. முப்படையின் மூலம் பிரிட்டனின் பாதுகாப்பு, குடியேற்றங்களும் அதன் தொடர்புகளும், பிரிட்டிஷ் பொதுநல வரசில் பிரிட்டனுடன் இணேந்திருந்த டொமினியன் நாடுகள், அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் பிரிட்டன் கொண்டிருந்த நட்புறவு, நேச நாடுகளுடன் கொண்டிருந்த உறவுகள் - இவை யாவும் வின்ஸ்டனின் பொதுவாழ்வு முழுவதிலும் அவரது தலேயாய கவனத்தை ஈர்த்த முக்கியப் பிரச்சினேகளாகும்.

தனக்குரிய இடத்தையும் பணியையும் தெரிந்து கொண்டவன் கொடுத்துவைத்தவன். தாய்நாட்டின் மிக முக்கியமானதொரு பணிக்காக முன்னரே தெரிந்துகொள்ளப்பட்டவராகச் சர்ச்சில் தம்மைக் கருதினுர். வாழ்நாளில் பல முறைகள் அவர் மரணத்தின் பிடியிலிருந்து தப்ப நேர்ந்தது, இந்த நம்பிக்கையை அவரிடம் உறுதி செய்தது, எனது பணி முடியும்வரை நான் இறக்கப்போவதில்லே' என்று ஐவர் கார்டினர் (Ivor Gardiner) கூறியதுபோல் சர்ச்சிலும் கூறமுடியும். காலம் கனிந்தபோது அவருக்காகக் குறிக்கப்பட்ட வேலேயும், அவர் எதற்காகப் பிறப்

பெடுத்தாரோ அந்தப் பணியும் தயாராக இருந்தன. பிரிட்டன் நம்பிக்கை இழந்து, இருள் சூழ்ந்து நின்ற நிலையில் மிகச்சிறந்த ஆற்றல்களையும், அனுபவங்களையும், போர்க்காலத்திற்குத் தேவை யான பண்புகளையும் பெற்றுத் தாய்த் திருநாட்டைத் துன்பத்தி லிருந்து வெற்றிக்கு நடத்திச்செல்லச் சிறந்தவொரு பெருமகனை ஈன்றெடுத்ததற்காக இங்கிலாந்து அன்னை இறைவனுக்கு நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளாள். இருளிலும் இன்னலிலும் வழி நடத்தும் இறைவனின் கட்புலனுகாத கரம் இங்கிலாந்தை வழி நடத்தியது.

லோக்ஹார்ட் (Lockhort) என்பவர் ஒருமுறை குறிப்பிட்டது போல் 'சர்ச்சிலே அவரது சொந்த வாழ்க்கை வரலாற்றின் ஆசிரியர்'. சர்ச்சில் தொண்ணூறு ஆண்டுகள் முழுநிறைவுபெற்ற வாழ்வு வாழ்ந்தார். அவரைப்பற்றி எழுதுவதென்பது எளிதான பணியன்று. அவரைப்பற்றிய சான்றுகளோ இமயம்போல் குவிந்து கிடக்கின்றன. அவரது வாழ்நாளிலேயே நாட்டுப் பற்றுக் கொண்ட நல்லவராகவும், வீரராகவும், கருவில் திரு வுடைய மேதையாகவும் பாராட்டப்பெற்ற ஒருவரைப்பற்றி விறுவிறுப்பில்லாத நூல் ஒன்றை ஆக்குவதென்பது இயலாத காரியம். எனினும் சர்ச்சிலின் வாழ்க்கையாகிய காவியம், அவர் ஈடுபாடுகொண்ட எண்ணற்ற சாதனைகளும் செயல்களும், அவருடன் உறவு கொண்ட அல்லது முரண்பட்ட பெரியவர்கள் ஆகிய எத்தனை எத்தனையோ பிரச்சினைகள் சர்ச்சிலின் வாழ்க்கை வரலாற்றை எழுதும்போது குறுக்கிடுகின்றன. பின்னிப் பிணைந்துகிடக்கும் இச் சிக்கல்களிலிருந்து இக் காவியத் தலை வனின் வாழ்க்கை வரலாற்றை உருவாக்குவது எளிதன்று.

எனினும் ஆற்றல் படைத்த இச் சிறுவனை அன்று குறைத்து எடைபோட்டனர் பலர். அவருடைய மாண்புமிக்க பண்புகளும், வீரமிக்க உணர்ச்சிகளும் நூற்றுக்கணக்கான வாய்ப்புகளை அவர் பற்றிக்கொள்ளவும், உருவாக்கவும் தூண்டின. அதனுல் உலக அரங்கில் அவர் உயர்ந்தார். தம்முடைய சொந்தத் தகுதிகளா லும், எதையும் துச்சமாக எண்ணும் துணிச்சலாலும் புகழோடு தோன்றிய அவர் பெயருடன் மேலும் மேலும் புகழையும், பெருமையையும், வெற்றிகளையும் குவிக்க முடிந்தது. ஓர் அசாதா ரணமான வாழ்வின் கிளர்ச்சியையும், தனிப்பெரும் ஆளுமை ஒன்றின் தோற்றத்தையும், வளர்ச்சியையும், நிறைவையும் அவரது வாழ்க்கை நூலில் காணலாம்.

# 2. வீரப் பெருங்குடியின் வழித்தோன்றல்

### பேரரசி விக்டோரியாவின் பொற்காலம்

1874ஆம் ஆண்டைப்பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதிக் கால்பகுதியின் நுழைவாயில் எனலாம். முக்கியம்பெற்ற அந் நூற்றுண்டின் முக்கால் பகுதி உருண்டோடி விட்டிருந்தது. முதல் கால் பகுதியில் போர்களும், போர்களின் விளைவுகளும் மக்களை அலைக்கழித்தன. இரண்டாம் கால்பகுதியில் இயந்திரப்புரட்சி, பாராளுமன்றச் சீர்திருத்தம், தடையில்லா வாணிகக் கொள்கை போன்ற புதிய சக்திகள் உருவாயின. நூற்றுண்டின் இடைப் பகுதியோ எல்லையற்ற நம்பிக்கை ஒளி ஊட்டியது. எல்லாருக்கும் உணவு, மலிவான கச்சாப்பொருள்கள், வெளிநாட்டுப் போட்டி யின்மை போன்ற சாதகமான சூழ்நிலைகள் உலகத்தையே இங்கி லாந்தின் காலடியில் பணியச்செய்தன. அதே காலத்தில் அடுக் கடுக்கான போர்களால் அடியற்ற மரம்போல் ஐரோப்பா வீழ்ந்து கொண்டிருந்தது. புகழ்பெற்ற ஃபிரஞ்சுப் பேரரசு போர்களைத் தாங்காமல் தேய்ந்து கொண்டிருந்தது. உலகம் வியக்கத் தக்க வகையில் முன்னேறிக் கொண்டிருந்த அமெரிக்க ஐக்கிய நாடுகளை உள் நாட்டுப்போர் உலுக்கிவிட்டது. ஆனால், பேரரசி விக்டோ ரியாவின் பெருங்குடி மக்கள் மட்டும் ஆடாமல் அசையாமல் அவரவர் காரியங்களைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

மேலே குறிப்பிட்ட மாற்றங்கள் யாவற்றையும் மகத்தான பார்வையாளர்களாகப் பிரிட்டிஷ் பொதுமக்கள் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தனர். அவர்களின் அன்றாட அலுவல்கள் அணுவளவேனும் தடைப்படவில்லை. ஆங்கில நாட்டு ஆலைகளின் புகைபோக்கிகள் ஆகாயத்தைநோக்கிக் கரும்புகை கக்குவதை நிறுத்தவில்லை. தன்முயற்சிக்குத் தரப்படும் பரிசுகளைப்போன்று புது நகரங்கள் பல பிறந்து வளர்ந்து கொண்டிருந்தன. இவ்வாறு பொருளாதார வளமும், சமூகச் சீர்திருத்தங்களும் பீடுநடை போட்டுக் கொண்டிருக்கையில் புதிய பாராளுமன்றச் சீர்திருத்தச்

சட்டங்கள், புதிய வாக்காளர்களை உருவாக்கிக் கொண்டிருந்தன. அவை புரட்சிகரமான அரசியல் எதிர்காலத்தைப் பறை சாற்றின. எங்குச் சென்று கொண்டிருக்கிறோம் என்பதை அறிந்திருந்த ஆங்கில மக்களுக்கு இந்த அரசியல் மாற்றங்கள் அதிர்ச்சியைத் தரவில்லை.

## பிறப்பும் பிறந்தவிடத்தின் சிறப்பும்

1874ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களின் இறுதிநாள். மால்பரோ கோமகனின் பரம்பரையின் மாண்புறு இல்லிடமான பிளென்ஹிம் (Blenheim) மாளிகையின் கம்பீரமான அமைதியைக் கலைத்துக்கொண்டு 'குவா, குவா' எனக் கதறும் ஒரு குழந்தையின் அழுகுரல் கேட்டது. புதிதாக அன்று உலகின் ஒளியைக் கண்ட ஓர் அதிசயக் குழந்தை எழுப்பிய முதல் குரல் அது. ஆதரவற்ற அந்த அழுகுரலில் அழுத்தமும், அசையாத ஆங்கில நாட்டுப்பற்றும் அடங்கி இருந்தன என்பதை அப்போது யாரும் உணர்ந்திருக்கமாட்டார்கள்தாம்! காலத்திற்காகக் காத்துக் கிடக்கப்போவதில்லை என்று, காலம் கீறிய வழியை விலக்கி விட்டுத் தனக்கெனப் புதிய வழியை வகுத்துக் கொள்ளப்போகும் ஒரு புத்துயிர் எழுப்பிய அறிக்கை ஒலிதான் அங்கே கேட்ட அழுகுரல். அன்றைய நாகரிக உலகத்திற்கு லண்டன் டைம்ஸ் ஏடு (The Times) இந்த நல்ல செய்தியை அறிவித்தது. 'நவம்பர் 30ஆம் நாளில் பிளென்ஹிம் மாளிகையில் ரேண்டால்ஃப் சர்ச்சில் சீமாட்டி (Lady Randolph Churchill) ஓர் ஆண்மகவைப் பெற்றெடுத்திருக்கிறார்' என்பதே அந்த அறிக்கையின் வாசகம். வூட்ஸ்டாக் (Woodstock) ஆலயத்தின் மணிகள் ஆனந்தமாக ஆர்ப்பரித்தன. மால்பரோ பரம்பரைக்கு மூன்றாவது தலைமுறை பிறந்திருக்கும் செய்தியைக் கேட்க யார்தாம் மகிழாமல் இருப்பார்கள் ?

மால்பரோக்களின் மாளிகையான பிளென்ஹிமில் வழிவழியாக ஏழு கோமகன்கள் வாழ்ந்திருந்து, தமக்கும், தமது நாட்டிற்கும் அழியாத புகழ் தேடினார்கள். இந்த அரண்மனையில்தான் ரேண்டால்ஃப் பிரபு - மால்பரோ பெருங்குடியின் ஏழாவது கோமகன், அமெரிக்க அழகியைத் தமது வாழ்க்கைத் துணைவியாகக் கொண்டுவந்திருந்தார். இங்குத்தான் ரேண்டால்ஃப் பிரபுவிற்கு வாரிசும் பிறந்திருந்தார். பிறப்பிலேயே பொறுமை இழந்தவராய், காலத்திற்கு முன்னதாகவே உலகில் புகுந்து வாழ விரும்பியதோ என்னவோ புதிதாகப் பிறந்திருந்த குழந்தை. கணக்குப்படி அது ஏழரை மாதக் குழந்தைதான். மாளிகையில்

நடந்த விருந்தில் ரேண்டால்ஃப் சீமாட்டி தோழிகளுடன் நடன மாடிக் கொண்டிருந்தார். அந் நிலையில் பிரசவ வேதனை ஏற் படவே சாதாரண அறையொன்றில் அவருக்கு மகப்பேறு ஆயிற்று. உலைவில்லாத உழைப்பும், செயலும், வாழ்வும், செயல் புரியத் தணியா வேட்கையும் அந்தக் குழந்தையின் வாழ்வு முழு வதினும் தனிப்பெரும் இயல்புகளாக இருக்குமென்பதை, இந்தப் பருவத்திற்கு முந்திய பிறப்பு முன்னறிவித்தது போலும்.

குழந்தைக்கு வின்ஸ்டன் லியோனர்டு ஸ்பென்சர் - சர்ச்சில் (Leonard Spencer Churchill) என்ற பெயரிட்டனர். இவையாவும் அதன் குடிப்பெருமையையும், தொன்மையையும் குறித்தன. 'சர்ச்சில்' என்னும் பெயர் காலத்தின் வழியில் கணீரென்று ஒலிக் கும். பத்துத் தலைமுறைகளுக்கு முன்னால் வாழ்ந்திருந்த முதல் வின்ஸ்டன் சர்ச்சில் புகழ்பெற்ற மால்பரோ கோமகனின் தந்தை யாவார். சர்ச்சில் பரம்பரையினர் இங்கிலாந்தின் மேற்கிலிருந்து வந்தவர்கள். மெண்டிப் (Mendip) குன்றுகளின் அடிவாரத்தில் கிழக்குச் சாமர்செட்டில் உள்ள ஒருசிற்றூரே அவர்களின் தாயகம். முதல் மால்பரோ கோமகன் டார்செட்ஷயரில் (Dorsetshire) பெரிய தனக்கார பிரபுவாக இருந்தவர். உள்நாட்டுப் பெரும்போரில் டார்செட் வழக்கறிஞரான சர் வின்ஸ்டன் சர்ச்சில் அரசருக் காகப் போராடி வீரர் விருதுபெற்றார். அவருக்கு அரெபெல்லா என்னும் பெண்மகவும், ஜான் என்னும் ஆண்மகவும் பிறந்தனர். இந்த ஜான்தான் பின்னர்க் கோமகனாகி, ஆன் அரசியார் காலத்தில் புகழ் மணக்கும் வெற்றிகளைக் குவித்தார். முதல் வின்ஸ்டன் சர்ச்சில் இரண்டாம் சார்லஸ் அரசர் காலத்தில் 'தெய் வீக அரசுரிமை' என்னும் நூலை எழுதிச் சிறப்புப் பெற்றிருந்தார். இத்தனை பெருமைகளும் சர்ச்சில் பெருங்குடிக்கு உரியவை. ஸ்பென்சர் என்னும் பெயர் முதல் மால்பரோ கோமகனின் மகள் ஆனை (Anne) மணந்த ஸ்பென்சர் பிரபுவின் பெயராகும். இந்த வகையில்தான் வின்ஸ்டன் சர்ச்சில் பிரிட்டிஷ் அரசியலில் பழம்பெருங்குடிகளுடன் தொடர்பு கொண்டிருந்தார்.

குழந்தையின் பெயரின் ஒரு பகுதியான 'லியோனர்டு' என் பது அதன் தாய்வழிப் பாட்டனரின் பெயராகும். லியோனர்டு ஜெரோம் (Leonard Jerame) என்னும் அந்த அமெரிக்கர் நியூயார்க் நகரில் பெரும் பொருளீட்டியவர்; அதனை இழக்கவும் செய்தார். அவர் 'நியூயார்க் டைம்ஸ்' என்ற ஏட்டின் உரிமையாளரும் ஆசிரியருமாக இருந்தவர். பிரின்ஸ்டன் பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்றபின்னர், கப்பல் தொழில், பத்திரிகைத்தொழில், கடலுக்குக்குறுக்கே தந்தி அமைத்தல் போன்ற பல்வேறு தொழில்

களில் ஈடுபட்டார். தம் காலத்தில் இரு குதிரைப் பந்தய மைதானங்களை அமைத்தார். சிலகாலம் ட்ரிஷ்டி (Trieste) நகரில் அமெரிக்கத் தூதுவராகவும் பணியாற்றினார். ஒரு முறை சில ஆர்ப்பாட்டக்காரர்கள் அவரது பத்திரிகை அலுவலகத்தைத் தாக்க முயன்றபோது சிறிய பீரங்கிப்படையைப் பயன்படுத்தினாராம். இவ்வாறு வின்ஸ்டன் அவரது அன்னையார் வழியில் அமெரிக்கர்களுடன் சகோதர உறவு கொண்டவர். ஐந்து தலைமுறைகளாக அமெரிக்காவின் வரலாற்றில் பெரும்புகழ் படைத்த இந்தக் குடியின் ஆண்களும், பெண்களும் ஒரு ஹீக்னேகுடி முதல்வரிடமிருந்து உதித்தவர்கள். இவர்கள் ஃபிரான்சின் சமயத் துன்புறுத்துதலுக்கு அஞ்சி, சமய உரிமைக்காக அமெரிக்காவில் சென்று குடியேறியவர்கள். இந்தப் பரம்பரையில் தோன்றிய லியோனார்டு ஜெரோமின் மகள்தான் வின்ஸ்டனின் அன்னையாரான ஜெனட் ஜெரோம் (Janet Jerome) அம்மையார்.

### வின்ஸ்டனின் பெற்றோர்கள்

வின்ஸ்டனின் தந்தையாரான ரேண்டால்ஃப் பிரபு, ஏழாவது மால்பரோ கோமகனின் மூன்றாவது மகன். இருபத்தைந்து வயது நிரம்பு முன்னரே பாராளுமன்ற உறுப்பினராகி, பிரதமர் டிஸ்ரேலியும் (Disraeli) வியக்கும் வகையில் தமது கன்னியுரையை ஆற்றிப் புகழ்பெற்றவர். பிளென்ஹிம் மாளிகையின் வீரவரலாற்றையே மாற்றியமைக்கும் திறன்படைத்தவர் ரேண்டால்ஃப். தொடக்கப்பள்ளியில் அவர் பயின்றகாலை, அவரது ஊக்கமும், நாவன்மையும், புலமையும், பண்புகளும் சகமாணவர்களைக் கவர்ந்தன. ஈட்டன் (Eton) பள்ளியின் கட்டுப்பாடுகளுடனும், உடைவிதிகளுடனும் அவர் அடிக்கடி மோதியதுண்டு. ஆக்ஸ் போர்டு பல்கலைக்கழக மாணவனாகப் பல நூல்களை அவரே விரும்பிக் கற்றார். கிப்பன் (Gibbon) எழுதிய 'ரோமைப்பேரரசின் வரலாறு' ரேண்டால்ஃபின் உள்ளத்தில் நீங்காத இடம் பெற்றது. படிப்பு முடிந்ததும் நண்பர்களுடன் சுற்றுலாப் புறப்பட்டுவிட்டார். 1874ஆம் ஆண்டு, ரேண்டால்ஃப் பிரபுவின் வாழ்க்கையில் மறக்க முடியாத மகத்தான ஆண்டாகும். அவ் வாண்டில்தான் அவர் ஆக்ஸ்போர்டு ஷயரில், வூட்ஸ்டாக் (Woodstock) தொகுதியில் பாராளுமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதே ஆண்டில் அவருக்கும் ஜெனட் ஜெரோமிற்கும் திருமணம் நிகழ்ந்தது. இதற்கெல்லாம் மகுடம் வைத்தாற்போல், அவருக்கு ஆண் வாரிசு தோன்றியதும் அதே 1874ஆம் ஆண்டில்தான்.

அட்லான்டிக் பெருங்கடலுக்குக் குறுக்கே விதி தனது வலையை விரித்தது. புகழ்பெற்ற 'ஜெரோம்களும்', 'சர்ச்சில்

களும் தத்தம் குடிகளின் வழித்தோன்றல்களின் மூலம் சந்திக்கும் திருவிளையாடலை விதி வகுத்துக் கொடுத்தது. சுற்றுலாவில் இருந்த இருபத்துநான்கு வயது இளைஞரான ரேண்டால்ஃப் பிரபு காதல் வலையில் சிக்கினார். இடம் காவ்ஸ் (Cowes) நகரம். பருவம் 1873ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள்; நிகழ்ச்சி - பிரிட்டிஷ் கப்பலில் வந்திருந்த ஒரு வெளிநாட்டு இளவரசருக்காக நடந்த விருந்து. பாரிசில் தன்தாயோடு வசித்து வந்த பேரெழில் மிக்க ஓர் இளம் நங்கையை யாரோ ரேண்டால்ஃபிற்கு அறிமுகப்படுத்தினார்கள். இருவருக்கும் நடனமாடுவது பிடிக்காததால் தனியே அமர்ந்து பேசிக்கொண்டிருந்தனர். அடுத்த நாள் விருந்துண்ண ரேண்டால்ஃபிற்கு அழைப்பு வந்தது. விருந்து முடிந்ததும் இளம் காதலர்கள் சிற்றுலாச் சென்றனர். தலைவன் திருமண விருப்பத்தை வெளியிட்டான். தலைவி தடைசொல்லாமல் ஒப்புக்கொண்டார். 'இரு மனம் கலந்தால் திருமணம்' என்பது உண்மையாயிற்று.

'மாமனார் கண்ணியமானவர். அவர் நியூயார்க்கு நகரில் தொழில் காரணமாக வாழ்ந்து வருகிறார்' என்பது மட்டுமே ரேண்டால்ஃபிற்குத் தெரியும். தாம் மணக்கப்போகும் காதலியைப்பற்றி ஒரு கவிதையே புனைந்திருந்தார். அவளது அழகிய புகைப்படத்தை வாங்கி வைத்திருந்தார். 'மரணத்தைத் தவிர வேறு எந்தச் சக்தியும் தம்மைப் பிரிக்க முடியாது' என்ற முடிவுக்கே வந்துவிட்டார். ஆனால், குலப்பெருமை 'வில்லன்' போலக் குறுக்கிட்டது. அந்தக் காலத்தில் கோமகன்கள் என்றால் கோமகன்கள்தாம். குடிப்பெருமை பார்க்கும் அவர்கள் காதல் உணர்ச்சிகளில் மயங்கி விடுவதில்லை. பிளென்ஹிம் மாளிகைக்கும், நியூயார்க்கு மடுவிற்கும் வெகுதூரம் என்று சிறுமைப்படுத்திப் பேசியது சர்ச்சில் குலச்செருக்கு. 'ஜெரோம்களை' ஃபிரஞ்சு அரசரும், ஃபிரான்ஸ் நாட்டின் பிரபுகளும் வரவேற்கலாம், விருந்தளிக்கலாம். ஆனால், 'ஒரு சர்ச்சில் சர்ச்சில்தான்' என்று சொல்லிவிட்டார்கள் மணமகன் வீட்டார். மேலும் அமெரிக்கப் பெண்களை மணமுடிப்பது இங்கிலாந்தில் ஒரு புதுமையாகக் கருதப்பட்டது. இதனை அறிந்த மணமகள் வீட்டாரின் நெஞ்சம் துணுக்குற்றது. உடனே ஜெனட் பாரிசிற்குக் கொண்டு செல்லப்பட்டாள். இளங்காதலர்கள் பிரிக்கப்பட்டனர். காலம் என்னும் அக்கினிப் பரிட்சையில் அவர்களின் காதல் புனிதப்பட வேண்டுமென்று பெரியவர்கள் விரும்பினார்கள்போலும். எனினும் இறுதியில் எல்லாம் வெற்றியாக முடிவுற்றது.

காதல்வழி தடைப்பட்ட காலத்தில்தான் ரேண்டால்ஃப் பிரபு அரசியலில் ஈடுபட்டார். 1874ஆம் ஆண்டில் நடைபெற்ற பொதுத்தேர்தலில் அவர் பெரும்பான்மை வாக்குகளால் வெற்றி பெற்று பாராளுமன்றத்தில் புகுந்தார். வெற்றிப் பெருமிதத்தோடு பாரிஸ் மாநகருக்கு விரைந்து, காத்திருந்த காதலி ஜெனட் ஜெரோமைக் கடிமணம் செய்துகொண்டார். 1874ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 15ஆம் நாளில் திருமணம் நிறைவேறியது. இந்த முறை குலப்பெருமை தலைவணங்கியது. புது மணத்தம்பதிகள் வூட்ஸ்டாக் நகருக்கு வந்தபோது பண்ணைக் குடிகளும், ரேண்டால்ஃபின் ஆதரவாளர்களும் பரிகளில் பவனி சென்று மணமக்களை ஆடம்பரமாக வரவேற்று வாழ்த்தினார்கள்.

### பிளென்ஹிமின் பின்னணி

ரேண்டால்ஃப்பிரபு தமது அழகிய இளம்மனைவியைப் பிளென்ஹிம் மாளிகைக்கு அழைத்து வந்தார். படைமானிய மரபுகளும், பெரும் நிலப்பிரபுகளின் பாரம்பரியங்களும் பேணிக்காக்கப்பட்டு வந்த பின்னணி அது. கோமகன்களின் சிறப்புரிமைகள் கொடி கட்டிப் பறந்தன. நாட்டுப்புறங்களோ வெறிச்சோடிக்கிடந்தன. இங்கிலாந்தின் வீரவேளாண்மரபினர் பண்ணைகளை விட்டுவிட்டு ஆலைகளில் அடைக்கலம் புகுந்திருந்தனர். ரயில் வழிகள் அப்பொழுதுதான் நிறுவப்பட்டன. எனினும் பயணம் செய்வது அரிதாக இருந்தது. எக்காலத்தையும்விட நாட்டின் செல்வ வளம் செழித்திருந்தது. மக்கட் செல்வம் மகத்தானதாகக் கருதப்பட்டது. பண்ணைக் கூலிகளும், வீட்டுவேலைக்காரர்களும் குறைந்த சம்பளத்தில் கிடைத்தனர். சமுதாயப் பாகுபாடுகள் தெளிவான வரையறைகளுடன் நிலைபெற்றிருந்தன. செல்வர்கள் மாளிகைகளில் வாழ்ந்தனர். வறியவர்கள் தங்கள் தங்கள் வாயிலில் நின்று வாடினார்கள். 'இது தெய்வநியதி. இதனை எதிர்ப்பதே தெய்வ நிந்தனை' என மக்கள் கருதினார்கள்.

இத்தகைய அரசியல், சமுதாயப் பின்னணியில்தான் ரேண்டால்ஃப் பிரபு அரசியலில் குதித்தார். இந்தச் சூழ்நிலையில் தான் அவரது வாரிசான வின்ஸ்டன் பிறந்தார். 1880ஆம் ஆண்டில், 'பிரிட்டிஷ் அரசியல் வானில் பளிச்சிட்ட எரிமீன்' என ஒளிர்ந்தார் ரேண்டால்ஃப் பிரபு. 'பிரிட்டிஷ் அரசியலில் ஓர் அடிப்படையான சக்தி' என்று அவரை வர்ணித்தார்கள். 'கண்டாரைக் கவர்ந்து இழுக்கும் பண்பும், பழகுவதற்கு இனிமையும், ஆற்றல்கள் பலவும் கொண்ட அருந்தலைவராக விளங்கினார் ரேண்டால்ஃப். சாதாரண மக்கள் அவரை வணங்கி வழிபட்டனர். பாராளுமன்றத்தில் இறுதிவரை அவர்தம் உரைகளை

அரசியல் எதிரிகளும் உற்றுக் கேட்பார்கள். அவரது இறுதி ஊர்வலத்தில் மக்கள் வெள்ளமெனத் திரண்டு வந்து தலைவருக்கு அஞ்சலி செலுத்தினர்கள்[1] என்று சர்ச்சில் தமது சுயசரிதையில் குறிப்பிட்டுள்ளார்.

இலண்டன் நகரம் ரேண்டால்ஃப் சீமாட்டியின் சிறப்புகளை உணரத் தொடங்கியது. பாரிசில் பயிற்சி பெற்றிருந்த ஜெனட் ஆடைகள் புனைவதில் ஆங்கில நாட்டு ஆரணங்குகளையும் விஞ்சி விட்டாள். இலண்டனில் அமெரிக்க அழகிகள் என்றாலே அக்கரைப் பச்சை போன்றதொரு புதுமை. பல வகையான விருந்துபசாரங்களும், இளவரசர், பிரதமர் ஆகியோரின் நட்பும் ரேண்டால்ஃப் தம்பதிகளுக்குக் கிடைத்தன. நகரின் நாகரிகமான பகுதிகளுக்கெல்லாம் அவர்கள் மகிழ்வுலாச் சென்றனர். அடிக்கடி பாரிசுக்கும், அமெரிக்காவும் சென்று உறவினர்களையும், நண்பர் களையும் சந்தித்தனர். அவர்களுக்குப் பணத்தொல்லையும், சிக்கல்கள் பலவும் இருந்தன. இதனிடையில் அவர்கள் தங்களின் அன்புச் செல்வனை வின்ஸ்டனையும் வளர்க்கவேண்டியிருந்தது. ரேண்டால்ஃப் சீமாட்டி அழகிகளின் கூட்டத்தில் பேரழகியாகத் திகழ்ந்தாள். அவர்களிடம் அழகுடன் கவர்ச்சியும், திறமையும் இருந்தன. 'எனது இளமைக்காலத்தில் என் அன்னையார் என்னை மிகவும் கவர்ந்தார்கள். மாலை வெள்ளிபோல் அவர்கள் ஒளி சிந்தினர்கள். அவர்களை நான் நேசித்தேன். ஆனால் தொலைவில் நின்றுதான் நேசித்தேன். அவர்களை நான் என்றும் ஒரு தேவதையாகவே கண்டேன்'[2] என வின்ஸ்டன் தமது சுயசரிதையில் அன்னையாருக்குப் புகழ்மாலை சூட்டியிருக்கிறார்.

## அயர்லாந்தில் இளமைப் பருவம்

வின்ஸ்டனின் பாட்டனாரான மால்பரோ கோமகன் அயர்லாந்தின் லெஃப்டினன்ட் பிரபுவாக நியமிக்கப்பட்டபோது வின்ஸ்டன் ஒருவயது குழந்தை. அண்மையில் கோமகன் தகுதிக்கு உயர்த்தப்பட்டவர் பிரதமர் டிஸ்ரேலி. 'கோமகன்கள் மோகத்தில் ஊறியவர்கள். 'டவுனிங் வீதியில் (Downing Street) ஒரு கோமகனென்றால், டப்ளின் மாளிகையில் ஒரு கோமகன் இருப்பது பொருத்தம்' என்பது அவர் எண்ணம். மால்பரோ பிரபுவிற்கு அழைப்பு விடுக்கப்பட்டது. தம் மகன் ரேண்டால்ஃப் பிரபுவைத் தமக்குச் சிறப்புச் செயலராக வைத்துக் கொள்ளும் உரிமையும் அவருக்கு வழங்கப்பட்டது. வின்ஸ்டனின் இரண்டாம் பிறந்தநாள் முடிவுற்றதும், மால்பரோ

[1] My Early Life—W. Churchill, p. 15.
[2] My Early Life—W. Churchill, p. 22.

கோமகன் டப்ளின் நகர ஃபோனிக்ஸ் பூங்காவில் (Phoenix Park) உள்ள 'த லிட்டில் காட்டேஜ்' (The Little Cottage) மாளிகையில் அயர்லாந்தின் லெஃப்டினன்ட் பிரபுவாகப் (Lord Lieutenant) பதவி ஏற்றார்.

வின்ஸ்டனின் வாழ்க்கையின் அடுத்த நான்காண்டுகள் டப்ளினில் கழிந்தன. அத் தலைநகரில்தான் அவர் தம் இளமையின் முதல் நினைவுகளைத் தமது சுயசரிதையில் குறிப்பிடுகிறார். 'த லிட்டில் காட்டேஜ்' மாளிகைதான் அவர் கண்ட முதல் உலகம். அதன் புதர் வெளிகள்தாம் அவரது விளையாட்டு அரங்கம். இருபதாண்டுகளுக்குப்பின் வின்ஸ்டன் இந்த மாளிகையைச் சென்று கண்டு, பழைய நினைவுகளைப் புதுப்பித்துக் கொண்டார். அந்த நாட்களில் அவனியில் அமைதி நிலவியது. அயர்லாந்தின் நிர்வாகமும் ஆரவாரமில்லாமல் நடந்துகொண்டிருந்தது. அயர்லாந்தின் சுயாட்சி இயக்கம் வளராத காலம் அது. ஃபெனியர்கள் (Fenniars) என்ற புரட்சிக் கூட்டத்தினர் இன்னும் வன்மை பெறவில்லை. லெஃப்டினன்ட் பிரபுவின் மாளிகைக்கு அருகில் 'பர்க்' (Burke) என்பவனை ஃபெனியர்கள் கொலை செய்திருந்தார்கள். டப்ளின் மாளிகையில் ரேண்டால்ஃப் சீமாட்டி அழகொளி பரப்பி வந்தார். ரேண்டால்ஃப் பிரபு வேட்டையாடுவதிலும், மீன் பிடிப்பதிலும், சதுரங்கம் ஆடுவதிலும் பொழுதைப் போக்கி வந்தார். நேரம் கிடைக்கும்போது அயர்லாந்தை ஆட்சி செய்தார். இக் காலத்தில் அவர் அயர்லாந்து மக்களிடம் காட்டிய பரிவு, பின்னர் அந் நாட்டுப் பிரச்சினையில் தம் கட்சித் தலைவர்களுடன் மோதுவதற்குக் காரணமாயிற்று.

அயர்லாந்தின் இளமை நினைவுகள் வின்ஸ்டனின் உள்ளத்தை விட்டு அகலவில்லை. ஒருமுறை அவர் தாதியுடன் உலாவச் சென்றிருந்தார். அயல்நாட்டுப் படை அணிவகுத்து வந்து கொண்டிருந்தது. அவர்களை ஃபெனியர்கள் என்று தவறாக எண்ணிய தாதி கூச்சலிடவே, தப்பியோட முயன்ற வின்ஸ்டன் கீழே விழ நேரிட்டது. மற்றொரு நிகழ்ச்சியையும் வின்ஸ்டன் மறக்கவில்லை. அவர்தம் தந்தையார் டப்ளின் நகரில் ஒரு ராணுவ நினைவுச்சின்னத்தைத் திறந்துவைத்த காலை, அவர் ஆற்றிய உரையின் ஒரு சொற்றொடர் வின்ஸ்டனின் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்தது. 'அதிர்கின்ற பேரிடியென அவன் எதிரிகளின் முன்னணியைத் தாக்கி முறியடித்தான்' என்பதே அந்த வீர மொழிகள். நான்கு வயது சிறுவனான வின்ஸ்டன் நாள்தோறும் காலையில் ஃபோனிக்ஸ் பூங்காவைச் சுற்றி உலா வருவான். அது காலை அவன் வீரர்களின் அணிவகுப்புப் பவனிகளையும், படைப்

பயிற்சிகளையும் நேரில் காண்பதுண்டு. எனவே, மேற்கூறிய சொற்களின் பொருளை வின்ஸ்டன் ஓரளவு கற்பனை செய்ய முடிந்தது.

### பள்ளி வாழ்க்கை

வின்ஸ்டனின் இளமைப்பருவம் அத்தனை மகிழ்ச்சிகரமாக இருக்கவில்லை. அவர் தம் பெற்றோர்மீது அன்பும், மரியாதையும் கொண்டிருந்தார். ஆனால் அவரது பிள்ளைப்பருவம் முழுவதிலும் அவருக்கும், பெற்றோர்களுக்குமிடையில் பரிவுணர்வு கொண்டு உறவு நிலவாததின் காரணம் தெரியவில்லை. அவர் தம் அன்னையார் நாகரிக வாழ்க்கையென்னும் வெள்ளத்தில் சிக்கித் தவித்தார். காண வருவோருக்குப் பெருமையுடன் காட்டப்பட வேண்டிய காட்சிப்பொருளாகத் தம் மகனை அவர் கருதவில்லை. முழுநேரமும் அரசியலில் மூழ்கிய அவர்தம் தந்தையாரோ, கரடுமுரடாக வளர்ந்து வந்த தமது குலக்கொழுந்திடம் நெருங்கிய தொடர்பு கொள்ளவில்லை. இவ்வாறு பெற்றோர்களின் பாசத்தின் போட்டிகளுக்கு இடையே வின்ஸ்டன் வளரவில்லை. எனவே, அவர் ஓரளவு தனிமையில் விடப்பட்ட 'வாண்டுச் சிறுவனாக' வளர்ந்து வந்தார். அவருக்குத் தாதியான திருமதி எவரஸ்ட் (Everest) மட்டுமே வின்ஸ்டனின் அன்பையும், நட்பையும் பெற்றார். வின்ஸ்டனின் உள்ளத்தை உய்த்துணர்ந்தவர் அவர் ஒருவர்தாம். உண்மையும், நேர்மையும் பொலியுமாறு அவரின் குணவியல்புகளை உருவாக்கியவரும் திருமதி எவரெஸ்ட் தாம்.

'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பதுபோல், ஏழு வயது சிறுவனான வின்ஸ்டன் எப்பொழுதும் சுறுசுறுப்பாக இருப்பான். சிறுபொழுதும் ஓரிடத்தில் அமைதியாக இருப்பதில்லை. 'செந்தலை வாண்டு' என்று அழைக்கப்பட்ட வின்ஸ்டன், அன்புருவான தாதிக்கு அடங்காத் தொல்லை கொடுத்து வந்ததால், அவனைக் கட்டாயம் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பவேண்டியதாயிற்று. அஸ்காட்டிலுள்ள (Ascot) செயின்ட் ஜார்ஜ் தொடக்கப் பள்ளியில் வின்ஸ்டனின் சிறிதுகால அனுபவம் மனநிறைவு தருவதாக இல்லை. புகழ்பெற்ற ஈட்டன் (Eton) பள்ளிக்கு மாணவர்களைத் தயாரிப்பதாகச் சொல்லிக்கொண்ட அப்பள்ளியில் பண்டை இலக்கியங்களே பயிற்றுவிக்கப் பட்டன. அதன் தலைமையாசிரியரான ஒரு பாதிரியார் மாணவர்களைக் கடுமையாகத் தண்டிப்பார். எனவே குறும்புக்கார வின்ஸ்டன் அவரது பிரம்பாட்சிக்கு அடிக்கடி பலியாவதுண்டு. ஒருநாள் வின்ஸ்டனைத் தண்டிக்கும்போது அவன் உதைத்ததால், தலைமையாசிரி

யரின் தொப்பி சுக்குநூருக நொறுங்கியது. வின்ஸ்டனுக்கு பண்டை இலக்கியம் படிப்பது பிடிக்கவில்லை. தண்டனைகளும் பொறுக்க முடியவில்லை. கிரிக்கட்டும், உதைபந்தும் அவர் மனத்தைக் கவரவில்லை. அவரிடமிருந்த மாய லாந்தரும் (Magic Lantern) நீராவி இயந்திரப் படிமங்களும், ஆயிரத்திற்கும் மேற் பட்ட பொம்மை வீரர்களும்தாம் அவருக்கு மகிழ்ச்சி தந்தன.

வாயாடிச் சிறுவனொருவனுக்கு விறுவிறுப்பு ஊட்டக்கூடிய தொன்றும் அப்பள்ளியில் இருக்கவில்லை. பிற மாணவர்கள் அவனைக் 'காரட்டு' (Carrot) என்று அழைத்தனர். விடுமுறையை எண்ணி ஏங்குவான் வின்ஸ்டன். எனினும் நூல்களைப் படிப்ப தென்றால் அவனுக்கு உயிர். 'ட்ரெஷர் ஐலண்டு' (Treasure Island) என்னும் நூல் முதல் முதல் வெளியானபோது அதன் ஒரு பிரதியைத் தந்தையார் வின்ஸ்டனுக்கு வாங்கிக் கொடுத்திருந் தார். வின்ஸ்டனும் அதனைச் சுவைத்துப் படித்தான். ஆசிரியர்கள் யாவரும் அவனைப்பற்றி மனநிறைவு கொள்ளவில்லை. வின்ஸ்டனும் ஆசிரியர்களிடம் நல்லெண்ணம் கொண்டிருக்கவில்லை. அடிக்கடி ஆசிரியர்களை எதிர்த்ததால் தண்டனை பெற்றுவந்த வின்ஸ்டனின் உடல்நிலை குன்றத்தொடங்கியது. எனவே அந்தப் பள்ளிக்கு முழுக்குப் போடவேண்டியதாயிற்று. அதுபற்றிப் பள்ளி ஆசிரி யர்கள் மனமகிழ்ந்திருக்கலாம். ஆனால் வின்ஸ்டன் சிறிதும் வருந்தவில்லை. வருங்கால வரலாற்றுப் பெருமகனை இழக்கிறோமே என்று அவர்கள் கருதி இருக்க முடியாதல்லவா?

இதினை அடுத்து வின்ஸ்டன் பிரைட்டன் (Brighton) நகரி லுள்ள ஒரு பள்ளிக்கு மாற்றப்பட்டார். அங்கே அவர்களின் குடும்ப மருத்துவர் அவரைக் கவனித்துக்கொள்ள முடியும். மேலும் அப்பள்ளியை இருபெண்கள் நடத்தி வந்ததால் அங்கு அணைக்கும் கரங்களே இருந்தன. அடுத்த மூன்றாண்டுகள் அங்குச் செலவிடப்பட்டன. வின்ஸ்டனுக்கு விரும்பியதைப் படிக்கும் உரிமை இருந்தது. ஃபிரஞ்சு மொழியையும், வரலாற்றையும், அவர் விரும்பிப் படித்ததுடன், பல கவிதைகளையும் மனப்பாடம் செய்தார். நடிப்புக்கலையில் ஆர்வம் காட்டினார். நீந்தவும், குதிரையேறவும் கற்றுக்கொண்டார். வின்ஸ்டனின் நடன ஆசிரியையான ஈவா மூர் (Eva Moore) 'வின்ஸ்டன் ஒரு செந்தலைச்சிறுவன். வகுப்பிலே அவன்தான் மிகக் குறும்புக் காரன். ஒருவேளை உலகத்திலே மிகவும் குறும்புத்தனமுள்ள சிறுவன் அவன்தானோ?'[1] என்று குறிப்பிட்டார்.

[1]My Early Life – W. Churchill, p. 25.

ஆனால், பிரைட்டன் பள்ளியில் வின்ஸ்டனின் கல்வியில் முன்னேற்றம் ஏற்பட்டது என்பது உண்மை. அவர் விரும்பியதைச் சுவைத்துப் படித்தார். ஐம்பதாண்டுகளுக்குப் பின்னர் இந்தப் பள்ளி நாட்களை நினைவுகூர்ந்த வின்ஸ்டன், ஞாயிறு பிற்பகல் களில் 'பஞ்ச்' (Punch) பத்திரிகைகளின் பழைய இதழ்களைப் படித்த விதத்தையெல்லாம் எண்ணி மகிழ்ந்தார். அங்கே அவர் வரலாற்றுப் பாடத்தைப் படித்த முறையே தனி. டென்னியல் (Tenniel) என்ற வரலாற்றாசிரியர் பல நாட்டு வரலாறுகளைச் சொல்லோவியங்களாகத் தீட்டியிருந்தார். பிரிட்டனை வேங்கை யாகவும், ஃபிரான்சைப் பேதையாகவும், ஜெர்மனியை மென்மை யுடைய பெண்ணாகவும் அவர் சித்தரித்திருந்தார். ஃபிரான்சை வீழ்த்திய பிரிட்டிஷ் 'ஜான் புல்லை' (John Bull), உருவிய வாளுடன் காட்சிதரும் ஜெர்மன் மாது ஒருநாள் பழிவாங்குவாள் என்பதாக வின்ஸ்டன் கற்பனை பண்ணுவார். இளம்வயதிலே தனிக்கோட்பாடு கொண்ட வின்ஸ்டன், பிரைட்டன் ஆலயத்தில் கீழ்ச்சபை (Low Church) சமயத்தின் கொள்கைகளை எதிர்த்து ஒருநாள் ஆர்ப்பாட்டமே நடத்திவிட்டார். தம் தாதியிட மிருந்து கொள்கை உறுதியைப் பெற்றிருந்த வின்ஸ்டனிடம் அமெரிக்கப் பண்பாகிய உரிமை வேட்கையும் வெளிப்பட்டதில் வியப்பில்லை.

## ஹாரோவில் (Harrow) வின்ஸ்டன்

சர்ச்சில் குடும்பத்தினரின் மரபுவழியான பள்ளி ஈட்டன் தான். ஆனால் உடல்நிலை காரணமாக வின்ஸ்டனுக்கு அடிக்கடி நெஞ்சுக்கோளாறுகளும், நிமோனியா குளிர்க்காய்ச்சலும் வந்து கொண்டிருந்ததால், ஈரக்காற்றுள்ள தேம்ஸ் ஆற்று ஈட்டனைவிட, குன்றின்மேல் நின்ற ஹாரோவே நல்லதெனக் கருதப்பட்டது. இந்தப் பள்ளியில் வின்ஸ்டன் சேர்த்துக்கொள்ளப்பட்ட கதையே ஓர் அற்புதம். நுழைவுத்தேர்வு இரண்டு மணி நேரம் நடை பெற்றது. இலத்தீன் மொழி உரைநடைத் தேர்வில் அங்கு மிங்கும் மையை உதறி, ஏதேதோ கிறுக்கி, ஓரிரு அடைப்புக் குறிகளைக் கீறி வெறும் காகிதத்தைச் சர்ச்சில் கொடுத்தார். அவரது இரண்டு மணி நேர முயற்சியின் பயன் இவ்வளவுதான் என்று தெளிவாகத் தெரிந்த பின்னரும், தலைமை ஆசிரியரான டாக்டர் வெல்டன் (Weldon) வின்ஸ்டனை சேர்த்துக்கொள்ள முடிவு செய்தார். தலைமை ஆசிரியரைப்பற்றி வின்ஸ்டன் தமது சுயசரிதையில், 'நான் ஹாரோவில் படிக்கத் தகுதியுள்ளவன் என்பதை முடிவு செய்த டாக்டர் வெல்டன் பாராட்டிற்குரியவர்; அவர் ஒரு மாணவரின் சாதனைகளை மேலெழுந்தவாரியாக நோக் காமல், அவற்றிற்கு அப்பால் நல்லது காணும் திறன்படைத்தவர்;

அவர் எனது மதிப்பிற்கு என்றும் உரியவர்'[1] என்று கூறி நன்றிக் கடன் செலுத்துகிறார்.

ஹாரோவின் வாழ்க்கை வின்ஸ்டனுக்கு மகிழ்ச்சிதரவில்லை. அடிமட்டத்திலுள்ள வகுப்பிலேயே பல ஆண்டுகள் தேங்கிக் கிடந்தார். கடைசி மாணவர் என்ற பட்டம் பெற்றார். ஹாரோவில் பாடங்கள் கடினமாக மட்டுமின்றி, பொருளற்றவைகளாகவும் அவருக்குத் தோன்றின. ஏதாவது நடைமுறைப் பயனுள்ளவற்றைக் கற்பதில்தான் அவர் ஆர்வம்கொண்டிருந்தார். இலத்தீன்மொழிப் பாடம் அவருக்கு வேம்பாகக் கசந்தது. இதனால் வின்ஸ்டனின் உயர்கல்வி தடைப்பட்டது. எனினும் தமக்குப் பிடித்தமில்லாத ஒன்றில் நாட்டம் செலுத்துவது அவரது இயல்பிற்குப் பொருந்தாததொன்று. ஒரே வகுப்பில் நீண்டநாள் தங்கியதும் பயனற்றுப் போகவில்லை. சாமர்வெல் (Sommervel) என்ற ஆசிரியரின் முயற்சியால் வின்ஸ்டன் ஆங்கில மொழியிலும், இலக்கணத்திலும் சிறந்த புலமை பெற முடிந்தது. ராணுவ வகுப்பில் எல். எம். மோரியார்டி (Moriarty) என்பாரின் கண்காணிப்பில் ஆங்கிலத்தில் மேலும் தேர்ச்சி பெற்றார். அவருக்குக் கணிதம் கற்பித்த சி. எச். பி. மேயோ (Mayo) வின்ஸ்டனின் கூர்மதியை வளர்ப்பதில் துணைபுரிந்தார். இவர்களின் அரும் முயற்சியால் அவர் வெகுசீக்கிரம் சாண்டர்ஸ்ட் (Sandhurst) படைக் கல்லூரியின் நுழைவுத் தேர்விற்காகத் தயார் செய்யப்பட்டார்.

ஹாரோவில் வின்ஸ்டன் முன்னேற்றமே இல்லாத மந்த புத்திக்காரராக இருக்கவில்லை. அவரது அறிவுக்கூர்மை அடிக்கடி ஒளிர்வதும் உண்டு. அவரிடம் அசாதாரணமான நினைவாற்றல் விளங்கியது. கடைசி வகுப்பில் இருந்தபோதே ஒரு முறை மெக்காலேயின் (Macaulay) 'லேய்ஸ் ஆஃப் ஏன்சியன்ட் ரோம்' (Lays of Ancient Rome) என்ற கவிதையின் 1200 வரிகளை அடி பிறழாமல் ஒப்பித்துப் பரிசு பெற்றார். ஷேக்ஸ்பியரின் நாடகங்களிலிருந்து சில காட்சிகளை மனப்பாடம் செய்து ஒப்பித்தார். ஆசிரியர்கள் தவறான மேற்கோள் காட்டினால் அவற்றைத் திருத்துவார். ஹாரோவில் அவர் பந்து விளையாட்டுகளில் ஈடுபடவில்லை என்றாலும் நீச்சுப் போட்டிகளிலும், மற்போரிலும் சிறந்த புகழும், பரிசுகளும் பெற்றார். பள்ளியின் துப்பாக்கிப் படை அணியில் சேர்ந்திருந்தார்.

[1]My Early Life—W. Churchill, p. 28.

வின்ஸ்டன் தமது ஹாரோ வாழ்க்கையின் சில விறுவிறுப்பான நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுகிருர். அவர் பள்ளியின் இதழான 'ஹரோவியன்' (Harrovian) இதழில் புனைபெயரில் பல கட்டுரைகளை எழுதுவதுண்டு. அவற்றின்மூலம் பள்ளியின் சில விதிகளை அவர் தாக்கினுர். ஒருமுறை தலைமையாசிரியர் வின்ஸ்டனை அழைத்து, 'சிலகாலமாக ஹரோவியனின் கட்டுரைகள் மாணவர்கள் அதிகாரிகளின்பால் கொண்டிருந்த மரியாதையை இழக்கச் செய்யும் முறையில் எழுதப்படுகின்றன. அவை தொடர்ந்து வெளிவருமாளுல் உன்னைத் தண்டிக்கவேண்டிய நிலை ஏற்படும்' என்று எச்சரித்தாராம். இவ்வாறு எழுத்துப் பணியிலும், ஆங்கில மொழியிலும் அவர் கொண்டிருந்த ஆர்வமும், பயிற்சியும், அவர் பேச்சிலும் எழுத்திலும் வல்லவர் என்பதைக் காட்டுகின்றன.

ஹாரோவில் நிகழ்ந்த மற்ெருரு சுவையான நிகழ்ச்சியும் உண்டு. வீரச்செயல்கள் புரிவதில் விருப்பம்கொண்ட வின்ஸ்டன் ஒருநாள் உருவத்தில் சிறியவனுகத் தோன்றிய ஒரு முதுநிலை வகுப்பு மாணவரை நீச்சுக்குளத்தில் தள்ளிவிட்டார். ஆனுல் அந்த மாணவர் சிறந்த உடற்கட்டும் உடற்பயிற்சி விருதும் பெற்றிருந்த ஆருவது படிவ அமெரி (Amery) என்பவர். (இவர் பின்னர் வின்ஸ்டனுடன் அமைச்சரவையில் இருந்தார்) இதனை அறிந்ததும் வின்ஸ்டனுக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. கோபத்தால் வெகுண்டெழுந்த அமெரியும் வின்ஸ்டனை நையப்புடைத்துவிட்டார். கூர்மதியும் சமயோசித புத்தியும்படைத்த வின்ஸ்டன் அமெரியிடம் 'நண்பா! என்னை மன்னித்துவிடு. நீர் எவ்வளவு சிறியவராக இருக்கிறீர். புகழ்பெற்ற என் தந்தைகூட உருவத்தில் சிறியவர்தான்' என்று சாமர்த்தியமாகப் பேசிச் சமாளித்துவிட்டார்.

வின்ஸ்டன் மீருத பள்ளி விதிகளே இல்லை என்று கூறலாம். அவர் வெஸ்ட் தெருவில் (West Street) இருந்த ஒரு வீட்டில் நாய்களை வளர்த்து வந்தார். அவற்றைக் கையில் பிடித்தவாறு, உள்ளூர் நண்பர் ஒருவருடன் அவர் உலாவ வருவாராம். ஹாரோவில் வகுப்புத் தலைவர்களுக்கு மாணவர்களைத் தண்டிக்கின்ற உரிமை இருந்தது. நுஜென்ட் ஹிக்ஸ் (Nugent Hicks) வகுப்புத் தலைவராக இருந்தபோது வின்ஸ்டன் அவரிடம் தண்டனை பெறுவதுண்டு. ஒருநாள் வின்ஸ்டன், ஹிக்சை நோக்கி, 'நீ இன்று என்னைத் தண்டிக்கலாம். ஆனுல் ஒருகாலத்தில் நான் உன்னைவிடச் சிறந்தவனுவேன்' என்றுர். 'அப்படியானுல் அதற்கும் சேர்த்து இரண்டு வாங்கிக்கொள்' என்று ஹிக்ஸ் அதிகத் தண்டனை வழங்கினுராம்.

அந்தக் காலத்தில் சிறந்த தாதிமார்கள்தாம் பெரிய வீட்டுக் குழந்தைகளை வளர்ப்பார்கள். வின்ஸ்டன் தம் தாதியை ஒருநாள் ஹாரோவிற்கு அழைத்து வந்து பள்ளி முழுவதையும் அவருக்குச் சுற்றிக் காண்பித்தார். மாணவர்கள் பார்க்கும்படி முக்கிய இடங்களுக்கெல்லாம் இருவரும் கைகோத்துச் சென்றார்கள். வின்ஸ்டனின் துணிச்சலையும், தாதிமீது அவர் கொண்டிருந்த அன்பையும் பாராட்டலாம். ஆனால் அந்தக் காலத்தில் இவையெல்லாம் மாணவர்களின் தகுதிக்கு உகந்ததாகக் கருதப்படவில்லை. 1892ல் வின்ஸ்டன் ஹாரோவை விட்டு விலகினார். எனினும், அவரது பழைய பள்ளிக்கு அடிக்கடி வருகைதந்து அதன் பாடல்களிலும் விழாக்களிலும் கலந்துகொண்டு மாணவர்களுக்கு உரையாற்றுவார். இதே பள்ளியில்தான் பிற்காலத்தில் இந்தியப் பிரதமர் பண்டித நேருஜியும் பயின்றார். இங்கே உலகப் பெருமக்களான நேருவிற்கும், வின்ஸ்டனுக்கும் ஒருமுறை பிரம்மாண்டமான வரவேற்புக் கொடுக்கப்பட்டது. அந்தச் சந்தர்ப்பத்தில் தான் சர்ச்சில், நேருஜி அவர்களை 'இதோ அமர்ந்திருக்கும் இந்தப் பெரிய மனிதர் பகைமையையும், பயத்தையும் அறியாதவர்' என்று புகழ்ந்து பாராட்டினார். ஒருவேளை ஹாரோவின் அனுபவங்கள் வின்ஸ்டனுக்கு இனிமையாக அமையவில்லை போலும். 'நான் பொதுப் பள்ளிகளை விரும்புகிறேன்; ஆனால் மீண்டும் அங்குச்சென்று பயில்வதை நான் வெறுக்கிறேன்' என்று அவர் ஒருமுறை குறிப்பிட்டார். எனினும் அவருடைய உள்ளத்தைத் தொட்ட ஹாரோவின் பாடல்களின் குறிக்கோள்களுக்கு ஏற்றவாறு அவர் வாழ விரும்பினார். அத்தகைய பாடல்களில் ஒன்று 'நாடு நம்மை அழைக்கிறது. நாம் தயாராக இருப்போமாக!' என்ற அறைகூவலை விடுப்பது. அதனை இலட்சிய புருடரான வின்ஸ்டன் ஏற்றுக்கொண்டார் என்பதற்கு அவரது வாழ்க்கையே சான்றாகும்.

### சாண்டர்ஸ்ட் ராணுவக் கல்லூரியில் பயிற்சி

ஹாரோவை விட்டபின் வின்ஸ்டனின் வருங்காலம் திட்டவட்டமாக முடிவு செய்யப்பட்டது. அவர் தந்தை, வின்ஸ்டன் ராணுவத்தில் சேரவேண்டுமென்று தீர்மானித்தார். வழக்கறிஞராவதற்கு அவசியமான அறிவுத்திறம் தம் மகனிடம் இல்லையென்று ரேண்டால்ஃப் பிரபு எண்ணியிருக்கலாம். எனினும் இந்த முடிவுக்குக் காரணமான ஒரு சுவையான நிகழ்ச்சியும் நடைபெற்றிருந்தது. வின்ஸ்டனுக்குப் பொம்மை வீரர்களை வைத்து விளையாடுவதென்றால் மிக விருப்பம். அவரிடம் ஆயிரத்திற்கும் மேற்பட்ட பொம்மைகள் இருந்தன. ஒருநாள் அவரும், அவரது

இளையசகோதரரும் அந்தப்பொம்மைகளை அழகாக அணிவகுத்து, ஒரு வேடிக்கைத் தாக்குதலை நடத்திக்கொண்டிருந்தார்கள். இதனை ரேண்டால்ஃப் பிரபு பார்வையிட்டு இருபது நிமிடங்கள் ஊன்றிக் கவனித்தார். அவருக்கு ஒரு புதிய யோசனை பிறந்தது. இவ்வளவு அருமையாகப் படையாண்மை பெற்றிருக்கும் மகனை ஒரு போர்வீரனாக ஆக்கிவிட்டால் என்ன என்று அவருக்குள் ஒரு வினா எழுந்தது. மனத்தில் தோன்றியதை மகனிடம் சொன்னார். மைந்தனும் மறுக்காமல் ஏற்றுக்கொண்டான். அதுமுதல் சாண்டர்ஸ்ட் வின்ஸ்டனின் குறிக்கோளாயிற்று.

ஆனால் சாண்டர்ஸ்ட் கல்லூரியில் சேர்வதென்பது அத்தனை எளிதன்று. கேப்டன் ஜேம்ஸின் பயிற்சி நிலையத்தில் விரிவான தொடக்கப் பாடங்களைக் கற்றுக்கொள்ள வேண்டும். சாண்டர்ஸ்ட் நுழைவுத் தேர்வில் வின்ஸ்டன் மூன்றாவது முறைதான் வெற்றிபெற முடிந்தது. இதில் அவர் வெற்றிபெற்றதே ஒரு கதை. அவரது வாழ்வைத் தொடர்ந்து வந்திருக்கும் அதிர்ஷ்ட தேவதையின் அற்புதமான விளையாட்டுகளில் ஒன்றுஎன்ற அதனைக் கூறலாம். தேர்வில் நிலப்படம் வரைதல் ஒரு கேள்வியாகும். இதற்காக வின்ஸ்டன் அத்தனை நாடுகளின் பெயரையும் சீட்டுகளில் எழுதித் தமது தொப்பிக்குள் அவற்றைப் போட்டு ஒரு சீட்டை எடுத்தார். அதில் நியூசிலாந்தின் பெயர் இருந்தது. அன்று இரவு முழுவதும் அமர்ந்து அந்நாட்டைப்பற்றி ஒன்றும் விடாமல் படித்தார். அடுத்த நாள் தேர்வில் குருட்டுயோகம் அடித்ததுபோல் நியூசிலாந்தின் வரைபடம் கேள்வியாக வந்தது. அந்தத் தேர்வைப்போல் வின்ஸ்டன் எந்தத் தேர்வையும் எழுதவில்லை. அது வெறுந்தேர்வல்லவே! அவரது வாழ்க்கைத் தேர்வென்று அதனைக் கூறினால் மிகையன்று.

சாண்டர்ஸ்ட் படைப்பயிற்சி வின்ஸ்டனின் வாழ்க்கை வெற்றிக்கு வழிகோலியது. இங்குத்தான் அவர் போர் வரலாறுகளைப் படிக்கத் தொடங்கினார். கல்லூரி ஆசிரியர்கள் உணவிற்காகக் கூடும் இடங்களில் வின்ஸ்டனும் அழைக்கப்படுவார். படை அதிகாரிகளின் பேச்சுகளிலிருந்து படை அமைப்புகள், படைக் கலங்கள், செய்தித் தொடர்புகள் ஆகிய எல்லா விவரங்களையும் அறிந்துகொண்டார். நெப்போலியப் போர்களைப்பற்றி ஆர்வத்தோடு தெரிந்துகொண்டார். ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும் போர்கள் நடக்கும் காலத்தில் அதில் பங்கு பெறுவதாகக் கனவு கண்டார்.

குதிரை ஏற்றத்தில் வின்ஸ்டன் கட்டுமீறிய விருப்பம் கொண்டார். அதனை வாழ்க்கைக்கு முக்கியமென அவர் கருதிய

தால் அதில் ஊறித்திளைத்தார். 'பெற்ருேர்களே! உங்கள் பிள்ளைகளுக்குப் பொருளைக் கொடுக்காதீர்கள். குதிரைகளைக் கொடுங்கள். குதிரை ஏறி எவனும் துயருற்றதில்லை'[1] என்பது வின்ஸ்டனின் அறிவுரை. விடுமுறைக் காலங்களில்கூடத் தந்தை யார் மகனுக்காகச் சிறந்த குதிரை ஏற்றப் பயிற்சிப் பள்ளிகளை ஏற் பாடு செய்திருந்தார். இவ்வாறு சாண்டர்ஸ்ட் கல்லூரியிலிருந்து சிறந்த தகுதிகளைப்பெற்று, நூற்றைம்பது மாணவர்களில் எட்டா வது மாணவராகத் தேறினுர். சாண்டர்ஸ்ட் வாழ்க்கை அவருக்கு முழு மனநிறைவு கொடுக்கவில்லை என்ருலும், அவரது வாழ்க்கை யில் ஒரு பெரிய மாற்றத்தை உண்டுபண்ணியது. 'நான் பழைய வின்ஸ்டன் இல்லை. என்னிடமிருந்த குறும்பும், குழந்தைத் தனமும் எங்கோ மறைந்தோடிவிட்டன' என்று அவர் கூறுவது போல் இருந்தது.

இந்த மாற்றம் ஏற்படக் காரணம் என்ன? வரலாற்றுப் பெருமக்களின் வாழ்க்கையில் வன்மையான திருப்பு முனைகள் ஏற்படத்தக்க காரணங்கள் இருக்கும். சித்தார்த்தரின் பெருந் துறவும், அசோகரின் மனமாற்றமும் எவ்வாறு நிகழ்ந்தன வென்பதை நாம் அறிவோம். வின்ஸ்டனின் வாழ்க்கையை ஒரு விபத்து மாற்றியது. ஒரு கிறிஸ்மஸ் விடுமுறையின்போது வின்ஸ்டன் போர்ட்ஸ்மௌத்தில் (Portsmouth) இருந்த தம் அத்தையின் பண்ணையில் சில நண்பர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தார். தம்மை விரட்டிக்கொண்டு வந்தவனிடமிருந்து தப்புவதற்காகப் பழம்பாலம் ஒன்றிலிருந்து அருகிலிருந்த மரத் தின்மீது தாவ முயன்ருர். பிடிதவறவே, முப்பதடி உயரத்தி லிருந்து கீழே விழுந்தார். மூன்று நாட்கள் பேச்சுமூச்சில்லாமல் கிடந்தார். அவரது சிறுநீரகம் (Kidney) பாதிக்கப்பட்டிருப் பதாக மருத்துவர்கள் கூறினுர்கள். பல வாரங்கள் படுத்த படுக்கையாய்க் கிடந்தும் அவர் மனம் இடிந்துபோகவில்லை. பல நூல்களைப் படிக்கவும், தந்தையாரின் அரசியல் நண்பர்களைச் சந்திக்கவும் இந்த ஓய்வு பயன்பட்டது.

மேற்கூறிய விபத்து வின்ஸ்டனின் மனப்போக்கையே மாற்றி விட்டது. சாண்டர்ஸ்ட் பயிற்சியுடன் அவரது பன்னீராண்டு பள்ளிப்படிப்பு முடிவுற்றது. அவருக்குப் பிடிக்காதவைகளைக் கட்டாயமாகப் படிக்கவேண்டிய நிலை மாறியதற்காக அவர் மகிழ்ந்தார். இலத்தீனுக்கும், கிரேக்க மொழிக்கும் முழுக்குப் போட்டார். அவற்றிற்குப் பதிலாக, ராணுவப் பயிற்சியின் வீரம் அவரைக் கவர்ந்தது. படைத்தந்திரங்கள், முற்றுகைகள்,

[1] My Early Life—W. Churchill, p. 30.

படை நிர்வாகம், ராணுவச் சட்டம் ஆகியவை அவருக்கு விருப்பூட்டின. தந்தையாரின் ஆணைப்படி புத்தகக்கடை நண்பர் ஒருவர் வின்ஸ்டனுக்குப் போர்பற்றிய பல நூல்களை வாங்கிக் கொடுத்தார். அத்தகைய நூல்களைக்கொண்ட ஒரு நூலகமே அவரிடம் இருந்தது. உடற்பயிற்சியை விரும்பாத வின்ஸ்டன் அகழி அமைத்தல், ரயில்வழி, பாலங்கள் அமைத்தல், அரண்கள் அமைத்தல் ஆகியவற்றில் ஈடுபாடு கொண்டார். சாண்டர்ஸ்டிவிருந்த காலத்திலே வின்ஸ்டன் 'எம்பயர் தியேட்டரில்' (Empire Theatre) அவரது முதல் மேடைப்பேச்சை முழக்கினர். இசை மன்றத்தில் தூய்மை வேண்டுமென்பதற்காக நடத்தப்பட்ட ஆர்ப்பாட்டம் அது. அதன் ஆதரவாளர்களுக்காக வின்ஸ்டன் தமது தங்கக் கைக்கடிகாரத்தையே அடகுவைத்தாராம்.

1894ல் வின்ஸ்டனின் சாண்டர்ஸ்ட் வாழ்வு முடிவுற்றது படையில் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும். படை அதிகாரிகளுடன் எவ்வாறு பழகவேண்டும் என்பனவற்றை வின்ஸ்டன் சாண்டர்ஸ்டில் கற்றுக்கொண்டார். படை அணித் தலைவரான மேஜர் பால் (Major Paul) மிகவும் கண்டிப்பானவர். ஒருமுறை வின்ஸ்டன் அனுமதியின்றி வெளியே சென்ருர். வழியில் மேஜரைக் கண்டு வணக்கம் செய்தார், எனினும் அவர் திரும்பி வந்தபின் அவர்மீது நடவடிக்கை எடுக்கவில்லை. பதிவேட்டில் வின்ஸ்டனின் பெயரைத் தாமே எழுதி அனுமதியும் வழங்கி இருந்தார். இங்கிலாந்தின் ராணுவ மரபுகளை வியந்த வின்ஸ்டன் அன்று முதல் தம்மைத் திருத்திக்கொண்டார். குதிரைவீரர் தகுதி மட்டுமே பெற்ற வின்ஸ்டன் சாண்டர்ஸ்டை விட்டதும், நான்காவது ஹுஸார் (Hussar) படையில் சேர்ந்தார்.

# 3. களம் பல கண்ட இளம் படைவீரர்

## அன்புத் தந்தையின் அகால மறைவு

சாண்டர்ஸ்ட் பயிற்சி முடிந்ததும் வின்ஸ்டன் நான்காம் ஹுசார் படையில் கீழ்நிலைத் துணைத் தலைவராகத்தான் (Subaltern) உயர முடிந்தது. மகனை அறுபதாவது துப்பாக்கிப் படையில் சேர்க்க எண்ணியிருந்த தந்தைக்கு இது ஏமாற்றமாக இருந்தது. 'பரிமீதமர்ந்து பட்டயமேந்திப் போரிட முடியாதா?' என்று வின்ஸ்டன் தம்மை ஆறுதல் படுத்திக்கொண்டார். இதனிடையில் ரேண்டால்ஃப் பிரபுவின் அரசியல் வாழ்க்கையில் பல மாறுதல்கள் நிகழ்ந்து வந்தன, 1886ஆம் ஆண்டிலேயே ரேண்டால்ஃப் பிரபு தமது கட்சியான டோரிகளுடன் பாராளு மன்றத்தில் மோதிக்கொண்டார். பழுத்த அரசியல்வாதியான கிளாட்ஸ்டனுக்கே அஞ்சாத ரேண்டால்ஃப் பிரபு தமது கட்சிக்காரர்களுக்கா பணிந்துவிடுவார்? இவ்வாறு அவரும் அவரது ஆதரவாளர்களும் இணைந்து எதிர்ப்புகளை நடத்தி வந்ததால் அவர்கள் 'நான்காம் கட்சியினர்' என்று அழைக்கப் பட்டனர். லிபரல்கள், கன்சர்வேடிவ்கள், அயர்லாந்து கட்சி யினர் என்ற மூன்று கட்சிகள் ஏற்கெனவே இருந்து வந்தன. 'நான்காம் கட்சியினர்' தந்திர உத்திகளிலும் சிந்தனைகளிலும் சுதந்திரமாக இருந்தனர். தங்களை 'டோரி ஜனநாயகவாதிகள்' (Tory Democrats) என்று கூறிக்கொண்டனர்.

கிளாட்ஸ்டனின் ஆட்சிக்கு அயர்லாந்து, எகிப்திய பிரச் சினைகள் தலைவலியாக அமைந்த நிலையில், ரேண்டால்ஃபின் கை ஓங்கியது. அவரது காமன்ஸ் சபை பேச்சுகளைப் பொதுமக்கள் பாராட்டினார்கள். அவரது ஆவேசமும், ஆடித்துடிக்கும் மீசையும் கேலிச்சித்திரக்காரர்களுக்கு நல்ல விருந்தளித்தன. ரேண்டால்ஃப் பிரபுவின் சொல்லழகும், நகைச்சுவையும், கிப்பன் பாணியில் அமைந்த இலக்கிய நடையும் பெரும்புகழ் பெற்றன. அவரது பேச்சு முறையே 'ரேண்டால்ஃபிய முறை' என்று வழங்கப்

பட்டது. இவ்வாறு இளம்வயதில் அவரது அரசியல் வாய்ப்புகள் நம்பிக்கை ஊட்டின. சாலிஸ்பெரி பிரபு (Salisbury) அமைச்சரவையில் ரேண்டால்ஃப் இந்திய அமைச்சராக நியமிக்கப் பட்டார். இந்தியர் பிரச்சினை பற்றிப் பாராளுமன்றத்தில் தீவிர மாக வாதாடினர். ஆனல் பிரதமரும், விக்டோரியா அரசியா ரும் ரேண்டால்ஃபைக் கலந்தாலோசிக்காமல், பம்பாயின் படைத் தலைமைக்கு ஓர் இளவரசரை நியமித்துவிட்டனர். கொள்கைப் பிரச்சினையில் ரேண்டால்ஃப் பதவியை உதறித் தள்ளிவிட்டார்.

ரேண்டால்ஃப் மகத்தான வெற்றிக்காகக் காத்திருந்தார். அமைச்சரவை வீழ்ந்து, கன்ஸர்வேடிவ்கள் மீண்டும் பதவி ஏற்ற னர். ரேண்டால்ஃப் நிதி அமைச்சராகவும், காமன்ஸ் சபையில் கட்சித் தலைவராகவும் பதவி உயர்வு பெற்றர். ஆனல் ஆறே மாதங்களில் மீண்டும் ராஜினமா செய்தார். மீண்டும் தம்மை அழைப்பார்கள் என்று இறுமாந்திருந்த ரேண்டால்ஃப் பிரபு ஏமாற்றமடைந்தார். 'வரவுசெலவுத் திட்டத்தைச் சமர்ப் பிக்காத நிதி அமைச்சராகவும், ஒரே அமர்வின் அவைத்தலைவ ராகவும், வெற்றிச் சின்னமில்லாத வீரராகவும்' ரேண்டால்ஃப் பிரபு வெளியேறியதுதான் சோகத்தின் சிகரமாகும். 'கைக்கு எட்டியும் வாய்க்கு எட்டாத' நிலையில் அவரது அரசியல் வாழ்வு முடிவுற்றது. ஆனல், அவர் தமது அரசியல் கொள்கைகளையும், உறுதிப்பாடுகளையும் விட்டுவிடவில்லை. ஒரு தேசிய கட்சியை நிறுவுவதாகவும் அவர் சிலவேளை கனவு காண்பார். நல்ல வாய்ப்புகளை இழந்துவிட்ட ஓர் அரசியல்வாதியாக அவர் போராடிக் கொண்டிருந்தார்.

ரேண்டால்ஃப் பிரபுவின் சகாக்களோ அவரது வீழ்ச்சியைப் பயன்படுத்தித் தங்களின் பதவியைப் பலப்படுத்திக் கொண் டார்கள். துரதிஷ்டம் தொடங்கிவைத்ததை தீராத பிணி முடித்துவிட்டது. ரேண்டால்ஃபின் அழிவை அவரே தேடிக் கொண்டார் என்பதுதான் உண்மை. அவருடைய சிறிய வெற்றி களைவிட நீண்ட துயரங்களையே மக்கள் அதிகம் நினைவுகூர்ந்தனர். 1894ஆம் ஆண்டு வசந்தகாலத்தில் ரேண்டால்ஃப் பிரபுவின் உடல் நிலை குன்றியது. ஜூன் திங்களில் ஒருநாள் தந்தையிடமிருந்து மகனுக்கு அவசரக் கடிதம் வந்தது. 'உலகப்பயணம் செல்ல விரும்புகிறேன்; உடனே புறப்பட்டு வரவும்' என்பதுதான் செய்தி. வின்ஸ்டன் உடனே இலண்டனுக்குப் புறப்பட்டார். அன்பு அன்னையும், சகோதரனும் பிணியுற்றுக்கிடந்த தந்தையின்

அருகில் நின்றனர். உடல்மெலிந்து, உருக்குலைந்து கிடந்தது வீரசிங்கம். மைந்தனைக் கண்டதும் அன்புடன் அவனைத் தட்டிக் கொடுத்தார். சிறிதுநேரத்தில் ரேண்டால்ஃப் பிரபுவின் முடியாத பயணம் தொடங்கியது. காலமெல்லாம் கர்ஜனை செய்த காமன் சின் குரல் அடங்கிவிட்டது. அப்போது அவருக்கு நாற்பத்தாறு வயதுகூட நிரம்பவில்லை. 'ரேண்டால்ஃப் பிரபு தமக்குப் பின் எந்தச் சாதனைகளையும் விட்டுச் செல்லவில்லை; புதிய கொள்கைகள் எவையும் வகுத்துத் தரவில்லை'[1] என்று ரோஸ்பெரி (Rosebury) பிரபு குறிப்பிட்டார். ஆனால், ரேண்டால்ஃப் பிரபு தமக்குப்பின் ஒரு வீரமகனை விட்டுச் சென்றிருந்தார்.

## புத்துணர்வு படைக்கும் புதுயுகம் பிறந்தது

ரேண்டால்ஃப் பிரபுவின் காலம் முடிந்தது. வின்ஸ்டனின் வீரயுகம் பிறந்துகொண்டிருந்தது. கடந்த இருபத்தைந்தாண்டு களில் எத்தனையோ மாற்றங்கள் நிகழ்ந்துவிட்டிருந்தன. பழைய தலைமுறையினரில் பலர் மறைந்துவிட்டனர். பேரரசி விக்டோ ரியா பெருமையுடன் பிரிட்டிஷ் பேரரசை இன்னும் ஆண்டு வந்தார். டிக்கன்சும், தாக்கரேயும் புனைந்த புதினங்களும், டென்னிசனும், பிரௌனிங்கும் எழுதிய கவிதைகளும், டிஸ்ரேலி யும், கிளாட்ஸ்டனும் நடத்திய அரசியலும், டார்வினும், ஹக்ஸ்லியும் கண்ட கனவுகளும் புதிய யுகத்தின் பொலிவைப் பிரகடனப் படுத்திக்கொண்டிருந்தன. ஒரு நூற்றாண்டு முடி வுற்றுப் பிறிதொன்று பிறக்கின்ற நிலையில் இளந் தலைமுறைகள் உள்ளக்கிளர்ச்சி கொண்டதில் வியப்பில்லை. விஞ்ஞானத்தில் மலரவிருந்தபொன்யுகத்தைப் பியர்ட்ஸ்லியும், பெர்னார்ட்ஷாவும் முன்னறிவித்தனர்.

எனவே இக்காலத்தின் குறிக்கோள்களும், நம்பிக்கைகளும் வின்ஸ்டன் போன்ற வீர இளைஞர்களைக் கவர்ந்திழுத்தன. ஆட்சி யிலும் அறநெறி வெற்றி சூழ்ந்திருந்தது. மனித குலத்தின் முன்னேற்றத்தில் தெய்வத் திருவருள் இருப்பதன் அறிகுறிகள் தென்பட்டன. ஏழு பெருங்கடல்களிலும் இணையற்று, பிரிட்டிஷ் படை விளங்கினலும், இந்தியாவின் வடமேற்கிலும், எகிப்திலும், சுடானிலும், ஐரோப்பாவிலும் போர் மேகங்கள் திரண்டுகொண் டிருந்தன. எனினும் பிரிட்டிஷ் மக்கள் உறுதி குலையாமல் நின்றனர். சாலிஸ்பெரி பிரபுவின் அறிவும், ரோஸ்பெரி பிரபுவின் நாவன்மையும், ஜோசப் சேம்பர்லேனின் கற்பனைகளும், சிசில் ரோட்சின் கனவுகளும் நாட்டு மக்களுக்கு உணர்ச்சியூட்டி வந்தன.

[1] My Early Life—W. Churchill, p. 35.

இத்தகைய சூழ்நிலையில்தான் வின்ஸ்டன் அறிவு முதிர்ந்து பக்குவப்பட்டு வந்தார். காலம் தன் முத்திரையை அவர்மீது பதித்தது. இயல்பான ஆற்றல்களும், இருபெரும் குடிகளின் மரபும் அவரிடம் விளங்கின. அளவில்லாத அவா அவரிடம் பொங்கி வழிந்தது. கடந்த பத்தாண்டுகளுக்கு மேலாக நடந்த போரில் பலியான வீரப்பெருமக்களின் தியாகமும், தீரமும், வின்ஸ்டன் போன்ற இளம்வீரர்களுக்குச்சவால் விடுவது போன்று இருந்தது. வின்ஸ்டன் வீரராக வேண்டுமென தாய்நாடு அழைத்தது.

### கியூபாவில் கொரில்லாப் போர்

கர்மயோகி ஒருவன் தனது வாழ்க்கையின் இலட்சியத்தை நிறைவேற்றத் துடித்துக்கொண்டிருப்பான். அவன் எப்பொழுதும் செயல்பட்டுக் கொண்டே இருக்கவேண்டும். அரசியாரின் ஆணை பெற்றிருந்த நான்காம் ஹுசார் படை குதிரைவீரரான வின்ஸ்டனுடைய அகராதியில் 'செயல்' என்றால் 'போர்' என்று பொருள். வின்ஸ்டன் போர் அனுபவங்களைப்பற்றிப் பதினான்கு நூல்களை எழுதியிருக்கிறார். அவர் ஆற்றிய போர் உரைகள் மட்டும் பன்னிரு நூல்களாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றன. வெவ்வேறான எட்டுப்படைகளில் அவர் பணிபுரிந்திருக்கிறார். நான்காம் ஹுசார்படை, முப்பத்தியோராம் பஞ்சாப்படை, இருபத்தியோராம் லான்சர்படை, தென்னாப்பிரிக்கக் குதிரைப்படை, ஆக்ஸ்ஃபோர்ட் ஷயர் வீரவேளாண்படை, இரண்டாம் கிரனேடியர் காவல்படை, ஆறாவது ராயல்ஸ்காட்ஸ் ஃபியூசிலியர் (Fusiliers) படை, ஆக்ஸ்ஃபோர்ட் ஷயர் பீரங்கிப்படை என்பவை அவையாகும். முதல் இரு உலகப் போர்களுக்கு முன்னர் அவர் நான்கு படையெடுப்புகளில் பங்கு பெற்றிருக்கிறார். போர் நிருபராகப் பெருந்தொண்டு புரிந்துள்ளார். இரு உலகப்பெரும்போரையும் இயக்கி வெற்றி குவித்த பெருமை அவருடையது. மால்பரோ கோமகனின் வரலாற்றை எழுதுவதற்காகப் பல நாட்டுப் படை வரலாறுகளை விரிவாக ஆராய்ந்திருக்கிறார். இத்தகைய ஒரு வீரர் உருவாகிய வரலாற்றைக் காண்பது சுவை நிறைந்ததாகும்.

இளம் வீரர் வின்ஸ்டன் நான்காம் ஹுசார் படைக்குரிய சீருடை அணிந்து பயிற்சிக்காக ஆல்டர் ஷாட் (Alder Shot) தளத்திற்குச் சென்றார். குதிரைகளின் குளம்பொலியும், படைக் கலங்களின் 'பளீர்' ஓசையும், சிகையணி இறகின் அசைவும், சீருடையின் கம்பீரமும் வின்ஸ்டனுக்குப் பரவசமூட்டின. குதிரை மீதேறி எதிரிகளைத் தாக்குகின்ற உத்திகளில் பயிற்சி அளிக்கப்

பட்டது. விடுமுறையில் போலோ குதிரைகளை வாங்குவதில் வின்ஸ்டன் பொருளை விரையமாக்கிவிட்டார். வேட்டைக்குச் செல்லவும் வழியில்லை. இந் நிலையில்தான் வீரச்செயல் புரிய அழைப்பு வந்தது. 1895ஆம் ஆண்டு நவம்பரில் லெஃப்டினன்ட் சர்ச்சிலும், அவரது நண்பர் ரெஜினல்டு பார்னசும் (Reginald Barnes) கியூபாவிற்குப் புறப்படுமாறு ஏற்பாடாயிற்று.

வின்ஸ்டன் கியூபாவிற்குப் புறப்படுமுன்னர் 'டெய்லி டெலி கிராஃப்' (Daily Telegraph) பத்திரிகையின் உரிமையாளர்களுடன் தமது போர் அனுபவங்களைக் கடிதங்களாக எழுதி அனுப்பு வதாக ஒப்பந்தம் செய்துகொண்டார். செலவுகளை ஈடுசெய்யும் நோக்கத்துடன் செய்யப்பட்ட இந்தத் திட்டம் பிரிட்டனுக்குச் சிறந்த ஒரு போர் நிருபரை உருவாக்க உதவியது. 1895 நவம்பரில் வின்ஸ்டன் அமெரிக்கா சென்று அன்னையாரின் ஜென்ம பூமியைத் தரிசித்துவிட்டு, கியூபாவிற்குப் புறப்பட்டார். கரிபியன் கடலின் நீலவண்ண நீரைக் கடந்ததும் கியூபாவின் குன்றுகள் தென்பட்டன. கியூபாவின் சுருட்டுகளும், ஆரஞ்சுகளும், மரியாதைகளும் அவரை வரவேற்றன. அதுகாலை கியூபாவில் உள்நாட்டுக் கிளர்ச்சி நடந்துகொண்டிருந்தது. போர்முறையில் நிலவிய குழப்பங்களும், நாட்டில் பரவிய விஷஜுரமும், கொடிய வெப்பமுள்ள காடுகளும் புதர்களும், நழுவித் தப்புகின்ற கொரில்லாக்களும், 'திடீர்த்தாக்குதல்' அணிக்குப் பெருந்தொல்லை கொடுத்தன. கொசுப்படையைத் தூண்டில் குச்சியால் துரத்த முயல்வது போன்றிருந்தது இந்தப் படையெடுப்பு.

பல நாட்கள் முன்னேறியபின் வின்ஸ்டன் எதிர்பார்த்த வீரச்செயல் வாய்ப்புகள் கிடைத்தன. கொரில்லாக்கள் துப்பாக் கிச்சூடு நடத்தினார்கள். பாய்ந்துவந்த குண்டொன்று வின்ஸ்ட னின் தலைக்குமேல் பறந்து ஒரு குதிரையைக் காயப்படுத்தியது. ஆபத்தில் சிக்கிக்கொண்ட வின்ஸ்டன் தப்பி ஒரு குடிசையில் தஞ்சம் புகுந்தார். குண்டுகள் அங்குமிங்கும் பறந்துகொண் டிருந்தன. சில நாட்களின் பின்னர் கொரில்லாக்கள் மீண்டும் தாக்கப்பட்டனர். முடியாத போராக இருந்த இந்தக் கொரில் லாத் தொல்லையிலிருந்து வின்ஸ்டன் தப்பியதே அவரது நல்ல காலம் என்று கூறவேண்டும்.

கியூபா அனுபவம் வின்ஸ்டனுக்கு வாழ்நாள் முழுவதும் பயன்படத்தக்க ஒரு பழக்கத்தைத் தந்தது. நண்பகல் உண விற்குப் பின்னர் சிறிது ஓய்வெடுத்துக்கொள்வது எவ்வளவு நல்ல தென்பதை அவர் நடைமுறையில் கண்டுணர்ந்தார். ஒரு மணி

நேரத் துயில் கொண்டால் இருமணி நேரம் அதிக வேலை செய்ய முடியும் என்னும் அனுபவ உண்மை மிகவும் பயன்பட்டது. இந்தப் படைப்பயிற்சி வின்ஸ்டனுக்கு அதிக பயன்தரவில்லை என்றாலும், அவரது போரார்வத்திற்கு உணவாக அமைந்தது. ஹுசார் படையிலிருந்து வின்ஸ்டன் பெற்றிருந்த விடுப்பு முடிவுற்றபோது ஸ்பெயின் நாட்டின் முதல்தர வீரப்பதக்கத்துடன் தாய்நாடு திரும்பினார். 'கியூபாவை வீரச்செயலின் விளை நிலமாகவும், வீழ்ந்து மடியும் களமாகவும்' முதலில் அவர் கனவு கண்டார்.

### இந்தியா அழைக்கிறது

சர்ச்சில் தாய்நாடு திரும்பியபோது அவரது படை இந்தியா புறப்படுவதற்குத் தயாராக இருந்தது. இந்தியாவின் வடமேற்கு எல்லையில், 'உலகத்தின் கூரையில்' வாழ்ந்துவந்த அமைதியற்ற மலைக்குடிகள் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தார்கள். 1897ல் சுதந்திர வீர மலைக்குடிகள் பெரும் சாதனைகளைப் புரிந் தார்கள். அதுகாலை வின்ஸ்டன் விடுமுறையில் இருந்ததால் புதிதாக வீரச்செயல் புரிய அவர் துடித்துக் கொண்டிருந்தார். தமது படை அணிக்காக போலோ போட்டியில் வெற்றி பெற வேண்டுமென்பது வின்ஸ்டனின் மற்றொரு ஆவல். இந்தியாவின் போலோ குதிரைகளும், மதுவகைகளும், 'காப்டன் காட்ஸ்பியும்' (Gadsby), அவரைக் கவர்ந்தன. 1896ஆம் ஆண்டு வசந்தத்தில் நான்காம் ஹுசார் படை ஹவுண்ஸ்லோ (Hounslow) துறைமுகத் திற்குச்சென்று இந்தியாவிற்குப் புறப்படத் தயார் செய்யவேண்டி யிருந்தது. இங்கே வின்ஸ்டன் போலோ விளையாட்டிலும், குதிரைப் பந்தயத்திலும், அரசியல், சமூகப் பெரியார்களைச் சந்திப்பதிலும் செலவிட்டார். இலண்டன் நகரம் பேரரசியா ரின் வைர விழாவிற்காக ஏங்கிக் கிடந்தது.

வின்ஸ்டனின் நெருங்கிய உறவினரான வில்லியம் பிரபுவின் வீட்டில் அவர் அடிக்கடி விருந்துண்ணச் செல்வதுண்டு. இங்குத் தான் வின்ஸ்டன் முதல் முதலில் சர் பிண்டன் பிளட் (Sir Bindon Blood) என்ற சிறந்த படைத்தலைவரைச் சந்தித்தார். இந்திய எல்லைப் போரில் பெரும்புகழ் பெற்றிருந்த பிண்டன் பிளட் மீண்டும் எல்லைப்போர் ஏற்பட்டால் பிரதம படைத்தலைவராகும் வாய்ப்பிருந்தது. தமக்கும் பணிபுரிய வாய்ப்பளிக்குமாறு வின்ஸ்டன் அவரிடமிருந்து உறுதிமொழி வாங்கிக்கொண்டார். வின்ஸ்டன் ஒருமுறை இளவரசர் அளித்த விருந்திற்கு அழைக்கப் பட்டிருந்தார். ஆனால், ரயில் தாமதமாகச் சென்ற காரணத்தால் குறித்த நேரத்தில் அவர் தளத்தைச் சென்றடைய முடியவில்லை. "உமது படையில் குறித்தகாலத்தில் காரியங்களைச் செய்ய

பயிற்சி தருவதில்லையா?' என்று இளவரசர் வின்ஸ்டனிடம் கடுமையுடன் கேட்டார். அவர் வெட்கித் தலை குனியவேண்டிய நிலை ஏற்பட்டது. குறித்த காலத்தில் குறித்ததைச் செய்ய வின்ஸ்டன் எவ்வளவோ முயன்றும் அதில் வெற்றி பெறவில்லை என்று தமது சுயசரிதையில் குறிப்பிடுகிறார். 1897ல் இந்திய எல்லையில் தொல்லை ஏற்பட்டபோது வின்ஸ்டன் பிண்டன் பிளட்டின் வாக்குறுதியை நினைவுபடுத்தினர். அவர் போர் நிருபர் என்ற முறையில் ஏதாவது பத்திரிகை ஒப்பந்தத்துடன் படையில் சேரலாம் என உத்தரவு வந்தது.

அலகாபாத்தின் 'பயோனியர்' ஏடும், இலண்டன் நகரின் 'டெய்லி டெலிகிராஃப்' ஏடும் வின்ஸ்டனைப் போர் நிருபராக ஏற்றுக்கொண்டு ஆணைகள் வழங்கின. வின்ஸ்டனின் ஹுசார் படையும் அவருக்கு இந்தியா செல்வதற்கு விடுப்பு வழங்கியது. 1200 பேர்களை ஏற்றிக்கொண்டு சௌதாம்டனிலிருந்து புறப்பட்ட கப்பல், இருபத்துமூன்று நாட்களின் பின்னர் பம்பாயில் நங்கூரம் பாய்ச்சியது. அலைகடல் சுருட்டிக்கொண்டு வெள்ளித் திரை சுக்க. பிறைமதி போல் கிடந்த பம்பாயைக் காண வின்ஸ்டன் துடித்தார். கரையிறங்கும் விதிமுறைகளெல்லாம் முடிந்து இரவு எட்டு மணிக்குக் கரையில் இறங்கலாம் என்று ஆணை பிறந்தது. அதற்கிடையில் தன்னிச்சையாகச் செல்ல விரும்புவோர் செல்வதற்கும் தடை இருக்கவில்லை. உடனே வின்ஸ்டனும் சில நண்பர்களும் கப்பலின் அருகிலிருந்த சிறு படகு ஒன்றில் கரை நோக்கி விரைந்துகொண்டிருந்தனர். கரை சேர்வதற்காக வீசப்பட்ட வளையங்களைத் தாவிப்பிடிக்க முயன்ற வின்ஸ்டனின் வலத்தோள்பட்டை இறங்கி விட்டது. இந்தக் குறைபாடு அவரது வாழ்க்கை முழுவதும் அவரோடு இருந்தது. படை பூனு வழியாகப் பெங்களூர் பாளையத்தைச் சென்றடைந்தது. பூனுவில் பல இந்தியர்கள் படை அதிகாரிகளின் பணியாளர்களாக வேலை கேட்டு வந்தனர். அவர்களின் உறுதியும், கடின உழைப்பும் வின்ஸ்டனைக் கவர்ந்தன. பம்பாய் கவர்னர் சான்டர்ஸ்ட் பிரபு வின்ஸ்டனை விருந்திற்கு அழைத்திருந்தார். நாற்பத்தெட்டு மணி நேரத்தில் அவரது தீவிர ஆராய்ச்சியின் விளைவாக வின்ஸ்டன் இந்தியாவைப்பற்றிச் சாதகமான கருத்துகளை உருவாக்கிக்கொண்டிருந்தார்.

### பெங்களூர் அறிவுப் பாசறை

பெங்களூர் வாழ்க்கை மகிழ்ச்சியாகவும், குறைவில்லாமலும் இருந்தது. மூவாயிரம் அடி உயரத்தில் மங்களகரமான கால நிலை பெற்று அமைந்த அணிநகரில், கதிரவனின் கொடுமையும்

கோரத்தாண்டவமாடும். குளுமையான இரவுகளும், காட்சிக்கு இன்பந்தரும் பல்வண்ண மலர்களும், பறந்தோடி மகிழ்விக்கும் பறவைகளும், வண்ணத்துப்பூச்சிகளும் வின்ஸ்டனைக் கவர்ந்தன. ஆண்டிற்கு 500 பவுன் படியும், அவசரத்தில் கடன் வாங்க உள்ளூர் வட்டிக்காரர் கடைகளும் படை அதிகாரிகளுக்கு வசதிதான். கொழுத்த வட்டிக் கடைக்காரர்கள் நேர்மையும், வசூலிப்பதில் கடுமையும் கொண்டவர்கள். போலோ குதிரையைக் காட்டினுல் போதுமான கடன் புன்முறுவலுடன் கிடைக்கும். அதிகாரிகளுக்குத் தனிப் படைவீடுகள் இல்லாததால், மூவர் சேர்ந்து ஒரு பங்களாவை வாடகைக்கு அமர்த்திக் கொண்டார்கள். மூன்று ஏக்கர் நிலத்தில் பல வண்ணமலர்ச் செடிகளை வளர்த்தார்கள். மூன்று சமையல்காரர்கள் போட்டியின்றி சமைத்துப் போட்டார்கள். காலையில் அணிவகுப்பு; மாலையில் போலோ விளையாட்டு; ஆறு மணி நேரம் நீண்ட ஒய்வு.

நண்பகல் ஒய்வில் நல்ல வெப்பமாக இருக்கும். இந்த நேரத்தைத்தான் இருபத்திரண்டுவயதினரான வின்ஸ்டன் அறிவுப் பசியைத் தீர்த்துக்கொள்ளப் பயன்படுத்தினுர். பள்ளி நாட்களில் வாசிக்க முடியாத நூல்களையெல்லாம் இப்போது அவர் வாசித்துத் தீர்த்தார். அவருக்கு வேண்டிய புத்தகங்களை அன்னையார் அனுப்பி வைத்தார்கள். வரலாறு, பொருளாதாரம், தத்துவம், அரசியல், அறநெறி, சமயம் ஆகிய அத்தனை துறை சம்பந்தப்பட்ட முக்கிய நூல்களைப் படிக்க அவர் விரும்பினுர். தம் தந்தையாருக்குப் பிடித்த கிப்பனின் ரோம் நாட்டு வரலாறும், மெக்காலேயின் வரலாற்று நூல்களும், கட்டுரைகளும் அவரை மிகவும் கவர்ந்தன. கிரேக்க நாட்டுத் தத்துவ மேதைகளான பிளேட்டோவின் 'ரிபப்ளிக்கும்' (Republic), அரிஸ்டாடிலின் 'பாலிடிக்ஸும்' (Politics), மால்தூஸ், டார்வின், சோபனர், பேராசிரியர் லெக்கி (Leeky) ஆகியோரின் நூல்களையும் வின்ஸ்டன் ஊன்றிப் படித்தார். சமய நம்பிக்கைகளைப் பற்றிய பல வினுக்கள் அவர் உள்ளத்தில் எழுந்தன. அவற்றிற்கு விடை தேட விழைந்தார். 'த மார்ட்டர்டம் ஆஃப் மேன்' (The Martyrdom of man) என்ற மனித குல வரலாறும், 'த ரைஸ் அண்டு இன்ஃப்ளுவன்ஸ் ஆஃப் ரேஷனலிசம்' (The Rise and Influence of Rationalism), 'த ஹிஸ்டரி ஆஃப் ஈரோப்பியன் மாரல்ஸ்' (The History of European Morals) என்ற தத்துவ நூல்களையும் அவர் படித்து முடித்தார். பார்லெட் (Barlett) எழுதிய மேற்கோள்களின் தொகுப்பு அவருக்கு உறுதுணையாக இருந்தது. இவ்வாறு போர்ப்பாசறை வின்ஸ்டனின் பகுத்தறிவுப் பாசறையாக மாறியது.

1897ஆம் ஆண்டு கோடையில் அதிகாரிகளுக்கு விடுமுறை வழங்கப்பட்டது. அப்பொழுதுதான் இந்தியா வந்திருந்த பலர் இந்த மூன்றுமாத விடுமுறை எடுத்துக்கொள்ள விரும்பவில்லை. வின்ஸ்டன் தாய்நாடு திரும்பினார். வழியில் கர்னல் ஈயான் ஹாமில்டன் (Yan Hamilton) மூலமாகக் கிரேக்கத் துருக்கிப் போரைப்பற்றி அறிந்துகொண்டார். அங்குச் சென்று போர் நிருபராகப் பணிபுரியும் ஆசை அவரைக் கவர்ந்தது. அதற்குள் கிரேக்கர் தோற்கடிக்கப்படவே, 'கிப்பனை'க் கையில் எடுத்துக் கொண்டு இத்தாலிக்குப் புறப்பட்டுவிட்டார். ரோம் நகரையும், விசுவியஸ் எரிமலையையும் பிறவிடங்களையும் காண அவர் உள்ளம் விரும்பியது.

### எல்லையில் தொல்லை

இத்தாலியில் மகிழ்வுலா முடிந்து நாடு திரும்பிய வின்ஸ்டன் இலண்டன் நகர் வைர விழாக்கோலம் பூண்டிருப்பதைக் கண்டார். ஒருநாள், பத்திரிகை படித்துக் கொண்டிருந்தவர் இந்தியாவின் வடமேற்கு எல்லையில் போர் மூண்டிருப்பதையும், தளபதி சர் பிண்டன் பிளட் அங்கிருப்பதையும் அறிந்தார். போர் நிருபராகத் தம்மைப் பதிவு செய்துகொண்டு உடனே புறப் பட்டார். பெங்களூரில் படை அதிகாரிகளைக் கண்டு அனுமதி பெற்றார். அங்கிருந்து ஐந்து நாட்கள் ரயில் பயணம் செய்து ஈராயிரம் கல் தொலைவிலிருந்த நௌஷராவை (Nowshera) அடைந்தார். அதன் அருகில்தான் 'மலக்கண்ட் ஃபீல்டு ஃபோர்ஸ்' (Malakand Field Force) என்ற பிரிட்டிஷ் களப்படை மலைக்குடிகளுடன் போரில் ஈடுபட்டிருந்தது. அதில் சேர்ந்து பணிபுரிய வின்ஸ்டன் ஆர்வம் கொண்டார். அக்காலத்தில் போர் நிருபர்கள்கூட களத்தில் குதித்து வீரப்போர் புரிந்து 'விக்டோரியா கிராஸ்' விருது பெற்றிருந்தனர்.

இந்த எல்லைத் தொல்லையின் காரணம் என்ன? மலக்கண்ட் கணவாயின் உச்சியும், ஸ்வாத் (Swat) பள்ளத்தாக்கிலிருந்து ஸ்வாத் ஆற்றுவழியாக சித்ராலுக்குச் (Chitral) செல்கின்ற சாலையும் பிரிட்டிஷார் வசமிருந்து வந்தன. இதில் சித்ரால் ராணுவ கேந்திரமான இடம். ஆனால், ஸ்வாத் பள்ளத்தாக்கி லிருந்த மலைக்குடிகள் பல தலைமுறைகளாக தாங்கள் வசித்துவரும் பூமியில் வெள்ளையரின் படைகள் இருப்பதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர். அவர்கள் மலக்கண்ட் கணவாயைப் பாதுகாத்து வந்த காப்பரண்களையும், சாக்தாரா (Chakdara) மலைக்கோட் டையையும் தாக்கினர்கள். இதில் பெண்களும், குழந்தைகளும்

உட்படப் பலர் உயிரிழந்தனர். எனினும் இந்தத் திடீர்த் தாக்குதலைப் பதினேராம் வங்காள லான்சர் படையினர் ஒருவகையாகச் சமாளித்துச் சாக்தராக்கோட்டை மலைவாசிகளின் கையில் சிக்காமல் காப்பாற்றினர்கள். பன்னீராயிரம் வீரர்களைக் கொண்ட படையினர் கணவாயின் தொங்குபாலத்தின் வழியாகத் தப்பி, மாமுந்த் (Mamund) நாட்டைக் கடந்து, சமவெளிக்குப் பத்திரமாக வந்து சேர்ந்தனர். இது சமயம் புனர்வால் (Bunerwal) மலைவாசிகளை அடக்கிவிட்டு வந்திருந்த சர் பிண்டன் பிளட் புதிய தொல்லையையும் அடக்கி வெற்றி பெற எண்ணினர்.

ஆகவே, 1896ஆம் ஆண்டு செப்டம்பரில் பிரிட்டிஷ் படை ஐயாயிரம் அடி உயரத்தில் கணவாய்களையும், மலைப்பிளவுகளையும் கடந்து முன்னேறிக் கொண்டிருந்தது. இருமருங்கிலும் துப்பாக்கியைத்தாங்கிய மலைக்குடிகள் மறைந்திருந்தனர். பதானியர்கள் பிறவியிலேயே போர் செய்யப் பழகிக் கொண்டவர்கள். 16ஆம் நாள் மாமுந்த் பள்ளத்தாக்கில் கைகலப்பு ஏற்பட்டது. வின்ஸ்டன் மிகவும் ஆபத்தான கட்டத்தில் சிக்கிக்கொண்டிருந்தார். இறுதியில் பிரிட்டிஷ்படை எதிரியின் தொல்லைகளைத் தாங்க முடியாமல் பின்வாங்கத் தொடங்கியது. ஒரு துணைப் படை அதிகாரி காயப்பட்டார். அவரை நான்கு வீரர்கள் சுமந்து சென்றுகொண்டிருந்தனர். திடீரென உருவிய வாளுடன் சில பதானியர் அவர்களைத் தாக்கவே, காயம்பட்ட தலைவரைக் கீழே போட்டுவிட்டு வீரர்கள் ஓட்டம் பிடித்தனர். மலைவாசிகளின் தலைவனுகத் தோன்றியவன் கீழே கிடந்தவரின் உடலை நான்கைந்து முறை தன் வாளால் சிதைத்தான். இதைக் கவனித்துக்கொண்டிருந்த வின்ஸ்டன் எப்படியும் அவனைத் தீர்த்துக் கட்ட எண்ணினர். குதிரைப்படைக்குரிய வீரவாளை உருவிக் கொண்டு தயாராக இருந்தார். அவனே பெருங்கல்லை வின்ஸ்டன் மீது வீசியெறிந்தான். இருவருக்கும் இடையே இருபது கெஜ தூரந்தான் இருக்கும். வாளை ஆட்டிக்கொண்டு முன்னேறிக் கொண்டிருந்தார். வின்ஸ்டன் சுழல்துப்பாக்கியை எடுத்து இருமுறை அவன்மீது சுட்டார்; பலனில்லை. மூன்றுவது சூட்டோடு அவன் கல்லின்மீது விழுந்து ஓடினன்.

வின்ஸ்டன் தன்னந்தனியாக விடப்பட்டார். குண்டுகள் அங்குமிங்கும் பறந்துகொண்டிருந்தன. வின்ஸ்டன் வேறு வழியின்றி ஓடத் தொடங்கினர். தொலைவில் நின்றுகொண்டிருந்த சீக்கிய வீரர்கள் அவரைக் கையசைத்துக் கூப்பிட்டார்கள். விரைவில் அவர்களுடன் சேர்ந்து உயிர் தப்பினர். 'மிக

ஆபத்தான கட்டத்தில் அரிய பணிபுரிந்தார்'[1] என்று அரசிதழ் வின்ஸ்டனைப் பாராட்டியது. சர் பிண்டன் பிளட் அவரைத் தனிப்பட்ட முறையில் புகழ்ந்தார். சின்னாட்களில் 38ஆவது டோக்ரா (Dogra) படைக்கு அவர் அதிகாரியாக நியமிக்கப் பட்டார். பிரிட்டிஷ் குதிரைப்படை அதிகாரியொருவர், சுதேச குதிரைப்படைக்குத் தலைவராக நியமிக்கப்பட்டது இதுவே முதல் தடவையாகும். ஆனால், சுதேசிகளின் மொழி தெரியாதது அவருக்குக் குறைபாடாக இருந்தது. எனினும் இந்திய வீரர் களுக்குப் புதிய அதிகாரியை மிகவும் பிடித்திருந்தது. படை வீரராகவும், போர் நிருபராகவும் வின்ஸ்டன் நல்ல பணிபுரிந்து நிறைந்த அனுபவம் பெற்றார். நிரந்தரமாக எல்லைப்போரில் ஈடுபட்டு உழைக்க அனுமதி கிடைக்காததால் மீண்டும் அவர் பெங்களூருக்குத் திரும்பவேண்டியதாயிற்று. பெங்களூரில் இருந் தாலும் வின்ஸ்டனின் எண்ணமெல்லாம் வடமேற்கு எல்லையில் தான் இருந்தன.

## டிர்ரா (Tirah) படையெடுப்பு

பெங்களூர் பாசறையில் ஓய்வுகிடைத்த வேளைகளில் வின்ஸ் டன் தமது எல்லைப்போர் அனுபவங்களைத் தொகுத்துத் 'த மலக் கண்ட் ஃபீல்டு ஃபோர்ஸ்' (The Malakand Field Force) என்னும் நூலை எழுதினார். அவரது பேனா படைத்த முதல் நூல் இதுதான். விற்பனையிலும், இலக்கியச் செறிவிலும் இது பெரும்வெற்றிப் படைப்பாகக் கருதப்பட்டது. ஈராண்டுச் சம்பளத்திற்கு ஈடான பொருள் அவருக்குக் கிடைத்தது. இளவரசர் உட்பட (பின்னர் ஏழாம் எட்வேர்டு அரசரானவர்) பலர் வின்ஸ்டனின் நூலைப் பாராட்டி எழுதினார்கள். அவர் துணிவுடன் பெரிய அதிகாரி களின் குறைகளைச் சுட்டிக்காட்டியதைப் பலர் வரவேற்றாலும், படை அதிகாரிகள் அதனை விரும்பவில்லை. மால்பரோவின் வழித் தோன்றல் தம் ஆற்றல்களை இதன்மூலம் முன்னறிவித்தார். இந்த நூலின் பெருமைகளும், அது பெற்ற பாராட்டுகளும் வின்ஸ்டனுக்குப் பெரும் ஆறுதல் தந்தன.

வின்ஸ்டனின் சிந்தனைகள் இன்னும் இந்திய எல்லையில் நிலைக்குத்தி நின்ற நிலையில்தான், பிரிட்டிஷ் அரசாங்கம் ஆஃப்ரிட்ஸ் (Afrids) மலைக்குடிகளை அடக்க டிர்ரா மைதானத் திற்கு 35000 வீரர்களைக்கொண்ட பெரும்படையை அனுப்பத் தீர்மானித்தது. 'இல்லை' என்பதை என்றும் பதிலாக ஏற்றுக் கொள்ளாத வின்ஸ்ட்ன் இந்தப் படையெடுப்பில் பங்குபெறப்

[1] Churchill—A Portrait, Philip Guedalla, p. 57.

பகீரதப் பிரயத்தனம் செய்தார். கல்கத்தாவுக்குச் சென்று அதிகாரிகளைக் கண்டு பேசினார். விடுப்புப் பெருமலே எல்லைப்புறத் திற்குச் சென்று அட்ஜுடன்ட் ஜெனரல் பதவி வகித்த சர் வில்லியம் லோக்ஹார்ட்டை (Lockhort) நேரில் காண விரும்பினார். அவரது துணை அதிகாரியான ஹால்டேன் (Haldane) வின்ஸ்டனின் உருக்கமான வேண்டுகோளுக்குச் செவிமடுத்தார். படைத்தலைவர் தமது சொந்தச் சிப்பந்திப் படையில் வின்ஸ்டனை ஏற்றுக்கொள்ளச் சம்மதித்தார். அவரது நியமனம் அரசிதழில் வெளியிடப்பட்டது. அரசாங்கத்திடமும், வின்ஸ்டனின் பெங்களூர் படைத் தலைமையினிடமும் இசைவு கேட்டுக் கடிதங்கள் அனுப்பப்பட்டன.

எல்லாம் நல்லமுறையில் நடந்தேறி வின்ஸ்டன் பொறுப்பு ஏற்கின்ற நேரத்தில் 'வெண்ணை திரண்டு வருகையில் தாழி உடைந்ததைப் போன்று' போர் நிறுத்தப்பட்டது. மலைக்குடிகளுடன் நீடித்த அமைதி ஏற்பட்டது. 'பீவர் என்ற கடல் பிராணி அணைகளைக் கட்டி மீன்பிடிக்கத் தயாராக இருக்குமாம். அந்த நேரத்தில் வெள்ளம் புரண்டுவந்து அதன் உழைப்புகளைச் சிதைத்துவிடும். வெள்ளத்தில் மீனும் தப்பிவிடும். மீண்டும் பீவர் தமது முயற்சிகளைத் துவக்கும்.' வின்ஸ்டனின் நிலையும் இவ்வாறு இருந்ததென அவர் தமது சுயசரிதையில் குறிப்பிடுகிறார்.

### சூடானில் சர்ச்சில்

'செய்தியை எழுதிக் கொண்டிருப்பதைவிட, செய்தியைப் படைப்பது சிறந்தது'[1] என்று வின்ஸ்டன் தமது முதல் நூலில் ஒரு கருத்தை வெளியிட்டார். அதற்கேற்ப அவரின் அமைதியற்ற உள்ளம் மீண்டும் போரில் ஈடுபட விரும்பியது. டிர்ரா படையெடுப்புக் கைவிடப்பட்டதும் வின்ஸ்டன் பெங்களூர் சென்று தமது அணிக்காகப் போலோ போட்டிகளில் கலந்து கொண்டார். இருபத்துமூன்று வயதில் போர் அனுபவங்களும், அரசியல் அறிவும், உலகத்தின் பலநாட்டு மக்களைப் பற்றியும் அறிவு பெற்றிருந்த வின்ஸ்டன் தாம் ஏன் ஒரு புதினம் எழுதக்கூடாதென எண்ணினார். இதன் விளைவுதான் சாவ்ரோலா (Savrola) என்ற புதினமாகும். லெனரேனியா (Lenerania) வில் நடந்த ஒரு புரட்சியைப் பற்றிய கதை இது. கதாநாயகன் சாவ்ரோலா ஓர் இளம் ஜனநாயக வீரன். பல இடங்களில் சாவ்ரோலா கதாசிரியரின் வாழ்க்கையை நினைவுபடுத்துவது

[1] Churchill—A Portrait, Philip Guedall, p. 58.

போல் தோன்றும். வின்ஸ்டனின் முதல் புதினம் அதிக வெற்றி பெறவில்லை. அதுவே அவரது கடைசி புதினமுமாகும்.

1898ஆம் ஆண்டு கோடையில் சுடானில் ஏற்பட்ட மாதிகளின் (Mahdi) கிளர்ச்சியை ஒடுக்குவதற்காக சர் ஹெர்பர்ட் கிச்சினர் (Sir Herbert Kichener) தலைமையில் ஆறு அணிகள் கொண்ட பெரும்படை புறப்படுவதாகச் செய்தி வந்தது. 1875ல் திவாலாகிவிட்ட எகிப்திய கெடிவ் (Khediev) மன்னரிடமிருந்து சூயஸ் கால்வாய் கம்பெனியின் பங்குகளைப் பிரிட்டிஷ் அரசாங்கம் வாங்கியது. 1882ல் அந்நியர் ஆதிக்கத்தை எதிர்த்து எகிப்திய அரபி பாஷா (Arabi Padsha) வின் கிளர்ச்சி ஏற்பட்டது. பிரிட்டிஷ் - பிரஞ்சு படைகள் ஒருவாறு எகிப்தில் அமைதியை நிலைநாட்டின. இதற்கிடையில் எகிப்திய கெடிவ்வின் ஆட்சியை எதிர்த்து முஸ்லீம் வெறியரான மாதியின் தலைமையில் சுடான் கிளர்ச்சி செய்தது. துருக்கியர்களும், எகிப்தியர்களும் 1885ல் வெளியேற்றப்பட்டனர். பிரிட்டிஷ் படைத்தலைவரான ஜெனரல் கார்டன் (Gordon) கொல்லப்பட்டார். கார்டூன் (Khartoun) நகரமும் வீழ்ந்தது. கார்டனின் கொலை பழிவாங்கப்பட வேண்டுமென கூக்குரல் எழுந்தது. இதன் விளைவுதான் 'சிர்தார்' கிச்சினர் தலைமையில் அனுப்பப்பட்ட படையெடுப்பு.

இதில் பங்குபெறவே வின்ஸ்டன் ஆர்வங் கொண்டார். விடுமுறையில் இருந்த வின்ஸ்டனுக்கு இது அரியதோர் வாய்ப்பாகும். ஆனால், அதிகாரிகள் அவரிடம் பரிவு காட்டவில்லை. அவர் அதிகாரிகளைக் குறை கூறி எழுதியதைப் பலர் விரும்பவில்லை. பிரதம படைத்தலைவரான கிச்சினருக்கு அவர் அனுப்பிய மனு தள்ளுபடி செய்யப்பட்டது. வின்ஸ்டனின் முதல் நூலைச் சுவைத்துப் படித்திருந்த பிரதமர் சாலிஸ்பெரி அவரைச் சேர்த்துக் கொள்ளுமாறு கிச்சினருக்குப் பரிந்துரை செய்தார். இங்கிலாந்தில் ரேண்டால்ஃப் சீமாட்டி மகனுக்காக முயன்றார். கிச்சினர் அசைந்து கொடுப்பதாக இல்லை. இறுதியாக அட்ஜுடென்ட் - ஜெனரலான சர் ஈவ்லின் வூட் (Sir Evelyn Wood) 21ஆவது லான்சர்கள் (21st Lancers) படையில் வின்ஸ்டனைச் சேர்த்துக் கொள்ளச் சம்மதித்தார். ஆனால், அவருக்குச் சம்பளம் கிடையாது. காயம் பட்டாலும், மரணமடைந்தாலும் இழப்பீடும் கிடையாது. 'மார்னிங் போஸ்ட்' (Morning Post) ஏடு வின்ஸ்டனின் கட்டுரைகளுக்குக் கலத்திற்குப் பதினைந்து பவுன் கொடுக்க முன் வந்தது. ஆறு நாட்களில் வின்ஸ்டன் கெய்ரோ வந்து சேர்ந்தார். இந்தத் தாமதத்தால் அவருக்கு ஒதுக்கப்பட்டிருந்த படைத்தலைமை வேறொருவருக்குக் கொடுக்கப்பட்டது.

## ஓம்தூர்மான் (Omdurman) போர்

சூடான் படைப்பணி வின்ஸ்டனுக்கு மூன்றுவது கண்டத்தில் நான்காவது படையெடுப்பாகும். முந்தியவை கியூபாவும், இந்தியாவும். 1898 ஆகஸ்டில் பிரிட்டிஷ் படைகள் ஓம்தூர் மான் போருக்குத் தயாராக இருந்தன. ராணுவ வரலாற்றில் புகழ்பெற்ற இந்தக் குதிரைப்படைத் தாக்குதலைப்பற்றி இன்னும் ராணுவ வட்டாரங்களில் பேசிக்கொள்கிருர்கள். படை பல நாட்களாகப் பாலைவனங்களைக் கடந்துகொண்டிருந்தது. திடீ ரென மாதியின் சமாதி கோபுரத்திற்கு அப்பால் காலிஃபாவின் படைகள் அணிவகுத்து வருவதை, ரோந்துப் படையின் தலைவ ராகச் சென்ற வின்ஸ்டன் கண்டார். இந்தச் செய்தியைக் கிச்சின ருக்கு அறிவிக்கும் பொறுப்பு வின்ஸ்டனிடம் கொடுக்கப்பட்டது. 20,000 வீரர்களைக் கொண்ட பிரிட்டிஷ் படை கிச்சினரின் தலைமையில் அணிவகுத்துச் சென்று கொண்டிருந்தது. இருபுறமும் நீலநதியின் நீர் கதிரவனின் ஒளிக்கிரணங்களால் ஜெகஜோதியாய் மின்னிக் கொண்டிருக்க பசுமைபோர்த்த தீவுகளும், படைதரித்த படகுகளும், பாய்விரித்த ஆற்றுப் படகுகளும் தொலைவில் தோன்றிக்கொண்டிருக்க, செந்நிற முகத்தில் முறுக்கு மீசையுடன் எகிப்து - பிரிட்டிஷ் நாடுகளின் கொடிகளுக்கு நடுவே கிச்சினர் கம்பீரமாய்ப் போய்க்கொண்டிருந்தார்.

தம்மைப் படையில் சேராமல் தள்ளிவிட முயன்ற கிச்சினரை முதல் முறையாகச் சந்திக்கப்போவது வின்ஸ்டனுக்குச் சங்கட மாக இருந்தது. ஆனல், சந்திப்பு அமைதியான முறையில் நடந்தது. கிச்சினர் அவரை அடையாளம் கண்டுகொள்ளவில்லை போலும். மீண்டும் பலமுறை இவர்கள் சந்திக்க நேர்ந்தது. எதிரிப்படை முன்னேறி வருவதாக சுருக்கமான அறிக்கை கொடுத்துவிட்டு வின்ஸ்டன் புறப்பட்டார். அடுத்து நிகழ விருக்கும் மோதலுக்காக அனைவரும் காத்திருந்தனர். வின்ஸ்டன் ஓம்தூர்மான் போரைப்பற்றியும், அதில் பிரிட்டிஷ் படைகளின் வீரத்தைப் பற்றியும் கனவு கண்டுகொண்டிருந்தார்.

பகலவன் ஒளியில் பளிச்சென மின்னும் டெரிவிஷ்களின் ஆயுதங்களும், கடலலையென ஆர்க்கும் அவர்களின் போரொலி யும் கேட்டன. ஏறத்தாழ 60,000 மாதிகளாவது அப்படையில் இருந்திருப்பார்கள். அவர்கள் எல் ஒபியட்டிலும் (El Obeid), கார்டோமிலும் (Khartoum), ஆபு க்ளியிலும் (Abu Klea) பிரிட்டிஷ் படைகளை நிலைகுலைத்தவர்கள். இஸ்லாம் சமயத் திலும், மாதியின்மீதும் அசையாத பற்றுக் கொண்டவர்கள்.

ஓம்துர்மான் மசூதியில் பேசிய அவர்களின் தலைவன் காலிஃபா 'எகிப்திய பாலைவனங்களில் வெள்ளையர்களின் பிணங்கள் குவியட்டும்' என்று வாளை உருவிக் கொக்கரித்தான். வீரர்களும் 'வெற்றி! வெற்றி!' என எதிரொலித்தார்கள். இத்தகைய ஒரு சக்தியைத்தான் கிச்சினர் எதிர்த்து நின்றார்.

1898ஆம் ஆண்டு செப்டம்பர் 2ஆம் நாள், வெப்பமண்டலத்தில் வெய்யோனின் ஒளிக்கிரணங்கள் படரத்தொடங்கிய வைகறைப் பொழுதில் டெரிவிஷ்களை, 20,000 பிரிட்டிஷ் வீரர்களைக் கொண்ட படை ஓம்துர்மான் களத்தில் சந்தித்தது. வெறியூட்டப்பட்டிருந்த எதிரிகள் ஆவேசமாக முன்னேறி வந்தார்கள். வெள்ளமெனப் பாய்ந்துவந்த எதிரிகளை வெட்டிச் சாய்த்தது கிச்சினரின் படை. பீரங்கிகளும், துப்பாக்கிகளும் வெடித்து அவர்களைச் சின்னாபின்னமாகச் சிதறடித்தன. நிலை குலைந்து ஓடிய எதிரிகளைத் துரத்திச்சென்று முறியடித்து வெற்றிக் கொடி நாட்டியது பிரிட்டிஷ் படை.

வெற்றிச்செருக்குடன் திரும்பிக் கொண்டிருந்த படைகளை மறைந்திருந்த மூவாயிரம் டெரிவிஷ்கள் தாக்கினார்கள். சுழலும் வாள்களுக்கிடையில், பறக்கும் குண்டுகளின் மத்தியில் நானூறு பிரிட்டிஷ் வீரர்கள் சிக்கிக்கொண்டனர். லெஃப்டினன்ட் சர்ச்சில் ஒருகையில் துப்பாக்கியும், மறுகையில் வாளும் ஏந்தித் தாக்குதலில் ஈடுபட்டிருந்தார். பதுங்கியிருந்த டெரிவிஷ்கள் அவர்மீது குறிவைத்துக்கொண்டிருந்தனர். எங்கிருந்தோ கிளம்பிய ஒரு எதிரி, கையில் ஈட்டியுடன் வின்ஸ்டனை நோக்கி நெருங்கி வந்தான். ஒரே கணம்தான். அவன்மீது துப்பாக்கிக்குண்டு பாய்ந்தது. அவன் சுருண்டு வீழ்ந்தான். மூன்றே நிமிடத்தில் பிரிட்டிஷ் படையில் அறுபத்தைந்து வீரர் வீழ்ந்தனர். இறுதிவரை போராடிய படைத் தலைவர் ராபர்ட் க்ரென்ஃபெல் (Grenfell) வீரசொர்க்கம் அடைந்தார். ஓம்துர்மான் வெற்றி, சூடானின் விடுதலைப்போரின் வெற்றியாகும். நைல் ஆற்றுவழியாக வின்ஸ்டன் தாய்நாடு திரும்பினார். போர் அனுபவங்கள், 'த ரிவர் வார்' (The River War) என்ற நூலாக வெளிவந்தன. படையிலிருந்து விலகிப் பாராளுமன்றத்தில் புகவேண்டுமென்பது அவரது பேரவா.

### அரசியலில் அறிமுகம்

வின்ஸ்டனின் வட ஆப்பிரிக்கத் தென் ஆப்பிரிக்கப் போர் அனுபவங்களுக்கிடையில் ஒரு சிறிய அரசியல் இடைவேளை குறுக்கிட்டது. நைல்நதி படையெடுப்பின் பின்னர் வீடுதிரும்பிய

வின்ஸ்டன் ராணுவத்திலிருந்து விலகித் தந்தையாரைப்போன்று அரசியலில் ஈடுபட விரும்பினார். சர்ச்சிலைப்போல் எல்லையற்ற அவாவும், பல்வேறுபட்ட ஆர்வங்களும் கொண்ட ஒருவர் ராணுவச் சேவையில் மனநிறைவு பெற முடியாதுதான். மேலும் போர் அமைச்சகமும் அவரை அடையாளம் காட்டியிருந்தது. உயர் அதிகாரிகளை அவர் குறை கூறி எழுதுகின்ற நெஞ்சுரத்தை அவர்கள் விரும்பவில்லை. எனவே, அரசியலுக்குச் செல்லுகின்ற வழியெனப் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட முடிவு செய்தார்.

தமக்கு ஒரு தொகுதியை ஒதுக்குமாறு விண்ணப்பித்துக் கன்சர்வேடிவ் கட்சிக்கு 1898 நவம்பரில் எழுதினார். அவரிடம் போதிய பொருளில்லாததால் கட்சித் தலைவர்கள் அவரது கோரிக்கையை ஏற்கத் தயங்கினார்கள். ஆனால், ஒரு பேச்சாளர் என்ற முறையில் அவருக்கு வரவேற்புக் காத்திருந்தது. பாத் நகரில் (Bath) அவர் ஆற்றிய முதல் முழக்கத்தை மக்கள் ஆர்வமுடன் கேட்டுப் பாராட்டினார்கள். 'மார்னிங் போஸ்ட்' ஏடு அவரது உரை முழுவதையும் வெளியிட்டிருந்தது. அடுத்த திங்களில் 'டெய்லி மெயில்' (Daily Mail) ஏடு 'ஐரோப்பாவின் இளைய மனிதர்' என்ற தலைப்பில் அவரை அறிமுகம் செய்து வைத்தது. 'வின்ஸ்டன் இதே வேகத்தில் சென்றால் அவரது முப்பதாவது வயதில் அவரைப் பாராளுமன்றம் கொள்ளாது. நாற்பதாவது வயதில் நாடே கொள்ளாது'[1] என்று ஜி. டபிள்யூ. ஸ்டீவன்ஸ் (G. W. Steevens) எழுதி யிருந்தார்.

வயதாலும், உணர்வுகளாலும் வின்ஸ்டன் சிறியவர்தாம். ஆனால், எண்ணத்தாலும், தெளிந்த திட்டத்தாலும், உயரிய நோக்கத்தாலும், கைக்கொள்ளும் வழிகளாலும் அவர் ஏற்கெனவே பெருமகனுவார். இருபத்திஞன்கு வயதினரான அந்த இளைஞர் பழுத்த அரசியல் வல்லுநரைப்போன்ற அறிவும் ஆற்றலும் படைத்தவர். கூரிய நுண்மதி, தன்முனைப்பு, விளம்பரப் பிரியம், நகைச்சுவை முதலியவை அவருடைய பண்புகள் அமெரிக்கத் தாயின் வழி வந்த இயல்புகளோ? இப்பொழுது அவர் ஒரு போர்வீரனுக இருக்கலாம். பெரிய படைத்தலைவராகும் வாய்ப்பு அவருக்குக் கிடைக்காமல் போகலாம். ஆனால், அதுவன்று பிரச்சினை. இதுவரை, படைப்பணியிலும் அவர் பெற்ற பங்கு அவ்வளவு குறைந்ததும் இல்லை. நான்காண்டுகளில் அவர் சென்ற களங்கள், செய்த வீரச்செயல்கள் பொதுமக்களின் கவனத்தைக் கவர்ந்திருந்தன. வின்ஸ்டன் வெளிப்படையாக அடக்

[1]Churchill—A Portrait, Philip Guedalla, p. 52.

கம் நிறைந்தவரல்லர். படையில் பல உயர் அதிகாரிகள் அவரை மட்டந்தட்ட முயன்றனர். ஆனால், வின்ஸ்டனின் தன்னம்பிக்கை எப்பொழுதும் மேலோங்கி நிற்கும். அவர் தணியாத வேட்கையும், திட்டமிட்டுச் செயலாற்றும் திண்மையும் பெற்றவர். நாவன்மையால் மக்களை ஈர்க்கும் பிறவிப் பேச்சாளர் வின்ஸ்டன். அவரது ஆங்கிலப்பண்பும், அற்புதமான கற்பனையாற்றலும் அரசியல் சொத்துகள். அவருடைய கடுமையான முகமும், கட்டுடலும், குருதிச் சிவப்பான வண்ணமும் மேடைப் பேச்சாளருக்குரியவை.

எனவே, வின்ஸ்டன் டோரி ஜனநாயகவாதியாகத் தேர்தல் களத்தில் குதிக்கத் தயாரானார். 'தேர்தல்களைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் என்னைக் கேளுங்கள்' என்று அவர் ஒருமுறை குறிப்பிட்டார். 1899ஆம் ஆண்டு வசந்தத்தில், தொழில் மாவட்டமான லங்கா - ஷயரில் ஓல்டாம் (Oldham) இரட்டை உறுப்பினர் தொகுதியில் உபதேர்தலில் போட்டியிடுமாறு தேர்ந்தெடுக்கப்பட்டார். இவருடன் டோரிகள் சார்பில் ஜேம்ஸ் மாவ்ட்ஸ்லி (James Mawdsley) போட்டியிட்டார். இவர்கள் இருவரையும் எதிர்த்து லிபரல் கட்சி வேட்பாளர்களாக எமோட்டும் (Emmot) ருன்சிமானும் (Runciman) போட்டியிட்டனர். கடுமையான போட்டி. வின்ஸ்டன் அரசாங்கத்தையும், நடைமுறையிலிருந்த சமுதாய அமைப்பையும், நிலைநிறுத்தப்பட்டதிருச்சபையையும் (Established Church) பேரரசின் ஐக்கியத்தையும் ஆதரித்தார், லிபரல்கள் ஏழைத்தொழிலாளர்கள் படும்பாட்டையும், ஏழை பணக்காரர்களுக் கிடையேயுள்ள ஏற்றத்தாழ்வுகளையும் கோடிட்டுக்காட்டி வாக்கு வேட்டையாடினார்கள். மதகுருமார்கள் நிவாரண மசோதாவை (Clerical Doles Bill) வின்ஸ்டன் எதிர்த்தது எதிர்பாராத விளைவுகளை உண்டாக்கியது. வின்ஸ்டன் தோற்கடிக்கப்பட்டார். எனினும், 'ஐரோப்பவின் இளைய மனிதருக்கு' இந்த முதல்தோல்வி அரசியல் வாழ்வின் முடிவன்று.

### தென் ஆப்பிரிக்காவில் நீரச்செயல்கள்

களம் பல கண்ட இளம்படை வீரரான வின்ஸ்டன் தேர்தல் களத்தையும் கண்டார். தோல்வியால் அவர் துவண்டுவிடவில்லை. மீண்டும் வீரர் சர்ச்சிலைத் தென் ஆப்பிரிக்கா அழைத்தது. போயர் பிரச்சினை போர் மேகங்களைக் கூட்டியது. போயர் சிக்கலை உலகமே கவனித்துக் கொண்டிருந்தது. பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் காரசாரமான விவாதங்கள் நடந்தன. போயர் குடியரசுகளுடன் போர் தொடுப்பது இன்றியமையாதது எனப்பட்டது. 1899ஆம் ஆண்டு கோடையில் டச்சுக்காரர்களும்,

ஜெர்மானியர்களும் போயர் குடியரசுகளுக்கு ஆயுதங்களை வழங்கினர். பிரிட்டனும் நேட்டாலிலும் (Natal) கேப் குடியேற்றத்திலும் காப்பரண்களைப் பலப்படுத்தியது. அக்டோபரில் போயர் தலைவரான பால் க்ருஜர் (Paul Kruger) போயர் எல்லைகளில் இருந்த பிரிட்டிஷ் படைகளை வாபஸ் பெறவேண்டுமென இறுதி எச்சரிக்கை விடுத்தார். இதுவே போரின் தொடக்கம்.

பிரிட்டோரியாவின் (Pretoria) போர் முரசைக் கேட்டதும் பிரிட்டிஷ் போர் நிருபர்கள் எழுச்சி கொண்டனர். 'மார்னிங் போஸ்ட்' ஏடு வின்ஸ்டனைத் தென் ஆப்பிரிக்க போர் நிருபராக ஏற்றுக்கொண்டு மாதம் 250 பவுன் ஊதியம் தருவதாக முன் வந்தது. இதுவரை இவ்வளவு பெருந்தொகை பிரிட்டிஷ் பத்திரிகை உலகத்திலே யாரும் பெற்றதில்லை. எனவே, 1899ஆம் ஆண்டு அக்டோபர் 11ஆம் நாள் தென் ஆப்பிரிக்காவிற்கு வின்ஸ்டன் கப்பலேறினர். அதே கப்பலில்தான் பிரதம படைத்தலைவரான சர். ரெட்வெர்ஸ் பட்லரும் (Sir Redvers Butler) சென்றார். பயணிகள் யாவருமே போய்ச்சேர்வதற்குள் போர்முடிந்து விடுமோ என்ற எண்ணத்திலே சென்று கொண்டிருந்தனர். கப்பலில் மயான அமைதி நிலவிக்கொண்டிருந்தது. அக் கரையிலிருந்து எந்தச் செய்தியும் கிடைப்பதற்கு வழியில்லை. பன்னிரு நாட்களின் அங்கலாய்ப்பை நீக்குவதுபோல இறுதியாக ஒரு கப்பல் தோன்றியது. போயர்கள் தோற்கடிக்கப்பட்டு விட்டதாகவும், மூன்று போர்கள் நிகழ்ந்து முடிந்தனவென்றும் அவர்கள் அறிவித்தனர். ஆனல், பட்லரும். வின்ஸ்டனும் தங்களின் வீரச்செயல்களுக்கு இன்னும் வாய்ப்பு உண்டு என்ற எண்ணத்திலே திளைத்துக் கொண்டிருந்தார்கள்.

கப்பல் டேபிள் பே (Table Bay) துறைமுகத்தை அடைந்த போது, போயர்கள் நேட்டாலைத்தாக்கி டண்டி (Dundec) யில் இருந்த 4000 வீரர்களைக் கொண்ட பிரிட்டிஷ் படையை வளைத்துக் கொண்டிருந்தார்கள். லேடி ஸ்மித்தில் (Lady Smith) பிரிட்டிஷ் படைத்தலைவர் சர். ஜார்ஜ் வையிட் (Sir George White) பன்னீராயிரம் வீரர்களுடன் போயர்கள் மேலும் முன்னேறுவதைத் தடுத்து நின்றார். மேற்கில் டிரான்ஸ்வாலில் (Transwal) பேடன் பவல் (Baden Powell) மேஃப்கிங் (Mafeking) என்ற இடத்தில் முற்றுகையிடப்பட்டிருந்தார். தெற்கில் கிம்பர்லியை (Kimberly) எதிரிகள் தாக்கிக் கொண்டிருந்தரர்கள். போர்முனைக்குச் செல்ல வின்ஸ்டன் துடித்துக்கொண்டருந்தார். தென் ஆப்பிரிக்காவின் இதயம் போன்ற இடங்களெல்லாம் எதிரிகள் கையில்

சிக்கிக்கொண்டிருந்தன. வின்ஸ்டன் டர்பன் (Durbon) நகரிலிருந்து புறப்பட்டு எஸ்ட் கோர்ட்டை (Estcourt) அடைந்தார்.

**கவச ரெயில் கவிழ்ந்தது**

எஸ்ட் கோர்ட்டில் ரோந்துபார்க்கும் வேலையில் வின்ஸ்டன் ஈடுபட்டிருந்தார். ஆயுதம் தாங்கிய கவச ரெயில் ஒன்று எதிரியின் நடவடிக்கைகளைக் கவனித்துக் கொண்டிருந்தது. போயர்கள் போட்டிருந்த தடைகளின் காரணமாக ஒரு நாள் ரெயில் தடம் புரண்டது. முன்னால் இருந்த மூன்றுபெட்டிகள் சரிந்துவிட்டன. கடைசிப்பெட்டியில் இருந்த போர் நிருபர் வின்ஸ்டன் போயர்கள் ரெயிலை நோக்கித் துப்பாக்கியால் சுடுவதைக் கவனித்தார். ஒரு கணம், தாம் வெறும் நிருபர் என்பதை மறந்து செயலில் குதித்தார். கேப்டன் ஹால்டேனைப் பின்பெட்டியிலிருந்து எதிரிகளைச் சமாளிக்குமாறு பணித்துவிட்டு, வின்ஸ்டன் ரெயிலை எப்படியும் கிளப்புவதற்கு ஆவனசெய்து கொண்டிருந்தார். காயமுற்றுத் தப்பியோட நினைத்த ரெயில் ஓட்டிக்குத் தைரியம் சொல்லி, என்ஜினை ஒருவாறு ஓடச்செய்வதில் முனைந்தார். ஒருமணி நேரப் போராட்டத்தின் பின்னர் காயம்பட்ட நாற்பது வீரர்களுடன் என்ஜின் தள்ளாடிக்கொண்டு நகர்ந்தது. இதற்கிடையில் எதிரியின் எண்ணிக்கையும், துப்பாக்கிச் சூடும் அதிகரிக்கவே அவர்களைச் சமாளிக்க முடியாமல் பிரிட்டிஷ் வீரர்கள் சரணடைந்தனர். வின்ஸ்டனைக் கண்ட போயர்கள் குறிவைத்துச் சுடத் துவங்கினார்கள். அவர் அருகிலிருந்த குளக்கரைவழியாகத் தவழ்ந்து தப்பியோட முயன்றார். எதிரிகள் பல முறை அவர்மீது சுட்டும் வின்ஸ்டன் தெய்வாதீனமாகத் தப்பினார். கரை மேலிருந்து குதித்து சிறிதுநேரம் ஒரு பள்ளத்தில் பதுங்கியிருந்தார். அருகிலிருந்த கிரா்ண்ட்ஸ் (Krantz) ஆற்றங்கரையின் மறைவிடங்களில் ஒளிந்து கொள்ளலாமென்று அவர் முடிவுசெய்தார்.

மெதுவாக வெளியே கிளம்பிய வின்ஸ்டனுக்கு அதிர்ச்சி காத்திருந்தது. துப்பாக்கியுடன் போயர் வீரன் ஒருவன் அவரை நெருங்கி வந்தான். வின்ஸ்டன் கைத்துப்பாக்கியைத் தேடினார். அது அங்கில்லை. ரெயில்போராட்டத்தில் நழுவி விழுந்திருக்கவேண்டும். ஒருவேளை அவரிடம் ஆயுதம் இல்லாமல் இருந்ததும் நன்மைக்குத்தான். ஏனெனில், அவர் சுட்டுவிழ்த்த இருந்தவர் புகழ்பெற்ற ஜெனரல் போதா (Botha). வேறு வழியில்லாமல் வின்ஸ்டன் சரணடைந்தார். போயர்ப்படைத் தலைமைச் செயலகத்திற்கு அவர் அழைத்துச் செல்லப்பட்டபோது, கேப்டன் ஹால்டேனும் மற்றும் பிரிட்டிஷ் வீரர்களும் கைதிகளாக இருந்ததைக் கண்டார். வின்ஸ்டன் போர் நிருபரென்ற முறை

யில் சிவிலியனுக இருந்தும், போரில் கலந்துகொண்டதற்காகத் தம்மீது நடவடிக்கை எடுக்கப்படுமோ வென்று அஞ்சினுர். ஆனு லும் பிற கைதிகளுடன் அவரும் சிறைவைக்கப்பட்டார். 'ஒரு பிரபுவின் மகன் எங்களிடம் அன்றுடம் சிக்குவதில்லை.' என்று ஒரு போயர் குறிப்பிட்டாராம். எனவே, அவர்கள் வின்ஸ்டனைத் தூக்கிலிட மாட்டார்கள். போயர்களின் கருணை உள்ளத்தை இதுமுதல் வின்ஸ்டன் உணரத்தொடங்கினுர்.

### தலைக்கு விலை வைத்தார்கள்

சிறைப்பட்டது முதல் விடுதலைபெற வேண்டுமென்பதுதான் வின்ஸ்டனின் ஒரே சிந்தனை. போர் நிருபர் என்ற முறையில் தம்மை விடுவிக்கமாட்டார்கள் என்று அறிந்த வின்ஸ்டன் சிறையிலிருந்து தப்புவதற்காகத் திட்டமிடத் தொடங்கினுர். சிறை வாழ்க்கையை அவர் வெறுத்தார். பிற்காலத்தில் அவர் சிறைகளைச் சீர்திருத்துவதற்கு விரும்பியதன் காரணமே அவரது இந்தச் சிறை அனுபவந்தான். பொழுதுபோக்குவதற்காகக் கார்லைல், மில், லெக்கி போன்றுரின் நூல்களைப் படித்தும் அவருக்கு மனநிறைவு ஏற்படவில்லை. டச்சு மதகுருக்கள் அணியும் தொப்பியை அணிந்துகொள்ள அவருக்கு அனுமதி வழங்கப்பட்டிருந்தது. ஒரு நாள் ஹால்டேனும், மற்ருெரு இளம் லெஃப்டினன்ட்டும் தப்பியோடுவதற்குத் திட்டம் வகுத்தார்கள். வின்ஸ்டனும் அவர்களுடன் சேர்ந்துகொண்டார். பிரிட்டோரியாவின் போர்க்கைதிகள் ஒரு பள்ளிக்கூடத்தில் சிறை வைக்கப்பட்டிருந்தார்கள். வின்ஸ்டன் பள்ளியின் சுற்றுப்புறங்களை ஆராய்ந்து வைத்திருந்தார்.

ஒரு நாள் மாலை வின்ஸ்டன் தமது திட்டப்படி குளியலறையில் மறைந்திருந்து, காவலர்களின் கண்ணுக்குத் தப்பித் தோட்டத்து மதில்சுவரைத் தாண்டி விழுந்து புதர்களுக்கிடையில் மறைந்து கொண்டார். ஆனுல், தோழர்கள் இருவரும் அவருடன் தப்பியோட முடியவில்லை. வின்ஸ்டன் தனியாகவே தப்புவதற்கு முடிவுசெய்தார். டச்சு மதகுருவின்தொப்பி அவருக்குத் துணை புரிந்தது. பிரிட்டோரியாவின் வீதிகளைக்கடந்து டெலாகோவா பே (Delagoa Bay) நகர ரெயில் நிலையத்தை நோக்கி அவர் விரைந்தார். ஓடும் ரெயிலில் ஏறிச் சரக்கு மூட்டைகளுக்கு நடுவே ஒளிந்து கொண்டார். மூட்டைமீது அமர்ந்திருந்த ஒரு கழுகு அவரையே பார்த்துக்கொண்டிருந்தது. தக்க சமயத்தை எதிர்பார்த்துக் காத்திருப்பதுபோல் இருந்தது அதன்பார்வை. பொழுது விடிவதற்குள் ரெயிலிலிருந்து குதித்து ஒரு சிறுகாயமும்

படாமல் தப்பினர். ஆபத்தில்லாமல் தப்பவேண்டுமென்று ஆண்டவனைப் பிரார்த்தித்துக்கொண்டு தம்வழியே நடந்த வின்ஸ்டனுக்கு ஒரு வழிப்போக்கரின் துணை கிடைத்தது. அவர் நிலக்கரிச் சுரங்கத்தில் பணிபுரிந்து வந்த ஓர் ஆங்கிலேயர்.

இதற்கிடையில் பிரிட்டோரியாவில் பரபரப்பு ஏற்பட்டது. முக்கியமான கைதி ஒருவர் தப்பியோடி விட்டதாகவும், அவரை உயிருடனே, பிணமாகவோ கொண்டு வருவாருக்கு இருபத்தைந்து பவுன் சன்மானம் வழங்கப்படுமென்றும் அறிக்கைகள் வெளியிடப்பட்டிருந்தன. இதனை அறியாத வின்ஸ்டன் சுரங்கத்தின் அடியில் ஒளிந்து கொண்டிருந்தார். புதிய நண்பர் ஹாவர்ட்டும் (Haward) அவருடன் வசித்துவந்த சில ஸ்காட்லாந்து தொழிலாளர்களும் வின்ஸ்டன்க்குச் சகல வசதிகளையும் செய்து கொடுத்தார்கள். மெழுகு வர்த்திகளின் துணைகொண்டு சுரங்கத்தின் இருளிலும் வின்ஸ்டன் படிப்பதை விடவில்லை. சில வேளைகளில் வெள்ளெலிகள் வத்திகளைத் தின்றுவிடும். மூன்று நாள்களின் பின்னர் ரெயிலில் உரோம மூட்டைகளுக்கு இடையில் மறைந்திருந்து அவர் தப்புவதற்கு நண்பர்கள் துணைபுரிந்தனர். இறுதியாகப் போர்த்துகல் குடியேற்றப் பகுதியை அவர் அடைய முடிந்தது. லாரென்ஸோ மார்க்குவிஸ் (Lorenzo Marques) ரெயில் நிலையத்தில் பரட்டைத் தலையுடன், தாடி மீசையுமாக வெளிப்பட்ட உருவத்தை யாரும் அடையாளம் கண்டிருக்க முடியாது. இனி அவருக்கு ஆபத்து இல்லை.

இளம் வீரர் வின்ஸ்டனின் வீரசாகசங்களைப் பிரிட்டிஷ் ஏடுகள் பரபரப்பான செய்திகளாக வெளியிட்டன. போயர்களிடம் தோல்விமேல் தோல்வி கண்டுகொண்டிருந்த பிரிட்டனுக்கு, வின்ஸ்டனின் வீரச்செயல்கள் இருண்டவானில் வெள்ளிக் கோடென ஒளிவிட்டன. டெலகோவா துறைமுகத்தில் அவருக்கு வீர வரவேற்பு அளிக்கப்பட்டது. டர்பனில் கோலாகல வரவேற்புக் காத்திருந்தது. சென்ற விடமெல்லாம் தேசீய வீரராக வின்ஸ்டன் சிறப்புப் பெற்றார். இதற்கிடையில் வின்ஸ்டன் தென் ஆப்பிரிக்கக் குதிரைப்படையின் அரசியார் ஆணைபெற்ற அதிகாரியானர். குதிரைவீரராகப் பல விடங்களுக்குச் சென்று கண்டு அற்புதச் சாதனைகளைப் புரிந்தார். இதுகாலை வின்ஸ்டனின் அன்னையார் 'மேய்ன்' (Maine) என்ற கப்பலில் ஒரு மிதக்கும் மருத்துவ மனையை நிறுவினர்.

பின்னர் லெஃப்டினன்ட் வின்ஸ்டன் ஆரஞ்சு ஃப்ரி ஸ்டேட்டிற்குச் சென்று போர்முறைகளைப் பார்வையிட்டார். இதற்குள்

போயர்கள் தோற்கடிக்கப்பட்டு விட்டனர். ஒரு நாள் வின்ஸ்டன் குதிரையிலிருந்து வழுக்கி விழுந்தார். மீண்டும் குதிரை ஏற முயன்றபோது குதிரை பாய்ந்தோடிவிட்டது. கைத்துப்பாக்கியே துணையாகத் தனித்து நின்று திகைத்த வின்ஸ்டனை சில ஆங்கில வழிப்போக்கர்கள் காப்பாற்றினார்கள். ஆனால், வின்ஸ்டனே காணாமல்போன குதிரையைப்பற்றிக் கவலை கொண்டாரேயன்றி, தமது உயிரைப்பற்றி அக்கறைப் படவில்லை. இறுதியாக அவர் ஜோஹான்ஸ்பர்க் வழியாகப் பிரிட்டோரியாவை அடைந்தார். அவரது பழைய சிறை அனுபவங்களை அவர் நினைக்காமல் இருக்க முடியவில்லை. காலவட்டம் ஒருசுற்று சுற்றிவிட்டிருந்தது. போர் நிருபர் பணியை விட்டுவிட்டு மீண்டும் பாராளுமன்றத்துள் புகும் நோக்கத்துடன் வின்ஸ்டன் தாய்நாடு திரும்ப விரும்பினார். ஆனால், மீண்டும் தென் ஆப்பிரிக்காவில் அவருடைய தீரச்செயல்கள் இன்னும் தொடரவேண்டி யிருந்தது. படைத்தலைவர் புல்லர் (Buller) தமது இளமையில் கொண்டிருந்த ஊக்கமும், உணர்ச்சியும் இல்லாமல் செயல்பட்டுக்கொண்டிருந்தார். கீழ் அதிகாரிகள் அனுபவமும், ஆற்றலும் இல்லாதவர்கள்.

### தீரச் செயல்கள் தொடர்கின்றன

வின்ஸ்டன் ஸ்பியான் காப் (Spion Kob) குன்றில் நடந்த போரை நேரில் கண்டபோதுதான் பிரிட்டிஷ் படையின் திறமையின்மையை உணர்ந்தார். புல்லருக்குப்பின் அறுபத்தெட்டு வயதினரான ராபர்ட் படைத்தலைமையை ஏற்றார். 1899 டிசம்பரில் பிரிட்டிஷ் அரசாங்கம் ஓய்வுபெற்ற கிச்சினரையும் தென் ஆப்பிரிக்காவுக்கு அனுப்ப முடிவுசெய்தது. ஒரு மாதத்திற்குள் பிரிட்டிஷ் படைகள் திருத்தி அமைக்கப்பட்டன. மஜீபா வெற்றியின் நினைவு நாளான 1900ஆம் ஆண்டு ஜனவரி 26ஆம் நாளில் பிரிட்டிஷ் படைகள் பார்டெபர்க் (Paardeburg) என்ற இடத்தில் பெரும் வெற்றிபெற்றன. ப்ளோம்ஃபோன்டேய்ன் (Bloemfontein) நகர் முற்றுகையை விடுவித்து படைகள் டிரான்ஸ்வாலை நோக்கி முன்னேறின.

படைகள் லேடி ஸ்மித்தை (Lady Smith) நெருங்கியபோது வின்ஸ்டன் குதிரைப்படையின் முன்னணியில் நின்றார். ராபர்ட்ஸ் பிரபுவின் முயற்சியால் அவர் ஜோஹான்ஸ்பர்க், பிரிட்டோரியா தாக்குதல்களில் பங்குபெற அனுமதியும் கிடைத்தது. ஜோஹான்ஸ்பர்க்கில் வின்ஸ்டன் ஆற்றிய அரும் பணிகள் பாராட்டுக்குரியவை. மிதிவண்டி யொன்றில் அவர் நகரை வலம்வந்த காட்சி கண்டாரை மெய்சிலிர்க்க வைத்தது. அடுத்துப் படைகள் பிரிட்டோரியாவை அணுகின. வின்ஸ்டன் யாவரையும் முதிந்க்

கொண்டு முன்னணிக்கு விரைந்தார். வின்ஸ்டனை அடையாளங் கண்ட பிரிட்டோரியா கைதிகள் ஆனந்தத்தால் ஆர்ப்பரித்தார்கள். விடுதலைச் செய்தி கொண்டுவரும் வீரர் வின்ஸ்டனை வரவேற்க ஓடினார்கள்.

பிரிட்டோரியாவில் பிரிட்டிஷ் வெற்றிக்கொடி பறக்கின்ற நிலையில் தென் ஆப்பிரிக்கப் போரில் முதல் கட்டம் நிறைவெய்தியது. இன்னும் ஈராண்டுகள் போர் தொடர்ந்தது. போயர் மாநிலங்களும், பிரிட்டிஷ் குடியேற்றங்களும் எதிரும் புதிருமாகக் காலந்தள்ளவேண்டிய நிலை ஏற்பட்டது. பிரிட்டோரியா வெற்றிக்குப் பத்து நாள்களின் பின்னர் வின்ஸ்டன் படைப் பதவியைத்துறந்துவிட்டுத் தாயகம் திரும்பினார். போர் நினைவுகளும், போயர்களின் பண்புகளும் அவரது உள்ளத்தில் நீங்காத இடம் பெற்றுவிட்டன.

**போயர்கள் எல்லாம் பேயர்கள் அல்லர்**

1900ஆம் ஆண்டில் வின்ஸ்டன் நாடு திரும்பியபோது வெற்றி விழா கொண்டாடப்பட்டது. அவரது தொகுதியான ஓல்டாமில் வெற்றிப் பவனியே நிகழ்ந்தது. அங்குள்ள அரங்கத்தில் உரையாற்றிய வின்ஸ்டன் தம்மை ஓல்டாம் சுரங்கத் தொழிலாளிகள் தென் ஆப்பிரிக்காவில் காப்பாற்றியதை நன்றியுடன் நினைவு கூர்ந்தார். போயர்களுடன் அவர் கொண்டிருந்த தொடர்பு காரணமாக அவர்களிடம் பெருமதிப்பு வைத்திருந்தார். போயர் பிரச்சினையைக் கருணையுடனும், மனிதாபிமான ரீதியிலும் தீர்க்க வேண்டுமென்பது அவரது கருத்து. வெற்றிச் செருக்கில் போயர்களைப் பழிவாங்க எண்ணுவது, இருநாடுகளின் உறவில் ஆறுப்புண்களை உண்டாக்குமென்று அவர் எச்சரித்தார். ஆனால், பிரிட்டிஷ் வெறியர்களில் சிலர் வின்ஸ்டனின் கருத்துகளை ஏற்கவில்லை. போர் ஜுரத்தினால் ஜன்னி கண்டவர்களைப்போல் அவர்கள் பிதற்றினார்கள். போயர்களைப் போற்றி எழுதியதற்காக வின்ஸ்டன் 'மார்னிங் போஸ்ட்' ஏட்டின் மூலம் மன்னிப்புக் கோரவேண்டியிருந்தது.

வெள்ளை எதிரிகளுடன் பிரிட்டன் போர்புரிந்து ஒரு தலைமுறைக்கு மேலாகிவிட்டது. போயர் போர் பிரிட்டனின் மனித சக்தியையே உறிஞ்சிவிட்டது. பல்லாயிரக்கணக்கானகல் தொலைவிலிருந்த தென் ஆப்பிரிக்கப் போருக்காக, இலண்டன் நகர வீதிகளில் வீரர்கள் அணிவகுத்துச் செல்வதும், நாட்டுப்புற வீர வேளாண் படையினரின் புறப்பாடும் பரவசமூட்டின. தொடக்க காலத்திய அடுக்கடுக்கான தோல்விகள் நாட்டின் செருக்கைப்

பேரிடியெனத் தாக்கின. பொதுமக்களின் போர் ஆவேசம் பொங்கி வழிந்தது. பிரதமர் லாயிட் ஜார்ஜ் போர்க் கொள்கைகளைப்பற்றி விளக்கிக் கூறச் சென்றபோது வெறிகொண்ட ஒரு கூட்டம் அவரைக் கிழித்தெறிய விரும்பினார்களாம். போர் வெறி பெருங்காட்டு வெள்ளமாகத் திரண்டுகொண்டிருந்த நிலையில் 'போயர்கள் எல்லாம் பேயர்கள் அல்லர், அவர்களுக்குக் கருணை காட்டவேண்டும்' என்று வின்ஸ்டன் சொன்னால், அதனைக் கேட்க யாருக்குத்தான் பொறுமை இருக்கும்?

ஆனால், போரில் ஏற்பட்ட திருப்பம் வெறிகொண்ட உணர்வுகளுக்கும், சோர்வுற்ற உள்ளங்களுக்கும் ஆறுதல் அளித்தது. மேஃப்கிங் (Mafeking) வெற்றிச் செய்தி கேட்ட தலைநகரம் அமளிதுமளிப் பட்டது. ஊளையிட்டுக்கொண்டும், கொடிகளையும், கிலுகிலுப்பைகளையும் ஆட்டிக்கொண்டும், தொப்பிகளை உதை பந்தாக உதைத்துக்கொண்டும், மட்டுக்குமீறிய வெறியுடன் மக்கள் ஆடினார்கள்; பாடினார்கள்; கடற்கரை நோக்கி ஓடினார்கள். 'மேஃப்கிங்' என்ற சொல்லே இலக்கியத்தில் நிலை பெற்றுவிட்டது. இவ்வாறு ஆனந்தக்களிப்பில் இருந்த இங்கிலாந்திற்குத்தான் வின்ஸ்டன் வெற்றி வீரராகத் திரும்பி இருந்தார். கவச ரெயிலை மீட்டது, போயர் சிறையிலிருந்து தப்பியது, ஜோஹான்ஸ்பர்க் மிதிவண்டி பவனி, பிரிட்டோரியாவில் கைதிகளை விடுவித்தது, ஆகிய வின்ஸ்டனின் சாகசங்கள் மக்களின் கற்பனைகளைத் தூண்டிவிட்டன. பிரிட்டனின் தணியாத உரிமை வேட்கைக்கும், நாட்டினி வெற்றி மரபிற்கும் அவர் ஒரு சின்னமாகத் திகழ்ந்தார்.

அரசியலுக்காகப் படைப்பணியைத் துறந்துவிட வின்ஸ்டன் முடிவு செய்தார். படை வாழ்க்கை செலவுமிக்கது என்ற சாதாரண சாக்குப்போக்கை வின்ஸ்டன் கூறிக்கொண்டார். அந்நாள்களில் ஒரு துணைப்படை அதிகாரியின் சம்பளம் கவர்ச்சிகரமாக இருக்கவில்லை. குதிரைப்படையிலோ செலவுகள் அதிகம். அன்னையாரிடமிருந்து ஆண்டுதோறும் ஐந்நூறு பவுன் செலவுத் தொகையை அவர் பெற்று வந்தார். வின்ஸ்டன் அன்னையாருக்கு ஒரு சுமையாக இருக்க விரும்பவில்லை. ஆர்வமும், ஆற்றலும், அமைதியற்ற பண்பும் கொண்டிருந்த வின்ஸ்டன் தன்முயற்சியில் நம்பிக்கைகொண்டவர். அவரது பேனா ஒரு பொற்சுரங்கம். அவருடைய நூல்களும், கட்டுரைகளும் அவருக்கு ராணுவ சம்பளத்தைவிட அதிக பொருளீட்டுமாறு உதவின. எனவே, வாழ்க்

கைக்காக எழுத்துப் பணியை மேற்கொள்வதென்றும், படிப்படியாக அரசியலில் புகுவதென்றும் அவர் முடிவு செய்தார். ஆனல், வின்ஸ்டன் செய்த முடிவின் முக்கிய காரணம் படை வாழ்க்கையில் அவருக்குச் சலிப்பு உண்டாயிற்று என்பதுதான். படையில் வாய்மூடி மௌனிகளாய், சம்பிரதாயச் சரக்குகளாய், வம்பை விலைக்கு வாங்காமல் விவேகத்துடன் 'நல்லபிள்ளைகளாக' இருப்பவர்களுக்கு மட்டுமே பதவி உயர்வு உண்டு. இவை யாவும் வின்ஸ்டனின் இயல்புகளுக்கு மாறுபட்டவை. எனவே, படைக்குரிய தலையணி மறைந்து, சிவில்துறை பட்டுத்தொப்பி அவரது தலையை அலங்கரித்தது.

# 4. பாராளுமன்றத்தில் போராடும் வீரர்

ஜோஹான்ஸ்பர்க்கும், பிரிட்டோரியாவும் வீழ்ச்சியுற்று, லேடி ஸ்மித்தும், மேஃப்கிங்கும் விடுவிக்கப்பட்டதுடன் தென் ஆப்பிரிக்கப் போரில் பெருந்திருப்பம் ஏற்பட்டது. போரின் சாதகமான போக்கைப் பயன்படுத்தி, உள்நாட்டில் அரசியல் ஆதாயம் தேட பிரிட்டிஷ் ஆளும் கட்சியினர் விரும்பினார்கள். வின்ஸ்டன் வீடு திரும்பிய காலை, நாட்டில் பொதுத்தேர்தல் சூடு பிடித்திருந்தது. பிரிட்டிஷ் போர்வீரர்கள் முதல்முதல் போயர் போரில் காக்கிச் சீருடைகள் அணிந்திருந்த காரணத்தால், அப் போரையொட்டிய இந்தத் தேர்தலும் 'காக்கித் தேர்தல்' (Khaki Election) என்னும் பெயர்பெற்றது. பொழுதை வீணுக் காமல் வின்ஸ்டன் பொதுத்தேர்தலில் குதிக்க முடிவு செய்தார். புதிய பாராளுமன்றம் கூடவேண்டியிருந்தது. இருபதாம் நூற்றுண்டில் முதல் பாராளுமன்றமான இதுதான், வணக்கத்துக் குரிய விக்டோரியா அரசியார் ஆட்சியின் இறுதிப் பாராளுமன்ற மாகவும் விளங்கப் போகிறது.

வின்ஸ்டனின் முதல் காதல் அரசியல்தான். இதுவே அவரை அரசியலில் ஈடுபடச்செய்த முக்கிய காரணமாகும். குழந்தைப் பருவம் முதலே அரசியல் அவரது மூச்சுக்காற்றில் கலந்திருந்தது. அவருக்காக நியமிக்கப்பட்ட தலையெழுத்து அரசியல். வின்ஸ் டனின் தந்தையார் அந்நாள்களில் தலைசிறந்த அரசியல் தலைவர் களுள் ஒருவர். இளம்வயதில் வின்ஸ்டன் கடும் விபத்துக்குள் ளாகி, படுத்த படுக்கையாய்க் கிடந்த நிலையில் தந்தையாரின் அரசியல் நடவடிக்கைகளை உற்றுக் கவனிக்கின்ற வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. தந்தையாரின் நண்பர்களுடைய அறி முகத்தைப் பெற்றுர். ரேண்டால்ஃப் பிரபுவின் கட்சிக் கொள் கைகளை வெறியுடன் ஆதரித்தார். பலமுறைகளில் தந்தையா ருக்கு அரசியலில் உதவுமாறு வின்ஸ்டன் முன்வந்தார். ஆனுல், ரேண்டால்ஃப் பிரபு அதற்கு இடம் கொடுக்கவில்லை, ஒருவேளை

தம் மைந்தன் அரசியலுக்கு அருகதையற்றவன் என்று கருதினர் போலும்!

வின்ஸ்டனிடம் விளங்கிய ஆழ்ந்த உந்துதலேத் தொடக்க காலத்தில் அவர் உய்த்துணர்ந் திருக்கமாட்டார். தந்தையாரின் தோல்வியும், வீழ்ச்சியும் வின்ஸ்டனின் மனத்தில் ஆழமாய்ப் பதிந்திருந்தன. ரேண்டால்ஃப் பிரபுவை அழித்து விட்டதாக அவரது அரசியல் எதிரிகள் இறுமாந்து இருந்தனர். வின்ஸ்டன் இலட்சிய வாழ்க்கையில் பிடிப்பு உள்ளவர். தந்தையார் விட்டுச் சென்ற பணியைத் தொடர்ந்து செய்து, இருள்வாழ்வில் ஒளி யேற்ற விரும்பினர். டோரிக் கட்சியைச் சமூக சீர்திருத்தப் பாதையில் செலுத்தி, தந்தையாரை அழித்த பிற்போக்குவாதி களேப் பழிவாங்குவதும் அவரது எண்ணமாகும். சிந்தனே வளமும், கருணே உள்ளமும் கொண்ட இளேஞர்கள் சமதர்மத்தின் பிடியி லிருந்து தப்ப முடியாதென்பது உண்மை. சர்ச்சிலிடம் சமுதா யத்தின் அடிமட்டத்திலிருந்து ஏழைச் சகோதரர்கள்பால் சமூக இரக்க உணர்வு பற்றி எரிந்தது. அரசியலில் நுழைவதுதான் அதற்கு ஒரேவழி என்பதை அவர் கண்டார்.

ஏற்கெனவே வின்ஸ்டன் அரசியல் தகுதிபெற ஒருமுறை முயன்று தோற்றிருந்தார். பழைய தவறுகளேத் திருத்திப் புதிய பாதையை வகுத்துக்கொள்வது அவரது திட்டம். அதுகாலே சாலிஸ்பெரி பிரபு (Lord Salisbury) பிரதமராகவும், கன்சர் வேடிவ் கட்சியின் தலேவராகவும் இருந்தார். ரேண்டால்ஃப் சர்ச்சில் பிரபு சாலிஸ்பெரியுடன்தான் முதல் முதலில் மோதினர். பிரதமரின் முக்கிய சகாக்களில் ஒருவரான ஜேம்ஸ் பால்ஃபோர் (Balfour) என்பார் ரேண்டால்ஃப் பிரபு 'நான்காம் கட்சி' தொடங்கியகாலே, சிறந்த முறையில் அவருடன் ஒத்துழைத்தவர். இவர்கள் இருவருடன் கன்சர்வேடிவ் கட்சியின் திலகமெனக் கருதப்பட்டவர் பர்மிங்ஹாம் தொழிலதிபரான ஜோசப் சேம்பர் லேன். கன்சர்வேடிவ் கட்சியினர் போயர்களேத் தோற்கடித்து, போரை வெற்றிகரமாக முடித்ததைத் தேர்தல் அறிக்கையாக வெளியிட்டனர். 'ஆளுங்கட்சி இழக்கும் ஒவ்வொரு இடமும், போயர்களின் வெற்றி' என்று சேம்பர்லேன் முழக்கினர்.

இந்தச் சூழ்நிலேயில்தான் வின்ஸ்டன் அரசியல் அரங்கத்தில் இறங்கிக் கொண்டிருந்தார். பதினெரு தொகுதிகளிலிருந்து அவரை வேட்பாளராக நிற்கும்படிக் கேட்டு அழைப்பு வந்தி ருந்தது. எனினும் அவரது பழந்தொகுதியான ஓல்டாமில் நின்று வெற்றிபெற்றுக் காட்டுவதாக அவர் உறுதிபூண்டார்

1899ல் வின்ஸ்டனை நாடு அறியாது. ஆனால், இன்று இங்கிலாந்தில் மக்கள் அபிமானத்தைப் பெற்ற பெருமக்களில் அவர் முதன்மையானவர். தென் ஆப்பிரிக்காவில் வின்ஸ்டன் புரிந்த வீரச்செயல்களும், அவருடைய நூல்களும் அவரை மிகவும் பிரபல்யப்படுத்தி இருந்தன. வீரர் வழிபாட்டை வெளிப்படுத்துவதற்குரிய ஒரு சின்னமாக மக்கள் அவரைக் கொண்டாடினார்கள். அவர் இன்று அரசியல்வாதி; எழுத்தாளர்; நூலாசிரியர்; நாவலர்; போர் மறவர். காலம் கனிந்திருந்தது. அரசியல் அவரை அழைத்தது; மறுக்காமல் ஏற்றுக்கொண்டார்.

விக்டோரியா பேரரசிக்குப் பின்னர் அரசியல் சூழ்நிலையில் மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன. கன்சர்வேடிவ்களும், லிபரல்களும் மாறிமாறிப் பதவியிலிருந்தனர். டோரிகள் அரசரையும், திருச்சபையையும் ஆதரித்து வந்தனர். படைத் துறையிலும், நிலப் பிரபுக்களிடையேயும், மதகுருக்களின் செல்வாக்கு அதிகமாக இருந்தது. லிபரல்கள் பழைய விக்கு குடும்பங்களின் ஆதரவுடன் உயர் முடியாட்சி சலுகைகளுக்காகவும் தனி நபரின் உரிமைகளுக்காகவும் போராடி வந்தனர். புதிய சக்திகளாக உருவாகிவந்த ஆலைத் தொழிலாளர்களும், வணிகப் பெருங்குடிமக்களும் லிபரல் கட்சியின் தீவிர கிளையாக இயங்கி வந்தனர். நாளடைவில் லிபரல்களின் செல்வாக்குக் குறைந்து வந்தது. அயர்லாந்திற்குப் பொறுப்பாட்சி வழங்கப்பட்டதால் கட்சியில் பிளவு ஏற்பட்டது. பேரரசை ஆதரித்தவர்கள் வலது சாரிகள் என்றும், பொறுப்பாட்சி ஆதரவாளர்கள் இடதுசாரிகளாகவும் பிரிந்துவிட்டனர். பொறுப்பாட்சியை ஆதரித்தவர்கள் பேரரசின் எல்லாப் பகுதிகளுக்கும் முழு உரிமைகளும், சுயாட்சியும் வழங்கப்பட வேண்டுமென்றும், உள்நாட்டில் சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டுமென்றும் வற்புறுத்தினார்கள். இக்கொள்கையை யுடையவர்கள் 'சிறிய இங்கிலாந்தினர்' (The Little Englanders) என்று அழைக்கப்பட்டனர். கட்சிகளையும், கட்சியின் அமைப்புகளையும் ஒரு சில வன்மைவாய்ந்த குடும்பங்களே கட்டுப்படுத்தி வந்தன.

### எங்கும் சாதுர்யம் என்பதே பேச்சு

புதிய சக்திகள் நாட்டில் வேரூன்றத் தொடங்கியிருந்தன. புதிய எண்ணங்களும், எந்தவொரு அரசியல் கட்சியின் மரபொழுங்குகளிலும் இடம்பெறாத புத்தம் புதுக் கருத்துகளும் உருவாகிக்கொண்டிருந்தன. இதனை ஒருவாறு உணர்ந்திருந்த ரேண்டால்ஃப் பிரபு 'டோரி ஜனநாயகம்' என்ற போர் முழக்கத்தைத் தொடங்கி வைத்தார். 1899ல் வின்ஸ்டன் முதல் முதலில்

தேர்தல் களத்தில் குதித்தபோது இப் புதுக்கருத்துகளைச் சந்திக்க வேண்டியிருந்தது. இவையெல்லாம் நாட்டு மக்களின் எழுச்சியை அறிவித்தன. எனினும், இந்த இயக்கம் இன்னும் இளமைப் பருவத்திலேதான் இருந்து வந்தது. 1892ஆம் ஆண்டுமுதல் இரு பெரும் அறிகுறிகள் தோன்றின. ஒன்று சோஷியலிச தொழிற்கட்சி சார்பில் பாராளுமன்ற உறுப்பினராக கியர் ஹார்டி (Keir Hardy) என்பார் வெற்றிபெற்றது. இரண்டாவதாக ஜான் பர்ன்ஸ் (John Burns) தொழில்துறை அமைச்சராக இடம் பெற்றது.

எங்கும் 'சோஷியலிசம்' என்ற பேச்சே முழங்கி வந்தது. இதன் பொருள் என்னவென்பதை ஒருவரும் அறியமாட்டார்கள். தன்னைச் 'சோஷியலிஸ்டு' என்று கூறிக்கொண்ட ஒவ்வொரு அரசியல்வாதியும் அச்சொல்லுக்குச் சொந்த விளக்கம் கொடுத்தான். 19ஆம் நூற்றுண்டின் தனியுரிமைக் கோட்பாட்டையும், பழைய படைமான்யக் கொள்கைகளையும் கடந்த புதியதொரு சமுதாய நோக்கினைச் சகல சமதர்மவாதிகளும் ஒருமுகமாகச் சுட்டிக்காட்டினர். 'பொன்னுமன்று, மண்ணுமன்று, மன்னுயிர்களும், அவற்றின் மகிழ்ச்சியும்தான் அரசினரின் தலையாய நோக்கம்' என்னும் உறுதிப்பாட்டை புதிய சித்தாந்தம் பறைசாற்றியது.

இந்த அரசியல் பின்னணியில்தான் 'வெற்றி வீரராக' வின்ஸ்டன் ஓல்டாம் தொகுதியில் போட்டியிட்டார். இசைகள் முழங்க, கொடிகளும் தோரணங்களும் பறந்தாட, வீரப்பவனி வந்தார் வின்ஸ்டன். 'இங்கிலாந்தின் மாண்புயர் வீரர்' என்ற தேர்தல் முழக்கம் வானைப் பிளந்தது. ஆனால், லங்காஷயர் லிபரல்கள் இந்த வீரர் வழிபாட்டைக் கண்டு அஞ்சவில்லை. தேர்தலின் ஒவ்வொரு நிலையிலும் போராட்டத்தைச் சந்திக்க வேண்டிய கட்டத்தை இவர்கள் உருவாக்கிவிட்டார்கள். இளம் செயல் வீரரான வின்ஸ்டனும் முழுமூச்சுடன் அதற்கு ஈடு கொடுத்தார். அவரது அரசியல் நிலையில் குழப்பமில்லாத தெளிவு இருந்ததானது அவருக்கு மிகவும் சாதகமானதொரு சூழ்நிலையாகும். போயர் போருக்கு முன்னால் எவ்வாறேனும் அமைதியை நிலைநாட்ட விரும்பிய வின்ஸ்டன் இன்று எப்படியும் வெற்றிதான் நாட்டின் நோக்கம் என்று வலியுறுத்தினர். 'இன்றைய போராட்டம் டோரிகளின் உண்மையான பேரரசுக் கொள்கைக்கும், லிபரல்களின் போலிப் பேரரசுக் கொள்கைக்கும் இடையே நிகழ்கிறது'[1] என்று வின்ஸ்டன் குறிப்பிட்டார்.

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 80.

'லிபரல்களுக் கென்று சொந்தக் கொள்கைகளே இல்லே' யென அவர் கேலி செய்தார்.

இளம் வேட்பாளரான வின்ஸ்டனே ஆதரித்துப் பேசுவதற் காகப் புகழ்மிக்க ஜோசப் சேம்பர்லேன் ஓல்டாவிற்கு வந்தார். தொழிலாளர் வர்க்கத்தினிடம் சேம்பர்லேனின் பெயர் மந்திர மென ஒலிக்கும். ரேண்டால்ஃபின் மைந்தனிடம் தந்தையின் தன்முனைப்பு, துணிவு ஆகிய பண்புகள் இருப்பதாக சேம்பர் லேன் புகழ்ந்து பாராட்டினுர். ஆனுல், பொருமைகொண்ட சிலர் வின்ஸ்டனின் துணிவைப்பற்றி நையாண்டி செய்தார்கள். பொய்க்கதைகளைப் புனைந்தார்கள். மண்ணேவாரி இறைப்பது போல் வசைமாரி பொழிந்தனர். நண்பர்களை ஆபத்தில் தவிக்க விட்டுத் தாம் மட்டும் தப்பிவிட்ட வின்ஸ்டனின் கோழைத் தனத்தைக் கேலி செய்தார்கள். அவருக்குக் கொடுக்கப்பட்ட 'பெரோலேத்' தவருகப் பயன்படுத்தித் தப்பியோடியவர் என்று குற்றஞ் சாட்டினுர்கள். தரக்குறைவான இந்தப் புனைகதைக ளெல்லாம் வின்ஸ்டனைக் களங்கப்படுத்தும் நோக்கத்துடன் உருவாக்கப்பட்டவை. நரம்பில்லாத நாக்குப் படைத்த இந்த நச்சுப்பிரசாரம் நான்குமுறை உயிர்பெற்று உலவியது. இவற்றிற் கெல்லாம் வின்ஸ்டன் தகுந்த பதிலடி கொடுத்தார். வழக்குத் தொடுத்து வம்பர்களை மன்னிப்புக் கோருமாறு செய்தார்.

கடுமையான போட்டியில் வின்ஸ்டன் அமோக வெற்றி பெற்ருர். அவரது மகிழ்ச்சி கரைபுரண்டு ஓடியது. புகழ் மாலைகள் குவிந்தன. சாலிஸ்பெரி பிரபு வாழ்த்துத் தந்தி அனுப்பியிருந்தார். பால்ஃபோர் வின்ஸ்டனைச் சந்தித்துப் பேச விரும்பினுர். சேம்பர்லேன் அவரைப் பர்மிங்ஹாமிற்கு வருமாறு அழைப்பு விடுத்தார். நாட்டின் பிற பகுதிகளில் நடந்துகொண் டிருந்த தேர்தல் கூட்டங்களில் கன்சர்வேடிவ் கட்சியின் சார்பில் பேசுமாறு வின்ஸ்டனுக்கு அழைப்புகள் வந்தன. ஓல்டாமின் இளம் உறுப்பினரின் கவர்ச்சிமிக்க ஆளுமை, கட்சியின் வெற் றிக்கு அடிப்படைக் காரணமாயிற்று. 'காக்கித் தேர்தலின்' வெற்றி, கன்சர்வேடிவ் கட்சியினர் பதவியில் நிலேகொள்ளுமாறு செய்தது. பாராளுமன்றத்தில் வின்ஸ்டனின் உரைகளும், கருத்து களும் பிற உறுப்பினர்களின் கவனத்தைக் கவர்ந்தன. 'இவர் தந்தையைப் போன்றவர்தாம்; உடனிருந்து உழைக்க ஆபத் தான பேர்வழி' என்று அவர்கள் மறைவில் பேசிக் கொண்டார்கள்.

இருபதாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் பாராளுமன்ற உறுப்பினர் ஒருவர் தேர்தல் வெற்றியினுல் மட்டும் காலந்தள்ள

முடியாது. எனவே, வின்ஸ்டன் எழுத்தின் மூலமாகவும், பல நாடுகளுக்குச் சென்று உரைகள் ஆற்றியும் பொருளீட்ட முடிவு செய்தார். 'இலண்டன் டு லேடி ஸ்மித் வயா பிரிட்டோரியா' (London to Lady Smith Via Pretoria), 'ஈயான் ஹாமில்டன்ஸ் மார்ச்' (Ian Hamilton's March) என்னும் அவருடைய நூல்கள் அடுத்து வெளிவந்தன. அவர் தமது தென் ஆப்பிரிக்க சாதனை களைப்பற்றிப் பல கூட்டங்களில் பேசினார். அமெரிக்காவில் அரிய உரைகள் பல ஆற்றினார். 'வின்ஸ்டன் ஐந்து போர்களின் வீரர், ஆறு நூல்களின் ஆசிரியர், வருங்காலப் பிரதமர்' என்று விளம் பரங்கள் வெளிவந்தன. இதனைச் சர்ச்சில் விரும்பவில்லை யாத லால், அவை நிறுத்தப்பட்டன. வின்ஸ்டனின் பயணங்களும், உரைகளும் பெரும் வெற்றிபெற்றன. எனினும், சில கூட்டங் களில் அவரைக் குறுக்குக் கேள்விகள் கேட்டுத் திணறடித் தார்கள். சில இடங்களில் அவருடைய கூட்டங்களுக்கு ஆள் சேரவில்லை. பொதுவாக அமெரிக்கர்கள் அவர்மீது பரிவுகாட்டி னார்கள். அவரும் 'பகுதி அமெரிக்கர்' என்பது அதன் காரண மாக இருக்கலாம். நியூயார்க்கில் நடைபெற்ற கூட்டத்திற்கு மார்க் டுவெய்ன் (Mark Twain) தலைமை தாங்கினார். வின்ஸ்டன் தாய்நாடு திரும்பியபோது அவரிடம் 10,000 பவுன்கள் எஞ்சி யிருந்தன.

### மக்கள் மன்றத்தில் முதல் முழக்கம்

1901ஆம் ஆண்டின் தொடக்கத்தில் பாராளுமன்றம் கூடியது. இதற்குள் பேரரசியார் காலமாகவே, எட்வேர்டு மன்னர் அரியணையேறி இருந்தார். உள்நாட்டு நிலையிலும், வெளிநாட்டு விவகாரங்களிலும் பல மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன. மக்களின் பழைய கொள்கைகள் மறைந்து வந்தன. அவர்கள் ஆத்மசோதனை செய்யவும், தம்மைச் சீர்திருத்திக் கொள்ளவும் ஆவலாய் இருந்தனர். விக்டோரியா அரசியாரின் நீண்ட ஆட்சியின்போது இளவரசர் எட்வேர்டு பின்னணியிலேதான் இருந்தார். கிளாட்ஸ்டன் அயர்லாந்து சுயாட்சிப் பிரச்சினைக்குத் தீர்வுகாண முடிவு செய்தபோது நாட்டின் அரசியல் போக்கே மாறியது. லிபரல் கட்சி இரண் டாகப் பிளந்தது. சுயாட்சிப் பிரச்சினை டோரிகளுக்கு வெற்றி தரவே, கன்சர்வேடிவ்களின் எழுச்சி நீடிக்குமா? என்ற ஐயம் எழுந்தது.

இந்நிலையில்தான் வின்ஸ்டன் பாராளுமன்றத்தில் வந்தமர்ந் தார். தமது கன்னியுரையை ஆற்றுவதற்குத் தக்க வாய்ப்பை எதிர்பார்த்திருந்தார். தென் ஆப்பிரிக்கப் போரில் போயர்களைப்

பண்பற்ற முறையில் நடத்திய பிரிட்டிஷ் அரசினரை டேவிட் லாயிட் ஜார்ஜ் ((Lloyd George) காரசாரமாகத் தாக்கிப் பேசிக் கொண்டிருக்கும்போது திடீரெனத் தமது உரையை நிறுத்திக் கொண்டு வின்ஸ்டனைப் பேசுமாறு அழைத்தார். வின்ஸ்டன் வழக்கம்போல் மிக்க சிரமப்பட்டுத் தமது உரையைத் தயாரித்து மனப்பாடம் செய்துவைத்திருந்தார். மனப்பதட்டம் என்பது சர்ச்சிலின் இயல்பிற்கு முரணானதொன்று. எனவே, தமது முதல் வாய்ப்பைப் பெற்றதும் சிறிதும் தயக்கமின்றித் தங்கு தடையின்றி உரையாற்றிப் பிரமாதமான வெற்றிபெற்றார். போயர்களைப் பிரிட்டிஷார் நடத்திய முறைகள் வெட்கக்கேடானவை என்று கூறியது கட்சித் தலைவர்களை அதிர்ச்சியடையச் செய்தது. பாராளுமன்றம் கூடிய நான்காவது நாளிலே வின்ஸ்டனின் பேச்சுகள் பிற உறுப்பினர்களைக் கவர்ந்தன. தென் ஆப்பிரிக்க விவகாரங்கள் பற்றி அவரைவிட அதிகமாகத் தெரிந்திருந்தவர்கள் அவையில் இருக்கவில்லை என்று கூறலாம்.

வின்ஸ்டனின் முதல் முழக்கத்தைப் பலர் பலவிதமாக வரவேற்றனர். 'ஆளும் கட்சியைச் சேர்ந்தவர் போயர்களை ஆதரிக்கிறாரே!' என்றனர். 'இதுதான் அழிவிற்குக் குறுக்கு வழி' என்றார் ஜோசப் சேம்பர்லேன், 'இளமைத் துடிப்பின் எதிரொலி' என்று பழைய டோரிகள் வெகுண்டனர். ஆனால், வின்ஸ்டன் அலைகடலின் ஆழத்தைப் போன்று அசையாமல் இருந்தார். தமது முதலுரையைச் செவிமடுத்த உறுப்பினர்களுக்கு நன்றி கூறினார். அவர் பேசி முடித்ததும் அவையின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் கைதட்டல் ஒலி ஆரவாரம் கிளம்பியது. வின்ஸ்டனைத் தொடர்ந்து பேசிய லிபரல் கட்சி உறுப்பினர் சர் ராபர்ட் ரீட் (Sir Robert Reid) ஓல்டாம் உறுப்பினரைப் பாராட்டினார். பிரதமர் ஆஸ்குவித் (Asquith) வின்ஸ்டனின் பாராளுமன்ற வாழ்வின் முதல் உரையை வானளாவப் புகழ்ந்தார். இத்தகைய பாராட்டுகள் யாவும் இளம் உறுப்பினரான வின்ஸ்டனுக்குத் தெம்பளித்தன. அவரது அரசியல் வாழ்க்கை தொடங்கிவிட்டது. வேல்ஸ்நாட்டு வழக்கறிஞர் லாயிட் ஜார்ஜை வின்ஸ்டன் சந்தித்தார். இந்த இரு பெரும் தலைவர்களின் நட்பு நாற்பதாண்டு அரசியல் வாழ்வில் அறுந்துவிடாமல் தொடர்ந்து நின்றது.

### தாழ்ந்த கொடி உயர்ந்தது

கன்னியுரை ஆற்றிய வின்ஸ்டன் காமன்ஸ் அவையில் அமர்ந்து அரசியல் தந்திரங்களையும், புகழ்பெறுவதற்கான வழிகளையும், ஊன்றிக் கவனிக்கத் தொடங்கினார். அவையில் புகழ்

பெற விரும்பும் இளம் உறுப்பினர் ஒருவர் கட்சித் தலைவர்களுக்குக் கட்டுப்பட்டு நடந்து, கட்சிக் கொறடாவிற்குப் பணிந்தால்தான் படிப்படியாக வெற்றிப்பீடத்தை எட்டிப்பிடிக்க முடியும். இத்தகைய கட்சிக்குக் கட்டுப்படும் உறுப்பினர்கள் ஆபத்தில்லா உறுப்பினர்களாகக் கருதப்படுவார்கள். சிறிது திறமையும் சேர்ந்து விட்டால், கட்சிப் பற்றுதலுக்குக் கைம்மாருக அரசியல் பதவியும் வந்து சேருவது இயல்பு. ஆனால், தொடக்கத்திலிருந்தே இந்த ஆபத்தில்லாத வழியைக் கடைப்பிடிக்கும் எந்த அறிகுறியும் வின்ஸ்டனிடம் காணப்படவில்லை. படையில் துணை அதிகாரியாக இருந்தபோதே, படைத்தலைவர்களைக் குறை கூறும் துணிவு பெற்றிருந்த வின்ஸ்டன், இன்று இளைய பாராளுமன்ற உறுப்பினராக அமைச்சர்களுக்கே கொள்கை வகுத்துக் கொடுக்கத் தயாராக இருந்தார்.

தோல்விகள் பலகண்ட பின்பும் போயர்கள் பணிந்துவிடுவதாக இல்லை. போயர்களின் எதிர்ப்பைத் தடுக்கும் நோக்கத்துடன், ஒரு மாதத்திற்குள் சரணடையாத போயர்கள் ஆயுள் முழுவதும் நாடு கடத்தப்படுவார்கள் என்று அரசாங்கம் அறிவித்தது. இதனைத் தொடர்ந்து வின்ஸ்டன் வெளிப்படையாகக் கிளர்ச்சி செய்யத் தொடங்கினார். 'அரசாங்கத்தின் புதிய அறிக்கை தென் ஆப்பிரிக்காவில் வெற்றிக்கோ அமைதிக்கோ வழி வகுக்காது'[1] என்று வின்ஸ்டன் குறிப்பிட்டார். வின்ஸ்டன் தமது இரண்டாவது உரையில் பிரிட்டனின் பாதுகாப்பிற்கு கடற்படையே சிறந்தது என்றும், தரைப்படைக்கான அதிகச் செலவுகள் தேவையற்றவை என்றும் எதிர்த்துப் பேசினார். இதனையும் பல உறுப்பினர்கள் பாராட்டினார்கள். ராணுவ விவகாரங்கள்பற்றி விவாதங்களில் மிகுந்த அக்கறை காட்டியதன் மூலம், தந்தையார் காட்டிய கிழிசல் கொடியை மீண்டும் உயர்த்தித் தந்தையாருக்கு ஏற்பட்ட அரசியல் இழிவைப் பழி வாங்கினார். போர்த்துறை அமைச்சரான ஜேம்ஸ் பிரிடெரிக்கின் ராணுவத் திட்டங்கள் இதற்கான வாய்ப்பை வின்ஸ்டனுக்கு அளித்தன.

இந்தச் சந்தர்ப்பத்தில் வின்ஸ்டன் ஆற்றிய உரை விவாதத்தின் முக்கிய அம்சமாகத் திகழ்ந்தது. அதன் சொற்றொடர்களும், விவாதத்திறனும் குறிப்பிடத்தக்கன. வின்ஸ்டனின் சொல்நடை பக்குவம் பெற்றுவிட்டதென்பதை இந்தப் பேச்சு வெளிப்படுத்தியது. போர் அமைச்சர் பிரிடெரிக் தென்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 82.

ஆப்பிரிக்காவிற்கு மூன்று படைப்பிரிவுகளை அனுப்பத் திட்டம் வகுத்தார். 'தென் ஆப்பிரிக்காவின் நாகரிகமற்ற ஆதிகுடிகளை எதிர்க்க அவற்றில் ஒன்றுகூடப் போதும். ஆனால், அங்குள்ள ஐரோப்பியருடன் போரிட இரண்டு அணிகள் போதா'[1] என்று வின்ஸ்டன் வாதாடினார். 'நவீன காலத்தின் மக்கள் போர், மன்னர்கள் அன்று நடத்திய போர்களைவிடப் பயங்கரமானது' என்று வின்ஸ்டனின் எச்சரிக்கை தீர்க்க தரிசனமாக நடந்தேறியது. பிரிட்டிஷ் கடற்படையின் முக்கியத்துவத்தைப் பற்றியும் அவர் கூறியவை உண்மையாகிவிட்டன. வின்ஸ்டனின் இந்த உரை கன்சர்வேடிவ் கட்சியில் பெரும் அதிர்ச்சியை உண்டாக்கியது. 'ஓல்டாமின் இளம் கிளர்ச்சிக்காரர் ஒருநாள் லிபரல் கட்சிப் பிரதமராவார்' என்று மாஸிங்ஹாம் (Massingham) என்ற பத்திரிகை ஆசிரியர் முன்னறிவித்தார். மேலும் ஈராண்டுகள் பிரிடெரிக்கின் திட்டம் விவாதிக்கப்பட்டு வந்தது. இந்த இரண்டாண்டுகள் சர்ச்சிலும் விடாமல் தமது தாக்குதலை நடத்திக்கொண்டு வந்தார். பிரான்ஸ் நாட்டில் எத்தன் ஒருவன் பெட்டிக்குள்ளே பல கோடிக்கணக்கான பணம் இருப்பதாகக் கூறிப் பலர் அதன்மீது பணம் கட்டச்செய்து ஏமாற்றினனும். பொறுமை இழந்த மக்கள் பெட்டியை உடைத்துத் திறந்தபோது உள்ளே சில பித்தான்களும், குப்பைக் காகிதங்களும் கிடந்தனவாம். இந்தக் கதையைக் கூறிய வின்ஸ்டன், பிரிட்டிஷ் படை அமைப்பும் அவ்வாறே மக்களை ஏமாற்றுவதாகக் கூறி வன்மையாகத் தாக்கினார். இறுதியாகப் பிரிடெரிக்கின் திட்டம் அழிந்தது. வின்ஸ்டன் தந்தையின் வீழ்ச்சியைப் பழிவாங்கி விட்டார்.

காமன்ஸ் அவையில் வின்ஸ்டனின் உரையைக் கேட்டவர்கள் அவர் எவ்வாறு ரேண்டால்ஃப்பிரபுவை ஒத்திருக்கிறார் என்பதைக் காணத் தவறவில்லை. அவரது சொல் நடையும், அவையில் நிற்கின்ற பாணியும், பேசும் முறையும், உடற்கூறுகளும், உளப் பான்மையும்கூடத் தந்தையை நினைவூட்டின. கன்சர்வேடிவ் கட்சிக்குள் இளைஞர்கள் அணியொன்று முற்போக்குக் கருத்துக் களைக்கொண்டு உருவாகி வந்தது. அவர்களின் தலைவரான ஹியூ சிசில் பிரபுவின் (Lord Hugh Cicil) பெயரால் இந்தப் போட்டிக் கட்சியினர் 'ஹியூலியன்ஸ்' என்றழைக்கப்பட்டனர். இந்த இளந்தலைமுறையினரில் மிக வன்மையுடன் காணப்பட்டவர் வின்ஸ்டன். சாலிஸ்பெரி பிரபுவின் மருமகன் பால்ஃபோரும்,

[1]Churchill–His Life and Times, Malcolm Thomson, p. 84.

ரேண்டால்ஃப் பிரபுவின் மகன் வின்ஸ்டனும், அரசியல் மற் போருக்குத் தயாராகிவிட்டனர்.

## கட்சிக்குள் கருத்து வேறுபாடு

படைச் சீர்திருத்தம் பற்றிய விவாதத்தில் வின்ஸ்டன் சர்ச்சில் அரசியல் சுதந்திரத்தை அதிகமாகப் பயன்படுத்தி விட்டார். எனினும் இன்னும் கட்சிப்பற்றுக் கொண்டுதான் செயல்களை ஆற்றி வந்தார். 1903ஆம் ஆண்டின் தொடக்கத்தில் அரசியல் பாரமானி நிதான நிலையைக் காட்டியது. போயர் போர் முடிவுற்றிருந்தது. அயர்லாந்தில் அமைதி நிலவியது. பள்ளிகளில் சமயச்கல்விப் பிரச்சினை பற்றித்தான் சிறிது மனக் குறை இருந்தது. பெரிய தேசியப் பிரச்சினை எதுவும் அரசியல் கட்சிகளில் பிளவை உண்டாக்கும் சூழ்நிலை நிலவவில்லை. இந்நிலை புயலுக்குமுன் நிலவும் அமைதிபோலத் தோன்றியது. 1914ஆம் ஆண்டின் போர் மேகங்கள் இன்னும் அரசியல் வானில் தென்பட வில்லை. 'சமாதானம், சிக்கனம், சீர்திருத்தம்' என்ற கோஷங்கள் இன்னும் ஒலித்துக் கொண்டிருந்தன. கட்சிகளைப் பிளக்கும் புரட்சிக் கருத்துகள் எவையும் உருவாகவில்லை.

அரசியல் கட்சிகளிடையே இத்தகைய அமைதி நிலவிக் கொண்டிருக்கும்போதுதான் புகழ்பெற்ற பாராளுமன்ற உறுப் பினரான ஜோசப் சேம்பர்லேன் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார். தென் ஆப்பிரிக்காவுக்குச் சென்று வந்திருந்த சேம்பர்லேன் காப்பியல் (Protection) வாணிக முறையை ஆத ரித்துப் பேசினார். இதனால், இங்கிலாந்தின் நிதிக் கொள்கை தீவிரமான முறையில் மாற்றப்படவேண்டியிருக்கும். அத்துடன் தடையில்லா வாணிகக் கொள்கையையும் (Free Trade) கைவிட வேண்டிய நிலை உருவாகும். தடையில்லா வாணிக முறை கடந்த அறுபதாண்டுகளாகப் பிரிட்டனின் வாணிக மரபாக விளங்கி வந்திருந்தது. இதனைத் தள்ளிவிட்டு உணவுப் பொருள்கள்மீது வரி விதிக்க வேண்டுமென்று சேம்பர்லேன் கூறினார். கன்சர் வேடிவ்களுக்கு இது பெரும் பிரச்சினையாகிவிட்டது. ஹியூ சிசில் பிரபு, ராபர்ட் சிசில், வின்ஸ்டன் சர்ச்சில் போன்ற பல கன்சர் வேடிவ் தலைவர்கள் டெவன்ஷயர் கோமகன் (Duke of Devonshire) தலைமையில் தடையில்லா வாணிகக் கொள்கையைத் தீவிரமாக ஆதரித்தனர். சர்ச்சிலுக்கும், கன்சர்வேடிவ்களுக்கும் இடையே மோதல் ஏற்படும் சூழ்நிலை உருவாகியது. 1904ஆம் ஆண்டு அவர் காமன்ஸ் சபையில் உரையாற்ற எழுந்தபோது, பால் ஃபோர் உட்பட பல கன்சர்வேடிவ் உறுப்பினர்கள் வெளிநடப்புச்

செய்தார்கள். வின்ஸ்டன் தம் உறுதிப்பாட்டை விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை.

கருத்து வேறுபாட்டின் அடிப்படையில் வின்ஸ்டன் லிபரல் கட்சியில் சேர்ந்துவிட்டார். லிபரல்களுடன் தோளோடு தோள் நின்று போராடத் தொடங்கினர். ஓல்டாம் நகர கன்சர்வேடிவ் கட்சி தனக்கும், வின்ஸ்டனுக்கும் சம்பந்தமில்லை என்று அறிவித்தது. பாராளுமன்றத்தில் வின்ஸ்டன் லிபரல் கட்சி வரிசையில் அமர்ந்தார். அவர் கட்சி மாறியதுடன் அவரது அரசியல் வாழ்வின் ஒரு கட்டம் நிறைவெய்தியது எனலாம். அவரின் கருத்து வேறுபாடு திடீரென ஏற்பட்ட கொள்கைத் தடுமாற்றம் அன்று; அது அவரது திறந்த உள்ளத்தின் அடிப்படையில் எழுந்த உறுதிப்பாடாகும். லிபரல்கள் புதிய உறுப்பினரை நேசக்கரம் நீட்டி வரவேற்றனர். முதல் இரு பாராளுமன்ற அமர்வுகளில் பெற்ற அனுபவத்தினல் வின்ஸ்டன் திறமையுடன் செயலாற்றப் புறப்பட்டுவிட்டார். 'காப்பியல் முறையினுல் நாட்டின் செல்வ நிலை உயரும் என்பது பொருளாதாரப் பித்தலாட்டம் என்றும், அதனுல் செல்வம் சீராகப் பங்கிடப்படும் என்பது அப்பட்டமான பொய்'[1] என்றும் வின்ஸ்டன் சாடினர். சர்ச்சிலும், சேம்பர் லேனும் நாடு முழுவதும் சுற்றிவந்து தங்கள் தங்கள் கொள்கைகளைத் தீவிரமாகப் பிரச்சாரம் செய்தனர். வின்ஸ்டனின் கட்சி மாற்றம் அரசியல் ஆதாயத்திற்காகச் செய்துகொள்ளப்பட்ட ஏற்பாடன்று. அவரது அறிவுக்கூர்மையும், மனச்சான்றும், மனிதாபிமானமும் அவரை லிபரல்களிடம் தள்ளியது. வின்ஸ்டன் பல தவறுகளைச் செய்திருக்கலாம். ஆனல், தமது மனச்சான்றை அடகுவைக்கும் தவற்றை மட்டும் என்றும் அவர் செய்தவரல்லர்.

வின்ஸ்டன் லிபரல்களின் சமூக சீர்திருத்தத் திட்டங்கள் யாவற்றையும் உளமார ஆதரித்தார். அவரின் அற்புதமான நா வன்மையினுல் சிறந்த புகழைப்பெற்று, லிபரல் கட்சியின் உட்குழுக்களிலும் இடம்பெற்றுர். விக்டோரியா அரசியாரின் காலத்தில் புதியதொரு தொழிலதிபர்களின் வர்க்கமும், சுரங்கத் தொழிலதிபர்களின் சக்தியும் உருவாகி இருந்தன. இங்கிலாந்தின் மரபு வழிவந்த பெருங்குடி நிலப்பிரபுக்கள் பெற்றிருந்த சமூக நிலையும், செல்வாக்கும் இவர்களுக்கு இல்லையென்ருலும், இவர்கள் பணப் பலத்தில் அவர்களுக்குச் சற்றும் குறைந்தவர்கள் அல்லர். இந்த வணிக மன்னர்களும், தொழில் முதலிகளும் தொழிலாளர்களைக் கசக்கிப் பிழிந்தனர். புதிய தொழில் நகரங்களைச் சுற்றி வளர்ந்திருந்த புறநகர்ச் சேரிகளில் நாற்றமெடுக்கும் குடிசைகளில்

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 88.

மானிடப் புழுக்களாய் நெளிந்து, அடிமைகளாய் உழைத்துத், தமது அற்ப ஆயுளில் தம் எஜமானர்களுக்குச் செல்வத்தைக் குவிப்பதில் செலவிட்டுச் செத்து மடிந்துகொண்டிருந்தார்கள். 'கோழிகள்கூடத் திறந்தவெளியிலே கூட்டங்கூட்டமாகச் சிற கடித்துப் பறக்கின்றன. மனித இனமோ இருள் மண்டிய பரண் களில் முடங்கிக் கிடக்கின்றது'[1] என்று ஜான் ரஸ்கின் (John Ruskin) பாடியது எத்தனை உண்மை! வின்ஸ்டனின் இயல்பான கருணை உள்ளம் இவ்வாறு அவல நிலையில் இருந்த மக்கள்பால் சென்றதில் வியப்பில்லை. இவ்வாறு வின்ஸ்டன், எழுகின்ற லிபரல் கட்சியின் இளம் ஞாயிறுபோல எழுச்சிபெற்று வந்தார். சேம்பர் லேனின் புண்ணியத்தால் வின்ஸ்டன் நாட்டு அரசியலில் புகழ் பெற்ற தேசீயப் பெருமகனுகும் வாய்ப்பு ஏற்பட்டது. வின்ஸ் டனின் சொல்வன்மையும் நாளுக்குநாள் வளர்ந்து வந்தது. குறும்புப்பேச்சினுல் குத்திக்காட்டி கேலிக்கணைகளை எறிவதிலும் வின்ஸ்டன் வல்லவராகிவிட்டார். ஒரு முறை கர்னல் கென்யான்-ஸ்லானி (Kenyon - Slaney) வின்ஸ்டனை நாட்டுத்துரோகி என்று குறிப்பிட்டார். 'மதிப்பிற்குரிய என் நண்பர் என்னை நாட்டுத் துரோகி என்று குறிப்பிட்டார். நான் தென் ஆப்பிரிக்காவில் போயர்களுடன் போராடிக் கொண்டிருக்கும்போது, இந்த வீரப் பெருமகனர் இங்கிலாந்தின் பாதுகாப்பிலே பத்திரமாக இருந்து கொண்டு, க்ருஜரை வாய்ச்சொல்லாலே கொன்றுவிட முயன்று கொண்டிருந்தார் போலும்' என்று சிலேடையாகப்பேசிப் பதிலடி கொடுத்தார்.

வின்ஸ்டனை இழந்ததற்காகப் பல கன்சர்வேடிவ் தலைவர்கள் வருந்தினர்கள். 'சிறந்த அறிவாளியான இளைஞர் வின்ஸ்டனைப் பால்ஃபோர் கட்சிமாற விட்டிருக்கக்கூடாது'[2] என்று சேம்பர் லேன் குறை கூறினர். இந்தப் பாராட்டு சேம்பர்லேனிட மிருந்து வந்தது குறிப்பிடத்தக்கது. சர்ச்சிலும், சேம்பர்லேனும் அரசியலில் கீரியும் பாம்பும் போன்றவர்கள். ஒருமுறை பாராளு மன்றத்தில் வின்ஸ்டன் உரையாற்றிக் கொண்டிருக்கும்போது குழப்பமும் கூச்சலுமாய் இருந்தது. அவரது பேச்சைக் கேட்கக் கூட உரிமை இல்லையா வென்று சில உறுப்பினர்கள் கேட்டனர். இந்தக் குழப்பத்தின் காரணம் சேம்பர்லேன்தான் என்று வின்ஸ் டன் குற்றஞ்சாட்டினர். இந்தக் குற்றச்சாட்டிற்கு ஆதார முண்டாவென்று சேம்பர்லேன் ஆவேசமாகக் கத்தினர். செய் வதறியாமல் அவைத்தலைவர் திகைத்தார். இந் நிலையில்

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson p. 90.

[2] Ibid p. 92.

வின்ஸ்டன் எழுந்து, 'அவையின் ஒழுங்கை மீறுகின்ற வகையில் நான் ஏதாவது கூறியிருந்தால், என் கூற்றை வாபஸ் பெற்றுக் கொள்ளுகிறேன்; எனது எதிர்ப்பைத் தெரிவித்தேன்; அதனை அமைதியான சூழ்நிலையில் ஆராய வேண்டுமென்று அவையினரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்' என்று கூறி அமர்ந்தார். இவ்வாறு மோதிக்கொண்ட இருவரும் ஒருவரையொருவர் இழந்து விட்டதாக வருந்துகின்ற நிலை அவர்களின் பண்புகளைக் காட்டுகின்றது.

இன்னொருநாள் காமன்ஸ் அவை விவாதத்தின்போது உறுப்பினர் கிளாட் லௌதர் (Claude Lowther) தென் ஆப்பிரிக்காவில் சீனத் தொழிலாளர்களிடையே பெரிபெரி என்ற நோய் பரவியிருப்பதாகவும், ஒல்டாம் உறுப்பினரும் அந்த நோய்க்குப் பலியாகி இருப்பதாகவும் குறிப்பிட்டார். அவைத்தலைவர் உறுப்பினரின் குறிப்பு, விவாதத்திற்குச் சம்பந்தப்படாத பொருள் என்று கூறவே, லௌதர், 'மேற்கூறிய பிணியின் அறிகுறிகளில் ஒன்று தலைக்கனம்'[1] என்று குத்தலாகச் சொன்னார். சில சமயங்களில் பாராளுமன்றக் கூட்டங்கள் தொடர்ந்து இருபத்தினான்கு மணி நேரங்கூட நடப்பதுண்டு. 1904 முதல் 1905 வரை பாராளுமன்றத்தில் தடையில்லா வாணிகத்தைப்பற்றி எவ்வித விவாதமும் நடைபெறாவண்ணம் பால்ஃபோர் கவனித்துக் கொண்டார்.' ஆண்டவன் படைத்த பூமியிலே பாராளுமன்றத்தில் மட்டும்தான் அந்தப் பிரச்சினை விவாதிக்கப் படவில்லை' என்று கிப்சன் பௌல்ஸ் (Gibson Bowles) என்பவர் குறிப்பிட்டது மிக உண்மையாகும்.

சமயம் கிடைக்கும்போதெல்லாம் வின்ஸ்டன் தமது பழைய கட்சித்தலைவரை வம்பிற்கு இழுக்கத் தவறுவதில்லை. ஒருநாள் பால்ஃபோர் தமது இருக்கையிலிருந்து எழுந்து, முதல் வரிசையைக் கடந்து வெளியே சென்றுகொண் டிருந்தார். இதைக் கண்ட வின்ஸ்டன் 'மதிப்பிற்குரிய உறுப்பினர் அவர்கள் வெளியே செல்லவேண்டிய அவசியமில்லை. நான் தடையில்லா வாணிகத்தைப்பற்றிப் பேசப்போவதில்லை' என்று கேலி செய்தார். ஒருமுறை நிதி பற்றிய முக்கிய விவாதமொன்று நடந்துகொண் டிருக்கும்போது, பால்ஃபோர் அவைக்கு வரவில்லை. இதனைக் கவனித்த வின்ஸ்டன், 'ஆளும் கட்சியினர் இன்னும் சில வாரங்களோ, மாதங்களோ பதவியைப் பிடித்துக்கொள்ள எந்தக் கொள்கையையும் துறப்பார்கள், எந்த நண்பரையும் மறுப்

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 92.

பார்கள், எவ்வளவு குப்பையையும் விழுங்குவார்கள்'[1] என்று குத்திக்காட்டினர். வாணிக வரிப் பிரச்சினையை விவாதிக்க விடாமல் தடுப்பதன்மூலமே, பால்ஃபோர் அமைச்சரவை பிளவு படுவதைத் தடை செய்தார். இறுதியாகக் கட்சியில் ஏற்பட்ட பொறுமை யின்மையைச் சகித்துக்கொள்ள முடியாமல் பால்ஃபோர் பதவிதுறந்தார். கேம்பல் பானர்மேன் (Campell-Bannerman) தலைமையில் லிபரல் கட்சியின் ஆட்சி மலர்ந்தது. வின்ஸ்டன் குடியேற்றங்களின் துணை அமைச்சராகப் பதவி பெற்றார். அவரின் அரசியல் பயிற்சிக்காலம் முடிவுற்றது. தமது முப்பத்தோராம் வயதில், 'ஐரோப்பாவின் இளைய மனிதர்', பிரிட்டிஷ் அரசரின் அமைச்சரவையில் இடம் பெற்றார்.

### எழுச்சிமிக்க இளம் அமைச்சர்

1906ஆம் ஆண்டு பொதுத்தேர்தல் நடைபெறவிருந்தது. கன்சர்வேடிவ்களுக்குப் பாடம் கற்பிக்கப் பொதுமக்கள் ஆவலாய் இருந்தனர். வின்ஸ்டன் வேண்டுமென்றே வடமேற்கு மான்செஸ்டரைத் தமது தொகுதியாகத் தேர்ந்துகொண்டார். குடியேற்ற நாடுகளின் துணை அமைச்சர் ஆபத்தில்லாமல் வெற்றி பெறக்கூடிய தொகுதிகள் பல இருந்தன. 'ஹிக்ஸ்' என்று அழைக்கப்பட்ட இலண்டன் நகர வழக்கறிஞரான ஜாய்ன்சன் ஹிக்ஸ் (Joynson Hicks) வின்ஸ்டனை எதிர்த்துப் போட்டியிட்டார். வின்ஸ்டனின் தோல்வி உறுதி என்று அவர் கொக்கரித்தார். வின்ஸ்டன் கட்சி மாறியதைப் பெரும்பிரச்சினையாக்கி, ஹிக்ஸ் ஒரு துண்டுப் பிரசுரம் தயாரித்து வெளியிட்டார். இந்தப் பூச்சாண்டிக் கெல்லாம் வின்ஸ்டன் அஞ்சவில்லை. வின்ஸ்டன் பேசிய கூட்டமொன்றில் ஹிக்சின் துண்டுப்பிரசுரம் அவர் கையில் கொடுக்கப்பட்டது. 'பதில் கூறு' என்று ஆவேசமாகக் கத்தினர்கள் எதிரிகள். தாம் கன்சர்வேடிவ் கட்சியிலிருந்தபோது பல அறிவற்ற காரியங்களைப்பற்றிக் கூறியது உண்மையென்றும், மேலும் அத்தவறுகளைச் செய்யக்கூடாதென்ற காரணத்தால், அறிவற்ற கன்சர்வேடிவ் கட்சியை உதறித்தள்ளியதாகவும் கூறி, துண்டுப்பிரசுரத்தைத் துண்டுதுண்டாகக் கிழித்து எறிந்தார். இந்த அழுத்தமான பதிலடியின் பின்னர் ஹிக்ஸின் ஆதரவாளர்கள் வாயை மூடிக் கொண்டார்கள்.

அடுத்தபடியாக மாற்றார்கள் வின்ஸ்டனைக் 'கட்சி மாறி' என்ற அடிப்படையில் தாக்கி வந்தார்கள். இதற்கும் வின்ஸ்டன்

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 93.

பலமுறை கட்சி மாறிய பெருமைபெற்ற ஜோசப் சேம்பர்லேனை அடையாளங்காட்டி, அவர்களின் வாயை அடைத்தார். அக் காலத்தில் தேர்தல் கூட்டங்களில் ஆண்கள் கூச்சலிடுவதும், குறுக்குக்கேள்விகள் கேட்பதும் சாதாரண நிகழ்ச்சியாகும். ஆனால், கீச்சுக்குரலில் காரிகைகள் கத்திக் குழப்பம் விளைவிப்பது ஒரு புதுமைக் காட்சியாக இடம்பெற்று வந்தது. கோரிக்கை ஊர்வலங்கள் நடத்துவதும், காமன்ஸ் அவை நோக்கிப் படையெடுப்பதும், தடுக்க முயலும் காவலர்களைத் தாக்குவதும், ஆர்ப்பாட்டம் செய்வதும், கடைகளின் கண்ணாடிகளை நொறுக்குவதும், அஞ்சல் பெட்டிகளுக்குள் திராவகம் ஊற்றுவதும் ஆகியற் வன்முறைச் செயல்களில் பெண்களும் ஈடுபட்டனரென்றால் நம்மால் நம்ப முடியவில்லை. 'ஆண்களைவிடப் பெண்களே ஆபத்தானவர்கள்' என்று ருட்யார்ட் கிப்ளிங் (Rudyard Kipling) ஒரு கவிதையே புனைந்தார். டெர்பியில் (Derby) ஓர் ஆர்ப்பாட்டக்காரி குதிரைகளுக்குமுன் பாய்ந்து குளம்படிபட்டு உயிர்த் தியாகமே செய்தாள்.

'வீட்டு வேலைகளை விட்டுவிட்டு இந்தப் பெண்கள் ஏன்தான் வன்முறைகளில் இறங்குகிறார்களோ?'[1] என்று ஆண்கள் அலுத்துக் கொண்டார்கள். இவற்றிற்குப் பயந்து இவர்களுக்கு வாக்குரிமை வழங்குவதில்லை என்றும் அவர்கள் சூளுரைத்தனர். 'சஃப்ரகேட்ஸ்' (Suffrageites) என்ற இந்தப் பெண் ஆர்ப்பாட்டக் காரர்களின் தேர்வு உரிமைக்காக வலிய முறைகளை வற்புறுத்துவோர்களின் வாக்குரிமைப் பிரச்சினையை லிபரல் கட்சியினர் ஆதரித்தார்கள். எனினும் அவர்களின் கூட்டங்களிலும் இவர்களின் வெறிச்செயல்கள் தொல்லைகள் விளைவித்தன. வின்ஸ்டன் 'சஃப்ரகேட்டுகளிடம்' அனுதாபம் கொண்டிருந்தாரேயன்றி உணர்ச்சி வயப்பட்ட உற்சாகம் கொண்டிருக்கவில்லை. வின்ஸ்டனின் தொகுதியான மான்ச்செஸ்டர் 'சஃப்ரகேட்டுகளின்' கோட்டையாகும். ஆனால், 1906ஆம் ஆண்டு பொதுத்தேர்தலில் இவர்களால் வின்ஸ்டனை ஒன்றும் செய்ய முடியவில்லை. ஒருமுறை பிரபல 'சஃப்ரகேட்டான' கிறிஸ்டாபெல் பாங்க்ஹர்ஸ்ட் (Christabel Pankhurst) என்பவளின் சகோதரியான சில்வியா, வின்ஸ்டனின் கூட்டத்தில் மேடைமீதேறிக் கேள்விகள்கேட்டாள். வின்ஸ்டன் அவற்றிற்குப் பதில் கூறும்வரையும் அவள் மேடைமீதே அமர்ந்திருக்க வேண்டியதாயிற்று. அவர் பதில் கூறும்போது சில்வியா குறுக்கிட்டாள். சில்வியா தமது சகோதரியின் பெயருக்குக் களங்கம் உண்டுபண்ணுகிறாள் என்றும் தாம்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 100.

என்றுமே பெண்கள் வாக்குரிமையைப் பலாத்காரத்தால் ஆதரிக்கப் போவதில்லை என்றும் வின்ஸ்டன் பதிலிறுத்தார்.

அடுத்த தேர்தலில் வின்ஸ்டன் தோல்வியுற்றபோது ஒரு 'சஃப்ரகேட்' வின்ஸ்டனிடம் வந்து 'உம்மைத் தோற்கடித்தது பெண்கள்தாம் தெரியுமா?' என்று ஏளனத்துடன் கூறினளாம். டண்டியில் ஒருமுறை வின்ஸ்டன் பேசிய கூட்டத்தில் ஒருபெண் கைம்மணியைக் கொண்டுவந்து ஆட்டிக்கொண்டு கலகம் விளைவித்தாள். வின்ஸ்டனும் இந்தப் பெண்கிளர்ச்சிக்காரர்களின் வெறியைத் தூண்டிவிடுவார். 'செருக்குமிக்க வின்ஸ்டனைச் சரியான இடத்தில் இருக்கச் செய்கிறோமா இல்லையா' என்று அவர்கள் கங்கணம் கட்டுவார்கள். இந்தச் 'சஃப்ரகேட்டுகள்' தாம் வின்ஸ்டனின் அரசியல் வாழ்வில் குறுக்கிட்ட எதிரிகளில் இரண்டாம் வகையினர். எனினும், அவர்களால் இவருடைய வாழ்க்கையின் முன்னேற்றத்தைத் தடுக்க முடியவில்லை. எனவே, வடமேற்கு மான்ச்செஸ்டர் தேர்தலை நாடு முழுவதுமே கவனித்துக் கொண்டிருந்தது.

மான்ச்செஸ்டரின் வளத்திற்கே தடையில்லா வாணிகம் அடிப்படையாக இருந்த காரணத்தால், லிபரல்களுக்கு அங்கே நல்ல ஆதரவு திரண்டது. தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்பட்ட போது, அங்குள்ள ஆறு இடங்களையும் லிபரல்கள் பிடித்துக் கொண்டதாகத் தெரிந்தது. பால்ஃபோர்கூடத் தோற்கடிக்கப் பட்டார். சர்ச்சில் கணிசமான அளவில் பெரும்பான்மை வாக்குகளைப் பெற்று வென்றார். மான்ச்செஸ்டரின் வெற்றி லிபரல்கள் பிரம்மாண்டமான வெற்றிபெறுவதற்கு உறுதுணையாக இருந்தது. முதல் பாராளுமன்றச் சீர்திருத்தத்தின் பின்னர் கன்சர்வேடிவ்கள் இம்முறை படுதோல்வி அடைந்தார்கள்.

'வின்ஸ்டன் தடையில்லா வாணிகக் கோட்டையான மான்ச் செஸ்டரில் பெற்ற வாக்குகளும், நாடு முழுவதும் லிபரல்கள் பெற்ற வெற்றியும் நமது காலத்திய தேர்தல் சாதனைகளின் அற்புதம்'[1] என்று பிரபல அரசியல் விமர்சகரான மாட்டிஸ் டோன் பிரபு (Lord Mottistone) குறிப்பிட்டார். தமது முப்பத் தோராம் வயதில் மூன்றாவது தேர்தலில் பங்குபெற்று வின்ஸ்டன் கண்ணியத்துடன் வெஸ்ட்மினிஸ்டருக்குத் திரும்பி, அறிவிற் சிறந்த மேதைகளுடன் அமைச்சரவையில் அமர்ந்தார். கேம்பெல் பானர்மேன் (Campbell Bannerman), ஹெர்பர்ட் ஆஸ்குவித்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 101.

(Herbert Asquith), சர் எட்வேர்ட் கிரே (Sir Edward Grey), லாயிட் ஜார்ஜ் (Lloyd George), ஜான் மோர்லி (John Morley), ஹால்டேன் (Haldane) ஆகியோருடன் பணிபுரியும் வாய்ப்பு வின்ஸ்டனுக்குக் கிடைத்தது. குடியேற்றங்களின் துணை அமைச்சர் பதவி அரசியல் அரங்கத்தில் முக்கியமானதாகக் கருதப்படாவிட்டாலும், வின்ஸ்டன் மற்றவர்களின் கவனத்தைக் கவரத் தவறவில்லை. தென் ஆப்பிரிக்கப் போர் முடிந்துவிட்டதால் அங்கு அமைதி நிலவுவதற்கான திட்டங்களை வகுப்பது குடியேற்றத் துறையின் பொறுப்பாக அமைந்தது. குடியேற்றத் துறை அமைச்சரான, முன்னாள் இந்திய வைஸ்ராய் எல்ஜின் பிரபு மேலவையில் இருந்ததால், வின்ஸ்டன் காமன்ஸ் அவையில் தென் ஆப்பிரிக்கப் பிரச்சினையைத் தமது அனுபவங்களின் அடிப்படையில் நல்ல முறையில் அணுகினார். தென்னாப்பிரிக்க அரசியலமைப்பு மசோதா படிப்படியாக அந்தக் குடியேற்றத்திற்கு சுயாட்சி நிறுவனங்களை வழங்கும் உரிமையை வாக்களித்தது. இருபதாண்டுகளின் பின்னர், இந்தியாவிற்குச் சுயாட்சி வழங்கப்படுவதை எதிர்த்த வின்ஸ்டன், 1906ல் தென்னாப்பிரிக்க சுயாட்சித் திட்டத்தை உளமார ஆதரித்தார். 'சிறைப்பட்டிருக்கும் நாட்டு மக்களின் தேசீய உணர்ச்சியை நசுக்குவது, பிரிட்டிஷ் அரசினரை ராணுவ வெறிகொண்ட வல்லாட்சியாளர்களாக உலகிற்குக் காட்டும்'[1] என்பது வின்ஸ்டனின் கொள்கை.

குடியேற்ற அமைச்சகத்தில் எல்ஜின் பிரபுவும் வின்ஸ்டனும் ஒருங்கிணைந்த கருத்துக் கொண்டிருக்கவில்லை. எல்ஜின் பிரபு சில முக்கிய அரசாங்க அறிக்கைகளை வின்ஸ்டனுக்குக் காட்டுவதுமில்லை, அவருடன் கலந்தாலோசிப்பதுமில்லை. எனினும் தென்னாப்பிரிக்கப் பிரச்சினைக்குத் தீர்வுகாணத் தன்னாலியன்ற உதவிகளைச் செய்ததுபற்றி வின்ஸ்டன் மனநிறைவு கொண்டார். தென்னாப்பிரிக்காவில் சீனத் தொழிலாளர்களைப் பயன்படுத்தும் ஒப்பந்தத்தைக் காமன்ஸ் அவையில் மாற்றுக்கட்சியினர் 'அடிமைத்தனம்' என்றழைத்தனர். இதற்குப் பதில் கூற வின்ஸ்டன் அழைக்கப்பட்டபோது, 'அடிமைத்தனம்' என்ற சொல், 'சொல் வழுக்கு' (Terminological inexactitude) என்னும் புதியதொரு சொற்றொடரைப் புனைந்து வின்ஸ்டன் புகழ்பெற்றார். இன்றும் அத்தொடர் வின்ஸ்டனின் பல சொற்களைப் போன்று வழக்கில் இருந்து வருகிறது.

1906ல் வின்ஸ்டன் கெய்சர் வில்லியத்தின் அழைப்பின் பேரில் ஜெர்மனிக்குச் சென்றார். அந்நாட்டின் படையமைப்பு

[1] Churchill—His Life and Times. Malcolm Thomson, p. 102.

களையும், அவர்கள் புதிதாக உருவாக்கியிருந்த துப்பாக்கிபோன்ற படைக்கலங்களையும் நேரில் கண்டறிந்தார். தாய்நாடு திரும்பிய வின்ஸ்டன் குடியேற்ற நாடுகளின் விவகாரங்களில் மும்முரமாக ஈடுபட்டார். பிரிட்டனுக்கும் பிரான்சிற்கும் இடையே நடைபெற்ற 'நேச நாடுகளின் உடன்படிக்கை' பற்றிய பாராட்டு விழாவில் வின்ஸ்டன் தமது ஜெர்மன் அனுபவங்களைப் பற்றி விரிவாகக் குறிப்பிட்டார். சோஷியலிசத்தைப்பற்றி அவர் கொண்டிருந்தஎண்ணம்ஆங்கிலேயர்களின்மரபொழுக்கங்களைப்பின்பற்றியிருந்தது. 'லிபரல்கட்சி ஒன்றுதான் நாட்டில் முன்னேற்றத்தை நிலைநாட்டக் கூடிய கருவி' என்பது வின்ஸ்டனின் கருத்தாகும். இந்நாட்களில் அவர் சர். ஜான் ஃபிஷரின் (Johnfisher) நட்பைப் பெற்று அவரிடமிருந்து கடற்படைபற்றிய பல விவரங்களைத் தெரிந்துகொண்டார். எட்வேர்டு அரசர் அவர்கள் இருவரையும் 'கணமும் பிரியாது களிக்கும் இருவர்' என்று குறிப்பிட்டார். தென்னாப்பிரிக்காவின் டிரான்ஸ்வால் நாட்டுப் பிரதமரான ஜெனரல் போதா ஒரு விருந்தில் ரேண்டால்ஃப் சீமாட்டியாரைச் சந்தித்தபோது' நானும் தங்கள் மகனும் எல்லா விதமான பருவங்களுக்கும் பழக்கப்பட்டவர்கள்' என்று பெருமையோடு கூறினராம்.

### வர்த்தகக் குழுவின் தலைவர்

1908ஆம் ஆண்டு பிரதமர் பானர்மேன் பிணியுறவே ஆஸ்குவித் தலைமையில் புதிய அமைச்சரவை பதவி ஏற்றது. ஏற்கெனவே பிரிவிகவுன்சிலராக (Privy Council) இருந்த வின்ஸ்டன் வர்த்தகக் குழுவின் தலைவராக அமைச்சரவையில் இடம்பெற்றார். சொந்த ஆற்றல்களினாலும், தகுதியாலும், முப்பத்தினான்காம் வயதில் அரசியலில் அமோக வெற்றி பெற்றதைப்பற்றி வின்ஸ்டன் தம்மைப் பாராட்டிக்கொண்டு பெருமைப்பட முடியும். அவர் ஏழாண்டுகள் பாராளுமன்றத்திலும், நான்காண்டுகள் லிபரல் கட்சியிலும் கழித்திருந்தார். அதற்குள் நாட்டிலேயே அவர் தலைசிறந்த பேச்சாளராகவும், லிபரல் கட்சியின் சொத்தாகவும் ஒப்புக் கொள்ளப்பட்டு விட்டார். இந்த உயர் பீடத்தில் நின்று கொண்டுதான் உலகத்தைச் சுற்றி வின்ஸ்டன் தமது கண்ணோட்டத்தைச் செலுத்தினர். அதிர்ஷ்ட தேவதை அவரைப்பார்த்துப் புன்முறுவல் செய்தாள்.

வர்த்தகக் குழுவின் தலைமைப்பதவியை வின்ஸ்டன் ஏற்ற சின்னாட்களில் மீண்டும் தேர்தல் வரவே பழைய போட்டியாளர் ஜாய்ன்சன் ஹிக்ஸை அவர் எதிர்த்துப்போட்டியிட வேண்டியதாயிற்று. ஏற்கெனவே அமைச்சராக இருக்கும்தம்மை எதிர்த்து

ஒருவர் போட்டியிடுவதைப்பற்றி வின்ஸ்டன் அஞ்சவில்லை. முக்கியத்துவம் பெற்ற ஒரு துறையின் பணிகள் தடைப்படக் கூடாதென்பதற்காக இந்தச் சவாலை ஏற்றுப் போராடத் துணிந்தார். ஜாய்ன்சன் ஹிக்ஸ் லிபரல் அமைச்சரவையின் குறைகளைச் சுட்டிக்காட்டி, 'அவர்கள் குடியேற்றங்களுடன் பகையை வளர்த்தார்கள், கடற்படையைப் புறக்கணித்தார்கள், வரிப்பளுவை உயர்த்தினார்கள், சமய நம்பிக்கைகளைக் குலைத்தார்கள், அயர்லாந்தில் குழப்பத்தையும், கொலைகளையும் செய்தார்கள்'[1] என்றெல்லாம் குற்றச்சாட்டுகளைக் கூறினார். மிகவும் விறுவிறுப்பான போரட்டமாக இத்தேர்தல் இருந்தது. கூட்டங்களில் ஏற்பட்ட குழப்பங்களால் பலதடவைகளில் மோதல்கள் ஏற்பட்டன.

லாயிட் ஜார்ஜ் தம் சகாவுக்காக மான்ச்செஸ்டரில் வந்து பிரசாரம் செய்தார். 'வர்த்தகக் குழுவின் தலைவர் தமது பதவியைப் பாதுகாத்துக்கொள்ள முடியாத நிலையில் நிதி அமைச்சரே வந்து அவருக்காக வக்காலத்து வாங்குவது விந்தையிலும் விந்தை' என்று பிணியுடன் கிடந்த பால்ஃபோர் அறிக்கையொன்றில் வெளியிட்டார். 'சஃப்ரகேட்டுகள்' மீண்டும் வின்ஸ்டனுக்குத் தொல்லை கொடுத்தார்கள். கிறிஸ்டபெல் பாங்க்ஹர்ஸ்ட் பெண்கள் வாக்குரிமை பற்றிய மசோதா வேண்டுமென்று விடாப்பிடியாய்க் கோரினர். தாம் அவர்களின் நண்பன் என்றும், தம்மால் கூடியதெல்லாம் செய்வதாகவும் வின்ஸ்டன் வாக்களித்தும்கூட 'சஃப்ரகேட்டு'களின் ஆதரவு அவருக்குக் கிடைக்கவில்லை. 492 வாக்குகளில் வின்ஸ்டன் தேர்தலில் தோற்றார். வின்ஸ்டனின் தோல்வியைக் கன்சர்வேடிவ்கள் விழாவாகக் கொண்டாடினார்கள். அமைச்சரவையே வீழ்ந்திருந்தாலும் கூட அவர்கள் அத்தனை மகிழ்ச்சி கொண்டிருக்கமாட்டார்கள். வழக்கமாக நிதானப்போக்குடைய 'டெய்லி டெலிகிராப்' ஏடு கூட 'வின்ஸ்டன் வெளியேற்றப்பட்டார். இதனை விவரிக்க எங்களுக்குச் சொற்கள் கிடைக்கவில்லை' என்று எழுதியது.

1906ல் பெரும் தேர்தல் சாதனையைப் புரிந்தவராகப் புகழ்ந்து பாராட்டப்பெற்ற வின்ஸ்டன் ஈராண்டுக் காலத்தில் தோற்கடிக்கப்பட்டதேன்? காமன்ஸ் அவையில் அவரது சாதனைகளும், அவரது முற்போக்குக் கொள்கைகளும், தடையில்லா வாணிகத்தில் உறுதியும், துணை அமைச்சராகப் புரிந்த பணியும், எல்லாம் சிறப்பாக அமைந்திருந்தும் அவர் வீழ்ச்சியுற்றதற்குக் காரணங்கள் இருந்தன. 'வின்ஸ்டனிடம் கொள்கைகள் இல்லை;

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 105.

சந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி கண்டவர்களுடனெல்லாம் பேரம் பேசினரேயன்றி, தமது அரசியல் மனச்சாட்சியை அவர் சிறிது கூட அலசிப்பார்க்கவில்லை'[1] என்று அவரது சகாவான ஜான் மோர்லி குறிப்பிடுகிறார். பிறரின் கருத்துகளுக்கு மதிப்புத் தராதது வின்ஸ்டனின் குறைகளில் ஒன்றெனப் பலர் குறிப்பிட்டுள்ளார்கள்.

சர்ச்சிலின் அரசியல் முன்னேற்றத்தில் ஏற்பட்ட தடை தற்காலிகமானதே. அவர் தோல்வியுற்ற அதேநாளில் வடக்கே ஸ்காட்லாந்தின் டண்டித் தொகுதியில் போட்டியிடுமாறு அழைப்பு வந்தது. ஏழாயிரம் வாக்குகளில் கன்சர்வேடிவ், சோஷியலிஸ்ட் வேட்பாளர்களைத் தோற்கடித்து வர்த்தகக் குழுவின் தலைவர் தமக்கு ஏற்பட்ட இழிவை நீக்கினார். இதனைத் தொடர்ந்து மீண்டும் ஈராண்டுக்காலம் வர்த்தகக் குழுவின் பணி தொடர்ந்தது. அதுகாலை அவர் கொண்டுவந்த சட்டங்கள் நாட்டின் வாழ்க்கை முறையில் முக்கிய மாற்றங்களை ஏற்படுத்தின. இன்று, தேசீய நிறுவனமாக நின்று பொலிவுறும் தொழிலாளர் நல நிலையங்கள் வின்ஸ்டன் படைத்தவை. இதனால் அக்காலத்தில் அசுரப் பிரச்சினையாக உருவெடுத்த வேலையில்லாத் திண்டாட்டத்தை ஓரளவு சமாளிக்க முடிந்தது.

தொழிலாளர்களுக்குக் குறைந்த வேலை நேரம், கல்வி வசதி, ஓய்வு முதலியவை மதுத்தீமையைக் குறைக்கும் என்று வின்ஸ்டன் நம்பினர். ஜெர்மனியில் அமலில் இருந்த தொழிலாளர் ஈட்டுறுதித் திட்டத்தையும் இங்கிலாந்தில் செயல்படுத்த அவர் லாயிட் ஜார்ஜுடன் சேர்ந்து முயற்சி செய்தார், மிக வருந்தி உழைக்கும் தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்துவதையும் அவர் தடைசெய்தார். இலண்டன் துறைமுகக் காப்புக் கழகத்தை (Port of London Authority) நிறுவவும் அவர் சட்டம் கொண்டு வந்தார். போராடித் தீர்க்கவேண்டிய பல பிரச்சினைகளை வின்ஸ்டன் வெகு சாதுர்யமாகக் கையாண்டு நல்ல பல சாதனைகளைப் புரிந்தது போற்றத் தக்கது.

### மணவாழ்வு மகத்தான வெற்றி

1908ஆம் ஆண்டு செப்டம்பரில் வின்ஸ்டன் தமது வாழ்க்கையின் முக்கியமான முடிவு ஒன்றினைச் செய்தார். கர்னல் ஹோஷியர் (Colonel Hozier), பிளான்சே ஹோஷியர் சீமாட்டி (Lady Blanche Hozier) தம்பதிகளின் அருஞ்செல்வமான செல்வி

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 112.

கிளெமென்டென் ஹோஷியர் (Clementine) என்ற அழகிற்சிறந்த ஆரணங்கை வின்ஸ்டன் மணம் முடித்தார். திருமணம் வெஸ்ட் மினிஸ்டரிலுள்ள செயின்ட் மார்க்கிரட் தேவாலயத்தில் இனிதே நடந்தேறியது. அவ்வாண்டின் மிகச்சிறந்த சமூக நிகழ்ச்சிகளில் ஒன்றான இத் திருமணத்தில், வின்ஸ்டனின் பழைய அரசியல் தோழரான ஹியூ சிசில் பிரபு மணமகன் தோழனாக இருந்தார். இந்த இளந்தம்பதிகளின் திருமணம் இருபதாம் நூற்றாண்டில் அகில இங்கிலாந்திலும் நடைபெற்ற திருமணங்களில் மிகச் சிறந்த வெற்றித் திருமணமாக வரலாற்றில் இடம் பெற்றது.

பிற காரியங்களில் ஆத்திரப்படும் வின்ஸ்டன் திருமண விஷயத்தில் தமது முப்பத்தினான்காம் ஆண்டு வரை காத்திருந்தார். '1908ஆம் ஆண்டு செப்டம்பரில் நாங்கள் மணமுடித்துக் கொண்டு அதுமுதல் மகிழ்ச்சியாக வாழ்ந்து வருகிறோம்'[1] என்று வின்ஸ்டன் இருபத்திரண்டு ஆண்டுகளின் பின்னர் தமது வாழ்க்கை வரலாற்றில் பெருமிதத்துடன் குறிப்பிட்டார். மங்கள கரமான மணவாழ்க்கை அநேகரின் அரசியல் வாழ்விற்கு முக்கிய மான அடிப்படையாகும். சோகத்தைச் சொல்லிக் கவிஞர்கள் கவிதைகள் புனையலாம். ஆனால், பொதுவாழ்வில் ஈடுபடும் பெரு மக்களுக்கு மணவாழ்க்கையின் மகிழ்ச்சிதான் வெற்றியின் அடிப் படையாகும். அரசியல் வாழ்க்கையின் மேடுபள்ளங்களை, இன்பதுன்பங்களைப் பகிர்ந்துகொள்ள ஓர் இல்லத்தரசி தேவைப் படுகிறாள். எந்தச் சூழ்நிலையிலும் உறுதுணையாக இருக்கும் மனைவி இல்லறம் நடத்தும் இல்லத்தில் அமைதி நிலவவேண்டும். இவ்வாறே மேரி கிளாட்ஸ்டன் தம் கணவரின் நீண்ட அர சியல் வாழ்விற்குத் தூண்போல் நின்று உதவினாள். பால்மர்ஸ் டனை (Palmerston) எதிர்த்து வந்த எத்தனையோ சோதனைகளில் எமிலி அவருக்கு உறுதியுடன் உதவினாள். கிளமென்டென் நடத் திய மனைமாட்சிக்கு, அவளது கணவன் மட்டுமல்லர், நாடே கடமைப்பட்டுள்ளது. வின்ஸ்டனின் மனைவி அவருக்கு ஆறு தலும், ஆதரவும் அளித்தார். அவள் படைத்த இல்லறத்தில் பொதுவாழ்வில் புயல் அடித்த காலையிலும் அமைதியும், அழகும் விளங்கின. எந்தச் சூழ்நிலையிலும் கிளமென்டென் தனது நிதா னத்தை இழக்கவில்லை.

'இளம் வயதில் வெற்றிகரமாக அமைச்சர் பதவியை வகித் துக்கொண்டு, அழகும் கவர்ச்சியுமுள்ள அருமை மனைவியையும் பெற்று, மகிழ்ச்சிகரமான மணவாழ்க்கையில் ஈடுபடும் ஒருவர்,

[1] My Early Life—W. Churchill, p. 115.

உலகத்தை எதிர்த்து நிற்பதும், தம் தந்தையை இழிவுபடுத்திய ஒரு சிலருக்குப் பாடம் கற்பிப்பதும்தாம் தம் வாழ்க்கையின் உன்னத இலட்சியம் என்று எண்ணக்கூடும். ஆனால், காலப் போக்கில், பதவிகள் உயரவே வின்ஸ்டனின் வெறுப்புணர்ச்சியும், பகைமையும் படிப்படியாக மறைந்து பொறுப்புணர்ச்சியே மேலோங்கி நின்றது' என விண்டர்டன் கோமகன் (Earl Winterton) குறிப்பிடுகிறார். 'வர்த்தகக் குழுவின் தலைவராக வின்ஸ்டன் ஆற்றிய பணி அவர் மேலும் உயர் பதவிகள் பெற வழிவகுத்ததோடு, பாராளுமன்றத்தில் அவரது தகுதியையும் உயர்த்தியது. இத்தகைய தகுதியின்றி எந்தப் பிரதமரும் துணை அமைச்சருக்குப் பதவி உயர்வு அளிக்கமாட்டார்'[1] என்பது கை ஈடன் (Guy Eden) என்பவரின் கருத்தாகும். வின்ஸ்டன் 1901 முதல் 1911ஆம் ஆண்டுகளில் மிகத் தீவிரவாதியாகத் திகழ்ந்தார். பாராளுமன்றத்திலும், வெளியிலும் அவருக்கு எதிரிகள் உருவாகி வந்தனர். எனினும், சர்ச்சிலின் ஆற்றல்களும் கடின உழைப்பும் அவருக்குப் பதவிமேல் பதவியும், பொறுப்புகள் பலவற்றையும் சுமத்தின.

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 106.

# 5. சர்ச்சிலும் சமூக சீர்திருத்தமும்

வின்ஸ்டன் சர்ச்சில் தீவிரவாதிகளுக்குள் தலையாய தீவிர வாதியாகத் திகழ்ந்தார். அமைதியற்ற அவரது இயல்பின் வேகத்துடன், அவரது கட்சி மாற்றம் முற்போக்குக் கொள் கையின் ஒருகோடிக்கே அவரை இழுத்துச் சென்றது. இவ்வாறு பலதரப்பட்ட அவரது இயல்பின் அடித்தளத்தில் அவரது சகிப்புத் தன்மையும், ஒடுக்கப்பட்டவர்களின்பால் பரிவுணர்ச்சியும், கோரிக்கைகளை எதிர்த்து நிற்கும் துணிவும், தனி மனிதனின் தகுதியில் அவர் கொண்டிருந்த நம்பிக்கையும் அவரது அமைச்சர் பதவியின் தொடக்க காலத்தில் அவரை ஒரு லிபரல் அரசியல் வல்லுநராக 'ஆக்கின' என்று வைகவுண்ட் சைமன் (Viscount Simon) கூறுவது எவ்வளவு உண்மை! இந்த விரிநோக்கும், முற்போக்குக் கருத்துகளும் சர்ச்சிலின் விவாதத் திறமையுள்ள உரைகளில் நன்கு அமைக்கப்பட்டுப் பிறருக்கு வழங்கப்பட்டன.

சர்ச்சிலே கூறுவது, 'லிபரலிசக் கொள்கைக்குத் தனி யான வரலாறும், மரபுகளும் உண்டு. சோஷியலிசம் செல் வத்தை அழிக்க முயல்கிறது. லிபரலிசமோ வறுமைக்கு உயர்வு காண விழைகிறது. சோஷியலிசம் தனிநபர் முனைப்புகளுக்குக் குழிபறிக்கிறது. லிபரலிசமோ தனிநபர் முயற்சிகளைத் தனி உரிமை, தனிச்சலுகை ஆகியவற்றிலிருந்து விடுவித்து அதற்கு ஆக்கம் அளிக்கும். சோஷியலிசம் ஆள்வோரை உயர்த்துகிறது. லிபரலிசமோ மனிதனைப் போற்றுகிறது.'[1] இதைவிடத் தெளி வாக எந்த முற்போக்கு வாதியும் லிபரல் கொள்கைகளை விளக்க முடியாது. இவை 1908ஆம் ஆண்டு டண்டி தேர்தலில் சர்ச்சில் கூறிய மொழிகள்.

லிபரல் கொள்கைகளை வின்ஸ்டனிடம் வளர்த்ததில் இரு பெரும் தலைவர்களுக்குப் பங்கு உண்டு. அவர்களில் ஒருவர்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 103.

ஜான் மோர்லி. மற்றவர் லாயிட் ஜார்ஜ். அமைச்சரவைக் கூட்டங்களில் சர்ச்சிலும், மோர்லியும் ஒன்ருக அமர்ந்திருப் பார்கள். செயல் வீரர் ஒருவரும், தத்துவமேதை ஒருவரும் கொண்டிருந்த விந்தையான உறவு இது. இருவருக்கும் வயது வேற்றுமை அதிகமிருந்தது. கருத்து வேறுபாடுகளும் இல்லாமல் இல்லே. 'தந்தைக்குரிய பரிவுடன் வின்ஸ்டன்மீது அக்கறை கொண்டிருப்பதாக' ஒருமுறை மோர்லி குறிப்பிட்டார். வின்ஸ் டன் லாயிட் ஜார்ஜ் நட்புறவு வின்ஸ்டனின் மனப்போக்குகளே உருவாக்குவதில் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தது. காமன்ஸ் அவையில், 'வின்ஸ்டன் முதல் உரை ஆற்றிய நாளிலிருந்தே இந்த இருபெரும் தலேவர்கள் நண்பர்களாயினர். வின்ஸ்டன் கட்சி மாறியபோது, லாயிட் ஜார்ஜின் அருகில் சென்று அமர்ந் தார். தொடர்ந்து நாற்பதாண்டுகள் அவர்களின் நட்பு நிலே பெற்று நின்றது.

பிலிப்பு குடாலா (Philip Guedalla) கூறுவதுபோல், 'அவர்கள் இருவருக்கும் இடையில் ஒற்றுமைகளும் வேற்றுமை களும் பல இருந்தன. இருவரிடமும் துணிவும், வலிமையும் உண்டு. இருவரும் தம் முயற்சியால் வாழ்வில் உயர்ந்தவர்கள். இருவரும் வைதீகக் கொள்கைகளுக்கு எளிதில் பணிந்துவிடுகிற வர்கள் அல்லர்'[1] அவர்களில் ஒருவர் 'ஜான் புல்லின்' (John Bull) அப்பட்டமான நகல். மற்றவர் அப்பழுக்கற்ற கெல்டு வாசி. இருவரிடமும் எல்லேயற்ற ஊக்கமும், முனேப்பும், கூர்மை யான அறிவும், கவர்ச்சியான நாவன்மையும், இறுதிவரை போராடும் விடாமுயற்சியும் இருந்தன. இவர்கள் இருவரும் சமூக சீர்திருத்தத்தில் ஈடுபடக் காரணம் அவர்கள் சாமான்ய மக்களிடம் கொண்டிருந்த கருணே உள்ளமேயாகும்.

பெருங்குடியில் பிறந்து, கோமகன்கள் வாழும் கோபுரமான பிளென்ஹிம் வழியாக உலகத்திற்கு வந்த ஒருவர் ஏழைகள்பால் பரிவுகொள்ளும் சமூக சீர்திருத்தவாதியாக எப்படி மாறினுர் என்பது பலருக்குப் புரியாத புதிராக இருக்கலாம். வின்ஸ்டன் வாழ்க்கையின் தொடக்க காலத்திலும் உழைத்து உருக்குலேயும் தொழிலாளர்களுடனே, வறுமையில் வாடி வதங்கும் ஏழை களுடனே தொடர்புகொண்டவர் அல்லர். ஆனுல், லாயிட் ஜார்ஜின் கதை அப்படியன்று. சமுதாயத்தின் அடிமட்டத் திலிருந்த மக்களின் வாழ்க்கையை ஜார்ஜ் நன்கறிந்தவர். பட்டினி கிடக்கும் பாட்டாளிகளேயும் அரைவயிறு நிரம்பாத

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 104.

அபலைக்குடும்பங்களையும் அவர் நன்கறிவார். குடும்பங்களுக்கு அடுக்கடுக்காகத் தொல்லைதரும் சோகக் கதைகளான பிணி, சாக்காடு, மூப்பு, வேலையின்மை, அடகுக்கதை, தொழிலகங்கள், இன்னோரன்ன வாழ்வின் மேடுபள்ளங்களெல்லாம் அவருக்குத் தலைகீழ்ப் பாடம். அல்லல்படும் அனாதைகளுக்காக, ஆதரவற்ற அபலைகளுக்காகப் போராடும் பணி, லாயிட் ஜார்ஜின் அரசியல் வாழ்வின் இலட்சியமாகக் கொழுந்துவிட்டு எரியத் தொடங்கியது. எனவே, உதவி வேண்டும், வறியவர், பிணியுற்றோர், முதியவர் ஆகியோருக்குப் பணிபுரியும் மாறாத கொள்கையுடன் தம் வாழ்நாளை லாயிட் ஜார்ஜ் அர்ப்பணித்தார். இந்த வேல்ஸ் நாட்டு வழக்கறிஞரின் மனிதாபிமான உள்ளம், உயர் குடியாளர் வின்ஸ்டனைக் கவர்ந்திருந்ததில் வியப்பில்லை.

### சரிநிகர் சமானமாக வாழ்வோம்

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இங்கிலாந்து முழுவதிலுமே சீர்திருத்த உணர்வு பொங்கி வழிந்துகொண்டிருந்தது, முன்னேற்றப் பாதையில் மேலும் ஓர் அடியெடுத்து வைக்க நாடு தயாராக இருந்தது. அதற்கான காலமும் கனிந்திருந்தது. சமூகத் துலாக்கோலின் இருமுனைகளுக்கும் இடையே நிலவிய ஏற்றத்தாழ்வினைக் கண்டு நாட்டின் மனச்சான்றே வெட்கித் தலைகுனிந்தது. இருபதாண்டுகள் பதவியில் இருந்த லிபரல்கள் சீர்திருத்தத் திட்டங்களைக் கொண்டுவர ஆவலாயிருந்தனர். இந்த நாள்களில்தாம் பொதுநலம் நாடும் அரசின் அடித்தளங்கள் அமைக்கப்பட்டன வென்றாலும், கன்சர்வேடிவ் பிற்போக்குவாதிகள் சீர்திருத்தங்களை வன்மையாக எதிர்த்து வந்தனர். தனிச்சலுகைகள் பெற்றுச் செல்வத்தைத் திரட்டி வைத்திருந்த பிற்போக்குவாதிகள், நிலைநாட்டப் பெற்றிருந்த சமூக அமைப்பை மாற்றுவதை விரும்பவில்லை. பிரபுக்கள் சபையின் மூலமாக டோரிகள் சட்டங்களைத் தடுத்துவிடக்கூடிய உரிமையைப் பெற்றிருந்தார்கள். காமன்ஸ் அவை வழியாக லிபரல்கள் சட்டங்களை இயற்றினால், அவை மேலவையினால் நிராகரிக்கப்படும். இத்தகைய முட்டுக்கட்டையினால் லிபரல்கள் நீண்டகாலமாகத் தொல்லைப்பட்டு வந்தனர். தீவிரவாதிகள் பிரபுக்களைக் கண்டனம் செய்தனர். ஆனால், பிரபுக்களோ லிபரல்கள் கொண்டுவரும் தவறான, புரட்சிகரமான சீர்திருத்தங்களிலிருந்து நாட்டைக் காப்பாற்றுவது தங்களின் கடமை என்று கூறி வந்தனர்.

லிபரல்களின் சார்பில் வின்ஸ்டன் சீர்திருத்தக் கொள்கைகளைப் பிரச்சாரம் செய்து வந்தார். 'எல்லாரும் சமநிலையில்

இருக்க வேண்டுமென்பது எங்கள் வாதமன்று. நாட்டு மக்கள் யாவரும் ஓரளவு அடிப்படை வசதிகளைப் பெறும் அளவிற்காவது பொருள் படைத்தவர்கள் தியாகம் செய்யவேண்டும் என்பதே எங்களின் கொள்கை'[1] என்று அவர் வலியுறுத்தி வந்தார். 1906 முதல் 1911ஆம் ஆண்டு வரை வின்ஸ்டன் சமூக சீர்திருத்தப் போராட்டத்தின் முன்னணியில் நின்றார். லாயிட் ஜார்ஜும், வின்ஸ்டனும் டோரிகளின் சவாலை ஏற்றனர். பிரபுக்கள் அவையினரின் ரத்து அதிகாரத்தைப் பறிமுதல் செய்ய வேண்டும் என்பது அவர்களின் விருப்பம். மக்களின் உரிமைகளை வேண்டுமென்றே தடை செய்து, சட்டத்தைத் தவறாகப் பயன் படுத்துகிறவர்கள் என்ற முறையில் பிரபுக்களை மக்கள்முன் நிறுத்துவதற்கு வழி தேடிக் கொண்டிருந்தனர். காமன்ஸ் அவையில் லாயிட் ஜார்ஜ் பிரபுக்களை மறைமுகமாகத் தாக்கி, அவர்களின் சட்டமியற்றும் அதிகாரத்தைக் கேலி செய்தார். கோமகன் குடியைச் சேர்ந்த வின்ஸ்டனுக்கு இவையெல்லாம் சற்றுச் சங்கடமாக இருந்தாலும், அவரிடம் அரசியல் தோழமையும் முற்போக்கு உணர்வுகளும்தாம் மேலோங்கி நின்றன. சில உயர்குடியாளர்கள் வின்ஸ்டனின் 'குலத்துரோகத்தை' மன்னிக்கவில்லை. வீட்டில் முரண்டுபிடிக்கும் குழந்தைகளை அச்சுறுத்துவதற்குக்கூட லாயிட் ஜார்ஜின் பெயரை உயர்குடி வட்டாரங்கள் பயன்படுத்தினவாம்.

லிபரல்கள், பிரபுக்களுடன் இருமுனைப் போராட்டத்தைத் தொடங்கினார்கள். ஒன்று, மக்களின் வரவு செலவுத் திட்டத்தை நிறைவேற்றுவது. அடுத்தது, பிரபுக்களின் ரத்து அதிகாரத்தை நீக்குவது. நிதி அமைச்சர் என்ற முறையில் வரவுசெலவுத் திட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம் பிரபுக்களைத் திணறடிப்பது லாயிட் ஜார்ஜின் நோக்கமாகும். பண மசோதாக்களைப் பொறுத்தவரையில் பிரபுக்கள் அவையின் அதிகார வரம்பிற்கு உட்பட்டவை. வரவுசெலவுத் திட்டத்தைத் தூண்டிலாகப் போட்டு டோரி மீன்களைக் கவரப் பார்த்தார் லாயிட். முதியோர் ஓய்வூதியம் அளிக்கும் நோக்கத்துடன் வருமான வரியை ஒரு ஷில்லிங்கு ஒன்பது பென்சாக உயர்த்தி, அதனை நிதி மசோதாவில் சேர்த்தார். மக்களின் வரவுசெலவுத் திட்டமாகக் கொடுக்கப் பட்ட இந்த மசோதாவை டோரிகள் 'கொள்ளை, கொள்ளை' என்று கத்தி எதிர்த்தனர். எதிர்பார்த்தபடியே டோரி பிரபுக்கள் வரவுசெலவுத் திட்டத்தை நிராகரித்தனர்.

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 106.

இதனைத் தொடர்ந்து பெரிய அரசியல் பூசல் உருவாகியது. பிரதமர் ஆஸ்குவித் அரசியல் அமைப்பை அழிக்கப் பார்க்கிறவர்களை வன்மையாகக் கண்டித்தார். லாயிட் ஜார்ஜும், சர்ச்சிலும் பிரபுக்களைத் தனிப்பட்ட முறையில் தாக்கத் தொடங்கினர். வேல்ஸ் நாட்டுச் செருப்புத் தொழிலாளியின் மருமானும், இங்கிலாந்தின் கோமகன் ஒருவரின் பேரனும் தனி உரிமைகள் கோரும் பெருங்குடிமக்களை எதிர்ப்பதில் ஒன்றுபட்டு நின்றனர். பிரபுக்கள் தங்களின் 'இழிவான மகிழ்ச்சியற்ற ஆடம்பரங்களைப்' பாதுகாக்க விரும்புவதாகக் குற்றஞ்சாட்டப்பட்டனர். நிகழ்ச்சிகள் திசைமாறுவதைக் கண்டு லாயிட் ஜார்ஜும், சர்ச்சிலும் அளவில்லா மகிழ்ச்சி கொண்டனர். பிரபுக்கள், 'மக்களின் வரவுசெலவுத் திட்டத்தைப்' புறக்கணித்தது, அவர்கள் எதிர்பார்த்த வாய்ப்பை வழங்கியது. பொதுத்தேர்தல் அறிவிக்கப்பட்டது. மக்களுக்கும், மக்களை எதிர்க்கும் பிரபுக்களுக்கும் இடையே போராட்டம் தொடங்கியது. தேர்தல் முடிவில் லிபரல்கள் வெற்றி பெற்றனர். ஆனல், அவர்களின் பெரும்பான்மை குறைந்தது. காமன்ஸ் அவையில் பிரபுக்கள் அவையின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்தும் மசோதா அவசரக் கோலமாகக் கொண்டுவரப்பட்டது. பிரபுக்கள் அதனை நிராகரித்தனர். ஒரே ஆண்டில் மீண்டும் தேர்தல் நடைபெற்றது. லிபரல்களே வெற்றி பெற்றனர். ரத்து மசோதா மறுமுறையும் கொண்டு வரப்பட்டது. பிரபுக்கள் மீண்டும் அதனை நிராகரித்தனர். அரசர் பிரபுக்களை நிராகரித்து மசோதாவை நிறைவேற்றுவார் என்று ஆஸ்குவித் எச்சரித்தார். விடாக்கண்டர்களான டோரிகள் இறுதிவரை போராட வரிந்து கட்டினுர்கள். அதற்குள் நல்லெண்ணம் கொண்ட பெருமக்கள் சமரச ஏற்பாடுகளை மேற்கொள்ளவே, மசோதா நிறைவேற்றப்பட்டது. பிரபுக்கள் அவை ரத்து அதிகாரத்தை இழந்தது.

இந்த அரசியல் சலசலப்பில் வின்ஸ்டன் சர்ச்சில் முன்னணியில் நின்றுர். அவர்தம் பேச்சுகள் அரசரின் வெறுப்பை உண்டாக்கும் வரையும் அவரை ஒரு பொருட்டாகக் கருதவில்லை. பிரதமர் ஆஸ்குவித் வின்ஸ்டனுக்கு முழு ஆதரவளித்தார். அதுகாலை பாராளுமன்றத்தில் வின்ஸ்டனும், எஃப். ஈ. ஸ்மித்தும் (F. E. Smith) தாம் முக்கிய பேச்சாளர்களாகத் திகழ்ந்தனர். அவையில் போராடும் வேங்கைகளாக விளங்கிய அவர்கள் இருவரும் வெளியில் உயிருக்குயிரான நண்பர்களாக இருந்தனர். இந் நாள்களில் வின்ஸ்டன் நாட்டில் மிகவும் வெறுக்கப்பட்ட அரசியல் வாதியாகக் கருதப்பட்டார். கன்சர்வேடிவ் கட்சியினர் அவர்மீது தனிப்பட்ட பகை கொண்டிருந்தார்கள். வின்ஸ்டனும்

எதிரிகளின் வெறுப்புணர்ச்சிகளைத் தமது குத்தலான பேச்சுகளால் எண்ணெயூற்றி வளர்த்து வந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

### ஒடுக்கப்பட்டவருக்காக உயிரையும் கொடுப்பேன்

வின்ஸ்டன் தம்மை இங்கிலாந்தின் ஏழைகள் நலத்தில் அக்கறை கொண்ட பேரரசுவாதி என்று கூறிக்கொண்டார். 'ஒடுக்கப்பட்டவர்களின் வாழ்கைத்தரம் உயரவும், அவர்கள் வாழ்வு பெறவும் எனது உயிரையும் கொடுப்பேன். இதற்காகவே நான் சம்பளம் பெறுகிறேன்'[1] என்று அவர் வலியுறுத்திக் கூறினார். சமூக சீர்திருத்தம் பற்றிய மசோதாக்கள் ஒன்றன்பின் ஒன்றாக நிறைவேற்றப்பட்டன. ஓய்வு ஊதியம், ஈட்டுறுதி, பள்ளி உணவு போன்ற சீர்திருத்தத் திட்டங்கள் இயற்றப்பட்டன. இவற்றிற்குப் போதிய நிதி வேண்டும். வின்ஸ்டன் லாயிட் ஜார்ஜின் வரவுசெலவுத் திட்டத்தை வன்மையாக ஆதரித்தார். 'வரவுசெலவுத் திட்டக் கழகம்' (Budget League) ஏற்படுத்தப் பட்டபோது வின்ஸ்டன் அதன் தலைவரானார். அதுபற்றிய அவர்தம் பேச்சுகளைத் திரட்டி 'த பீப்பிள்ஸ் ரைட்ஸ் (The Peoples' Rights) என்ற தொகுப்பாக வெளியிட்டார்கள். இவை யாவும் கன்சர்வேடிவ்களின் தாக்குதலுக்கு வின்ஸ்டனை இரையாக்கின. ஆனால், அவரது முன்னேற்றம் தடைப்படவில்லை. மதிப்பும், மரியாதையும், பதவி உயர்வும் அவரைத் தேடிவந்தன. 1910ஆம் ஆண்டில் பிரதமர் ஆஸ்குவித் வின்ஸ்டனை அயர்லாந்து நாட்டு அமைச்சர் பதவியை ஏற்றுக்கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார். அதனை மறுத்துவிட்டு உள்துறை அமைச்சர் பதவியை ஏற்றுக்கொள்ள விரும்பினார்.

வின்ஸ்டன் உள்துறை அமைச்சர் பொறுப்பை ஏற்பதற்கு முன்னர் தந்தையாரைப்போல் சில பொருளாதாரத் திட்டங்களைச் செயல்படுத்த முயன்றார். நிதி அமைச்சருடன் அவர் கொண்டிருந்த நெருங்கிய உறவின் விளைவாக இந்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. சமூக சீர்திருத்தத் திட்டங்களை அமுலாக்குவதற்காகப் பாதுகாப்புச் செலவுகளில் சிக்கனத்தைக் கடைப்பிடிக்க லாயிட் ஜார்ஜ் விரும்பினார். வின்ஸ்டன் நிதி அமைச்சரை ஆதரித்தார். கடற்படைத் துறை அமைச்சரான ரெஜினல்டு மக்கீனா (Reginald Mckena) இத்திட்டங்களை எதிர்த்து வந்தார். மக்கீனா கடற்படைச் சீர்திருத்தத்திற்காக 3,000,000 பவுன்கள் செலவுத் தொகை கோரினார். இதன் மூலம் ஆறு

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p 111.

டிரெட் நாட்ஸ் (Dread noughts) என்ற போர்க்கப்பல்களைக் கட்டுவது அவரது திட்டமாகும். லாயிட் ஜார்ஜும், வின்ஸ் டனும் நான்கு போர்க்கப்பல்கள் போதும் என்றனர். அமைச் சரவையில் காரசாரமான விவாதம் நடந்தது, ஆஸ்குவித்தின் முயற்சியால் அமைச்சரவை பிளவுபடுவது தவிர்க்கப்பட்டது. மக்கீனு பதவியை ராஜினுமா செய்கின்ற சூழ்நிலைகூட உருவாகியது.

எதிர்பாராத வகையில் வெளிநாட்டு விவகார அமைச்சரான சர் எட்வர்ட் கிரே வன்மையான கடற்படையின் அவசியத்தை வலியுறுத்தி, கடற்படைத்துறையின் கோரிக்கைகளை ஆதரித்தார். இறுதியில் கடற்படைத்துறை ஒரு நீண்டகாலத் திட்டத் தின்படி எட்டுப் போர்க்கப்பல்களைக் கட்டுவதற்கு அனுமதி வழங்கியதால் இப்பிரச்சினைக்குச் சமரசத்தீர்வு ஏற்பட்டது. இந்தப் பிரச்சினையில் சர்ச்சிலின் கொள்கைகளைத் தாக்கி அட்மிரல் ஃபிஷர் (Fisher) கடுஞ்சொற்கள் அடங்கிய பல அறிக்கைகளை வெளியிட்டார். அமைச்சரவையின் பூசல்கள் வெளிப்படையாயின. சிறிய கடற்படையினரும் (Small Navy men, பெருங் கடற்படையினரும் (Big Navy men) மோதிக் கொண்டனர். இந்தச் சங்கடமான நிலை டோரிகளுக்குக் கொண் டாட்டமாகவும், லிபரல்களுக்கு அவகேடாகவும் இருந்தது. வின்ஸ்டன், லாயிட் ஜார்ஜ் போன்ற லிபரல் கட்சித்தலைவர்களின் அருமுயற்சியால் நிறைவேறிய பிரபுக்கள் அவை ரத்து மசோதா ஓர் இரத்தம் சிந்தாத மாண்புமிகு புரட்சியாகும். இதுவரை அரசியல் அதிகாரங்கள் உயிர்குடிச் சிறு குழுக்களின் வச மிருந்தன. ரேண்டால்ஃப் பிரபு புதிய ஜனநாயகத்தின் எழுச்சி யைக் கண்டார்; அவர்தம் மைந்தரான வின்ஸ்டன் புதிய ஜனநாயகத்தைப் பிணைத்திருந்த தளைகளை அறுத்தெறிவதில் பெரும் பங்கு எடுத்துக்கொண்டார்.

### உள்துறை அமைச்சர் வின்ஸ்டன்

1910ஆம் ஆண்டில் ஆஸ்குவித் தலைமையில் புதிய அமைச் சரவை அமைக்கப்பட்டபோது வின்ஸ்டன் உள்துறை அமைச் சராகப் பதவி உயர்வு பெற்றார். அதுகாலை முப்பத்தைந்து வயதினரான வின்ஸ்டன் மணவாழ்க்கையில் வெற்றிகண்டு ஒரு குழந்தைக்குத் தந்தையாகவும் ஆகிவிட்டார். லாயிட் ஜார் ஜுடன் அவர் முற்போக்கு லிபரல்களின் கட்சித் தலைமையைப் பகிர்ந்துகொண்டார். மேலும் புகழ் ஏணியில் ஏறுவதற்கான வாய்ப்புகள் அவரை எதிர்நோக்கி இருந்தன.

வின்ஸ்டன் பதவி ஏற்றதும் அவர் சமாளிக்கவேண்டிய முதல் பிரச்சினை, நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தைத் தடுத்து நாட்டின் ஒழுங்கையும், அமைதியையும் நிலை நாட்டுவதாகும். வேல்ஸ் பகுதியில் நடந்த அடுக்கடுக்கான வன்முறைச் செயல்களின் விளைவாக சிவில் காவலர்களின் உதவிக்காக வின்ஸ்டன் ராணுவத்தை அழைத்தார். இந்த நடவடிக்கை பெரும் அரசியல் புயலைக் கிளப்பிவிட்டது. சட்டத்தையும் ஒழுங்கையும் கவனிக்கப் போர் அமைச்சரகத்தின் உயர் அதிகாரி ஒருவர் நியமிக்கப்பட்டார். அதிகாரிகள் விவேகமில்லாமல் நடந்துகொண்டால் எல்லையற்ற தீமைகள் விளையக்கூடிய சாத்தியக் கூறுகள் இருந்தன. உயர் அதிகாரியான சர் நெவில் மாக் ரெடி (Sir Nevil Mac Ready) தலைமையில் 600 வேல்ஸ் காவலரும், 5(0 இலண்டன் நகரகாவலரும், ஹுசார் படையின் இரு அணிகளும் மிகவும் திறமையாகச் செயல்பட்டு அமைதியை நிலை நிறுத்தினார்கள். 'சர்ச்சிலின் முன்நோக்கின் காரணமாக அனுப்பப்பட்ட காவலர்படை அமைதியைக் காத்தது. இதனால் இரத்தம் சிந்துவது தடுக்கப்பட்டது'[1] என மாக் ரெடி உள்துறை அமைச்சரைப் பாராட்டினார். வின்ஸ்டன் சுரங்கத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தை அடக்கியதோடு மனநிறைவு கொள்ளாமல், தொழிலாளர்களின் நலத்தை முன்னேற்றுவதில் ஈடுபட்டார். சுரங்க விபத்துகள் தவிர்க்க சட்டப்படி, விபத்துப் பாதுகாப்பு எற்பாடுகளும், முதலுதவிப் பயிற்சியும் இருக்க வேண்டுமென்று விதிக்கப்பட்டன. நிலக்கரிச் சுரங்கச் சட்டம் இயற்றப்பட்டது. இதன் முக்கிய விதிகளில் ஒன்று, பதினான்கு வயதிற்குட்பட்ட சிறுவர்களைச் சுரங்கங்களில் வேலைக்கு அமர்த்தக் கூடாதென்பதாகும். தொழிலாளர்களுக்கு வேலை யில்லாக் காலத்திற்குரிய ஈட்டுறுதி திட்டங்களின் நன்மைகளும் வழங்கப் பட்டன. வின்ஸ்டன் நிறுவிய வேலை தேடித்தரும் நிறுவனங்களும் அவதியுறும் தொழிலாளர்களுக்கு ஆவன செய்ய முன் வந்தன.

சுரங்கத் தொழிலாளர், ரெயில் தொழிலாளர் வேலைநிறுத் தங்கள் இலண்டனிலும், மான்செஸ்டரிலும் தொழிலாளர்களின் கலவரங்கள் ஆகியவை அடிக்கடி நிகழ்ந்தன. மாக் ரெடியும் அடிக்கடி அமைதியை நிலை நிறுத்துவதற்காக அழைக்கப்பட்டார். இந்த நெருக்கடியான நிலையில் உள்துறை அமைச்சர் சலிக்காமல் பணிபுரிந்தார். ஓர் இரவு பதினொரு மணியளவில் லாயிட் ஜார்ஜ் நல்ல மகிழ்ச்சியான மனநிலையில் வின்ஸ்டனைக் காண வந்தார். வின்ஸ்டனோ எதோவொரு பிரச்சினையைப் பற்றிச்

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 113.

சிந்தித்துக்கொண்டு அறையில் மேலும் கீழும் நடந்தவண்ணம் இருந்தார், லாயிட் ஜார்ஜ் நிலைமையைப் புரிந்துகொள்ளாமல் சிரித்துக் கும்மாளம் போட்டுக்கொண்டிருக்கவே, பெருஞ் சினங் கொண்ட வின்ஸ்டன் அவரை வாய்பொத்தி மௌனமாக இருக்கு மாறு பணித்தாராம். இந்தச் செய்தியை மாக் ரெடி தம் குறிப்பு களில் எழுதிவைத்திருக்கிறார்.

உள்துறை அமைச்சரான வின்ஸ்டனுக்குத் தலைவலி தந்த மற்றொரு பிரச்சினை 'சஃப்ரகேட்டுகள்' விளைவித்த தொல்லை யாகும். இந்தப் பெண்கள் வாக்குரிமை ஆர்ப்பாட்டக் காரர்கள். வின்ஸ்டனை முக்கிய குறியாக வைத்துத் தாக்கிவந்தார்கள் என்பதை ஏற்கெனவே கண்டோம். 1910ஆம் ஆண்டு பாராளு மன்ற அமர்வில் வின்ஸ்டன் 'சஃப்ரகேட்டுகள்' பற்றித் தமது நிலைமையைத் தெளிவுபடுத்தினார். நகராண்மைச் கழகத் தேர்தல் களில் வாக்களிக்க உரிமை பெற்றிருந்த பெண்களுக்கு வாக்குரிமை வழங்குமாறு கோரி, தொழில்கட்சி உறுப்பினர் டேவிட் ஷாக் கில்டன் (David Shackleton) ஒரு மசோதாவைக் கொண்டு வந்தார். இதனை எஃப். ஈ. ஸ்மித் எழுச்சியும், நகைச்சுவையு மிக்க ஓர் உரையாற்றி ஆதரித்தார். 'சாஃபோ (Sappho) பாடி யிருக்காவிட்டால். ஜோன் அஃப் ஆர்க் (Joan of Arc) போராடி யிருக்காவிட்டால், சிடோன்ஸ் (Siddons) விளையாடி யிருக்கா விட்டால், ஜார்ஜ் எலியட் (Georrge Eliot) எழுதி இருக்கா விட்டால், மனிதகுலத்தின் மகிழ்ச்சியும், அறிவும், சாதனைகளும் என்றும் பாதிக்கப்பட்டிருக்காது, என்று ஸ்மித் கூறி முடித்தார். இந்த மசோதவை வின்ஸ்டனும் ஆதரிப்பார் என்று எதிர்பார்க்கப் பட்டது. 'நான் இந்த மசோதாவை ஆதரிக்கமுடியாது' என்று ஓரே வரியில் கூறிவிட்டு வின்ஸ்டன் அமர்ந்தார். இம் மசோதா வின் இரண்டாவது வாசகம் நிறைவேறியபோதிலும், பெண்கள் 1918 ஆம் ஆண்டுவரை வாக்குரிமை பெறவில்லை. எனினும் அவர்களுக்கு வாக்குரிமை வழங்கிய அமைச்சரவையில் வின்ஸ்ட னும், ஸ்மித்தும் உறுப்பினர்களாக இருந்தது குறிப்பிடத்தக்கது. மேற்கூறிய மசோதா விவாதத்தின் பின்னர் ஒருநாள் ஒரு 'சஃப்ரகேட் ஆதரவாளனை இளைஞன் பிராட்ஃபோர்டிலிருந்து (Broadford) இலண்டன் திரும்பிக் கொண்ருடிந்த வின்ஸ்டனை வழிமறித்துக் குதிரைச் சாட்டையால் அடிப்பதாக அச் சுறுத்தினான்.

### சிட்னி வீதியில் செயல்வீரர்

உள்துறை அமைச்சராக வின்ஸ்டன் துணிந்து செயல்பட்ட மற்றொரு கவர்ச்சிகரமான நிகழ்ச்சி, சிட்னி வீதி முற்றுகையாகும்.

உள்துறை அமைச்சகம் போன்ற அடக்கமான துறைகளில் கடின உழைப்பைத் தக்கமுறையில் பாராட்டாத பொதுமக்கள், சிட்னி வீதி ஒயிட் சேப்பல் (White Chapel) பகுதியில் உள்துறை அமைச்சர் வின்ஸ்டன் துப்பாக்கிச் சூட்டையும் எதிர்த்து நின்று செயல் படுகிறார் என்னும் செய்தி கேட்டதும், இந்த நாடகத்தைக் காணத் திரண்டுவந்து சர்ச்சிலைப்புகழ்ந்து போற்றினார்கள். இலண்டன் நகரின் கிழக்குமுனையில் இருந்த சிட்னி வீதியில் கொள்ளையடிக்க முயன்ற சில வெளிநாட்டுக் குழப்பக்காரர்கள் சில காவலர்களைக் கொன்றுவிட்டு, வீதியில் இருந்த ஒரு வீட்டினுள் ஒளிந்துகொண்டு துப்பாக்கிச் சூடு நடத்திக் கொண்டிருந்தனர். இந்தச்செய்தி உள்துறை அமைச்சருக்கு அறிவிக்கப் பட்டபோது அவர் குளியல் அறையில் இருந்தார். கை ஈடன் என்னும் ஆசிரியர் கூறுவதுபோன்று வின்ஸ்டன் பல முக்கிய முடிவுகளைக் குளியல் அறையில் எடுத்திருக்கின்றார். ராணுவத்தைப் பயன்படுத்த நகரக் காவல்படைத் தலைவர் அவரிடம் அனுமதி கோரினார், ஈரத் துவாலையுடன் காட்சி யளித்த உள்துறை அமைச்சர் அந்த இடத்திலே அனுமதி வழங்கிவிட்டு, உடை அணிந்துகொண்டு தலைமை அலுவலகத்திற்கு விரைந்தார். சிட்னி வீதியில் ஒரு தற்காலிக ராணுவ முகாம் அமைக்கப்பட்டது. உள்துறை அமைச்சரே நேரில் வந்து, துப்பாக்கிச் சூட்டையும் பொருட்படுத்தாமல் குழப்பக்காரர்களைப் பணியவைக்கும் நடவடிக்கைகளில் ஈடுபட்டார். செயல் வீரரான சர்ச்சிலுக்கு இவையெல்லாம் மிகவும் பிடித்தமானவை என்று சொல்லத் தேவை இல்லை. ஓம்தூர்மானும், கவசரெயிலும், பிரிட்டோரியா போயர் சிறையும் அவர் மனக்கண்முன் நின்றன.

வின்ஸ்டன் சிட்னிவீதி நிகழ்ச்சியில் கலந்துகொண்ட புகைப் படங்கள் பத்திரிகைகளில் வெளியாயின. மக்கள் பரவசம் கொண்டனர். பால்ஃபோர் போன்றவர்கள் அதனைக்கேலி செய்தார்கள். ஆனால், அமைதி நிலவிய அக்காலத்தில் தலைநகரத்தின் முக்கிய வீதியில் ஆயுதந்தாங்கிய கொள்ளைக் கூட்டம் வன்முறையில் ஈடுபட்டதும், பல காவல்களைக் கொன்றதும்பரபரப்பான நிகழ்ச்சிகளாகத் தோன்றின. கொள்ளைக் கூட்டத்தினரிடம் இருந்த வெடிமருந்தும், இயந்திரத் துப்பாக்கிகளும், அவர்களின் விபரீதமான அரசியல் சார்புகளும் நாட்டை உலுக்கின. பாராளு மன்றத்தில் கேள்விக்கணைகள் பறந்தன. சிட்னி வீதி நூறும் இலக்க இல்லம் தீப்பிடித்துக் கொண்டபோது நெருப்பணைக்கும் படையினர் செயல்படாதவாறு வின்ஸ்டன் தடுத்துவிட்டார். இதன் விளைவாக உள்ளே முற்றுகையிடப்பட்டிருந்த இரு கொள்ளையர்களும் எரிந்து சாம்பலாயினர். இதுபற்றியும்,

வின்ஸ்டன் அமைச்சகத்தில் பணியை விட்டுவிட்டு நிகழ்ச்சி நடந்த இடத்தில் தோன்றியது பற்றியும், சில பொருமைக் காரர்கள் வீண் பிரச்சாரம் செய்தனர். வின்ஸ்டன் அதனைப் பெரும் வெற்றியாகக் கருதினர்.

சிட்னி வீதிச் சலசலப்பு முடிவுற்றதும் 1911 ஆம் ஆண்டு ஆகஸ்டில் ரெயில் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்தனர். தொழிலாளர்களின் கோரிக்கைகள் நியாயமானவையாகத் தோன்றின. குறுகியகால அவகாசத்தில் அறிவிக்கப்பட்ட வேலை நிறுத்தம் நாட்டின் அனைத்துத் தொழில்களையும் ஸ்தம்பிக்கச் செய்யும் சூழ்நிலையை உருவாக்கியது. பிறருடைய முயற்சியால் ஓட்டப்பட்ட ரெயில்களையும் ஆர்ப்பாட்டக்காரர்கள் தாக்கினர் கள். ரெயில் வழிகளில் நகரவேலைகள் செய்யப்படுவதைத் தடுக்க வின்ஸ்டன் முடிவுசெய்தார். ரெயில் நிலையங்களையும், சைகைப் பெட்டிகளையும், ரெயில்சொத்துகளையும் அவர்பாதுகாக்க முடிந் தது. இதன் காரணம் அவர் ராணுவத்தை வரவழைத்ததுதான். இந்த நடவடிக்கையினல் பெரும் ஆபத்துத் தடை செய்யப் பட்டது. துப்பாக்கிச் சூடுகளுக்குக் கிளர்ச்சிக்காரர்களில் பலர் பலியாயினர். வின்ஸ்டனின் உடனடி நடவடிக்கைகளைப் பலர் ஒப்புக் கொண்டபோதிலும், அவர் போராட்டங்களில் ஆர்வ முடன் முனைப்புக் காட்டியதைக் கண்டு வியப்புற்றனர்.

போராட்டத்தை விரும்புகிறவன் சீர்திருத்த ஆர்வமும் கொண்டிருக்க முடியும் என்பதைப் பலர் உணர்ந்து கொள்ள வில்லை. 1906 முதல் 1914 ஆம் ஆண்டுவரை லிபரல் கட்சியினரிடம் உயர்ந்த குறிக்கோள்களும், சீர்திருத்த ஆர்வமும் பொங்கி வழிந்தன. இவையல்லாம் பெரும் அளவில் வெற்றி பெறுவதற்கு வின்ஸ்டன், லாயிட் ஜார்ஜ் போன்ற போராட்ட வீரர்கள்தாம் காரணம் என்பதனை யாரும் மறுக்க முடியாது. இந்த இரு அதிசய மனிதர்களுக்கு உயர்ந்த இலட்சியங்களைக் காட்டினலே போதும். அவர்கள் அற்புதங்களை ஆற்றி விடுவார் கள். வின்ஸ்டனின் போரார்வம் பல களங்களில் நாட்டின் நன்மைக்காகப் பயன்படப் போகிறது, என்பதைத் தொடர்ந்து நிகழ்ந்த சம்பவங்கள் அறிவித்தன.

**அகதிர் சிக்கல்** (Agadir Crisis.)

1911 ஆம் ஆண்டு அரசியல், சமூக பொருளாதார அமைப்பு களில் பல புரட்சிகரமான வளர்ச்சிகள் நிறைவெய்திய ஆண் டாகும். நாட்டில் பொதுநலம் நாடு அரசு நிலைநாட்டப் பட்டது. பன்னாட்டரங்குகளில் சர்வதேசக் கூட்டணிகளும்,

நாடுகளுக்குள் இரகசிய உடன்பாடுகளும் நிகழ்ந்து, வரவிருக்கும் போரபாயத்தைப் பறை சாற்றிக் கொண்டிருந்தன. உந்து வண்டிகளும், பேருந்துகளும், திரைப்படங்களும், தொலைபேசிகளும் விமானங்களும் விஞ்ஞான அறிவின் வளர்ச்சியை அறிவித்தன. பாராளுமன்றத்தில் பல சமூக சீர்திருத்த மசோதாக்கள் நிறைவேற்றப்பட்டன. தொழில் கட்சியின் பலம் வளர்ந்து வந்தது. சர்வ ஜனவாக்குரிமை வழங்குவதற்காக லிபரல்கள் பெரும் முயற்சிகளை மேற்கொண்டிருந்தனர். 1911 ல் நடைபெற்ற முதல்பேரரசு மாநாட்டில் தென்ஆப்பிரிக்க யூனியனின் பிரதமர் போதாவும் பிற டொமினியன் நாட்டுப்பிரதமர்களும் முதல் முறையாகச் கலந்துகொண்டார்கள்.

உள்துறை அமைச்சர் முதல் உலகப்போரின் அபாய அறிவுவிப்புகளைக் கண்டுணர்ந்தார், ஜெர்மனியின் ஆக்கிரமிப்புத் திட்டங்கள் வெளிப்படையாகத் தெரிந்தன. அதன் படைப்பலம் பன்மடங்கு அதிகரித்தது. 1904 ஆம் ஆண்டிலேயே இந்த அபாயத்தை உணர்ந்த ஃபிரிட்டனும் பிரான்சும் 'மனமார்ந்த நேச உடன்படிக்கையைச் (Entente Cordiale) செய்து கொண்டிருந்தன. 1911 ல் இந்த உடன்பாடு இன்னும் வன்மையான நிலையை அடைந்தது. எனினும் இங்கிலாந்தில் பலர் ஜெர்மனியுடன் போர் என்ற பேச்சை விரும்பவில்லை. ராபர்ட்ஸ் பிரபு போன்றவர்கள் கட்டாய ராணுவச் சேவைப் பிரச்சாம் செய்து வந்தனர். 1911 ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்களில் அகதிர் சிக்கல் நிகழ்ந்த பின்னர்தான் பலர் நாட்டின் பாதுகாப்பைப் பற்றி சிந்திக்கத் தொடங்கினுர்கள்.

1911 ஆம் ஆண்டு ஆகஸ்டில் ஜெர்மன் அரசாங்கம் மொராக்கோவிலுள்ள அகதிர் துறைமுகத்திற்குப் பாந்தர் (Panther) என்ற போர்க்கப்பலை அனுப்பிவைத்தது. இந் நிகழ்ச்சி அபாயச் சங்கை ஊதியது. அந்நாள்களில் ஐரோப்பிய வல்லரசுகள் ஆப்பிரிக்காவில் தத்தமது செல்வாக்கு நிலவும் வட்டாரங்களைப் பற்றி மிகுந்த அக்கறை கொண்டிருந்தன. 1904ஆம் ஆண்டு உடன்பாட்டின்படி ஃபிரான்சின் செல்வாக்கிற்குட் பட்ட மொராக்கோ பகுதியிலுள்ள ஃபெஸ் (Fez) துறைமுகத்திற்கு கடற்படையை அனுப்பியது. இதனை எதிர்த்து ஜெர்மனி இழப்பீடு கோரியது. உடனே, அகதிருக்குப் போர்க் கப்பலையும் அனுப்பியது. இந் நிகழ்ச்சி பிரிட்டனில் பரபரப்பை உண்டாக்கியது. லாயிட் ஜார்ஜ், ஜான்மோர்லி போன்ற தீவிர லிபரல்கள் ஜெர்மனியின் போர்த்திட்டங்களைக் கண்டனர். இதுகாலை இலண்டன் நகரில் லாயிட் ஜார்ஜ் ஆற்றிய உரை வரலாற்றுச்

புகழ் பெற்றதாகும் இந்தப் பேச்சு லாயிட் ஜார்ஜை அமைதி விரும்புகிறவர் என்று எண்ணிக்கொண்டிருந்த ஜெர்மானியருக்கே அதிர்ச்சியைத் தந்தது.

அகதிர் சிக்கல் வின்ஸ்டனின் மனப்போக்கில் பெரும் மாறுதலை உண்டாக்கியது. அவரின் கூர்மதி உடனே இயங்கத் தொடங்கியது. இதுவரை உள்துறை அமைச்சர் என்ற முறையில் உள்நாட்டு விவகாரங்களில்தாம் வின்ஸ்டன் அக்கறை கொண்டிருந்தாரே யன்றி, வெளிநாட்டு நிகழ்ச்சிகளைப் பற்றிக் கவலைப்படவில்லை. இவையெல்லாம் பிரதமர் ஆஸ்குவித்தும், வெளி விவகார அமைச்சர் சர் எட்வர்ட் கிரேயும், பாதுகாப்பு அமைச்சர் ஹால்டேன் பிரபுவும், கடற்படைத்துறை அமைச்சர் மக்கீனுவும் கவனிக்க வேண்டியவை என்று அவர் கருதினார்போலும். அகதிர் சிக்கலின் பின்னர் பன்னாட்டு விவகாரங்கள் சர்ச்சிலின் முழுக் கவனத்தையும் கவர்ந்தன. பிரிட்டன் போருக்குத் தயாராக இருக்கவேண்டுமென்பது அவரது தலையாய கவலையாக இருந்தது. உள்துறை அமைச்சர் என்ற வகையில் கடற்படையின் தளவாடங்களுக்குப் பாதுகாப்பளிப்பதன் அவசியத்தை வின்ஸ்டன் உணர்ந்தார். பேரரசின் பாதுகாப்புக்குழுவிலும் அவர் இடம் பெற்றார். அதுகாலை ஆராயப்பட்டு வந்த ராணுவப் பிரச்சினைகளைப் பற்றிய தெளிவுபெற்றார். வெடிமருந்துகளைப் பாதுகாக்கக் கப்பல்கள் தேவையென கடற்படை அமைச்சகத்தைக் கேட்டுக்கொண்டார். பாதுகாப்பு அமைச்சர் ஹால்டேனும் அவரது கோரிக்கையை நிறைவேற்றினார்.

அகதிர் புயல் சூறாவளியாக மாறாமல் ஐரோப்பாவைத் தற்காலிகமாக அமைதியில் விட்டுவைத்தது. எனினும் ஜெர்மனி போராயத்தத்தைப் புறக்கணிக்கமுடியாது. 1911ஆம் ஆண்டு ஆகஸ்டில் ஹால்டேன் கூட்டிய பேரரசுப் பாதுகாப்பு மாநாட்டில் ஜெர்மனி ஃபிரான்சைத் தாக்கினால், பிரிட்டன் எடுத்துக்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளைப் பற்றி ஆராயப்பட்டது. கடந்த ஐந்தாண்டுகளில் ஹால்டேன் போர் அமைச்சகத்தில் பல அற்புதமான மாற்றங்களை ஏற்படுத்தி இருந்தார். ஃபிரஞ்சு போர் அமைச்சகத்துடன் கலந்தாலோசித்து ஃபிராஞ்சிற்கு அவசரப் படை அனுப்பும் திட்டங்களையும் உருவாக்கியிருந்தார். ஆனால், கடற்படை அமைச்சரான மக்கீனுவின் ஒத்துழைப்பு அதிகம் கிடைக்கவில்லை. கடற்படையின் துணையின்றித் தம் திட்டங்கள் வெற்றி பெறா என்பதை ஹால்டேன் உணர்ந்தார். கடற்படை

அமைச்சகத்தில் மாற்றம் ஏற்படவேண்டிய அவசியத்தை ஹால்டேன் பிரதமர் ஆஸ்குவித்திடம் வலியுறுத்திவந்தார். ஆஸ்குவித்தின் நெருங்கிய நண்பரும், லிபரல் கட்சியின் தலைசிறந்த அறிவு மேதையுமான ஹால்டேன், பாதுகாப்புத்துறை மட்டு மன்றி கல்வி, சமூக சீர்திருத்தம், சொத்துரிமைச் சட்டங்கள் ஆகிய பல்வேறு துறைகளில் ஆர்வங்கொண்டிருந்தார். வின்ஸ்ட னுக்கு அப்பொழுது முப்பத்தேழு வயதே ஆகியிருந்தது. ஹால்டேனின் நீண்ட அனுபவங்கள் அவருக்கு இருக்கவில்லை. இவர்கள் இருவரையும் ஆஸ்குவித் அழைத்து, மிகமுக்கியமான தொரு முடிவைச்செய்தார்.

# 6. கடற்படைத் துறை அமைச்சர்

ஸ்காட்லாந்தில் பிரதமர் ஆஸ்குவித் ஹால்டேனையும் வின்ஸ்டனையும் தனித்தனியாகவும், கூட்டாகவும் சந்தித்துப் பேச்சுவார்த்தைகள் நடத்தினர். ஹால்டேன் வின்ஸ்டனின் ஆற்றல்களையும், ஊக்கத்தையும் வியந்தாரென்றாலும், வயதிலும், அனுபவத்திலும் இளையவரான வின்ஸ்டனைக் கடற்படைத்துறை சிப்பந்திகள் எவ்வாறு வரவேற்பார்களோ வென்ற ஐயப்பாடு கொண்டிருந்தார். பின்னர், பிரதமர் அரசரைக் கலந்தாலோசித்தார். ஹால்டேனைப் பாதுகாப்பு அமைச்சரகத்திலிருந்து கடற்படைத்துறைக்கு மாற்றுவது கடற்படைத்துறையை மட்டந் தட்டுவது போல் இருக்குமென்று கருத்துத் தெரிவிக்கப்பட்டது. ஒருநாள் பிரதமரும் வின்ஸ்டனும் கோல்ஃப் மைதானத்திலிருந்து வீடு திரும்பும் வழியில், வின்ஸ்டனுக்கு கடற்படைத்துறை அமைச்சகப் பொறுப்பு ஏற்க விருப்பமாவென்று பிரதமர் திடீரென வினவினர். வின்ஸ்டன் உடனே இசைவு தெரிவித்தார். அதே நேரத்தில் ஃபோர்த் (Forth) துறைமுகத்தில் இரு போர்க் கப்பல்கள் தோன்றினது. எதிர்பாராத பொருத்தமாக இருந்தது. வீட்டையடைந்த வின்ஸ்டன் பைபிள் திருநூலை எடுத்து வாசிக்கத் தொடங்கிய போது அவர் கண்களில்பட்ட வாசகத்தில், 'இந்த நாளில் உன் இறைவனை ஆண்டவர் உன் முன்னால் நடப்பதைக் காண்பாய்......அக்கினிப்பிழம்பாக எழுந்து அவர் எதிரிகளை அழிப்பார்......உனக்கு இறைவன் அறிவித்ததுபோல் நீ எதிரிகளை வென்று அவர்களை விரைவில் அழிப்பாய்' என்று மோயீசனுக்கு இஸ்ராயலரின் தேவன் கூறிய மொழிகளைக் கண்டார். இதுவும் தெய்வ நியமனம் என்று அவர் ஆன்மா கூறியது.

இந்த முறையில்தான் வின்ஸ்டன் பிரிட்டிஷ் கடற்படைத் துறை அமைச்சகத்தின் பொறுப்பை ஏற்றுக்கொள்ள நேர்ந்தது. ஜெர்மனி பிரிட்டனைத் தாக்குகின்ற நெருக்கடிநிலை ஏற்படுமானல் தயாராக இருக்கும் வகையில் பிரிட்டிஷ் கடற்படையை உருவாக்கு

கின்ற குறிப்பிட்ட ஆணை அவருக்கு வழங்கப்பட்டது. இந்தப் பணிக்காகத்தான் தம் வாழ்க்கையே தம்மைத் தயாரித்து வந்திருப்பதாக வின்ஸ்டன் நம்பினார். இதற்குள் வின்ஸ்டனைப் பற்றிய தமது பழைய கருத்துக்களை மாற்றிக்கொண்டு விட்டதாக ஹால்டேன் வின்ஸ்டனின் அன்னையாருக்குத் தெரிவித்தார். 'நான் பாதுகாப்பு அமைச்சகத்தில் எத்தனை ஊக்கமும், ஆர்வமும் கொண்டிருக்கிறேனோ அத்தனை ஆர்வம் வின்ஸ்டனிடம் கடற் படை அமைச்சகத்தில் உள்ளது. அவருடன் சேர்ந்து பணியாற்று வதே ஒரு மகிழ்ச்சி[1] என்று ஹால்டேன் குறிப்பிட்டார்.

புதிய பொறுப்பில் வின்ஸ்டனின் முதல்பணி கடற்படைத் துறை அலுவலர்களை உருவாக்குவதாகும். கடற்படைத்துறையில் நேரடி அனுபவமில்லாவிட்டாலும், கடற்படை பற்றிய தேவை யான அறிவை அவர் பெற்றிருந்தார். அவர் தெளிந்த சிந்தனை யும், நடைமுறை அறிவும், தளராத ஊக்கமும், தன்முனைப்பும், திடமான சொந்தக் கருத்துகளும் பெற்றிருந்த அட்மிரல் ஃபிஷரின் (Fisher) அறிவுரைகளைப்பெற முடிந்தது. அமைச்சகத்தில் தீவிர சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. பாதுகாப்பு அமைச் சகத்தில் ஹால்டேன் உருவாக்கியிருந்த பணியாளர் அமைப்பைப் போல் கடற்படைத் துறையிலும் நிறுவவேண்டுமென வின்ஸ்டன் விரும்பினார். விரைவில் ஒயிட் ஹாலில் (White hall) புதியதொரு கடற்படைக்குழு அமைக்கப்பட்டது. ஜெல்லிகோ (Jellicoe) என்பவர் கடற்படைத் துணைத்தலைவராக நியமிக்கப்பட்டார். ஓம்துர்மான் போரில் பங்கு பெற்றிருந்த ரியர் - அட்மிரல் பேயால்டி (Rear Admiral Bealty) கடற்படைத்துறை செயலராக நியமனம் பெற்றார்.

வின்ஸ்டனின் நியமனங்களைப் பற்றிப் பலர் குறை கூறினார்கள். கடற்படைத்துறையில் பழுத்த அனுபவம் பெற்ற நிபுணர்களைக் கலக்காமல் அனுபவமற்ற சர்ச்சில் தன்னிச்சையாக நியமனங்களைச் செய்ததாக மனக்குறை நிலவியது. மூன்று புதிய தளபதிகளை நியமனம் செய்ததில் ஃபிஷருக்கும் வின்ஸ்டனுக்கும் கருத்துவேறுபாடு ஏற்படவே ஃபிஷர் இத்தாலியிலுள்ள நேபில்ஸ் நகரத்திற்கு ஓய்வு நாடிச்சென்று விட்டார். எத்தனையோமுறை வின்ஸ்டன் உருக்கமான வேண்டுகோள் விடுத்தும் ஃபிஷர் திரும்புவதற்கு மறுத்துவிட்டார். இறுதியாகப் பிரதமரும், வின்ஸ்டனும் நேரில் சென்று அவரைக் கேட்டுக்கொண்டார்கள். அன்றொரு ஞாயிறு நாளில் கோவிலுக்கு வழிபாட்டிற்காகச்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 120.

சென்றிருந்த ஃபிஷர் போதகரின் திருவுரையைக்கேட்க நேர்ந்தது. 'ஒவ்வொருவனும் தன் தாய் நாட்டிற்கும், மக்களுக்கும் சக்தி உள்ளவரை பணிபுரியக் கடமைப்பட்டிருக்கிறுன். நான் உழைத்து விட்டேன். ஓய்வு கொள்ளப்போகிறேன் என்று எவனும் சொல் லாதிருப்பானுக'[1] என்ற சொற்கள் அவரது உள்ளத்தைத் தொட்டன. போதகர் தம்மை நோக்கியே அவற்றைக் கூறிய தாக ஃபிஷர் எண்ணினர். இதன் விளைவாக ஃபிஷர் தாய்நாடு திரும்பினர். மீண்டும் ஃபிஷர் கடற்படைத் துறையின் அதிகாரச் சார்பில்லாத அறிவுரையாளராகப் பணிபுரியும் வாய்ப்புக் கிடைத்தது.

### கடலரசியும் கடமை வீரரும்

வின்ஸ்டன் ஜெர்மனியின் போர் அபாயத்தை நன்குணர்ந்து செயல்படத் தொடங்கினர். வடகடலின் வரைபடங்கள் தயா ராயின. ஜெர்மன் கப்பல்படையின் நடமாட்டங்கள் அதில்குறிக்கப் பட்டன. ஃபிஷரின் ஆலோசனையின் பேரில் போர்க் கப்பல்களில் பீரங்கிகள் பொறுத்தப்பட்டன. புதிய கருத்துக்களைப் புரிந்து கொண்டு உடனே செயல்படுத்தும் ஆர்வமும் ஆற்றலும் வின்ஸ் டனிடம் இருப்பதை ஃபிஷர் கண்டு அதனை நல்ல முறையில் பயன் படுத்திக் கொண்டார். தம் உடல் பொருள் ஆவி யாவற்றையும் புதிய பணியில் வின்ஸ்டன் ஈடுபடுத்தினர். அதிகாரிகளைக் கண்டு பேசுவதும், உள்நாட்டுக் கடல்களிலும், மத்திய தரைக்கடலிலும் சென்று கடற்படைகளைப் பார்வையிடுவதும் அவரது அன்ருடச் செயல்களாகிவிட்டன. வின்ஸ்டனின் வீடும், பணிமனையும் கடற்படையைச் சேர்ந்த ஓர் உல்லாசப் படகிற்கே மாற்றப் பட்டன. இப்பொழுது எதையும் அவர் தாமே செய்வதில் ஆவல் கொண்டார். போர் மேகங்கள் சூழ்ந்து வந்து அச்சுறுத்தும் நிலையில் யார்தான் சோம்பிக் கிடப்பார்கள்?

போர்க்கப்பல்களில் எண்ணெயைப் பயன்படுத்துவதைத் தொடங்கி வைத்தவர் ஃபிஷர் ஆவார். வெளி நாட்டாரின் கட்டுப்பாடில்லாத, சுதந்திரமான எண்ணெய் வயல்களை பிரிட்டிஷ் கடற்படை பெற்றிருக்க வேண்டுமென்பது அவரது திட்டம் வின்ஸ்டனும் கடற்படைத்துறைத் தலைமைப் பொறுப்பை ஏற்ற வுடன் எண்ணெயை எரிபொருளாகப் பயன்படுத்தும் முக்கியத் துவத்தையும், எண்ணெய் வளங்களின் தேவைகளையும் சரிவர உணர்ந்தார். இதற்காக ஃபிஷர் தலைமையில் அரசர் ஆணைபெற்ற சிறப்புக்குழு வொன்று நியமிக்கப்பட்டது. இதன் விளைவாக

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 121.

பாரசீக எண்ணெய்க் கம்பெனிக்கும் பிரிட்டனுக்கு மிடையே நீண்டகால ஒப்பந்தம் ஒன்று நிறைவேறியது, இதற்குப் பிரிட்டனின் கடற்படை வின்ஸ்டனுக்குக் கடமைபட்டுள்ளது. இதன் மூலம் அக்காலத்திலேயே 40,000,000 பவுன்கள் லாபம் கிடைக்குமென்று வின்ஸ்டன் தி வொர்ல்ட் கிரைசிஸ்' (The world crisis) என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். தேசீயப் பாதுகாப்பிற்காக பலத்த எதிர்ப்பினிடையே நிறைவேற்றப்பட்டு, வரி கொடுக்கும் மக்களுக்குப் பல மடங்கு லாபம் தந்த ஒரே தேசீயத் திட்டம் (சூயஸ் கால்வாய் பங்குகள் நீங்கலாக) இது ஒன்றுதான். இது வின்ஸ்டனின் அரசியல் வெல்திறத்திற்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

வின்ஸ்டன் கடற்படை அமைச்சகப் பொறுப்பை ஏற்றது 1911ஆம் ஆண்டு அக்டோபர் திங்களில். 1914ஆம் ஆண்டு ஆகஸ்டில் உலகப்போர் மூண்டது. இடைப்பட்ட மூன்றுண்டுகளில் வின்ஸ்டன் முழுமூச்சுடன் கடற்படைத் துறையைச் சீரமைப்பதில் ஈடுபட்டார். கட்சிப் பூசல்களிலுள்ள பழைய ஆர்வத்தையெல்லாம் விட்டுவிட்டு கடற்படையினை விரிவுபடுத்துவதையே தம் ஒரே நோக்கமாகக் கொண்டிருந்தார். அவரது பழைய எதிரியான பால்ஃபோரைக்கூட பேரரசின் பாதுகாப்புக் குழுவில் சேர்த்துக்கொள்ளுமாறு வலியுறுத்தினர். தம்மிடத்திலும், தம்மைச் சுற்றியுள்ள அலுவலகப் பணியாளர்களிடமும் வடகடலில் எதிரிகள் கொடுத்துவரும் தொல்லைகள் பற்றிய உணர்ச்சியை உருவாக்கினர். மிகக் குறுகிய காலத்திற்குள் பிரிட்டிஷ் கடற்படையை மிக உயர்ந்த நிலைக்கு உயர்த்துவதற்காக இரவுபகலாக வின்ஸ்டன் உழைத்தார். தமது பணித்துறையுடன் இரண்டறக் கலந்து ஒத்துழைப்பதில் இதுவரை வின்ஸ்டனைப்போல் எந்தக் கடற்படைத்துறை அமைச்சரும் வெற்றிபெறவில்லை.

ஜெர்மனி பிரிட்டிஷ் கடற்படை வன்மைக்குச் சமமாக நிற்கும் பெரும் முயற்சிகளை மேற்கொண்டு வந்தது. 1912ஆம் ஆண்டு கிளைட் சைட் (Clyde Side) பகுதியில் ஆற்றிய உரையில் வின்ஸ்டன் 'பிரிட்டன் தனது கடலாதிக்கத்தை என்றும் விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை' என ஜெர்மனிக்கு எச்சரிக்கை செய்தார். பிரிட்டிஷ் கடற்படைவன்மை நாட்டின் பாதுகாப்பிற்கின்றி யமையாதவொன்று; ஆனல், ஜெர்மனியின் கடல் வன்மை 'ஆடம்பரத்தன்மை' பெற்றது. (Luxus of lotte) என்ற புதியதொரு சொற்றெடரைப் புனைந்து கொடுத்தார். ஜெர் மனியின் போர் வெறியர்கள் பிரிட்டிஷ் கடற்படை அமைச்சரின்

ஆணவத்தைக் கண்டு எரிச்சல் கொண்டனர். இருநாடுகளும் என்றுவது ஒருநாள் மோதிக்கொள்ளும் என்பது தவிர்க்க முடியாததொன்று.

வின்ஸ்டன் போர் முயற்சிகளுடன் மனநிறைவு கொள்ள வில்லை. போரைத் தவிர்க்கின்ற வாய்ப்புகளையும் அவர் பயன் படுத்தத் தவறவில்லை. 1912ஆம் ஆண்டில் லாயிட் ஜார்ஜின் தூண்டுதலின்பேரில் பெர்லினுக்கு ஒரு தூதுக்குழு அனுப்பப் பட்டது. 'கடற்படை விடுமுறை' என்ற திட்டத்தைக் கொண்டு சென்ற ஹால்டேனின் பெர்லின் தூது தோல்வியுற்றது. வின்ஸ் டனின் அருமுயற்சிகள் கெய்சர் வில்லியத்திற்குப் பிடிக்கவில்லை போலும். மீண்டும் வின்ஸ்டன் போர்ப்பிரச்சினைகளில் கருத்தைச் செலுத்தத் தொடங்கினர். விரைவில் ஜெர்மனி ஐரோப்பாவின் மீது அழிவு வெள்ளத்தைத் திறந்துவிடத் தயாராக இருந்தது.

### அயர்லாந்தின் பொறுப்பாட்சிப் பிரச்சினை

கெய்சர் வில்லியத்தின் போர்முரசு கொட்டியகாலை பிரிட் டனின் அரசியல் சர்ச்சைகளில் அயர்லாந்து முக்கிய இடம் வகித்தது. அயர்நாட்டினர் தமது பழைய உரிமையைப் பெற நீண்டநாட்களாகப் போராடிக் கொண்டிருந்தனர். பிரதமர் கிளாட்ஸ்டன் அயர்லாந்தின் பொறுப்பாட்சி மசோதாவை காமன்ஸ் அவையில் நிறைவேற்றினர். ஆனல், பிரபுக்கள் அவை அதனை நிராகரித்தது. இப்போது ஆஸ்குவித்தின் அமைச்சரவை, டோரிகளும், அல்ஸ்டரும் (Ulster) எதிர்த்தபோதிலும் பொறுப் பாட்சி மசோதாவை எப்படியும் நிறைவேற்ற முடிவு செய்தனர். அயர்லாந்தின் வட மாநிலங்களில் பிரிட்டனிலிருந்து சென்று குடியேறியவர்கள் பலர் இருந்தனர். இவர்கள் அயர்லாந்து மக்களின் விடுதலை வேட்கையை வரவேற்கவில்லை. 'பொறுப் பாட்சி என்றல் ரோம் ஆட்சி' (Home - Rule is Rome Rule) என்று அவர்கள் கூக்குரலிட்டார்கள். ஏனெனில் அயர்லாந்தியர் ரோமன் கத்தோலிக்கர். அல்ஸ்டர் மக்களோ புரோட்டஸ் டாண்டுகளும், பியூரிட்டன்களுமாவார். அயர்லாந்தியர் தமது நாட்டின் செல்வமிக்க மாநிலத்தை இழக்கத் தயாராக இல்லை. அல்ஸ்டர் மக்கள் பிரிட்டிஷ் ஐக்கியத்திலிருந்து பிரிந்துவிடத் தயாராக இல்லை. அல்ஸ்டர் கிளர்ச்சிக்காரர்களுக்கு எட்வர்ட் கார்சன் (Edward Carson) தலைமை தாங்கினர். இவர்க்கு எஃப்-ஈ. ஸ்மித் துணை நின்றர்.

அரசியல் தலைவர்களின் தவறுகளாலும், பகைமையாலும் அயர்நாட்டில் உள்நாட்டுக் கலகம் மூளுகின்ற நிலை உருவா

கியது. அல்ஸ்டர் மக்களை அடக்கபிரிட்டனின் ராணுவம் கொண்டு வரப்படுமானால், அதிகாரிகளின் ஆணைகளையும் மீறுமாறு கன்சர் வேடிவ் தலைவர் போனர் லா (Bonar Law) படை அதிகாரி களுக்குக் கூறி வந்தார். வின்ஸ்டன் அரசினரின் கொள்கையை ஆதரித்தார். அவரது தந்தை எழுப்பிய 'அல்ஸ்டர் போராடியே தீரும். அல்ஸ்டரின் கொள்கை வெல்லும்' (Ulster will fight and Ulster will be right) என்ற போர் ஒலி அவரது செவிகளில் ஒலித்துக்கொண்டிருந்ததுஉண்மைதான். ஆனால், இந்தக் கோஷம் வன்முறையைத்தான் தூண்டும் என்பது அவரது துணிவு. வின்ஸ்டன் போனர்லாவை, 'அரசினரை அச்சுறுத்தும் பொது மக்களின் எதிரி' என்று கண்டனம் செய்தார். எட்வர்ட் கார்சன் நாட்டுத் துரோகச்செயல்களில் ஈடுபடுவதாக அவர் குற்றஞ் சாட்டினார். 1912ல் பிப்ரவரியில் பெல்ஃபாஸ்டில் (Belfast) வின்ஸ்டன் பேசிய கூட்டத்தில் குழப்பம் ஏற்பட்டது. ஏப்ரல் திங்களில் பொறுப்பாட்சி மசோதாவின் இரண்டாம் வாசகத்தை வின்ஸ்டனே காமன்ஸ் அவையில் படித்தார். அயர்லாந்து பிரச்சினையில் அரசாங்கத் திட்டங்களை ஆதரித்து அவர் 'தீப் பொறி பறக்கும்' உரைகளை ஆற்றினார். பாராளுமன்ற விவாதங் களில் கூச்சலும் குழப்பமும் ஏற்பட்டு அவை ஒத்திவைக்கப் பட்டது. வின்ஸ்டனும் அவரது நண்பர் கர்னர் சீலி (Seely) யும் முன்வரிசையிலிருந்து வெளியே செல்லுகையில் கன்சர்வேடிவ்கள் அவர்களை 'எலிகள்' என்று கூறினார்கள். வின்ஸ்டன் இந்த மரியாதையைப் புன்முறுவலுடன் ஏற்றுக்கொண்டார். கடுஞ் சினங்கொண்ட கன்சர்வேடிவ் உறுப்பினர் ஒருவர் கையில் கிடைத்த புத்தகமொன்றை வின்ஸ்டன்மீது வீசி எறிந்தார். வின்ஸ்டனின் முகத்தை அது தாக்கியது. காமன்ஸ் அவையில் அமைதியும் ஒழுங்கும் காப்பதுபற்றிய விதிகளடங்கிய நூல்தான் அவ்வாறு எறியப்பட்டது என்பதுதான் விந்தை. வின்ஸ்டனின் இரத்தம் கொதித்தது. நல்லவேளையாகத் தவறுசெய்த உறுப் பினர் ரொனல்டு எம் நீல் (Ronald M' Neili) மன்னிப்புக் கோரவே வின்ஸ்டன் இந்த நிகழ்ச்சியை அடியோடு மறந்துவிட்டார்.

அயர்லாந்தில் அரசியல் கொந்தளிப்பு அதிகமாயிற்று. தலைவர் கார்சன் படை திரட்டிக்கொண்டிருந்தார். பொறுப் பாட்சி வழங்கப்படுமானால் பிரிட்டனிலிருந்து பிரிந்து அல்ஸ்டர் ஜெர்மனியுடன் இணைந்துவிடுவதாகக் கார்சன் மிரட்டினார். கார்சன் ஃபிரான்சிடமிருந்து போர்த் தளவாடங்களைப் பெற்றுக் கொண்டிருந்தார். தென் அயர்லாந்தியர் சொந்தப் படை திரட்டுவதில் ஈடுபட்டனர். குர்ராவில் (Curragh) நிறுத்தப்பட் டிருந்த பிரிட்டிஷ் படை அதிகாரிகள் தாம் அல்ஸ்டருக்கு

அனுப்பப்பட்டால் ராஜிநாமா செய்வதாக அச்சுறுத்தினார்கள். பிரிட்டிஷ் மக்கள் செய்வதறியாது திகைத்தனர். பத்திரிகைகள் போர் வெறியைக் கண்டனம் செய்தன. அயர்லாந்திற்குப் பொறுப்பாட்சி வழங்குவதில் உறுதியாக இருந்த வின்ஸ்டன் உள்நாட்டுப் போரைத் தடுக்க முயன்றார். 1913ஆம் ஆண்டின் இறுதிக்குள் கன்சர்வேடிவ்களுடன் கலந்தாலோசித்து இதற்குத் தீர்வுகாணக் கூட்டு அமைச்சரவை நிறுவுவதற்கான முயற்சிகளை அவர் மேற்கொண்டார். மூன்றும் முறையும் பொறுப்பாட்சி மசோதா பிரபுக்களால் நிராகரிக்கப்படும் நிலை உருவாகியது. அல்ஸ்டரை நீக்கிவிட்டு அயர்லாந்திற்குப் பொறுப்பாட்சி வழங்குவதாக மசோதாவில் திருத்தம் செய்வதை வின்ஸ்டன் ஆதரித்தார். பிரபுக்களோ மசோதாவை உருத்தெரியாமல் திருத்தியமைத்தனர். டப்ளின் குழப்பத்தில் ஆழ்ந்தது. இதற்குள் ஜூலையில் முதல் உலகப் போரின் மேகங்கள் அரசியல் வானில் திரண்டன.

'கார்சனின் படை' நூறாயிரம் வீரர்களுடன் போதிய தளவாடங்களைச் சேர்த்துப் போருக்குத் தயாரானது. எதிரிகள் லார்ன் (Larne), டொனுக்கேடி (Donaghadee) துறைமுகங்களைக் கைப்பற்றிக்கொண்டனர். வடகிழக்கு அயர்லாந்தில் ஏராளமான வெடிமருந்துகளும், தளவாடங்களும் பதுக்கப்பட்டன. கடற்படைத்துறை அமைச்சர் என்ற முறையில் வின்ஸ்டன் நெருக்கடி நிலைக்குத் தயாராக இருக்கும்படி அல்ஸ்டருக்கு எதிர்ப்புறமுள்ள ஸ்காட்லாந்து கடற்கரைக்கும் போர்க்கப்பல்களை அனுப்பி வைத்தார். காமன்ஸ் அவையில்: எதிர்க்கட்சியினர் இதனை வன்மையாகக் கண்டனம் செய்தனர். இதனை 'நாட்டுக் காவலர்கள்மீது குற்றவாளிகள் கொண்டுவரும் கண்டனம்'[1] எனக் கூறிச் சர்ச்சில் பதிலிறுத்தார். கார்சனுடன் மீண்டும் பேச்சு வார்த்தைகள் தொடங்கியதன் விளைவாக அரசர் பக்கிங்ஹாம் மாளிகையில் ஒரு மாநாட்டைக் கூட்டினார். பிரிட்டன் ஜெர்மனிமீது போர் தொடங்குவதற்குப் பதினொரு நாட்களுக்கு முன்னர் இந்த மாநாடு தோற்றது. மாநாட்டு விவாதங்களுக்கு முற்றுப்புள்ளி வைத்தாற்போல், கிரே பிரபு செர்பியாவிற்கு ஆஸ்திரியா விடுத்திருந்த இறுதி எச்சரிக்கையைப் படித்தார். அயர்லாந்தின் உள்நாட்டுப் பூசலின் பனித்திரை விலகியது. ஐரோப்பாவின்மீது புதியதொரு ஒளி படிப்படியாகப் படரத் தொடங்கியது.

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 141.

**களத்தில் குதிக்கக் கடற்படை தயார்**

அகதிரில் நிகழ்ந்தது ஒத்திகை. சராஜிவோ (Saragevo) நிகழ்ச்சியுடன் நாடகத்தின் திரை உயர்ந்தது. 1914ஆம் ஆண்டு ஜுலைத் திங்கள் 14ஆம் நாளில் ஆஸ்திரியாவின் ஆர்ச்டியூக் ஃபிரான்ஸ் ஃபெர்டிநாண்டும் (Franz Ferdinand) அவர் மனைவியாரும் பாஸ்னியத் தலைநகரான சராஜிவோவில் செர்பிய நாட்டுத் தேசீய வாதிகளால் சுட்டுக் கொல்லப்பட்டனர். ஐரோப்பாவில் மூண்டு கொண்டிருந்த போர் இந்த நிகழ்ச்சியைத் தொடர்ந்து வெடித்தது. ஜுலை 28ஆம் நாளில் ஆஸ்திரியா செர்பியாவிற்கு இறுதி எச்சரிக்கை விடுத்துவிட்டு செர்பியாவைத் தாக்கியது. அடுத்த நாளில், ஆஸ்திரியஎல்லையில் ருஷ்யா படைகளைக் குவித்தது. ஜுலை 31 ஆம்நாள் ஜெர்மனி ருஷ்யாவிற்கும்எச்சரிக்கைவிடுத்தது. ஆகஸ்டு முதல் நாளில் எதிரிகளுக்கு வாய்ப்பளிக்காமல் ஜெர்மனி ஃபிரான்சையும், பெல்ஜியத்தையும் தாக்கியது. பழைய உடன்படிக்கைகளின்படி ஃபிரான்சையும், பெல்ஜியத்தையும் பாதுகாப்பது கடமையென உணர்ந்த பிரிட்டன், ஜெர்மனி பெல்ஜியத்திலிருந்து வாபஸ்பெறுமாறு எச்சரிக்கை செய்தது. அன்று நள்ளிரவுடன் எச்சரிக்கையின் கெடு நேரம் முடிவுற்றது.

கடற்படைத்துறை அமைச்சகத்தில் அமர்ந்திருந்த வின்ஸ்டன் வெளியில் நாட்டுப்பண் ஒலிப்பதைக் கேட்டார். தொடர்ந்து 'பிக்பென்' (Bigben) கடிகாரம் நள்ளிரவை அறிவித்தது. பிரிட்டனின் எச்சரிக்கைக் கெடு முடிவுற்றது. 'போர்த் தந்திகள்' பிரிட்டிஷ் கடற்படைக் கப்பல்களுக்கு அனுப்பப் பட்டன. இதனை அமைச்சரவைக்கு அறிவிக்க வின்ஸ்டன் டவுனிங் வீதி வழியே நடந்து கொண்டிருந்தார்.

நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாய்ச் சங்கிலித்தொடர் போல் நிகழ்ந்து கொண்டிருந்தன. ஐரோப்பிய அரசியல் வல்லுநர்கள் போரைத்தடுக்கும் முயற்சியில் வெற்றிபெறவில்லை. போர் தொடங்கும்வரை அயர்லாந்து பிரச்சினைதான் அமைச்சரவைக் கூட்டங்களில் விவாதிக்கப்பட்டு வந்தது. ஆனால், கடற்படைத் துறை அமைச்சகத்தில் மட்டும் முன் நோக்கான சுறுசுறுப்பு இருந்தது. மேற்கூறிய நிகழ்ச்சிகள் உலகத்தை உலுக்கிய நிலையில் வெளி விவகார அமைச்சர் கிரே பிரபுவும், கடற்படைத்துறை அமைச்சர் வின்ஸ்டனும் ஐரோப்பிய விவகாரங்கள் பற்றி அக்கறை கொள்ளத் தொடங்கினர். கிரே பிரபு அமைதியை நிலைநாட்டுவதில் முனைந்து நின்றார். அம் முயற்சிகள் தோற்றால் உருவாகக்கூடிய நெருக்கடி நிலையைச் சமாளிக்கக் கேந்திரமான ஏற்பாடுகளைச் செய்வதில் வின்ஸ்டன் ஈடுபட்டிருந்தார். அரசின்

வெல்திறத்திற்குக் கடற்படை ஏற்பாடுகள் சற்றும் குறைந்து விடக்கூடா தென்பதே அவரது ஒரே கவலையாகும்.

இந் நாள்களில் வின்ஸ்டன் இருபெரும் கடமைகளை ஆற்ற வேண்டியிருந்தது. ஒன்று, கடற்படையைத் திரட்டித் தயாராக வைத்திருக்கவேண்டியது; அடுத்தது, தேவைப்படுமானால் ஃபிரான் சுடன் ஒப்பந்த நிபந்தனைகள் நிறைவேற்றுவதை ஆதரித்து அமைச்சரவையின் ஒரு பகுதியை இயக்குவதுமாகும். இதில் முதல் கடமை எளிதானது. கடற்படைத்துறை அமைச்சர் 1914ஆம் ஆண்டு கோடையில் கடற்படைக்குரிய பயிற்சிகளை நடத்தவில்லை. அதற்குப் பதிலாக கையிருப்புக் கடற்படையின் (Reserve Fleet) இரண்டாவது மூன்றாவது பிரிவுகளைச் சேர்ந்த கப்பல்களும், வீரர்களும் போருக்கு ஆயத்த நிலையில் திரட்டப் பட்டனர். கடற்படை பார்வையிடப்பட்டது. இதுவரை, உலகமே கண்டிராத வகையில் மிக வன்மைமிக்க போர்க் கப்பல்கள் அணிவகுத்து நின்ற காட்சியே காட்சி! 1914ஆம் ஆண்டு ஜூலை 17ஆம் நாளில் ஸ்பிட்ஹெட் (Spit head) துறை முகத்தில் கடற்படை திரண்ட அதே நேரத்தில், ஐரோப்பாவின் அரசியல்நிலை மேலும் மோசமாகியது. கடற்படை கலைந்து துறைமுகங்களுக்குத் திரும்பவேண்டிய நிலையில் வின்ஸ்டனும், கடற்படைத் தளபதி பிரின்ஸ் பேட்டன்பர்க் லூயிசும் (Prince Louis of Battenburg) வெளிநாட்டு அரசியல் நிலையைக் கருத்தில் கொண்டு, படைக்கலைப்பைச் செயல்படுத்தவில்லை. அரசியல் அரங்கில் அமைச்சர்கள் இன்னும் அமைதியை நிலைநாட்டலா மென்று கனவு கண்டுகொண்டிருந்தார்கள்.

எவ்வாறேனும் அமைதி காண விரும்பியவர்கள் ஜெர்மனி மீது நிபந்தனை விதிக்காமல் நடுநிலைமை வகிக்க விரும்பினார்கள். ஜான் மோர்லி, ஜான் பர்ன்ஸ் (Burns) அட்டார்னி ஜெனரலான சர். ஜான் சைமன் போன்றவர்கள் இக்கருத்துக் கொண்டிருந் தனர். லாயிட் ஜார்ஜும், ஹார்கோர்ட் பிரபுவும் (Lord Harecourt) ஓரளவு அமைதி விரும்பும் கொள்கைக்கு ஆதர வளித்து வந்தனர். க்ரு கோமகன் (Marquis of Crewe), ரெஜி னல்டு மக்கீனா, சர் ஹெர்பர்ட் சாமுவெல் போன்றோர் அங்கு மிங்கும் சேராமல் மையத்தில் நின்றனர். கிரேயும், வின்ஸ்டனும் போரில் தலையிடுவதை வன்மையாக ஆதரித்தனர். ஆஸ்குவித் அமைச்சரவை பிளவுபடாமல் தவிர்க்கப் பெரும் முயற்சிகளைச் செய்துகொண்டிருந்தார். அமைச்சரவையின் அனுமதி இல்லா மலே வின்ஸ்டன் கடற்படையைப் போர்ட்லண்டிலிருந்து ஆங்கிலக் கால்வாய் வழியாக வடகடலில் இருந்த ஸ்கேபா

ஃப்ளோ (Scapa Flow) துறைமுகத்திற்கு அனுப்பி வைத்தார். அமைச்சரவையின் அனுமதியை எதிர்பார்த்து 1914ஆம் ஆண்டு ஆகஸ்டு முதல் நாளில் சகலமும் போருக்குத் தயாராகுமாறு வின்ஸ்டனின் எச்சரிக்கை பறந்தது.

## கண்ணீர் வடித்த காரணம் என்ன ?

இதற்குள் ஜெர்மனி ருஷ்யாமீது போர் தொடுத்திருக்கும் செய்தியை வெளிநாட்டுத்துறை அமைச்சரவைக்கு அறிவித்தது. உடனே வின்ஸ்டன் பிரதமரைக் கண்டு, அமைச்சரவையின் மறுப்பையும் கருதாமல் படைதிரட்ட உத்திரவிடப்போவதாக அறிவித்தார். அதற்கான பொறுப்பைத் தனிப்பட்ட முறையில் தாமே ஏற்றுக்கொள்வதாகவும் கூறினார். எனவே, எந்தவிதச் சட்டப் பாதுகாப்புமின்றி, கையெழுத்திட்ட அரசரின் பிரகடனமுமின்றி வின்ஸ்டன் படை குவிக்க உத்திரவிட்டார். இருபத்தினான்கு மணி நேரத்திற்குப் பின்னர் அரசியலமைப்பிற்கு முரணாக எடுக்கப்பட்ட இந்த முடிவை அமைச்சரவை ஏற்றுக்கொண்டது. சிலமணி நேரங்களில் பிரிட்டனும் போர்க்களத்தில் குதித்தது.

இறுதிக் கட்டத்தில் கடற்படைத்துறை அமைச்சர் கடற்படைத் தலைமைகளுக்கு ஆணைகளும், அறிவுரைகளும் அனுப்புவதில் முனைந்திருந்தார். எதிர்பாராத தாக்குதல்களை எதிர்த்து நிற்கவும், ஃபிரான்சுடன் ஒத்துழைக்கவும், இத்தாலியின் நடுநிலையை மதிக்கவும் அவர்களுக்கு எச்சரிக்கை விடுக்கப்பட்டது. ஜெர்மன் போர்க்கப்பல் 'கோபன்' (Goeben) மத்தியரைக்கடலில் நடமாடியது. அதனை இரு போர்க்கப்பல்கள் தொடர வேண்டுமெனப் பணிக்கப்பட்டது. பரபரப்பு மிகுந்த இந்தக் கட்டங்களிலெல்லாம் வின்ஸ்டன் நிதானமான, தெளிவான உறுதியின் சின்னமாகத் திகழ்ந்தார். அவரது ஆவல் நிறைவேறியது; தயாரிப்பு ஏற்பாடுகள் முடிவெய்தின; இப்பொழுது நிகழவேண்டியவற்றை அவர் நம்பிக்கையுடன் எதிர்நோக்கி இருந்தார்.

காமன்ஸ் அவையில் கிரே பிரபு ஜெர்மனியின் ஆக்கிரமிப்பை எதிர்த்துப் பிரிட்டனும் ஃபிரான்சும் தோளோடு தோள் நின்று போராடும் என்ற வரலாற்று முக்கியத்துவம் பெற்ற அறிக்கையை வாசித்தபோது வின்ஸ்டனின் கண்களிலிருந்து நீர்த்துளிகள் உதிர்ந்தன. உலகத்தை உலுக்கவிருக்கும் சோக நாடகத்தின் துயரம் அவர் உள்ளத்தை உருக்கியதா அல்லது அமைதி விரும்பியவர்களின் ஆசைகள் அழிந்ததற்காக ஆனந்தக்கண்ணீர் உகுத்தாரா என்பதை யாரே அறிவார்! இந்தக் காட்சியை நேரில் கண்டவர் அல்ஸ்டர் புரட்சிவீரரான கார்சன். எவ்வித ஆபத்

திலும் தாய்நாட்டிற்கு ஆற்றவேண்டிய கடமையிலிருந்து அணு வளவும் தவருதவர் கடற்படைத்துறை அமைச்சர் என்பதை அவர் அறிவார். ஆழ்ந்த அமைதியில் அவர்கள் இருவரும் கைகுலுக்கிக் கொண்டனர். நடுநிசியில் கொடுக்கப்பட்ட காலம் முடிந்ததும் பிரிட்டன் போரில் இறங்கியது. வின்ஸ்டனின் அரு முயற்சியால் பிரிட்டிஷ் கடற்படை போருக்குத் தயாராக இருந்தது. தம் வாழ்நாளில் பல தவறுகளைச் செய்திருப்பதாக வின்ஸ்டனைப் பலர் குற்றஞ்சாட்டுவதுண்டு. ஆனல், உலகப் போர் மூண்டபோது பிரிட்டிஷ் கடற்படையை அவலநிலையில் வைத்திருக்கும் தவற்றை மட்டும் அவர் செய்யவில்லை.

# 7. முதல் பெரும் போர் மூண்டது

1914ஆம் ஆண்டு ஆகஸ்டில் முதல் பெரும்போர் மூண்ட போது வின்ஸ்டனுக்கு வயது நாற்பதுதான். அவர் தலைமை தாங்கி நின்ற படைப்பலத்தைப் பொறுத்துத்தான் போரின் விளைவுகள் கணிக்கப்படவேண்டும். ஏனெனில், பிரிட்டிஷ் கடற் படை வீழ்ந்தால் பிரிட்டனும் வீழும்; அது வென்றால் பிரிட் டனும் வெல்லும் என்பது உறுதி. போர் தொடங்கியபோது அதனால் பிரிட்டனுக்கு என்னென்ன விளைவுகள் ஏற்படலா மென்று பலர் சர்ச்சை செய்துகொண்டிருந்தார்கள். ஜெர்மனி பிரிட்டனைத் தாக்கினால் விளையக்கூடிய இன்னல்களைப் பற்றித் தான் எங்கும் பேச்சாக இருந்ததேயன்றி, எதிர்த் தாக்குதல்களின் நன்மைகளைப்பற்றி அதிகமாக யாரும் கவலைப்படவில்லை. நார்மன் ஏஞ்சல் (Norman Angell) என்பவர் எழுதிய 'த கிரேட் இல்யூ ஷன்' (The Great Illusion) என்ற நூலில் பிரிட்டன் வென்றாலும், தோற்றாலும் பொருளாதார அழிவுதான் விளையும் என்று எச்சரிக்கப்பட்டிருந்தது. மாறாக ஜெர்மனியில் போர் ஒன்றே தேசீய பலத்தின் உண்மையான வெளிப்பாடாகக் கருதப் பட்டது. தேசீயக் கொள்கைகளை உருவாக்கும் பொறுப்பிலுள்ள வர்கள் போரின் மூலம்தான் சில நன்மைகளைப் பெற முடியு மென்றால் அதற்கும் தயாராக இருந்தனர்.

அகில பிரிட்டனிலும் ஆளும் வர்க்கத்தினர், பேராசிரி யர்கள். மாணவர்கள். மருத்துவர், வழக்கறிஞர் ஆகியோர் ஜெர்மனியுடன் கணக்குத் தீர்க்கும் நாளை எதிர்பார்த்துக்கொண் டிருந்தது வியப்பிற்குரிய செய்தியாகும். என்றாவது ஒருநாள் ஜெர்மனிக்கு பிரிட்டன் பணிந்தாக வேண்டுமென்றுகூட சிலர் எண்ணினார்கள். 'போர் வெறிகொண்ட ஜெர்மனி தாக்கினால் அமைதி நாடும் பிரிட்டன் அழிவது திண்ணம்' என்று நம்பி னார்கள்போலும். ஜெர்மனியின் போர் வெறிக்கு நெய் ஊற்று வதுபோல் அயர்லாந்துப் பிரச்சினைமூண்டது. 'பிரிட்டன் போரில்

இறங்கினுல் அயர்லாந்து அதனைப் பின்னிருந்து தாக்கும்' என்று ஜெர்மனியின் நாடாளுமன்ற உறுப்பினர் ஒருவர் குறிப்பிட்டாராம். ஃபிரான்சும், ருஷ்யாவும் போரில் குதிக்கும் என்பது ஜெர்மனிக்குத் தெரியும். இவ்விரு நாடுகளையும் அழித்துவிட்டால் பிரிட்டனின் வீழ்ச்சியும் உறுதி என்று ஜெர்மன் போர் வெறியர்கள் கணக்குப் போட்டார்கள். இந்நிலையில் தாய்நாட்டை எதிர்நோக்கிய அழிவுபற்றி பிரிட்டிஷ்மக்கள், ஏன்? அமைச்சரவை கூட அஞ்சியதில் வியப்பில்லை.

வின்ஸ்டன் 1914ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் கடற்படையைக் களத்தில் குதிக்கத் தயாராக வைத்திருந்த சாதனையைப் பற்றி நியாயமான பெருமை கொள்ள முடியும். கடற்படையின் வன்மை, திறமை, முன்னேற்பாடு ஆகியவற்றிற்கு வின்ஸ்டன் ஆற்றியிருந்த அரும்பணிகளை நாடறியும். அவர்தம் ஆற்றல்களைப் பற்றிப் பொதுமக்களுக்கு நம்பிக்கை உண்டு. ஜெர்மன் கப்பலான 'கோபனை' மூழ்கடிப்பதுபோலவும், கடற்போரில் ஈடுபடுவதாகவும் கனவுகள் கண்டுகொண்டிருந்தார் வின்ஸ்டன். போர்க் காலத்தில் தேவையானது செயலாண்மை. வின்ஸ்டன் கடற்படைத்துறையில் சிறப்பான அறிவும், ஆக்கமும் பெற்றிருந்தார். அவற்றைப் பயன்படுத்தவேண்டிய நேரமும் வந்துவிட்டது. 'போர் மூளுமானுல் வின்ஸ்டன் லாயிட் ஜார்ஜை உருத்தெரியாமல் அழித்துவிடுவார்'[1] என்று ஜான் மோர்லி தீர்க்கதரிசனம் கூறியிருந்தார். அதற்கேற்ப இன்று வின்ஸ்டன் பொதுமக்களின் முன் ஜெர்மன் கப்பல்களை மூழ்கடிக்கவும். புகைமண்டிய போர்க் களத்தில் பிரிட்டிஷ் வெற்றிக்கொடி பறக்கவும் கனவுகளைக் காணும் கடல் வெற்றித் திருமகனுகவும் காட்சியளித்தார்.

வின்ஸ்டனின் திறமைகள் கிச்சினரின் படையாற்றலுக்கு ஈடு கொடுக்கும் அளவிற்கு வளர்ந்துவிட்டன. போர் மூண்டதும் போர் அமைச்சகத் தலைமையை மீண்டும் கிச்சினருக்குப் பிரதமர் வழங்கியிருந்தார். சுடான் போரில் சிர்தார் கிச்சினரின் நடவடிக்கைகளைக் குறை கூறியிருந்த சர்ச்சில் இன்று அவருடன் இணைந்து செயல்படத் துடித்துக் கொண்டிருந்தார். அமைச்சரவையில் இருவரும் அடுத்தடுத்து அமர்ந்திருந்தனர். ஃபிரான்ஸ் நாட்டின் படைக்கு சர் ஜான் ஃபிரஞ்சு (Sir John French) தலைமை தாங்கினுர். வின்ஸ்டனின் ஆற்றல்கள் கடற்படையை மட்டும் சார்ந்திருக்கவில்லை. அவரே ஒரு காலத்தில் போர்வீரராகப் பெரும்பணி புரிந்தவர். 1911ஆம் ஆண்டு முதற்கொண்டே

[1] Churchill—A Portrait Philip Guedalla, p. 150.

அடுத்த ஐரோப்பியப் போரின் வெல்திறங்கள் அவரது உள்ளத்தில் மேலோங்கி நின்றன. ஃபிரான்ஸ் தாக்கப்பட்டால் உடனடியாக உதவ வேண்டுமென்பது அமைச்சரவை செய்த முக்கிய முடிவுகளில் ஒன்று. ஃபிரான்சிற்கு அவசரப்படை அனுப்பும் அரிய சாதனையை நிகழ்த்தவேண்டிய பொறுப்பு கடற் படைத்துறையைச் சாரும். இந்தச் சவாலுக்காகத் தான் வின்ஸ்டன் காத்திருந்தார்.

## இப்படை தோற்கின் எப்படை வெல்லும்?

1914ஆம் ஆண்டு ஆகஸ்டில்கூட பிரிட்டனில் போரை எதிர்த்துக் குரல்கள் ஒலித்துக்கொண்டிருந்தன. கிரே, ராம்சே மக்டனல்டு (Ramsay Macdonald) போன்றவர்கள் சமரசத்தையும், நடுவுநிலைமையையும் பற்றி இன்னும் பேசிக்கொண்டிருந்தனர். இதுபற்றி தொழிற்கட்சியில் கருத்து வேறுபாடு எழவே, மக்டனல்டு பதவி விலகினர். அயர்லாந்து மக்கள் நாட்டை உலுக்கிய பிளவுகளை மறந்து தாய்நாடு மாற்றாரின் தாக்குதலிலிருந்து விடுபடுமென்று சூளுரைத்தார்கள். போனர்லாவின் தலைமையில் கன்சர்வேடிவ் கட்சி முழு ஆதரவை வாக்களித்தது. ஜெர்மனி பெல்ஜியத்தைத் தாக்கிய இழிசெயல் வன்மையாகக் கண்டிக்கப்பட்டது. பெல்ஜியத்திற்குக் கொடுக்கப்பட்டிருந்த வாக்குறுதியைக் காப்பாற்ற பிரிட்டிஷ் பேரணி திரண்டது. நாட்டுப்பண் முழங்க வீராவேசங்கொண்ட மக்கள், படையில் சேர்ந்து தாயகங் காக்க அணிஅணியாகத் திரண்டனர். சிறு நாடுகளின் உரிமைக்காகப் பிரிட்டிஷ் மக்கள் அனைவரும் ஒரு மனிதனைப் போன்று ஒன்றுபட்டுக் களத்தில் குதிக்கத் தயாரானார்கள்.

பாரெங்கும் புகழ்பெற்ற பிரிட்டிஷ் கடற்படை பாதுகாப்புச் சக்திகளில் முன்னணியில் நின்ற பெருமை முழுக்க முழுக்க வின்ஸ்டனைச் சேரும். 'வெறுப்புக்குரிய சிறு படை' என்று செருக்குமிக்க கெய்சர் பழித்துப் பேசிய பிரிட்டிஷ் படை பின்னொரு நாளில் ஜெர்மனியே போற்றிப் புகழ்கின்ற பெரும் படையாக எழுச்சிகொள்ளும் காலமும் அண்மித்துவிட்டது. பிரிட்டிஷ் தீவுகளுக்குப் பாதுகாப்பளிப்பது, எதிரியின் போர்க் கப்பல்களைத் துறைகளில் சிறைப்படுத்துவது. அவற்றை எதிர்த்து முறியடிப்பது, மாற்றானின்போர்க்கப்பல்களும், வணிக நாவாய்களும் பெருங்கடலில் உலவாவண்ணம் ரோந்துவருவது, பிரிட்டிஷ் அவசரப்படையை ஆபத்தில்லாமல் ஃபிரான்ஸ் நாட்டில் கொண்டு இறக்குவது-இவையாவும் பிரிட்டிஷ் கடற்படை

ஆற்றவேண்டிய அரிய பொறுப்புகள். கடமையை மேற்கொண்டு களங்கமில்லாமல் செயல்படவேண்டியது சர்ச்சிலின் உரிமை.

தொடக்க காலத்தில் நேசநாடுகள் வன்மைமிக்க ஜெர்மன் கடற்படையை எதிர்க்கவேண்டி யிருந்தது. பிரிட்டிஷ் கடற் படைக்கு ஜெர்மன்படை சற்றும் நிகரற்றது என்றாலும், அவர் களின் போர்க்கப்பல்கள் பெரும் பலம் பெற்றிருந்தன. 1914ல் நேசநாட்டுப் படைகளுக்கு ஜெர்மனி மிகுந்த தொல்லை கொடுத்தது. ஜெர்மன் போர்க்கப்பல்கள் பிரிட்டிஷ் வணிகக் கப்பல்களுக்குப் பெருந்தீமை விளைவித்து வந்தன. எனினும், சர்ச்சிலின் அருமுயற்சியால் மிகச்சிறந்த முறையில் தயாரிக்கப் பட்டிருந்த பிரிட்டிஷ் கடற்படை தொடக்கத்திலிருந்தே கடலா திக்கம் பெற்றிருந்தது. மிகக்குறுகிய காலத்தில் உலகப் பெருங் கடல்களிலிருந்து மாற்றானின் போர்க்கப்பல்கள் விரட்டியடிக்கப் பட்டன. வடகடலில் உலவிக் கொண்டிருந்த 'கோனிஜின் லூயிஸ்' (Konigin Luise) என்ற கண்ணிகள் புதைக்கும் ஜெர்மன் போர்க்கப்பலை 1914 ஆகஸ்டு ஐந்தாம் நாளில் பிரிட்டிஷ் கடற் படை மூழ்கடித்தது. இதுமுதல் பிரிட்டிஷ் கடற்படையின் வெற்றிக் காவியம் தொடங்கியது. ஜெர்மனி கடற்கண்ணி களையும் நீர்மூழ்கிகளையுமே முக்கிய சக்திகளாகக் கருதி வந்தது. வடகடலில் ரோந்து வந்த பிரிட்டிஷ் கப்பல்கள் எதிரிக்கப்பல்கள் வெளியில் வரவேண்டுமென்று முயற்சி செய்தன. ஆகஸ்டு திங்களில் மீண்டும் பிரிட்டிஷ் தளபதி பெயாற்றி, 'மேய்ன்டஸ்' (Mainz), 'கோலின்' (Kolin) என்ற இரு ஜெர்மன் கப்பல்களை மூழ்கடித்தார். இதனைத் தொடர்ந்து ஜெர்மன் கப்பல்களின் நடமாட்டம் குறைந்து, அவைகள் தம் வளைகளுக்குள் பதுங்கி விட்டன. 'வளையிலிருந்து தலையை நீட்டிய எலி வெளியே வரு மென்று காத்திருக்கும் பூனையைப்போல, எதிர்க்கரையிலிருந்து எதிரிக்கப்பல்கள் வருமென்று தேடிக்கொண்டிருந்தார் வின்ஸ் டன்'[1] என்று லாயிட் ஜார்ஜ் குறிப்பிட்டார். மத்தியதரைக் கடலில் 'கோபன்' (Goeben) என்ற ஜெர்மன் கப்பலுக்காக வின்ஸ்டன் 'வாயூறி' நின்றார். ஆனால், கோபன் போக்குக்காட்டி விட்டு மறைந்தது. அவ்வாறே 'பிரெஸ்லோ' (Breslau) என்ற ஜெர்மன் நாசகாரியும் வின்ஸ்டனின் கைகளில் அகப்படாமல் தப்பிவிட்டது. இதற்குள் துருக்கி ஜெர்மனிக்கு ஆதரவளிக்கத் தொடங்கியது. ஆகஸ்டின் முடிவிற்குள் ஹெலிகோலண்ட் (Heligoland) போரில் மூன்று எதிரிப் போர்க்கப்பல்கள் மூழ்கடிக் கப்பட்டன. மூன்று கப்பல்கள் முடமாக்கப்பட்டன. இத்தனைக்கும்

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 152.

பிரிட்டிஷ் படைக்குச் சிறிய சேதம்கூட ஏற்படவில்லை. இது ஜெர்மனியின் செருக்கிற்குப் பிரிட்டிஷ் கடற்படை கற்பித்த சிறப்பான பாடம்.

பிரிட்டிஷ் கடற்படையின் முதல் பெரும்பணி ஃபிரான்சிற்குப் பிரிட்டனின் அவசரப்படையைப் பத்திரமாக அனுப்பிவைப்ப தாகும். இதற்காக வின்ஸ்டன் ஃபிரான்சின் படைத்தலைமைச் செயலகத்திற்குச் சென்று தளபதி சர் ஜான் ஃபிரஞ்சுடன் நட்புறவு கொண்டார். எதையும், நேரில் கண்டு தெரிந்துகொள்ள விரும்பும் வின்ஸ்டன் சொய்சென்ஸ் (Soissons) துறைமுகத்தில் நடைபெற்ற தாக்குதல்களைப் பார்வையிட்டார். ஆனால், பிரிட்டிஷ் அவசரப்படையை ஃபிரான்சில் கொண்டிறக்குவதுதான் அவரது முக்கிய கவலையாக இருந்தது. அவ்வாறே பிரிட்டிஷ் படை எவ்வித ஆபத்துமின்றிக் கடல்கடந்து ஃபிரான்சை வந்து சேர்ந்தது. முதலாம் எலிசபெத் அரசியார் காலத்தில் நடைபெற்ற கடற்கொள்ளைத் தாக்குதல்களைப் போன்று, பெருங்கடல் களில் ஜெர்மன் ஆதிக்கத் திட்டுகள் சிதறடிக்கப்பட்டன.

### டன்கிர்க்கும் (Dunkirk), ஆன்ட்வெர்ப்பும் (Antwerp)

கடற்படைத்துறை அமைச்சரின் எண்ணமெல்லாம் ஏழுகடல் களையும், ஃபிரான்சில் நடத்தவேண்டிய போர் முறைகளையும், டன்கிர்க்கில் நிறுத்தப்பட்டிருந்த பிரிட்டிஷ் கடற்படைக் கிளை யின் எதிர் நடவடிக்கைகளைப் பற்றியும்தாம் சுற்றிச்சுற்றி வந்தன. நேசநாட்டுப் படைகளில் இடக்கோடிப் புடைப்படை அணியாக டன்கிர்க் தளம் தெரிந்தெடுக்கப்பட்டு, அங்கு இங்கி லாந்தை ஜெர்மனியின் விமானத் தாக்குதல்களிலிருந்து காப்பாற்ற பிரிட்டிஷ் கடற்படை விமானப்பணிப் பிரிவு நிறுத் தப்பட்டிருந்தது. விமானப்பொறிகளை ஜெர்மன் திடீர்த்தாக்கு தல்களிலிருந்து பாதுகாக்க ஆயுதந்தாங்கிய கார்களும் டாங்குகள் (Tanks) என்ற கவச வண்டிகளும் உருவாக்கும் பணி மேற் கொள்ளப்பட்டது. இதனைத் தொடர்ந்து அகழிகள் தோண்டப் பட்டன. இதில் போடப்படும் எத்தகைய தடைகளையும் கவச வண்டிகள் கடந்துவிட முடியும். இத்தகைய விந்தையான கவச வண்டிகளை உருவாக்கும் பொறுப்பை வின்ஸ்டன் கடற்படைத் துறையிடமும் அதன் அன்புக் குழந்தையாகிய ராயல் கடற்படை விமானப் பிரிவிடமும் அளித்திருந்தார். இந்தப் பிரிவுதான் டன்கிர்க்கில் நிறுவப்பட்டிருந்தது.

பாதுகாப்பின் மூன்றாவது அங்கமாக விமானப்படையை உருவாக்குவதில் வின்ஸ்டன் புரிந்துள்ள மாபெரும் பணிகளை

இங்கே குறிப்பிடவேண்டியது அவசியமாகும். கப்பல்களுக்கு எண்ணெய் எரிபொருளேயும் அகழிகளுக்குக் கவசவண்டிகளேயும், ஆகாய விமானங்களேயும், நாட்டுப் பாதுகாப்பின் முப்பெரும் தேவையாக உணர்ந்து, வின்ஸ்டன் அவற்றை உருவாக்கிய பெருமை பெற்ருர். 1914ஆம் ஆண்டில் நிகழ்ந்த போரபாயத்தின் சற்று முன்னர்தான் ஆகாய விமானங்கள் உருவாக்கப் பட்டன. விமானங்களேப் போரில் பயன்படுத்தும் சாத்தியக் கூறுகளே நிபுணர்கள் ஆராய்ந்தனர். படைத்துறையின் பழமை விரும்பிகள் இந்த முயற்சிகள் வெற்றிபெறும் என்று எண்ண வில்லே. ஆனுல், தரைப்படையிலும், கடற்படையிலுமிருந்த அரசியல் தலேவர்கள் புதிய கருத்துகளே வரவேற்றனர். கடற் படைத்துறையில் வின்ஸ்டனும், போர் அமைச்சகத்தில் ஜாக் சீலியும் (Jack Seely) பள்ளிமாணவர்கள் புதிய பொம்மையை இயக்குவதில் காட்டும் போட்டி உணர்வுடன், விமானத்தைப் பாதுகாப்பிற்குப் பயன்படுத்தும் வாய்ப்புகளே ஆராய்ந்தனர். இவர்களின் முனேப்பு காரணமாகப் படைத்துறையில் விமானப் பணி வளர்ச்சி கண்டது. 1912ஆம் ஆண்டிற்குள் விமானப் பணியைத் தனி நிறுவனமாக அமைத்து அதற்குள்ள தனித் தகுதியையும் பிறர் ஒப்புக்கொள்ள வைத்தார் வின்ஸ்டன்.

இந்த ராயல் விமானப்படையின் இருபிரிவுகளான கடற் படைப் பிரிவையும், தரைப்படைப் பிரிவையும், விமானக் குழு வொன்று இணேத்தது. இக்குழுவில் இருபணிப் பிரிவுகளின் பிரதிநிதிகளும், விஞ்ஞானிகளும், அத்துறைகளின் அரசியல் தலேவர்களும் இடம் பெற்றிருந்தனர். சர்ச்சிலும், சீலியும் விமானங்கள் பற்றிய பெரும் ஒப்பந்தம் செய்திருப்பதைக் கண்டு பொதுமக்கள் வியப்புற்றனர். கடற்படைத்துறை வரவுசெலவுத் திட்டத்திலிருந்து தரைப்படைக்காகச் சீலி 25,000 பவுன் கடன் பெற்ருர். இதற்கு ஈடாகக் கடற்படைத்துறைக்காக கணிச மான தொகைக்கு விமானங்களேச் சர்ச்சில் பெற்ருர். ராணுவத் தலேமை அதிகாரிகளும், ராணுவ வானூர்திக்கலே இயக்குநரும் (Military Aeronautics Directorate) அரசியல் வாதிகளேக் கடிந்து பெருங்கூச்சலிட்டனர். ஆனுல், ஒப்பந்தம் செய்தாகி விட்டது. அதனுல், பொதுமக்கள் பயன்பெறப் போகிருர்கள். கரைதுறை வேவுபார்க்கவும், நீர்மூழ்கிகளே வேட்டையாடவும், விமானங்கள் சிறந்தவையென மெய்ப்பிக்கப்பட்டன.

புதிய படைக்குத் தனி அமைச்சகம் வேண்டுமென்று வின்ஸ்டன் வற்புறுத்தி வந்தார். இரண்டாண்டுகளின் பின்னர் தான் கர்ஸான் பிரபு (Lord Carzon) தலேமையில் விமானக்

கழகம் (Air Board) நிறுவப்பட்டது. போரின் தொடக்கத்தில் இரு அமைச்சர்களின் தலைமையில், இரு விமானப்படைகள் இயங்கியதால் சில சிக்கல்கள் விளைந்தன. நாட்டின் பாதுகாப்பிற்கு விமானப்படையின் அவசியத்தை நன்குணர்ந்த வின்ஸ்டன் ஒரு மையக்கட்டுப்பாடு இருக்க வேண்டுமென்றும் விரும்பினர். இதற்காக அவர் பெரும் முயற்சிகள் செய்தார். இந்த நோக்கத்துடன்தான் ராயல் கடற்படை விமானப்பணி தனி அமைப்பாக உருவாகியது. அடுத்தபடியாக விமானப்படையை உள்நாட்டின் பாதுகாப்பிற்காகப் பயன்படுத்த வின்ஸ்டன் முயன்றார். அமைச்சரவை கூட்டத்தில் உள்நாட்டு விமானப் பாதுகாப்பின் பொறுப்பையும் வின்ஸ்டன் ஏற்றுக்கொள்ளுமாறு கிச்சினர் பிரபு கேட்டுக்கொண்டார். இலண்டன் நகரப் பாதுகாப்பிற்காக முதல் வானூர்தி எதிர்ப்புப்படை (Anti Aircraft Corps), கமோடோர் மர்ரே சோட்டர் (Murry Sueter) தலைமையில் நிறுவப்பட்டது. கடற்படை விமானப்பணிக் கிளையில் இன்னும் பல மாற்றங்களும் பயிற்சிகளும் தேவைப்பட்டன. கடல் விமானங்கள் போதிய வளர்ச்சி பெறவில்லை. விமான ஓட்டிகளுக்குப் பயிற்சி தரப்படவில்லை. கடற்படையும் கடற்படை விமானத் துறையை நன்கு பயன்படுத்தவில்லை. இவ்வாறு கடற்படையால் அலட்சியப்படுத்தப்பட்டு, தரைப்படையால் புறக்கணிக்கப்பட்டு நலிவுற்ற கடற்படை விமானத்துறை, வின்ஸ்டனின் ஊக்கத்தாலும், முயற்சியாலும் புதிய வழிகளில் செயல்பட வாய்ப்புகளைத் தேடிக்கொண்டிருந்தது. இந் நிலையில்தான் தளபதி சாம்சன் (Samson) கடற்படை விமானத்துறையைச் சேர்ந்த விமானங்களுடன் டன்கிர்க்கில் வந்திறங்கினர். இதுமுதல் விமான வரலாற்றின் புதியதொரு சகாப்தம் பிறந்தது எனலாம்.

### டன்கிர்க் சர்க்கஸ்

நேசநாட்டுப் படைகளின் இடப்புற அணியில் தளபதி சாம்சன் நிகழ்த்திய அருஞ்செயல்கள் ஒரு காவியமாகத் திகழத்தக்கச் சிறப்புப்பெற்றன. ஒரு சில வீரர்களுடனும், சாமான்ய விமானங்கள் சிலவற்றுடனும், தற்காலிகமாக ஆயுதங்கள் ஏற்றப்பட்டிருக்கும் மோட்டார்களுடனும் அவர் அங்கிங்கெனாதபடி எங்கும் பரவி நின்று ஈட்டியேந்திய குதிரை வீரர்களை (Uhlans) அச்சுறுத்தியும், ஃபிரஞ்சுப் பிரதேசப் படைகளை ஊக்குவித்தும் அற்புதங்களை நிகழ்த்தினர். ஃபிரஞ்சு மக்களையும், பெல்ஜியர்களையும் பிரிட்டனுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்யுமாறு தூண்டிய ஜெர்மன் துருப்புகளை அவர் கைது செய்தார். கடற்படை வீரர்களும், உழவுப்படைகளும் அவருக்கு உதவி

யாக அனுப்பப்பட்டன. சாம்சனின் படை பலகலப்பு அம்சங்களைப் பெற்றிருந்ததால் டன்கிர்க் சர்க்கஸ் (Dunkirk Circus) என்றழைக்கப்பட்டது. இவர்கள் எதிரிப்படைகளின் தொடர்புகளை அறுத்து நாசம் விளைவித்தனர்.

வின்ஸ்டன் டன்கிர்க் சர்க்கசை, அடிக்கடிச் சென்று பார்வையிட்டார். சாம்சன் படைகளின் முன்னேற்றத்தைத் தடை செய்வதற்காக எதிரிகள் அகழிகளை வெட்டிவைத்தார்கள். இந்தத் தடைகளைக் கடப்பதற்கு மோட்டார்கள் சுமந்து செல்லும் தூக்குப்பாலங்களைக் கொண்டு செல்லுமாறு வின்ஸ்டன் யோசனை கூறினார். இதுதான் டாங்குகள் (Tanks) என்ற கவசவண்டிகள் பிறந்த கதையாகும். வின்ஸ்டன் விரும்பியபடி அட்மிரல் பேகன் (Bacon) உருவாக்கிய டாங்கின் கருவில், நடமாடும் பாலம் ஒன்று பொருத்தப்பட்டிருந்தது. அகழியை நெருங்கியதும் தானே தூக்கி உயர்ந்து அகழியைக் கடக்கும். அதே நேரத்தில் கர்னல் ஸ்விண்டன் (Col. Swinton) முயற்சியால் எதிரியின் இயந்திரத் துப்பாக்கிப்பொறிகளை முரியடிக்கும் நோக்கத்துடன் கவச வாகனங்கள் உருவாகிக்கொண்டிருந்தன. 1914ஆம் ஆண்டு டிசம்பரில் கர்னல் ஹாங்கி (Col. Hankey) உருவாக்கிய திட்டம் வின்ஸ்டனின் தூக்குபால மோட்டார்களுடன் ஒத்துவருவதைக் கண்டார். இதனைத் தொடர்ந்து கடற்படை விமானத் துறையினரைப் பதினெட்டு 'தரைக்கப்பல்களை' (Land Ships) தயாரிக்குமாறு வின்ஸ்டன் பணித்தார். இறுதியாக ஒரு தரைக்கப்பல் உருவாக்கப்பட்டது. 'எச். எம். எஸ். சென்டிபீட்' (H. M. S. Centepede) என்றழைக்கப்பட்ட இந்தக் கப்பலை 'டாங்குகளின் தாய்' என்று கூறலாம். 1916ல் இந்த'மாதிரி டாங்கு' ஒப்புக் கொள்ளப்பட்ட பின்னர் மேலும் நூறு 'டாங்குகள்' செய்யப்பட்டன. இன்று படைத்துறையில் பெரும் முக்கியத்துவம் பெற்றுள்ள இந்த வன்மையான படைக்கலத்தை உருவாக்கிய பெருமை வின்ஸ்டனையே சாரும். அவருக்கே இயல்பான உறுதியுடன் இடர்ப்பாடுகளையும் எதிர்ப்பையும் சமாளித்து இந்த அற்புதத்தைப் புரிவதில் அவர் வெற்றி கண்டார்.

கடற்படை விமானத்துறை கோலோன் (Colonge), ஃபிரைட்ரிச் ஷாஃபென் (Friedrich Shaften): ஆகிய ஜெர்மன் விமானதளங்களைத் தாக்கியது. டன்கிர்க்கிலிருந்து ஸீப்ருஜ் (Zeebrugge) நீர்மூழ்கித் தளத்தின்மீது குண்டுகள் வீசப்பட்டன. 1914ஆம் ஆண்டு செப்டம்பரில் ஆங்கிலக் கால்வாயில் கேந்திர முக்கியத்துவம் வகித்த டன்கிர்க் துறைமுகத்தின் வழியாகத்தான் ஜெர்மன் படைகள் ஃபிரான்ஸ் நாட்டிற்குள் குவிக்கப்பட்டன.

எதிரிகளின் செய்தித் தொடர்புகள் அதற்கு அண்மையில் கீழ் மேலாகச் சென்றன. ஃபிரஞ்சுத்தளபதி ஜோஃப்ரே (Joffre) யின் ஆலோசனையின்பேரில் இந்தத் தொடர்புகளை அழிக்க 'டன்கிர்க் சர்க்கசை' வின்ஸ்டன் பயன்படுத்தினார். பீவர்ப்ரூக் பிரபுவின் (Lord Beaverbrook) கருத்துப்படி டன்கிர்க் சர்க்கஸ் வின்ஸ்டனின் வருங்காலத்தைப் பாதித்தது. பிரதமர் ஆஸ்குவித் முதல்முறையாக வின்ஸ்டனின் முடிவுகளைப்பற்றிச் சிறிது கலக்கம் கொள்ளத் தொடங்கினார். இறுதியில், பிரதமரின் ஆலோசனையின்பேரில் 'சர்க்கஸ்' கலைக்கப்பட்டது. எனினும், டன்கிர்க்கில் பிரிட்டிஷ் படைகளின் நடமாட்டம் ஜெர்மன் வட்டாரங்களில் கலவரத்தை உண்டாக்கியது. தன்னுடைய புறவணிகளை 40,000 நேசநாட்டுப் படைவீரர்கள் அச்சுறுத்திக்கொண்டிருக்கிறார்கள் என்று ஜெர்மனி நம்பியது. நெருக்கடி நிலையில் உருவாகிய இந்தப் பீதி காரணமாக ஜெர்மன் படைகள் பின்வாங்கின. இதனால் நேசநாட்டுப் படைகள் காப்பாற்றப்பட்டன என்பது உண்மை.

## ஆன்ட்வெர்ப் வெற்றியா ? தோல்வியா ?

டன்கிர்க் நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து அக்டோபரில் வின்ஸ்டன் தமது கவனத்தைப் பெல்ஜிய கடற்கரைமீது திருப்பினார். இதிலும் கடற்படைத்துறைத் தலைவர் தரைப்படை விவகாரங்களில் குறுக்கிடுவதில் முடிந்தது. இதுதான் ஆன்ட்வெர்ப் துறைமுகத்திற்குள் அனுப்பிய படையெடுப்பாகும். இதுவரை ஜெர்மன் படைகள் ஆன்ட்வெர்ப்பிற்குள் செய்திருந்த ஊடுருவல்கள் நகரின் அரண்களையும், பெல்ஜியப் படையையும் அரசரையும் அதிகமாகப் பாதிக்கவில்லை. ஆனால், அக்டோபரில் ஜெர்மன் படைகள் ஆங்கிலக் கால்வாயின் துறைமுகங்களைத் தாக்க முனைந்ததால். ஆன்ட்வெர்ப்பும் அச்சுறுத்தப்பட்டது. பெல்ஜியம் இந்தத் தாக்குதலைச் சமாளிக்கக்கூடிய நிலையில் இல்லை என்ற செய்தியும் கிடைத்தது. உடனடியாகக் கிச்சினர் சர்ச்சிலைக் கலந்தாலோசித்தார். மார்ன் ஆற்றுப்போரில் நேசநாடுகள் வெற்றி பெற்றிருந்தாலும் ஃபிரஞ்சுப் படைகள் பின்வாங்கிக் கொண்டிருந்தன. ஜெர்மன் படைகள் பெல்ஜியத்துக்குள் முன்னேறியவண்ணம் இருந்தன. லீஜ் (Liege) நகரும், நாமூரும் (Namur) வீழ்ந்துவிட்டன. ஆன்ட்வெர்ப்பும் ஆட்டங்கண்டிருந்தது.

அக்டோபர் இரண்டாம் நாள் இலண்டனிலிருந்து டன்கிர்க் சென்றுகொண்டிருந்த சர்ச்சில் உடனே திருப்பி அழைக்கப்பட்டார். உடனே அவர் ஆன்ட்வெர்ப்பிற்குச் செல்லுமாறு கிச்சினர்

கேட்டுக்கொண்டார். பிரிட்டிஷ் தளவாடங்கள் ஆன்ட்வெர்ப்பை வந்து சேரும்வரை எதிர்ப்பைத் தாங்கி நிற்கச் செய்யவேண்டு மென்பது சர்ச்சிலுக்கு இடப்பட்ட பணியாகும். ஆன்ட் வெர்ப்பை அடைந்த வின்ஸ்டன், இன்னும் மூன்று நாட்கள்வரை பெல்ஜிய வீரர்கள் போராடவேண்டிய அவசியத்தை அவர்கள் உணரச் செய்தார். வின்ஸ்டனை கோலாகலமாக வரவேற்ற பெல்ஜிய மக்கள், சோர்ந்து தளர்ந்து நின்ற நிலையில் வீரப்பெரு மகனின் மொழிகளால் ஊக்கம் பெற்றனர். பெல்ஜிய அரசரும், பிரதமரும் புத்துணர்ச்சி பெற்றார்கள். பிரிட்டனிலிருந்து உதவிப் படை விரைந்துகொண்டிருந்தது. தமது கடற்படைத்துறைத் தலைமையையும் தியாகம் செய்துவிட்டு ஆன்ட்வெர்ப்பில் பிரிட் டிஷ் படைகளுக்குத் தலைமை தாங்கவும் தம்மை அர்ப்பணித்தார். வின்ஸ்டனுக்குச் சக்தி பிறந்தது. போர் என்பது அவரது இரத்த நாளங்களில் ஓடும் உணர்வாயிற்றே! பெல்ஜிய அரசரும், அமைச் சர்களும், வீரர்களும் வின்ஸ்டனுக்குக் கட்டுப்பட்டார்கள்.

எல்லாம் நாடகப்பாணியில் அமைந்திருந்தன. வின்ஸ்டனின் கீழ் 20,000 வீரர்கள் இருந்தனர். ஆனால், அவருக்குத் துணை யாக வந்த 8000 வீரர்களைக் கொண்ட பிரிட்டிஷ்படை பயிற்சி யற்ற இளம் வீரர்களைக் கொண்டிருந்தது. ஜெர்மானியரின் பேய்வாய்ப் பீரங்கிகள் ஆன்ட்வெர்ப்பின் காப்பரண்களைத் தகர்த்துக்கொண்டிருந்தன. 'தமக்குக் கீழிருந்த படைகளை நெப்போலியனைப்போல் தலைமையேற்று வின்ஸ்டன் நடத்தினார்' என்று ஈயான் ஹாமில்டனின் குறிப்புகளில் காணக்கிடக்கிறது. எனினும் ஆன்ட்வெர்ப் வீழ்ந்தது. கடற்படையைச் சேர்ந்த 900 வீரர்கள் சிறைப்பட்டனர். 50 பேர் உயிரிழந்தனர். 130 வீரர்கள் காயமுற்றனர். டச்சு எல்லைப்புறத்தைக் கடக்க முயன்ற ஓரிரு படையணிகள் சிறைப்பட்டன. இத்தகைய இழப்புகளும், ஆன்ட்வெர்ப்பின் வீழ்ச்சியும் வின்ஸ்டனைக் கடுமையான கண்ட னத்துக் குள்ளாக்கின.

கன்சர்வேடிவ்கள் வின்ஸ்டனின கடற்படைத் தலைமையைக் குறைகூறி அவரை, 'பயிற்சி பெறும் கடற்படைத் தலைவர்' என்று கேலி செய்தனர். அவர் பெல்ஜியத்திற்கு விரைந்தது பற்றிக் கதைகதையாகச் சொன்னார்கள். அவரே கிச்சினரை பேச்சினால் மயக்கித் தம்மை ஆன்ட்வெர்ப்பிற்கு அனுப்புமாறு செய்த தாகவும், அங்குத் தன்னிச்சையாக வரம்பு மீறி நடந்துகொண்ட தாகவும் கூறப்பட்டன. 'பல வீரப்பெருமக்கள் உயிரிழப்பதற்கு வின்ஸ்டனே காரணம்' என்ற பயங்கரப் பழியும் அவர்மீது சுமத்தப்பட்டது. பிரதமர் ஆஸ்குவித் தம் சகாவைத் தக்க

முறையில் ஆதரித்து அவருக்காக வாதாடாமல் விட்டது வருந்தத்தக்க செய்தியாகும். வின்ஸ்டனின் முயற்சிகளையும், துணிவையும் அவர் பாராட்டிக் கூறவில்லை. அக்டோபர் இறுதி யில் வின்ஸ்டன் பிரதமரைப் பேட்டி கண்டார். இதைப் பற்றி ஆஸ்குவித் தமது நாட்குறிப்புகளில் எழுதியிருக்கிறார். ஆன்ட் வெர்ப் விவகாரம் பற்றிய முழு விவரங்களையும் வின்ஸ்டன் பிரதமருக்கு எடுத்துக் கூறியபின், 'தம்மைக் கடற்படைப் பொறுப் பிலிருந்து விடுவித்து, ராணுவப் பணிக்கு அனுப்புமாறு விநய மாகக் கேட்டுக்கொண்டார். அரசியல் வாழ்வு தமக்கு ஒரு பொருட்டன்று என்றும், போரில் பெறக்கூடிய புகழுக்கு முன்னால் அது ஒன்றுமில்லை'[1] என்றும் வின்ஸ்டன் கூறியதாகக் குறிப்புகள் இருக்கின்றன.

இந்தக் குறிப்புகள் ஆஸ்குவித்தின் குறுகிய நோக்கத்தை நமக்குத் தெளிவுபடுத்துகின்றன. அவரிடம் உயர் பண்புகள் இருக்கவில்லை என்பதும், வின்ஸ்டனின் பெயரைப் பாதுகாப்பதில் அவர் ஏன் போராடவில்லை என்பதும் இதனால் விளங்குகின்றன. வாழ்க்கையில் ஏற்படும் சிறு தவறுகளையும் மிகைப்படுத்தி எள்ளி நகையாடும் இழிகுணம்தான் அவரிடமிருந்ததேயன்றி சான்றோர் களுக்குரிய பரிவும், பெரிய மனமும் அவரிடம் விளங்கவில்லை. ஆன்ட்வெர்ப் சாதனையின் உண்மையான சிறப்பை உய்த் துணர்ந்தபின் வரலாறு எழுதப்பட்டபோது ஆன்ட்வெர்ப் பிற்கும், அதன் சிறப்புக்கும் உரிய இடம் அளிக்கப்பட்டது. ஆன்ட்வெர்ப் முற்றுகையை நீடித்துப் பெல்ஜிய நாட்டு வீரப் பெருமக்களுக்கு ஊக்கமளித்த வின்ஸ்டனின் பணி அவரது பொதுவாழ்வின் மகத்தான சாதனைகளில் ஒன்றாகும்.

'ஆன்ட்வெர்ப்பைக் காப்பாற்றச் செய்யப்பட்ட பிரிட்டிஷ் முயற்சி வெற்றி பெறவில்லை என்பது உண்மைதான். ஆனால், பின் நிகழ்ச்சிகளை அது வன்மையாகவும், நிலையாகவும் பாதித்தது. ஆன்ட்வெர்ப் வீழ்ச்சியடைகின்றவரைக்கும் எதிரிப்படைகள் ஐப்பிரஸ் (Ypres) மீதும், கடற்கரைமீதும் தாக்குதல்களைச் செய்ய முடியவில்லை......மேலும் வடக்கில் ஜெர்மானியர்களின் முன்னேற்றம் முற்றிலும் தடைப்பட்டது......ஆன்ட்வெர்ப் ஒரு நாளுக்கு முன்னதாக வீழ்ந்திருந்தாலும் எதிரிகளின் கையோங்கி இருக்கும்' என்று பிரிட்டிஷ் போர்களின் அதிகாரபூர்வமான வரலாறு கூறுகிறது. இரண்டாவது உலகப்போரில் ஃபிரான்சை ஜெர்மன் தாக்கியபோது ஆங்கிலக் கால்வாயின் துறைமுகங்கள்

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 167.

வீழ்ச்சியுற்ற பயங்கர அழிவு, ஆன்ட்வெர்ப்பில் வின்ஸ்டன் ஆற்றிய அரும்பணியின் முக்கியத்துவத்தைக் கோடிட்டுக் காட்டுகிறது.

இத்தகைய குற்றச்சாட்டுகளால் வின்ஸ்டன் மனமிடிந்து விடவில்லை. நாடு திரும்பித் தம் அலுவல்களை வழக்கம்போல் கவனித்து வந்தார். மீண்டும் எழுபத்தினான்கு வயதினரான ஃபிஷர் கடற்படை அமைச்சரகத்திற்குக் கொண்டுவரப்பட்டார். சர்ச்சிலும், ஃபிஷரும் தம் பொறுப்புகளைப் பகிர்ந்துகொண்டனர். 1914ஆம் ஆண்டு நவம்பரில் ஜெர்மன் தளபதி வான் ஸ்பீ (Von Spee) சிலி நாட்டுக்கரையில் பிரிட்டிஷ் கடற்படையைத் தோற்கடித்தார். ஆனால், 'கோனிஸ்பர்க்' (Konisberg), எம்டன் (Emden) என்ற ஜெர்மன் கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன. பிரிட்டிஷ் படை ஃபாக்லண்ட் (Falkland) தீவிற்கு விரைந்து அனுப்பப்பட்டது. வான் ஸ்பீ முறியடிக்கப்பட்டார். ஜெர்மன் கடற்படையின் போர்க்கப்பல்கள் முழுவதும் அழிக்கப்பட்டன. இதனைத் தொடர்ந்து ஜெர்மன் கடற்படைகள் கீல் (Kiel) கால்வாய் ஹெலிகோலாந்து ஆகிய பகுதிகளில் பதுங்கிக்கிடந்தன. 'ஜெர்மன் கடற்படை வெளியே வராவிட்டால் வளைகளிலிருந்து எலிகளை வெளியேற்றிவதுபோல் அவைகளை வெளியேற்றுவோம்'[1] என்று ஆவேசமாகப் பேசினார். பிரிட்டிஷ் படைகள் வெல்லும் போதெல்லாம் அவருக்குப் புகழ்மாலை. அவை பின்வாங்கினால் வசைமாலை. அவரோ அசையாத மலைபோல் அன்றாட அலுவல்களைக் கடமையுணர்ச்சியுடன் ஆற்றி வந்தார்.

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 168.

# 8. டார்டனலசும் (Dardanelles) காலிப்போலியும் (Gallipoli)

டார்டனலஸ், காலிப்போலி—இந்த இரு பெயர்களும் எண்ண முடியாத வீரத்தையும், நம்ப முடியாத மனிதத் தவறு களையும் குறிக்கும் சொற்கள். பிரிட்டிஷ் கடற்படை, தரைப் படை வீரர்களுக்கு டார்டனலசும், காலிப்போலியும், பிரிட்டிஷ் வரலாற்றில் இடம்பெற்றுள்ள எந்த வீரகாவியத்தையும்போல் காலத்தால் அழியாத புகழ்பெற்ற வீரச்செயல்கள். ஆனால், அந்நாள்களில் போர்க்கள ஆலோசனைக்குழுவில் இருந்த அரசியல் வல்லுநர்களுக்கோ அந்த இரு பெயர்களும் குழப்பத்தைக் கடிந் துரைக்கும் கண்டனச் சொற்களாகப் பயன்பட்டன. நல்ல உயிர்கள் பல நாசமடைய வழிவகுத்த காலதாமதத்தை நினை வூட்டும் அவப்பெயர்களாக விளங்கியவை. வின்ஸ்டன் சர்ச்சிலின் வாழ்க்கையில் டார்டனலசும், காலிப்போலியும் தனிப்பட்ட துரதிர்ஷ்டங்களை நினைந்துருகச் செய்யும் அவமானச் சின்னங் களாகும்.

இந் நிகழ்ச்சிகள் நடைபெற்ற காலத்திலும், அவற்றைத் தொடர்ந்த பல ஆண்டுகளிலும் டார்டனலஸ், காலிப்போலி தோல்விகளுக்கு வின்ஸ்டன் முக்கியமான பழியை ஏற்கவேண்டிய தாயிற்று. அரசர் ஆணைபெற்ற விசாரணைக்குழு வின்ஸ்டன்மீது படிந்த களங்கத்தை நீக்கியபோதிலும், அவர்மீது வீசியெறியப் பட்ட அவதூறுப்புழுதி இன்னும் ஒட்டிக்கொண்டுதான் இருந்தது. 'காலிப்போலியில் வின்ஸ்டன் குட்டையைக் குழப்பினர்' என்ற குற்றச்சாட்டை அதுகாலை எங்கும் கேட்கலாம். காலிப்போலி யும், ஆன்ட்வெர்ப்பும் வின்ஸ்டனின் எதிரிகளால் அவரைக் கறைப்படுத்தவும், பதவியில் இருந்து தள்ளிவைக்கவும் வன்மை யான ஆயுதங்களாகப் பயன்படுத்தப்பட்டன. இந்த இரு புகழ் பெற்ற நிகழ்ச்சிகளின் தொடக்கத்தையும், முடிவையும் ஆராய் வது அவசியமாகும்.

'மழை விட்டும் தூவானம் விடவில்லை' என்பது போல் போர்க்காலத்தில் கட்சிப்பூசல்கள் வெளிப்படையாக அழிந்து விட்டதாகத் தோன்றினாலும், பகையுணர்ச்சிகளும், இழிவான விஷமச்செயல்களும் புதரில் பதுங்கிய பாம்பைப்போல் திரை மறைவில் வாழ்ந்துகொண்டிருந்தன. இந்த நச்சுச் சக்திகளுக்குப் பலியானவர்களில் ஹால்டேனும், பேட்டன்பர்க் இளவரசர் லூயிசும் முக்கியமானவர்கள். பிரிட்டிஷ் படையையும், படைத் துறை அமைச்சகத்தையும் சீரும் சிறப்புமிக்க வகையில் புத்துயிர் அளித்துப் புகழ்மணம் பரப்பியவர் ஹால்டேன். அவசரப்படைத் திட்டத்தை உருவாக்கி அமோக வெற்றி கண்டவர் ஹால்டேன். ஆனால், அவரை ஜெர்மனியுடன் இரகசியத் தொடர்புகொண்டவ ரென்றும், நாட்டுத் துரோகியென்றும் எதிரிகள் குற்றஞ்சாட்டி னார்கள். வேட்டையாடப்பட்டு, வேலையை விட்டு விரட்டப் பட்டார் ஹால்டேன். பேட்டன் இளவரசர் லூயிசை அடுத்த படியாகப் பலியிட்டார்கள். பிறப்பாலும், படிப்பாலும் ஜெர் மானியராகக் கருதப்பட்ட இளவரசர் லூயிஸ் துரோகக் குற்றம் சாட்டப்பட்டார். வின்ஸ்டனுடன் இணைந்து, பிரிட்டிஷ் கடற் படையைச் சீரான முறையில் அமைத்து நாட்டிற்கு நல்லது செய்தவர் லூயிஸ். 1914ஆம் ஆண்டு அக்டோபரில் இன்னல் களைப் பொறுத்துக்கொள்ள முடியாத நிலையில் இளவரசர் பதவி துறந்தார்.

இந் நிலையில்தான் வின்ஸ்டன் துணிச்சலான ஒரு முடிவை மேற்கொள்ள நேர்ந்தது. இதுவே பின்னர் அவரது வீழ்ச்சிக்கும் வழி வகுத்தது. அதாவது மீண்டும் ஃபிஷர் பிரபுவை அழைத்துக் கடற்படைத் தளபதி யாக்கினார். எழுபத்தினான்கு வயதினரான ஃபிஷர் இன்னும் இளைஞனுக்குரிய ஊக்கமும், ஆற்றலும், செய லாண்மையும் கொண்டு பல சீர்திருத்தங்களைச் செய்தார். ஆனால், ஃபிஷரின் சொந்தக் கருத்துகளும், அசைக்க முடியாத உறுதிப்பாடுகளும் கடற்படைத்துறை அமைச்சகத்தில் அவ ருக்குப் பல எதிரிகளை உருவாக்கின. வின்ஸ்டனும், ஃபிஷரும் ஒன்றுபட்டு இரட்டையர்கள்போல் உழைத்தனர். இவர்களின் கூட்டு முயற்சியால் ஃபாக்லண்ட் தீவுப் படையெடுப்பு வெற்றி பெற்றதை ஏற்கெனவே கண்டோம். ஆனால், உள்ளுக்குள்ளே பூசல்கள் நீறு பூத்த நெருப்பாகப் புகைந்து கொண்டிருந்தன. சாதாரண ஒரு படைவீரரான கிச்சினர் பிரபு பிரதமப் படைத் தளபதியாகவும், அனுபவம் அதிகமில்லாத வின்ஸ்டன் கடற் படைத்துறை அமைச்சராகவும் இருப்பதைக் கடற்படை விவகா ரங்களில் தம்மைத் தனிப்பெரும் நிபுணராகக் கருதிய ஃபிஷர் எவ்வாறு தாங்கிக்கொள்ள முடியும்? உள்ளூற இதனை நினைத்து

மனம் புழுங்கிக் கொண்டிருந்தார். ஃபிஷருக்கு டார்டனலஸ் நிகழ்ச்சி வசதியான வாய்ப்பை உருவாக்கியது. பழிவாங்கும் பண்புகெட்ட படலம் தொடங்கியது. இருவருக்கும் இடையே நீண்ட நாள்களாகப் புகைந்துகொண்டிருந்த பிளவு வெடித்தது. விளைவு, இருவரும் வீழ்ந்தனர். அவர்களுடன் அமைச்சரவையும் வீழ்ச்சியுற்றது.

## கிழக்கு முனையில் குழப்பம்

1914ஆம் ஆண்டு ஆகஸ்டில் ஜெர்மன் போர்க்கப்பலான 'கோபன்' மூழ்கடிக்கப்பட்டதால், வெண்கடல் முதல், பாரசீகக் குடா வரை மனித வரலாற்றின் போக்கில் மாறுதல் ஏற்பட்டது. இந்தக் கப்பல் போய்ச் சேரவேண்டிய இடம் கான்ஸ்டான்டிநோபிலாக இருந்த காரணத்தால், ஜெர்மனிக்கு ஆதரவாகத் துருக்கி உலகப்போரில் இறங்குவது உறுதியாகிவிட்டது. துருக்கியின் வீழ்ச்சியைத் தொடர்ந்து துருக்கிப் பேரரசும் சிதைந்தது. அராபியர்கள் எழுச்சி பெற்றனர். ஆனால், துருக்கியின் தலையீட்டால் ருஷ்யாவிற்கும், மேலை நாடுகளுக்கும் இடையேயுள்ள தொடர்பு துண்டிக்கப்பட்டது. இதனால், ருஷ்யாவின் போர் முயற்சிகள் தோல்வியுறவே, ருஷ்யப் பேரரசும் சிதையத் தொடங்கியது. ஏனெனில், 1917ஆம் ஆண்டில் ஏற்பட்ட ருஷ்யப் புரட்சி, 'தோல்வி பெற்றுத்தந்த குழந்தை' என்பது உண்மையாகும். டார்டனலசை ஊடுருவ முடியாமல் நேசப்படைகள் திண்டாடவே ருஷ்யாவிற்கு வரவேண்டிய போர்த்தளவாடங்கள் தடைப்பட்டன. டார்டனலஸின் போர் நடவடிக்கைகள் இந்தப் போராட்டத்தின் மிக முக்கியமான பகுதியாகும்.

1914ஆம் ஆண்டு அக்டோபர் 31ஆம் நாளில் துருக்கி ஜெர்மனிக்கு ஆதரவாகப் போரில் குதித்தபோது, நவம்பர் 25ஆம் நாள் போர் ஆலோசனைக் குழுவின் கவனத்திற்கு டார்டனலஸ் கொண்டுவரப்பட்டது. டார்டனலஸ்மீது படையெடுக்கும் யோசனை, அதுகாலை ராணுவப்புகழின் உச்சியிலிருந்த கிச்சினர் பிரபுவின் கருத்துப்படி கைவிடப்பட்டது. எனினும் 'டார்டனலசை ஊடுருவினால் கான்ஸ்டான்டிநோபிலின் வாயில்கள் திறக்கும்' என்ற சாத்தியக்கூறை அமைச்சர்கள் நன்குணரத் தொடங்கிவிட்டனர். டார்டனலசைக் கைப்பற்றினால் பால்கன் (Balkan) நாடுகளான பல்கேரியா, கிரீஸ், ருமேனியா ஆகியவற்றின் வருங்காலமும், அதுவரை நடுவுநிலைமை வகித்து வந்த இத்தாலியின் போக்கும் மகத்தான முறையில் மாறுதலடையும் என்பது உறுதி.

1915ஆம் ஆண்டு ஜனவரி 2ஆம் நாளில் நேசநாடுகளுக்கு ருஷ்யாவிடமிருந்து உடனடி உதவி கோரி வேண்டுகோள் வந்தது. காகஸஸ் பகுதியில் போராடி வந்த ருஷ்யத் துருப்புகள் பெருந் தொல்லைக்குள்ளாகி இருப்பதாகவும், நேசப்படைகள் துருக்கிக்கு எதிரான நடவடிக்கைகள் எடுத்து ருஷ்யாவிற்குத் துணைபுரியுமாறும் நிக்கோலஸ் கோமகன் (Duke Nicholas) அபயக் குரல் எழுப்பினர். இதனைத் தொடர்ந்து அமைச்சர்களுக்குள் கடும் சர்ச்சை மூண்டது. இதற்குள் மேற்கு முனையிலும் போரில் எவ்வித முன்னேற்றமும் ஏற்படாமல் தேக்கமுறவே, கிழக்கு முனை நோக்கிப் போர் நிபுணர்களின் கவனம் சென்றது. லாயிட் ஜார்ஜ் பால்கன் தீபகற்பத்தைத் தாக்கவேண்டுமென்று கருத்துத் தெரிவித்தார். பால்டிக் பகுதியில் செயல்பட வேண்டுமென்பது கிச்சினரின் அபிமானத் திட்டம். கான்ஸ்டான்டிநோபிலைத் தரைவழியாகவும் நீர்வழியாகவும் தாக்குகின்ற துணிகர யோசனையை வின்ஸ்டன் வற்புறுத்தினர். துருக்கிக்கு எதிரான நடவடிக்கைகளை ஆராயுமாறு போர் ஆலோசனைக் குழுவின் செயலரான லெஃப்டினன்ட் கர்னல் ஹாங்கி (Hankey) கேட்டுக் கொள்ளப்பட்டார். மேற்கூறிய மூன்று திட்டங்களுக்கும் இடையே இழுபறிநிலை உருவாகியது. மேற்குமுனைப் படைத் தலைவரான சர் ஜான் ஃப்ரெஞ்சு, படைவீரர்களையும் தளவாடங்களையும் வேறெங்கும் கண்டிப்பாக நகர்த்த முடியாதென்று கூறினர். கிச்சினர் அவரை ஆதரித்தார்.

ருஷ்யா அபாயச்சங்கை ஊதியபோது பிரிட்டிஷ் அரசியல்வாதிகள் இவ்வித முட்டுக்கட்டை போட்டுக்கொண்டு நின்றனர்கள். ருஷ்ய கோரிக்கையை நிராகரிக்க முடியாது. ஏனெனில் மான்சில் (Mons) ஆங்கிலப் ஃபிரஞ்சுப் படைகள் பேராபத்தில் சிக்கி இருந்தபோது, ஜெர்மானியரின் கவனத்தை மேற்கு முனைக்குத் திருப்பும் நோக்கத்துடன் ருஷ்யா கிழக்குப் பிரஷ்யாவைத் தாக்கியது. எனவே, ருஷ்யர்கள் ஆபத்தில் இருக்கும் போது அவர்களுக்கு உதவ வேண்டியது தர்மமாகும். இதற்குக் கிச்சினரும் உடன்பாடு தெரிவித்தார். 'துருக்கியருக்கு எதிராக ஏதாவது நடவடிக்கை எடுக்கப்படும்' என்று நிக்கோலஸ் கோமகனுக்குப் பதிலனுப்பிவிட்டு, கிச்சினர் டார்டனலஸ் படையெடுப்புத்தான் சிறந்ததென ஃபிஷருக்கும் தெரிவித்தார். ஃபிஷரும் இந்த யோசனையை ஏற்றுக்கொண்டு துருக்கிக்கு எதிராக பிரம்மாண்டமான வகையில் நடவடிக்கைகள் மேற்கொள்வதைப் பரிந்துரைத்து, வின்ஸ்டனுக்கு எழுதினர். இதற்குப் பல்கேரியர்கள், கிரேக்கர்கள் கூட்டுறவுடன், 75,000 படைவீரர்களும்

தேவைப்பட்டனர். பல்கேரியர்களோ போரிடத் தயாராக இல்லை. கிரேக்கர்கள் போர்புரிவதை ருஷ்யர்கள் விரும்பவில்லை. வேறெங்கும் படை திரட்டக்கூடிய சாத்தியமே தென்படவில்லை. ஃபிஷரின் பெருந்திட்டத்தில் அட்மிரல் ஸ்டுர்டீ (Sturdee) தலைமையில் டார்டனலஸ் நீர்க்கூடலுக்கு ஒரு கப்பற்படையை அனுப்பி, அதைத் தாக்குவதும் இடம் பெற்றிருந்தது. பிற திட்டங்கள் நிறைவேருத நிலையில் இந்தக் கடற்படைத் தாக்கு தல் மட்டுமே ஒரே சாத்தியக்கூருகத் தோன்றியது.

இதுவரை டார்டனலசைத் தரைப்படை கொண்டே தாக்க முடியுமென்று எண்ணியிருந்த வின்ஸ்டன் ஃபிஷரின் கடற்படைத் தாக்குதல் திட்டத்தை ஆதரித்தார், தரைப்படையின் துணையில் லாமல் கடற்படை மட்டும் இந்தச் சாதனையைப் புரியமுடியுமா? இதில் புதைந்து கிடந்த அபாயம் பெரிது, வெற்றி பெற்ருல் கிடைக்கும் பரிசோ அரிது. கடற்படை கொண்டு டார்டன லசைத் தாக்கி வெற்றிபெற முடியுமாவென்று டார்டனலசில் பிரிட்டிஷ் கடற்படையின் தளபதியாக விருந்த அட்மிரல் கார்ட னுக்குத் (Carden) தந்திகொடுத்துக் கேட்டார்கள். கார்டனின் சாதகமான பதிலைத் தொடர்ந்து அதுபற்றி விரிவான திட்டத் தைத் தயாரிக்குமாறு அவர் கேட்டுக்கொள்ளப்பட்டார். நீர்க்கூட லின் நுழைவாயில் பாதுகாப்பு அரண்களை அழிப்பது, எதிரியின் காப்பரண்களை அகற்றும் நோக்கத்துடன் நீர்க்கூடலினுள் செயல் படுதல், குறுகலான (Narrows) பகுதிகளில் பாதுகாப்புகளைத் தகர்ப்பது. கண்ணிகள் புதைத்த பகுதிகளை ஊடுருவி, குறுக லான பகுதிக்குள் முன்னேறி அங்குள்ள கோட்டைகளை வீழ்த்து வது ஆகிய நடவடிக்கைகள் கார்டனின் திட்டத்தில் இடம் பெற் றிருந்தன.

## போரும் பொருமைப் புயலும்

ஜனவரி 13ஆம் நாள் கூடிய போர் ஆலோசனைக் குழுவிற்கு வின்ஸ்டன் இந்தத் திட்டத்தைச் சமர்ப்பித்தார். கடற்படைத் திட்டங்களைக் கிச்சினர் ஆதரித்து ஆசி கூறினுர். ஆலோசனைக் குழுவும் டார்டனலஸ் திட்டத்தைத் தயாரிக்க முடிவு செய்தது. நீர்க்கூடலை ஊடுருவுவது கடற்படையின் சக்திக்குட்பட்ட வொன்று. ஆனுல், ஒரு தீபகற்பத்தைக் கைப்பற்றுவது கடற் படையின் ஆற்றலுக்கு அப்பாற்பட்டது. ஆலோசனைக் குழுவில் இருந்த பெரும்பாலோர் டார்டனலஸ் தாக்குதலுக்கு தம் முழு ஒப்புதலையும் கொடுத்துவிட்டதாக எண்ணிக்கொண்டிருந்தனர். பிரதமர் உட்படச் சிலர்தாம் தற்காலிகத் திட்டங்கள் சில

வற்றை மட்டும் ஒப்புக்கொண் டிருப்பதாக எண்ணினர். ஃபிஷரும், அட்மிரல் சர் ஆர்தர் வில்சனும் தீர்மானம் வாசிக் கப்படுவதற்கு முன்னரே கூட்டத்திலிருந்து வெளியேறினர்கள்.

முடிவிற்கேற்பத் திட்டம் தயாரிக்கப்பட்டது. மீண்டும் ஆலோசனைக்குழு கூடியது. இரு கூட்டங்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் ஃபிஷருக்குச் சில ஐயப்பாடுகள் தோன்றின. டார்ட னலஸ் திட்டம் உறுதியற்றதென்றும், இனிப் போர் ஆலோசனைக் குழுக் கூட்டங்களுக்குச் செல்வதில்லை என்றும் அவர் முடிவு செய்தார். ஃபிஷரின் பொருமை வெறி கொழுந்துவிட்டு எரியத் தொடங்கியது. கிச்சினர் பிரபுவின் மேலாண்மையை அவர் மறைமுகமாக எதிர்க்க வாய்ப்புக் கிடைத்தது. கிச்சினர் போர் அமைச்சகத்தின் அரசியல் தலைவர்; ஃபிஷரோ கடற்படையின் பணித்தலைவர் மட்டுமே. தங்களை அக்காலத்திய நெல்சனுகவும், வெலிங்டனுகவும் முறையே எண்ணிக்கொண்ட ஃபிஷரும், கிச்சினரும் கூட்டாக இணைந்துகொண்டாலும், தனிமையில் வெந்து வெதும்பினர்கள். இறுதியாக ஜனவரி 28ஆம் நாள் நடந்த ஆலோசனைக் குழுவின் கூட்டத்தில் ஃபிஷர் டார்டனலஸ் திட்டத்தை எதிர்த்தார். எனினும், பிரதமரின் வற்புறுத்து தலுக்கு இணங்கி எதிர்ப்பை வாபஸ் பெற்றார். மீண்டும் நடை பெற்ற ஆலோசனைக் கூட்டத்தில் டார்டனலஸ் திட்டத்திற்கு இசைவு வழங்கப்பட்டது. பல தலைவர்கள் ஆசியும் அளித்தனர். கிச்சினர், பால்ஃபோர், கிரே போன்ற தலைவர்கள் ஒருமுகமாக டார்டனலஸ் படையெடுப்பின் அவசியத்தை வலியுறுத்தினர்கள். இவற்றை விரும்பாத ஃபிஷர் அறையை விட்டு வெளியேறவும் உடனே பதவி துறக்கவும் முடிவு செய்தார். இதனை உணர்ந்த கிச்சினர் அவரைப் பதவி துறக்க வேண்டாமென்று மன்றாடிக் கேட்டுக்கொண்டார். மனமாறிய ஃபிஷர் இருக்கையில் அமர்ந்து கொண்டபோதிலும் திட்டத்தை உளமாற ஆதரிப்பதை ஒப்புக் கொள்ளவில்லை. அவரது எதிர்ப்பின் காரணங்களை யாரும் கேட்கவுமில்லை. கேட்காதவரையில் அவர் சொல்லவும் விரும்ப வில்லை.

பிப்ரவரி 19ஆம் நாள் கடற்படை டார்டனலசை முதல் முறையாகத் தாக்கியது. முடிவான விளைவுகள் எதுவும் ஏற்பட வில்லை. மார்ச்சு தொடக்கத்தில் டார்டனலஸின் பாதுகாப் பரண்கள் முழுவதும் தகர்க்கப்பட்டுவிட்டன. ஆனுல், இடைப் பகுதியிலும், நீர்க்கூடலின் உள்ளுமிருந்த பாதுகாப்புகளும் அழிக்கப்படவேண்டும். மார்ச்சு திங்கள் 18ஆம் நாள் வரை யிலும் நேசநாட்டுக் கப்பற்படைகள் தாக்குதலைத் தொடரவில்லை.

இதற்குள் அட்மிரல் கார்டன் பிணியுறவே அட்மிரல் டி ரோபெக் (Admiral de Robeck) தலைமை ஏற்றார். இரண்டாம் தாக்குதல் சிறந்த முறையில் தொடங்கியபோதிலும் திடீர் திருப்பம் ஏற்பட்டது. கடலில் புதைக்கப் பட்டிருந்த எதிரியின் கண்ணி களுக்கு நேச நாட்டுக் கப்பல்கள் பலியாயின. மூன்று போர்க் கப்பல்கள் அழிக்கப்பட்டன. மேலும் மூன்று கப்பல்கள் சிதைக்கப்பட்டன. டி ரோபெக் போராட்டத்தை ஒருநாள் நிறுத்திவிட்டு மீண்டும் தொடர்வதற்கான திட்டங்களை வகுத் தார். போர் ஆலோசனைக் குழுவும் வின்ஸ்டனின் பரிந்துரை யின்பேரில் அவற்றைஒப்புக்கொண்டன. பெரும் வெற்றிபெற வாய்ப்புகள் இருப்பதாக நம்பிக்கை பிறந்தது.

ஆனால், ஒருவாரத்திற்குள் நிலைமை மாறியது. படைத் தலைவர் ஈயான் ஹாமில்டனைக் கலந்தாலோசித்து அட்மிரல் டி ரோபெக் தரைப்படையின் ஒத்துழைப்புக் கிடைக்கும்வரை போர் நடவடிக்கைகள் தொடர்வதை நிறுத்திவைக்க ஒப்புக் கொண்டார். இந்தச் செய்தி வின்ஸ்டனின் எண்ணக் கோட்டை களைத் தகர்த்து. ஏற்கெனவே வெற்றி நெருங்குகின்ற நிலையில் ஏன் போராட்டத்தை நிறுத்த வேண்டுமென்பது அவருக்குப் புரியவில்லை. காலதாமதத்தால் எதிரிக்கு நன்மை விளையக்கூடு மென்று அவர் அஞ்சினார். கடற்படையைச் சார்ந்த போர்க் குழுவைக் கூட்டி டி. ரோபெக் டார்டனலஸ் தாக்குதலைத் தொடருமாறு தந்தி அனுப்ப வேண்டுமென முடிவு செய்யப் பட்டது. ஆனால், அந்தத் தந்தி அனுப்பப்படவேயில்லை. ஃபிஷர் பிரபு, அட்மிரல் வில்சன், அட்மிரல் ஜாக்ஸன் ஆகியோர் தந்தி அனுப்புவதை எதிர்த்தனர். பிரதமர் மூலமாகவும் வின்ஸ்டன் செய்த முயற்சிகள் பலன் அளிக்கவில்லை. எங்கிருந்தும் 'இல்லை' என்ற சொல்லேஒலித்தது. குறுகலான (Narrows) அரண்களைத் தாக் குவதற்காகக் கடற்படை வீணில் காத்திருந்தது. வின்ஸ்டனின் 'மீண்டும் முயற்சிக்கலாம்' என்ற யோசனை பின்னர் பலத்த கண்டனத்துக்குள்ளாகியது. அவருக்குச் சூதாட்டக்காரனின் அவசரப்புத்தி இருப்பதாகக் குறை கூறினார்கள். தாக்குதல் முயற்சிகள் தொடர்ந்திருக்குமானால் வின்ஸ்டனின் நம்பிக்கை வீண்போயிருக்காது. டார்டனலஸ் தாக்குதல் கைவிடப்பட்டது எதிரிகளுக்குக்கூட அதிர்ச்சியாக இருந்தது. எதிரிகளின் வெடி கையிருப்புகள் குறைந்து வந்ததால் மார்ச் 18ஆம் நாள் படையெடுப்பைப்பற்றி அவர்கள் அஞ்சிக்கொண்டிருந்தனர்.

பிரிட்டிஷ் போரின் அதிகாரபூர்வமான வரலாறு கூறுவது போல், 'துருக்கிப் படைகள் நிலைகுலைந்திருந்தன. உடனடித்

தாக்குதல் நடந்தால் வெற்றி வாய்ப்புகள் 'இல்லையென ஜெர்மன் படை யதிகாரிகள்கூட முடிவு செய்திருந்தனர்.'[1] ஜெர்மன் பத்திரிகை ஆசிரியர் ஒருவர் படையெடுப்பு கைவிடப்பட்டதைத் தொடர்ந்து எதிரிகள் முகாமில் ஏற்பட்ட வியப்பை விவரித் துள்ளார். எதிரிப்படை நீண்டநாள் எதிர்ப்பை நீடிக்க முடியா தென அவர்களே முடிவு செய்திருந்தார்களாம். ஜெர்மன் ராணுவத் தூதரகத்தின் தலைவரான லிமான் வான் சாண்டர்ஸ் (Liman Von Sanders) கூறுவதுபோல், 'நேசப்படைகளின் தாக்குதல் நடந்திருக்குமானால் 1915ஆம் ஆண்டு வசந்த காலத்தின் பின்னர் முதல் உலகப்போரின் போக்கே திசைமாறி இருக்கும்'[2] என்பது உண்மை. போர் நடவடிக்கைகள் ஓய்ந்த போது துருக்கிப்படையின் நிலை இவ்வாறுதான் இருந்தது. இதற்கு வின்ஸ்டன் எத்தனை தூரம் பொறுப்புள்ளவர் என்பதைப் பின்னர் ஆராய்வோம். டார்டனலஸ் விவகாரம் உள்நாட்டில் ஏமாற்றத்தை மட்டுமன்று, பெரும் மாற்றங்களையும் விளைவித் தது. டார்டனலஸில் பிரிட்டிஷ் படைகள் காலியாவதற்குள் வின்ஸ்டனின் பதவியும் காலியாகிவிட்டது.

### சூழ்ச்சிச் சூறாவளி

1915ஆம் ஆண்டு மே திங்களில் அரசியல் நெருக்கடிநிலை உருவாகியது. மேற்கு முனையில் போர்த்தளவாடங்களின் பற்றாக்குறை பயமுறுத்தியது. காலிப்போலியில் முன்னேற்றம் ஏற்படவில்லை. கடற்படைத்துறையில் குழப்பம் மேலோங்கியது. ஃபிஷர் வின்ஸ்டன் சச்சரவு முற்றிக்கொண்டு வந்தது. அரசாங் கத்திலும் அமைதியின்மை நிலவியது, எதிர்க்கட்சியினர் மனக் குறை கொண்டிருந்தனர். இதனைப் பத்திரிகைகளும், நாட்டு மக்களும் எதிரொலித்தனர். போரின் நடவடிக்கைகளைப்பற்றி எதிர்க்கட்சியின் பாராளுமன்றத்தில் விவாதிக்கத் துடித்தனர். டோரிகளின் தாக்குதலுக்கு வின்ஸ்டன் பலியாகவேண்டி யிருந்தது. கடலில் ஏற்பட்ட தவறுகளுக்கெல்லாம் சர்ச்சிலைக் குறை கூறினார்கள். இந்தக் குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரங்களை ஃபிஷரே வழங்கிக்கொண்டிருந்தார். 'கடற்படையை அழிப்பவர் வின்ஸ்டன் என்றால் அதனைக் காப்பாற்றக்கூடியவர் ஃபிஷர்தாம்' என்று அவர்கள் நம்பினார்கள். கடற்படைத்துறை அமைச்சர கத்தில் தமக்கு எதிர்ப்பு உருவாகி வருவதை வின்ஸ்டன் அறிந்து கொள்ளவில்லை. கடற்படை விவகாரங்களில் மூழ்கியிருந்த வின்ஸ்டன் செயலகத்திற்குக்கூட அடிக்கடிச் செல்லவில்லை.

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson p. 164.
[2] Ibid, p. 165.

கடமை உணர்வுகொண்ட வின்ஸ்டன் அரசியல் உலகிலிருந்து தம்மைத் துண்டித்துக்கொண்டதுபோல் தோன்றியது. பாராளு மன்றத்துடன் கொள்ளும் தொடர்பின்மூலமே அமைச்சர் ஒருவர் வன்மை பெறுகிறார் என்பதை அவர் மறந்துவிட்டார் போலும்.

காலிப்போலிப் போர்த்திட்டங்கள் உடனடியான வெற்றியைத் தருகின்ற சூழ்நிலையில் இருக்கவில்லை. ஏப்ரல் 25ஆம் நாளில் வந்திறங்கிய நேசநாட்டுப் படைகள் காலிப்போலித் தீபகற்பத்தில் உறுதியாகக் காலூன்ற முடியவில்லை. துருக்கியர்கள் அகழிகளையும், இரும்பு முள்வேலிகளையும் அமைத்துப் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்திருந்தார்கள். மத்தியதரைக் கடலில் எதிரி நீர்மூழ்கிகள் உலவிக்கொண்டிருந்தன. புதிதாகக் கட்டப்பட்டு சோதனை ஓட்டத்திற்காக டார்டனலஸ் வரை சென்றிருந்த 'குயின் எலிஸபெத்' (Queen Elizabeth) போர்க் கப்பலின் பாதுகாப்பைப்பற்றி ஃபிஷர் அக்கறை கொண்டிருந் தார். ராஜினமா செய்துவிடுவதாக அச்சுறுத்தி, ஃபிஷர் 'குயின் எலிஸபெத்தைத்' திருப்பி அழைத்துக்கொள்வதில் வெற்றி கண்டார். இந்த நிகழ்ச்சியைச் சுற்றிப் பல சர்ச்சைகள் வளர்ந்தன. போரின் முக்கிய தளமான காலிப்போலியில் கடற்படையின் முக்கியத்துவம் குறைக்கப்பட்டிருப்பதாக ஃபிஷர் பிரதமரிடம் முறையிட்டார். மே திங்கள் 13ஆம் நாள் 'காலிப்போலியில் தரைப்படை தோற்றால், கடற்படை ஊடுருவுவது நிச்சயம்' என்று வின்ஸ்டன் கூறிய குறிப்பை அடிப்படையாக வைத்துக் கொண்டு கடற்படைத்துறையில் சகலரும் வின்ஸ்டனின் இச்சைப்படியே நடப்பதாகப் பிரதமருக்கு எழுதினர்.

கடற்படையைக் கட்டுப்படுத்தவேண்டியது வின்ஸ்டனா அல்லது ஃபிஷரா என்ற பிரச்சினை டார்டனலஸ் விவகாரத் துடன் உச்சகட்டத்தை அடைந்தது. மே திங்கள் 14ஆம் நாளில் கூடிய போர் ஆலோசனைக் குழுவில் தமக்குத் தொடக்கத்தி லிருந்தே டார்டனலஸ் நடவடிக்கைகள் உடன்பாடில்லை என்று ஃபிஷர் கூறினர். இந்தக் கூற்று வின்ஸ்டனுக்கு அதிர்ச்சியாக இருந்தது. கூட்டம் முடிந்ததும் வின்ஸ்டன் பிரதமருக்கு ஒரு கடிதம் எழுதினர். ஃபிஷர் தொடக்கத்திலிருந்தே டார்டனலஸ் நடவடிக்கைகளை ஆதரித்து வந்திருப்பதாக வின்ஸ்டன் தெரி வித்தார். நடவடிக்கைகள் வெற்றி பெற்றிருந்தால் அந்தப் பெருமையை ஃபிஷர் ஏற்றுக்கொண்டிருப்பார் என்பதையும் அவர் சுட்டிக் காட்டினர். இந் நிலையில் திடீரெனப் பொறுப்பிலிருந்து நழுவப்பார்க்கும் ஒருவருடன் தாம் எவ்வாறு செயல்பட முடியும்

என்று வின்ஸ்டன் குறிப்பிட்டிருந்தார். அன்று மாலை வின்ஸ்டன் ஃபிஷரைச் சந்தித்துச் சமரச முயற்சிகளை மேற்கொண்டார். சந்திப்பு நல்லமுறையில் அமைந்திருந்தது. பூசல்கள் ஓய்ந்து அமைதி ஏற்பட்டுவிட்டதாகத் தோன்றியது. அடுத்த நாள் (மே 15ஆம் நாள்) ஃபிஷர் ராஜினாமா செய்துவிட்டார் என்ற செய்தி வின்ஸ்டனுக்கு வேதனையையும், வியப்பையும் தந்தது. முந்தின இரவில் வின்ஸ்டன் இத்தாலிய கடற்படைத் தலைவரின் வேண்டுகோளுக்கிணங்க நான்கு போர்க்கப்பல்களை ஃபிஷரைக் கலக்காமலே அனுப்பிவைக்க உத்திரவிட்டார். ஃபிஷர் தமது முடிவை ஏற்றுக்கொள்வார் என்பது அவரது நம்பிக்கை.

ஃபிஷர் தம் ராஜினாமாக் கடிதத்தில் வின்ஸ்டனின் கொள்கைகளைக் குறை கூறினர். தாம் இனி வின்ஸ்டனுடன் பணிபுரிய முடியாதென்றும், உடனே ஸ்காட்லாந்திற்குச் செல்வதாகவும் அவர் எழுதியிருந்தார். 'எந்த விளக்கமும் தேவை இல்லை' என்ற ஜோவட்டின் (Jowett) மேற்கோளை அவர் இலாவகமாகப் பயன்படுத்தியிருந்தார். வின்ஸ்டனுக்கும் இதுபோலவே கடிதம் அனுப்பினர். ஃபிஷர் அடிக்கடி ராஜினாமா செய்வது வழக்கமாதலால் இந்த முறையும் அவரது ராஜினாமாவை யாரும் அக்கறையுடன் எடுத்துக்கொள்ளவில்லை. ஃபிஷர் தமது அலுவலகத்தில் தம்மைச் சிறைப்படுத்திக்கொண்டு யாரையும் காண மறுத்துவிட்டார். மக்கீனவை மட்டுமே அவர் சந்தித்தார். மக்கீனவின் மன்றாடல்கள் பலனளிக்கவில்லை, பிற கடல் தளபதிகள் கூட்டாக விண்ணப்பம் செய்து ஃபிஷர் மனத்தை மாற்றிக்கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார்கள். எந்த முயற்சியும் வீணாயிற்று, ஃபிஷரும் ஸ்காட்லாந்திற்குச் செல்லாமல் இங்கிலாந்திலே தங்கியிருந்து தாம் விளைத்த குழப்பத்தின் மூலம் அரசியல் ஆதாயம் தேடக் காத்திருந்தார். வின்ஸ்டன் நாட்டின் நலத்தையே மனத்தில் கொண்டு மீண்டும் ஃபிஷருக்கு உருக்கமான கடிதம் எழுதிப் பதவி விலகும் முடிவை மறுபரிசீலனை செய்யுமாறு கேட்டுக்கொண்டார். ஃபிஷரை நம்பியே தமது அரசியல் வாழ்க்கையைத் தொடங்கியதாக வின்ஸ்டன் குறிப்பிட்டிருந்தார். ஃபிஷர் எழுதிய பதிலில் டார்டனலஸ் நடவடிக்கைகள் முழுவதும் தாம் வின்ஸ்டனுக்கு உறுதுணையாக நின்றதையும், தாம் வின்ஸ்டனுக்காக மிகக்கடுமையாக உழைத்ததையும் குறிப்பிட்டு, தாம் விலகுவதாகவும், வின்ஸ்டன் நிலைத்து நின்று பணியாற்றுமாறும் எழுதி ராஜினாமாவை வாபஸ் பெற மறுத்துவிட்டார். ஃபிஷர் விரும்பிய சலுகைகளை வாக்களித்து வின்ஸ்டன் மீண்டும் எழுதினர். வின்ஸ்டனின் பெருந்தன்மையைக் கடல் தளபதிகளே பாராட்டினர்கள். 'என்னைப் பார்க்க முயற்சி

செய்யவேண்டாம். நான் செய்வது சரியென்பது எனக்குத் தெரியும்' என்று ஃபிஷர் சுருக்கமான பதில் எழுதிவிட்டார். வின்ஸ்டனுக்கு வேறு வழி புலப்படவில்லை. சர் ஆர்தர் வில்சனை முதல் கடல் தளபதியாக நியமனம் செய்ய முடிவு செய்யப் பட்டது. ஆனால், இந்த நியமனம் அறிவிக்கப்படுவதற்குள் வின்ஸ்டனுக்குப் பேரிடியான செய்தி காத்திருந்தது.

**வின்ஸ்டன் வெளியேற வேண்டும்!**

ஃபிஷரின் ராஜினமாப் பிரச்சினையில் அக்கறை கொண்டிருந்த வர்கள் அரசினர் மட்டுமல்லர். டார்டனலஸ் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்ட நிலையிலே பாராளுமன்ற உறுப்பினர்கள் பலருக்கு ஃபிஷரிடமிருந்து கடிதங்கள் வந்தன. வழக்கம்போல் கடுமையான சொற்களில் டார்டனலஸ் திட்டம் கண்டனம் செய்யப்பட்டது. வின்ஸ்டனை பரம வைரியாகக் கருதி வந்த கன்சர்வேடிவ்கள் ஃபிஷர் செய்வது சரியென்றும், வின்ஸ்டனிடம் தான் தவறு உள்ளதென்றும் முடிவு கட்டினர்கள். 'வின்ஸ்டன் வெளியேறவேண்டும். நான் கடற்படைத்துறைத் தலைவராக வேண்டும்'[1] என்று ஃபிஷர் அவர்களுக்குக் கூறி வந்தார். இதனை அவர்கள் ஆதரிக்கவும் தொடங்கினர்கள்.

'எதிர்க்கட்சித் தலைவரான போனர்லா தமது கட்சித் தலைவர்களின் போக்கைப் புரிந்துகொண்டார். போனர்லா வின்ஸ்டனின் தகுதிகளைச் சரிவரப் பாராட்டச் சக்தியற்றவராக இருந்தார். 'வின்ஸ்டன் கடற்படைத் துறையில் நடந்து கொள்ளும் முறைபற்றி ஒரு பிரதமர் தமக்குக் கீழுள்ள ஒரு வரைக் கடிந்துகொள்வதுபோல் கடிந்துகொண்டார்' என்று பீவர் ப்ருக் (Lord Beaver brook) பிரபுவிடம் வின்ஸ்டன் முறை யிட்டார். இந் நிலையில் ஃபிஷர் தமது ராஜினமா பற்றிக் கையெழுத்தில்லாத கடிதத்தின் மூலம் போனர்லாவிற்குத் தெரி வித்தார். ஃபிஷர் தம் கையால் முகவரி எழுதியஉறைக்குள் ஃபிஷர் அரசரைப் பேட்டி கண்டதாக ஒரு பத்திரிகைச் செய்தியின் விவரம் அடக்கப்பட்டிருந்தது. ஃபிஷர் ராஜினமா செய்துவிட்ட செய்தியை கன்சர்வேடிவ் கட்சித் தலைவர் அறிந்துகொள்ள வேண்டுமென்பதே ஃபிஷருடைய இந்தத் திருவிளையாடலின் உட்பொருள். எதிர்க்கட்சித் தலைவர்கள் ஃபிஷரின் ராஜினமா வைப்பற்றி அறிந்துகொள்வதால் என்ன பயன்; ஓய்வுபெற்றதும் ஸ்காட்லாந்திற்குப் போய்விடுவதாகச் சொல்லிக்கொண்டிருந்த ஃபிஷர் பாராளுமன்ற உறுப்பினர்கள் தமது ராஜினமா

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 167.

விவகாரத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென விரும்பியதில் நோக்கம் இல்லாமல் இல்லை. ஃபிஷரின் தகராறுகளின் காரணம் அவர் கூறிக்கொண்டதுபோல் வெறும் கடற்படைத் தந்திர உபாயங்களில் ஏற்பட்ட கருத்து வேறுபாடு மட்டும் அன்று.

ஃபிஷருக்கு உள்நோக்கம் ஒன்றிருந்தது. அதற்கு இப்பொழுது அரசியல் தலைவர்களின் ஆதரவை அவர் நாடினூர். 'லிபரல் அமைச்சரவை கவிழவேண்டும்; புதிய அரசாங்கம் தம்மைக் கடற்படைத்துறையின் அமைச்சராக்க வேண்டும்; அதனால் கடற்படைத்துறையின் தவறுகள் களையப்படவேண்டும்' இதுவே நாடகப்பாணியில் நிறைவேற்றப்பட்ட இந்த ராஜினுமாவின் கருத்தாகும். போனூர்லாவிற்கு ஃபிஷரின் சதித்திட்டத்தில் பங்கு கிடையாது. ஆனால், வின்ஸ்டன் - ஃபிஷர் மோதலால் ஏற்படக்கூடிய பெரும் விளைவுகளைப்பற்றி அவர் அக்கறைகொண்டிருந்தார். அவர் உடனே டோரித் தலைவர் லாண்ட்ஸ்டோன் (Landstone) பிரபுவைக் கலந்தாலோசித்தார். அடுத்த நடவடிக்கை என்ன என்பதுபற்றிப் பிற தலைவர்களுக்கும் அறிவிக்கப்பட்டது. வின்ஸ்டன் கடற்படைத்துறைக்குச் சர் ஆர்தர் வில்சனைக் கொண்டுவர முயற்சி செய்துகொண்டிருந்த நேரத்தில் அவரையே வெளியேற்றுவதற்குக் கன்சர்வேடிவ்கள் திட்டமிட்டுக் கொண்டிருந்தனர்.

தமது 'மொட்டைக் கடிதத்தை'த் தொடர்ந்து ஃபிஷர் போனூர்லாவிற்கு வின்ஸ்டனைத் தாக்கி விவரமான முறையில் கடிதமொன்று எழுதினூர். 'வின்ஸ்டன் நாட்டை அழிவுப்பாதையில் கொண்டு செல்கிறூர். ஜெர்மானியரைவிட அவர் அதிக ஆபத்தானவர்'[1] என்று அதில் கூறப்பட்டிருந்தது. போனூர்லாவின் கலக்கம் அதிகரித்தது. போனூர்லா உடனடியாகப் பிரதமருக்கு எழுதினூர். லாயிட் ஜார்ஜைப் பேட்டி கண்டார். 'ஃபிஷர் இல்லாமல் சர்ச்சில் மட்டும் இருக்கின்ற நிலையைத் தமது கட்சித் தோழர்கள் சகித்துக்கொள்ள மாட்டார்கள்'[2] என்று போனூர்லா முடிவு செய்தார். லிபரல் அமைச்சரவையின் வருங்காலமே கேள்விக் குறியாகிவிட்டது. கூட்டு அமைச்சரவை நிறுவுகின்ற யோசனையை லாயிட் ஜார்ஜ் உடனே பிடித்துக்கொண்டார். பிரதமர் ஆஸ்குவித்தும் இந்த ஏற்பாட்டை வேண்டாவெறுப்பாக ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. லாண்ட்ஸ்டோன் பிரபு வீட்டில் கட்சிக்கூட்டம் நடைபெற்றது, முடிவில் பிரதமருக்குத் தங்கள் கருத்தைத் தெரிவித்துக் கடிதம் எழுதினூர்கள். ஃபிஷரின்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 172.
[2]Ibid, p. 178.

ராஜிநாமாப் பிரச்சினை அவையில் விவாதிக்கப்பட வேண்டுமென்றும் அவையின் உத்தரவின்றி மாற்று ஏற்பாடுகள் செய்யக் கூடாதென்றும் கன்சர்வேடிவ் தலைவர்கள் பிரதமரைக் கேட்டுக் கொண்டார்கள்.

வின்ஸ்டன் புதிய கடற்படைத்துறை அதிகாரிகளின் பட்டியலை காமன்ஸ் அவையில் சமர்ப்பிக்க வந்தபொழுது எதிர்க் கட்சிகளுடைய நடவடிக்கைகளைப் பற்றி ஒன்றும் அறியமாட்டார். லிபரல் அமைச்சரவையே வீழ்கின்ற நிலையில் இருப்பதால், புதுப்பட்டியலை அவர் சமர்ப்பிக்க வேண்டாமென்று மட்டும் அவருக்குத் தெரிவிக்கப்பட்டது. பிரதமரின் அறைக்கு விரைந்த வின்ஸ்டன் கூட்டு அமைச்சரவை நிறுவப்படப் போகிறதென்றும், 'கடற்படைத்துறை அமைச்சகத்திற்குப் புதிய தலைவர் வரலாமென்றும் செய்தி அறிந்தார். வின்ஸ்டனைக் குடியேற்ற நாடுகளின் அமைச்சகத்திற்கு மாற்றவும் யோசனை கூறப்பட்டது. இதற்குள் ஜெர்மன் கடற்படைகள் பெருங்கடலில் தலைகாட்டி இருப்பதாகவும் அவை முன்னேறி வரக்கூடும் என்றும் செய்திகள் வின்ஸ்டனுக்கு அறிவிக்கப்பட்டன. அவர் தமது பணி மன்றத்திற்கு விரைந்தார். ஜெர்மானியர்களுடன் மோதினால் இரண்டாம் டிரபால்கர் (Trafalgar) போர் நிகழுமென்றும் அதன் வெற்றியில் டார்டனலஸ் விவகாரம் புதைக்கப்படும் என்றும், அதன் பயனால் தாம் நாட்டு வீரராக முடியும் என்றும், கடற்படைத்துறையில் தமது பதவியை யாரும் அசைக்க முடியாதென்றும் மனக்கோட்டை கட்டத் தொடங்கிவிட்டார்.

கடற்படைத் தளங்களுக்கெல்லாம் செய்திகள் அனுப்பப்பட்டன. போர்க்கப்பல்கள் யாவும் தயாராக இருக்கும்படிச் செய்திகள் பறந்தன. முதல் கடல்தளபதி இல்லாத நிலையில் வின்ஸ்டன் பம்பரம்போல் சுழன்று செயலில் ஈடுபட்டார். ஃபிஷரின் ராஜிநாமா இன்னும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ஆதலால் வழக்கமான பணியை மேற்கொள்ளுமாறும் அவருக்கு அழைப்பு விடுத்தார். ஃபிஷர் மறுத்துவிட்டார். அவரது கருத்துப்படி ஜெர்மன் கப்பற்படைகள் போராடத் தயாராக இல்லை. இதற்குள் வின்ஸ்டனும் அமைச்சரவை கலைக்கப்படும் என்ற நோக்கத்தில் ராஜிநாமாக் கடிதத்தைத் தயாராக வைத்திருந்தார். அவர் எதிர்பார்த்ததுபோல் ஜெர்மன் படைகள் போராட்டத்தில் இறங்கவில்லை. ஒரு சில மணி நேரங்களில் அவை துறைமுகத்திற்குத் திரும்பிவிட்டன. வின்ஸ்டன் அரசியல் நெருக்கடியின் சுவையற்ற திருப்பத்தை எதிர்நோக்கியிருந்தார். வின்ஸ்டன் வெளியேறவேண்டும் என்ற முடிவில் கன்சர்வேடிவ்கள் விடாப்

பிடியாய் இருந்தனர். வின்ஸ்டனை யாரும் ஆதரிப்பதாகத் தெரியவில்லை. ஒவ்வொருவரும் தத்தமது தலைவிதியில்தான் அக் கறை கொண்டிருந்தார்கள். அவர் தம் நண்பர் பால்ஃபோரும் டோரித் தலைவர்களின் மனத்தை மாற்ற முடியவில்லை, பீவர்ப்ருக் பிரபு மட்டுமே வின்ஸ்டனின் ஆற்றல்களை அறிந்தவராகையால் அவருக்காகப் பரிந்துரை செய்தார். சர்ச்சிலே போனுர்லாவிற்கு கடிதம் எழுதினுர். முடிவை மாற்ற முடியாதென்ற சுருக்கமான பதில்தான் கிடைத்தது. நீதி வேண்டி வின்ஸ்டன் விடுத்த வேண்டுகோளும் பயனற்றுப் போயிற்று.

சர்ச்சிலின் வீழ்ச்சியின் விந்தையான விளைவு என்னவென்முல் அவரது வீழ்ச்சிக்கு வழிவகுத்தவர்கள்கூட அதனுல் பயன் பெற வில்லை. 'கெடுவான் கேடு நினைப்பான்' என்பது போல ஃபிஷரின் நிலை ஆகிவிட்டது. தம்மையே கடற்படைத்துறை அமைச் சராக எண்ணிக்கொண்டு வெற்றி மமதையில் ஃபிஷர் செயல் படத் தொடங்கினுர். காலிப்போலியிலிருந்து பிரிட்டிஷ் கடற் படைகளை வாபஸ் பெறுவது அவரது திட்டங்களில் ஒன்று' வெற்றி கிட்டுகின்ற நிலையில் ஃபிஷர் ஏமாற்றமும் கலக்கமும் கொண்டார். கடற்படைத்துறைத் தலைமைக்கு அவரை உயர்த்து வதை ஆஸ்குவித் விரும்பவில்லை. சர்ச்சிலுடன் சேர்ந்து டார் டனலஸ் திட்டத்தை உருவாக்கிய பால்ஃபோர் அடுத்த கடற் படைத்துறை அமைச்சராகப் போகிறுர் என்ற செய்தி ஃபிஷரின் வெந்தபுண்ணில் வேலைப் பாய்ச்சியது. இன்னும் கிச்சினருக்குக் கீழ்த்தான் பணிபுரியவேண்டுமா ? என்ற வினு அவரை ஆருத் துயரில் ஆழ்த்தியது. உடனே பிரதமருக்கு ஒரு மகஜரை வரைந்து தள்ளினுர். ஆறு நிபந்தனைகளை விதித்துத் தம்மைக் கடற்படைத்துறை அமைச்சராக்கும்படி கேட்டுக்கொண்டார். நிபந்தனைகளில் முக்கியமானது வின்ஸ்டனை அமைச்சரவையிலி ருந்து வெளியேற்ற வேண்டுமென்பது. தம்முடைய கோரிக்கைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டால், போரை வெற்றிகரமாக முடிப்ப தாகவும், ஜெர்மன் நீர்மூழ்கித் தொல்லையை அடியோடு அழித்து விடுவதாகவும் வாக்குறுதி அளித்தார், அவர் ஒன்பது கடற் படைத்துறை அமைச்சர்களின்கீழ் பணிபுரிந்துள்ள உரிமையினுல் தான் ஆறு நிபந்தனைகளை விதித்திருப்பதாகவும், அவை கடற் படையினரின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட வேண்டு மென்றும் கடிதத்தின் பிற்குறிப்புக் கூறியது.

பிரதமரின் பதில் இரத்தினச் சுருக்கமாக அமைந்தது. 'உமது ராஜிஞமாவை ஏற்றுக்கொள்ளுமாறு அரசர் பணித்திருக்கிறுர்' என்பதே அதன் வாசகம். சர்ச்சில் - ஃபிஷர் தகராற்றின் விளைவாக

முதல் கூட்டு அமைச்சரவை பதவி ஏற்றது. போர் முறைகளில் சிறந்த புலமையும் சிறந்த நாட்டுப்பற்றும் கொண்ட சர்ச்சிலின் சேவையினையும் ஃபிஷரின் சேவையினையும் புதிய அமைச்சரவை பயன்படுத்திக்கொள்ளவில்லை. சர்ச்சில் - ஃபிஷர் தகராறு தரும் பாடங்களைப்பற்றி நண்பர் ஒருவருக்குப் பால்ஃபோர் எழுதியது இங்கே குறிப்பிடத்தக்கது. 'டார்டனலஸ் நாடகத்தின் கதா பாத்திரங்கள் மூவராவர்; அவர்களில் ஒருவர் படைத்துறைத் தந்திரங்களில் மேதையில்லாத படைவீரர் (கிச்சினர்), மற்றொருவரும் அவரைப் போன்று படைத்தந்திர மேதை யில்லாத கடற் படைவீரர் (ஃபிஷர்), இவர் கடற்படை அமைப்பை நிருவகித்திருக்கவேண்டும். ஆனால், நிருவகிக்கவில்லை. மூன்றாமவர் இவர்கள் இருவரையும் கட்டுப்படுத்த முயன்று தோற்ற அறிவுத் திறம்படைத்த ஆனால், பயிற்சியற்ற அமைச்சர் (சர்ச்சில்). பிரதமர் ஆஸ்குவித் படைவீரர்களையும், கடற்படை வீரர் களையும், அரசியல் வெல்திறவாதிகளையும் ஒன்றாக இணைத்துச் செயல்படும் முயற்சிகளை மேற்கொள்ளத் தவறினார். இதன் விளைவு பயங்கரமாக இருந்தது.

மேற்கூறிய நிகழ்ச்சிகளின் பின்னர் வின்ஸ்டன் மனமுடைந்து போனார். 'அரசியல் சூழ்ச்சிகளுக்கு நான் பலியாக்கப்பட்டேன், என்னை அழித்துவிட்டார்கள்'[1] என்று வின்ஸ்டன் விரக்தியோடு கூறினார். அதனைக் கேட்ட ரிடெல் பிரபு (Lord Riddell) 'நாற்பதாவது வயதில் உம்மை யாரும் அழிக்க முடியாது. உமது அரிய ஆற்றல்கள் உள்ளவரை அழிவென்பது ஏது'[2] என்று அவரைத் தேற்றினாராம். ஆனால், வின்ஸ்டனின் கவலையெல்லாம் போரைப் பற்றியும், ஜெர்மானியர்களின் தோல்வியைப்பற்றியும்தான் இருந்தது.

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 180.
[2]Ibid, p.181.

# 9. பதவிமாற்றமும் போரின் முடிவும்

வின்ஸ்டனின் வாழ்க்கையில் விதியின் விளையாட்டு ஒரு புறம் இருந்தாலும் புண்பட்ட உள்ளத்திற்கு ஆறுதலாகவும் சில பாராட்டுரைகளும் கிடைத்தன. இவற்றில் குறிப்பிடத்தக்கது முதல் கடல் தளபதியாக நியமிக்கப்பட்ட சர் ஆர்தர் வில்சன், வின்ஸ்டனுக்குக் கீழன்றி வேறெந்தக் கடற்படைத்துறை அமைச்சரின் கீழும் பணிபுரிய மறுத்துவிட்டமை பண்பு மிக்க செயலாகும். கடற்படைத் துறையில் சர்ச்சிலின் அரிய சாதனைகளுக்கு இது சிறந்த பாரபட்சமற்ற ஆதாரமாக விளங்கியது. மற்றொரு நிகழ்ச்சி வின்ஸ்டனுக்கும், கிச்சினருக்கும் இடையே நடந்த இறுதிச் சந்திப்பு. வின்ஸ்டனுக்கு ஆசி கூறிய கிச்சினர், 'உம்மிடமிருந்து யாருமே எடுத்துக்கொள்ள முடியாத பெருமை ஒன்றுண்டு. அதாவது நீர் பிரிட்டனை ஆபத்து சூழ்ந்த நிலையில் அதன் கடற்படையைத் தயாராக வைத்திருந்ததுதான்'[1] என்று பாராட்டிப் புகழ்ந்தார். வினஸ்டன், 'தமக்கு மிகவும் உயர்ந்த பதவியொன்று அளிக்கப்பட்டதாகவும், ஆனால், போர்ப்பணிக்கு முன்னர் அவையெல்லாம் ஒன்றுமில்லை' என்றும் குறிப்பிட்டார். வின்ஸ்டன் தமது கடற்படைத்துறை நிருவாகத்தை ஆதரித்து ஓர் அறிக்கை தயாரித்தார். போர் முடிவுறாத நிலையில் நாட்டின் பாதுகாப்பை உத்தேசித்து அவர் அதனை வெளியிட முடியவில்லை.

பிரதமர் ஆஸ்குவித் வின்ஸ்டனைப் பொறுத்தவரையில் அவருக்காக வன்மையாகப் போராடவில்லை என்பது வின்ஸ்டனின் கருத்து. இவ்வாறு டோரிச் சிங்கங்களுக்கு வின்ஸ்டனை இரையாக்கியதன் மூலம், ஆஸ்குவித் தமக்கே ஆபத்து வந்த காலத்தில் உண்மையான ஒரு நண்பனின் துணையை இழந்தார். ஆஸ்குவித் தமது பலவீனத்திற்கு ஹால்டேனை அடுத்தபடியாகப் பலியிட்டார். வருத்தமோ, பேட்டியோ, கடிதமோ இன்றி

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 186.

ஹால்டேன் ஆடம்பரமில்லாமல் அகற்றப்பட்டார். தாம் கைவிடுகின்ற நண்பரைக் காணவும் ஆஸ்குவித் நாணினார் போலும்! 'அரசியலில் நேர்மை இல்லையென்றும், உயர் மட்டத்தில் நண்பர்கள் குறைவு' என்றும் யாரோ கூறியது எவ்வளவு உண்மையானது! பதவியிலிருந்து இறக்கப்பட்ட வின்ஸ்டன், அமைச்சரவையில் இன்னும் இருந்தார். அவரது உண்மை நண்பர்களில் ஒருவரான லாயிட்ஜார்ஜ் வின்ஸ்டனை இந்திய அமைச்சர் அலுவலகத்தில் உயர்பதவி பெற அல்லது இந்தியாவின் வைஸ்ராய் ஆக்க மிகவும் முயன்றார். ஆனால், ஆஸ்குவித் டோரிகளின் எதிர்ப்பைக் கண்டு அஞ்சினார். இறுதியாக வின்ஸ்டன் லங்காஸ்டர் கோமக நாட்டின் சான்சலர் (Chancellor of the Duchy of Lancaster) பதவிக்கு நியமிக்கப்பட்டார். சிறப்பான அலுவல்கள் எதுவும் இல்லாத பதவியில் அவருக்கு விறுவிறுப்பு இருக்கவில்லை. இந்தப் பதவியில் அவர் இருந்த காலத்தில் மனபிடியும், அவநம்பிக்கையும் அவரை வாட்டின. போர் முனையில் நடப்பனவற்றை அவர் அறிய முடிந்தது. ஆனால், அவற்றைக் கட்டுப்படுத்தும் சக்தியோ அவருக்குக் கொடுக்கப்படவில்லை. அவர் உளமார ஆதரித்த திட்டங்களை மற்றவர்கள் அரைமனத்துடன் செயல்படுத்துவதைக் கண்டு துயரம் கொண்டார்.

கடற்படைத் துறையிலிருந்து திடீரென வேலைப்பளுவில்லாத வொரு பதவிக்கு மாற்றப்பட்டதால் வின்ஸ்டனுக்கு ஏராளமான ஓய்வு கிடைத்தது. எல்லையற்ற அவரது ஊக்கத்தையும் ஆற்றல்களையும் பயன்படுத்துவதற்கு வழிதேடிக் கொண்டிருந்தார். ஒரு நாள் ஒரு பெண் ஓவியம் எழுதிக் கொண்டிருப்பதைக் கண்டார். தாமும் அந்தப் பொழுதுபோக்கில் ஈடுபட்டார். அரசியல் ஏமாற்றங்களிலிருந்து திசை திரும்பிச் சிறிது ஆறுதல் பெறலாமே என்று எண்ணினார். 1915ஆம் ஆண்டு மே திங்கள் ஒரு ஞாயிறு நாளில் அவர்தம் குழந்தைகளின் வண்ணக் குழம்புகளை எடுத்து ஓவியம் தீட்டுவதில் முதல் முயற்சியை மேற்கொண்டார். திறமையும் கைவண்ணமும் கொண்ட புதியவோர் ஆற்றலைத்தாம் பெற்றிருப்பதாக அவரால் கண்டுபிடிக்க முடிந்தது. உடனடியாக ஓவியம் தீட்டும் எண்ணெய்களும், தூரிகைகளும், பிற பொருள்களும் தருவிக்கப்பட்டன. சின்னாள்களின் பின்னர் வெறுமையான ஓவியத் திரைக்கு முன்னால் குழம்பு தோய்ந்த தூரிகையுடன் கிராமப்புறக் காட்சியைப் படமாக எழுதும் நோக்குடன் அமர்ந்திருந்தார். கேடயமும் வாளும் தாங்கிப் போரில் குதிக்கத் தயாராக இருக்கும் போர் வீரனைப்போல் இருந்தது அந்தக்காட்சி. ஆனால், முதல் தாக்குதலைச் செய்ய அவர் தயங்கி நின்றார். சிறிது நீல வண்ணத்தை எடுத்துக்கொண்டு திரையில் ஒரு புள்ளியை

எழுதினர். வெற்றிப்பாதையில் நடைபோடுவதுபோல் இருந்தது. மேலும் தொடர்ந்து எழுத முயன்ற நிலையில் லாவரி சீமாட்டியார் (Lady Lavery) உள்ளே நுழைந்தார். அவர் கையிலிருந்த தூரிகையைப் பெற்றுக்கொண்டு, வண்ணக் குழம்பில் தோய்த்து விரைவாக வரையத் தொடங்கினர். அவரது நடைமுறைப் பாடம் சர்ச்சினின் அச்சத்தை நீக்கியது. அன்று முதல் 'துணிவே ஓவியக்கலைக்குத் தலைசிறந்த துணை' என்ற கொள்கையைக் கடைப்பிடித்துக்கொண்டு படங்களை எழுதத் தொடங்கினர்.

### காலிப்போலி கைவிடப்பட்டது

காலிப்போலித் தாக்குதலைப் பொறுத்தவரை நடந்த நிகழ்ச்சி சுருக்கமாக ஆராய்வது நலம். காலிப்போலி படையெடுப்பு மேற்கூறிய அரசியல் சிக்கல்கள் ஏற்படுவதற்கு முன்னர் தொடங்கப் பெற்றது. டார்டனலஸில் கடற்படை நடவடிக்கைகள் சர்ச்சிலின் பொறுப்பிலிருந்தன. தரைப்படைத் தாக்குதல்களைக் கிச்சினர் கவனித்து வந்தார். தம்முடைய திட்டங்கள் வெற்றிபெறும் என வின்ஸ்டன் பெரும் நம்பிக்கை கொண்டிருந்தார். கிச்சினர் தரைப்படைகளை வழங்காத நிலையில் கடற்படை கொண்டு டார்டனலசை ஊடுருவுவதற்குச் சர்ச்சில் முடிவு செய்தார். ஃபிஷரும், வின்ஸ்டனும் தரைப்படையும், கடற்படையும் சேர்ந்து தாக்குதல் நடத்துவதையே விரும்பினர்கள். லட்சம் வீரர்களைக் கொண்ட தரைப்படை கிடைக்காத காரணத்தால் தான் தரைப்படை தனியே செயல்பட்டதென வின்ஸ்டன் போர் ஆலோசனைக் குழுவிற்கு அறிவித்தார். 1915ஆம் ஆண்டு ஃபிப்ரவரியில்தான் கிழக்கு முனைக்குத் தரைப்படைகளின் உதவி கிடைத்தது. ஆனல், படைகளைக்கொண்டு இறக்குவதில் காலதாமதம் ஏற்பட்டது.

இவ்வாறு கிச்சினரின் நிலையற்ற முடிவுகளால் கடற்படை மட்டும் போர் நடவடிக்கைகளைத் தொடங்க வேண்டியதாயிற்று. கடற்படை டார்டனலசை ஊடுருவத் தவறினல் தரைப்படை அதனை முயன்று வெற்றி காணவேண்டும். அதன் மூலமே பிரிட்டனின் கௌரவம் காப்பாற்றப்படும் என்று வின்ஸ்டன் கருத்துத் தெரிவித்தார். ஆனல், படைகளைத் தக்க காலத்தில் அனுப்பவும், அவற்றின் நடவடிக்கைகள் பற்றியும் கிச்சினர் எவ்வித திட்டத்தையும் தயாரிக்கவில்லை. மார்ச்சுத் திங்களில் ஜெனரல் ஈயான் ஹாமில்டன் மத்திய தரைக்கடல் அவசரப் படையின் தலைமை ஏற்குமாறு உத்தரவாயிற்று. ஆனல், டார்டனலஸ் பகுதியின் அமைப்பு பற்றியும், சூழ்நிலை பற்றியும், அவருக்கும், படைவீரர்களுக்கும் ஒன்றும் தெரியாது படைகளைப்

போக்குவரத்துச் செய்வதிலும் பெரும் காலதாமதமும், குழப்பமும் ஏற்பட்டன. படைப்பிரிவில் ஒன்ருவது முழுமையாக, சகல வசதிகளுடனும் வந்திறங்கவில்லே. படைகள் அலெக் சாண்டிரியாவிற்குச்சென்று அங்கிருந்து வேறு கப்பல்களில் வரவேண்டியிருந்ததால் மீண்டும் கால தாமதம் விளேந்தது. உரிய முறையில் சகலமும் நடைபெற்றிருந்தால் படைகள் உடனே செயல்பட்டிருக்க முடியும். இதற்குள் துருக்கியர்களும் தங்கள் படைகளுக்குத் தேவையான தளவாடங்களேச் சேகரித்துக் கொண்டார்கள்.

இந்தத் தவறுகளுக்கெல்லாம் சர்ச்சில் பொறுப்பாக மாட்டார். ஏனெனில், அவர் டார்டனலசில் தரைப்படைத் தாக்குதலில் ஈடுபட்டிருந்தார். பிரதமர் முன்னிலேயில் வின்ஸ் டனுக்கும் கிச்சினருக்கும் இடையே நடந்த சந்திப்பின் பின்னர் ராயல் கடற்படைப்பிரிவு கிக்சினர் கைக்கு மாற்றப்பட்டது. டார்டனலசில் கடற்படைத்தாக்குதல் நிறுத்தப்பட்டபோது, காலிப்போலி நடவடிக்கைகள் தொடர்ந்தன. ஏப்ரல் 25ஆம் நாள் ஈயான் ஹாமில்டன் தாக்குதலேத் தொடங்கினுர். 29000 வீரர்களேக் கொண்ட படை வந்திறங்கியது. ஆனுல், படையில் பலத்த சேதம் ஏற்படவே மேலும் படைகள் தேவைப்பட்டன. புதிய அமைச்சரவை நிறுவப்பட்டபோது காலிப்போலி விவகாரம் விவாதிக்கப்பட்டது. அதனே நிறுத்துவதற்குக் கிச்சினர் உடன் படவில்லே. இதுவரை நடந்திராத அளவு நடவடிக்கைகளே மேற் கொள்ளுமாறு மூன்று படைப்பிரிவுகள் அனுப்பப்பட்டன. அட்மிரல் டிரோபெக் தலேமையில் இயங்கிய கடற்படைக்கும் பெரும் உதவிகள் கிடைத்தன. தாக்குதல் தொடர்ந்தது. ஆனுல், இன்னும் படைகள் தேவைப்பட்டன. அனுப்பப்பட்ட உதவி களோ ஒன்று போதுமானதாக இல்லே அல்லது கால தாமதமாக வந்தன.

காலிப்போலி விவகாரத்தில் ஊக்கமும் உற்சாகமும் கொள்ளு மாறு போர் அமைச்சகத்தை வின்ஸ்டன் தூண்டி வந்தார். ஈயான் ஹாமில்டனுக்குப்பதிலாகப் புதிய படைத்தலேவர் அனுப்பப் பட்டார். காலிப்போலியிலிருந்து பிரிட்டிஷ் படைகள் வாபஸ் பெறுமாறு அவர் அறிவுரை கூறினுர். வெகுண்டெழுந்த கிச்சினர் நேரில் காலிப்போலி சென்று விசாரணே நடத்தினுர். வாபஸ் பெறுவதைத் தவிர வேறுவழி இருப்பதாகத் தென்படவில்லே. சிறந்த முறையில் படைகள் வெளியேறியதே காலிப்போலியின் உயிரற்ற வெற்றியாகக் கருதப்பட்டது. நல்லதொரு வாய்ப்பை இழந்ததுபற்றி வின்ஸ்டன் ஏமாற்ற மடைந்தார். காலிப்போலித்

தோல்விக்குச் சர்ச்சில் பொறுப்புள்ளவரா என்பதைப் பின்னர் ஆராய்வோம்.

காலிப்போலியிலிருந்து பிரிட்டிஷ் படைகள் வெளியேறிய துடன் வின்ஸ்டனின் நம்பிக்கையின் மீது இறுதித்திரை விழுந்தது. அவருடைய கொள்கைகளை யாரும் ஆதரித்ததாகத் தெரியவில்லை. போர்க் குழுவிலிருந்து அவர் அகற்றப்பட்டார். வின்ஸ்டன் அமைச்சரவையில் கீழ்நிலையில் இருப்பதைச் சகித்துக்கொள்ள முடியவில்லை. மீண்டும் போர்க்களத்தில் ஈடுபட அவரது உள்ளம் ஏங்கியது. அகழிகள் அவரை அழைத்தன. ஃபிராஞ்சில் வாய்ப்புகள் இருக்கின்றனவா? என்று அறியும் நோக்கத்துடன் பதவி துறந்தார். அவரது ராஜினமா, காமன்ஸ் அவையில் அவர் முழு அறிக்கை சமர்ப்பிப்பதற்கான வாய்ப்பை அளித்தது. 1915 ஆம் ஆண்டு நவம்பர் 15ஆம் நாள் வின்ஸ்டன் காமன்ஸ் அவையில் அமைச்சர்களுக்குப்பின் வரிசையில் அமர்ந்தார். கடந்த பத்தாண்டுகளில் இப்பொழுதுதான் அவர் அதிகாரப் பொறுப்புகள் எதுவுமின்றி முதல் முறையாகத் தனி உறுப்பினர் என்ற முறையில் உரை நிகழ்த்தினர். இப்பொழுது அவரைக் குறை கூறுவோருக்கு அதன் பயமின்றிப் பதில் கூறக்கூடிய நிலையில் இருந்தார். போரின் போக்கையும், அதன் உச்ச நிலையையும், தமது நிருவாகம் பற்றிய உண்மைகளையும் விரிவாக விளக்கினர். விரைவில் போர்ப்பணிக்காக வெளிநாடு செல்ல வேண்டியிருந்ததால் அவர் பேச்சில் நிதானமும் அடக்கமும் இருந்தன. பிரதமர் ஆஸ்குவித், வின்ஸ்டன் உரை நிகழ்த்தியபின் அவரை 'அறிவு மிக்க ஆலோசகர், திறமைமிக்க சகா, உண்மையுள்ள நண்பர்'[1] என்று பாராட்டினர். அவரது புதிய பணியில் வெற்றிமாலை சூடுமாறு அவையின் பெயரால் ஆசியும் கூறினர். வின்ஸ்டனின் ராஜினமா உரை வரலாற்றில் இடம் பெற்றுள்ளது. அவரது போர்க்கால வாழ்க்கையின் நான்கு முக்கிய கட்டங்களை மட்டும் அவர் விரிவாகக் கோடிட்டுக் காட்டினர். அவை வான்ஸ்பீயை வென்றதும் அழித்ததும், வட கடலில் மூன்று போர்க்கப்பல்களை நாசம் செய்தது, ஆன்ட்வெர்ப் முற்றுகை, டார்டனலஸ் படையெடுப்பு ஆகியவை. காமன்ஸ் அவையில் வின்ஸ்டன் ஆற்றிய ராஜினமா உரையில் அடங்கியிருந்த உண்மைகளை வரலாறு உறுதி செய்திருப்பது வின்ஸ்டனுக்குப் பெருமை தரக்கூடிய தொன்றாகும்.

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 192.

**மேற்குமுனை நோக்கி**

பதினைந்தாண்டுகளின் பின்னர் மீண்டும் வின்ஸ்டன் போர்க் களத்தில் இறங்கினார். தற்காலிகமாக அவரது அரசியல் பணியிலிருந்து விலகிப் படைக்குரிய சீருடையை அணிந்து கொள்ள வேண்டியதாயிற்று. தமது ஆர்வமிக்க இயல்பிற்கு ஏற்றவாறு போர்ப்பணிக்குத் தம்மையே அர்ப்பணித்தார். அரசியல் வாயில் அடைபட்டுவிட்ட காரணத்தால் ராணுவ வாழ்க்கையில் புதிய வெற்றிவாகை சூடும் உறுதியுடன் மேற்கு முனையின் அகழிகளுக்குச் செல்லத் தயாரானார். அவர் ஃபிரான்சிற்குப் புறப்பட்ட நாளில் அவரது வீடே அமர்க்களப்பட்டது. அவரது உண்மையுள்ள செல்வராகிய எடி மார்ஷ் (Eddie Marsh) கண்ணீரும் கம்பலையுமாகி நின்றார். ரேண்டால்ஃப் சீமாட்டியார் தம் அருமை மகனின் பிரிவுக்காக வருந்தினார். சர்ச்சிலின் மனைவி துயரமே உருவாகி அமைதியில் ஆழ்ந்துவிட்டார். ஃபிரான்சில் வந்திறங்கியதும் மேஜர் வின்ஸ்டன் தளபதி, சர் ஜான் ஃபிரஞ்சுவைச் சந்தித்தார். தாம் எவ்விதப் பணியையும் ஆற்றத் தயாராக இருப்பதாக வின்ஸ்டன் கூறினார். படைப்பணி ஒன்றிற்குத் தலைமை தாங்கும் பொறுப்பு அவருக்கு அளிக்கப்பட்டது. பொறுப்பை ஏற்பதற்கு முன் கிரனேடியர் கார்ட்ஸ் (Grenadier Guards) என்னும் காவலர் படையில் அவர் பயிற்சி பெற்றுக்கொண்டார்.

1915ஆம் ஆண்டு ஒரு நவம்பர் நாளில் குளிரும் மழையுமாக இருந்தது. கிரனேடியர் கார்ட்ஸ் படை போர்முனை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தது. மேஜர் சர்ச்சிலும், கர்னலும் ஆர்த்துவாவில் (Artois) அழிந்து கிடந்த பண்ணை வீடுகள், வீழ்ந்து கிடந்த மரங்கள் வழியாகப் பின் தொடர்ந்து கொண்டிருந்தனர். அரைமணி நேரமாக இருவரும் பேசவில்லை. பின்னர் வின்ஸ்டன் ஃபிரான்சிற்கு வரும் விஷயமாகத் தாம் கலந்தாலோசிக்கப்படவில்லை என்று கர்னல் குறிப்பிட்டார். இஃது அவ்வளவு நல்ல வரவேற்பாகத் தெரியவில்லை. அடுத்த நான்கு நாட்களாகக் கர்னலைப் போலவே கால நிலையும் கடுமையாக இருந்தது, நாளடைவில் தனிப்பட்ட வெறுப்புணர்ச்சிகள் மாறவே, வின்ஸ்டன் முறையான படையதிகாரியாக ஏற்றுக்கொள்ளப்பட்டார். படைத் துணைத்தலைவர், விடுமுறையில் சென்றபோது அந்தப் பொறுப்பு வின்ஸ்டனுக்கு வழங்கப்பட்டது. இந்தக் கௌரவம் கிடைத்ததற்காக வின்ஸ்டன் பெரு மகிழ்வு கொண்டார். அகழிப் போரில் வின்ஸ்டனுக்குச் சிறந்த பயிற்சி இருப்பதைக் கர்னல் பாராட்டியபோது வின்ஸ்டனின் உள்ளம் குளிர்ந்தது.

பயிற்சி முடிந்ததும் வின்ஸ்டன் படைத்தலைமைச் செயலகத்திற்குச் சென்று பிரிகேட் (Brigade) அணியின் தலைமை கிடைக்குமென்று எதிர்பார்த்தார். ஆனால், அதற்குள் தலைமைத் தளபதி சர் ஜான் ஃபிரஞ்சுவிற்குப் பதவி மாற்றம் ஏற்பட்டதால் புதியதாகப் பொறுப்பேற்ற ஹேய்க் (Haig) வின்ஸ்டனுக்குச் சிறிய படைத் தலைமையைத்தான் கொடுத்தார். வின்ஸ்டன் இதனால் பெரும் ஏமாற்ற மடையவில்லை. ஓய்வு நேரங்களில் எதிரியின் வீழ்ச்சிக்கானத் திட்டங்களை உருவாக்குவதில் ஈடுபட்டார். ஆறுவது ராயல் ஸ்காட் ஃப்யூசிலியர்ஸ் (6th Royal Scots Fusiliers) படைத்தலைமை அவருக்குக் கொடுக்கப்பட்டதால் இழிவு நீங்கிற்று. அவரும் இப்பொழுது 'லெஃப்டினென்ட்-கர்னலாகப் பதவி உயர்வு பெற்றார். படைவீரர்களுக் குள்ளும், வீரர்களுக்கும் அதிகாரிகளுக்கும் இடையிலும் நல்ல உறவுகளை ஏற்படுத்துவதில் வினஸ்டன் சீரிய முயற்சிகளை மேற்கொண்டார். படையின் உணவு வசதிகளிலும், துப்புரவு ஏற்பாடுகளிலும் சிறப்பான கவனம் செலுத்தினார். துப்பாக்கிப் பயிற்சியின் தரம் உயர்வாக இருக்க வேண்டுமென்பது அவரது எண்ணம். ப்ளோக்ஸ்டீரிட் (Ploegstreet) அகழிகளில் அவர் படைத்தலைமையை மேற்கொண்டது முதல் வின்ஸ்டனின் புகழ் உயர்ந்தது. அவர் படைவீரர்களுடன் இரவு பகலாகத் தங்கினார். சில வேளைகளில் இரவுக் காவலர்களின் பணியைக்கூட அவர் பகிர்ந்து கொள்வதுண்டு. சாதாரண வீரர்களின் அன்பையும் நம்பிக்கையையும் அவர் பெற முடிந்தது.

அகழிகளில் செயலின்றிச் சோம்பிக்கிடப்பது வின்ஸ்டனுக்குப் பிடிக்கவில்லை. இரவு நேரங்களில் வீரர்கள் எதிரிகள்மீது துப்பாக்கி, இயந்திரத் துப்பாக்கி மூலம் சூடு நடத்துமாறு பணித்தார். எதிரிகள்பதில் சூடு நடத்தியவுடன் உதவி கேட்டுத் தலைமைச் செயலகத்திற்குச் செய்தி அனுப்புவார். இவ்வாறு இரவுத் தாக்குதல் நடத்துவது அருகில் இருந்த படை அணிகளுக்குத் தொல்லையாக இருந்தாலும், அவர்கள் வின்ஸ்டனின் துணிவைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. ஒருமுறை அவர் தங்கியிருந்த அறை மீதே எதிரியின் குண்டு வீச்சுகள் நடந்தன. தடுப்புச்சுவர்கள் எழுப்பிப் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியதாயிற்று. தெய்வத் திருவருள் அவருக்குத் துணை நின்றது. அகழிப் போரில் ஈடுபட்டிருந்த வின்ஸ்டனைக் காணப் பல அரசியல் தலைவர்கள் வருவதுண்டு. அவர் பழைய நண்பர் எஃப். ஈ. ஸ்மித் (F. E. Smith) தக்க ஆணையில்லாமல் அவரைப் பேட்டி கண்டு கொண்டிருக்கும்போது அவர் கைது செய்யப்பட்டார். அரசாங்கத் தலைமை வழக்கறிஞர் ஸ்மித்திற்குச்செய்யப்

பட்ட இழிவு, வின்ஸ்டனின் மனத்தைப் புண்படுத்தியது. இது பற்றிப் போனூர்லாவிற்கு விவரமாக எழுதி அமைச்சரவையின் உறுப்பினர் ஒருவருக்குச் செய்யபட்ட அவமரியாதைக்குப் பரிகாரம் தேடச் செய்தார்.

அகழிகளில் வின்ஸ்டன் செலவிட்ட காலத்தில் நடந்த நிகழ்ச் சுளை 'வித் வின்ஸ்டன் அட் த ஃபிரன்ட்' (With Winston at the Front) என்னும் நூலில் 'காப்டன் எக்ஸ் (Captain X) என்ற புனை பெயரில் ஒருவர் தொகுத்து வைத்திருக்கிறார். படைத்துறைத் தலைமைச் செயலகத்தில் வின்ஸ்டன் சுறுசுறுப்பாகக் காரியங்களில் ஈடுபடுவார். முதலில் துணைப்படைத் தலைவர்கள் முறையாக அறிமுகம் செய்து வைக்கப்படுவார்கள். அவ்வாறே பிற அதிகாரி களும் அறிமுகம் ஆவார்கள். பின்னர் வின்ஸ்டன் ஒவ்வொரு வரையும் அடிமுதல் நுனிவரை நுட்பமாக ஆராய்வார். பாசறை யில் பெருகிவந்த பேன்கள் மீது போர் தொடுத்திருப்பதாக வீரர் களுக்குச் சொல்லி உணர்ச்சியூட்டுவார். பின்னர் மருத்துவருடன் பேன் தொல்லை பற்றிக் கலந்தாலோசித்து ஆவன செய்வார். எல்லோருடைய முயற்சியாலும் பேன்களின் படையெடுப்பு அழிக்கப்பட்டது.

ரிட்ச்சி (Ritchie) என்பவர் குறிப்பிட்டது போல வின்ஸ்டனின் தலைமையிலிருந்து வீரர்கள், 'துப்பாக்கிகளையும், காலணிகளையும் துடைத்து மெருகிடும் வெறும் கண்துடைப்புப் பட்டாளம் அல்லர். வீரர்களின் தரம் உயர்வு கண்டது. அடிக்கடிப் படை யணித் தலைவர்கள் தலைமைச் செயலகத்தில் கூட்டு உணவில் பங்கு பெறுமாறு அழைக்கப்படுவார்கள். பிறரைக் கவர்ந்து காரியங் களைச் செயல்படுத்துவதில் வின்ஸ்டனுக்கு இணையானவர் எவரு மிலர். தலைமைப் பொறுப்பை ஏற்றவுடனேயே வீரர்கள் சதுப்பு நிலமொன்றில் அணிவகுப்புப்பயிற்சிக்குத் தினம் வருமாறு வின்ஸ்டன் பணித்தார். அணிவகுப்பில் ஒவ்வொரு வீரரையும் கண்டு பேசுவார். ஒரு வீரரின் வயது நாற்பத்து ஒன்று என்று கூறிய போது தமக்கும் அதே வயதுதான் என்று கூறிப் பெருமைப் பட்டார் வின்ஸ்டன். அணிவகுப்பு முடிந்து துப்பாக்கி முனைப் போர்ப்பயிற்சி (Bayonet drill) நடைபெறும். குதிரைகளில் அமர்ந்து தாக்குவதும் உண்டு. எல்லா நடவடிக்கைகளிலும் வின்ஸ்டன் கலந்து கொள்வார். பிற அலுவல்கள் இருந்தாலும் தினமும் மூன்றுமுறை பாசறையைச் சுற்றிவருவதுண்டு.

அகழிப் போர்ப்பணியில் கர்னல் வின்ஸ்டனுக்கும் பிறபடைத் தலைவர்களுக்கும் இடையே நல்லுறவு நிலவியது. ஒரு தடவை

வின்ஸ்டன் லாரன்ஸ் ஃபார்ம் என்ற இடத்திலிருந்த படைத் தலைமைச் செயலகத்திற்கு வருகை தந்தார். படைத்தலைவர் தகுந்த பாதுகாப்பு ஏற்பாடுகள் இல்லாமல் அந்தச் செயலகம் மிகவும் ஆபத்தில் இருப்பதாக அடிக்கடிக் கூறிக்கொண்டே இருந்தார் 'நீர் கூறுவது உண்மைதான். ஆனால், இந்தப்போரே ஆபத்தான போர் என்பதை மறந்துவிட வேண்டாம்'[1] என்று அவருக்குப் பதில் கூறி மடக்கினார் கர்னல் சர்ச்சில். அவர் விடியற்காலையில்கூட அகழிகளைப் பார்வையிட வருவார். ஒரு சமயம் காயம்பட்ட ஒருவரையும், இறந்துபோன வீரர் ஒருவரையும் தூக்கிக்கொண்டு வந்தார்கள். அப்பொழுது படை வீரர்களில் பெரும்பாலோர் உறங்கிக் கொண்டிருந்தனர். இதனைக் கண்ட வின்ஸ்டன். 'எதிரி போர் தொடுத்துவிட்டான். எழுந்திருங்கள்' என்று அபாய அறிவிப்புச் செய்தார். படை வீரர்கள் சுடத் தொடங்கினார்கள். குண்டுகளும், ஏவுகணைகளும் பறந்த வண்ணமிருந்தன. வின்ஸ்டனோ சிறிதும் அச்சமின்றி அவர்கள் நடுவே நின்று 'உங்களுக்குப் போர் என்றால் பிடிக்குமா?' என்று கேட்டுக் கொண்டிருந்தாராம். சிலர் அவர் கூறுவதைக் கேட்காதவர் போல் நடிப்பார்கள். அவருக்கு மட்டும் அச்ச மென்பது அணுவளவும் இல்லை.

இத்தகைய திருவிளையாடல்கள் இடைவெளிகளில் பரபரப் பூட்டும். ஆனால், பொதுவாக அவை வீரர்களாலும், படைத் தலைவர்களாலும் விரும்பப்படவில்லை. கிப் (Gibb) போன்ற துணை அதிகாரிகள் இத்தகைய நள்ளிரவுத் தாக்குதலை வெறுத்தார்கள். அன்றாடம் படையதிகாரிகள் தத்தம் அணிகள் பற்றி அறிக் கைகள் சமர்ப்பிப்பார்கள். உயிரற்ற இந்த அறிக்கைகளை வின்ஸ்டன் எவ்வாறு எழுத வேண்டுமென்று திருத்திக் கொடுப் பார். ஓர் இரவில் உயர்படை அதிகாரிகளுக்கும் வீரர்களுக்கும் விருந்தளிக்கப்பட்டது. கர்னல் வின்ஸ்டன் விருந்தினர்களை வெறும் விருந்தோடு மட்டும் அனுப்பத் தயாராக இல்லை. விருந் திற்குப்பின் உயர் அதிகாரிகள் ஒவ்வொருவரையும் தமது அகழி களைப் பார்வையிடுமாறு அழைத்தார். இரவின் அமைதியும், விழாவின் சிறப்பும் அவர் உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டன. ஆனால், வீரர்கள் விருந்துண்ட மயக்கத்தில் உருண்டு புரண்டு அகழிப்போர்ச் சாதனைகளைச் செய்து காட்டுவதற்குச் சிரமப் பட்டார்கள். எனினும், வின்ஸ்டனைப் போல் செல்வாக்குப் பெற்ற கர்னல் இல்லையெனக் கூறலாம். கடின உழைப்பு, விடா முயற்சி, குறையற்ற நிருவாகம்-ஆகியவற்றில் யாரும் அவரை விஞ்ச முடியாது. 'போர் என்பது புன்முறுவலுடன் விளையாட

[1]Churchill—A Portrait, Philip Guedalla, p. 198.

வேண்டிய வீர விளையாட்டு'[1] என்று கூறிச் சோர்ந்த அதிகாரிகளையும் விரர்களையும் அவர் உற்சாகப்படுத்துவார். போரென்றால் அவருக்கு உயிர்.

### அகழியிலிருந்து அரசியலுக்கு

1916ஆம் ஆண்டில் வின்ஸ்டன் சர்ச்சில் மீண்டும் காமன்ஸ் அவைக்குத் திரும்பினார். அவரது தீவிரப் போர்ப்பணி முடிவுற்றதும் அகழியிலிருந்து அரசியலுக்குத் திரும்பிப் பொதுப் பணியைத் தொடர்ந்தார். அவர் வெஸ்ட்மினிஸ்டருக்கு வந்ததன் காரணம் அரசியலிலும், ராணுவத்துறையிலும் ஏற்பட்டிருந்த சூழ்நிலைகளாகும். அவர் தலைமை தாங்கிய ஆறாவது ராயல் ஸ்காட் ஃப்யூசிலியர்ஸ் படை கலைக்கப்பட்டு மற்றொரு படைப்பிரிவுடன் இணைக்கப்பட்டு விட்டதால் வின்ஸ்டனின் தலைமைப் பதவி பறிபோயிற்று. இதற்குள் மீண்டும் அரசியலுக்குத் திரும்புமாறு நண்பர்களிடமிருந்து அழைப்புமேல் அழைப்பு வந்து கொண்டிருந்தது. ஆஸ்குவித்தின் கூட்டமைச்சரவை காலதாமதத்திற்கும், கோழைத்தனத்திற்கும், குழப்பத்திற்கும், வீண் விரையத்திற்கும் புகழ் பெற்றிருந்தது. 'இதுவரை சிந்தப்பட்ட இரத்தமும், செய்யப்பட்டதியாகங்களும் வீணாகிவிடும்'[2] என்று லாயிட் ஜார்ஜ் எச்சரித்தார். 1916ஆம் ஆண்டில் நடைபெற்ற சோம் (Somme) படையெடுப்பில் 600,000 பிரிட்டிஷ் வீரர்கள் பலியாயினர். தலைசிறந்த தலைவர்களாக வரக்கூடிய பல இளம் அதிகாரிகள் மாண்டனர். நேசநாட்டுப் படைகள் பால்கனிலுள்ள சலோனிக்காவில் வந்திறங்கிய போதிலும், செர்பியாவும், பல்கேரியாவும் எதிரிகளுடன் சேர்வதைத் தடுக்க முடியவில்லை. 1916ஆம் ஆண்டு செப்டம்பரில் மெசபொடோமியாவில் குட் (Kut) போர்க்களத்தில் பிரிட்டிஷ் படை சரணடைந்தது. அயர்லாந்தில் கிச்சினரின் தவறுகளால் ரெட்மாண்ட் (Redmond) எடுத்திருந்த முயற்சிகள்யாவும் அழிந்துபட்டன. பெருங்கடல்களில் நேச நாட்டுப்படை இன்னும் தற்காப்பு நிலையில்தான் இருந்தது. 1916ஆம் ஆண்டில் நிகழ்ந்த ஜட்லண்ட் (Jutland) கடற்போரும் முழுவெற்றி தரவில்லை. இவ்வாறு நிலத்திலும், நீரிலும் பிரிட்டனின் வெற்றி வாய்ப்புகள் இருள் சூழ்ந்திருந்தன.

இந்த நெருக்கடிக் கட்டத்தில் தான் உண்மையான நாட்டுப் பற்றும், ஆற்றலும், அறிவும் பெற்ற இளம் வின்ஸ்டன் நாடு கடத்தப்பட்டவர் போல் மேற்கு முனையில் தங்கவேண்டியதாயிற்று. ஃபிரான்சில் அவர் அகழிப்போரில் ஈடுபட்டிருந்ததை

[1] Churchill—A Portrait, Philip Guedalla, p. 199.
[2] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 199.

நேரில் கண்டவர்கள் வின்ஸ்டனைப் போல் திறமையுள்ளவர்கள், கேவலம் சிறுபடைத்தலைவர்களாகச் சக்தியை வீணுக்காமல், தாயகம் திரும்பி நாட்டை நல்வழி நடத்த வேண்டுமென விரும்பினுர்கள். வின்ஸ்டன் டார்டனலஸ், காலிப்போலி தவறுகளுக்காகக் குற்றஞ் சாட்டப்பட்டார். உண்மையில் அவற்றின் முழுப்பொறுப்பையும் ஏற்க வேண்டியவர் ஆஸ்குவித்தான். 'படையதிகாரிகள் அரசியல்வாதிகளை நம்புவதில்லை' என்பது கிப்ளிங்கின் கதைகளிலும், கவிதைகளிலும் கேலி செய்யப்பட்டது. எனினும், வின்ஸ்டனின் திறமையை யாரும் மறைக்கவோ, மறுக்கவோ முடியாது. தாய்நாடு திரும்பித் தவறுகளைத் திருத்தவேண்டுமென்ற அவா அவரைப்பிடித்துக் கொண்டது. எட்வர்ட் கார்சன், சர் எட்வர்ட், சர் ஆர்தர் மார்க்ஹாம் (Sir Arthur Markham), மான்செஸ்டர் கார்டியன் ஏட்டின் ஆசிரியரான சி. பி. ஸ்காட் (C. P. Scott) போன்ற எதிர்க்கட்சித் தலைவர்களும், நாட்டுப் பக்தர்களும், வின்ஸ்டனின் சேவை, நாட்டுக்குத் தேவை' என்று அழைப்பு விடுத்தனர். எனவே, அகழி வீரர் தாம் உளமார விரும்பி ஈடுபட்ட பணியை விடுத்து நாட்டின் அழைப்பை மேற்கொண்டார். ப்ளோக்ஸ்டிரீட் அகழியில் எதிரியின் துப்பாக்கியிலிருந்து சிதறிய ஒரு குண்டு பிரிட்டனின் வரலாற்றையே மாற்றியிருக்கக்கூடும். ஆனுல், வின்ஸ்டனுக்கு விதி வேறுவழியை வகுத்திருந்தது. அதன்வழியில் அவர் நடக்கத் தொடங்கினுர்.

வின்ஸ்டன் நாடு திரும்பிய நிலையில்தான் முன்னர்க் குறிப்பிட்ட ஜட்லண்ட் கடற்போர் நிகழ்ந்தது. போரின் இழப்புகளைக் கேட்டறிந்த பிரிட்டிஷ் மக்கள் வெகுண்டனர். அதுகாலை சர். டக்ளஸ் பிரவுன்ரிக் (Sir Douglas Brownrig) ஜட்லண்ட் விவகாரங்களைப்பற்றிய உண்மை விளக்கங்களை எழுதுமாறு வின்ஸ்டனைக் கேட்டுக் கொண்டார். வின்ஸ்டனும் இட்ட பணியைச் செவ்வனே செய்து முடித்தார். ஜட்லண்ட் தோல்வியை அடுத்து கிச்சினரின் அகாலமறைவு நாட்டைப் பேரிடியெனத் தாக்கியது. ருஷ்யாவிற்கு அவரை ஏற்றிச்சென்ற கப்பல்கள் எதிரிகளால் மூழ்கடிக்கப்பட்டன. லாயிட் ஜார்ஜ் புதிய போர்த்துறை அமைச்சராகப் பொறுப்பேற்ருர். போர்த்தளவாட அமைச்சகத்திற்கு வின்ஸ்டன் நியமிக்கப்படாதது அவரை வெகுவாய் வருத்தியது. வின்ஸ்டன் சிறிதுகாலம் மீண்டும் ஓவியம் எழுதுவதில் கவனத்தைத் திருப்பினுர். மீண்டும் அமைச்சரவையில் அவர் இடம்பெறச் சிறிதுகாலம் பிடித்தது. அவருக்கு எதிரான காழ்ப்புணர்ச்சிகள் இன்னும் முற்றிலும் ஒழிந்துவிடவில்லை. காலிப்போலியின் உண்மை விவரங்களை அறிந்த கன்சர்வேடிவ்கள்

வின்ஸ்டனைப்பற்றிய தங்கள் கருத்துகளை மாற்றிக்கொண்டிருந் தனர். 'மனவலிமையிலும், உயிர்ச்சக்தியிலும் வின்ஸ்டனுக்கு இணையானவர் இந்த நாட்டில் இல்லை' எனப்போனர்லா புகழ் மாலை சூட்டினார். 'காலிப்போலி விவகாரத்தில் போர் அமைச்ச கத்தின் தவறுகளுக்காக வின்ஸ்டன்மீது பழிசுமத்துவது தவறு' என்றும் போனர்லா குறிப்பிட்டார். பாராளுமன்றம் திரும்பி யதும் வின்ஸ்டன் தம்மீது ஏற்பட்ட களங்கத்தை நீக்குவதில் ஈடுபட்டார். ஆனால், துரதிர்ஷ்டவசமாக சம்பந்தப்பட்ட ஆதா ரங்களை வெளியிடுவதற்கு அனுமதி கிடைக்கவில்லை.

1917ல் லாயிட் ஜார்ஜ் தலைமையில் புதிய கூட்டமைச்சரவை நிறுவப்பட்டது. வின்ஸ்டனுக்கு அமைச்சரவையில் இடமளிக்க அவர் பெரிதும் விரும்பினார். ஆனால், டார்டனலஸ், காலிப் போலி பூதங்கள் வின்ஸ்டனின் புகழ்மீது கருநிழலாகப் படர்ந்தன. ஆஸ்குவித் தம்மை என்றுமே ஆதரித்துத் தமது பெருந் தன்மையைக் காட்டவில்லை என்று வின்ஸ்டன் வருந்தினார். போர் நிகழ்ச்சிகளின் உண்மை ஆதாரங்களை வெளியிடுவதையும் ஆஸ்குவித் தடை செய்தார். காலிப்போலி குழப்பத்தை ஆராயக் கண்துடைப்பு ஆணைக்குழு அமைக்கப்பட்டது. எட்டு ஆணை யாளர்களைக் கொண்ட குழு நீண்டகாலம் விசாரணை நடத்தியது. பல நூறு சாட்சிகள் விசாரிக்கப்பட்டனர். எண்பத்தாறு கூட் டங்களை நடத்தி அறிக்கை தயாரித்தது குழு. அதற்குள் குழுவின் தலைவர் குரோமர் பிரபு (Lord Cromer) இறந்து விட்டார். அதற்குள் கிச்சினர் மறைந்தார். புதிய அமைச்சரவையே பதவி ஏற்றது.

லாயிட் ஜார்ஜ் பிரதமரானபோது நேசநாடுகளின் போர் நிலை படுமோசமாக இருந்தது. உள்நாட்டில் அமைதி நிலவ வில்லை. அயர்லாந்துப் பிரச்சினை அசுரரூபம் எடுத்தது. சோம் போரில் பிரிட்டிஷ் படையில் பல திலகங்கள் களப்பலியாயின. ருமேனியா வீழ்ந்தது. கிரேக்க மன்னர் ஜெர்மனியுடன் இரகசியத் தொடர்பு கொண்டிருந்தார். மெசபொடோமியாவில் துருக்கி பிரிட்டனைத் தோற்கடித்தது. சூயஸ் பகுதியில் துருக்கியின் தொல்லை ஓயவில்லை. நேசநாட்டுக் கப்பல்களை நீர்மூழ்கிகளைக் கொண்டே நாசம் செய்து அடிபணிய வைப்பதென்பது ஜெர் மனியின் திட்டம். இதற்கிடையில் 1917ஆம் ஆண்டில் ருஷ்யாவில் புரட்சி ஏற்பட்டது. புதிய அரசின்கீழ் சீர்திருத்தங் களும், படைப் புனரமைப்பும் ஏற்படும் என்ற எண்ணத்துடன் தொடக்கத்தில் பிரிட்டன் புரட்சியை ஆதரித்தது. ஆனால், புரட்சி வெள்ளத்தில் அதனை உருவாக்கியவர்களே சிக்கித் திக்கு

முக்காடும் நிலை உருவாகியது. ருஷ்யாவில் குழப்பமும் உள் நாட்டுப் போரும் ஏற்படவிருந்தகாலை, மைய அரசில் லெனினும் (Lenin), டிராக்ஸியும் (Troksy) ஆட்சியைக் கைப்பற்றினர்கள். போல்ஷிவிக்குகள் ஜெர்மனியுடன் போர்புரிவதில் ஆர்வம் கொள்ளவில்லை. முதலாளித்துவத்திற்கு எதிராக அனைத்துலகத் தொழிலாளித்துவ அரசை நிறுவுவதில்தான் அவர்களின் அக்கறை இருந்தது. எனவே, நேசநாடுகள் ருஷ்யாவின் கூட்டுறவில் நம்பிக்கை இழந்தனர்.

ஜெர்மனியின் நீர்மூழ்கித் தொல்லை அதிகரித்தபோது, அமெரிக்கா பொறுமையை இழந்தது. 1917 ஏப்ரலில் அமெரிக்காவும் போரில் குதித்திருப்பதாக ஜனாதிபதி உட்ரோ வில்சன் அறிவித்தார். ருஷ்யாவின் இழப்பிற்கு அமெரிக்காவின் வரவு ஈடு கொடுப்பதாக இருந்தாலும், அமெரிக்க உதவி விரைவாகவும், போதிய அளவிலும் கிடைப்பதற்கு வழியில்லை. இதற்குள் பிரிட்டனில் புத்துணர்ச்சி பெருக்கெடுத்தது. உணவுக் கப்பல் போக்குவரத்து அமைச்சகம் புதிதாக நிறுவப்பட்டது. புதிய படைப்புகளான ஆகாய விமானங்கள் போரில் பயன் படுத்தப்பட்டன. வேளாண்மை முன்னேற்றத்தில் மகத்தான கவனம் செலுத்தப்பட்டது. ஆனல், ராணுவத்துறையில் மந்த நிலை தொடர்ந்தது. ஹேய்க், ராபர்ட்சன் போன்ருரின் தான் தோன்றித் திட்டங்களை லாயிட் ஜார்ஜ் எளிதில் மாற்ற முடியவில்லை. 1917ஆம் ஆண்டில் பாஸ்கண்டேல் (Passchendaele) சதுப்பு வெளியைச் செம்மைப்படுத்தும் முயற்சியில் அரை மில்லியன் வீரர்கள் வீணடிக்கப்பட்டார்கள். உடனடியாக வின்ஸ்டனை அமைச்சரவைக்குக் கொண்டுவர முடியாவிட்டாலும், அவர்மீது படிந்த களங்கத்தை நீக்கும் எண்ணத்துடன் லாயிட் ஜார்ஜ் டார்டனலஸ் விசாரணைக் குழுவின் அறிக்கையை வெளியிட்டார்.

டார்டனலஸ் அறிக்கை ஆஸ்குவித் அதில் கொண்ட பங்கையும், கிச்சினரின் நடவடிக்கைகளையும் கடுமையாக விமரிசித்தது. வின்ஸ்டன் செய்ததாக மிகைப்படுத்திக் கூறப்பட்ட தவறுகள் அதில் மிகைப்படுத்தப்படவில்லை. ஆணைக்குழுவில் சர்ச்சிலின் ஆதரவாளர்கள் யாரும் இடம்பெறவில்லை. எனினும், டார்டனலசை ஊடுருவக் கடற்படைத் தாக்குதல் செய்யுமாறு வின்ஸ்டன் கொண்டுவந்த யோசனையைக் குழு, சிறந்த திட்டம் எனப் பாராட்டியது. ஆஸ்குவித்தின் போர் ஆலோசனைக் குழு, படைகளை அனுப்புமாறு கிச்சினரை வற்புறுத்தாதது தவறெனச் சுட்டிக் காட்டப்பட்டது. காலிப்போலி முற்றுகையின்போது

பிரதமர் ஆலோசனைக் குழுவைக் கூட்டாததும் தவறெனக் கண்டிக்கப்பட்டது. அறிக்கை வெளிவந்ததும் பல திசைகளி லிருந்து கண்டனக்குரல்கள் கிளம்பின. நார்த்கிளம்ப் (North climb) பிரபுவின் ஆதிக்கத்திலிருந்த பத்திரிகைகள் தவறுக்குக் காரணமாயிருந்தவர்கள் மீது குற்ற விசாரணை நடத்துமாறு கோரின. சர்ச்சில்மீது சுமத்தப்பட்ட பழி ஓரளவு நீங்கியது. வின்ஸ்டனின் புகழ் உயரத்தொடங்கியது. போரின் நடை முறைகளைப் பற்றி வின்ஸ்டன் எழுதிய கண்ணோட்டங்கள் வரவேற்கப்பட்டன. லாயிட் ஜாரஜ் வின்ஸ்டனைப் புதிய அமைச் சரவையில் போர்த்தளவாட அமைச்சராக (Minister of Munitions) நியமித்தார். தாயகம் அழைத்தது, தலைவர் ஏற்றுக் கொண்டார்.

## போர்த்தளவாட அமைச்சர்

1917ஆம் ஆண்டு ஜுலையில் வின்ஸ்டன் போர்த்தளவாட அமைச்சராகப் பதவி ஏற்றார். லாயிட் ஜார்ஜினால் தொடங்கப் பெற்ற புதிய பணித்துறையான போர்த்தளவாட அமைச்சகம் அபாயகரமான அதன் முதல் கட்டத்தை வெற்றிகரமாக முடித் திருந்தது. மான்டேகு (Montagu), டாக்டர் அடிசன் (Dr. Addi-son) ஆகியோர் பதவி வகித்தகாலத்தில் அமைச்சகத்தில் கட்டுப் பாடு நிலவியது. தற்சமயம் புதிய அமைச்சகம் தேசீய நிருவாக இயந்திரத்தின் தொல்லையில்லாத ஒரு பகுதியாக இயங்கி நேசப்படைகளின் தளவாடங்களைத் தங்குதடையின்றி வழங்கு வதில் ஈடுபட்டு நின்றது. வின்ஸ்டன் சர்ச்சில் நியமனம் பெற் றதும் கன்சர்வேடிவ்களுக்குள் முணுமுணுப்பு இருந்தது. தொடக் கத்திலிருந்தே புதிய அமைச்சகத்தை நன்கு சீரமைத்து வின்ஸ் டன் தமது நியமனம் நியாயமானதென்று மெய்ப்பித்தார். புதிய பணித்துறையில் பன்னீராயிரம் பணியாளர்கள் ஐம்பது குழுக் களாகவும், துணைத்துறைகளாகவும் இயங்கி வந்தனர். வின்ஸ டன் இவை யாவற்றையும் பன்னிரு குழுக்களாகத் திருத்தி அமைத்தார். அவைகளுக்குள் தொடர்பு ஏற்படுத்தும்படி நாட்டின் சிறந்த அறிஞர்களைக் கொண்ட ஓர் ஆலோசனைக் குழுவையும் நிறுவினார். இதில் படைக்கலங்கள், வெடிமருந்துகள், தொழிலகங்கள் பற்றிய நிபுணர்கள் இடம் பெற்றிருந்தனர். இதனை வின்ஸ்டன் 'இணைக்கும் குழு' (Clamping Committee) என்று அழைத்தார். புதிய அமைப்பு எதிர்பார்த்த பலனை அளித்தது. 'காட்டில் கால்நடையாக அலைவதைவிட யானை மீதமர்ந்து போவது எளிது. யானை துதிக்கையால் ஊசியை எடுக்கும். மரத்தை வீழ்த்தும். அதன் முதுகின்மேல் இருந்து

எல்லாவற்றையும் காணலாம்'[1] என்று சர்ச்சிலே புதிய அமைப்பு பற்றிக் குறிப்பிட்டார்.

புதிய துறையில் சர்ச்சில் கண்ட காட்சி போர் நடக்கும் தளங்கள் யாவற்றையும் அவர்தம் கண்களின்முன் கொண்டு நிறுத்தியது. பதவியேற்ற முதல் மாதத்திலேயே கடற்படையின் எஃகு இறக்குமதிகளைக் கவனித்தார். அமெரிக்காவிலிருந்து வாங்கப்படும் எஃகுகொள்முதலைச் சீரியமுறையில் திருத்தியமைக்க முயன்றார். 1918ஆம் ஆண்டின் போர்த் தேவைகளுக்கும் பீரங்கிப் படைக்கும் எஃகு அவசியம் என்பது அவரது வாதம். பின்னர், தளபதி ஹேய்க்கின் விருந்தினராக ஃபிரான்சிற்குச் சென்று அந்நாட்டு அமைச்சர்களைச் சந்தித்துப் பேசினார். போப்பரிஞ்ச் (Poperinge) நகரில் அவர் தம் சகோதரனைக் கண்டார். வழியில் அவரை அடையாளம் கண்டுகொண்ட வீரர்கள் வாழ்த்தினார்கள். வின்ஸ்டனின் உள்ளம் உவகை கொண்டது. அவ்வாறே ஃபிளாண்டர்சுக்கும் (Flanders) அடிக்கடி போய் வந்தார். நாடு திரும்பியதும் போர் அமைச்சரவையின் திட்டங்களை அறிய ஆவல் கொண்டார். 1918ஆம் ஆண்டு போரின் நிலையில் வெற்றி வாய்ப்புகள் இருக்குமா என்பது அவரது கவலை. இவையெல்லாம் அவர்தம் பொறுப்புகளுக்கு அப்பாற்பட்டவை யென்றாலும் அடிக்கடி போர் அமைச்சரவைக்கு அறிக்கைகள் சமர்ப்பிப்பார். உடனடியாக எஃகு தேவைகள், பெரிய இரும்பு உத்திரங்களை வாங்குதல், விமானத் தாக்குதலுக்கு ஒதுங்குமிடங்கள் அமைத்தல் ஆகியவைபற்றி அவர் கவனம் இருந்தது. பிரதமர் கூட முக்கிய விஷயங்களில் வின்ஸ்டனைக் கலந்தாலோசித்தார்.

வின்ஸ்டனின் துறை சம்பந்தப்பட்ட நடவடிக்கைகள் மிகப் பரவலாக இருந்தன. இத்தாலியில் கேப்போரெட்டோ (Caporetto) போர்க்களத்திலிருந்து தோல்விச் செய்தி கிடைத்த போது பிரதமர் வின்ஸ்டனின் துணையை நாடினார். கேப்போரெட்டோவில் படைகள் இழந்த போர்த்தளவாடங்கள் முழுவதையும் இழப்பீடு செய்யும் பொறுப்பு வின்ஸ்டனுக்கு வழங்கப்பட்டது. ஃபிரான்சில் அமெரிக்கப் படைகளுக்குத் தளவாடங்கள் தரும் பொறுப்பையும் அவர் மேற்கொண்டார். முதல் ஒப்பந்தப்படி 100,000,000 பவுன் மதிப்புள்ள சிறிய அளவுத் துப்பாக்கிகளை லாபமில்லாத அடிப்படையில் செய்து வழங்க ஒப்புக் கொள்ளப்பட்டது. இந்தப் பணிகள் யாவும் சிறப்பாகச் செய்து முடிக்கப்பட்டன. இதன் பொருட்டு வின்ஸ்டன் பலமுறை

[1]Churchill—A Portrait, Philip Guedalla, p. 202.

ஃபிரான்ஸ் நாட்டிற்குப் பறந்து சென்ருர். ஒருமுறை அவர் ஆங்கிலக் கால்வாயைக் கடந்து சென்றுகொண்டிருக்கும்போது, விமானத்தின் பொறி நின்றுவிட்டது. எவ்வளவு நேரம் தண்ணீரில் மிதப்பது என்ற எண்ணம் அவரைப் பிடித்துக்கொண்டதும் ஓர் 'அபூர்வமான அமைதி' நிலவியது. ஆபத்தில்லாமல் தப்பினர். இதுபற்றி அவரை ஒருவர் கேட்டபோது வின்ஸ்டன், 'நான் வாழவே விரும்புகிறேன். ஆனல், சாவதென்ருலும் எனக்கு அச்சமில்லை' என்று பதிலளித்தார். தம் வாழ்நாளில் எத்தனை முறைதான் அவர் மரணத்தின் பிடியில் இருந்து தப்பியிருக்கிருர்!

இதனிடையில் உள்நாட்டில் அமைதி குலைந்தது. தொழிலாளர் பிரச்சினை நாட்டை உலுக்கியது. விரைவில் போர் முடியும் என்ற நிலைமை இருக்கவில்லை. உணவுப் பற்ருக்குறையும், விலைவாசி உயர்வும், நீண்ட போரினல் ஏற்பட்ட சலிப்பும் மக்களிடையே வளர்ந்துகொண்டிருந்தன. 1918ஆம் ஆண்டில் தொழிலாளர் பிரச்சினை அபாய நிலையை அடைந்தது. வெடிமருந்து தயாரிக்கும் தொழிற்சாலைகளில் அடிக்கடி வேலை நிறுத்தங்கள் ஏற்பட்டன. ஜெர்மானியர் மார்ன் ஆற்றை நோக்கி விரைவாக முன்னேறிக்கொண்டிருந்தனர். பிரதமரின் துணையுடன் தொழிலாளரின் கட்டாய ராணுவச் சலுகை பறிக்கப்படும் என்றும், வேலை நிறுத்தத்தைத் தூண்டிவிடும் தலைவர்களைச் சட்டம் விடாதென்றும் வின்ஸ்டன் கடுமையாக எச்சரித்தார், வேலை நிறுத்தம் நின்றது. கிளர்ச்சிக்காரர்கள் நிலைகுலைந்து போனர்கள். போர்த் தளவாட அமைச்சகத்தில் பணி தொடர்ந்தது. டாங்குகளின் உற்பத்திக்காக எஃகுத்தகடுகள் தேவைப்பட்டன. போர் அமைச்சகம் கடற்படையின் கட்டுமான வேலைகளுக்காக எஃகு வேண்டுமென்றது. இந்தப் பிரச்சினையைத் தளவாட அமைச்சர் என்ற முறையில் வின்ஸ்டன் வெகு சாதுர்யமாகச் சமாளித்தார். போர்த் தளவாட அமைச்சகத்தில் அவர்தம் வெற்றிகளைப்பற்றி வின்ஸ்டனின் நண்பர் பெர்க்கன் ஹெட் (Lord Birkenhead) பிரபு கூறியது தக்க சான்ருகும். 'புதிய பணியில் வின்ஸ்டன் தமக்கே உரிய உற்சாகத்துடன் ஈடுபட்டார். அவர் ஆற்றியுள்ள பொது மக்கள் பணியின் உண்மைத் தகுதிகள் சரிவரப் பாராட்டப் படவில்லை.'[1]

### போரில் ஏற்பட்ட திருப்பம்

1917ஆம் ஆண்டின் இறுதியில் போர் நிலையில் பெரும் மாற்றம் ஏற்பட்டது. எதிரியின் தாக்குதல்களைத் தாங்க முடி

[1] Churchlll—A Portrait, Philip Guedalla, p. 204.

யாமல் நேசநாட்டுப் படைகள் பின்வாங்கிக்கொண்டிருந்தன. நவம்பரில் கேம்ராய் (Cambrai) மீது நடத்தப்பட்ட திடீர்த் தாக்குதலில் வின்ஸ்டன் டாங்குகளைப் பயன்படுத்தினர், எதிரிகள் நிலைகுலைந்து ஓடினாலும் அவர்களை விரட்டுவதற்குப் போதிய படைகள் இருக்கவில்லை. பாஸ்க் சென்டேல் சதுப்புவெளிகளில் படைகள் சிறைப்பட்டன. இதற்குள் ஜெர்மனி கேம்ராயைக் கைப்பற்றியது. வின்ஸ்டன் டாங்குகளின் உற்பத்தியை நிறுத்த வில்லை. டாங்குகள் முதன் முதலில் உருவாக்கப்பட்டபோது அவற்றை 'வின்ஸ்டனின் தவறு' என்று கூறியவர்கள், இன்று வாயடைத்து நின்றனர். அகழிகளுக்குள் புகுந்து வெளிவரக் கூடிய அற்புத ஆயுதத்தைத் தருமாறு படைத்தலைவர்கள் கோரி னார்கள். எதிரியின் படையொழுக்கத்தை டாங்குகள் சிதைத்து வந்தன. ஃபோர்டு மோட்டார் கம்பெனிக்கு 10,000 டாங்கு களை உற்பத்தி செய்யுமாறு ஒப்பந்தம் வழங்கப்பட்டது. இந்தப் பணியில் உதவ நூறாயிரம் பணியாளர்களைக் கொண்ட 'டாங்குப் படையை' வின்ஸ்டன் நிறுவினார். போர் முடிந்தபின் நிறுவப் பட்ட அரசர் ஆணைபெற்றகுழு டாங்கு உற்பத்தியில் வின்ஸ்டனின் சேவைகளைப் பாராட்டியிருக்கிறது.

1918ஆம் ஆண்டு கோடையில் ஜெர்மன் தளபதியான லுண்டண் டார்ஃப் (Lundendorf) சோமிலும், ஃபிளாண்டர்சிலும் பல வெற்றிகளைப்பெற்று ஃபிரஞ்சுப் படைகளை பாரிஸ் வரை விரட்டினார். பாரிசைப் பாதுகாக்கும்படி படைகளை ஃபிரஞ்சுத் தளபதி பெட்டெய்ன் (Petain) தெற்குமுகமாகத் திருப்பலா மென்று அறிகுறிகள் தோன்றின. ஜெர்மானியர் பிரிட்டனைத் தோற்கடித்துவிட்டு, ஃபிரான்சையும் கைப்பற்றுவார்கள் என்று பெட்டெய்ன் (Petain) ஃபிஞ்சுப் பிரதமர் கிளெமென்சோவிடம் (Clemenccou) கூறிவந்தார். பிரதமர் ஃபாக் (Foch) என்ப வரைத் துணைத்தளபதி யாக்கினார். வின்ஸ்டன் உடனே பாரிஸ் புறப்பட்டுச் சென்று கிளெமென்சோவுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தினார். இருவரும் போர்முனைக்குச் சென்று பார்வையிட்ட னர். போர்த்தந்திரங்களைப் பற்றியும், அமெரிக்கத் துருப்புகளைக் காலதாமதமின்றி அனுப்புவதுபற்றியும், ஆங்கிலோ-அமெரிக்கக் கூட்டுறவுபற்றியும் வின்ஸ்டன் அரசாங்கத்திற்கு அரிய யோசனை களை வழங்கினார். 1918ஆம் ஆண்டு ஜூலையில் ஃபாக் (Fauk) 'மாஸ்கிற்றோ' என்றழைக்கப்பட்ட டாங்குப் படைகளுடன் வில்லர்ஸ் - காட்டரெஸ் (Villars Cotterets) என்ற இடத்தில் ஜெர்மன் படைகளைத் தாக்கினார். ஜெர்மன் படைகள் சின்னா பின்னமாக்கப்பட்டன. லுண்டண்டார்ஃபே இந்தத் தோல்வியை

'ஜெர்மன் படையின் கருநாள்' என்றழைத்தார். 450 டாங்குகள் ஜெர்மன் புகை மண்டலத்தைக் கிழித்துக்கொண்டு ஊடுருவி அவர்களைச் சிதறடித்துச் சரணடையச் செய்தன. 'டாங்கு களின் தொல்லை பொறுக்க முடியாமல்தான் ஜெர்மன் படைகள் நிலைகுலைந்து சரணடைந்தன'[1] என்று லுண்டண் டார்ஃப் வெளிப்படையாக ஒப்புக்கொண்டார்; 'மனிதர்களைக் களப்பலியிடுவதற்குப் பதில், எஃகுக் கோட்டைகளை நடமாட விடுவது சிறந்தது'[2] என்று வின்ஸ்டன் எண்ணியதால் பல்லா யிரக்கணக்கான பிரிட்டிஷ் வீரர்களின் உயிர்தப்பியது. சர்ச் சிலின் டாங்குகள் நேசப்படைகளின் வெற்றிக்குத் தலையாய காரணம் என்பதை யாரும் மறுக்க முடியாது.

அமெரிக்கர்கள் போரில் இறங்கியதை ஜெர்மனி அலட்சியம் செய்தது. அவர்கள் முழுமூச்சுடன் போரில் ஈடுபடுவதற்குள் போரையே வென்றுவிடலாமென்று லுண்டண்டார்ஃப் (Lunden dorf) மனக்கோட்டை கட்டினார். அமெரிக்க வீரர்கள் போர் முன்னணிக்குச் செல்ல ஏழு மாதங்களாயின. அவர்களின் படை யமைப்பில் குழப்பமும், திறமையின்மையும் நிலவின. 300,000 அமெரிக்கத் துருப்புகளில் நான்கு பிரிவுகளே நல்ல பயிற்சி பெற்றிருந்தன. பிரிட்டிஷ், ஃபிரஞ்சுப் படைகளின் நோக்கம் எதிரியைக் களைப்படையச் செய்து தாக்குவது என்பதாகும். ருஷ்யா போரிலிருந்து விலகிக்கொண்டதால் ஜெர்மனி கிழக்கு முனையிலிருந்து படைகளைக் கொண்டுவந்து குவித்தது. மேலும் படைகளை அனுப்புமாறு லாயிட் ஜார்ஜ், ஜனதிபதி வில்சனுக்கு அவசர வேண்டுகோள் விடுத்தார். மாதத்திற்கு 300,000 வீரர்கள் வீதம் அமெரிக்க வீரர்கள் அனுப்பப்பட்டனர். பெரும் எண்ணிக்கையுள்ள அமெரிக்கத் துருப்புகளின் கையிருப்புத்தான் ஜெர்மானியர் நிலைகுலைந்து சிதறியோடுவதற்கு முக்கிய காரண மாகும். போர் உச்சக்கட்டத்தில் இருந்தகாலை ஏராளமான போர்த் தளவாடங்கள் சேதமடைந்தன. திறமையுள்ள போர்த்தளவாட அமைச்சர் அவற்றை உடனுக்குடனே உற்பத்தி செய்து, தட்டுப்பாடில்லாமல் செய்தார். பல்லாயிரக்கணக்கில் வந்திறங்கிய அமெரிக்கத் துருப்புகளின் தேவைகளையும் வின்ஸ் டன் வெற்றிகரமாகச் சமாளித்தார். வின்ஸ்டனும் ஓரளவு அமெரிக்கர் அல்லவா? இரு நண்பர்கள் உணவைப் பகிர்ந்து கொள்வது போன்று பிரிட்டனும், அமெரிக்காவும் போர்த்

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 187.

[2] Ibid, p.188.

தளவாடங்களைப் பகிர்ந்துகொண்டன'[1] என்று சர்ச்சிலே குறிப்பிட்டார். போரின் இறுதிக்கட்டங்களில் அமெரிக்க - பிரிட்டிஷ் உறவுகள் வலுப்பெற்றதற்கு வின்ஸ்டனே முக்கிய காரணமாவார்.

போரின் பரவசங்களை அனுபவிக்க வேண்டுமென்று வின்ஸ்டன் ஏங்கிக்கிடந்தார். இந்த வேடிக்கையைப் போர்த்தளவாட அமைச்சர் பதவி ஓரளவு தணித்தது. வீரர்களின் அன்றாடத் தேவைகளும், அவற்றைச் சீராக வழங்குவதும்தான் வின்ஸ்டனின் இடைவிடாத அக்கறை. மேற்கு முனையில் அவர் நேரில் சென்று பார்வையிடாத போர்களே இல்லை எனக் கூறலாம். பிரதமர் லாயிட் ஜார்ஜுடன் ஒத்துழைத்தார். இருவரும் ஒன்றாகப் போரில் இறங்கினார்கள். இருவரும் போரை வெற்றிகரமாக முடித்தார்கள். 1918ஆம் ஆண்டு நவம்பர் 11ஆம் நாள் சமரச நாள் கொண்டாடப்பட்டது. இலண்டன் நகர மக்கள் விழாக்கோலம்பூண்டு ஆர்ப்பரித்தார்கள். வின்ஸ்டனும் அவரது மனைவியும் பிரதமரின் இல்லத்திற்குச் சென்றுகொண்டிருக்கும் போது மக்கள் எழுப்பிய வாழ்த்தொலி விண்ணைமுட்டி எதிரொலித்தது. விதியின் விநோதமான விளையாட்டுகள் வின்ஸ்டனை அலைக்கழித்தாலும், அவர் தமது பயணத்தை இறுதியில் வெற்றிகரமாக முடித்தார். நவம்பர் 11ஆம் நாள் அவர் பிரதமருடன் உண்ண உரிமைபெற்று விருந்து விழாவில் கலந்து கொண்டது உலக நிகழ்ச்சிகளின் உச்சகட்டமாகும். அவர்களின் பின்னே இருபெரும் தலைவர்கள் கடந்துவந்த காட்டாறு கர்ஜனையை நிறுத்தி சயனித்துக் கொண்டிருந்தது. அவர்களுக்கு முன்னால் விளக்கமற்ற வருங்காலம் விழித்துப் பார்த்துக்கொண்டிருந்தது. இருவரும் புரிந்த மகத்தான சாதனைகளைப் பற்றி சிறிது மனநிறைவு கொள்ள அவர்களுக்கு உரிமையுண்டு. ஆனால், அது ஒரு கணம்தான் நீடிக்கும்; காலக்கடலின் அலைகள் ஓய்வதில்லை. நேற்றுஅரசியல் வல்லுநன் ஒருவன் தீர்வு கண்டிருக்கக் கூடிய பிரச்சினை, நாளையப் பிரச்சினைகளை உருவாக்கும் புதிய நிலையைப்படைக்கும். ஆற்றவேண்டிய பணியோ அடுத்தடுத்து வந்து கொண்டிருக்கும்.

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 189.

# 10. புயலுக்குப் பின் அமைதி

சர்ச்சிலைப் பொருத்தவரையில் முதற்போர் மகத்தானதும், புனிதப்படுத்துவதுமான அனுபவமாக இருந்தது. தமது முப்பத்தொன்பதாம் வயதில் வின்ஸ்டன் போரில் ஈடுபட்டார். அதுகாலை நாட்டுப் பாதுகாப்பின் உயிர் போன்ற பகுதியை நிர்ணயிக்கும் பொறுப்பு அவரிடம் இருந்தது. நாட்டின் பெருந்தலைவர்கள் பட்டியலில் அவர் இன்னும் இடம் பெறவில்லை. பொதுவாழ்வில் புகழின் உச்சிக்கு அவர் ஏறுகின்ற நிலையில் ஏற்பட்ட முதல் குறுக்கீட்டின் கசப்புணர்ச்சியும் அவர் சுவைத்தார். அவர் அமைச்சராக இருந்தார் என்பது உண்மைதான். ஆனால், அந் நாள்களில் அமைச்சர்களெல்லாம் பிரதமரின் துணைக்கோள்களாகவே கருதப்பட்டனர். அமைச்சரவையில் போனர்லா, பால்ஃபோர், கர்ஸான் பிரபு, மில்னர் பிரபு, சர் எரிக் கெடஸ் (Sir Eric Geddes), ஆக்லண்ட் (Auckland), எச். ஏ. எல். ஃபிஷர் (Fisher) போன்ற பெருந்தலைவர்கள் இருந்தனர். இவர்களின் நடுவே வின்ஸ்டன் போர்த்தளவாட அமைச்சராகக் கீழ்நிலையில்தான் இருந்தார். பிரதமருடன் அவர் கொண்டிருந்த நீண்டகாலத் தொடர்புதான் அவரின் செல்வாக்காக இருந்தது. கன்சர்வேடிவ்களில் ஒரு சிலர் தவிரப் பெரும்பாலோர் அவரிடம் பரிவு கொண்டிருக்கவில்லை. கூட்டமைச்சரவையின் லிபரல்களும் லாயிட் ஜார்ஜிடமே பற்றுக்கொண்டிருந்தனர், இந்த இரண்டும் கெட்டான் நிலை, 1914ல் அவருக்கிருந்த செல்வாக்கைவிட இது வேறுபட்ட நிலையாகத் தோன்றியது. ஆனால், போர் முடிவுற்றிருந்தது. காலச்சக்கரமும் ஒரு சுற்று சுற்றிவிட்டிருந்தது. போருக்குப் பின்னர் அவரது அமைச்சரவையும் முக்கியமிழந்திருந்ததால், வின்ஸ்டனின் வருங்காலம் லாயிட் ஜார்ஜைச் சார்ந்திருந்தது.

போரைத் தொடர்ந்து நாட்டில் இருபதாண்டுகள் குழப்பமும், உறுதியற்ற நிலையும் இருந்தன. அரசியல், சமூகப்

பொருளாதார வாழ்வில் பெரும் மாற்றங்கள் நிகழ்ந்துகொண்டிருந்தன. நாட்டை முன்னேற்றப்பாதையில் கொண்டு செல்ல எண்ணியவர்கள் பிற்போக்குச் சார்புகளினுல் குழப்பத்தில் இருந்தனர். சுருங்கக்கூறின் மனிதகுலத்தின் நம்பிக்கைகளும், மாண்புமிக்க குறிக்கோளகளும் மண்ணேடு மண்ணுகப் புதைக்கப்பட்டுவிட்டதாகத் தோன்றியது. போரின் முடிவு பிரிட்டனில் பொதுத்தேர்தலுக்குப் பச்சைக்கொடி காட்டியது. போர் உடன்பாடுகளேயும், புனரமைப்புப் பணிகளேயும் தொடங்குமுன் பிரதமர் பொதுமக்களின் ஆணையைப் பெற எண்ணினுர். 1918ல் வாக்குரிமையைப் பெற்ற பெண்கள் தமது புதிய சக்தியைப் பயன்படுத்தத் துடித்துக் கொண்டிருந்தார்கள். ஆனுல், போருக்குப் பிந்தியகாலத்தில் அதன் முடிவுகள் பேரிழப்பாக இருந்தன. அரசினர் தம் போர்ச்சாதனேகள், அமைதி முயற்சிகள். புனரமைப்புத் திட்டங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் வாக்குக் கேட்டனர். லாயிட் ஜார்ஜுக்கும், அவரது அரசிற்கும் முழு ஆதரவு திரட்டப்பட்டது. கூட்டமைச்சரவைக்கு பிரம்மாண்டமான வெற்றி கிடைத்தது, ஆஸ்குவித் போன்ற சிறந்த தலேவர்கள் தோற்றனர். புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களோ புது இங்கிலாந்தைப் படைக்கக்கூடிய முன்னேக்கும், சமத்துவ உணர்வும், பொதுநல ஆர்வமும் இன்றி இருந்தனர். 'கெய்சரைத் தூக்கிலிடுக', 'ஜெர்மனியிடம் இழப்பீடு பெறுக' என்பவை போன்ற கோஷங்களே மக்கள் எழுப்பினர். நாட்டுப் பற்று பழிவாங்கும் உணர்வைத் தூண்டிவிட்டது. 1919ஆம் ஆண்டில் போர் முடிவுற்று அமைதி ஏற்படுகின்ற மாறுபட்ட நிலேயைப் பற்றி நேரடியான அனுபவங்களே வின்ஸ்டன் பெற முடிந்தது அவரது நற்பேருகும். இந்த அனுபவங்களே அவர் இரண்டாம் உலகப்போரில் நல்ல முறையில் பயன்படுத்த முடிந்தது.

போர்த்தளவாட அமைச்சகத்தில் விறுவிறுப்புக் குறைந்துவிட்டதால், வின்ஸ்டன் வேறு பொறுப்புகளே நாடிக்கொண்டிருந்தார். சர்ச்சில் டண்டித் தேர்தலேச் சந்திக்கவேண்டியிருந்தது. டண்டி வாக்காளர்கள் வின்ஸ்டன், கெய்சரை விசாரணேக்குக் கொண்டுவருவதாக வாக்குறுதி அளிக்க வேண்டுமென்று ஒரு குரலாகக் கூவினுர்கள். வெற்றி வெறியில் நிதானத்தை இழந்து அமைதியின் பயன்களே இழந்து விடாதிருக்குமாறு வின்ஸ்டன் மக்களேக் கேட்டுக்கொண்டார். ஜெர்மனியிடம் இழப்பீடு பெறுவதாக வைத்துக்கொண்டாலும், நேசநாடுகள் அதனேப் பணமாகவோ அல்லது உற்பத்திப் பொருள்களாகவோ

தான் பெறவேண்டும். உற்பத்திப் பொருள்களாகப் பெற்றால் இங்கிலாந்தின் உற்பத்தி தடைப்படும். தொழிலாளர்கள் வேலை வாய்ப்பை இழப்பார்கள், அக்காலத்திய அரசியல் வல்லுநர் களையும், பொருளாதார நிபுணர்களையும்விட இப் பிரச்சினைகள் பற்றி வின்ஸ்டன் அதிகத் தெளிவு கொண்டிருந்தார். போர் இழப்பீடுகளைப் பற்றி உடனடியான முடிவுகள் எடுத்திருந்தால் இருதரப்பினருக்குமே மிகுந்த பயன் விளைந்திருக்கும்.

போரைத் தொடர்ந்து நடைபெற்ற இந்தக் 'காக்கித் தேர் தலில்' (Khaki Election) முன்னர்க் குறிப்பிட்டது போன்று லாயிட் ஜார்ஜ் பெரும்பான்மை பெற்றார். காமன்ஸ் அவையில் டோரிகள் பலம் பெற்றிருந்தார்கள். வின்ஸ்டன் லிபரல்களின் தோழமையை விட்டகன்றார். கன்சர்வேடிவ்களை அவர் இன்னும் நெருங்கவில்லை. தொழிற்கட்சிக்கும் அவருக்கும் உடன்பாடு இல்லை. தொழிற்சாலைகளில் உற்பத்தியைப் பெருக்க சிறைப் பட்டிருந்த வீரர்களை மீட்கவேண்டிய பொறுப்பிருந்தது. 1918ஆம் ஆண்டு ஜூலையில் போர்த்தளவாடத் தொழிலா ளர்கள் வேலைநிறுத்தம் செய்தனர். இதனால் விமான உற்பத்தித் தடைப்பட்டதால் கண்டிப்பான நடவடிக்கைகள் எடுக்கவேண் டியதாயிற்று. அதிருப்திகொண்ட தொழிலாளர்கள் தமக்குச் செய்யப்பட்ட அநீதியைக் கடுங்கோபத்துடன் சகித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. 1919ஆம் ஆண்டு ஜனவரியில் போர் அமைச்சகப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட வின்ஸ்டன் மேற் கொண்ட முயற்சிகளால் ஆறு மாதத்தில் ஆறு மில்லியன் வீரர்கள் விடுதலை பெற்றார்கள். போர்த்தளவாட அமைச்ச கத்தின்கீழ் பணியாற்றி வந்த ஐம்பது லட்சம் தொழிலாளர் களுக்கு அமைதிப் பணிகளில் புதுவாழ்வு தேடித்தந்த பெரு மையும் வின்ஸ்டனைச் சேரும். போர்க்கால நெருக்கடியைப் போல், அமைதிப்பணியும் சிக்கலானது என்பதை வின்ஸ்டன் உணர்ந்திருக்கக்கூடும். ஆனால், எக்காலத்திற்கும் ஈடு கொடுக்கக் கூடிய செயலாக்கமும், சீரிய திறமும் அவரிடம் விளங்கியது போல், எந்த அரசியல் வல்லுநரிடமும் விளங்கவில்லை என்பது மிக உண்மையாகும்.

### ருஷ்யாவில் உள்நாட்டுப் புரட்சி

போர்த்துறை அமைச்சர் என்ற முறையில் போரை முடி வுக்குக் கொண்டுவரும் மற்றொரு பெரும் பொறுப்பு வின்ஸ்டனின் தலையில் வீழ்ந்தது. அதாவது ருஷ்யாவில் நேசப்படைகளின் உடன்பாட்டுப் பொறுப்புகளைத் தீர்த்து முடிப்பதாகும். போர்

அமைச்சகத்தில் மில்னர் பிரபுவின் வாரிசாக, வின்ஸ்டன் ருஷ்யப் பிரச்சினையின் வாக்குறுதிகளையும், அவலங்களையும் ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. போரின் இறுதிக்கட்டத்தில் ருஷ்யா பல உள்நாட்டுப் போர்களின் களமாகத் தோன்றியது. புரட்சிகளும், எதிர்ப்புரட்சிகளும் அந்நாட்டை அலைக்கழித்தன. தலைநகரத்தின்மீதும், மத்திய மாநிலங்களிலும் லெனினும், போல்ஷிவிக்குகளும் கொண்டிருந்த பிடி உறுதிபாக இருக்கவில்லை. அட்மிரல் டெனிக்கின் (Denikin), தளபதி கோல்ட்சாக் (Kolt-chak), தளபதி ராங்கல் (Wrangel) ஆகியோர் தலைமையில் வெளி மாநிலங்களில் போல்ஷிவிக்குகளுக்கு எதிரான புரட்சிகள் நடந்து கொண்டிருந்தன.

போல்ஷிவிக்கு எதிர்ப்புரட்சிக்காரர்களுக்கு ஆட்களும், ஆயுதங்களும் வழங்குவதாக வாக்குறுதிகள் இருந்ததால், அவர்கள் தொடர்ந்து புரட்சிகள் நடத்தி வந்தனர். பிரிட்டிஷ் படைகளும், நேசநாட்டுப் படைகளும் ருஷ்ய மண்ணில் போராடி வந்தன. வட ருஷ்யாவில் முர்மான்ஸ் (Murmansk), ஆர்க் ஏஞ்சல் (Archangel) ஆகிய இடங்களில் பன்னீராயிரம் பிரிட்டிஷ் படைகளும், பதினேராயிரம் நேசநாட்டுப் படைகளும் இருந்தன. சைபீரியப் பாலைவனத்தில் கர்னல் ஜான் வார்ட் (John Ward) இரு பிரிட்டிஷ் படைகளுடன் ஓம்ஸ்க் (Omask) அரசின் சார்பில் போராடி வந்தார். விளாடிவாஸ்டாக்கில் (Vladivostok) மூவாயிரம் ருஷ்யப்படை அதிகாரிகளுக்குப் பயிற்சி அளிக்கும் பள்ளியை பிரிட்டிஷார் நடத்தி வந்தனர். ஜெர்மனியுடன் சமரச உடன்பாடு ஏற்பட்டவுடன் தென் ருஷ்யாவில் டெனிக்கினுக்கு ஆயுதங்களையும், சைபீரியாவிற்குப் படை அதிகாரிகளையும், ஆயுதங்களையும் அனுப்பவும், ஓம்ஸ்க் அரசிற்கு அங்கீகாரம் வழங்கவும் பிரிட்டிஷ் போர்த்துறை அமைச்சகம் முடிவு செய் திருந்தது,

1919ஆம் ஆண்டின் தொடக்கத்தில் ருஷ்யாவுடன் பிரிட்டன் மேறகொண்டிருந்த பொறுப்புகள் கவலை தருவனவாக இருந்தன. ஜெர்மனியுடன் நீண்ட போராட்டம் முடிவுற்றதும், ருஷ்யாவில் புதிய சாகசங்களைப் புரிய பிரிட்டிஷ் அரசு விரும்ப வில்லை. இதுபற்றித் திட்டவட்டமான கொள்கை எதுவும் இல்லாதிருந்தது. ஒன்றில் ருஷ்ய நடவடிக்கைகளை முடித்துக் கொள்வது. அல்லது அவற்றை மும்முரமாகச் செயல்படுத்து வதுபற்றி விரைவான முடிவுகளைச் செய்யவேண்டியது அவசிய மாயிற்று. வெர்சேய்ல்ஸ் (Versailles) நகரில் கூடியிருந்த பன்னாட்டு அரசியல் வல்லுநர்கள்தாம் இதுபற்றி முடிவு செய்யவேண்டிய

வர்கள். பின்பற்றவேண்டிய கொள்கை என்னவென்பதை அறிய வின்ஸ்டன் ஒருமுறை ஃபிரான்சிற்கும் சென்று வந்தார். ஜனாதிபதி வில்சன் அமெரிக்காவுக்குப் புறப்பட்டுக்கொண்டிருக் கின்ற நிலையில் சர்ச்சில் அவரைச் சந்தித்து 'ருஷ்யாவில் நமது கொள்கை போரா, அமைதியா? எனக்கு விடை வேண்டும்' என்று வற்புறுத்திக் கேட்டார். ஜனாதிபதி வில்சன் அவரை அன்புடன் வரவேற்று, ருஷ்யா பற்றித் தம்மிடம் சிறப்பான திட்டம் எதுவுமில்லையென்றும், வேண்டுமென்றால் ருஷ்யா பற்றி ப்ரிங்கிப்போ (Prenkipo) மாநாட்டில் போல்ஷிவிக்குத் தலைவர் களுடன் பேச்சு வார்த்தை நடத்தலாமென்றும் நேசநாட்டுத் தலைவர் அதுபற்றிச் செய்யக்கூடிய எந்த முடிவையும் தாம் ஆதரிப் பதாகவும் கூறினார். ஆனால், வெர்சேய்ல்சில் கூடியிருந்த அனைத்துத் தலைவர்களின் ஒட்டுமொத்தமான அறிவும் ஆற்றலும் ருஷ்ய விவகாரத்தில் சரியான வழிகாட்ட முடியவில்லை.

தமது நோக்கம் நிறைவேறாமல் லண்டன் திரும்பிய சர்ச்சில், வெர்சேய்ல்ஸ் மாநாட்டிலிருந்த பிரதமர் லாயிட் ஜார்ஜுக்கு எழுதினார். பிரதமரோ செலவு மதிப்பீடுகளைக் கேட்டுப் பதிலளித் தார். 'கொள்கையில்லாமல் மதிப்பீடு செய்வதால் என்ன பயன்?' என்று வின்ஸ்டன் மீண்டும் பதிலளித்தார். 1919ஆம் ஆண்டு கோடையில் நேசப்படைகளின் ஆலோசனைப் பெருங்குழு ஒரு முடிவுக்கு வந்தது. அட்மிரல் கோல்ட்ச்சாக்கிற்கும் அவ ருடைய துணைவர்களுக்கும் பணமும், படைக்கலன்களும் கொடுத் துதவுவதாக முடிவு செய்யப்பட்டது. இந்த முடிவும் தெளிவாக இல்லை எனப் பின்னர் வெளிநாட்டு அமைச்சரான கர்ஸான் பிரபு முறையிட்டார். மேற்கூறிய கொள்கையின் அடிப்படையில் ஒருமைப்பாடும், உறுதியும் இல்லை என்பது அவரது குற்றச் சாட்டு. 'நேசநாட்டு அரசுகள், பாரிசில் அமர்ந்திருக்கும் நட்புறவு நாட்டு அரசுகள் ஆகிய பல்வேறு அரசுகளும், நிறுவனங் களும் தத்தமது விருப்பப்படி நடவடிக்கைகள் எடுக்கப்படுவதால், இதில் கொள்கையேதும் இல்லை' என்று அவர் குறிப்பிட்டார்.

ஆனால், ருஷ்யாவிலிருந்து நேசப்படைகளை வெளியேற்று கின்ற சர்ச்சிலின் திட்டத்தில் குழப்பம் எதுவும் இருக்கவில்லை. ருஷ்யாவில் பிரிட்டிஷ் செல்வாக்கைக் குறைக்கக்கூடிய நடவடிக் கைகளில் ஈடுபடுவதாக லிபரல்களும், சோஷியலிஸ்டுகளும் சர்ச்சிலைத் தாக்கினார்கள். எதிரிகளின் துப்பாக்கிச்சூட்டின் நடுவே படைகளை வெளியேற்றுவது எவ்வளவு சிரமமான பணி என்பதை அவர்கள் உணரவில்லை. இந்தப் பிரச்சினையில் பிரிட்டிஷ் வீரர்கள் மட்டுமின்றி, நேசப்படைகள் ஆதரித்த ருஷ்யர்களும்

இருந்தார்கள் என்பது கருத்தில் கொள்ளத்தக்கது. 'இங்கிலாந்தில் இருந்துகொண்டு படைகளை வெளியேற்று, செலவைக் குறைத்திடு என்றெல்லாம் எளிதாகக் கூறிவிடலாம். ஆனால், குறிப்பிட்ட களத்திலிருந்து அந்த மண்ணிலுள்ள மக்களுடன் கொண்ட நீண்டகாலத் தொடர்புகளை அறுத்துக்கொண்டு வெளியேறுவது எவ்வளவு சிரமமான பணி என்பது நேரில் அனுபவிப்பவர்களுக்குத்தான் தெரியும் என்றும், நாம் ருஷ்யாவை விட்டு விலகியபின் வட ருஷ்யாவின் அரசு தனியான வாழ்வும், நிலையும் பெறுவது உறுதி' என்றும் வின்ஸ்டன் பாராளுமன்ற உரையில் குறிப்பிட்டார்.

சர்ச்சிலின் கொள்கை உறுதிப்பாடு அவரது செயலில் நன்கு வெளிப்பட்டது. இரு படையணிகளின் பாதுகாப்பின் கீழ் பிரிட்டிஷ், அமெரிக்க, இத்தாலிய, ஃபிரஞ்சுப்படை வீரர்களும், அவர்களின் தளவாடக் கையிருப்புகளும் பத்திரமாக வெளியேற்ற நடவடிக்கைகளை ஜெனரல் ராலின்சன் (Raulinson) மேற்பார்வையிட்டார். எதிரிகளால் தடையேற்படுமா என்பதைப் பரிசோதிக்கும் நோக்கத்துடன் ஜெனரல் அயர்ன்சைடு (Ironside) எதிரிகள்மீது திடீர்த் தாக்குதல் செய்தார். எனினும் எவ்விதத் தொல்லையுமின்றி துருப்புகள் கப்பலேறின. இதனால் போல்ஷிவிக்குகளுடன் சமரசம் செய்திருந்த ஜெர்மனியின் வசம் ருஷயாவிலிருந்த நேசநாட்டுத் தளவாடங்கள் சிக்குவது தடை செய்யப்பட்டது. படை வெளியேற்ற நடவடிக்கைகளை ராலின்சனின் பொறுப்பில் விட்டுவிட சர்ச்சில் மேற்கொண்ட முடிவு அவரது அறிவுத்திறத்தைக் காட்டுகிறது. ருஷ்யாவின் ஒவ்வொரு குக்கிராமத்தின் பெயரையும் வின்ஸ்டன் மனப்பாடமாகச் சொல்லக்கூடிய ஆற்றலைப் பெற்றிருந்தார். ருஷ்யாவிலிருந்து படைகள் வெளியேற்றப்பட்டவுடன் தொழிற்கட்சி சர்ச்சில்மீது குற்றச்சாட்டுகளைக் கொண்டுவந்தது. 'கால்வின் தாக்கீது' (Colvin Memorandum) என்ற ஓர் அறிக்கையை ஆதாரங்காட்டி தொழிற்கட்சியினர் பாராளுமன்றத்தில் ஒரு சிறு அரசியல் சலசலப்பை உருவாக்க முயன்றனர். படை வெளியேற்றத்தின் பின்னர் மேற்குறிப்பிட்ட தாக்கீது ருஷ்ய அரசினரிடம் சிக்கியதாகக் கூறப்பட்டது. அதனை ருஷ்யா சென்றிருந்த தொழிற்கட்சித் தூதுக்குழுவொன்று பிரிட்டனுக்குக் கொண்டுவந்தது. அந்தக் கடிதத்தில் 1919ஆம் ஆண்டு மே திங்கள் 6ஆம் நாள் தேதியிடப்பட்டிருந்தது. அதன்படி பிரிட்டன் துருப்புகளை வெளியேற்றுவதை காலவரையறையின்றி ஒத்திப்போடுவதாகவும், 12,500 தொண்டர்களை ருஷியாவிற்கு அனுப்புவதாகவும் சர்ச்சில் வெள்ளை ருஷ்ய அரசினருக்கு வாக்குறுதி அளித்திருந்த

தாகக் கூறப்பட்டது. இந்தக் கடிதத்தை வெளியிட்டபோது பாராளுமன்றத்தில் பரபரப்பு ஏற்பட்டது. ஆனால், வின்ஸ்டன் கடிதத்தில் தேதியைச் சுட்டிக்காட்டி, மேற்கூறிய சந்திப்பு ஆலோசனைப் பெருங்குழுவின் முடிவிற்கு முன்னர் நிகழ்ந்ததென்பதை மெய்ப்பித்து குற்றச்சாட்டுகளுக்குப் பதிலளித்தார். ருஷ்ய விவகாரத்தில் வின்ஸ்டன் தமது சொந்தத் திட்டங்களை அல்ல, பிரதமரின் கொள்கையையே செயல்படுத்தியதாகவும் நிலை நாட்டினார்.

### வெர்சேய்ல்ஸ் ஒப்பந்தம்

'போல்ஷிவிக் கொடுங்கோன்மையுடன் போர் தொடுப்போம்; ஜெர்மனியுடன் அமைதி காண்போம்' என்பதுதான் போர் முடிவுற்றதிலிருந்து சர்ச்சிலின் கொள்கையாக இருந்தது. 'ருஷ்யா அழிந்துகொண்டிருக்கிறது. அங்குச் சச்சரவுகள்தாம் எஞ்சி இருக்கின்றன' என்று வின்ஸ்டன் குறிப்பிட்டார். ஜெர்மனியைக் காப்பாற்ற முடியும் என்பது அவரது துணிவு. ஜெர்மனிக்கு ஏற்படக்கூடிய கதி மற்ற நாடுகளுக்கும் ஏற்படலாம். எனவே, அதைத் தவிர்க்கும் நடவடிக்கைகளை உடனடியாக மேற்கொள்ள வின்ஸ்டன் விரும்பினார். 1919ஆம் ஆண்டின் முற்பகுதியில் பாரிசில் கூடிய அமைதி மாநாட்டில், வெர்சேய்ல்ஸ் உடன்பாட்டில் இணைக்கப்படவிருந்த ஜெர்மனி சமரச ஒப்பந்தத்தின் நிபந்தனைகளைத் தயாரிப்பதில் உலக அரசியல் வல்லுநர்கள் ஈடுபட்டிருந்தார்கள். ஜூன் மாதத்தில் கையெழுத்திடப்பட்ட ஒப்பந்தம் நியாயமானதொரு உடன்பாடாக இருந்தது. பிற்காலத்தில் இதனை ஜெர்மனி கண்டனம் செய்தது. 'ஐரோப்பாவின் தீமைகளுக்கெல்லாம் மூலகாரணமான பயங்கர சாசனம்'[1] என்ற உருவம் அதற்குக் கொடுக்கப்பட்டது.

உண்மையில் வெர்சேய்ல்ஸ் ஒப்பந்தத்தின் நிபந்தனைகள் நிதானமானவை. பிரிட்டிஷ் காமன்ஸ் அவைகூட ஜெர்மனியைத் தக்கவாறு தண்டிக்காமல் விட்டதுபற்றி மனக்குறைபட்டது. ஜெர்மனிமீது இழப்பீட்டுத்தொகை விதிக்க வேண்டுமென்பது நிபந்தனைகளில் ஒன்று. இதன் விளைவாக ஐரோப்பாவில் நீண்டகாலப் பொருளாதாரக் குழப்பங்கள் ஏற்பட்டன. ரூர் பள்ளத்தாக்கின்மீது ஃபிரான்சின் படையெடுப்பு, ஜெர்மனியின் நாணயச் சீர்குலைவு, போர்க்கடன், பெரும் பொருளாதார மந்தம் ஆகிய விளைவுகள் ஹிட்லரின் எழுச்சிக்கு வழிகோலின. ஒப்பந்தத்தின் விளைவாகப் புதிய ஐரோப்பா உருவாகியது. பல நாடுகள் விடுதலை பெற்றன. புதிய பல நாடுகள் நிறுவப்பெற்றன. பழைய

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 199.

பேரரசுகள் மறைந்தன. ஆல்சேய்ஸ் - லொரேன் பகுதிசளை ((Alsaace Loraine) ஃபிரான்ஸ் திருப்பிப் பெற்றுக்கொண்டது. சார் (Saar) பள்ளத்தாக்கு ஜெர்மனியிலிருந்து பிரிக்சப்பட்டு, பதினைந்தாண்டுக் காலத்திற்குச் சர்வதேச சங்கத்தின் கட்டுப்பாட்டின்கீழ் வைக்கப்பட்டது. ஜெர்மனி, துருக்கி நாடுகளுக்கு உரிமையான குடியேற்றப் பகுதிகள் பறிபோயின. இவையாவும் நேசநாடுகளின் பாதுகாப்பின்கீழ் காப்புமுறை பிரதேசங்களாகும் நிலையைப் (Mandatory) பெற்றன.

வின்ஸ்டன் ஜெர்மனியைக் காப்பாற்றும் கொள்கையை வலியுறுத்தினார். ஜெர்மனிக்கு உதவியும், நட்புறவும் நல்கும் பிரிட்டிஷ் கொள்கையை ஆதரித்தால் மட்டுமே ஃபிரான்சும் பிரிட்டனும் பாதுகாப்பு ஒப்பந்தம் செய்ய வேண்டுமென்று அவர் நிபந்தனை விதித்தார். ஜெர்மனியில் ஸ்பார்டாசிஸ்ட் எதிர்ப்பாளர்கள் (anti-Spartacists), லுண்டண்டார்ஃப் எதிர்ப்பாளர்கள் (anti - Lundendorf) ஆகியோரை வலுப்படுத்த வேண்டுமென்றும் வின்ஸ்டன் வற்புறுத்தினார். ஜெர்மனிக்குப் போதிய பொருளுதவி அளிப்பதும், அமைதி மாநாட்டில் ஜெர்மனி பங்குபெறச் செய்வதும் இதனை நிறைவேற்ற வழிகள் என்பது அவரது கருத்து. காலதாமதமின்றி இவற்றை நிறைவேற்றுமாறும் அவர் கேட்டுக் கொண்டார். இதற்காக வின்ஸ்டன் தமது அரசியல் வாழ்வையும் பலியிடத் தயாராக இருந்தார். அதே நேரத்தில் சோவியத் நாட்டின் முறையான அரசாங்கத்துடன் சமரசம் காணவும் அவர் அறிவுரை கூறினார். ஆனால், போல்ஷிவிக் கொள்கைக்கும், தற்கால நாகரிகத்திற்கும் இடையே எந்த உண்மையான உடன்பாடும் இருக்க முடியாதென்று வின்ஸ்டன் நம்பினார். ருஷ்யாவில் போர் நிறுத்தம் ஏற்பட்டு பொருளாதார முன்னேற்றம் ஏற்பட வேண்டிய அவசியத்தை சார் நன்கு உணர்ந்திருந்தார். அமைதியான முறைகளினால் கொடுங்கோன்மையையும், அழிவையும் அகற்ற வேண்டுமென்றும் கூறினார்.

சர்வதேச சங்கத்தின் உடன்படிக்கை (Covenant) மக்களுடைய எதிர்கால நம்பிக்கையின் சின்னமாகத் திகழ்ந்தது. நாடுகள் யாவும் சமரசப் பேச்சு வார்த்தைகள் மூலம் அமைதியைப் பேணவும், ஆக்கிரமிப்பைத் தடுக்கவும் சூளுரைத்தன. சர்வதேச சங்கம் நாடுகளுக்குள் ஏற்படும் எல்லைப் பிரச்சினைகளில் உடன்பாடு காணவும், பழைய ஒப்பந்தங்களின் காலத்திற்கு ஒவ்வாத நிபந்தனைகளை மறுபரிசீலனை செய்யவும், சிறுபான்மையினரின் உரிமைகளைக் காக்கவும், பொருளாதார முன்னேற்றங் காணவும், சமூகத்தீமைகளையும் சீர்கேடுகளையும் அகற்றவும்

உறுதிபூண்டது. இவை யாவும் நிறைவேறியிருந்தால், இந்தப் பூமி 'யூடோபியாவை' (Utopia) நோக்கி வெற்றி நடை போட்டிருக்கும். சர்வதேச சங்கத்தின் முக்கிய சிற்பிகளில் ஒருவரான ஜனாதிபதி வில்சன் சிறந்த பணி ஆற்றியிருந்தும், அமெரிக்கா சங்கத்தில் சேராதது பெரிய அவப்பேறாகும். அமெரிக்காவின் துணையில்லாமல் பிற வல்லரசுகள் வன்மையான முறையில் கூட்டுச்செயல் பட முடியவில்லை. எனவே, புதிய உலக அமைப்பை நிறுவுவதற்குப் பதிலாக, சர்வதேச சங்கம் நாடுகளுக்குள் ஏற்படும் போட்டியின் நிலைக்களமாயிற்று பின்னர், இருபதாண்டுகளில் சர்வதேச சங்கம் நிலைதடுமாறி வீழ்ச்சியுற்ற போது, அதன் உறுப்புகளில் ஒன்றான சர்வதேச தொழிலாளர் நிறுவனம் சிறந்த பணியாற்றி வந்தது. அமெரிக்காவின் உதவியும் அதற்குக் கிடைத்தது. இரண்டாவது உலகப் பெரும் போருக்குப் பின்னர் சர்வதேசத் தொழிலாளர் நிறுவனம் ஐக்கிய நாட்டு ஸ்தாபனத்துடன் இணைக்கப்பட்டது.

வெர்சேய்ல்ஸ் உடன்பாட்டை பிரிட்டனின் அரசியல் கட்சிகள் யாவும் வரவேற்றன. ஜெர்மனி செலுத்தவேண்டிய இழப்பீட்டுத்தொகை பெயரளவில் மட்டும் இருந்தது. கெய்சரும் விசாரணைக்குக் கொண்டுவரப்படவில்லை. வெர்சேய்ல்ஸ் உடன்படிக்கையின் குறைபாடுகளைவிட, ஐரோப்பிய அரசியல் வல்லுநர்கள் அதன் கொள்கைகளின்படி நடக்கத் தவறியது தான், 1919ஆம் ஆண்டு முதல் 1929ஆம் ஆண்டு வரை உலகில் ஏற்பட்ட சிக்கல்களுக்கு முக்கிய காரணமாகும். வெர்சேய்ல்ஸ் ஒப்பந்தம் நீதியும் அமைதியும் நிலவக்கூடிய புதிய ஓர் உலகசமுதாயத்தை நிறுவுவதற்காகச் செய்யப்பட்ட ஒரு ஆக்கரீதியான முயற்சி என்பதில் ஐயமில்லை: 1919ல் கோடையில் வின்ஸ்டன் ரைன்லன்ட் (Rhine land) பகுதியில் இருந்த நேசப்படைகளைப் பார்வையிட்டார். அதே ஆண்டில் ருஷ்யாவில் அரசியல் நிலை நலிவுற்றது. அயர்லாந்தில் உள்நாட்டுக் குழப்பம் ஏற்பட்டது. அடுத்த ஆண்டில் அரசியல் நிலை மேலும் மோசமாகக்கூடிய சூழல் உருவாகியது. தமது கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்ட விஷயங்கள் பற்றி வின்ஸ்டன் அதிக உற்சாகம் கொள்ளவில்லை. போர் அமைச்சகத்திலும் முக்கிய பிரச்சினைகள் இல்லாததால், 1920ஆம் ஆண்டில் அது மக்கள் கவனத்தைக் கவரவில்லை. அமைதிக்காலப் பணிகள் அதிகம் இருந்ததால் வின்ஸ்டன் குடியேற்ற நாடுகளின் அமைச்சராக (Colonial Secretary) மாற்றப் பட்டார்.

**குடியேற்ற நாடுகளின் அமைச்சர்**

**1921**ஆம் ஆண்டு ஜனவரியில் சர்ச்சில் குடியேற்ற நாடுகளின் அமைச்சரானபோது மத்திய கிழக்கு அவரது கவனத்தைக் கவர்ந்தது. மெசபொடோமியாவில் பிரிட்டிஷ் பொறுப்புகளைக் குறைக்கவேண்டிய பிரச்சினை எழுந்தது. இது போரின் விளைவுகளில் ஒன்ருகும். இந்தப் பிரச்சினையின் ராணுவ அமிசங்கள் பற்றி வின்ஸ்டன் போர்த்துறை அமைச்சகத்திலிருந்து விவரங்களைக் கேட்டறிந்தார். மெசபொடோமியாவில் நிறுத்தப்பட்டிருந்த பிரிட்டிஷ் படைக்காக ஆண்டுதோறும் நான்கு கோடி பவுன் செலவாகிக்கொண்டிருந்தது. ஈராக் புதிய நாடாக நிறுவப்பட்டிருந்த காரணத்தால் படைக்குறைப்புத் திட்டத்திற்குக் கடும் எதிர்ப்பு இருந்தது. குடியேற்ற நாடுகளின் அமைச்சகத்தை மையமாகக் கொண்டு மெசபொடோமியாப் பகுதியில் ஒருங்கியைந்த நிருவாகத்தை ஏற்படுத்த சர்ச்சில் உடனடியான நடவடிக்கைகளை மேற்கொண்டார். இப்பொழுது நிலவிவந்த அமைப்பு குழப்பமுள்ளதாக இருந்தது. அதன்படி வெளி விவகார அமைச்சரகம் பாலஸ்தீன், டிரான்ஸ் - ஜோர்டானியா (Trans-Jordania) நாடுகளையும், இந்திய அமைச்சரகம் ஈராக் நாட்டையும் கட்டுப்படுத்தி வந்தது. இதனுல் அராபியர்களின் பிரச்சினை நன்கு கவனிக்கப்படவில்லை. அடிக்கடி தொல்லைகள் தரும் இப்பகுதிகளைக் குடியேற்ற நாடுகளின் புதிய அமைப்பான மத்திய கிழக்குத் துறையின்கீழ் கொண்டுவருமாறு சர்ச்சில் யோசனை கூறினுர். சர்ச்சில் எதிர்பார்த்தபடி புதிய துறை நல்ல முறையில் செயல்படவில்லை. அவரது துணை அமைச்சராக இருந்தவர் இர்வின் பிரபு (பின்னர் இந்திய வைஸ்ராயாக இருந்தவர்) பணி புரிந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. ஆறரை அடி உயரமான இர்வின் பின்னர் ஹாலிஃபாக்ஸ் (Lord Holifox) பிரபுவாகி வெளி விவகார அமைச்சராகவும், அமெரிக்கத் தூதுவராகவும் பணியாற்றினுர்.

எதையும் நேரில் கண்டு காரியங்களைச் சாதிக்கும் அபூர்வ திறம்படைத்த வின்ஸ்டன் மத்திய கிழக்கு நாடுகளுக்குச் சென்று, மத்திய கிழக்குச் சிக்கலுக்குத் தீர்வுகாண முனைந்தார். ஈராக்கில் டி. ஈ. லாரன்ஸ் (T. E. Lawrence) என்பவரின் அரிய துணையைச் சர்ச்சில் பெற்ருர். அராபிய பாலைவனங்களில் சுற்றித்திரிந்து, அரபு மக்களின் வாழ்க்கையை நுணுக்கமாக அறிந்திருந்த விந்தை மனிதர் லாரன்ஸ். அரேபியாவில் போர்ப் பணியும் புரிந்திருந்த லாரன்சின் தன்முனைப்பும், திறமைகளும் சர்ச்சிலின் வெற்றிகளுக்குக் காரணமாகும். சிக்கல் மிகுந்த கெய்ரோ மாநாட்டில்

சர்ச்சில், லாரன்ஸ் கூட்டுறவு நல்லதொரு உடன்பாட்டைச் செய்து முடிக்க உதவியது. முதல் போரில் ஈராக் மக்களின் ஆதரவைப் பெறுமாறு நேசநாடுகளின் பிரதிநிதிகள் பல்வேறு வாக்குறுதிகளை வழங்கியிருந்தார்கள். இவை யாவற்றையும் நிறைவேற்றிவைக்க முடியாது. ஈராக்கியர்களைக் கைவிட்டதாகக் குற்றச்சாட்டுகள் எழுவது உறுதி. இந்நிலையில்தான் கெய்ரோ உடன்பாடு செய்யப்பட்டது. புதிய ஒப்பந்தப்படி ஈராக் மக்களை ஓர் அராபிய மன்னர் ஆளவேண்டும். ஃபெய்சல் (Faisal) அரசராகத் தெரிந்து கொள்ளப்பட்டார். ஈராக்கில் பிரிட்டிஷ் செலவுகள் குறைக்கப்பட்டன.

மத்திய கிழக்குப் பிரச்சினையில் சர்ச்சில் காட்டிய ஆர்வத்தையும், அரிய ஆற்றல்களையும் லாரன்சே தாம் எழுதிய 'த செவன் பில்லர்ஸ் ஆப் விஸ்டம்' (The Seven Pillars of Wisdom) என்ற நூலில் புகழ்ந்து பாராட்டியுள்ளார். 'ஒரு சில வாரங்களிலேயே கெய்ரோ மாநாட்டில் சர்ச்சில் தவறுகளைச் சரிப்படுத்தி, பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டு, பேரரசின் நலன்களையும், சம்பந்தப்பட்ட மக்களின் நலன்களையும் பலியிடாமல், பிரிட்டனின் வாக்குறுதிகளை இயன்றவரை நிறைவேற்றியுள்ளார்'[1] மேலும் சர்ச்சில் ராயல் விமானப்படையின் பொறுப்புகளை ராணுவத்தினிடம் ஒப்படைக்கும் முக்கிய புதுமையையும் புகுத்தினார். ஈராக்கைப் போன்ற ஒரு நாட்டின் பாதுகாப்பிற்கு விமானப்படை அதிகப் பயனுள்ளதும், குறைந்த செலவுள்ள ஏற்பாடுமாகத் தோன்றியது. இதனால் பிரிட்டனுக்கு மூன்றரை கோடி பவுன் மிச்சப்பட்டது. மத்திய கிழக்கில் பிரிட்டனின் விமான வீரர்களில் கணிசமான பகுதியினர் நிலையூன்றியதே வருங்காலத்தில் பயனுள்ளதாக இருந்தது. கெய்ரோவில் இருந்த காலை வின்ஸ்டன் புகழ்பெற்ற பிரமிட் கோபுரங்களை ஓவியமாகத் தீட்டுகின்ற வாய்ப்பினைப் பெற்றார். ஆனால், சர்ச்சிலின் மத்திய கிழக்கு வெற்றி அவருக்கு அரசியல் ஆதாயமாக இருக்கவில்லை. அவர் மத்திய கிழக்கில் இருந்தகாலை போனர்லா ராஜினாமா செய்தார். அவருக்குப் பதில் வின்ஸ்டன் நிதி அமைச்சராவார் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், பதவியை விரும்புகிறவர் தலத்தில் இருக்கவேண்டாமா? எனவே, சர் ராபர்ட்ஹோம் (Sir Robert Home) நிதி அமைச்சரானார். ஈராக்கில் சர்ச்சில் செய்திருந்த புதிய ஏற்பாடும், வெள்ளை அறிக்கையினால் (white paper) பாலஸ்தீனத்தில் ஏற்பட்ட அரசியல் உறுதியும், நீண்டகால அமைதிநிலவ வழி வகுத்தது. வின்ஸ்டன் தமது நண்பரான

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson p. 205.

லாரன்சிற்குக் குடியேற்ற அமைச்சகத்தில் பதவிதர விரும்பினுர். ஆனல், நாடோடி லாரன்ஸ் தமது பணி நிறைவேறியது என்று கூறி அதனை ஏற்க மறுத்துவிட்டார்.

### சுதந்திர அயர்லாந்தும் சர்ச்சிலும்

வின்ஸ்டனைப் போர் அமைச்சராகவே வரலாறு நினைவு கூறும். பிரிட்டனின் மாற்றுர்களுக்கு எதிராகப் போர் நடவடிக்கைகளை வெற்றிகரமாக இயக்குவதில்தான் செயல் வீரரான சர்ச்சிலின் தனிப்பட்ட ஆற்றல்கள் சிறந்த முறையில் வெளிப்பட்டன. ஆனல், ஆக்கபூர்வமான அரசியல் வல்லுநர் என்ற வகையிலும் வின்ஸ்டன் பல அரிய சாதனைகளைப் புரிந்துள்ளார். தென்னுப்பிரிக்காவிற்குப் புதியதொரு அரசியல் திட்டத்தை உருவாக்குவதிலும், நீண்டகாலமாக பிரிட்டிஷ் அரசியல் வல்லுநர்களுக்குச் சவால் விட்டு நின்ற அயர்லாந்துப் பிரச்சினைக்குத் தீர்வு காணுவதில் பங்குபெற்றதன் மூலமும் வின்ஸ்டன் நுண்ணறிவுள்ள அரசியல் வல்லூநர் என்பதைக் காட்டினுர். 1918 முதல் 1922 வரை ஆட்சி செய்த லாயிட் ஜார்ஜின் கூட்டமைச்சரவைக்குப் புகழ்மாலைகள் குவியவில்லை. ஆனல், அயர்லாந்தில் அமைதி நிலவ அவர்கள் வழி வகுத்தார்கள் என்பதை மறக்க முடியாது. ஆஸ்குவித்தும், கிளாட்ஸ்டனும் வெற்றி காண முடியாத சிக்கலில் லாயிட் ஜார்ஜ் வெற்றி கண்டார். இறுதியில் கையெழுத்தான ஒப்பந்தத்திற்கு வழி வகுத்த சிரமமான பேச்சு வார்த்தைகளில் வின்ஸ்டன் சிறந்த பங்கு கொண்டார். குடியேற்ற நாடுகளின் அமைச்சர் என்ற முறையில் சர்ச்சிலின் சிறந்த கண்காணிப்பின் கீழ்தான் சுதந்திர அயர்லாந்தின் பிரசவ வேதனைகளின் ஊடே விடுதலையும் பிறந்தது,

1921ஆம் ஆண்டில் அயர்லாந்துப் பிரச்சினை உச்சகட்டத்தை அடைந்தது. நாட்டில் கொரில்லாப் போர்முறைச் செயல்படவே கொலைகளும், இரத்த வெறியும் தாண்டவமாடின. உள்நாட்டுப் போரே உருவாகியது. தலைமைச் செயலரான சர் ஹமர் க்ரீன்வூட் (Sir Hammer Greenwood) அயர் நாட்டின் குடியரசுப் படையை அழிக்கத் தீவிர அடக்கு முறைகளைக் கையாண்டார். வன்முறையை வன்முறை கொண்டு நசுக்கும் இந்த முயற்சி ஜெர்மனியின் நாஜிக் கொடுங்கோன்மையை ஒத்திருந்தது. அயர்லாந்தில் நடந்த கோரத் தாண்டவத்தைக் கண்டு பிரிட்டிஷ் மக்கள் அதிர்ச்சியுற்றனர். 1921ல் க்ரீன்வூட் ராஜினுமா செய்யவே, லாயிட் ஜார்ஜ் 'சின் ஃபெயின்' (Sin Fein)

தலைவர்களுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தி உடன்பாடு காண விரும்பினார். இந்த முயற்சிகளில் தான் வின்ஸ்டன் பிரதமருக்கு உறுதுணையாக இருந்தார்.

1921ஆம் ஆண்டு ஜூலையில் அயர்லாந்தின் தலைவரான டி வாலரா (de Valera) தலைமையில் ஒரு தூதுக்குழு இங்கிலாந்திற்கு வந்தது. மைக்கல் காலின்ஸ் (Michael Collins) ஆர்தர் கிரிஃபித் (Arthur Griffith) ஆகியோருடன் பேச்சு வார்த்தைகள் நடத்திய அமைச்சரவைக் குழுவில் சர்ச்சிலும் இருந்தார். ஒரு முறை மைக்கல் காலின்ஸ் வின்ஸ்டனை அவரது வீட்டில் சந்தித்தார். மைக்கல் பிரிட்டிஷார் அயர் மக்களுக்கு எதிராகவும், குறிப்பாகத் தமக்கு எதிராகவும் அவிழ்த்து விட்ட அடக்கு முறைகளை வன்மையாகக் கண்டிக்கத் தொடங்கி விட்டார். தம் தலைக்குக்கூட விலை வைத்ததையும் சுட்டிக் காட்டினார். வின்ஸ்டன் உடனே சுவரில் மாட்டியிருந்த ஒரு படத்தை எடுத்து மைக்கலிடம் காட்டினார். அதில் சர்ச்சிலை உயிருடனோ, பிணமாகவோ கொண்டு வருகிறவர்களுக்கு இருபத்தைந்து பவுன் சன்மானம் தருவதாக அறிக்கையிடப்பட்டிருந்தது, 'போயர் மதிப்பீட்டின்படி என் தலையின் விலை அவ்வளவுதான். ஆனால், பிரிட்டிஷார் உமது தலைக்கு ஐயாயிரம் பவுன் மதிப்பிட்டிருக்கிறார்கள். இருநூறு மடங்கு அதிகம்' என்று நகைச்சுவையுடன் குறிப்பிட்டார். மைக்கல் கசப்புணர்ச்சிகளை மறந்து வாய் விட்டுச் சிரித்தார். இந்த நிகழ்ச்சியின் பின்னர் பேச்சு வார்த்தைகள் மிக நல்ல முறையில் நடந்தேறின.

இறுதியாக அயர்லாந்தின் சுதந்திர உடன்பாடு கையெழுத்தாகியது. இத்துடன் அந்தப் பிரச்சினை ஓய்ந்து விடவில்லை. ஒப்பந்தம் இறுதி ஏற்பாட்டிற்கு ஒரு முக்கிய வழியைத்தான் வகுத்தது. உடன்பாட்டில் கண்டவாறு, அயர்லாந்தின் நிருவாகத்தை நடத்துகின்ற பொறுப்பு சர்ச்சிலின் தலைமீது சுமத்தப்பட்டது, வட அயர்லாந்தைத் தனியாகப் பிரித்துவிடவும், அங்குள்ள சில முக்கிய துறைமுகங்களில் பேரரசின் கடல் தளங்களை அமைத்துக் கொள்ளவும் தென் அயர்லாந்து ஒப்புக் கொண்டது. பயங்கரமான உள்நாட்டுப் போரைத் தொடர்ந்து நாட்டை அழித்துக் கொள்வதைவிட மேற்கூறிய நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு அமைதியை நிலைநாட்டுவதே சிறந்ததெனக் காலின்கம், கிரிஃபித்தும் நடைமுறை விவேகத்துடன் முடிவு செய்தார்கள், இன்னும் பல அயர்லாந்து தலைவர்களையும் ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ளுமாறு அவர்கள் வற்புறுத்தினார்கள். ஆனால், டப்ளினுக்குத் திரும்பியதும் டி வாலரா ஒப்பந்தத்தைக்

கண்டனம் செய்ததோடு, காலின்சையும், கிரிஃபித்தையும் நாட்டுத் துரோகிகள் என்று குற்றஞ் சாட்டினர். குழப்பக் காரர்கள் தங்கள் ஆயுதங்களைத் தூக்கி எறிந்து விடவில்லை. அல்ஸ்டரின் நிலைமை குழப்பத்தை விளைவித்தது. தென் அயர் லாந்து பெல்ஃபாஸ்டை (Belfast) பகிஷ்காரம் செய்தது. எல்லைப் புறத்திலிருந்த ஆறு கவுன்டிகளில் இடைவிடாத தாக்குதல்கள் நடந்தன. எல்லை நிர்ணயம் எளிதாக நடக்கக் கூடிய சாதனையாகத் தென்படவில்லை. எனவே, சர்ச்சிலின் கவலை களும் கடமையும் அதிகரித்தன.

அயர்லாந்து பற்றிய மசோதா பாராளுமன்றத்தில் நிறை வேற்றப்பட்டபோது, அவையில் பல ஐயப்பாடுகள் தோன்றின. கன்சர்வேடிவ்கள் தமது வாழ்நாள் முழுவதும் போராடி வந்த கொள்கைகளைப் புதிய மசோதா பலியிடுவதாகக் கூறின போதிலும், அதிகப் பெரும்பான்மை வாக்குகளால் மசோதா நிறைவேறியது. எனினும், வன்முறைச் செயல்கள் நிகழ்ந்து கொண்டு தான் இருந்தன. எல்லையை மீறுதலும், பெல்ஃ பாஸ்டிலிருந்து கண்டனங்களும், அல்ஸ்டர் பிரதமரான சர் ஜேம்ஸ் கிரேய்க் (Sir Jame, Craig) கிடமிருந்து குற்றச்சாட்டு களும், டப்ளினில் காலின்சிடமிருந்து எதிர்ப்புகளும் வந்த வண்ணமாக இருந்தன. அமைதி காணுவதில் வின்ஸ்டனுக்குள்ள ஆற்றலுக்கு இந்தச் சோதனைகள் யாவும் சவாலாக இருந்தன. ஆலோசனைகளும் அறிவுரைகளும் பாராட்டுகளும், வேண்டுகோள் களும் நிரம்பிய அறிக்கைகள் குடியேற்ற அமைச்சரகத்திலிருந்து பறந்து கொண்டிருந்தன. காலின்சுக்குச் சர்ச்சில் எழுதும் கடிதங் களில் சர் ஜேம்ஸ் கிரேய்க்கின் நோக்கங்களை உய்த்துணர முயல வேண்டுமென்றும், இரு தரப்பாரும் வீணான தகராறுகளை வளர்த்துக் கொள்வதால் உள்நாட்டுக் குழப்பமே ஏற்படும் என்றும் அறிவுரை கூறினர். கிரிஃபித்திடமும், காலின்சிடமும், எல்லைப்புற வெறியர்களை அடக்குவதற்குப் படைப்பலம் இருக்க வில்லை. 1922ஆம் ஆண்டு ஏப்ரலில் வரலாற்றுப் பெருமை பெற்ற டப்ளின் நகர் நீதி மன்றமான 'த ஃபோர் கோர்ட்ஸ்' (The Four Courts) நீதி மன்றத்தைச் சில வெறியர்கள் கைப்பற்றிக் கொண்டதோடு, தங்களை அகில அயர்லாந்தின் குடியரசு அரசாங்கம் என்றும் பிரகடனப்படுத்திக் கொண்டனர். அல்ஸடர் எல்லையில் இரு நகரங்களையும் குடியரசுவாதிகள் பிடித்துக் கொண்டனர்.

பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் டோரிகள் வெகுண்டெழுந்த நிலையில், அண்மையில் கையெழுத்திடப்பட்ட ஒப்பந்தத்தையே

அழிக்கக்கூடிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. ஜுன் 22ஆம் நாளில் பிரதம படைத் தளபதியாக இருந்து ஓய்வு பெற்றிருந்த ஃபீல்டு மார்ஷல் சர் ஹென்றி வில்சன் (Field Marshal Sir Henry Wilson) ஈட்டன் சதுக்கத்தில் கொலை செய்யப்பட்டார். இதற்குக் காரணமான இரு அயர்லாந்தியர் கையோடு பிடிக்கப்பட்டனர். சர் ஹென்றி வில்சன் புகழ்பெற்ற அல்ஸ்டர் நாட்டுக்காரரர். சற்று முன்னர் தான் அவர் போர் நினைவுச் சின்னத்தைத் திறந்து வைத்து விட்டு நாடு திரும்பி இருந்தார். எனினும், குடியரசு வாதிகள் இந்தக் கொலைக்குப் பொறுப்பாளிகள் அல்லர் என்று நிலைநாட்டப்பட்டது. பாராளுமன்ற கன்சர்வேடிவ் உறுப்பினர்கள் புதிய உடன்படிக்கை, அமைதியை உருவாக்காது என்று கருதி, அயர்லாந்து பற்றி விவாதிக்க வேண்டுமென்று கோரினர்கள். சர்ச்சில் உணர்ச்சி வயப்பட்டு உரையாற்றினர். டப்ளின் அரசு அராஜகத்தை வீழ்த்துமென்று அவர் உறுதி கூறினர். இதுவரை நடந்த தவறுகள் யாவும் அயர்லாந்து மக்களுடன் தொடர்பு இல்லாத காரணத்தால் நிகழ்ந்தவை யென்றும், இப்பொழுது நிறுவப்பட்டிருக்கும் தற்காலிக அரசு உறுதி கொண்டதென்றும், மக்கள் ஆதரவையும் புதிய அயர்லாந்து பாராளுமன்றத்தில் பெரும்பான்மை ஆதரவையும் அது பெற்றிருக்கிறதென்றும், எனவே, புதிய உடனபடிக்கை உளமார அமுல் செய்யப்பட வேண்டுமென்றும் வின்ஸ்டன் நம்பிக்கை தெரிவித்தார். ‘இந்நிலையில் குடியரசு செயல்குழுவின் ஆதரவு பெற்றிருப்பதாகக் கூறிக் கொள்ளும் வெறியர்கள் நீதி மன்றத்தைக் கைப்பற்றியிருப்பதோடு, வட அயர்லாந்திலும், ஏன், இங்கிலாந்திலும்கூட வெறித்தனமான செயல்களில் ஈடுபடுவதானது உடன்படிக்கையினை மீறுவதாகும்; இது பிரிட்டிஷ் பேரரசிற்கும், ஐரிஷ் மக்களுக்கும் எதிராகச் செய்யப்பட்ட துரோகச் செயலாகும். இந்த அராஜகம் நிறுத்தப்படாவிட்டால் பிரிட்டிஷ் அரசாங்கம் உடன்படிக்கையைப் புறக்கணித்து வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கும்’ என்று சர்ச்சில் வன்மையான எச்சரிக்கையும் விடுத்தார்.

இந்தப் புகழ்பெற்ற உரையைப் போனர்லா பாராட்டினர். ஆனல், வின்ஸ்டன் கூறியபடிச் செய்யாவிட்டால் என்ன நிகழும் என்பதை அவர் கற்பனைக்கு விட்டு விட்டார். தம்மைப் பொருத்த வரையிலும் வின்ஸ்டன் தமது அரசியல் பங்கைச் சரிவர ஆற்றினர். டப்ளினில் காலின்சும், கிரிஃபித்தும் தங்களின் பங்கை நிறைவேற்ற வேண்டியிருந்தது. டப்ளினில் ஒக்கானரும் (O’ Connor) அவரது ஆட்களும், பிரதம படைத் தலைவரான ஒக்கானல் (O’ Connell) என்பவரைக் கடத்திச் சென்றிருந்தனர்.

காலின்ஸ் படை திரட்டிய போதிலும், அவரிடம் பீரங்கிப் பலம் இருக்கவில்லை. பிரிட்டனிலிருந்து பீரங்கிகள் தருமாறு கோரிக்கை வந்தது. பதினெட்டு பவுண்டு நிறையுள்ள பீரங்கியொன்று வழங்கப்பட்டது. இருநாள் தாக்குதலின் பின்னர் நீதிமன்றம் மீட்கப்பட்டது. வெறியர்கள் அடக்கப்பட்டனர். காலின்சும் கிரிஃபித்தும் தம்முடைய அரசின் அதிகாரத்தை உறுதிப் படுத்தினர்கள் ஜுலை 7ஆம் நாள் காலின்சுக்கு சர்ச்சில் வாழ்த்துச் செய்தி அனுப்பி உற்சாகப்படுத்தினர்.

பேரரசு சார்பில் வின்ஸ்டனும், அயர் நாட்டின் சார்பில் காலின்சும், கிரிஃபித்தும் வழிநடத்தி இருக்காவிட்டால் தென் அயர்லாந்தினுடையவும், அல்ஸ்டரினுடையவும் வரலாறு வேறு விதமாக இருந்திருக்கும். 1922ஆம் ஆண்டு ஆகஸ்டில் காலின்ஸ் அவர்தம் பழைய சகாக்களால் கொல்லப்பட்டார். கிரிஃபித்தும் அதே மாதத்தில் மாரடைப்பினல் இறந்தார். இவை நடைபெற்ற பத்து நாட்களில் பிரிட்டிஷ் கூட்டமைச்சரவை வீழ்ச்சியுற்றது; வின்ஸ்டனின் சிரமமான குடியேற்று அமைச்சகப் பணியும் முற்றுப்பெற்றது. இதற்குள் குழந்தைப் பருவத்திலிருந்த சுதந்திர அயர்லாந்தைச் சூழ்ந்திருந்த அபாயங்கள் மறைந்தன. மைக்கல் காலின்ஸ் அன்ெெருரு நாள் கூறியது மிக உண்மையாகும் 'வின்ஸ்டன் இல்லாமல் நாங்கள் எதுவும் சாதித்திருக்க முடியாதென்பதை அவரிடம் கூறுங்கள்' என்பதே அந்தப் புகழ்மாலை.

## சானக் (Chanak) சிக்கலும் சர்ச்சிலும்

டார்டனலஸ் சிக்கலின் விளைவாக முதல் கூட்டமைச்சரவை நிறுவப்பட்டது. சானக் சிக்கலின் விளைவாக இரண்டாவது கூட்டமைச்சரவை வெளியேற்றப்பட்டது. 1922ஆம் ஆண்டில் 'சானக்' என்ற பெயர் உலகத்தில் பரபரப்பை உண்டாக்கியது. காலிப்போலித் தீபகற்பத்திற்கு எதிராக டார்டனலஸ் நீர்க் கூடலில் 'சானக்' அமைந்துள்ளது. டார்டனலஸ் நடவடிக்கைகளைத் தூண்டி விட்டவர்கள் துருக்கியர்கள். அதே துருக்கியர் தாம் 'சானக்' சிக்கலைத் தோற்றுவித்து லாயிட் ஜார்ஜ் அமைச்சரவையைக் கவிழ்த்தவர்கள். இந்த இரு சிக்கல்களிலும் வின்ஸ்டன் சர்ச்சில் தலைசிறந்த பங்கு கொண்டார். சானக்கின் புகழ், வரலாற்றில் மங்கியிருக்கலாம். ஆனல், சானக்கில் பிரிட்டிஷ் சிறு படையின் போர் நடத்தப்பட்ட முறையைப் பொருத்துத் தான் துருக்கியர்களுக்கு எதிராக பிரிட்டனின் வெற்றியோ தோல்வியோ அமைந்திருந்தது.

1920ஆம் ஆண்டு ஆகஸ்டில் நேச நாடுகள் துருக்கியுடன் செவ்ரெஸ் (Sevres) உடன்பாட்டைச் செய்திருந்தன. ஆனல், துருக்கி நாட்டுப் படைத்தலைவரும், தேசீயவாதிகளின் ஒப்பந்தத் தலைவருமான அட்டாடர்க் முஸ்தாஃபா கெமால் (Ataturk Mustafa Kamal) இந்த உடன்பாட்டை ஏற்றுக் கொள்ள மறுத்தார். அவர் மீண்டும் போர் வெறி கொள்ளவே, அன்டோலியாவில் (Antolia) துருக்கிக்கும் கிரீசுக்கும் இடையே புதிய போர் தொடங்கியது. நேச நாட்டுப் படைகள் அந்தப் பகுதியில் இல்லாத காரணத்தால்தான் கிரீசை எதிர்க்குமாறு நேச நாடுகள் பணித்தன. கிரேக்கப்படை கெமாலின் படைகளை அன்டோலியா வரைப் பின்வாங்கச் செய்தன. அன்டோலியாவும் வீழ்ந்து, துருக்கியின் தேசீயமே அழிக்கப்படும் போல் தோன்றியது. முஸ்தாபாகெமால் பதினுன்கு நாட்கள் சாகாரியாவை (Sakkaria) முற்றுகையிட்டு வீரப்போர் புரிந்தார். அவர்தம் வீரர்கள் அன்டோலியாவையும், துருக்கியின் தேசீய இலட்சியத்தையும் காப்பாற்றினுர்கள்.

இதுவரை களம்கண்ட தளபதிகளில் கெமாலைப் போன்று திறமை பெற்றவர்கள் இல்லையென்று கூறலாம். விசித்திரமான மனிதர்களில் ஒருவரான கெமால், சொந்தத் தன்னுணர்வும், வலிமையும், கடுமையும், திறமையும் மிக்கவர். துருக்கியை நவீன நாடாக்கவும், அதன் மக்களை முன்னேற்றவும் உறுதிபூண்ட சிறந்த தேச பக்தர். அவர் எதிர்த்திராவிட்டால் பிரிட்டிஷ் படையினர் காலிப்போலித் தாக்குதலில் வெற்றி பெற்றிருப் பார்கள். துருக்கி தோல்வியும், சோர்வும், நலிவுமுற்று பின் தங்கிய நாடாக மண்ணில் புதைந்திருக்கும். அதனது வாணிகத் தையும், மூல வளங்களையும், கிரேக்கர்களும், ஆர்மீனியர்களும் சுரண்டியிருப்பார்கள். ஒரு காலத்தில் மத்திய கிழக்கு முழு வதிலும் பரவியிருந்த உறுதியற்ற துருக்கிப் பேரரசைக் கலைத்து விடவும் அவர் தயாராக இருந்தார். ஆனல், தாய் நாட்டின் எல்லைகள் அழிவுருமல் பாதுகாப்பது அவரது எண்ணம். ஐரோப் பாவில் துருக்கியர்கள் காலூன்றும் இடமாகக் கான்ஸ்டான்டி நோபிலை வைத்துக்கொள்ள துருக்கியர்கள் முயன்றனர். நேச நாடுகளோ அதனைச் சர்வ தேசக் கட்டுப்பாட்டின் கீழ்க்கொண்டு வந்து, துருக்கியின் கனவுகளைத் தகர்க்க வேண்டுமென்று விரும்பின. கெமாலின் படைகள் ஸ்மிர்ஞவைத் (Smyrna) தாக்கிய போது துருக்கியர்கள் புரிந்த பயங்கர அட்டூழியங்களைக் கண்டு நாகரீக உலகம் அதிர்ச்சியடைந்தது. சிறிய ஆசியாவில் துருக்கி முழு ஆதிக்கம் பெறுவது ஐரோப்பாவிற்குத் தீராத தொல்லையாக இருக்கும். திரேஸ் (Thrace) நாட்டில் துருக்கியர்

செல்வாக்கு வளர்ந்தால், பால்கன் இடர்ப்படுவது உறுதி. இதனுல்தான் நேசப்படைகள் துருக்கியைக் காலிப்போலி, பாலஸ் தீன், சலோனிக்கா (Salonika) மெசபொடோமியா ஆகிய பகுதிகளில் எதிர்த்துப் போராடின.

இன்று சாணுக்கில் பிரிட்டிஷ், ஃபிரஞ்சு, இத்தாலி நாடுகளின் ஒரு சிறு படைதான் டார்டனலஸ் நீர்க்கூடலுக்குக் குறுக்கே யுள்ள சிறியதொரு நடுவுநிலைமைப் பகுதியில் நின்று துருக்கியை உள்ளே விடாமல் எதிர்த்து வந்தது. துருக்கிப்படை வெற்றிச் செருக்குடன் நின்றது. 1922ஆம் ஆண்டு செப்டம்பர் 15ஆம் நாள் பிரிட்டிஷ் அமைச்சரவையின் அவசரக் கூட்டம் நடை பெற்றது. லாயிட் ஜார்ஜ் கிரேக்கர்களுக்கு உதவ வேண்டு மென்று மிக வன்மையாக வற்புறுத்தினுர். சர்ச்சில், பால்ஃபோர் உடன்பட பிற அமைச்சர்களும் பிரதமரின் திட்டத்தை ஆதரித் தனர். இதற்கிடையில் கெமாலின் ஆதரவாளர்கள் எவ்விதத் திலும் டார்டனலசை ஊடுருவுவதென்று உறுதி பூண்டிருப்பதாக நேசப் படைகளின் தளபதியான புளுமர் பிரபுவிடமிருந்து (Lord Plomer) செய்தி வந்தது. இந் நிலையில்தான் டொமினியன் நாடுகளுக்கு ஓர் அறிக்கையை அனுப்புகின்ற பொறுப்பை அரசினர் சர்ச்சிலிடம் ஒப்படைத்தார்கள். பிரிட்டனின் நட வடிக்கைகளை ஆதரித்து உதவி அளிக்குமாறு டொமினியன் அரசுத் தலைவர்களுக்கு அவசரத் தந்திகள் பறந்தன. அமைச் சரவை மீண்டும் சந்தித்தது. விடுமுறையில் இருந்த கர்ஸான் பிரபு மட்டும் அதில் கலந்து கொள்ளவில்லை.

வின்ஸ்டன் தயாரித்து அனுப்பிய அறிக்கை வரலாற்றுப் புகழ் பெற்றது. அந்த அறிக்கையில் கெமாலின் படைகள் டார்டனலசை ஊடுருவுவதாலும், கான்ஸ்டான்டிநோபிளைக் கைப்பற்றுவதாலும் விளையக் கூடிய பாதகங்களை வின்ஸ்டன் குறிப்பிட்டார். டார்டனலஸ் பகுதியில் ஐரோப்பாவையும் ஆசியாவையும் பிரித்து, மத்திய தரைக் கடலையும். கருங்கடலை யும் இணைக்கக்கூடிய ஆழமான உப்பு நீர்க்கால்வாய் ஐரோப்பிய நலன்களுக்கும், குறிப்பாக பிரிட்டனின் நலன்களுக்கும் எவ்வளவு முக்கியமானது என்பதை அவர் சுட்டிக் காட்டினுர். டார்டனலஸ் நீர்க்கூடல் நிலையான சுதந்திரம் பெற வேண்டுமென்று பிரிட்டிஷ் அரசு கருதுவதால், அதற்காக எந்த எதிர்ப்பையும் சமாளிக்கத் தாயாரென்றும், இந்தப் பிரச்சினையில் ஃபிரான்ஸ், இத்தாலி போன்ற வல்லரசுகளின் பேருதவியையும் எதிர் பார்ப்பதாக வின்ஸ்டன் குறிப்பிட்டிருந்தார். பிற நிபந்தனைகளை நிறைவேற்றினுல், கான்ஸ்டான்டிநோபிளையும், அங்காராவை

யும் (Ankara) துருக்கியர்களுக்கு விட்டு விடுவதில் தடையில்லை என்றும் வின்ஸடனின் கருத்தாகும். டார்டனலஸ், பாஸ்ஃபரஸ் (Bosphorus) கான்ஸ்டான்டிநோபிள் ஆகிய நடுவுநிலைமைப் பகுதிகளில் துருக்கி ஊடுருவுவதை முதலில் தடுக்க வேண்டும். கெமால் ஆதரவாளர்களைச் சமாளிக்க வெறும் அரசியல் வெல்திறம் மட்டும் போதாது, டார்டனலஸ் நீர்க்கூடலின் சுதந்திரத்தைப் பாதுகாக்கப் படைப்பலமும் தேவை என்பது வற்புறுத்தப்பட்டது. இதில், நேசப்படைகள் தோல்வியுற்றால் அதன் விளைவு முதல் உலகப் போரின் பின் ஏற்பட்டுள்ள அமைதி ஏற்பாடுகளையே குலைக்கும் என்றும் சர்ச்சில் எச்சரித்தார். துருக்கியின் வெற்றி பால்கன் நாடுகளின் வரலாற்றையே மாற்றி விடவும் கூடும். எனவே, பிரிட்டிஷ் அரசு பால்கன் நாடுகள், டொமியன் அரசுகள், நேச வல்லரசுகள் ஆகிய சகலரின் ஒத்துழைப்பையும் கோருவதாக அவ்வறிக்கையில் குறிப்பிடப் பட்டிருந்தது.

சர்ச்சில் விடுத்த அறிக்கையின் விளைவுகள் குறிப்பிடத் தக்கவை. அதனைப் படித்த பிரிட்டிஷ் மக்கள் உலகப் பெரும் போர் மீண்டும் மூளுமோவென்று அஞ்சினர். விடுமுறையில் இருந்த கர்ஸான் பிரபு அதனைக் கண்டு வெகுண்டெழுந்தார். ஃபிரஞ்சுப் பிரதமர் போய்ன்கார் (Poincare) நடுவுநிலைமைப் பகுதியிலிருந்து ஃபிரஞ்சுப் படைகள் வாபஸ் பெற்றுக் கொள்வதாகத் தந்தி அனுப்பினார். நேசப் படைகளின் மானத்தைக் காப்பாற்ற ஃபிரான்ஸ் நாட்டைப் போரிலீடுபடுத்துவதை அவர் விரும்பவில்லை. டொமினியன் நாடுகளில் இந்த அறிக்கை அமைதியைக் குலைத்தது. கெமால் அட்டாடர்க்கும் அதனைப் படித்தார். அறிக்கையில் தொனித்த போர்க்குரலை அட்டாடர்க் கேட்டார். கர்ஸானே வெகுண்டார், கெமாலோ பதுங்கினார். சானக்கிலிருந்து படைகள் திரும்ப வேண்டுமென்று பணித்தார். இது சர்ச்சிலுக்குத் தனிப் பெரும் வெற்றியாகும். சர்ச்சிலின் போர்க்குரலும், பிரிட்டிஷ் பிரதமப் படைத் தலைவரான ஹாரிங்டனின் (General Harrington) வெல்திறமும் வென்றன. நேசப்படைகள் மானத்தை இழக்காமல் துருக்கியின் உடும்புப் பிடியிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ள முடிந்தது.

துருக்கியரை ஐரோப்பாவில் காலூன்றாமல் தடுத்த பெருமையின் பெரும்பகுதி வின்ஸ்டனுக்குரியது. நேச நாடுகளின் ஆலோசனைப்படி லாவ்சேன் (Lausanne) மாநாடு கூட்டப்பெற்று துருக்கியின் வருங்காலம் பற்றிப் பேசப்பட்டது. துருக்கிப் பிரச்சினையிலிருந்து தப்பினதால் லாயிட் ஜார்ஜின் அமைச்சரவை

அரசியல் புயலில் சிக்கியது. கூட்டமைச்சரவையின் முற்போக்குத் திட்டங்கள் கன்சர்வேடிவ்களையும், லிபரல்களையும், சோஷலிஸ்டுகளையும் பீதி கொள்ளச் செய்தது. போனர்லா கூட்டமைச்சரவையிலிருந்து விலக வேண்டுமென்றார். தேசியக் கட்சியை உருவாக்க வேண்டுமென்று சர்ச்சில் விரும்பினர். அவரைப் பொறுத்தவரை சானக் சிக்கல், டார்டனலஸ் பற்றிய பழைய நினைவுகளைக் கிளறி விட்டது. எனவே துருக்கிச் சிக்கல் கூட்டமைச்சரவையின் வீழ்ச்சியைத் துரிதப்படுத்தியது. 1922ஆம் ஆண்டு அக்டோபரில் கன்சர்வேடிவ்கள் கார்ல்டன் சங்கக் (Carlton Club) கூட்டத்தில் அமைச்சரவையை வீழ்த்தினர். அமைச்சரவையின் அவலமான வீழ்ச்சியைத் தொடர்ந்து நடைபெற்ற பொதுத் தேர்தல் அதிருப்தியை அதிகரித்தது. பிரிட்டிஷ் பேரரசைப் போரின் விளிம்பிற்கு இட்டுச் சென்றதாக சர்ச்சில் பழி ஏற்க வேண்டியதாயிற்று. எனினும், சானக் சிக்கலில் உலகத்தின் எதிர்ப்பை மட்டுமின்றி, பிரிட்டிஷ் பொது மக்களின் எண்ணத்தையும் எதிர்த்து நின்றதற்காக லாயிட் ஜார்ஜிற்கும், யாவர்க்கும் மேலாகச் சர்ச்சிலுக்கும் நன்றி கூற வேண்டும்' என்று ஹெரால்டு நிக்கல்சன் (Harold Nicholson) பாராட்டினர்.

# 11. திக்குத் தெரியாத காட்டில்

முதல் உலகப் பெரும்போர் பழமைக்கும் புதுமைக்கும் இடையே நிற்கும் ஒரு நீர் பிரிமேடாகும். நினைக்க நினைக்க நெஞ்சத்தை நிரப்பக் கூடிய நீண்ட பழமை 1914ஆம் ஆண்டோடு முற்றுப் பெற்றது. அஞ்சிச் சாவோரின் அமைதியைக் குலைத்து, வீணில் உண்டு களித்திருப்போரை வெறுப்படையச் செய்யும் புதிய சக்தியான சோஷியலிசம் தனது தலையைத் தூக்கத் தொடங்கியது. போருக்குப் பின்னர் தொழிற்கட்சி நாட்டு நடப்பில் இரண்டாவது இடத்தைப் பிடித்துக் கொண்டது. போரைத் தொடர்ந்து 1918ல் நடந்த பொதுத் தேர்தலில் லிபரல் கட்சி மூன்றுவது நிலைக்குத் தள்ளப்பட்டது. லிபரல் கட்சியின் கொள்கை இன்னும் செல்வாக்குப் பெற்றிருந்த போதிலும், பாராளுமன்றத்தில் லிபரல் கட்சியினரின் எண்ணிக்கை குறைந்திருந்தது. இவ்வாறு மரபு வழியான இருகட்சிக் கூட்டு முறை அரசியலை உருவாக்குவதில் வின்ஸ்டன் சர்ச்சில் பெரும் பங்கு ஏற்றுக் கொண்டார். இதன் விளைவாக அவர் இரண்டாவது முறை கட்சி மாற வேண்டியதாயிற்று. வெறும் வாயை மென்று கொண்டிருந்த அவரது அரசியல் எதிரிகளுக்கு இந்த அரசியல் அவல் கிடைத்தது.

போருக்குப் பிந்திய அரசியல் அரங்கத்தில் சர்ச்சிலின் அரசியல் கொள்கை சோஷியலிசத்தை எதிர்ப்பதாகும். அவர் போர்த் தளவாட அமைச்சராக இருந்த காலத்தில் அவரை எதிர்த்து வந்த தொழிலாளர் தொல்லைகளும், ருஷ்ய போல்ஷிவிக் எதிர்ப்பால் விளைந்த கசப்புணர்ச்சியும், தீவிர இடதுசாரிகளையும் அவரின் கொள்கைகளையும் வின்ஸ்டன் எதிர்க்குமாறு தூண்டின. சோஷியலிசத்திற்கும், போல்ஷிவிக் கொள்கைக்கும் இடையே அதிக வேறுபாடு இருப்பதாக அவருக்குத் தெரியவில்லை. எனவே, எல்லா சோஷியலிச எதிர்ப்பாளர்களும் ஒன்றுபட்டு நின்று இடதுசாரிகளால் வரக்கூடிய அபாயத்தை எதிர்ப்பது கடமை என்று

வின்ஸ்டன் வலியுறுத்தினார். நாட்டைப் புரட்சியிலிருந்து காப்பதில்தான் அவர் பெரும் ஈடுபாடு கொண்டிருந்தார். லாயிட் ஜார்ஜ் அமைச்சரவையின் இறுதிக் கட்டத்தில் வின்ஸ்டன் ஒரு மையக் கட்சியை உருவாக்கி, கூட்டமைச்சரவையைக் காப்பாற்றுவதில் முனைந்திருந்தார். இரு பெரும் கன்சர்வேடிவ் தலைவர்களான பெர்க்கன்ஹெட் பிரபுவும், ஆஸ்டன் சேம்பர்லேனும் வின்ஸ்டனை ஆதரித்தார்கள். ஆனால், கன்சர்வேடிவ்களில் பெரும்பாலோர் தமது கட்சி ஒன்றுதான் சோஷியலிசத்தை வன்மையான முறையில் எதிர்க்க முடியும் என்று நம்பியதால், கூட்டமைச்சரவை கலைக்கப்பட வேண்டுமென்று விரும்பினார்கள்.

1922ஆம் ஆண்டில் கூட்டமைச்சரவை என்ற பெயரே மந்திரச் சொல்லாக இருக்கவில்லை. 'போரை வென்ற பெரு வீரர்' என்றெல்லாம் புகழப்பட்ட லாயிட் ஜார்ஜின் புகழ்கூட ஒளியிழந்து காணப்பட்டது. அவரிடம் இன்று கொள்கை உறுதி யில்லை என்று மக்கள் நம்பினார்கள். சந்தர்ப்பவாதமும், பொது வாழ்வில் தரக்குறைவும் நடைமுறையாகி விட்டதற்காக அவர்கள் வருந்தினார்கள். சிக்கனத்தைப்பற்றி அறிவுரை கூறும் அமைச்சர்கள் பணத்தை வீண் விரயம் செய்கின்றனரென்றும், தொழில் வளர்ச்சியை ஆதரிப்பதாகச் சொல்லிக் கொண்டு வரிப்பளுவை அதிகரிப்பதாகவும், போல்ஷ்விக் கொள்கையிலும், ஜெர்மனி எதிர்ப்பிலும் முன்னுக்குப் பின் முரணான கொள்கைகளைக் கடைப் பிடிப்பதாகவும் குற்றச்சாட்டுகள் எழுந்தன. 'கூட்டமைச்சரவையின் நிலையற்ற கொள்கைகளால் உலகத்தில் இங்கிலாந்தின் நாணயமே கெட்டு விட்டதாக' 'டைம்ஸ்' பத்திரிகை கண்டித்து எழுதியது.

சானாக் சிக்கல் கன்சர்வேடிவ்களின் எதிர்ப்பை உச்சநிலைக்குக் கொண்டு வந்தது. 'பிரிட்டன் உலகத்திற்கெல்லாம் போலிஸ் காவலனாக இருக்க முடியாது' என்று போனார்லா டைம்ஸ் பத்திரிகையில் அறிக்கை விடுத்தார். இதனைத் தொடர்ந்து தான் அமைச்சரவையின் வீழ்ச்சி உறுதியாக்கப்பட்டது. ஒன்று கூட்டமைச்சரவை மையக்கட்சியாக சோஷியலிசத்தை எதிர்க்க வேண்டும், அல்லது கன்சர்வேடிவ்கள் கூட்டமைச்சரவையிலிருந்து விலக வேண்டும் என்ற நிலை உருவாகியது. இதற்கிடையில் கர்சான் பிரபு மையக்கட்சியை ஆதரித்த குழுவிலிருந்து விலகியது பேரிடியென அதிர்ச்சி தந்தது. இதனையடுத்து 187 வாக்குகளால் அமைச்சரவை தோற்கடிக்கப்பட்டது. இத்துடன் லாயிட் ஜார்ஜின் பிரதமர் பதவியும், மையக்கட்சியை அமைக்கும் சர்ச்சிலின் கனவும் முடிவுற்றன. போனார்லா,

பெர்க்கன்ஹெட் பிரபு குறிப்பிட்டது போன்று இரண்டாம் தர அறிவாளிகளைக் கொண்டு ஓர் அமைச்சரவையை நிறுவினர். பொதுத் தேர்தல் உடனே நடைபெற்றது.

வின்ஸ்டன் ஐந்தாவது முறையாக டண்டித் தொகுதியில் போட்டியிட்டார். லிபரலாகவும், தடையில்லா வாணிக ஆதரவாளராகவும் தான் போட்டியிடுவதாக அவர் அறிவித்தார். எனினும் 'லாயிட் ஜார்ஜையும், தம்மையும் இதுவரை ஆதரித்து வந்த கன்சர்வேடிவ்களையும் தாம் புறக்கணிக்கப் போவதில்லை' என்றும் உறுதி கூறினர். ஆனல், லிபரல் கொள்கைக்கு இரு பெரும் எதிர்ப்புகள் இருந்தன. ஒருபுறம் பிற்போக்குக் கொள்கையுடைய கன்சர்வேடிவ்கள் மறுபுறம் புரட்சிக் கொள்கையுடைய சோஷியலிஸ்டுகள். போனர்லாவின் அரசினை வின்ஸ்டன் தீவிர பிற்போக்குவாதிகள் அரசு என்றும், அவருடைய கொள்கைகள் இடைக் காலத்திய பழங் கொள்கைகள் என்றும் தாக்கினர். 'இத்தகைய அறிவு சூன்யமும், அறநெறி வெறுமையும் கொண்ட சமாதியில் என்னைப் புதைத்துக் கொள்ளமாட்டேன்' என்று வின்ஸ்டன் அறிவித்தார்.

வாக்காளப் பெருமக்கள் தேக்க நிலைக்கும், புரட்சி நிலைக்கும் இடையே செய்வதறியாது தத்தளித்தனர். சர்ச்சிலின் தேர்தல் பிரசாரம் இன்னும் விறுவிறுப்பாக இருந்திருக்கும். ஆனல், துரதிர்ஷ்ட வசமாக அவர், குடல்வால் அழற்சியினல் பெரும் அவதியுற்ருர். தொகுதிக்குச் சென்று வாக்குக் கேட்க முடியாத அளவிற்கு படுக்கையாகி விட்டார். அறுவை மருத்துவமும் நடந்தது. அவர் சார்பில் அவர்தம் மனைவியார் சில உண்மை நண்பர்களுடன் பிரச்சாரத்தைத் தொடர்ந்து நடத்தினர். தேர்தலுக்கு முன்தினம் வின்ஸ்டன் டண்டி ஹில் ஹால் (Dundee Hill Hall) என்ற இடத்தில் வாக்காளர்களைச் சந்தித்துப் பேசினர். 'நீ தோற்பாய், தோற்று அடிமட்டத்திற்குத் தள்ளப்படுவாய்' என்று வெறிகொண்ட எதிரிகள் கூவினர்கள். பிணியின் காரண மாக அவரால் தகுந்த பதில் கொடுக்க முடியவில்லை. கூட்டத்தையே நிறுத்த வேண்டியதாயிற்று. ஐந்துமுறை டண்டியில் நின்று தோற்றுப் புகழ் பெற்றிருந்த ஸ்கிரைம்கியோர் (Scrymgeour) 32,000 வாக்குகளில் வெற்றி பெற்ருர். 'இத் தேர்தலின் பின்னர் நான் பதவியையும், பாராளுமன்ற இடத்தையும், கட்சியையும், குடல் வாலையும் இழந்தேன்' என்று வின்ஸ்டன் நகைச்சுவையுடன் குறிப்பிட்டார்.

**அரசியலுக்கு வெளியே**

**1923**ஆம் ஆண்டின் தொடக்கத்தில் வின்ஸ்டன் குண மடைந்து ஒய்வு பெற்று வந்தார். பொதுவாழ்வில் அவருடைய பதவியை மீண்டும் பெறக்கூடிய சூழ்நிலை இருப்பதாகத் தெரிய வில்லை. இத்தாலி, ஸ்பெயின் போன்ற நாடுகளில் குளுமையான சூழலில் இழந்த சுகத்தைப் பெற முயன்றார். திரும்பவும் ஓவியத்தில் மனத்தைச் செலுத்தினர். படிப்படியாக குண மேற்பட்டபோது 'தீக்காய்ந்து கொண்டே சாய்வு நாற்காலியில் அமர்ந்து சிறு துயில் கொள்ளும் பழக்கத்தை மேற்கொண்டார். ஒய்வு நேரங்களில் நூல்கள் எழுதுவதில் மும்முரமாக ஈடு பட்டார். அவரது 'த வொர்ல்டு கிரைசிஸ்' என்ற நூலின் முதல் பகுதி முற்றுப் பெற்றிருந்தது. போர் நிகழ்ச்சிகளைப் பற்றிய ஒட்டு மொத்தமான கண்ணோட்டத்தைச் சொல்லோவிய மாகப் படைப்பதில் அவருக்கு இணையானவர்கள் வெகு சிலரே. மேற்கூறிய நூலின் முதற்பகுதி மிக அற்புதமாக அமைந்திருந்தது. கடந்த இருபதாண்டுக் காலத்தில் அவர் எழுத்துப்பணியை விட்டு விட்டு, சிறந்த நாவலராகப் புகழ் பெற்றிருந்த போதிலும், அவரது எழுத்துநடையில் மீண்டும் அழகும் கெம்பீரமும் தொனித்தன. 'வின்ஸ்டனிடம் ஒவ்வொரு சொல்லும், காதோடு காது வைத்துப்பேசும் இரகசியமும், ஏன்? அவரது தலை அசைவு கூட உயிர் பெற்றுவிடும்' என்று சர் எட்வேர்டு கிரே குறிப் பிட்டது மிகையாகாது. அவரிடமிருந்த அதிகார பூர்வமான ஆதார ஏடுகளின் துணைகொண்டு புதிய நூலை, வரலாறும் சொந்த அனுபவங்களும் கலந்து விளையாடும் காவியமாக உருவாக் கினர். அதனை, 'உலக வரலாற்றுப் போர்வையில் மறைந்து கொண்டிருக்கும் வின்ஸ்டனின் சுய சரிதை' என்று, பால்ஃபோர் பிரபு வர்ணித்தார்.

என்னதான் இருந்தாலும் சுறுசுறுப்பாகச் செயல்பட்டுப் பழக்கமுள்ளவருக்கு ஒய்வாக இருந்து எழுதிக் கொண்டிருப்ப தென்றால் பிடிக்குமா? **1923**ஆம் ஆண்டில் மீண்டும் வின்ஸ்டன் தீவிர அரசியலில் ஈடுபடுவதற்குள்ள வாய்ப்புகள் இருக்கவில்லை. அவர் எந்தக் கட்சியைத் தாம் சார்ந்திருக்கிறார் என்பதே தெளிவில்லை. முற்போக்குவாதிகள் அவரை அப்பட்டமான பிற்போக்கு வாதத்தின் சின்னம் என்று கருதினர்கள் 'வின்ஸ்டன் விரும்புவதெல்லாம் நாடகப்பாணியில் அமைந்த ஓர் உலகம். அதில் நிறைய வில்லன்கள் இருக்கவேண்டும். ஆனல், கதா நாயகன் ஒரே ஒருவர்தான்' என்று, எச். ஜி. வெல்ஸ் (H. G. Wells) சிலேடை மொழியில் குறிப்பிட்டார். இது, உண்மை இல்லை

யென்ருலும் அக்காலத்தில் வின்ஸ்டனை நெப்போலியனின் போருடையில் கேலிச் சித்தரமாக எழுதுவது வழக்கமாயிருந்தது. எச். ஜி. வெல்ஸ் எழுதிய 'மென் லைக் காட்ஸ் (Men Like Gods) என்ற நூலில், இத்தகைய வர்ணனை ஒன்று இடம் பெற்றிருந்தது. இவ்வாறு என்றும் போர்ப் பரணியே பாடிக்கொண்டு, போரார்வ மான கனவுகளைக் கண்டு கொண்டிருப்பவராகப் பொதுமக்கள் எண்ணத்தில் பதிந்துவிட்ட வின்ஸ்டனுக்கு அரசியல் எதிர்காலம் இருக்கிறதா? வென்பது பெரிய கேள்விக்குறியாக இருந்தது.

வின்ஸ்டனின் அரசியல் சார்புகள்தாம் என்ன? 1923ஆம் ஆண்டில் இங்கிலாந்தின்அரசியல் அரங்கம் குழப்பத்தில் ஆழ்ந் திருந்தது: தொழில்கட்சி சோஷியலிசத்தில் பற்றுக் கொண் டிருந்தது. ஆஸ்குவித்தின் தலைமையில் அமைந்திருந்த சுதந்திர லிபரல்கள் முற்போக்குக் கொள்கைகளை ஆதரித்தனர். லாயிட் ஜார்ஜ தலைமையில் கூட்டமைச்சரவையை ஆதரித்த லிபரல்கள் அணிவகுத்து நின்றனர். கன்சர்வேடிவ்கள் பெரும் எண்ணிக்கைப் பலம் கொண்டு பெருங்கட்சியாக விளங்கினார்கள். சர்ச்சில் சோஷியலிச எதிரி என்ற முறையில் தொழிற் கட்சியுடன் எவ்வித உறவும் கொள்ள முடியாது. கூட்டமைச்சரவையின் வன்மையான ஆதரவாளராக இருந்த அவருக்கு ஆஸ்குவித்தின் அணியில் இடம் இல்லை. உண்மையில் சர்ச்சில் ஒரு கூட்டமைச்சரவை ஆதர வாளரான லிபரல். ஆனால், தொடர்ந்து அக்கட்சியைத் தாம் ஆதரிப்பார் என்றும் கூறமுடியாது. ஆனல், 1923ஆம் ஆண்டில் அவர் கன்சர்வேடிவ் ஆதரவரளராகவும் இருக்க முடியவில்லை. வின்ஸ்டனின் தந்தையாரின் வீழ்ச்சிக்குக் காரணமானவர்களும், வின்ஸ்டனை வீழ்த்த நினைத்தவர்களும் இன்னும் கன்சர்வேடிவ் கட்சியில் இருந்தார்கள். இதன் அபிமானத் தலைவர்கள்தாம், இப்பொழுது போனர்லா, பால்ட்வின் போன்ருரின் தலைமையில் அமைச்சரவையை நிறுவி இருந்தார்கள். இவர்கள் யாவரும் அறிவிலும், ஆற்றல்களிலும் மிகக் குறைந்தவர்களே.

இந்நிலையில் தான் 1923ஆம் ஆண்டின் இறுதியில் பால்ட்வின், பாராளுமன்றத்தைக் காப்பியல் முறைப் பிரச்சினையின் அடிப் படையில் கலைத்து விட்டிருந்தார். இதன் மூலம் சிதறிக் கிடந்த லிபரல்களை ஒன்று படுத்தலாமென்பது அவரது நம்பிக்கை. சர்ச்சில் வன்மையான காப்பியல் எதிரி. லாயிட் ஜார்ஜும், ஆஸ்குவித்தும் தமக்குள் இருந்த கருத்து வேறுபாடுகளை ஒருகணம் மறந்துவிட்டு ஒத்துழைக்கத் தொடங்கினார்கள். சர்ச்சிலும் லாயிட் ஜார்ஜின் தலைமையை ஏற்றுக்கொண்டு தேர்தல் களத்தில் குதிக்கத் தயாரானார். மேற்கு லீசெஸ்டர் (West Leicester)

தொகுதியை அவர் தெரிந்துகொண்டார். பின்னர் இந்திய அமைச்சராக இருந்த பெதிக் லாரன்ஸ் (Pethick Lawrence) சர்ச்சிலே எதிர்த்துப் போட்டியிட்டார். சோஷியலசத்தை முறியடிக்கும் எண்ணத்துடன் மான்ச்செஸ்டர் தொகுதியை மறுத்துவிட்டுச் சர்ச்சில் லீசெஸ்டரில் போட்டியிட்டார். கூட்டமைச்சரவையை ஆதரித்த லிபரல் என்ற வகையில், அவர் தடையில்லா வாணிகத்தை ஆதரிப்பதற்கான காரணங்களே வாக்காளர்களின் முன் வைத்தார். நவம்பரில் ஃபிரி டிரேட் ஹாலில் (Free Trade Hall) வின்ஸ்டன் நிகழ்த்திய தேர்தல் பிரச்சாரத்தில் பால்ட்வின் தடையில்லா வாணிகத்தை அழிக்க முயல்வதைக் கண்டித்தார். வெளிநாட்டுப் பொருள்களே இறக்குமதி செய்வதுதான் வேலேயில்லாத் திண்டாட்டத்தின் காரணம் என்று பால்ட்வின் கூறும் வாதம் அவருக்கு வேடிக் கையாக இருந்தது. கடந்த பொதுத் தேர்தலில் போனுர்லாவை ஆதரித்த பால்ட்வின், இதற்கு முற்றிலும் மாறுபட்ட கருத்து களேக் கூறியிருந்ததையும் சர்ச்சில் நினேவூட்டினுர். தடையில்லா வணிக நிபுணரான மக்கீனுவை பால்ட்வின் நிதி அமைச்சராக நியமித்தது அவரது கொள்கையின் பலவீனத்தைக் காட்டு வதாக வின்ஸ்டன் குறிப்பிட்டார். இந்நிலேயில் 'நேர்மையாள ராகிய' பால்ட்வின் பாராளுமன்றத்தைக் கலேத்துவிட்டு நாட்டைத் தேவையற்ற தேர்தலில் ஈடுபடச்செய்த அவல நிலேயையும் சுட்டிக் காட்டத் தவறவில்லே, பால்ட்வினின் 'ஞானக்கண்' திறந்த விந்தை தமக்குப் புலப்படவில்லே என்று வின்ஸ்டன் கூறியபோது மக்கள் ஆரவாரம் செய்தனர்.

ஆனுல், சர்ச்சிலின் எதிரிகள் அவரைத் தனிப்பட்ட காழ்ப்புணர்ச்சியுடன் தாக்கினுர்கள், விவாதத்தின் மூலம் வின்ஸ்டனேத் தோற்கடிக்க முடியாத சோஷியலிச ஆதரவாளர்கள் கயமைத் தனத்தைக் கருவியாகக் கொண்டு அவரை எதிர்த் தனர். கூட்டங்களில் குழப்பம் விளேவித்தார்கள். வன்முறையில் இறங்கினுர்கள். வின்ஸ்டனுக்குப் போலீஸ் பாதுகாப்பு வழங்கப் பட்டது. திருமதி வின்ஸ்டன் கூட்டங்களில் பேசக்கூடாதென்று கேட்டுக் கொள்ளப்பட்டார். சோஷியலிஸ்டுகளின் பிரச்சாரப் போராட்டத்தில் அரசியல் பண்பு மறக்கப்பட்டது. ஆன்ட் வெர்ப்பும், காலிப்போலியும் மீண்டும் தலேதூக்கின. எட்டாண்டு களின் பின்னர் பழைய அவதூறுகளேக் கிளறி மக்களின் வெறியைத் தூண்டிவிட்டார்கள். இவற்றிற்கெல்லாம் வின்ஸ்டன் அஞ்சவில்லே. 'டார்டனலஸ் திட்டம் பல ஆயிரம் மக்களின் உயிரைக் காப்பாற்றியது. டார்டனலஸ் பிரச்சினேயைக் கண்டு

நான் அஞ்சியோடப்போவதில்லை. அதில் பெருமைப்படுகிறேன்'[1] என்று வின்ஸ்டன் சவால் விட்டார். சர் ஈயான் ஹாமில்டனும், ஆஸ்குவித்தும்கூட வின்ஸ்டனை ஆதரித்துச் செய்தி அனுப்பினார்கள். இறுதியாக அவர் நாலாயிரம் வாக்குகள் வித்தியாசத்தில் தோற்கடிக்கப்பட்டார். எனினும், பால்ட்வினும், கன்சர்வேடிவ்களும் பிரம்மாண்டமான வெற்றி பெற்றுவிடவில்லை. கன்சர்வேடிவ்களின் பலம் 347 இடங்களிலிருந்து 255 இடங்களாகக் குறைந்தது. தேர்தலின் விளைவாகத் தடையில்லா வாணிகக் கொள்கை காப்பாற்றப்பட்டது. ஆனால், நாட்டை ஆளவேண்டியவர்கள் கன்சர்வேடிவ்களா, சோஷியலிஸ்டுகளா அல்லது லிபரல்களா என்பதை முடிவு செய்யும் பொறுப்பு வாக்காளர்கள் கையில் இல்லை. இருகட்சிகள் ஒன்றாக இணைந்து மூன்றாவது கட்சியை மேற்கொண்டுவிட முடியும். ஆஸ்குவித்தும், லிபரல்களும் எண்ணிக்கையைப் பொருத்தவரையிலும் பலங்குறைந்த கட்சியாக இருந்தாலும். அவர்கள் சக்தி சமநிலையைக் கட்டுப்படுத்த முடிந்தது: எனவே லிபரல்களும், தொழிற் கட்சியினரும் இணைந்த ஒரு கூட்டு அரசு நிறுவப்பட்டது.

*சோஷியலிச எதிரி*

ஆஸ்குவித்தின் முடிவைத் தொடர்ந்து சர்ச்சில் லிபரல்களின் உறவிலிருந்து தம்மை விடுவித்துக்கொண்டார். ஒருபுறம் அவர் சோஷியலிசத்தையும் புரட்சியையும், மறுபுறம் சோஷியலிசத்திற்கு எதிரான சக்திகள்தாம் நாட்டைக் காப்பாற்ற முடியுமென்பதையும் அவர் கண்டார். இப்பொழுது லிபரல்கள் புரட்சி சக்திகளுடன் இணைந்து நிற்பதை அவர் சகித்துக்கொள்ள முடியவில்லை. எனவே, இதனைச் சர்ச்சில் வன்மையாக எதிர்த்தார். சோஷியலிச அரசினைக் கொலுவேற்றுவது நாட்டிற்கே அவகேடு என்றும், அதனால் நாட்டின் முன்னேற்றம் தடைப்பட்டு, நாட்டில் குழப்பமும், அமைதியின்மையுமே மிகுந்துவிடும் என்றும் சர்ச்சில் எச்சரித்தார். 'பெரும்பான்மையான மக்களிடமிருந்துதான் அதிகாரம் பிறக்கின்றது என்ற உண்மையைக் கண்டுணர முடியாத சோஷியலிஸ்டுகளிடம் பிரிட்டனுகிய பெரும் நாட்டை ஆண்டு நிருவகிக்கின்ற பொறுப்பு ஒப்படைக்கப்பட்டுள்ளது. இது தொழிற்கட்சிக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் வாய்ப்பு அன்று. நாட்டின் பிளவுகளையும், குழப்பங்களையும், பூசல்களையும் விளைவிக்கக்கூடிய சிறுபான்மை சோஷியலிசக் கட்சியின் வாய்ப்புதான் என்பதில் ஐயமில்லை' என்று வின்ஸ்டன் துணிந்து எழுதினார்.

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 212.

சோஷியலிஸ்டுகளுடன் உறவுகொண்டிருந்த லிபரல்களை ஆதரிக்கக் கூடாதென முடிவு செய்த வின்ஸ்டன், சோஷியலிசத்தை எதிர்த்து முறியடிக்கக் கன்சர்வேடிவ்களுடன் ஒத்துழைப்பதுதான் சிறந்ததென உணர்ந்தார். கானகத்தின் ஏகாந்த வாழ்வு முனிவர்களுக்குப் பயன்தருவது போன்று, அரசியல் கானத்தின் தனிமை, அரசியல்வாதிகளுக்குத் தடையின்றிச் சிந்திப்பதற்கு அரியதோர் வாய்ப்பளிக்கும். சர்ச்சிலைப் பொறுத்தவரை இது உண்மையாயிற்று. கட்சிப் பற்று எதுவும் இல்லாதிருந்த இக்காலத்தில் தான் அவர் மீண்டும் கன்சர்வேடிவ்களை நாடுவதென்று முடிவு செய்தார். ஃபிரஞ்சுப் புரட்சி எட்மண்ட் பர்க்கின் (Edmund Burke) கட்சிச் சார்புகளை மாற்றக்கூடுமானல், ருஷ்யப் புரட்சி ஏன் தமது கட்சிச் சார்புகளை மாற்றக் கூடாதென்பது வின்ஸ்டனின் வாதம். இதனை வாக்காளர்களின் முன்னிலையில் வைக்க வின்ஸ்டன் வாய்ப்புத் தேடிக்கொண்டிருந்தார். 1924ஆம் ஆண்டின் பொதுத்தேர்தல் சிறந்த வாய்ப்பாக அமைந்தது.

வெஸ்ட்மினிஸ்டர் தொகுதியில் அபே (Abbey)ப் பகுதிக்கு வின்ஸ்டனை கன்சர்வேடிவ் கட்சி வேட்பாளராக நிறுத்த பால்ட்வின் விரும்பினுர். ஆனுல். வட்டாரக் கட்சித் தலைவர்கள் கேப்டன் ஓ. டபுள்யூ. நிக்கல்ஸன் (O. W. Nicholson) என்பவரைத் தேர்ந்தெடுத்தார்கள். அதிகாரபூர்வமான கட்சி வேட்பாளரை எதிர்த்துப் போராடுகின்ற சங்கடமான நிலையில் வின்ஸ்டன் இருந்தார். ஆனுல், சில கன்சர்வேடிவ் தலைவர்களின் வற்புறுத்துதலின்பேரில் அவர் சுயேச்சையாகப் போட்டியிட முடிவு செய்தார். உடனே எதிரிகள் வின்ஸ்டன் லிபரல்களையும். கன்சர்வேடிவ்களையும் உதறிவிட்டதாக வசைபாடத் தொடங்கினுர்கள். 'கொள்கையற்றவர்'. 'கட்சி மாறுகிறவர்' என்ற குற்றச்சாட்டுகள் அவர்மீது சுமத்தப்பட்டன. தேர்தல் வெற்றியைத் தொடர்ந்து அவர் பதவி உயர்வு பெற்றுல், அரசியல் ஆதாயத்திற்காகக் கொள்கைகளைப் பலியிடுகிறவர் என்று தாக்கப்பட்டார். ஆனுல், வின்ஸ்டனின் தேர்தல் பிரச்சார உரைகளில் தாம் கன்சர்வேடிவ் கட்சியையோ, அதன் தலைவர்களையோ எதிர்க்கவில்லை என்று தெளிவுபடுத்தினுர். ஆனுல், அவரது கருத்துப்படி கன்சர்வேடிவ் கட்சிதான் சோஷியலிச சக்திகளை எதிர்த்துப் போராடக்கூடிய வன்மையான போர்க்கருவியாகும். 'நாட்டின் பொதுவாழ்வில் அபே (Abbey) தொகுதி பெரும்பங்கு ஏற்கவேண்டியதிருப்பதால், அத்தொகுதி குடும்பச் சொத்தாகக் கருதப்பட்டு, வீட்டின் தளவாடப் பொருளைப் போன்று தந்தை

யிடமிருந்து மகனுக்கோ, மாமனிடமிருந்து மருமகனுக்கோ மாற்றப்படக்கூடாது' என்று வின்ஸ்டன் குறிப்பிட்டார். அவரை எதிர்த்து நின்றவர் முன்னுள் உறுப்பினரான பிரிகேடியர் ஜெனரல் நிக்கல்சன் (Brigadier-General Nicholson) என்பவரின் மருமகன் என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

இதுவரை வின்ஸ்டன் போட்டியிட்டுள்ள எல்லாத் தேர்தல் களையும்விட அபே தொகுதித் தேர்தலில்தான் அவர் அதிக மகிழ்ச்சியுடன் கலந்துகொண்டார். அவர் மக்கள் முன் வைத்த முக்கிய பிரச்சினை சோஷியலிசம் வேண்டுமா? வேண்டாமா? என்பதுதான். மையக் கட்சி இன்னும் உருவாகவில்லை என்றாலும், அவர் அதன் மொத்த உருவமாகக் காட்சியளித்தார். பழைய சர்ச்சில் புதிய உயிர் பெற்றவராகத் தோன்றினர், ஆனல், அவருக்காக உழைக்கத் தனிக்கட்சி அமைப்பு இல்லாததாலும், போதிய கால அவகாசம் இல்லாத காரணத்தாலும் நாற்பத் தேழு வாக்குகளில் கன்சர்வேடிவ் கட்சி வேட்பாளரிடம் தோற்றார். வின்ஸ்டனின் தோல்வியைப்பற்றி யாவரும் வருந்தி னார்கள். இதனை 'டெய்லி டெலிகிராஃப்' பத்திரிகையும் எதி ரொலித்தது. சர்ச்சில் தோல்வி கண்டாலும், அரசியல் அவரை விடவில்லை; அவருக்கு நல்லகாலம் இருந்தது. சோஷியலிச எதிர்ப்புச் சக்திகளை ஒன்று திரட்ட வேண்டுமென்ற அவரது உலைவில்லாத முயற்சி பயனளித்தது. ஆண்டு முடிவதற்குள் பாராளுமன்றம் கலைக்கப்படவே மீண்டும் பொதுத்தேர்தல் அறிவிக்கப்பட்டது. ஈராண்டுகளுக்குள் நடைபெறும் மூன்றாவது தேர்தல் இது. இந்தத் தடவை அவர் நாட்டுப்புறத்துத் தொகுதி யான மேற்கு எசெக்ஸ் (West Essex) தொகுதியைத் தெரிந்து கொண்டார். கன்சர்வேடிவ்களே அவரைச் சோஷியலிசத்தினை எதிர்க்கும் வேட்பாளராக நிறுத்தினார்கள்.

1924ஆம் ஆண்டில் மிகப் புகழ்பெற்ற இந்தப் பொதுத் தேர்தல் மக்டானல்டு அமைச்சரவைக்கு லிபரல்கள் ஆதரவு கொடுக்காததால் நிகழவேண்டியதாயிற்று. சோஷியலிஸ்டுகளின் உறவு லிபரல்களுக்குச் சலிப்பை உண்டாக்கியது. ருஷ்யாவுடன் செய்யப்படவேண்டியிருந்த வாணிக ஒப்பந்தத்தின் காரணமாக லிபரல்கள் தமது ஆதரவை வாபஸ் பெறுவதாக அறிவித் தார்கள். வின்ஸ்டன் கூறியது உண்மையாகவே நடைபெற்றுக் கொண்டிருந்தது. தொழிற் கட்சியின் அதிகாரங்கள் யாவற் றையும் தாங்களே கைப்பற்ற வேண்டுமென்று விரும்பினார்கள்; பிரிட்டிஷ் பொதுவுடமைக் கட்சியினர் இங்கிலாந்தில் புரட் சியைத் தூண்டுமாறு கோரிக்கை விடுத்தனர். சர்வதேச

போல்ஷிவிக் இயக்கத்தின் தலைவரான சினேவீவ் (Zinoviev) எழுதியதாகக் கருதப்பட்ட கடிதம் ஒன்றை மக்டனல்டின் கீழிருந்த வெளி விவகாரச் செயலகம். அறிக்கையாக வெளியிட்டிருந்தது. இது உண்மைக் கடிதமோ, பொய்க் கடிதமோ இதன் விளைவுகள் முக்கியமானவை.

வின்ஸ்டனின் தேர்தல் பிரச்சார வேகத்தை இங்கே குறிப்பிடத் தேவையில்லை. 'வின்ஸ்டன் இன்றைய இங்கிலாந்தின் தலைசிறந்த காமன்ஸ் அவை உறுப்பினர்'[1] என்று பெர்க்கன் ஹெட் பிரபு போற்றினர். 'நீர் பெறப்போகும் வெற்றி பிரிட்டிஷ் பொதுமக்கள் எண்ணத்தை உருவாக்கும் இயக்கத்தில் முக்கியமானதொரு கட்டமாகும். லிபரல், கன்சர்வேடிவ் பூசல்கள் யாவும் மறதி என்ற படுகுழியில் புதைக்கப்படும்'[2] என்று ஆஸ்டென் சேம்பர்லேன் வாழ்த்துச் செய்தி அனுப்பினர். இத்தேர்தலில் சர்ச்சில் ஆறுயிரம் வாக்குகளில் பெரும் வெற்றி பெற்றுர், அவரை எதிர்த்த லிபரல் கட்சி, சோஷியலிச வேட்பாளர்கள் தோற்றனர். கன்சர்வேடிவ்கள் மற்றெல்லாக் கட்சிகளையும்விட 211 இடங்களை அதிகமாகப் பெற்றனர். லிபரல்கள் நாற்பத்தோரு இடங்களைப் பெற்று வலிமை குறைந்த கட்சியாகி விட்டனர். ஆஸ்குவித் சோஷியலிச வேட்பாளரிடம் தோற்றுர்.

ஸ்டான்லி பால்ட்வின் தமது இரண்டாவது அமைச்சரவையை அறிவித்தபோது அதில் வின்ஸ்டனும் இடம் பெற்றுர். சர் வில்லியம் ஜாய்சன் ஹிக்ஸ் உள்நாட்டு அமைச்சராகவும். நெவில் சேம்பர்லேன் சுகாதார அமைச்சராகவும், ஆஸ்டென் சேம்பர்லேன் வெளி விவகார அமைச்சராகவும், பெர்க்கன் ஹெட் பிரபு இந்திய அமைச்சராகவும், வின்ஸ்டன் சர்ச்சில் நிதி அமைச்சராகவும் பொறுப்பேற்றனர். வின்ஸ்டனின் பதவி உயர்வு யாவரையும் வியப்பில் ஆழ்த்தியது. அவர் ஆற்றல் குறைந்தவர் என்பதன்று. ஆனல், கன்சர்வேடிவ் கட்சியினர் யாவருக்கும் அவர் உடன்பாடு கொள்ளாதவர் என்பதால், பிரதமர் வின்ஸ்டன் நிதி அமைச்சராக்கியதைப் பலர் ஒரு துணிவான முடிவு என்று கருதினர்கள்.

சர்ச்சில் வீடு திரும்பிய அரசியல் ஊதாரியாக சித்தரிக்கப் பட்டார். ஆனல், அவர் மீண்டும் அரசியலில் புகுந்தது, மகத்தான ஒரு சாதனையாகும். மீண்டும் அவர் டோரிகளுடன் இணைந்து, மிகக் கண்ணியத்துடன் வரவேற்கப்பட்டார் என்பதற்கு அவரது பதவி உயர்வு தக்க சான்றும். பொதுவாக நிதி

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 215.
[2] Ibid, p. 217.

அமைச்சரே பிரதமரின் வருங்கால வாரிசு என்று கொள்ளப் படுபவர். போனர்லா மட்டும் உயிருடனிருந்திருந்தால், வின்ஸ் டன் நிதி அமைச்சர் பதவியைப் பெற்றிருக்கவே முடியாது. போனர்லாவின் தலைமையின்கீழ் கன்சர்வேடிவ் கட்சியில் வின்ஸ்ட னுக்கு வளமான எதிர்காலம் இருந்திருக்க முடியாது. ஆனல், வின்ஸ்டனின் தலையில் விதி எழுதிய எழுத்தை யாரால் மாற்ற முடியும். பால்ட்வின் நிதானமான சீர்திருத்த நோக்கமும், கவனமான முன்னேற்றப் போக்கும் கொண்டவர். தீவிர வாதத் திலும், புரட்சிகரமான சோதனைகளிலும் அவருக்கு நம்பிக்கை இல்லை. வின்ஸ்டன் அவருக்கு உறுதுணையாகச் செயல்படத் தொடங்கினர்.

# 12. நாட்டின் நிதி அமைச்சர்

1924ஆம் ஆண்டின் இறுதியில் மீண்டும் கன்சர்வேடிவ் கட்சி உறுப்பினரான சர்ச்சில் பால்ட்வினின் இரண்டாவது அமைச்சரவையில் நிதி அமைச்சரராக உலகத்தைச் சந்தித்தார். தம் தந்தையார் முப்பதாண்டுகளுக்கு முன்னர் அணிந்திருந்த பதவிக்குரிய உடைகளை அவர் அணிந்துகொண்ட போது தமது அரசியல் வாழ்வின் கொடு முடியினை அடைந்து விட்டதாக ஓர் எண்ணம் தோன்றியது. இந்தச் சீருடையைச் சர்ச்சிலின் அன்னையார் இத்தனைக் காலமாகப் பேணிக்காத்து வந்திருந்தார். இதுகாலை அவருக்கு ஐம்பதாண்டுகள் நிறைந்திருந்தன. அதற்குள் அவர் அமைச்சரவையில் பல பெரும் பொறுப்புகளை வகித்திருந்தார். அவர் அரசியல் வாழ்வின் உச்சநிலையான பிரதமர் பதவியை அடைவாரா? என்பது கேள்விக் குறியாக நின்றது. அதற்குள் அவர் கட்சித் தலைமையைப் பெற வேண்டுமே? கட்சிக்குள் இருந்த பூசல்களும், வின்ஸ்டனின் இயல்பும் அதுபற்றி ஐயப்பாடுகள் கொள்ளுமாறு தூண்டின.

கட்சிமாறி அரசியல் நாடோடியாக அலைந்தவர் மீண்டும் கட்சிக்குத் திரும்பிய செய்திதான் நாடெங்கும் பேச்சாக இருந்தது. இதுபற்றிப் பொதுமக்கள் அதிர்ச்சி கொண்டனர். கன்சர்வேடிவ் கட்சியினர் மலைத்து நின்றனர். கடந்த இருபதாண்டுகளாகச் சர்ச்சிலின் பெயரைக் கேட்டாலே சாபங்களை அள்ளி வீசிய கன்சர்வேடிவ்கள், சர்ச்சில் வெற்றி வீரராகத் திரும்பியது கண்டு வியப்புற்றனர். லிபரல் கொள்கைகளை அணைத்துக் கொள்வதற்காகத் தங்களை அன்று புறக்கணித்தவர், இன்று தமது தவற்றை உணர்ந்து வீடு திரும்பிய ஊதாரி மைந்தன் போல் மனமாற்றம் பெற்றிருப்பது அவர்களுக்கு மகிழ்ச்சியூட்டியது. ஆனால், நிதி அமைச்சர் பதவியைப் பரிசாகப் பெறும் பெருமைக்கு அவர் தகுதியுள்ளவரா என்று பலர் கருதினார்கள். பிரதமர் பால்ட்வின் செய்திருந்த துணிகரமான

முடிவுக்குப் பலர் நோக்கங்களைக் கற்பித்தனர். சர்ச்சிலையும் லாயிட் ஜார்ஜையும் பிரித்து விடுவதற்காகவே இந்தத் தூண்டில் இரை வழங்கப்பட்டிருப்பதாக ஒரு கருத்து நிலவியது. இன்று சர்ச்சில் நிதி அமைச்சர் பதவியை ஏற்றுக் கொண்டதானது, பழைய நண்பர்கள் இருவரையும் மீண்டும் ஒன்று சேரவிடாது தடுக்கும் என்பது இதில் மறைந்திருந்த சதித் திட்டமாகும்.

சர்ச்சிலுக்கும் பால்ட்வினுக்குமிடையில் அரிய பெரிய வேறு பாடுகள் இருந்தன. சர்ச்சில் செயல் வீரர். பால்ட்வின் சிந்தனையில் ஆழ்ந்துவிடும் இலட்சியவாதி. எனினும், இருவரும் இணைந்து செயல்பட்டனர். பொதுமக்கள் எண்ணத்தைப் பால்ட்வின் கூர்மையான முறையில் உய்த்துணர்ந்திருந்தார். உற்பத்தித் தொழிலில் ஈடுபாடுடைய குடும்பப் பின்னணியி லிருந்து வந்த காரணத்தால், அவர் தொழிலாளியின் உள்ளத்தை நன்கறிந்தவர். அவர் பதவி ஏற்றபோது இருபெரும் நோக்கங்களை அவர் கொண்டிருந்தார். ஒன்று லாயிட் ஜார்ஜின் கூட்டமைச் சரவை செய்திருந்த தவறுகளைத் திருத்தி, இங்கிலாந்தின் பொது வாழ்வின் பண்பினை மீட்பது. இரண்டாவதாக நாட்டின் பிரிவினைப் புண்களை ஆற்றி வகுப்புப் போரின் முன்னேற்றத்தைத் தடை செய்வது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலம் பெரும் மாறுதல்கள் நிகழ்ந்த கால கட்டம். சமுதாய அமைப்பிலே மாற்றங்கள் ஏற்பட்டன. பாராளுமன்ற சக்தியாக லிபரல்களின் செல்வாக்குக் குறைந்து வந்தது. அரசியல் அரங்கத்தில் தொழிற்கட்சி உதயமாகி இருந்தது. பாராளுமன்றங்களின் தாயும், எந்தச் சூழ்நிலைக்கும் சரிக்கட்டிப் போகக்கூடிய செவிலித் தாயுமான பிரிட்டிஷ் காமன்ஸ் அவை தொழிற்கட்சிப் பிரதிநிதி களையும் தன்னகத்தே அடக்கிக் கொண்டது. எனினும் பாராளு மன்றத்திற்கு வெளியேதொழிலாளர்களின் சக்தி நன்குணரப்பட்ட பெரும் சக்தியாக வளர்ந்திருந்தது. இதுதான் இன்றைய நிலையில் நாட்டு மக்களின் கவனத்தைக் கவர்ந்தது. இந்த அசுர சக்தியை ருஷ்யாவில் சார் மன்னரின் ஆட்சியைக் கவிழ்க்கப் புரட்சி வாதிகள் வெற்றிகரமாகப் பயன்படுத்தினார்கள். இங்கிலாந்தும் ருஷ்யா வழியில் செல்லுமா? பிரிட்டிஷ் பாராளுமன்றமும், தொழிலாளர்களின் வல்லாட்சியாக மாறுமா? என்ற வினா கிளம்பியது.

### புரட்சிப் பூகம்பம்

பிரதமரையும், நிதி அமைச்சரையும் இந்தக் கேள்வி உலுக் கியது. ஆனால், இதனை மதிப்பிடுவதில் அவர்களின் வழிகளும்,

முறைகளும் வேறுபட்டன. எங்கும் அமைதியின்மை கொந்தளித்துக் கொண்டிருந்தது. ருஷ்யப் புரட்சியின் விளைவாக எழுந்த எண்ணங்களும், கருத்துகளும் அகில ஐரோப்பாவிலும் பரவிக் கொண்டிருந்தன. மாறிவரும் காலத்தின் குறிகளைக் கண்டுணர்ந்த லாயிட் ஜார்ஜ் நாட்டில் நிலவிய வாழ்க்கை முறையையும், தொழில் நிலையையும் எதிர்த்து இங்கிலாந்தில் புரட்சி உணர்வு உருவாகி வருவதாக எச்சரித்தார். இந்தக் கருத்துடன் சர்ச்சில் உடன்பாடு கொண்டார். வகுப்புப் போராட்டத்தின் போர்க் குரல்களையும் தள்ளிவிட முடியாது. தொழிற் சங்கங்கள் நேரடி நடவடிக்கை என்ற பயங்கரமான போர்க் கருவியைப் பயன்படுத்துவதுபற்றிப் பேசத் தொடங்கி இருந்தன. பிற்போக்குக் கொள்கையுடைய டோரிகளோ தொழிலாளாகளுக்கு, அவர்களுக்கு உரிய இடத்தைக் காட்டிப் பணிய வைப்போம் என்று மார்பு தட்டிக் கொண்டிருந்தார்கள்.

இந்த நிலையில்தான் பால்ட்வின் நாட்டிற்கு நல்ல பணி புரிவதில் ஈடுபட்டார், நாட்டில் நிலவிய அமைதி யின்மையைச் சாந்தப்படுத்தும் தமது செல்வாக்கைச் செயல்படுத்தத் தொடங்கினார். தொழில் துறையில் நல்லெண்ணம் நிலவ உதவுமாறு காமன்ஸ் அவையில் அவர் ஆற்றிய உணர்ச்சிப் பெருக்கான உரையில் ‘இறைவா! எங்கள் காலத்தில் நாட்டிற்கு அமைதி அருள்வாய்!’ என்று மன்றாடினார். சர்ச்சில் பால்ட்வினின் உணர்ச்சிகளைப் பகிர்ந்து கொள்ளவில்லை. சாந்தப்படுத்தும் செல்வாக்குகளைப் பயன்படுத்தவும் அவர் விரும்பவில்லை. 1914ஆம் ஆண்டிற்கு முன்னர் சர்ச்சில் லாயிட் ஜார்ஜின் துணையுடன் தொழிலாளர்களுக்காகச் சமூகச் சீர்திருத்தங்களைக்கொண்டு வருவதில் ஈடுபட்டிருந்தார். ஆனால், இன்றோ தொழிலாளர்கள் மீது அவர் கொண்டிருந்த பரிவுணர்ச்சிகள் நலிந்து விட்டன. பால்ட்வினையும், லாயிட் ஜார்ஜையும் போல் சர்ச்சில் தொழிலாளர்களின் அன்றாட வாழ்க்கையில் பங்கு கொண்டவரல்லர். தொழிற்சங்கங்கள் நேரடி நடவடிக்கைகளைப்பற்றி பேசி வந்ததை அபாய அறிவிப்பாகப் பொதுமக்கள் கண்டதுபோலவே சர்ச்சிலும் கண்டார். ருஷ்யாவும், போல்ஷிவிக்குகளும் மனித குலத்திற்கு எதிராகக் கொடுங்கோன்மையும், இரத்தவெறி பிடித்த பாதகச் செயல்களையும் செய்து வருவதாக அவர் எண்ணினார். ருஷ்யாவைப் பின்பற்றி ஐரோப்பிய நாடுகளும் படுகுழியில் விழும் என்ற அச்சத்தில் வின்ஸ்டன், முசோலினியையும், (Mussolini) இத்தாலிய ஃபாஸிஸ்டுகளையும், ‘ருஷ்ய நஞ்சை அறுக்கும் மாற்று மருந்து’ என்று புகழ்ந்தார்.

நிதி அமைச்சர் சர்ச்சில் புரட்சிக்கு எதிரான நடவடிக்கை களுக்கு ஆதரவு வழங்கினர். சோஷியலிசத்தின் அபாயங்களைப் பற்றி அவர் கொண்டிருந்த அச்சம் சற்று மிகையானது. ஜனநாயகச் சார்பும், சீர்திருத்த உணர்வும் கொண்டு விளங்கிய சர்ச்சிலிடம் டோரிப் பண்பும், பயிற்சியும் வேரூன்றியிருந்தன. சர்ச்சிலைப் போன்று மக்களின் நினைவை விட்டு அகலாத நிதி அமைச்சர்கள் மிகச் சிலரே. வரவு-செலவுத் திட்டங்கள் பெரும் பாலும் குறிப்பிட்ட ஆண்டின் நடவடிக்கைகளையே பாதிக் கின்றன. ஆட்சியினரின் கொள்கைகளையும், சட்டங்களையும் போல் அவை நாட்டின் வரலாற்றுப் போக்கைப் பாதிப்பதில்லை. எனினும், வரவு-செலவுத் திட்ட வரலாற்றிலும் சில மர பொழுக்கங்களும், பாரம்பரியங்களும் இருக்கின்றன. வின்ஸ்டன் சர்ச்சில் நிதி அமைச்சராக உற்சாகத்துடன் பணியாற்றினர். அவரது நிதிபற்றிய திட்டங்களை ஜே. எம். கீன்ஸ் (J. M. Keynes) போன்ற பொருளாதார நிபுணர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. எனினும், 'பால்ட்வின் அமைச்சரவையில் இருந்த மண் குன்று களுக்கு மேலாக சர்ச்சில் எவரெஸ்டு போல் உயர்ந்து நின்ருர்'[1] என்று ஆக்ஸ்ஃபோர்டு பிரபு (Lord Oxford) குறிப்பிட்டது மிகை யன்று.

நிதி அமைச்சர் சர்ச்சில் தமது சொந்தத் துறையின் பொறுப்புகளை மட்டும் கவனிப்பதோடு நிறுத்திக் கொள்ளாமல், பிற துறைகளையும், நடப்பு அரசியல் பிரச்சினைகளையும், பன்னாட்டு உறவுகளையும் பற்றி நீண்ட, தர்க்கரீதியான குறிப்பு களை எழுதித் தமது அமைச்சரவை சகாக்களுக்கு வழங்குவது வழக்கம். அமைச்சரவை கூட்டுப் பொறுப்புடையதென்ருல், பொதுவான பிரச்சினைகளைப்பற்றி, அமைச்சரவை உறுப்பினர்கள் விரிவான, அறிவார்ந்த விளக்கங்களை எழுதுவதில் தவறில்லை. தவிரவும், எல்லாத் துறைகள் பற்றிய நடைமுறை அனுபவத்தை யும் சர்ச்சில் பெற்றிருந்தார். இத்தகைய தலையீடுகளை ஆஸ்கு வித்தும், எட்வர்ட் கிரேயும் சகித்துக் கொண்டதுபோல், பால்ட்வினும், அவர்தம் சகாக்களும் செய்ய முடியவில்லை. 'வின்ஸ்டன் பங்கு பெறுகின்ற அமைச்சரவைக்குக் குறிப்பிட்ட பொருள்பற்றி விவாதிக்க வாய்ப்புக் கிடைப்பதில்லை; வின்ஸ் டனுக்குச் சம்பந்தப்படாத துறையைப்பற்றி அவர் கொண்டு வரும் பிரச்சினைகளைப்பற்றி ஆராய்வதற்கே நேரம் சரியாக இருக்கும்'[2] என்று பால்ட்வின் ஒருமுறை குறிப்பிட்டார்.

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 225.

[2] Ibid, p. 227.

பிறருடைய கருத்துகளைப்பற்றி அக்கறை கொள்ளாமல், தாம் எண்ணுவதே சரியென்று பிடிவாதம் செய்கின்ற ஒரு சகாவின் நடத்தையைவிட அதிருப்தி தருவது வேறொன்றுமில்லை.

எனினும், பால்ட்வின்-சர்ச்சில் உறவு நாற்பத்திரெண்டாண்டுகள் நீடித்தது, 1929ஆம் ஆண்டில் பால்ட்வின் பதவி துறந்தபோது மீண்டும் சர்ச்சிலை அமைச்சராக்கும் பொறுப்பு தமக்கு இல்லை என்பதற்காக அவர் மகிழ்ச்சி கொண்டாராம். நிதித்துறையில் ஏராளமான பிரச்சினைகள் வின்ஸ்டனை எதிர் நோக்கி இருந்தன. போர்க்காலக் கடன், மதிப்புக் குறைந்த நாணயம், பணவீக்கம், இன்னோரன்ன விளைவுகளால் நாட்டின் பொருளாதாரம் நலிவுற்றிருந்தது. செலவுகளைக் குறைத்த தோடு, வேறு பல நிதித் திட்டங்களையும் சர்ச்சில் மேற் கொண்டார், பயன்படுத்தப்படாமல் தேங்கிக் கிடந்த சாலை நிதியைப் (Road Fund) பயன்படுத்தினார். 1925ஆம் ஆண்டு ஏப்ரல் 28ஆம் நாள் வின்ஸ்டன் நாட்டு மக்கள் ஆவலுடன் எதிர் பார்த்திருந்த தமது முதல் வரவு-செலவுத் திட்ட உரையை ஆற்றினார். 'நாட்டின் நிதிநிலைக்குப் புத்துயிர் அளித்தே தீருவேன்' என்று சவால் விட்டு நாடகப் பாணியில் கண்ணாடிக் குவளையை உயர்த்தி நீர் அருந்தினார். அவையினர் கிளுகிளுத் தனர். இந்தச் சலசலப்புக்கு அஞ்சாத வின்ஸ்டன், உந்து வண்டிகள், கெடிகாரங்கள். இசைக் கருவிகள், திரைப்படங்கள், பட்டு ரேயான் துணிகள்மீது வரி விதித்திருப்பதாக அறிவித்த போது தொழில்கட்சி உறுப்பினர்கள் முணுமுணுத்தார்கள்.

### துணிகரத் திட்டங்கள்

நாட்டின் பொருளாதார நிலை சீர்ப்பட வேண்டுமெனில் பொன் நாணய முறையை (Gold Currency) மீட்பதைத் தவிர வேறு வழி இல்லை என்பது சர்ச்சிலின் கருத்து. முதல் போருக்கு முன் பிரிட்டனின் பவுன் நாணயம் 123 கிரெய்ன் எடையுள்ள 22 காரட்டுத் தங்கத்தினாலாகிய சவரனாகும். இலண்டன் நகரம் என்றும் உலக நிதிக்கு நிலைக்களனாக இருந்து வந்தது. போருக்கு முன்னிருந்த பொருளாதார முன்னேற்றத்தை மீண்டும் எட்டிப் பிடிக்க வேண்டுமென்றால் பொன் நாணயமாற்றுத் திட்டத் திற்குப் புத்துயிர் அளிப்பது அவசியமென்பதே சர்ச்சிலின் திட்டம். போர்க்காலத்தில் பொன் நாணயமுறை நிறுத்தி வைக்கப்பட்டிருந்ததால், மக்களிடம் கையிருப்பாக இருந்த பொன் நாணயங்கள் யாவும் காகித நாணயங்களாக மாறின. போரினால் ஏற்பட்ட மிதமிஞ்சிய செலவுகளைச் சரிக்கட்ட காகித நாணயங்கள் பெரும் அளவில் அச்சடிக்கப்பட்டதால் பணவீக்கம்

உண்டாயிற்று. விலைவாசிகளும், கூலிகளும் விஷம்போல் ஏறத் தொடங்கின. இதன் விளைவாக ஸ்டர்லிங் பவுன் நாணயத்தின் வாங்கும் சக்தி குறைந்தது. இந்தப் பணவீக்கம் பிற நாடுகளையும் பாதிக்கத் தொடங்கியது.

எனவே, பவுனின் மதிப்பைப் பத்து சதவீதம் உயர்த்தவேண்டியதாயிற்று. இதனைத் தொடர்ந்து பிரிட்டிஷ் உற்பத்திப் பொருள்களின் விலையையும், கூலிகளையும் குறைத்தார்கள். பண வீக்கத்தைத் தடுக்க மேலும் பல நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டன. பாங்குகளில் கடனும், முன் பணமும் கட்டுப்படுத்தப்பட்டன. புழக்கத்திலுள்ள நாணயங்களின் அளவு குறைக்கப்பட்டது. இவ்வாறு பிரிட்டிஷ் பவுனின் பன்னாட்டுப் பொன் நாணய மதிப்பை மீண்டும் நிறுவும் முயற்சிகள் நடந்து கொண்டிருந்தன. இவ்வாறு நிதித்துறையில் பழைய வைதீக முறையான கெடுபிடித்தன்மை நிலவியது. 'பொன்கன்றைப் பாதுகாப்பதற்கு இத்தனைத் தியாகங்களைச் செய்திருக்கவேண்டியதில்லை'[1] என்று பின்னர்தான் மக்கள் தெரிந்துகொண்டார்கள். இதனைத் தொடர்ந்து நிபுணர்கள் செய்த எச்சரிக்கைகளும், விளைவுகளும் மிக முக்கியமானவையாகும்.

பொன் நாணயத்திட்டத்தை மீண்டும் நிறுவும் யோசனையைப் பேராசிரியர் கீன்ஸ் எதிர்த்து வந்தார். அவர்தம் எதிர்ப்புகள் 'த ஈவினிங் ஸ்டாண்டர்டு' (The Evening Standard) என்ற நாளேட்டில் வரிசையாக வெளிவந்த கட்டுரைகளில் இடம் பெற்றிருந்தன. இவற்றைப் பின்னர் 'த எக்கனமிக் கான்செக்குவென்சஸ் ஆஃப் மிஸ்டர் சர்ச்சில்' (The Economic Consequences of Mr. Churchill) என்ற நூலாகத் தொகுத்தார்கள். பவுன் ஸ்டர்லிங்கின் மதிப்பைப் பத்துச் சதவீதம் வெளிநாடுகளில் உயர்த்தி, உள்நாட்டில் அதன் மதிப்பை உயர்த்தாத வரையில் உலகச் சந்தையில் பிரிட்டனின் உற்பத்திப் பொருள்கள் விலையில்லாமல் தேங்கிவிடும் என்று கீன்ஸ் எச்சரித்தார். பண வீக்கத்தைக் குறைப்பதால் விலைவாசிகள் குறையாது என்பதும், மாறாக வேலையில்லாத் திண்டாட்டமே விளையும் என்பதும் அவர் கருத்தாகும். பொருள்களின் உற்பத்திச் செலவைக் குறைக்க வேண்டுமென்றும், தொழில் மந்தத்தைத் தவிர்க்கவும், தொழில் அபிவிருத்தியை வளர்க்கவும் எளிதான கடன் கொள்கையே சிறந்ததென்றும் அவர் யோசனை கூறினார். எனினும், கீன்சின் அபாயக்குரல், பாலைவனக்குரலாகப் பயனற்றுப்போயிற்று.

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 229.

சர்ச்சில் தம் திட்டங்களைத் தீவிரமாகச் செயல்படுத்திக்கொண்டிருந்தார். ஆனால், கீன்சின் தீர்க்கதரிசனம் முதலில் நிலக்கரிச் சுரங்கத் தொழிலில் உண்மையாயிற்று. பொன் நாணயத் திட்டமீட்பினால் நிலக்கரி ஏற்றுமதி குறையத் தொடங்கியது. வேலையில்லாத் திண்டாட்டமும், முதலாளி தொழிலாளி மோதல்களும் பொது வேலை நிறுத்தத்திற்கு வழி வகுத்தன.

பொன் நாணயத் திட்டந்தான் முதல் உலகப் போருக்குப் பின்னர் நாட்டை எதிர்நோக்கிய மிகப்பெரிய பிரச்சினையாகும். ஏற்றுமதியில் ஈடுபட்டிருந்த பிரிட்டிஷ் வியாபாரிகள் உற்பத்திப் பொருள்களின் விலையைக் குறைக்க, தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்பட்டு வந்த கூலியைக் குறைத்தார்கள். உற்பத்திச் செலவில் எண்பது சதவீதம் கூலிக்காகச் சென்றது. எனவே, கூலியைக் குறைத்து வேலை நேரத்தை அதிகரித்தார்கள். உடனே, தொழிற் சங்கங்களும், தொழிற் கட்சியும் தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பளிக்க முன்வந்தன. பால்ட்வின் தொழிலாளர்களுக்குத் தற்காலிக உதவிக்கொடை அளிக்கப்படுமென்று உறுதி கூறினார். சாமுவெல் ஆணைக்குழுவும் (Samuel Commission) தொழிலாளர்களுக்குச் சாதகமான அறிக்கையைச் சமர்ப்பித்தது. ஆனால், தொழிலாளர்களோ விட்டுக்கொடுப்பதாக இல்லை. அவர்களின் தலைவர் ஏ. ஜே. கூக் (A. J. Cook) போராட்ட வெறியுடன் குமுறிக்கொண்டிருந்தார். 1926ஆம் ஆண்டில் தொழிலாளர் உதவிக்கொடையும் நிறுத்தப்பட்டது. கூலிக்குறைப்பை ஏற்றுக்கொள்ளுமாறு பால்ட்வின் உருக்கமான வேண்டுகோள் விடுத்தார். தொழிலாளர்கள் இன்னும் வைராக்கியமாக இருந்தனர். 'நாங்கள் வேலை நிறுத்தம் செய்தால், எங்கள் நண்பர்களாக ரயில்வே தொழிலாளர், போக்குவரத்துத் தொழிலாளர் ஆகிய அனைவரும் வேலை நிறுத்தம் செய்வார்கள்' என்று தொழிற் சங்கத்தினர் எச்சரித்தனர். அரசாங்கத்திற்கும், தொழிற் சங்கக் காங்கிரசுக்கும் இடையே தொடங்கியிருந்த பேச்சு வார்த்தைகள் முறிந்தன. வேலை நிறுத்தம்பற்றிய கட்டுரை ஒன்றை 'டெய்லி டெலிகிராப்' ஏடு வெளியிட மறுத்ததானது, எரிகிற நெருப்பில் எண்ணெய் வார்த்ததுபோல் இருந்தது. இது தீக்குச்சியைக் கிழித்துவைத்து வேலை நிறுத்தத்தைத் தூண்டிய பழி வின்ஸ்டன்மீது சுமத்தப்பட்டது. இது மிகைப்படுத்தப்பட்ட குற்றச்சாட்டு.

1926ஆம் ஆண்டு மே நான்காம் நாள் ஒரு ஞாயிறு. அன்றுதான் புரட்சி வெடித்தது. அதற்கு முன்னதாகவே வேலை நிறுத்த அறிக்கைகள் ஆங்காங்கே பறந்துகொண்டிருந்தன.

அரசினர் நெருக்கடி நிலையைச் சமாளிக்கத் தயாராக இருந்தனர். ஹைட் பார்க் (Hyde Park) படைகளின் பாசறையாகவும், பால் வழங்கு நிலையமாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டது. ஒயிட்ஹாலில் துருப்புகள் வந்திறங்கின. காவலர்களாகவும், ரயில் ஓட்டி களாகவும் பணிபுரிய அரசினர் தொண்டர் படையைத் திரட்டி ஞர்கள். உணவு வழங்க மோட்டார் வண்டிகள் தயாராயின. பொதுமக்களின் வெறுப்பைத் தேடிக்கொண்ட வேலை நிறுத்தம் தோல்வியுறுவது திண்ணம் என்பது உறுதியாயிற்று. தொழிற் சங்கங்களின் விடாக்கண்டர்களுக்குச் சரியான பாடம் கற்பிக்க வேண்டுமென்று அமைச்சர்கள் விரும்பினுர்கள், தொழிலாளர் களின் கோரிக்கைகள் நியாயமாக இருந்தாலும், தொழிற் சங்க காங்கிரஸ் பாராளுமன்றத்தைப் புறக்கணிப்பதைப் பொதுமக்கள் சகித்துக்கொள்ளவில்லை. சர்ச்சிலைப் பொறுத்தவரை என்ன நிகழ்ந்தாலும் சரி, விட்டுக்கொடுப்பதில்லை என்ற வீரவைராக் கியம் கொண்டிருந்தார்.

## அரசிதழின் தந்தை

இவ்வாறு அரசாங்கத்திற்குக் கணிசமான ஆதரவு திரண் டது. மக்களுக்கு உடனுக்குடன் செய்திகளைத் தந்து, நிலைமையை விளக்கி நிருவாகத்தைத் தடையில்லாமல் நடத்திக்கொண்டு போவதுதான் அரசினரின் முக்கிய பிரச்சினையாகும். வானொலி வசதிகள் அக்காலத்தில் பரவலாக இருக்கவில்லை. இந்தப் பிரச் சினைக்கு நல்லதொரு தீர்வுகாண வின்ஸ்டன் முனைந்தார். அமைச்சரவையில் பத்திரிகைத் தொழிலில் அனுபவமும், ஆற்றலும் கொண்டவர் சர்ச்சில். துணிவுகொண்ட சர்ச்சில் மூடிக்கிடந்த 'மார்னிங் போஸ்ட்' நிறுவனத்துடன் ஒப்பந்தம் செய்தார். அரசினர் சார்பில் 'த பிரிட்டிஷ் கெஜட்' (The British Gazette) என்ற அரசிதழை வெளியிட அவர் அமைச்ச ரவையின் அனுமதியையும் பெற்ருர். புதிய தொழிலில் அவர் ஆர்வத்துடன் ஈடுபட்டார். அச்சகத் தொழிலாளர்களும் பொது வேலை நிறுத்தத்தில் கலந்திருந்ததால், சர்ச்சிலுக்குப் போதிய ஆள்கள் கிடைக்கவில்லை. இந்நிலையில் பீவர் ப்ருக் பிரபு (Lord Beaver brook) அவருக்குத் துணையாக நின்ருர். பீவர் ப்ருக்கின் அச்சகம் மூடிக்கிடந்தபோதிலும் அவரது அச்சுக்கோக்கும் சிப்பந்திகளில் சிலர் உதவ முன்வந்தனர். இவர்கள் துணை யுடனும், சில மாணவர்களைக் கொண்டும் எப்படியும் இதழை நடத்திக் காட்ட வின்ஸ்டன் முடிவு செய்தார்.

'நாட்டில் வதந்திகள் பரவுவதைத் தடுக்காவிட்டால், சின்னுட்களில் அவை நச்சுப் பிரச்சாரமாகிப் பீதியையும். குழப்

பத்தையும் உண்டாக்கி, மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டி விடும். இதனை அறிவுடைய எந்த மனிதனும் அனுமதிக்க முடியாது' என்று வின்ஸ்டன் எழுதினார். எனவே. 'அரசினர் ஒலிபரப்புவதன் மூலம் மட்டுமின்றி ஓர் அரசிதழையும் வெளியிட முடிவு செய்திருக்கிறதென்றும், அதற்காக எவ்வளவு பணம் தேவையானாலும் செலவிடப்படும்' என்றும் அவர் கூறினார். பத்திரிகையின் சந்தாதார் தொகை படிப்படியாக அதிகரிக்கும் என்பதும் அவரது விருப்பம். பிரிட்டிஷ் அரசிதழின் நோக்கம் அரசினரின் கொள்கைகளையும், அறிவுரைகளையும், விளக்கங்களையும் நாட்டின் எல்லாப் பகுதிகளுக்கும் கொண்டு செல்வதாகும். அன்றாட நிகழ்ச்சிகள், வேலை நிறுத்தம் பற்றிய செய்திகள். அவற்றின் காரணங்கள், எதிர் நடவடிக்கைகள் ஆகிய யாவும் அதில் இடம் பெற்றன. சுருங்கக்கூறின் அரசிதழ் ஒருதலைபட்சமான பிரச்சார பீரங்கியாக விளங்கியது. தொழிற் சங்கக் காங்கிரஸ் நடத்திய 'பிரிட்டிஷ் வொர்க்கர்' (The British Worker) என்ற இதழும் தொழிலாளர்களின் சார்பாகப் பேசும் குரலொலியாக இருந்தது.

இதழாசிரியராக வின்ஸ்டன் நிர்வாகப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டு பெரும் வெற்றியடைந்தார். முதல் இதழே 700,000 பிரதிகள் விற்பனையாக வேண்டுமென்பது அவரது திட்டம். ஆனால், 230,000 பிரதிகளே விற்பனையாயின. ஒரு வாரத்திற்குள் 1,801,400 பிரதிகள் விற்றன. இவ்வாறு ஆயிரம் சதவீதம் விற்பனை அதிகரித்த பிரிட்டிஷ் இதழ் எதுவுமில்லை என்ற பெருமையை அது பெற்றது. பிரிட்டிஷ் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்களுக்கும், அதன் சுதந்திரத்தைப் பாராட்டியவர்களுக்கும் இது ஒருபாடமாக அமைந்தது. 'டைம்ஸ்' ஏட்டின் ஆசிரியரான ஜியோஃப்ரி டாசன் (Geoffrey Dawson) 'பிரிட்டிஷ் அரசிதழ்' நடத்தப்பட்ட முறையை எதிர்த்துப் பிரதமருக்குக் கடிதம் எழுதினார். அமைச்சரவையிடமும் முறையிட்டார். ஒன்றும் பயன்தரவில்லை. செய்திகளைத் திரித்துக் கூறுவதாக காமன்ஸ் அவையில் சர்ச்சிலைக் குற்றம்சாட்டினார்கள். சோஷியலிஸ்டுகளுடன் சேர்ந்து லாயிட் ஜார்ஜும் எதிர்ப்புக் குரல் எழுப்பினார். இதையெல்லாம் கண்டு சர்ச்சில் அஞ்சிவிடவில்லை. எப்படியும் வேலை நிறுத்தத்தை முறியடிப்பதும், அதற்காக எந்த வழியையும் பயன்படுத்துவதும் அவரது நோக்கமாகும். இதழுக்குத் தேவையான அச்சுத்தாள்களும் குறைவின்றிக் கிடைக்குமாறு சர்ச்சில் ஏற்பாடு செய்தார்.

இதற்குள் மே திங்கள் ஒன்பதாம் நாளில் பொது வேலை நிறுத்தம் முடிவுற்றது. வேலை நிறுதத்தின் காரணத்தைப்பற்றி

சர்ச்சைகள் செய்யலாம். ஆனால், இந்தப் பெரும் நெருக்கடி காலத்தில் நாட்டுமக்கள் நடந்துகொண்ட முறை பாராட்டிற் குரியது. வெறிகொண்ட கும்பல்கள் ஆங்காங்கே வன்முறைச் செயல்களில் ஈடுபட்டபோதிலும், ஒரு கொலைகூட நிகழவில்லை என்று பிரிட்டனில் இருந்த அமெரிக்கர்கள் வியப்புற்றனர். தமது இதழாசிரியர் பணியைப்பற்றிப் சர்ச்சில் பெரும் மனநிறைவு கொண்டார். அவ்வாறே பால்ட்வினும் மனம் மகிழ்ந்தார். 'நான் எனது வாழ்நாளில் செய்துள்ள மிகப்புத்திசாலித்தனமானசெயல், வின்ஸ்டனை, பிரிட்டிஷ் அரசிதழின் ஆசிரியராக்கியதுதான்'[1] என்று அவர் பாராட்டிக் கூறினார். தொழிற்சங்கத் தலைவர்கள் நேரடி நடவடிக்கையைப் பலப்பரீட்சை செய்து பார்த்தனர். அதன் விளைவு படுதோல்வி என்பதை இப்பொழுது உணர்ந் தார்கள். இதுமுதல் அவர்கள் பிரிட்டிஷ் அரசியல் முறைமைக்கு உட்பட்டுத்தங்களுக்கு உரிய இடத்தில் இருக்கும் அரியபாடத்தைக் கற்றுக் கொண்டனர். தொழிற் சங்கக் காங்கிரஸின் நிதிநிலைமை வன்மையாகப் பாதிக்கப்பட்டது. கடற்படைத் தொழிலாளர் ஐக்கியமும், நெருப்பணைக்கும் படையினர் ஐக்கியமும் பொது வேலை நிறுத்தத்தைச் சட்ட விரோதமானதென்று கண்டனம் செய்தனர். சுரங்கத் தொழிலாளர் பட்டினிக்கும் பசிக்கும் இரை யாயினர். இந்த வேலைநிறுத்தம் பிரிட்டனின் தொழில் தகராறு வரலாற்றில் நீண்ட, அழிவுக்குரிய நிகழ்ச்சியாகக் கருதப்பட்ட

சுரங்கங்கள் மூடப்பட்டிருந்த காலத்தில் நிலக்கரி ஏற்றுமதி குறைந்தது. வேலைநிறுத்தம் நிறுத்தப்பட்ட பின்னும் வெளி நாட்டுச் சந்தைகளில் பிரிட்டிஷ் நிலக்கரி ஏற்றுமதி வளர நீண்ட நாள் பிடித்தது. இவ்வாறு தொழில் பாதிக்கப்பட்டதால் நிதித் துறையில் சர்ச்சில் பல பிரச்சினைகளை எதிர் நோக்க வேண்டி யிருந்தது. பிரிட்டனின் வெளிநாட்டு வாணிகத்தை முன்னேற்று வதும், வேலையில்லாத் திண்டாட்டத்தைச் சமாளிப்பதும் அவற்றில் முக்கியமானவையாகும். 200,000 தொழிலாளர்கள் வேலையை இழந்தனர். பொன் நாணயத் திட்டத்தை மீண்டும் நிறுவியது, ஏற்றுமதிகளைப் பாதித்தது. மக்கள்மீது வரிப்பளுவை சுமத்த முடியாத நிலையும் உருவாகியது. சர்ச்சில் மேற்கொண்ட முயற்சிகள் சிறப்பானவை என்றாலும் அவை தற்காலிக. நட வடிக்கைகளாகவே இருந்தன. சர்ச்சிலின் தந்தையாரைப்போல அவரும் நிதி அமைச்சராக இருந்து சிதைந்த பொருளாதாரத்தை மீட்க முயன்றார். ஆனால், முதல் போரின் பின்னர் நாட்டின் நிதி

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 230.

நிலைமை பெரிதும் மாறியிருந்தது. 1925ஆம் ஆண்டில் மக்கள் 683,000,000 பவுன்கள் வரி செலுத்தினார்கள்.

### நிதி நிலை அறிக்கைகள்

1925ஆம் ஆண்டு ஏப்ரலில், சர்ச்சில் ஆற்றிய முதல் நிதி நிலை அறிக்கை உரையில் 10,000,000 பவுன் உபரித்தொகை வருமென மதிப்பிட்டார். அமைச்சரவைக்குழு வொன்று நாட்டின் செலவினங்களை ஆராயுமென்று வாக்குறுதி அளித்திருந் தார். இவையொன்றும் நடைபெறவில்லை. முதல் திட்டத்தில் பொன் நாணய முறை மீட்கப்படுவதாகவும். விதவைகள் ஓய் வூதியமும், மேல்வரி செலுத்துவோருக்குச் சிறு நிவாரணமும், வருமானவரியை 22½ சதவீதத்திலிருந்து 20 சத வீதமாகக் குறைத்தலும் ஆகியவை அறிவிக்கப்பட்டன. ஸ்னோடன் (Snowden) இந்த வரவுசெலவுத் திட்டத்தை 'செல்வர்களின் வரவுசெலவுத் திட்டம்' என்று குறிப்பிட்டார். இதனால் வருமான வரி குறைக்கப்பட்டாலும் அதில் பெரும்பகுதி மீண்டும் ஓய்வூதிய வரியாகத் திரும்பப் பெற்றுக்கொள்ளப்பட்டது. தொழில் பாதுகாப்புச் சட்டத்தின்படி பட்டுவரி விதிக்கப்பட்டது. சர்ச் சிலின் இரண்டாவது வரவுசெலவுத் திட்டம் சமர்ப்பிக்கப் பட்டபோது 9,000,000 பவுன் அதிகப்படியான வரி உயர்வு இருப்பது தெரிந்தது. செலவினங்கள் குறைவதற்கும் வழியிருப் பதாகத் தெரியவில்லை.

சர்ச்சிலின் இரண்டாவது நிதி நிலை அறிக்கை 1926ஆம் ஆண்டு ஏப்ரலில் கொண்டுவரப்பட்டது. பொது வேலை நிறுத் தத்தைத் தொடர்ந்து வந்த இத்திட்டத்தில் புதிய வரிகள் அறிவிக்கப்படவில்லை. சாலை நிதியிலிருந்து 7,000.000 பவுன் களைப் பொது வரிக்கு மாற்றியதும், குதிரைப் பந்தயத்தில் ஒவ்வொரு ஆட்டத்திற்கும் ஐந்து சதவீதம் வரி விதித்ததும் கடும் சர்ச்சைக்குள்ளாயின. குதிரைப் பந்தயக்காரர்கள் வேலை நிறுத்தம் செய்வதாக அச்சுறுத்தினார்கள். பொது மக்கள் அவர்களை ஆதரிக்கவில்லை. மூன்றாவது வரவுசெலவுத் திட்டம் 1927ஆம் ஆண்டு ஏப்ரலில் வெளிவந்தது. 'பொது வேலை நிறுத்தத்தால் பாழடைந்திருந்த நாட்டின் பொருளாதார நிலை செத்துப் பிழைத்திருக்கிறது; அழிந்துவிடவில்லை' என்று சர்ச்சில் அறிவித்தார். துண்டுவிழுந்த 35,000,000 பவுன் தொகை யைச் சரிக்கட்ட புதிய வரிகளை விதிக்காமல் பல தற்காலிக உத்திகளை அவர் கையாண்டார். மேலும் சாலை நிதியிலிருந்து 1,200,000 பவுன்கள் எடுத்துக் கொள்ளப்பட்டன. மது

வகைகள். மோட்டார் டயர்கள், புகையிலை போன்ற ஆடம்பரப் பொருள்களும் சர்ச்சில் இதனை ஈடு செய்வதில் துணைபுரிந்தன.

நான்காவது நிதி நிலை அறிக்கை 1928ஆம் ஆண்டு ஏப்ரலில் வெளிவந்தபோது நாட்டின் பொருளாதாரம் இக்கட்டான கட்டத்தைக் கடந்துவிட்டதாகச் சர்ச்சில் அறிவித்தார். பிரிட்டிஷ் மதுவகைகள். இயந்திர நெருப்புப்பற்றும் பொறிகள் ஆகியவைமீது மட்டும் சிறிய வரிகள் விதிக்கப்பட்டன நாட்டின் வரிவிதிப்பு விகிதமும் ஒழுங்குபடுத்தப்படும் என்றும் அறிவிக்கப் பட்டது, ரெயில்வேக்கள், துறைமுகங்கள், கால்வாய்கள் மூலம் சரக்குப் போக்குவரவு, உழவுக்குட்பட்ட நிலங்கள் ஆகியவை நிவாரணம் பெற்றன. உள்ளாட்சி நிறுவனங்கள் மான்யங்கள் பெற்றன. இந்தச் சமயத்தில் சர்ச்சில் ஆற்றிய மூன்றரை மணி நேர உரையை ஸ்னேடனும், லாயிட் ஜார்ஜும் பாராளுமன்ற வெற்றியெனப் பாராட்டினார்கள். 1929ஆம் ஆண்டு ஏப்ரலில் நிறைவேற்றப்பட்ட ஐந்தாவது வரவுசெலவுத் திட்டம் பொதுத் தேர்தலுக்கு முன் வெளிவந்தது. குதிரைப் பந்தய வரி ரத்து செய்யப்பட்டது. தேயிலைமீது வரி குறைக்கப்பட்டது. குதிரைப் பந்தயக்காரருக்குப் பத்துப் பவுன் லைசன்ஸ் வரி விதிக்கப்பட்டது. ஆனால், சோஷியலிஸ்டுகள் பதவிக்கு வந்தபோது இந்த வரி செலுத்தப்படவில்லை.

சர்ச்சில் மேற்கொண்ட பல நடவடிக்கைகளின் காரணமாக மக்களிடையே சேமிப்புப் பழக்கம் பெருகியது. காப்புறுதியுள்ள தொழில்களில் வேலை பெறுவோர் தொகை அதிகரித்தது. வாழ்க்கைச் செலவு விகிதம் குறைந்தது. குடிப்பழக்கம் குறைந்து தொழிலாளர்களிடையே மோட்டார் சைக்கிள் வசதி, மகிழ் வுலாக்கள், பொதுக்கேளிக்கைகள் ஆகியவை பெருகின. தேனீர், சர்க்கரை அருந்துவது எக்காலமும் இல்லாத அளவிற்கு உயர்ந் தது. வாணிகக் கொடுப்பல் நிலை (Balance of Trade) வெளிநாட்டு முதலீடு, உள்நாட்டு முதலீடு, வங்கிகளில் சேமிப்பு முதலியனவும் முன்னேற்றம் கண்டன. போர்க்கடன் பற்றிய விவாதத்தில் மட்டும் சர்ச்சிலும், சோஷியலிஸ்டு உறுப்பினரான ஸ்னேடனும் மோதிக் கொண்டனர். ஸ்னேடன் (Snowdon) இப்பிரச்சினையில் பால்ஃபோரின் ஒப்பந்தத்தை ஒப்புக்கொள்ள மறுத்தார். அந்த ஒப்பந்தப்படி பிரிட்டன் அமெரிக்காவிற்குக் கொடுக்கவேண்டி யிருந்த ஈட்டுத்தொகைக்குச் சரியான தொகையை மட்டுமே, கடனைத் திருப்பித் தரவேண்டியிருந்த பிற நாடுகளிடமிருந்து பிரிட்டன் பெற்றுக்கொள்ளவேண்டும். சோஷியலிஸ்டுகள் இத் திட்டத்திற்கு என்றும் ஆதரவு வழங்கியதில்லை யென்றும், காலம்

வரும்போது இந்த ஒப்பந்தத்தின் நிபந்தனை ரத்து செய்வதாகவும், ஸ்னோடன் காமன்ஸ் அவையில் அறிவித்தார். சர்ச்சில் ஸ்னோடனின் முடிவை எதிர்த்துச் சவால் விடுத்தார். பால் ஃபோரின் ஒப்பந்தம் ஃபிரான்ஸ் இத்தாலி நாடுகளுடன் பிரிட்டன் செய்துள்ள உடன்பாடுகளுடன் தொடர்புடையது என்று சர்ச்சில் விளக்கினார். அடுத்தநாள் இந்த விவகாரம் அமைச்சரவையின் முன்னர்க் கொண்டு வரப்பட்டது. ஸ்னோடனின் மிரட்டல், நாட்டிற்கே பாதகமானது என்றும், கட்சிச் சார்பில் ராம்சே மக்டனால்டு கொள்கை விளக்கம் தரவேண்டுமென்றும் கூறப்பட்டது. மக்டனால்டு நேரிடையான பதில் கூறுமல் மழுப்பினார். சர்ச்சில் தெளிவான விளக்கம் வேண்டுமென வற்புறுத்தியும், மக்டனால்டு வாய்திறக்கவில்லை. 'தொழிற்கட்சித் தலைவரும். முன்னாள் பிரதமருமான மக்டனால்டு தெளிவான எளிய கேள்விகளுக்குக்கூடப் பதில் கூற முடியாமல் இருப்பதை நாட்டுமக்களின் கவனத்திற்குக் கொண்டுவருகிறேன்' என்று, வெற்றிச்செருக்குடன் வின்ஸ்டன் குறிப்பிட்டார். ஸ்னோடனின் ஆத்திரப் புத்தியால் பெரிய அரசியல் விளைவுகள் எதுவும் ஏற்படவில்லை.

நிதி அமைச்சராக இருந்த காலத்தில் சர்ச்சில் சிறந்த பேச்சாளராகத் திகழ்ந்தார். நிதிப் பிரச்சினைகள் அவர்தம் பொறுப்புகளையும், அதிகாரத்தையும் அதிகரித்தன. அவரது முதல் வரவு செலவுத் திட்ட உரையைக் கேட்ட முன்னாள் டோரி நிதியமைச்சரான சர் ராபர்ட் ஹார்ன் (Sir Robert Horne) எண்களையும் இலக்கங்களையும்கூட அழகுற அமைத்து அலுப்புத்தட்டாத வகையில் வரவுசெலவுத் திட்டத்தைச் சமர்ப்பிக்கும் சர்ச்சிலின் ஆற்றலைப் புகழ்ந்தார். சர்ச்சிலின் அறிவுக்கூர்மை வரவுசெலவுத் திட்ட உரைகளில் மிளிர்ந்தது. அவரும் ஸ்னோடனும் அடிக்கடி மோதிக்கொண்டது விவாதங்களுக்கு உயிரூட்டியது. ஒருமுறை ஸ்னோடன் 'நான் சர்ச்சிலின் வரவுசெலவுத் திட்டத்தை அன்று செல்வர்களின் திட்டம் என்றேன். ஆனால், இன்றோ அதனை நெறிதவறியவன், திவாலாகியவனின் திட்டம் என்கிறேன்'[1] என்று குறிப்பிட்டார். இதனைக் கேட்ட சர்ச்சில் 'மதிப்பிற்குரிய நண்பரின் சொற்கள் பாராளுமன்ற வசைமாரி' என்று பதில் கூறினார். இவர்கள் இருவருக்குமிடையே நடக்கும் விவாதங்கள் 'சிறந்த பாராளுமன்ற கேளிக்கைகள். இலண்டன் நகரத்தின் சிறந்த காட்சியாக அவை கருதப்பட்டன' என்று ஸ்னோடன் தமது சுயசரிதையில் குறிப்பிட்டுள்ளார். இந்நாட்களில் சர்ச்சில் சிறந்த பாராளுமன்ற விவாதத் திறமைபெற்று விளங்கினார்.

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 231.

'தொடக்க காலத்தில் செய்ததுபோல் கவனமாகத் தயாரிக்கப் பட்ட உரைகளை நம்பாமல் பெரும்பாலும் இருந்தவாறே எழுந்து பேசும் இயற்கையான முயற்சிகளில் ஈடுபட்டார். அவரிடம் விளங்கிய அருமையான பண்புகள் பிற உறுப்பினர்களைக் கவர்ந்தன. அவர்தம் செயல்களில் கவர்ச்சியும் கண்ணியமும் இருந்தன. அவர் எதற்கும் அஞ்சாத போர்வீரனைப் போன்று வரவுசெலவுத் திட்ட உரைகளையும் கலக்கமின்றிச் சமர்ப்பித்தார்' என்று, ஸ்னேடனே சான்று பகர்கின்றார்.

தந்தையாரைப் போலவே நிதி அமைச்சராகப் பணியாற்றியதில் சர்ச்சில் மனநிறைவு கொண்டாலும், அவரது ஐந்தாண்டு நிதி அமைச்சர் பதவி அதிக வெற்றியோடு அமைய வில்லை என்பது உண்மை. அவரது பலக்குறைவான அம்சங்களில் நிதி முதன்மையானது. பொருளாதார நிபுணருக்குரிய பண்புகள் அவரிடம் விளங்கவில்லை. இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் துணிச்சலான முன்னேக்குள்ள நிதித் திட்டங்கள் தேவைப்பட்டன. நிதித்துறையில் போதிய பயிற்சியும், புலமை யும் பெறாத சர்ச்சில் நிபுணர்களின் துணையை நாடவேண்டி யிருந்தது. நிதித்துறையில் பழமையான வைதீகக் கெடுபிடிக் கொள்கையைப் பின்பற்றியதால், 1931ஆம் ஆண்டில் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடி படிப்படியாக உருவாயிற்று. நிதித் துறையின் சிரமமான பொறுப்புகளின் நடுவேயும் சர்ச்சில் பிற பொறுப்புகளையும் மேற்கொண்டார். பிரிட்டிஷ் அரசிதழை வெற்றிகரமாக நடத்திக் காட்டியது சிறப்புமிக்க பணியாகும். இக்கால கட்டத்தில்தான் அவரது 'த வொர்ல்ட் கிரைசிஸ்' (The World Crisis) என்ற நூலின் இரு பகுதிகள் வெளிவந்தன. விடுமுறைக்காக எகிப்திற்குச் சென்று ஒட்டகத்தின் மீதமர்ந்து பிரமிட் கோபுரங்களை ஓவியமாக எழுதினார் வின்ஸ்டன். இத்தாலிய சர்வாதிகாரி முசோலினியைச் சந்தித்து உரை யாடினார். எத்தகைய பொறுப்புகளுக்கும் முடிவு உண்டு. சர்ச்சிலின் நிதித்துறைப் பணிக்கும் முடிவு வந்தது. 1929ஆம் ஆண்டின் பொதுத்தேர்தலில் தொழிற் கட்சியினர் வெற்றி பெற்றனர். சர்ச்சில் பதவியை இழந்தார்.

# 13. கட்சிக்குள் கருத்து வேறுபாடு

நிதி அமைச்சராகப் பணிபுரிந்த காலத்தில் வின்ஸ்டன் அரசியல் பந்தயத்தில் பின்தங்கி விட்டார். தமது தலைவரின் ஆதரவையும், கட்சியையும் இழந்தார். இறக்குமதிகளின்மீது வரி விதிக்க வேண்டுமென்று கோரிய டோரிகள் வின்ஸ்டனின் நிதித் திட்டங்களைத் தடைகளாகக் கண்டனர். பவுன், ஸ்டர் லிங்கின் மதிப்பை உயர்த்தியதால் பிரிட்டிஷ் ஏற்றுமதிகள் குறைந்ததோடு, வெளிநாட்டு உற்பத்தியாளர்கள் பயன்பெற் றூர்கள். பிரிட்டிஷ் கைவினைஞர்கள் வேலையில்லாமல் திண்டாடி ஞர்கள். காப்பியல் கொள்கையினர் தடையில்லா வாணிக வீரராகிய சர்ச்சிலின் தடை செய்யும் கரங்களைக் கண்டு வெந்து வெடித்தனர். சர்ச்சிலின் ஐந்தாண்டுக் கால அனுபவம் பால்ட் வினுக்கும் உற்சாகமளிக்கவில்லை. பிற துறைகளில் சர்ச்சிலின் தலையீடு அமைச்சரவைக் கூட்டங்களைக்கூட முறையாக நடத்து வதைத் தடை செய்தது. நிதி அமைச்சரைப் பொதுவாகப் பிரதமரின் வலக்கரமாகவும், வாரிசாகவும் கருதுவது வழக்கம். 1929ல் டோரிகள் பதவி விலகியபோது சர்ச்சில் அவ்வாறு கருதப் படவில்லை. பால்ட்வின் மீண்டும் அமைச்சரவையை அமைத்தால் வின்ஸ்டனுக்கு அதில் இடமிருக்காது என்று நம்பப்பட்டது. இந்த நிலை உருவாகுமென்பதை எதிர்பார்த்த சர்ச்சில் தாமாகவே விலகிக்கொண்டார். சோஷியலிஸ்டுகளின் அரசு தொடர்ந்து நடந்துகொண்டிருக்க, பால்ட்வின் - சர்ச்சில் உறவு முறிந்தது. இது முதல் பத்தாண்டுகள் வரை சர்ச்சில் பதவியில்லாமல் இருந்தார்.

காலமோ குழம்பிக் கிடந்தது. அதனைச் சீர்ப்படுத்த சர்ச்சி லுக்கு வாய்ப்புக்கிடைக்குமா வென்பதும் ஐயத்திற்குரியதாக இருந்தது. இருபதாம் நூற்றூண்டின் பிற்பகுதி வின்ஸ்டனின் குணவியல்புகளுக்கு இயைபுடையதன்று என்பது தெளிவாக

விளங்கியது. ஜோசஃப் சேம்பர்லேன், ஆஸ்குவித், லாயிட் ஜார்ஜ் ஆகியோருடன் சர்ச்சில் பணிபுரிந்த காலே இங்கிலாந்தின் கொள்கைகளும், மக்களின் நம்பிக்கைகளும் தெளிவு பெற்றிருந்தன. ஆனல்; இன்றோ எதிலும் ஐயப்பாடே மேலோங்கி நின்றது. அரைமனம்கொண்ட கொள்கைகளும், 'உறுதியற்ற அறநெறியும் நடைமுறைகளாயின. இத்தகைய சூழ்நிலேயில் சர்ச்சிலின் இடம் என்ன ? என்ற வினு பிறக்கிறது; இக் கால கட்டத்தின் கோளாறுகளே அவரே 1930-ல் ஆற்றிய ரோமேன் (Romanes) உரைகளில் குறிப்பிட்டார். 'பிரிட்டிஷ் பேரரசு முதல் போரில் பெற்ற மகத்தான வெற்றி வாகைகளே அது இழந்து வருகிறது. பிரிட்டிஷ் இனம் அதன் இலட்சியத்தைப்பற்றி ஐயப்பாடு கொண்டுள்ளது. அதன் கொள்கைகளில் நம்பிக்கை இழந்திருக்கிறது. அதன் நோக்கத்தில் வலியிழந்து விட்டது. கொந்தளிக்கும் கடலின் நீரோட்டங்களேயும், வெளியேற்றங்களேயும் போல் நாடு அலேமோதுகிறது. அதன் திசையறிகருவி அழிந்து பட்டிருக்கிறது. நிலப்படங்கள் காலத்திற்கு ஒவ்வாதவை. மாலுமிகளுக்கும், பயணிகளுக்கு மிடையில் பரஸ்பர நம்பிக்கை இல்லே. இந்த நாட்டுக் கப்பலின் உள்ளே பிரிட்டிஷ் இனத்தின் சகல வன்மையும் புகழும், உலகத்தின் ஐந்தில் ஒரு பகுதி மக்களின் கருவூலங்கள் யாவும் புதைந்து கிடக்கின்றன[1] என்று அழகான உவமை கூட்டி வர்ணித்தார்.

சர்ச்சில் தொண்டாற்றிய காலத்தின் தரமும், உயர் தகுதிகளும், பால்ட்வினின் தெளிவின்மைக்கும், மக்டூனல்டின் கட்டுக்கோப்பற்ற கொள்கைகளுக்கும் முரண்பட்டவை. நடப்பு அரசியல் அரங்கத்தில் ஆகிருதியில் குறைந்த சாமான்ய மனிதர்கள் குறைந்ததிறமையுள்ள நிருவாகிகள் நாட்டை நடத்திக்கொண்டு போகின்ற உலகத்தைச் சர்ச்சில் கண்டார். பழைய காலத்தை எண்ணிப்பார்க்கின்றபோது வெற்றிக் கோபுரத்தின் கீழ் வறியவனும், உயர்ந்த பிரமிட்டின் முன் ஒட்டகமும் ஒதுங்கி இருப்பது போல் அவருக்குத் தோன்றியது. காலக் கோளாறு அவருடைய கண்களே உருத்தியது. ஆனல், தன்னந்தனியே காலத்தைச் சீர்ப்படுத்த அவரால் என்னசெய்ய முடியும்? எங்குத் திரும்பினலும் விரும்பத்தகாத நிகழ்ச்சிகளே அவர் சந்திக்க நேர்ந்தது. ஒளியிழந்து இருண்டு கிடந்த இந்தக் காட்சியைக் காணும்போது ஐம்பதாவது வயதிலேயே தாம் முதுமை அடைந்து விட்டதாக உணர்ந்தார்.

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson p. 236.

1929 முதல் 1939 வரையுள்ள பத்தாண்டுக் காலத்தில் உள்நாட்டு வெளிநாட்டு விவகாரங்கள் நாட்டை அலைக்கழித்தன. பொருளாதார மந்தமும், வேலையில்லாத்திண்டாட்டமும் நிரந்தரமாக நிலைத்துவிடும் போல் தோன்றின. பன்னாட்டரங்கில் குழப்பமும், சட்ட அமைதிக்குலைவும் நிகழ்ந்து கொண்டிருந்தன. ஒப்பந்தங்களை மீறி நாடுகள் ஒன்றை யொன்று ஆக்கிரமிப்பதில் ஈடுபட்டிருந்தன. உலகப்போரின் அபாயமேகங்கள் திரண்டன. பிரிட்டனைப்பொருத்தவரையில் உள்நாட்டிலும், வெளி நாட்டிலும் வீண் விரையங்கள் கேட்டிற்கு வழிவகுத்தன. சர்வதேச சங்கத்தின் ஆதரவற்ற உறுப்பினர்களான சீனு, அபிசினியா, ஸ்பெயின், ஆஸ்திரியா போன்ற நாடுகள் வல்லரசுகளால் கைவிடப்பட்டன. பிரிட்டனும், ஃபிரான்சும் முதன்மை வகித்த சர்வதேச சங்கத்தின் பலவீனம், பிரிட்டிஷ் வெல்திறத்தின் கோழைத்தனத்தைக் காட்டியது. பிரிட்டன் மீது பிறநாடுகள். நம்பிக்கை இழந்ததால், போர் நாட்டமுள்ள வல்லரசுகளின் ஆக்கிரமிப்புத்திட்டங்களுக்கு ஊக்கம் அளிப்பதுபோல் இருந்தது.

### 'எலும்பில்லா அதிசயம்' (Boneless Wonder) இதோ காணீர்!

இந்த நெருக்கடியில் சர்ச்சில் அச்சமின்றி, அசையாத உறுதியுடன் அமைதி காக்கவும், போர் அபாயத்தைத் தடுக்கவும் குரல் கொடுக்கத் தயங்கவில்லை. அவருடைய எச்சரிக்கைகள் புறக்கணிக்கப்பட்டவுடன் அவர் போர் வெறியன் என்றும் தூற்றப்பட்டார். போருக்கு ஆயத்தமில்லாத நிலையில் பிரிட்டன் போரைச் சந்திக்க நேரிட்டது. ஆனால், பரம்பரையான வீரமும், மனத்திட்பமும் கொண்டு பிரிட்டன் தலைநிமிர்ந்து நிற்க முடிந்தது. 1929ல் பால்ட்வின் அமைச்சரவை வீழ்ச்சியுற்ற பின்னர், சர்ச்சில் எதிர்க்கட்சி வரிசையில் அமர்ந்து, தனிநபர் உரிமையுடன் போராடி வந்தார். அதனால், பழைய சகாக்களுடைய தொடர்பு முரியும் நிலை ஏற்பட்டது. பால்ட்வினின் காப்பியல் வரிச்சலுகைகளை சர்ச்சில் எதிர்த்தார். 'சீர் கெட்ட சோஷியலிச அரசு வாணிகத்தையும், தனி நபர் முயற்சிகளையும் அழித்து, உள்நாட்டில் வேலையின்மையை வளர்த்து வெளிநாட்டில் பிரிட்டனின் தலையாய நலன்களை அழித்துவிட்டது'[1] என்று குற்றஞ்சாட்டினர்.

இந்நிலையில் தொழில் தகராறுக்குச் சட்டத்தில் தொழில் கட்சி திருத்தம் கொண்டுவர முயன்றது. பிரதமரைத் தாக்கு

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 237.

வதற்கு இதை நல்லதொரு வாய்ப்பாக வின்ஸ்டன் கொண்டார். மக்டனல்டு தொழிலாளர்களுக்குப் பரிவுகாட்டவில்லை. பிரதமர் பால்ட்வினின் கோழைத்தனத்தை நையாண்டி செய்வதற்கு இது நல்ல வாய்ப்பு. 'பிரதமர் தோல்வி பல கண்டாலும் புன்முறுவலோடு சமாளிப்பதில் வல்லவர்; ஆனால், தொழில் தகராறுச் சட்டத் திருத்தத்தில் அவரது கைவரிசைக்கு இணையில்லை; 'எலும்பில்லா அதிசயத்தை' (Boneless Wonder) நான் சிறுவயதில் சர்க்கஸ் விளையாட்டில் கண்டு சுவைத்திருக்கிறேன். அதன் பின்னர், அத்தகைய ஒரு விந்தையை இன்றுதான் காண்கிறேன்' என்று சர்ச்சில் தமக்கே இயல்பான நகைச்சுவையுடன் குறிப்பிட்டார். 'மசோதாவை மாடிக்கு எடுத்துச் சென்று அதன் கழுத்தை நெறித்துக் கொல்லுங்கள்' என்றும் சர்ச்சில் கூறி வைத்தார்.

இந்தக் கேலிப் பேச்சுகள் மக்டனல்டின் மனத்தைப் பெரிதும் புண்படுத்தின. அவற்றை அவர் மறக்கவுமில்லை. மன்னிக்கவுமில்லை. இந்தியப் பிரச்சினை சிக்கல்களை மேலும் விரிவுபடுத்தியது. இந்திய ராஜ்யப் பிரதிநிதி இர்வின் பிரபுவின் போக்கை வின்ஸ்டன் விரும்பவில்லை. பேரரசு வாதியான சர்ச்சில் ஆப்பிரிக்காவிற்கும் அயர்லாந்திற்கும் சுயாட்சி வழங்குவதை ஆதரித்தார். ஆனால், இந்தியா தன் சொந்த நலன் கருதிப் பிரிட்டனால் ஆளப்பட வேண்டுமென்பது அவரது கருத்து. ராணுவத்தைக் கொண்டு இந்தியர்களைப் பலவந்தமாக அடக்கி ஆள்வது தவறு என்பதைப் பஞ்சாப் படுகொலை நிகழ்ந்தபோதே சர்ச்சில் தெளிவுபடுத்தினர். 'அச்சுறுத்தி ஆள்வது பிரச்சினைக்குப் பரிகாரமாகாது. இது பிரிட்டன் கையாளக்கூடிய வழியன்று' என்று அவர் குறிப்பிட்டார். 'இந்தியா பிரிட்டிஷ் மன்னரின் முடியில் திகழும் விலைமதிக்க முடியாத மணி; மற்றெல்லா டொமினியன்களையும் குடியேற்றங்களையும்விட இந்தியாவே பிரிட்டிஷ் பேரரசின் வலிமைக்கும், பெருமைக்கும் அடிப்படையாகும்' என்று நாற்பதாண்டுகளுக்கு முன்னர் அவரது தந்தையார் ரேண்டால்ஃப் பிரபு கூறிய சொற்களையே சர்ச்சிலும் எதிரொலித்தார். இர்வின் பிரபுவின் திட்டங்களைச் சர்ச்சில் 'தவறான கருணை' என்று வருணித்தார். கன்சர்வேடிவ்களின் தொடர்பை அறுத்துக் கொள்ளச் சர்ச்சிலைத் தூண்டிய உடனடியான காரணம் இந்தியப் பிரச்சினைதான். பால்ட்வினின் மென்மையான தாராளப் போக்கும், மக்டனல்டின் அமைதிக் கொள்கையும், நாட்டின் பெரும்பாலான மக்களின் மனநிலையை எதிரொலித்தன. மக்டனல்டின் கோழைத்தனத்தை 'எலும்பில்லா அதிசயம்' என்று சர்ச்சில் கேலி செய்ததையும் மக்கள் மறக்கவில்லை. இதனை

அடுத்துத்தான் இந்தியப் பிரச்சினைபற்றி சர்ச்சிலுக்கும் பால்ட்வினுக்கும் இடையே கருத்து வேறுபாடுகள் வளர்ந்தன. எனினும், வேறுபாடுகள் நீங்கியதுபோல் தோன்றின. சர்ச்சில் கூடியவரை ஒத்துழைத்து சோஷியலிஸ்டுகளின் தோல்விக்காகத் தொடர்ந்து பணிபுரிவதாக வாக்களித்தார். 'தற்காலிகமான அல்லது நிலையான கருத்து வேறுபாடுகளினுல் பாதிக்கப்படாத அளவிற்கு நமது நட்புறவு வேரூன்றி இருக்கிறது' என்று பால்டவின் குறிப்பிட்டார்.

## ஜெரெமியாவின் புலம்பல்

இந்திய சீர்திருத்தங்கள் பற்றிச் சர்ச்சில் ஆற்றியுள்ள உரைகளைக் குறிப்பிடுவதென்ருல் தனியாக ஒரு நூல் எழுதவேண்டியிருக்கும். சுருக்கமாகக் கூறினுல் இந்தியர்கள் தம்முடைய சொந்த ஆட்சியில் பங்கு பெறுவதற்குச் சர்ச்சில் எதிர்ப்புக் கூறவில்லை. ஆனுல். இந்தியாவிற்கு டொமினியன் நிலையையும், கூட்டாட்சி முறையையும் உடனடியாக வழங்கும் திட்டத்தை அவர் எதிர்த்தார். காந்தியிடம் இந்தியாவை ஒப்படைப்பதில் அவருக்கு உடன்பாடு இல்லை. 1931ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் எட்டாம் நாள் அவர் ஆல்பர்ட் ஹாலில் (Albert Hall) நிகழ்த்திய உரையில குறிப்பிட்டதாவது. 'பல நூற்ருண்டுகளாக இந்நாடு தேடிவைத்திருக்கும் மரபுரிமைகளை வீசியெறிவது எத்தனைப் பரிதாபகரமான காட்சியாக இருக்கும்.' இந்திய ராஜப் பிரதிநிதியும், இந்தியாவில் பிரிட்டிஷ் அரசரின் சார்பில் பணி புரியும் உயர் அதிகாரிகளும் பிற வகையாட்களும், நமது ஆட்சியை எதிர்க்கும் சகல சக்திகளையும் ஒரு கூட்டாட்சியாக இணைக்கப் பாடுபடுவதைவிட விபரீதமானதும், பயங்கரமானதுமான காட்சி வேறெதுவும் இருக்க முடியுமா? இந்தியாவில் நாம் நம்பியிருக்கவேண்டிய நம் நண்பர்களும், பிற சக்திகளும் ஒருவர் பின் ஒருவராக வாயடைக்கப்படுகின்றனர்; குழப்பப்படுகின்றனர்; பதவியிலிருந்து விரட்டப்படுகின்றனர்; இறுதியாக நம்மையே இந்தியாவிலிருந்து வெளியேற்றக் கங்கணங் கட்டியுள்ளவர்களும் கூட்டுச் சேரும்படி உற்சாகப்படுத்தப்படுகின்றனர். இத்தகைய போக்கு வஞ்சகமான தற்கொலைக்குச் சமமானது. இதனைக் கண்டு உலக நாடுகளெல்லாம் திகைத்து நிற்கின்றன. கிரேட் பிரிட்டனுல் கைவிடப்பட்ட நிலையில் இந்திய அரசர்களும், ஐரோப்பியரும், முஸ்லீம்களும், ஒடுக்கப்பட்ட மக்களும் செய்வதறியாது திகைக்கிருர்கள்......காந்தியிடம் சரணடைவதை நான் எதிர்க்கிறேன். காந்திக்கும் இர்வினுக்கும் இடையே நிகழும் பேச்சு வார்த்தைகளையும், உடன்பாடுகளையும் நான் எதிர்க்கிறேன். இந்தியாவிலிருந்து பிரிட்டி

ஷாரை வெளியேற்றக் காந்தி விரும்புகிருர். இந்தியாவுக்கும் பிரிட்டனுக்குமிடையேயுள்ள வாணிகத்தை நிரந்தரமாக நிறுத்தி விடக் காந்தி முயல்கிருர். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பதிலாகப் பிராமணர்களின் அதிகாரத்தை ஆதரிக்கிருர். காந்தியுடன் நீங்கள் எவ்வித உடன்பாடும் செய்ய முடியாது'[1] என்ருர்.

பிரிவினைக் குரல்

அவர் தொடர்ந்து கூறியதாவது: 'காந்தியை நம்புவதாலும், ராம்சே மக்டனல்டு, காந்தி இர்வின் ஆகியோர்தாம் இந்தியாவில் முன்னேற்றத்தையும், அமைதியையும் நிலைநாட்டப்போகிருர்கள் என்று கனவு காண்பதாலும் நாம் பயனற்ற முயற்சியில் ஈடுபடுகிருேம். சைமன் ஆணைக்குழுவை (Simon Commission) ஆராய்ந்து இந்தியாவிற்குச் சுயாட்சி வழங்குவதின் தொடக்க நிலையாக அந்த அறிக்கையைக் கொள்வோம். நம்மிடம் கொள்கை எதுவுமில்லை. நாம் வன்முறையிலும், அடக்குமுறையிலுமே நம்பிக்கை கொண்டுள்ளோம்' என்று, மாற்றுக்கட்சியினர் கூறுவதை நான் ஒப்புக்கொள்ளவில்லை......மாநில ரீதியில் இந்தியர்கள் பொறுப்பாட்சி பெற வசதிகளைச் செய்து தருவதே நமது அடுத்த நடவடிக்கையாக இருக்கவேண்டும்.......மைய அரசின் நிர்வாகத்துறை எல்லா மக்களின் நலன்களைப் பாதுகாக்கும் உத்தரவாதம் அளிக்கும் அளவிற்கு இறைமை அதிகாரத்தைக் காப்பாற்ற வேண்டும்...இதற்குப் பதிலாக இந்தியத் தலைவர்கள் கூட்டாட்சி மரபுகளை மறந்து, சட்டரீதியாக நிறுவப்பட்ட ஆணைக்குழுவின் பரிந்துரைகளைத் தள்ளிவிட்டுத் தமது அதிகாரத்தின்கீழ் இந்திய ஐக்கிய நாடுகளை அமைக்க விரும்புகிருர்கள்; இவர்களின் ஆணைகளுக்குப் பிரிட்டிஷ் ராணுவம் பணிந்து நிற்கவேண்டுமா?

இந்தியாவில் கூட்டாட்சி முறை நிறுவப்படுமுன் பொறுப்பாட்சி பெற்ற மாநில உறுப்புகள் இருக்கவேண்டும். இவைகள் இந்திய மக்களின், இந்திய தொழிலாளர்களின் உண்மையான பிரதிநிதிகளாக விளங்கவேண்டும்......இந்தியாவில் வேறெந்த அரசியல் சமூகத்தையும்விட நிருவாக அமிசங்களைவிட அறநெறி, அரசியல், பொருளாதார அமிசங்களுக்கு அதிக மதிப்பு உண்டு. இந்நாட்டின் 350 மில்லியன் மக்களும் உயர் நாகரிகத்திற்கும், அமைதி, ஒழுங்கு, சுகாதாரம், முன்னேற்றம் ஆகிய நிலைகளுக்கும் தூக்கிவிடப்பட்டிருக்கிருர்கள். இவை யாவும் பிரிட்டனின் பாராளுமன்றத்திற்குக் கட்டுப்பட்ட சில ஆயிரம் பிரிட்டிஷ்

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 235–237.

அதிகாரிகளின் சாதனைகளாகும்......இந்த அதிகார அமைப்பு அழிக்கப்படுமானால். இந்திய மக்கள் தங்கள் முன்னேற்றத்திற்காகவும், கலாச்சாரத்திற்காகவும் நம்பியிருக்கும் மக்கள் நலத் துறைகள் யாவும் தமது திறமையை இழப்பது உறுதி. இதனால் அழிந்துபட்டு இந்தியா இடைக்காலத்தில் பல நூற்றாண்டுகளாக நிலவிவந்த காட்டுமிராண்டித்தனத்திற்கும், இழிவுகளுக்கும் பலியாகும்'. இந்தியாவின் பொறுப்பாட்சியைக் கைப்பற்ற முயலும் 'உயர்சாதியினர்', அவர்கள் நாட்டிலே ஆறு மில்லியன் இந்திய சகோதரர்களைத் 'தீண்டாதார்' என்று ஒதுக்கிவைத்திருக்கிறார்கள். இவர்களைத் தவிர இந்தியாவில் ஏழு மில்லியன் முஸ்லீம்களும் வாழ்கிறார்கள். இந்துக்கள் விவாதத் திறமையைக் கருவியாகக் கொண்டிருக்க, முஸ்லீம்கள் வாளை ஆயுதமாகக் கொள்வார்கள். இவர்களுக்கிடையில் கலப்புத் திருமணம் கிடையாது......இவர்களின் பிளவும், பூசலும் நாளுக்குநாள் தீவிரமாகி வருகின்றன'[1] என்று சர்ச்சில் நீண்ட உரை ஆற்றினார்.

'இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே உள்நாட்டுப் போர் மூளுவது உறுதி. இந்துக்களிடையே போர்த்திறமுள்ள வீரமறவர்கள் இல்லை, இந்தியாவிலிருந்து பிரிட்டிஷார் விலக வேண்டுமென காந்தியும் நேருவும் கோருகிறார்கள். அவ்வாறு நடக்குமானால் வட இந்தியாவில் போராட்டம் தொடங்கும். தெற்கை வடக்கு வென்றுவிடும். முஸ்லீம்கள் இந்துக்களை வென்று விடுவார்கள். இதனால்தான் இந்துக்கள் பிரிட்டிஷ் படையைக் கட்டுப்படுத்த வேண்டுமென்கிறார்கள். காந்தியும் ஜெர்மானியரையும் பிற ஐரோப்பியர்களையும் அதிகாரிகளாகக் கொண்ட வெள்ளைப்படையைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று கூறுகிறார். இந்தச் சதித் திட்டத்திற்கு இந்தியாவின் கோடானுகோடி மக்களைப்போல் நாமும் பலியாகவேண்டாம்' என்று சர்ச்சில் எச்சரித்தார். 'இத்தகைய பேரபாயத்திலிருந்து இந்தியர்களைக் காப்பாற்றவேண்டியது பிரிட்டனின் கடமை என்று அவர் மேலும் வலியுறுத்தினார். பிரிட்டிஷ் பேரரசு, நிலைகுலைந்து, நிதி குலைந்துவிட்ட நாடாக இந்தியர்களால் கருதப்படுவதால், பிரிட்டன் வெளியேறியவுடன் பேரரசின் செல்வங்களை அபகரிக்கப் பல தினவெடுத்த கரங்கள் முயற்சி செய்யும். 'டைம்ஸ்' ஏட்டின் கூற்றுப்படி சாதுவாகவும், வழக்கறிஞராகவும் திகழும் காந்தியைக் கோடீஸ்வரர்களும், பெருந்தொழிலதிபர்களும் சுற்றுகிறார்கள். இவர்கள் யாவரும் மகத்தான மோசடி, மகத்தான ஏமாற்றிற்குத் தயார்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 238.

'செய்கிறார்கள்: பிராமணர்கள், இந்தியாவைக் கைப்பற்றினால் உறவினர் சலுகைகளும், ஊழலும், இனச்சலுகைகளும் மலிந்து வடுவது உறுதி'[1] என்றும் சர்ச்சில் கடுமையாக எச்சரித்தார்.

சர்ச்சிலின் இந்தியப் போராட்டத்தில் அவர் கன்சர்வேடிவ் கட்சியின் விடாக்கண்டர்களுடன் உறவுகொண்டது விபரீதமாகத் தென்பட்டது. இதன் விளைவாக அவரது பழைய லிபரல் உறுப்பினர்களும், நண்பர்களும் சர்ச்சிலை வெறுத்தனர். பல மாதங்கள் விவாதத்தின் பின்னர் இந்திய மசோதா (India Bill) காமன்ஸ் அவையில் நிறைவேறியது. இறுதி உரையிலும்கூட சர்ச்சில் முன்னர் அறிவித்த எச்சரிக்கைகளையும். பிரிட்டிஷ் பேரரசின் கடமையையும் நினைவுறுத்தினார். சர்ச்சில் உரையை முடிக்கின்ற நிலையில் அவரது பள்ளித்தோழரான லியோ அமெரி (Leo Amery) எழுந்து, 'இத்துடன் தீர்க்கதரிசி ஜெரெமியா (Jeremiah) புலம்பலின் இறுதி 'அத்தியாயம் முடிவெய்துகிறது' என்று நகைச்சுவைபடக் கூறினார். பிரிட்டிஷ் மக்கள் இந்தியப் பிரச்சினையைப் பெரிதுபடுத்த விரும்பவில்லை. ஏற்கெனவே, ஒரு நூற்றாண்டுக்காலமாக அயர்லாந்துப் பிரச்சினை அவர்களை நசுக்கி வந்திருந்தது. சர்ச்சில் வீணிலே புலம்பிக்கொண்டிருந்தார். அவர்தம் விவாதங்கள் விக்டோரியா பேரரசியின் வைர விழாவின்போது எடுபட்டிருக்கும். ஆனால், இப்பொழுதோ அரசர்களின் காலமும், பேரரசின் மாண்புகளும் மறைந்து வருகின்றன. பண்டைய பெருமையும் செருக்கும் ஏதோ ஒரு சமயம் அவர்களுக்கு மகிழ்வு தரக்கூடும். ஆனால், 'வெள்ளையனின் சுமையை' (Whiteman's burden) அவர்கள் வழி வழியாகச் சுமக்கத் தயாராக இல்லை. இந்தியா பற்றிய சர்ச்சிலின் பேருரைகளும், சொற்பெருக்குகளும் ஒரு நூற்றாண்டிற்கு முன்னர் பெருமை பெற்றிருக்கும். காலம் மாறிவிட்டது.

மக்களின் பொது எண்ணத்திற்கு எதிராக, எத்தனை திறமை பெற்ற அரசியல்வாதியும் எதிர்நீச்சல் போட முடியாது. மக்களுக்கு ஒரு செய்தியைக் கூறக் கங்கணம் கட்டியிருக்கும் ஓர் அரசியல்வாதி, தனக்கெனக் கொள்கை உறுதியும், நம்பிக்கை ஒளியும் கொண்டுள்ள ஒருவன், காலத்தின் சூழலுக்குத் தான் இயைபுடையவனல்லன் என்று கண்டாலும் போராட்டத்தை விட்டுவிடமாட்டான். வேண்டாமென்று ஒதுக்கப்பட்டதால் மறக்கப்படவேண்டிய அவசியமில்லை, அரசியலைப் பொறுத்த வரையிலும் இது உண்மைதான். முதல் உலகப்போரில் அமைதிப்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 239.

பிரியரான ராம்சே மக்டனுல்டை மக்கள் வெறுத்தனர். போருக்குப் பின்னர் மக்களின் போர் வெறி குறைந்தது. போரை வெறுத்த பிரிட்டிஷ் மக்கள் மக்டனுல்டை மீண்டும் பணிபுரியு மாறு அழைத்தனர். இது போலவே 1930ஆம் ஆண்டில் வின்ஸ்டனேப்பற்றி மக்கள் அக்கறைப்படவில்லை. போரபாயம் ஏற்பட்ட கணமே 'சர்ச்சில் வேண்டும்' என்ற குரல்கள் ஒலிக்கத் தொடங்கின. 'வா, வா' என்று வரவேற்றவர்கள் போர் முடிந்ததும் 'போ, போ' என்று விரட்டினுர்கள்.

1931ஆம் ஆண்டு ஜனவரியில் கன்சர்வேடிவ் கட்சியின் உட்குழுக்களிலிருந்து சர்ச்சில் விலகிக்கொண்டார். மீண்டும் பால்ட்வின் தலைமையில் பணிபுரியக்கூடிய வாய்ப்புகளை அவர் தியாகம் செய்தார். 'இந்தியக் கொள்கைபற்றி எனக்கு உடன் பாடில்லாத எந்த நிருவாகத்திலும் நான் பணிபுரியப்போவ தில்லை' என சர்ச்சில் வெளிப்படையாக அறிவித்தார். மீண்டும், திக்குத்தெரியாத அரசியல் கானகத்தில் அவர் காலடிவைத்தார். எனினும், அவர் கன்சர்வேடிவ் கட்சியின் பிடியை விடவில்லை,

அரசியல் அரங்கிலிருந்து தற்காலிகமாக விடுதலை பெற்ற சர்ச்சில் பொன்னுன பொழுதை வீணுக்க விரும்ப வில்லை. அவரது கூர்மையான பேனு எக்காலத்தையும் விட அதிகமாகப் பணி புரியத் தொடங்கியது. இடையில் ஓர் அமெரிக்கப் பயணத்தை யும் மேற்கொண்டு பலவிடங்களில் உரையாற்றினுர். 1930ஆம் ஆண்டுத் தொடங்கி 1939ஆம் ஆண்டிற்குள் சர்ச்சில் எழுதி வெளி யிட்ட நூல்களின் எண்ணிக்கை ஒன்பதாகும். இந்தச் சிறந்த படைப்புகளைத் தவிர அண்மைக் காலத்தில் அவர் ஆற்றியுள்ள உரைகளையெல்லாம் தொகுத்து அவர்தம் மைந்தன் ரேண்டால்ஃப் வெளியிட்டார். சர்ச்சிலின் நூல்களில் இரண்டு அவர் பத்திரிகை களுக்கு எழுதிய கட்டுரைகள், பிற எழுத்துகள் ஆகியவற்றின் தொகுப்பாகும். இவற்றில் முக்கியமானவை 'மை ஏர்லி லைஃப்' (My Early Life), 'த வொர்ல்டு கிரைசிஸ்' (The world Crisis) என்ற நூலின் இறுதித் தொகுதி. தி ஈஸ்டர்ன் ஃபிரன்ட் (The Eastern Front) என்பனவாகும். 'தாட்ஸ் அண்டு அட்வென்ச்சர்ஸ்' (Thoughts and Adventures) என்ற தமது நூலில் சர்ச்சில் பல சிந்தனைகளைத் தொகுத்துத் தந்தார்.

இவற்றையடுத்து அவர் ஆக்கிய பெரும் நூல் அவரது முப் பாட்டனுராகிய மால்பரோ கோமகனுரைப் பற்றியதாகும். இது ஈராயிரம் பக்கங்களைக் கொண்டு நான்கு தொகுதிகளாக எழுதப் பட்டது. சர்ச்சில் வணங்கிய வீரக்குல முதல்வரைப் பற்றி

மெக்காலே சித்தரித்திருந்த முறைக்குச் சான்றுகளுடன் பதில் கூறவே இந்த முயற்சியை எடுத்துக் கொண்டார். நூலின் இடையிடையே கம்பீரமான நடையழகும், கிப்பன் முறையைப் பின்பற்றிய நகைச்சுவையும் மிளர்கின்றன. சர்ச்சைகளையும் விறுவிறுப்புடன் நகைச்சுவை கூட்டும் உயிரோவியங்களாக்குவதில் சர்ச்சில் தனியான திறமை பெற்றவர். வரலாற்றறிஞரான ஆக்டன் (Acton) பிரபுவைக் கூட 'மாபெரும் மௌன மாணவர்' என்று சர்ச்சில் குறிப்பிடுவது சிலருக்கு ஆறுதல் அளிக்கக் கூடியது. இவையெல்லாம் இடையிடையே மிளரும் காட்சிகள். நீண்ட பெரும் நூலாக இருந்தாலும் மால்பரோ கோமகனின் சரிதை விறுவிறுப்பூட்டுகிறது. போர்க்காலத்தின் மகத்தான எண்ணங்களை முடிவுக்குக் கொண்டுவரும் நிகழ்ச்சிகளின் பரந்த கண்ணோட்டமான அந்நூலில் முடியாத போரிலிருந்து அமைதி பிறப்பதையும், குழப்பத்திலிருந்து ஒழுங்கு எழுவதையும், இவற்றிற்கு மேலாக இங்கிலாந்து தனது பெருமைமிக்க விடுதலை வீரப் பெருமகனைக் கொடுமுடியில் கொண்டு விளங்குவதையும் அதில் காண்கிறோம். 'த கிரேட் கான்டெம்பெரரீஸ்' (The Great Contemporaries) 'ஸ்டெப் பை ஸ்டெப் (Step by Step) என்ற இரு நூல்கள் இறுதியில் எழுதப்பட்டவை.

1931ஆம் ஆண்டில் பொருளாதாரச் சிக்கல் மீண்டும் தலை தூக்கியது. அமெரிக்காவில் பங்கு மாற்றுச் சந்தையில் விலைகள் திடீரென வீழ்ந்தன. அமெரிக்க பாங்குகள் முறிந்ததால் அதில் பணம் வைத்திருந்தவர்கள் இன்னல் பட்டனர். வேலையற்றவர்களின் தொகை பல மடங்கு அதிகரித்தது. இதுபோன்றவொரு பொருளாதார நிலைகுலைவு இதுவரை ஏற்படவில்லை. அமெரிக்காவின் நெருக்கடி பிறநாடுகளையும் பாதித்தது. ஜெர்மனியின் பொருளாதாரம் வறண்டது. இதன் விளைவாகப் பிரிட்டன், பெல்ஜியம், ஃபிரான்ஸ் போன்ற நாடுகள் போர்க்கடன் தொகைகளை இழக்க வேண்டியதாயிற்று. இலண்டன் நகர நிதியகங்கள் கடன்களைத் திருப்பிப் பெற முடியாமல் மூடப்பட்டன. அரசினரே தலையிட்டு தேசீய நெருக்கடி நிலை உருவாகமல் காப்பாற்ற வேண்டிய கட்டம் வந்தது. கடன்களைத் திருப்பிப் பெற முடியாததால் பணப்புழக்கம் குறையவே, வாணிகமும், தொழிலும் மந்தமடைந்தன. கருவூலம் காலியான நிலையில் வேலையில்லாத் திண்டாட்டத்தை எவ்வாறு செயல்படுத்த முடியும்?

1931ல் மக்டனல்டு திரை மறைவு சூழ்ச்சிகளில் ஈடுபடுவதாக வதந்திகள் உலவின. வங்கிகளும், இலண்டன் நகர நிதியகங்களும்

அரசிற்கு எதிராகச் செயல்பட்டன. தொழிற் கட்சியினரும், கன்சர்வேடிவ்களும் நாட்டு நெருக்கடியைச் சமாளிக்க சர்வ கட்சி ஒற்றுமையை வலியுறுத்தி வந்தனர். 1931ஆம் ஆண்டு மே திங்களில் மக்டனுல்டு தேசிய நிதி பற்றி ஆலோசனை கூற ஒரு குழுவை நிறுவினுர். அதில் வங்கி உரிமையாளர்களும், பெருந் தொழிலதிபர்களும் இடம் பெற்றிருந்தனர். சமூகப் பணிக்கான செலவுகள், வேலை வாய்ப்புகள் அதிகரிப்பதற்கான செலவுகள் ஆகியவற்றைக் குறைத்து வேலையில்லாத காலத்திற்கான ஈட்டுறுதி பங்குத் தொகைகளை அதிகரிக்குமாறு குழுவின் அறிக்கை பரிந்துரைத்தது. இந்தத் திட்டங்களைத் தொழிற் சங்கக் காங்கிரஸ் எதிர்த்தது. தொழிற் கட்சியினரைத் தூண்டி விட இதனை ஒரு கருவியாக மக்டனுல்டு பயன்படுத்தினுர்.

இதனிடையில் பிணி காரணமாக லாயிட் ஜார்ஜ் அரசியலிலிருந்து தற்காலிகமாக விலக வேண்டியதாயிற்று. இதைப் பயன்படுத்தி மக்டனுல்டு அமைச்சரவையில் நெருக்கடி நிலையை உருவாக்கினுர். ஸ்டர்லிங், பவுன் மதிப்பை உயர்த்தும் நோக்கத்துடன் அமெரிக்காவிடமும், ஃபிரான்சினிடமும் கடன் கேட்டார். ஆனுல், கடன் வழங்குவதற்கு அவ்விரு நாடுகளும், சமூகப் பணிக்கும், வேலையின்மை நிவாரணத்திற்கும் செலவுகளைக் குறைக்குமாறு நிபந்தனை விதிக்கிருர்கள் என்ற ஒரு பொய்யைச் சொன்னுர். இந்தப் பிரச்சினையின் அடிப்படையில் பல அமைச்சர்கள் பதவி விலகுகிர்கள். இதனைப் பயன் படுத்திக் கொண்டு மக்டனுல்டு தேசீய அரசை அமைத்துக் கொண்டார். புதிய அரசு பொருளாதார நெருக்கடியைத் தீர்க்க நிறுவப்பட்ட அரசு என்றும், அதற்கு யாவரும் ஒத்துழைப்புத் தருமாரும் மக்டனுல்டு வருந்திக் கேட்டுக் கொண்டார். ஆனுல், நிதித் துறையில் பழைய கொள்கைக் கெடுபிடி நிலவியது. தொழிற் கட்சியோ பாங்குகளைத் தேசிய உடைமையாக்க விரும்பியது. பொன் நாணயத் திட்டத்தில் பிரிட்டன் தோல்வியுற்றதால், நாடே திவாலாகும் நிலையை அடைந்தது. அஞ்சல் சேமிப்புகளில் இருந்த மக்களின் கையிருப்புத் தொகைகள் வேலையின்மை நிவாரணத்திற்கு எடுத்துக் கொள்ளப் படலாமென்று ஸ்னேடன் எச்சரித்தார். மக்களும் அதை நம்பினுர்கள். அவசரக்கோலமாகக் கொண்டுவரப்பட்ட ஒரு மசோதா சமூகப்பணி, கல்வி, சுகாதாரம், ஓய்வூதியங்கள், சாலை அபிவிருத்தித் திட்டங்கள், வேலையின்மை நிவாரணத் தொகை ஆகிய இனங்களுக்கான தொகையைக் கணிசமாகக் குறைத்தது. வேலையின்மை, ஈட்டுறுதிக்கான காப்புத்தொகை பத்துமில்லியன் பவுன்களாக அதிகரிக்கப்பட்டது. பொன் நாணயத் திட்டம் அனுதையாகக்

கைவிடப்பட்டது, நிதி நிலை அறிக்கை சமர்ப்பித்த பின்னர் மக்டொனல்டு தம் வாக்குறுதிகளை மீறி பாராளுமன்றத்தைக் கலைத்து விட்டுப் பொதுத் தேர்தலை நடத்தினார். கன்சர்வேடிவ்கள் மகத்தான வெற்றி பெற்றனர். தொழிற்கட்சி வலிமை இழந்தது லிபரல்கள் பிளவுபட்டனர்.

## ஆயுட்கால அரும்பணி அழிந்தது

புதிய அரசு இறக்குமதிப் பொருட்களின் மீது காப்பு வரிகளை விதித்தது. வேலையற்றோர் நிவாரணமும், வேலையுள்ளோர் கூலியும் குறைக்கப்பட்டன. வேலையற்றோருக்கு உதவும் பொதுப் பணிகள் நிறுத்தப்பட்டன. வேலையற்றோரின் எண்ணிக்கை மூன்று மில்லியனாக உயர்ந்தது. இந்த நெருக்கடியில் பிரிட்டனின் தொழில், வாணிப அமைப்புகள் தாம் மக்டொனல்டின் அரசைக் காப்பாற்றின. 1931ஆம் ஆண்டில் ஏற்பட்ட தொழிற்கட்சியின் நிலைகுலைதனை மக்டொனல்டு பெரும் வெற்றியாகக் கருதலாம். ஆனால், உண்மையில் அது அவருக்குத் தனிப்பட்ட தோல்வியாகும். முதல் உலகப் போருக்குப்பின் காமன்ஸ் அவையின் இரண்டாவது பெருங்கட்சியாகத் தொழில் கட்சியை உருவாக்கிய பெருமை மக்டொனல்டைச் சார்ந்தது. ஸ்காட் பண்ணையொன்றில் பணிபுரிந்து வந்த பணிப்பெண்ணின் மகனை மக்டொனல்டு சொந்தத் திறமையாலும், கடும் உழைப்பாலும், தொழில் கட்சியின் தலைமையைப் பிடிக்க வேண்டுமென்ற இலட்சியத்துடனும் படிப்படியாக முன்னேறியவர். சிறந்த எழுத்து வன்மையாலும், பேச்சாற்றலாலும் சோஷியலிசக் கொள்கையின் பிரச்சாரகராகவும், அமையற்ற தொண்டர்களின் தலைவராகவும் இளமையிலே சிறந்து விளங்கியவர் மக்டொனல்டு.

தொழிற்கட்சிப் பிரதமர் என்ற வகையில் மக்டொனல்டின் குணவியல்புகளும், குறைபாடுகளும் சிறப்பாக வெளிப்பட்டன. அவரது சொல்லுக்கும் செயலுக்கும் இடையில் அதிக வேறுபாடு இருந்தது. பிறரை எப்போதும் குறை கூறிக் கொண்டிருக்காமல் நாட்டின் பிரதமராகப் பதவி ஏற்றுப் பிரச்சினைகளைச் சமாளிக்க அழைக்கப்பட்ட நேரத்தில் அவர் திகைத்தார். இயல்பிலே செருக்கும், இரகசிய செயலாண்மையும் கொண்ட மக்டொனல்டு தம் சகாக்களை எளிதில் நம்பமாட்டார். அவரிடம் தாழ்வு மனப்பான்மை மேலோங்கி நின்றது. பதவியில் உயர உயர அவரிடம் சோஷியலிச உற்சாகம் குறைந்தது. பழைய சகாக்களிடமிருந்து விடுதலை பெற்றுத் தம்மால் ஒரு காலத்தில் இழித்துரைக்கப்பட்ட உயர் குடியாளர்களால் தாம் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டுமென்று ஏங்கினார். மக்டொனல்டு தாம் விரும்பி

யவைகள் யாவற்றையும் பெற்ருர். ஆனல், அதற்காக அவர் கொடுத்த விலை என்ன? சோஷியலிஸ்டுகளின் பிரதிநிதி யென்று தம்மைச் சொல்லிக் கொண்டாலும், டோரிகளின் கைப்பாவை யாக மாறினர். இவ்வாறு அவரது நிலை பரிதாபத்திற்குரியதாக இருந்தது.

பால்ட்வினின் அமைச்சரவையின் நிதி அமைச்சராக இருந்து, பிரதமருக்கு அடுத்த நிலையில் செல்வாக்குப் பெற்றிருந்த சர்ச்சில், 1931ஆம் ஆண்டில் நிறுவப்பெற்ற தேசீய அமைச்சரவையில் இடம் பெறவில்லை. சர்ச்சில் பால்ட்வினுடனும் மக்டனல்டி னுடனும் கருத்து வேறுபாடு கொண்டார். அடுத்த எட்டாண்டு களுக்கு அவர் கன்சர்வேடிவ் கட்சியின் உறுப்பினராக காமன்ஸ் அவையில் இருந்த போதிலும், அவர் தனிநபர் எதிர்க் கட்சியைப் போல் செயல்பட்டார். அரசினரின் வரித் திட்டங்களையும், வேலையின்மை நிவாரணத் திட்டங்களையும் எதிர்த்தார். எனினும் வேலையற்ருேர் பிரச்சினையில் சர்ச்சில் சிறந்த ஆர்வம் காட்டினர். சர்வதேசப் பிரச்சினைகள், பேரரசு விவகாரங்களில் அவர் அதிகம் ஈடுபாடு கொண்டார். சர்வதேச சங்கத்தின் குறிக்கோள்களில் அதிகம் பற்றுக் கொண்டவர். இவை வெற்றி பெற வேண்டு மெனில் பிரிட்டன் படைப்பலம் பெற்றிருக்க வேண்டுமென்பது சர்ச்சிலின் கருத்தாகும். ஆனல், அரசினர் சர்வதேச சங்கத்தின் விவகாரங்களில் அக்கறை கொள்ளவில்லை.

அரசினருடன் சர்ச்சில் அடிக்கடி மோதிக் கொண்டாலும், விரைவில் அவரது கருத்துகளை நாட்டுமக்கள் உற்றுக் கேட்கத் தொடங்கினர்கள். அரசினரோ அவருடைய தாக்குதல்களைப் பற்றி அக்கறைப் படாமல், பழைய கொள்கைகளையே விடாப்பிடி யாய்ப் பிடித்துக் கொண்டிருந்தனர். இந்தப் போக்கினை நாட்டுத் துரோகம் எனச் சர்ச்சில் கண்டனம் செய்தார். நாட்டின் அமைதிக்காகப் பிரிட்டிஷ் அரசினர் சர்வதேச சங்கத்தின் இலட்சியங்களைப் பலியிட்டனர். இந்தச் சூழ்நிலையில் சர்ச்சிலை நடைமுறைப் பயனுள்ள துணிவுமனப்பான்மையின் சின்னமாகப் பொதுமக்கள் போற்றினர்கள். இத்தகைய துணிவை அரசினை நடத்திய தலைவர்களிடம் அவர்கள் காண முடியவில்லை. ஆக்கிரமிப்புச் சக்திகளை அவிழ்த்து விடுவதுதாம் தேசீய அரசு நிறுவப்பட்டதன் உடனடியான விளைவு என்ற எண்ணம் வெளி நாடுகளில் நிலவியது. 1931ஆம் ஆண்டு ஆகஸ்டில் புதிய அரசு பதவி ஏற்கின்ற நிலையில் மஞ்சூரியாவை ஜப்பான் தாக்கியது. மஞ்சூரியாவை ஜப்பானுக்கு விட்டுக் கொடுக்குமாறு பிரிட்டிஷ் அரசினர் சீனவைக் கேட்டுக் கொண்டனர். ஆனல், அமெரிக்

காவோ ஜப்பானை எச்சரித்தது. இந்நிலையில் ஜப்பான் கொடுத்த வாக்குறுதிகளைப் பிரிட்டிஷ் வெளிநாட்டு அமைச்சர் நம்புவதாக வும் தெரிவித்தார்.

1932ஆம் ஆண்டு மார்ச்சில் சர்வதேச சங்கம் ஜப்பானின் ஆக்கிரமிப்பைக் கண்டனம் செய்தபோது, ஜப்பானை எதிர்த்து பிரிட்டன் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. ஜப்பானையும், ஆக்கிரமிப்பிற்குப் பலியான சீனாவையும் சமமாகக் கருதி இரு வருக்கும் ஆயுதம் அனுப்புவதையும் பிரிட்டன் தடை செய்தது. சர்வதேச சங்கத்தின் உடன்படிக்கையின்படி ஒரு உறுப்பினர் நாட்டை மற்றொரு நாடு தாக்கினால் யாவரும் ஒன்றுபட்டு ஆக்கிர மிப்பை எதிர்க்க வேண்டுமென்பது ஒரு நிபந்தனை. மஞ்சூரி யாவைத் தொடர்ந்து ஜெஹோலும் (Jehole) சாங்கேயும் (Shanghai) தாக்கப்பட்ட போதும் பிரிட்டன் வாளா விருந்தது. சர்வதேச சங்க உறுப்பினர் நாடுகளுடன் தொடர்பு அறுக்கப் படுமோ என்ற வினா எழுந்தது.

மஞ்சூரியாவை ஜப்பான் தாக்கியதைத் தொடர்ந்து ஜெனிவாவில் படைக்குறைப்பு மாநாடு கூட்டப்பட்டது. வெர் சேய்ல்ஸ் ஒப்பந்தம், சர்வாதச சங்க உடன்படிக்கையின் முக்கிய குறிக்கோளான உலகப் படைக்குறைப்புப் பற்றிய பல திட்டங் கள் கொண்டு வரப்பட்டன. எல்லா நாடுகளும் படைகளைக் குறைத்துக் கொண்டால் உலக அமைதி நிலவும் என்று எதிர் பார்க்கப்பட்டது. தொடக்கத்திலிருந்தே இந்த மாநாடு ஒரு கேலிக் கூத்தாக விளங்கியது. சர்வதேச சங்கத்தின் உறுப்பினர்களே ஆக்கிரமிப்புகளில் ஈடுபட்டிருக்கையில் உலக அமைதி ஏவ்வாறு நிலவும்? எந்த நாடும் தானாகவே படைகளைக் குறைத்துக் கொள்ள முன்வரவில்லை. வெர்சேய்ல்ஸ் உடன்பாட்டின்படி யாவரும் படைக்குறைப்புச் செய்து கொள்ள வேண்டும். அல்லது தன்னைப் படைதரிக்க அனுமதிக்க வேண்டுமென ஜெர்மனி கோரியது. எந்த உடன்பாடும் ஏற்படாத நிலையில் ஜெர்மன் பிரிதிநிதிகள் மாநாட்டிலிருந்து விலகினார்கள். இம் மாநாட்டின் முக்கிய விளைவுகளில் ஒன்றென்னவெனில் ஹிட்லரும், நாஜிகளும் ஜெர்மனியின் அதிகாரத்தைக் கைப்பற்ற வழி பிறந்ததுதான். இதனிடையில் ஜெர்மனி சர்வதேச சங்கத்திற்கு முழுக்குப் போட்டுவிட்டது. ஹிட்லர் வெளிப்படையாகப் படைப்பலத்தைப் பெருக்கிக் கொள்ளத் தொடங்கினார்.

இவ்வாறு ஜெனிவா மாநாடு தோல்வியுற்றது. இதற்குப் பிரிட்டன் பெரும் அளவில் பொறுப்புடையது என்பது உண்மை.

படைகளைக் குறைக்க முன் வந்த அண்டை நாடுகளுக்குப் பாதுகாப்பு உறுதி மொழிகள் வழங்கப்படவில்லை. ஜப்பான் தனது மனம் போன போக்கில் ஆக்கிரமிப்புகளை நடத்திக் கொண்டிருந்த போது அனைத்துலகப் படைக் குறைப்பு என்பது பொருளற்றதாகும். மாநாட்டில் கலந்து கொண்டவர்களோ அழகான சொல்லடுக்குகளையும் உண்மையை மூடிமறைக்கும் மழுப்பல் வாய் வீச்சுகளையும் தான் வெளியிட்டனர். ஆனால், வன்மை படைத்த படைக்கலன்களை நாவன்மையால் நிறுத்திவிடமுடியுமா? இந்தக் கசப்பான உண்மையை நாட்டுமக்களின் முன் ஒப்புக் கொள்ள அரசினருக்குத் துணி விருக்கவில்லை. படைக்குறைப்புப் பிரச்சினையை மக்களை முன் வைத்துத்தான் 1925-ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் வெற்றி பெற்றதாக பால்ட்வின் பெருமை பேசினர். ஆனால், சர்ச்சில் விஷயங்களைத் தெளிவாக உணர்ந்தவர். சர்வ தேச சங்கத்தின் சார்பில் கூட்டுப் பாதுகாப்புக் கொள்கையை நிலைநாட்டுவதில் அவருக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. 'ஐரோப்பியப் போர் ஏற்படாமல் தடுக்க சர்வதேச சங்கந்தான் ஒரே வழி. சர்வதேச சங்கத்தில் பிரிட்டன் தனக்குரிய இடத்தைப் பெற்று பன்னாட்டுக் கூட்டமைப்பை நிறுவுவதற்குப் பாடுபடவேண்டும்' என்று, சர்ச்சில் 1934ஆம் ஆண்டு ஒரு வானொலிப் பேச்சில் குறிப்பிட்டார். படைப் பலமின்றி ஜெனிவா மாநாட்டுத் தீர்மானவகளையும் செயல் படுத்த முடியாது என்பதை அவர் அறிவார். பிரிட்டனின் விமானப்படைப் பலத்தை இரு மடங்கு பெருக்க வேண்டுமென்றும், ஜெர்மனியிடமிருந்து பிரிட்டனைப் பாதுகாக்க ஃபிரான்ஸ் போன்ற தோழமை நாடுகளுடன் இணைந்து பரஸ்பர ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென்றும் அவர் எச்சரித்தார் 'சர்வதேச சங்கத்தில் நம்பிக்கை கொள்ள வேண்டுமென்பது சிலரது கருத்து. சிலர் பிரிட்டன் படைப்பலத்தை அதிகரிப்பதில் நம்பிக்கை கொள்ளுகிறார்கள். ஆனால், என்னைப் பொறுத்த வரையில் இரண்டுமே தேவை[1] என்று சர்ச்சில் குறிப்பிட்டார்.

சர்ச்சிலின் கொள்கையும், அரசினரின் கொள்கையும் முரண்பட்டன. சர்ச்சிலின் கொள்கை மக்களின் உறுதிப்பாடுகளுக்குக் குரல் கொடுத்தது போல் இருந்தது. 1935ல் 'அமைதி வாக்கெடுப்பு' என்ற பொதுமக்கள் வாக்கெடுப்பு நடைபெற்றது. டோரி கட்சித் தலைவர்களும், அரசினரும் இது நடைபெறுவதைத் தடைசெய்ய எவ்வளவோ முயன்றும் வாக்கெடுப்புப் பெரும் வெற்றி பெற்றது. பதினறு மில்லியன் மக்களில் 97 விழுக்காடு

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 252.

பிரிட்டன் சர்வதேச சங்கத்தை ஆதரிப்பதை வரவேற்றனர். 87 சதவிகிதத்தினர் ஆக்கிரமிப்பு நாடுகளுக்கு எதிராக சர்வதேச சங்கத்தின் சார்பில் பொருளாதார நடவடிக்கைகள் எடுப்பதை ஆதரித்தனர். பிற்காலத்தில் எதிர்க் கட்சிகளையும், பொது மக்களில் பெரும்பாலோரையும் 'அமைதி நாடுகிறவர்கள்' என்று தேசீய அரசாங்கம் குற்றஞ்சாட்டியது. சர்வதேச சங்கத்தின் மூலம் கூட்டு நடவடிக்கைகள்தாம் அமைதியை நிறுவ முடியும் என்று மக்கள் நம்பினர்கள். 'பிரிட்டன் பலங்குன்றியுள்ளது, பிரிட்டனின் பலவீனம் ஐரோப்பாவிற்கே ஆபத்து' என்பது சர்ச்சிலின் கருத்து. ஜெனிவா மாநாடு தோல்வியுற்ற போதும், ஜெர்மனியும் இத்தாலியும் படைதரித்துக் கொண்டபோதும், பொதுப் படைக்குறைப்புத் திட்டம் பயனற்றுப் போய்விட்டதென்பதை தேசீய அரசினர் மக்களுக்கு எடுத்துச் சொல்லத் தவறினர்கள். மக்கள் அமைதியின்பால் கொண்டிருந்த நம்பிக்கைகளை அரசினர் சிதறடித்தார்கள். எனினும், தேர்தலில் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் நோக்கத்துடன் அரசினர் மௌன நாடகம் நடித்தனர்.

பிரிட்டிஷ் அரசினர் படைதரிக்கும் எண்ணத்தையே முழுவதும் கைவிட்டு விட்டார்கள் என்பது இப்பொழுது தெளிவாகத் தெரிந்தது. ஃபிரான்சுக்குத் தெரியாமல் ஜெர்மனி படையைப் பெருக்கிக் கொள்ளவும் ஒப்பந்தம் செய்தார்கள். இந்தத் துரோகச் செயல் இரண்டாம் உலகப்போரில் பழிவாங்கியது. ஜெர்மனியின் காரணமாக ஏராளமான உயிர் இழப்பும் பொருள் இழப்பும் விளைந்தன. ஜெர்மனியின் படைப்பலத்தைப் பெருக்க அனுமதித்தவர்கள், பிரிட்டனின் படைப்பலம் சர்வதேச சங்கத்தையோ, பிரிட்டிஷ் பேரரசையோ பாதுகாக்கக் கூடிய அளவில் இல்லை என்பதை மக்களுக்கு எடுத்துச் சொல்லத் தவறினர்கள். இவை எல்லாம் மக்களை முட்டாள்களாகக் கருதும் செயல்கள் போலத் தோன்றின. பிரிட்டனின் கவுரவம் குறைந்ததற்கான அடிப்படைக் காரணத்தைச் சர்சில் தெளிவாக விளக்கினர். 'நமது பாதுகாப்புத் திட்டங்கள் அசட்டை செய்யப் பட்டுள்ளன. தவறுகளும், கோழைத்தனமும், உறுதியற்றபத்தாம் பசலிதனமும் இன்று நமது அரசினரின் கொள்கைகளாக இருக்கின்றன என்பதில் ஐயமில்லை. எனினும், நமது கையாலாகாத் தன்மையில் ஆணிவேர் போன்ற காரணம் காலப் போக்கில் நமது பாதுகாப்பு அமைப்புகளைப் புறக்கணித்ததாகும். அதே நேரத்தில் பிறநாடுகள் யாவும் உறுதியாகவும், தீர்மானமாகவும் தமது படைப்பலத்தை அதிகரித்து வந்திருக்கின்றன' என்று சுட்டிக் காட்டினர்.

# 14. ஆசை மொழியும் நேசக் கரமும்

## ஹிட்லரின் போர் வெறி

ஜெர்மனியின் தேசீய உணர்வு, வெறியாக மாறி ஆவேசங் கொண்டிருந்த நிலையில் பிரிட்டன் படைக்குறைப்பில் ஈடுபாடு கொண்டிருந்தது, நாட்டிற்கே துரதிர்ஷ்டமான ஒரு கட்டமாகும். ஹிட்லரும் நாஜிகளும் போர்வெறி கொண்டு முன்னேறிக் கொண்டிருக்கும் போது டவுனிங் சாலையில் சமரசத்தூதுவர்கள் பதவியில் அமர்ந்திருந்ததும் ஓர் அவகேடான இயைபாகும். முதல் போர் முடிவுற்றபோது லொக்கார்னோ ஒப்பந்தங்கள் புதியதொரு கால கட்டத்தைத் தொடங்கி வைக்கும் நம்பிக்கை ஒளியெனக் கருதப் பட்டன. பத்தாண்டுக் காலத்தில் இந்த ஒளி மங்கத் தொடங்கியது. உலகப் பொருளாதரத்தில் ஏற்பட்ட மந்தநிலை, நிதி நெருக்கடியை உருவாக்கியது. அட்லாண்டிக் பெருங்கடலின் இருமருங்கிலும் நிதிக்குலைவு அச்சுறுத்தியது. ஜெர்மனியின் வாணிகமும் கைத்தொழிலும் குலைந்துவிட்டதால் பத்து மில்லியன் மக்கள் வேலையில்லாமல் தவித்தனர். அல்லல்பட்ட ஜெர்மனியர், ஹிட்லரும் தேசீய சோஷியலிஸ்டுகளும்தாம் நாட்டைப் போல்ஷிவிக்குகளிடமிருந்தும், குழப்பத்திலிருந்தும் காப்பாற்ற முடியும் என்று நம்பினார்கள்.

இங்கிலாந்தில், பொருளாதார மந்தத்தின் விளைவாக சோஷியலிச அரசு வீழ்ச்சியுற்றது. தொழிற் கட்சித் தலைவர் ராம்சே மக்டனால்டு தலைமையில் தேசீய அரசினர் பதவியேற்றிருந்தனர். நிதிநிலையைச் சமாளிக்கக் கடினமான சிக்கனத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டதால் படைப்பலத்தைப் பெருக்கப் பொருள் வசதி இருக்கவில்லை. ஆகவேதான் டோரிகளின் ஆதரவுடன் அமைதிப் பிரியரான மக்டனால்டு, ஜெர்மனி உட்பட அனைத்துலகப் படைக்குறைப்பை வேதமென ஓதிக்கொண்டிருந்தார். ஆனால், ஜெர்மனி வேறு நோக்கத்துடன் படைப்

பலத்தைப் பெருக்கிக் கொண்டிருந்தது. பழைய டியூட்டானிய வெறியுணர்வுகள் கிளரப்படவே, அவர்கள் பழைய நிலைக்கு உயரவும், பழிவாங்கவும் வாய்ப்புத் தேடிக் கொண்டிருந்தனர். உள்நாட்டுப் பாதுகாப்பைக் காரணம் காட்டிப் படை வீரர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது. அமைதி ஒப்பந்தங்கள் தந்திரமாக மீறப்பட்டன. விழித்தெழுந்த ஜெர்மனி தன்னைத் தோற்கடித்த நாடுகளுடன் சமத்துவத்தை நாடியது.

இந்தப் பேரபாயத்தை உணர்ந்த சர்ச்சில் கடுமையான எச்சரிக்கையொன்றை விடுத்தார். 'ஜெர்மனி படைதரித்துக் கொள்ள அனுமதிக்கப்பட வேண்டும்' என்பது கோரிக்கை. 'ஜெர்மானியர்கள் பன்னூட்டுத் தகுதியைப் பெற விழையவில்லை. தம் தந்தையரின் நாட்டிற்காகத் தியாகங்கள் பல புரிய ஜெர்மனியில் பீடுநடை போடும் டியூடானிய இளைஞர்கள் படைக் கலங்களை கேட்கிறார்கள். அவற்றைப் பெற்றதும் இழந்த குடியேற்றங்களை மீண்டும் பெறத் துடிப்பார்கள். இந்தக் கோரிக்கை நிறைவேறியதும் உலகநாடுகள் அத்தனையின் அடிப்படைகளையும் அவர்கள் ஆட்டங்காணச் செய்வார்கள். இது உறுதி'[1] என்று கூறி விட்டுப் பிரிட்டன் பின்பற்ற வேண்டிய கொள்கையையும் ஒரு தீர்க்க தரிசனம் போல் சொல்லி வைத்தார். 'குறைகள் நீக்கப்படும் வரை, எல்லா நாடுகளும் படைப்பலத்தில் சமத்துவம் பெற வேண்டுமெனப் பேசுவது மற்றொரு ஐரோப்பியப் போரைத் தூண்டுவதாகும்............குறைகளைக் களைவது ஆபத்தின் அடிவேரையே அகற்றுவதாகும்; ஏன், ஆபத்தையே அகற்றுவதாகும்' என்பது சர்ச்சிலின் திண்ணமான கருத்தாகும்.

சர்ச்சிலின் திட்டம் பரிசீலிக்கப்படவில்லை. அதற்குப் பதிலாக மக்டனால்டு படைக்குறைப்புத் திட்டத்தைத் தீவிரமாகச் செயல்படுத்துவதில் முனைந்தார். இதற்குள் ஹிட்லர் ஜெர்மனியின் சான்சலராகவும் நாட்டின் தலைவராகவும் ஆகிவிட்டார். ஜெர்மன் மக்கள் அவரை ஃபியூரர் (Fireher) என்று கொண்டாடினார்கள். ஜெர்மனியின் ஜனநாயகத்திற்கு வைக்கப்பட்ட நெருப்பில் ஜனநாயகவாதிகளும், யூதர்களும், பொதுவுடைமையரும் அழிந்தனர்கள். நாஜி எதேச்சாதிகாரம் தலைவிரித்து வெறியாட்டம் போடத் தொடங்கியது. 1934ஆம் ஆண்டு ஜூன் 80ஆம் நாளில் நிகழ்ந்த 'நைட் ஆஃப் த நைவ்ஸ்' (The Night of The Knives) ஹிட்லரின் வெற்றிக்குத் திலகமிட்டது. அவரது அதிகாரத்தை எதிர்த்தவர்கள் யாவரும்

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 259.

படுகொலை செய்யப்பட்டனர். பதவியில் தம்மை நிலைநாட்டிக் கொண்ட பின் ஹிட்லருக்குப் படைப்பலத்தைப் பெருக்குவது எளிதாகி விட்டது. பழைய ஒப்பந்தங்களை மீறி ஜெர்மனி தனது வான்படைப் பலத்தையும் பன்மடங்கு அதிகப்படுத்தியது. இந்த நிலையில் பிரிட்டனின் பாதுகாப்பை உறுதிப்படுத்தா விட்டால் எக்காலத்திலும் அதனைச் செய்ய முடியாதென்று சர்ச்சில் எச்சரித்தார். ஜெர்மனியின் வான்படைத் தாக்குதலுக்கு பிரிட்டன் எளிதாக இலக்காகுமென்பதும், குறிப்பாக இலண்டன் நகரம் தாக்குதலைத் தாங்கமாட்டாது என்பதும் சர்ச்சிலின் கருத்தாகும். பிரிட்டனின் வான்படைப் பலத்தைப் பெருக்கு வதற்கான தீர்மானத்தைக்கூட லிபரல்களும், சோஷியலிஸ்டு களும் எதிர்த்தார்கள். 1934ஆம் ஆண்டில் வான் ரிப்பன் டிராப் (Von Ribben trop) பிரிட்டிஷ் அமைச்சரவையின் விருந்தினராக வந்திருந்தபோது, நடந்த விருந்தில் சர்ச்சில் கலந்துகொண்டார். ஹிட்லரின் வெளிநாட்டு அமைச்சரின் கூட்டத்தில் சர்ச்சில் கலந்துகொண்டதைப் பற்றி அவரைக் கேட்டபோது, 'அமைச் சர்களுக்குக் குரைக்க முடியாவிட்டாலும், குரைக்கவும் கடிக்கவும் அவர்களிடம் ஒரு நாய் இருக்கிறதென்று ரிப்பன் டிராப்பிற்குக் காட்ட வேண்டுமென்று தம்மைக் கேட்டுக்கொண்டார்கள் போலும்' என்று அவர் குறிப்பிட்டார்.

ஜெர்மன் வான்படைப் பலத்தைப்பற்றிச் சர்ச்சிலுக்கும் பால்ட் வினுக்குமிடையே பலத்த சர்ச்சை ஏற்பட்டது. ஜெர்மன் பலத்திற்குப் பிரிட்டனின் பலம் எந்த விதத்திலும் குறைந்துவிட வில்லை என்று பால்ட்வின் வற்புறுத்திக் கூறினர். இதனை ஹிட்லரே மறுக்கும் வகையில், பிரிட்டனின் வெளிநாட்டு அமைச்சர் ஜான் சைமனிடம் ஜெர்மனியின் வான்படைப்பலம் ராயன் வான்படைப்பலத்திற்குச் சமநிலையில் இருப்பதாகக் குறிப் பிட்டார். இதனைக் கேட்டு பிரிட்டிஷ் அமைச்சர்கள் அதிர்ச்சி யுற்றனர். பால்ட்வின் தாம் தப்புக்கணக்குப் போட்டதை ஒப்புக்கொண்டார். சர்ச்சிலோ ஜெர்மன் பலத்தின் விளைவுகளைப் பற்றி அதிக கவலைகொண்டிருந்தார். இதனிடையில் ஹிட்லர் படை திரட்டுவதற்கும் ஆணை பிறப்பித்தார். பிரிட்டனிலும் வான்படையையும், கடற்படையையும் வலுப்படுத்துவதற்கு முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. வான் பாதுகாப்பு ஆய்வுக்குழுவில் உறுப்பினராக இருந்த சர்ச்சில் தமது முதிர்ந்த அனுபவங்களின் பயனை நாட்டிற்கு நல்க முடிந்தது.

## இத்தாலியில் ஃபாஸிச வெறியாட்டம்

1935ஆம் ஆண்டு கோடையில் முசோலினி ஐரோப்பாவின் அரசியலில் ஒரு திருப்பத்தை உருவாக்கினார். ஆப்பிரிக்காவில் இதுவரை ஐரோப்பிய வல்லரசுகளின் கைகளுக்குத் தப்பி எஞ்சியிருந்த ஒரே நாடான அபிசினியாவை அவர் தாக்கினார். அபிசினியா சர்வதேச சங்கத்திடம் முறையிட்டது. ஜெனிவாவில் சர்வதேச சங்கத்தின் உறுப்பினர் நாடுகள் ஆக்கிரமிப்பு நாடான இத்தாலியின்மீது நடவடிக்கை எடுப்பதுபோல் காட்டிக்கொண்டன. சர்வதேச சங்க விவகாரங்களின் அமைச்சராகிய அன்டனி ஈடன் (Antony Eden) இத்தாலிக்கு எதிராகப் பொருளாதார நடவடிக்கை எடுக்கும் கோரிக்கைகளை விடுப்பதில் முனைப்புக் காட்டினார். முசோலினியின் ஆக்கிரமிப்பு சர்ச்சிலை வியப்பில் ஆழ்த்தியது. சர்வதேச சங்கத்தின் உறுதியைக் கண்டு பிரிட்டிஷ் பொது மக்கள் மகிழ்ந்தனர். இதனைப் பயன்படுத்திக்கொண்டு பால்ட்வின் பொதுத்தேர்தல் நடத்தினார். சர்வதேச சங்கம் பிரிட்டிஷ் வெளிநாட்டுக் கொள்கையின் மூலைக் கல்லாக இருக்குமென்று அவரது தேர்தல் அறிக்கை கூறியது. தேர்தலில் கன்சர்வேடிவ்கள் பெரும் வெற்றி பெற்றார்கள். ஆனல், மக்கள் எதிர்பார்த்தபடி இத்தாலிக்கு எதிரான நடவடிக்கைகளில் உறுதி இல்லாத காரணத்தால் அபிசினியா தோல்வியை எதிர்நோக்கி நின்றது. இந்நிலையில் பிரிட்டிஷ் வெளிநாட்டு அமைச்சரான சாமுவெல் ஹோரும் (Samuel Hoare), ஃபிரான்சின் வெளிநாட்டு அமைச்சரான லாவாலும் (Laval) அபிசினியாவை இத்தாலிக்கும் அபிசினியர்களுக்கும் இடையே துண்டாடும்படி உடன்பாடு தெரிவித்தனர். பிரிட்டிஷ் மக்கள் கொதித்தெழுந்தனர். ஹோரர் பதவியை ராஜினமா செய்தார். முசோலினி இத்தாலியை முழுமையாகக் கபளீகரம் செய்தார். பிரிட்டனுக்கும் ஃபிரான்சிற்கும் இது அரசியல் வெல்திறத் தோல்வியாகும்.

அபிசினியாவின் சோக முடிவிற்குப் பின்னரும் பிரிட்டன் சர்வதேச சங்கத்தின்மீது நம்பிக்கை கொண்டிருந்தது. இந்த நம்பிக்கை ஃபிரஞ்சு மக்களிடம் இருக்கவில்லை. உலகக்காவலனக நின்று சர்வதேச சங்கம் போர் ஏற்படுவதைத் தடுத்துவிடும் என்று அப்பாவி பிரிட்டிஷ் மக்கள் எதிர்பார்த்திருந்தனர். இந்த நம்பிக்கை அபிசினியா விவகாரத்தில் வெற்றிபெருமல் போனதற்குக் காரணம் சர்வதேச சங்கத்தின் அமைப்பன்று. ஆனல், சங்கத்தின் ஆதரவாளர்கள் குறிப்பாக ஃபிரான்ஸ் அதனைக் கைவிட்டதே காரணமென்று பிரிட்டிஷ் மக்கள் எண்ணினர்கள்.

இத்தாலியர்களைத் தடுத்து நிறுத்தி முசோலினியை ஃபாஸிச ஆட்சிப் பீடத்திலிருந்து வீழ்த்துவதற்குச் சிறிது முயன்றிருந்தாலும் போதும். துணிவில்லாத காரணத்தால் சிறந்ததொரு வாய்ப்பு கைநெகிழவிடப்பட்டது.

இந்த நிலையில், இங்கிலாந்தின் பாதுகாப்பு இணைப்புத்துறை என்ற புதிய அமைச்சகத்தை நிறுவ முடிவு செய்யப்பட்டது. தமது நீண்ட அனுபவத்தின் காரணமாகச் சர்ச்சில் பெறத் தகுதியுள்ள பதவி இது. பத்திரிகைகள் சர்ச்சிலுக்குள்ள வாய்ப்புகளைப்பற்றி எழுதின. ஆனால், சர்ச்சிலின் தகுதிகள் புறக்கணிக்கப்பட்டன. சர்ச்சிலுக்குப் புதிய பதவியை அளித்தால் ஹிட்லர் வெறுப்புக்கொள்ளக் கூடும் என்ற அடிப்படையில் அவர் தேர்ந்து கொள்ளப்படவில்லை. இது சர்ச்சிலுக்குப் பெரும் ஏமாற்றத்தை அளித்தபோதிலும் தமக்குப் பதவி கிடைக்காமல் போனதற்காகவும், விட்டுக்கொடுக்கும் கொள்கையாகிய அவப்பேற்றுடன் தொடர்பு கொள்ளாமல் விலக்கப்பட்டதற்கும் தெய்வத் திருவருளை வழுத்தினார். நாஜிக்களோ சர்ச்சில்மீது வசைமாரி பொழியத் தொடங்கினார்கள். 'சர்ச்சில் ஜெர்மனியின் வெறுப்பாளர்; அவர் எழுதுவன இயற்கைக் காட்சிகளின் ஓவியங்களல்ல. ஆனால், ஜெர்மன் அபாயத்தைப் பற்றிய ஓவியங்களே ஆகும். அவர் கக்குகின்ற நச்சுப்பிரசாரத்தைத் துச்சமாக மதிக்கவேண்டாம்' எனக் கோயபெல்ஸ் எச்சரித்தார். 'டிப்ளோமாடிக் கரஸ்பாண்டென்ஸ்' (Diplomatic Correspondence) என்ற அதிகாரபூர்வமான ஜெர்மன் ஏடு சர்ச்சில் ஜெர்மனியை நசுக்கத் தூண்டுவதாகக் குற்றஞ்சாட்டியது.

இதுமுதற் கொண்டு ஜெர்மனி, இத்தாலி நாடுகளின் சர்வாதிகாரிகள் ஜனநாயக நாடுகளுக்கு எதிராக அணிதிரட்டினார்கள். இதுவரை ஃபிரான்சின் பக்கம் துணைநின்ற முசோலினி அபிசினியா சிக்கலின் பின்னர் கட்சி மாறிக்கொண்டார். அச்சு நாடுகளின் கூட்டு, ஜனநாயக நாடுகளுக்குப் பாதகமாக ஐரோப்பாவின் சக்தி சமநிலையைக் குலைத்துவிட்டது. ஹிட்லர் தாக்குதல்களில் ஈடுபட்டார். ஜெர்மன் படை முழுப்பலம் பெறும்வரை அவசரப்படவேண்டாம் என்ற ஜெர்மன் தளபதிகளின் எச்சரிக்கையைக்கூட உதறிவிட்டு, ஹிட்லர் ஆக்கிரமிப்புகளை நடத்தினார். சக்தியற்ற சர்வதேச சங்கத்திற்கும், பிரிட்டன், ஃபிரான்ஸ் ஆகிய நாடுகளின் ஜனநாயகத்திற்கும் ஏன் அஞ்சவேண்டுமென்பது ஹிட்லரின் கேள்வி. படைகள் முன்னேறுமாறு உத்திரவு பிறந்தது.

இவ்வாறு 1936ஆம் ஆண்டில் உலக நிகழ்ச்சிகள் உச்ச கட்டத்தை அடைந்தன. அமைதி ஒப்பந்தங்களை மீறி ஜெர் மானியர் ரைன்லாந்தை ஆக்கிரமித்தனர். இதே சமயத்தில் சில ஸ்பானிய அதிகாரிகள் ஆட்சியைக் கைப்பற்றிக்கொண்டு ஸ்பெயின் நாட்டில் உள்நாட்டுப் போரைத் தோற்றுவித்தனர். இதற்கு ஜெர்மனியும், இத்தாலியும் உதவியளித்தன. பெல்ஜியம் பிரிட்டனையும், ஃபிரான்சையும் எதிர்பார்க்காமலே சுதந்திர மாகச் செயல்பட விரும்புவதாகத் தோன்றியது. இவை யாவும் பால்ட்வின் ஆட்சிக்காலத்தில் நடைபெற்ற தவறுகளின் விளைவு களென நம்பப்பட்டன. எனவே, சர்ச்சில் எச்சரித்தவை யாவும் உண்மையாக நிகழ்ந்துவிட்டன.

'ஜெர்மனியில் பெரும் சக்கரங்கள் சுழல்வதுபோலவும், இரவு பகலாக சம்மட்டிகள் அடிக்கப்படுவது போலவுமான' காட்சிகள் சர்ச்சிலை இன்னும் ஆட்டிப்படைத்தன. எனவே, கூட்டமைப்பான பாதுகாப்புத் திட்டம் உண்மையில் ஏற்பட வேண்டுமென்று சர்ச்சில் வற்புறுத்தி வந்தார். 'நான் அமைதியை விரும்புகிறேன். போரை நிறுத்த வழி தேடுகிறேன்' என்று அவர் கூறினார். வன்மையின் அடிப்படையில் பேச்சு வார்த்தைகள் நடத்துவதை அவர் ஆதரித்தார். ஆக்கிரமிப்பாளர்களான ஜெர்மானியருக்கு எதிராக அமைதியை விரும்பும் அனைத்து நாடுகளும் இணைந்து மாபெரும் பாதுகாப்புக் கூட்டணியை அமைப்பது மகத்தானதொரு திட்டமாகும். ஆனால், சர்ச்சிலின் ஆலோசனைகள் 1939ஆம் ஆண்டு வரை செயல்படுத்தப் படவில்லை.

ஹிட்லரின் ரைன்லாந்து ஆக்கிரமிப்பைத் தொடர்ந்து பெரும் விளைவுகள் நிகழ்ந்தன. ஹாலந்தும், பெல்ஜியமும், ஃபிரான்சும் ஆபத்தில் இருப்பதைச் சர்ச்சில் உணர்ந்தார். இதனை, அவர் 1936ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் நிகழ்த்திய பாராளுமன்ற உரையில் எச்சரித்தார், சர்ச்சிலின் கணக்குகள் தீர்க்கதரிசனம்போல் பலித்து வந்தன. இதனிடையில் ஸ்பெயின் உள்நாட்டுப் போரைப்பற்றியும் சர்ச்சில் நம்பிக்கை இழந் திருந்தார். 'உறுதியும், பொறையும் கொண்ட ஸ்பெயின் அரசும், அதன் மக்களுக்கு உரிமையும், வளமும் ஏற்படுவதை யுமே ஃபிரான்சும், பிரிட்டனும் விரும்புவதாக' அவர் குறிப் பிட்டார். ஆனால், இவையெல்லாம் உடனடியாக நடக்கப் போவதில்லை என்று அவர் நம்பினார். ஆனால், சோவியத் ருஷ்யா மட்டும் தனது தேசிய சுதந்திரத்தைக் காக்கக்கூடிய அளவிற்குப் பலம் பெற்றிருப்பதாக அவர் நம்பினார். பொது அமைதியை

நிலைநாட்டுவதில் ருஷ்யா பெரும்பங்கு ஏற்கவேண்டு மென்பது அவரது கருத்தாகும்.

பால்ட்வினின் பொறுப்புகளைப் பற்றிச் சர்ச்சில் எவ்வித ஐயப்பாடும் கொண்டிருக்கவில்லை. 'சர்வ வல்லமை படைத்த பால்ட்வின் சக்தியற்றவராக' இருப்பதாக அவர் கண்டார். 'ஜெர்மனியைப்போல் பிரிட்டனும் படைத்தரிக்கும்படி தாம் செய்திருந்தால் 1935ஆம் ஆண்டுப் பொதுத்தேர்தலை வென் றிருக்க முடியாது' என்று பால்ட்வினே ஒருமுறை காமன்ஸ் அவையில் ஒப்புக்கொண்டார். ஏற்கெனவே, அபிசினிய விவகா ரத்தில் செல்வாக்குக் குறைந்திருந்த பால்ட்வின், மேற்குறிப் பிட்ட ஒப்புதலின் பின்னர், அதுகாலை, மக்களின் கவனத்தைக் கவர்ந்த மிகப்பெரிய பிரச்சினையில் நாட்டைக் காட்டிக்கொடுத்த வராகக் கருதப்பட்டதில் ஆச்சரியமில்லை. பால்ட்வினின் மதிப்புக் குறைந்துவந்த நிலையில் அவரது அரசியல் விமர்சகராகிய சர்ச் சிலின் செல்வாக்குப் பாராளுமன்றத்திலும், பொதுமக்கள் மத்தியிலும் உயர்ந்து வந்தது. மீண்டும் சர்ச்சில் தமக்குரிய இடத்தைப் பிடித்துவிடுவார் என்ற நிலை 1936ஆம் ஆண்டு நவம்பர் திங்களில் உறுதியாகிவிட்டது. இதற்குள் பிரிட்டிஷ் பேரரசையே அதிர்ச்சியடையச் செய்த அரச குடும்ப விவகாரம் ஒன்று எழுந்தது. அதுதான் எட்டாம் எட்வேர்டு மன்னரின் திருமணப் பிரச்சினை.

### முடி துறந்த மன்னர்

1936ஆம் ஆண்டு ஜனவரி 20ஆம் நாள் மக்களுக்காக உண்மையுடன் உழைத்து, மக்களின் பாராட்டுதலையும், அன்பையும் பெற்றிருந்த ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் காலமானார். அரசருக்குப்பின் அரியணையேறிய இளவரசர் எட்வேர்டு தனிப் பட்ட பண்பும், ஊக்கமும், ஆற்றல்களும் கொண்டவர். ஆனால், அவர்தம் முற்போக்கான நடவடிக்கைகள் சில வட்டாரங்களில் விரும்பப்படவில்லை. அவரது குறுகியகால ஆட்சியில் அவர் வேலையற்றோரிடம் காட்டிய பரிவும் அக்கறையும், அவர்களை இதுவரை புறக்கணித்திருந்த அரசினருக்கு எரிச்சலூட்டியது. காலம் செய்யும் கோலத்தினால், குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் எவ்வித மாற்றங்களை ஏற்படுத்தக் கூடுமென்பதற்கு எட்வேர்டின் திருமணப் பிரச்சினை ஓர் எடுத்துக்காட்டாகும்.

எட்வேர்டு அரசரின் முடிதுறப்பு மக்களை உணர்ச்சிக் கொந்தளிப்பின் கொடுமுடிக்குக் கொண்டு சென்றது. சிறிது காலம் அமைச்சர்கள்கூடப் பிற விவகாரங்களைத் தள்ளி வைத்து

விட்டு அரசரின் திருமணச் சிக்கலில் ஈடுபாடு கொள்ளலானார்கள். அதுவே, நாடெங்கும் பேச்சாகவும் செய்தித்தாள்கள் வெளியிட்டு வந்த ஒரே தலைப்புச் செய்தியாகவும் இருந்தது. திடீரெனப் போர் மூண்டது. இதுவரை மக்கள் கவனத்தை ஈர்த்திருந்த பிரச்சினை அவர்களின் மனத்தை விட்டு மறைந்தது. எட்வேர்டின் முடிதுறப்பும், அவர்தம் சின்னாட்களின் ஆட்சியைப் போலவே நிலையாத ஒன்றாகி விட்டது. இந்த நாடகத்தில் சர்ச்சில் பெற்ற பங்கு சிறிதேயென்றாலும் சிறப்புடையதொன்று என்பது இங்கே குறிப்பிடத்தக்கதாகும். அரசரின் ஆலோசகராக இருக்கின்ற வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. ஆனால், அவரது தலையீடு நிகழ்ச்சிகளின் போக்கை மாற்ற முடியவில்லை.

அரியணையேறியபோது பிரமச்சாரியாக இருந்த எட்வேர்டு, திருமதி சிம்ஸன் (Simpson) என்ற அமெரிக்க மாதின்மீது காதல் கொண்டிருந்தார். இந்த அம்மையார் ஏற்கெனவே முதல் கணவரை விவாகரத்து செய்துவிட்டு மறுபடியும் மணம் செய்திருந்தவர். இரண்டாவது முறையும் விவாகரத்து செய்திருந்ததால், எட்வேர்டு அரசரைத் திருமணம் செய்துகொள்ளச் சட்டபூர்வமான தடையிருக்கவில்லை. ஆனால், சிம்ஸன் அம்மையாரை அரசத்துணைவியாராக எட்வேர்டு ஏற்றுக்கொள்வதை ஆங்கில நாட்டுச் சட்டம் ஒப்புக்கொள்ளவில்லை. இது பெரும் நெருக்கடியை ஏற்படுத்தியது. மேலும், ஆங்கில அரசியல் முறையின் தலைவரான அரசர் இருமுறை விவாகரத்து செய்துகொண்ட ஒருவரைத் திருமணம் செய்ய விரும்புவதைக் கேட்டு இங்கிலாந்தின் திருச்சபை அதிர்ச்சியுற்றது. இந்தச் சமூக, சமயப் பிரச்சினை காரணமாக எட்வேர்டு முடிதுறக்கக்கூடும் என்பதை அரசும், திருச்சபையும் எதிர்பார்த்தன. இந்த நெருக்கடியைச் சமாளிக்கவும் அவை தயாராக இருந்தன. எட்வேர்டின் தனிப்பட்ட நண்பர்களாக இருந்த சர்ச்சிலுக்கும், லாயிட் ஜார்ஜுக்கும் இது தர்மசங்கடமான நிலையாக இருந்தது.

எட்வேர்டு, ஒன்று சிம்ஸன் அம்மையாரை மணம் செய்து கொள்வது அல்லது முடிதுறப்பது என்ற முடிவுக்கு வந்திருந்தார். முடிதுறக்கின்ற இறுதிநிலை ஏற்படாது என்று சர்ச்சில் நம்பியிருந்தார். அதனைத் தடுக்கவும் அவரால் முடியவில்லை. அந்த முடிவிற்காக அவர் வருந்திய போதிலும் அது இன்றியமையாத முடிவு என்பதையும் ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று. காதலில் வெற்றி பெறுமாறு சகலத்தையும் துறந்துவிட எட்வேர்டு தயாராக இருந்தது, காலங்காலமாக வரும் காதலர்களுக்கு விறுவிறுப்பூட்டும் செய்தி. வரலாற்றறிஞர்கள் தம்

முடைய நூல்களில் இந்த விவகாரம் பற்றிப் பக்கம் பக்கமாக எழுதுவார்கள். ஆனால், இதுவெறும் காதல் காவியமன்று. இதனால், அரசியல் நெருக்கடி மட்டுமன்று அரசுமுறை பற்றிய சிக்கலே விளைய வேண்டியதாயிற்று. அரசியல்வாதி என்ற முறையில் எட்வேர்டு தம் முன்னோர்களுக்கு ஈடு கொடுக்கக் கூடியவரல்லர். அவர்களெல்லாம் தங்கள் தங்கள் காதல் விவகாரங்களுக்காக முடியை இழக்கத் துணியவில்லை.

1936 டிசம்பரில் தான் அரசரின் திருமண விவகாரத்தில் அரசுமுறைச் சிக்கலும் இருக்கிறதென்பதை பிரிட்டன் புரிந்து கொண்டது. இச்செய்தி நாட்டையே அதிர்ச்சியடையச் செய்தது. வெளிநாட்டார் வேறு விதமாக எண்ணினார்கள். அமெரிக்க ஐக்கிய நாடுகள் அரசரின் திருமணம் இருநாட்டு நட்புறவில் புதியதொரு அத்தியாயத்தைத் துவக்கும் என்று எதிர்பார்த்தன. பிரிட்டனின் செய்தித்தாள்கள் அரசரின் காதல் விவகாரத்திற்கு அதிக விளம்பரம் கொடுக்க வில்லை. சிம்ஸன் அம்மையார் அரசரின் தோழியாகவே சித்திரிக்கப்பட்டார். பொதுமக்கள் சிம்ஸனைப் பற்றி அதிக அக்கறை கொள்ளவில்லை. ஆனால், அரசு வட்டாரங்களின் நிலைமை வேறு விதமாக இருந்தது. பிரதமர் ஸ்டான்லி பால்ட்வின் இதுபற்றி அதிக கவலை கொண்டிருந்தார். இளந் தலைமுறைகள் அரசருக்குப் பரிவும் ஆதரவும் அளித்தன. ஆனால், பொதுமக்களில் பெரும்பாலோர் அரசர் தமது தனிப்பட்ட இன்பத்திற்காக அரசு முடியைச் சர்ச்சைக் குரியதாக்கியதைக் கண்டு வருந்தினார்கள்.

அரசரும் பிரதமரும் இந்த விவகாரம் பற்றிப் பலமுறை சந்தித்து உரையாடினார்கள். எட்வேர்டு தமது மனம் நாடிய மங்கையைத் துறப்பதை விட முடிதுறக்கத் தயாராக இருக்கிறார் என்பது உறுதியாகி விட்டது. பால்ட்வினும் அவரைச் சேர்ந்தவர்களும் எவ்வாறேனும் அரசரை அகற்றி விடவேண்டுமென்று செயல்பட்டு வந்தனர். சர்ச்சிலோ சபலமான இந்த முடிவை ஒத்திப்போட அல்லது காலந்தாழ்த்தத் தீவிரமாக முயன்று கொண்டிருந்தார். அவர்மீது அரசர் நம்பிக்கை வைத்திருந்தால், அவர்தம் அறிவுரைகளைக் கோரியதில் வியப்பில்லை. இந்த நெருக்கடியால் அரசருக்கு யார் யாருடைய ஆதரவு தேவைப்பட்டதோ அவர்களையெல்லாம் அவர் பகைத்துக் கொண்டிருந்தார். பாராளுமன்றமும், ஆங்கிலத் திருச்சபையும் அவரை எதிர்த்து நின்றன.

அரசவையும், அரண்மனைப் பரிவாரங்களும் எட்வேர்டை ஆதரிக்க வில்லை. சாதாரண மனிதனாய் மக்கள் மத்தியில் நடமாட விரும்பிய அரசர், அரண்மனையின் ஆடம்பரச் சடங்குகளையும், சமூக சம்பிரதாயங்களையும் வெறுத்து ஒதுக்கினார். சமுதாயத்தில் பெரும் புள்ளிகளாக இருந்தவர்களும், அரண்மனையில் ஒட்டிக் கொண்டிருந்தவர்களும் இதனால் அதிருப்தி கொண்டனர். நிலை நாட்டப்பட்ட திருச்சபையின் தலைவரான அரசரிடம் நல்லிணக்கத்தின் அறிகுறிகள் எவையுமே தென்படவில்லை எனத் திருச்சபை அதிகாரிகள் மனக்குறை பட்டனர். தெய்வத் திருவருள் நல்லமுறையில் வெளிப்படுவதற்கான தேவையை அரசர் உணர வேண்டுமென்று பிஷப்புகள் பிரார்த்தனை செய்தனர். அரசர் நாட்டைச் சுற்றி வரும் சுற்றுலாக்களில் எளிய மக்களின் குறிப்பாக வேலையற்றோரின் அனுதாபத்தைப் பெற்றுவருவதைக் கண்டு அரசியல் வாதிகள் கலக்க முற்றார்கள். இளவரசராக இருந்த காலத்தில் எட்வேர்டைப்போல் மக்கள் அபிமானத்தைப் பெற்றவர்கள் எவருமிலர். அரியணை யேறிய எட்டு மாதங்களுக்குள் அவர் பெரும்பாலோரின் வெறுப்புக்குள்ளாகிய மன்னராகி விட்டார்.

இந்தக் கட்டத்தில் சர்ச்சிலின் அறிவுரைகளைப் பெற அனுமதிக்க வேண்டுமென்று அரசர் கேட்டுக் கொண்டபோது சிறியதொரு அரசியல் சிக்கல் உருவாகியது. சகல விவகாரங்களிலும் அரசருக்கு ஆலோசனை கூறுவது பிரதமரின் பொறுப்புத் தானே என்ற வினா கிளம்பியது. எனினும், அரசரும் பிரதமரும் கருத்து வேறுபாடு கொண்டிருந்த காரணத்தால், சர்ச்சிலைப் போன்ற தனி மனிதர் ஒருவரின் ஆலோசனையைப் பெறுவது பற்றி ஆட்சேபம் தெரிவிக்கப்படவில்லை. அரசினர் வட்டாரத்துக்கு வெளியே சர்ச்சில்தாம் தலைசிறந்த அரசியல் பிரமுகர் என்பது ஐயத்திற்கு இடமளிக்காத உண்மையுமாகும். அரசரின் அழைப்பை சர்ச்சில் மறுக்காமல் ஏற்றுக் கொண்டார். சொந்த ஆதாயத்தைக் கருதும் அரசியல் வாதிகள் இந்த நிலையில் தத்தளித்திருப்பார்கள். பாராளுமன்றத்தில் உணர்ச்சிப் பெருக்கு எவ்வளவு இருந்ததென்றால், அரசருக்கு ஆதரவு தர முன்வரும் எந்த முயற்சியும் வெறுத்துத் தள்ளப்படும். இதைப் பற்றியெல்லாம் சர்ச்சில் கவலைப்படவில்லை.

அரசரின் திருமண விவகாரத்தில் சர்ச்சில் தலையிட்டது அவரது புகழுக்கு இழுக்கைக் கொண்டு வந்தது. சர்ச்சிலின் நோக்கங்கள் ஐயத்திற்குரியவையாயின. தன்னலக் குறிக்கோள்களுடன் அவர் இந்தச் சிக்கலைப் பயன்படுத்துகிறார் என்று குற்றஞ்

சாட்டப்பட்டது. பால்ட்வின் செய்ய முடியாததைச் சர்ச்சில் செய்து காட்ட முயல்வது அதிகப்பிரசங்கித்தனம் என்று சிலர் கருதினுர்கள். இவையாவும் பொதுமக்கள் உணர்ச்சி வயப்பட்டிருக்கும் நிலேயில் எழுகின்ற ஆதாரமற்ற ஐயப்பாடுகளென்பது உண்மை. சர்ச்சிலின் நண்பர்கள் அவரை எச்சரித்தார்கள். அவற்றை அவரோ காதில் போட்டுக் கொள்ளவில்லே. அரசர் தமக்கு ஏற்பட்ட நெருக்கடியில் சர்ச்சிலின் உதவியை நாடினுர். அவரும் விசுவாசமுள்ள குடிமகன் என்ற முறையில் அரசருக்கு உதவுகின்ற கடமையை ஆற்ற முன் வந்தார். கடமையை ஆற்றிய காரணத்திற்காக காமன்ஸ் அவையில் இதுவரை எந்த மனிதனும் சந்தித்திராத அளவிற்கு எதிர்ப்பை அவர் சந்திக்க வேண்டியதாயிற்று. சர்ச்சில் மக்களுக்கு இச் சிக்கல் பற்றி மிக உருக்கமான வேண்டுகோள் ஒன்றை விடுத்தார்.

‘மக்கள் உணர்ச்சி வயப்படாமல் பொறுமையுடன் காத்திருக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த அரசு முறையான சிக்கலின் தன்மையை நாடு உய்த்துணரவேண்டும். அரசுக்கும் பாராளுமன்றத்திற்கும் இடையில் எவ்வித மோதலும் இல்லே. இது பற்றி எவ்விதத்திலும் பாராளுமன்றத்தின் அறிவுரை கோரப்படவில்லே. அது தன் கருத்தைத் தெரிவிக்கவும் அனுமதிக்கப்படவில்லே. அமைச்சரவையின் ஆலோசனையின் பேரில் அரசர் முடிதுறக்க வேண்டுமா? என்பதுதான் கேள்வி. இத்தகைய அறிவுரைகள் இதற்கு முன்னர் வழங்கப்பட்டதாகத் தெரியவில்லே....................அரசர் முடி துறக்குமாறு அறிவுரை கூற எந்த அமைச்சரவைக்கும் அதிகாரம் இல்லே. இதில் அதிகாரம் பெற்றிருப்பது பாராளுமன்றம்தான். பாராளுமன்றத்தின் கருத்தை முன் கூட்டியே அறியாமல் முடிவு செய்ய அமைச்சரவைக்கு உரிமை இல்லே...........அரசரின் முடிதுறப்பு அறிக்கையில் அமைச்சரவையின் ஆலோசனேயின்பேரில் பாராளுமன்றம் கையெழுத்திடுகின்ற நிலே எழுமானுல் பாராளுமன்றம் தன் கடமையில் தவறியதாகக் கொள்ளப்படும்...எனவே, இது அவசரப்படாமல் ஆராய்ந்து செய்யப்பட வேண்டிய முக்கிய பிரச்சினே. மேலும், குறிப்பிட்ட விவகாரத்தில் அரசர் முடி துறக்கும் ஆலோசனேயை அமைச்சர்கள் வழங்கத் தேவையே இல்லே. அரசரின் கோரிக்கையை நிறைவேற்றுவதற்கு அவர்கள் மறுக்கலாம். அதனே ஏற்க, அரசர் மறுத்தால் அமைச்சர்கள் ராஜினுமா செய்வதற்கு உரிமை உண்டு.

எனவே, அரசர் முடிதுறக்க வேண்டுமென்ற பயங்கரமான கோரிக்கை விடுக்கப்படுவதற்குமுன் அரசியலின் முறைப்படி

யான நிலை என்ன வென்பதைப்பற்றிப் பாராளுமன்றம் முடிவுசெய்வது நாட்டின் நலன்களுக்கும் பேரரசின் நலன்களுக்கும் இயைபுடையதாகும். முடிதுறத்தலாகிய முடிவைத் தவிர மாற்று முறைகள் இருக்கின்றனவா? என்பதை ஆராய சகல முயற்சிகளும் எடுத்துக்கொள்ளப்படவேண்டும். பலவாரங்களாக அரசர் பொது மக்களுக்கு ஆற்றவேண்டிய பொறுப்புப் பற்றியும், தனிப்பட்ட உணர்ச்சிகள் பற்றியும் பெரும் வேதனை அனுபவித்து வருகிறார்... இவ்வாறு, தனிப்பட்ட கடமைகளுக்கும், பொதுப் பொறுப்புகளுக்கும் இடையே தவிக்கும் ஆற்றல்பெற்ற. அன்புக்குரிய ஓர் அரச பெருமகனுக்கு பிரிட்டிஷ் நாடும், அதன் அமைச்சர்களும் பரிவும், பெருங் கண்ணியமும் காட்டத் தவறினால் இந்தப் பிரச்சினையின் தீய அமிசங்கள் யாவும் எல்லையற்ற அளவில் விபரீதமாகிவிடும்......அன்பிலும், பிரார்த்தனையின் வல்லமையிலும் நம்பிக்கை கொண்டுள்ள திருச்சபைகளும் அரசருக்குப் பொறையும், சிந்தித்துச் செயல்பட அவகாசமும் அளிப்பது அவசியமாகும்........தனிப்பட்ட முறையில் பாராளுமன்றத்தையோ, பொதுமக்களையோ அணுக அரசருக்கு வழியில்லை. எனவே, அமைச்சர்கள்தாம் இதனைச் சாதிக்க முடியும். அமைச்சர்களும் அரசருக்கு எதிராகத் தமது செல்வாக்கையும். அதிகாரத்தையும் நிலைநாட்டுவது தமது கடமை என்று முடிவு செய்வார்களானால் அந்த நிலையிலும் அரசர் வாய்மூடி வாளாவிருப்பதைத் தவிர வேறு வழியில்லை.

அமைச்சர்கள் தமது சொந்த வழக்கில் நடுவர்களாக இருக்க முயலாமல், விசுவாசமான கிறித்தவப் பொறுமையுடன் தமக்கே சங்கடமாக இருக்கும் நிலையில் செயல்படவேண்டியது அவசியம்......முடிதுறத்தலாகிய முடிவு அவசரகோலமாக எடுக்கப்படுமானால் அரசால் விளையக்கூடிய அவமானம் பிரிட்டிஷ் பேரரசின் வரலாற்றைக் களங்கப்படுத்தும் என்பதில் ஐயமில்லை'[1] என்று எச்சரித்துச் சர்ச்சில் தமது உள்ளத்தைத் தொடும் உருக்கமான வேண்டுகோளை விடுத்து அமர்ந்தார்.

ஆனால், பால்ட்வின் எவ்வளவு விரைாகவவும் திரைமறைவாகவும் இந்த விவகாரத்தைச் செயல்படுத்தினரென்றால், இறுதியில் அரசரின் முடிதுறப்பு அறிக்கை பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்படும்வரை இந்த முக்கிய அரசுமுறையான பிரச்சினைபற்றி விவாதிக்கவோ, அறிக்கைவிடவோ பாராளுமன்றத்திற்கு வாய்ப்புத் தரப்படவில்லை. எனவே, மக்களின் பொது

[1] Churchill–His Life and Times, Malcolm Thomson, p. 263–265.

எண்ணத்தின் விளைவாகச் சர்ச்சிலின் முயற்சிகளுக்குக் கிடைக்கக் கூடிய ஆதரவு கிடைக்கவில்லை. நடத்துகொண்டிருப்பது என்ன வென்பதை அறியக்கூடிய வாய்ப்புக்கூட நாட்டு மக்களுக்குக் கொடுக்கப்படவில்லை. ஏற்கெனவே செய்யப்பட்ட முடிவு இறுதி யாக அவர்களிடம் சமர்ப்பிக்கப்பட்டது. அதனை ஏற்றுக்கொள் வதைத் தவிர அவர்களுக்கு வேறு வழி இல்லை.

## அரியணையில் ஆறுவது ஜார்ஜ்

பால்ட்வின் திரைமறைவில் நடத்திய தந்திரங்கள், அவற் றின் விளைவுகள் சரிதான் என்பதை மெய்ப்பித்துவிட்டதாக வரலாறு சாட்சியம் பகரலாம். சோக நாடகத்தின் கொடுமுடி போல அரசர் முடிதுறந்தார். அவரது இளைய சகோதரர் ஜார்ஜ் அரசரானார். எட்வேர்டு ஆட்சி செய்திருந்த சின்னாட்களில் அவர் மக்களின் அன்பையும் மதிப்பையும் பெற்றார். நாட்டு மரபுகளைப் பேணிக் காத்தார். எனினும், நாட்டு மக்களுக்கு நம்பிக்கை ஒளி ஊட்டக்கூடிய அறிவும் ஆற்றலும் பெற்றிருந்த அரசரின் இழிவான வீழ்ச்சி மக்களைத் துயரத்தில் ஆழ்த்தியது. ஆனால், சர்ச்சில் காமன்ஸ் அவையில் ஆற்றிய உரையின் எதிரொலிபோல், அவர் அரசரின் திருமணப் பிரச்சினையில் சொந்த லாபம் தேட முயல்கிறார் என்ற குற்றச்சாட்டுக் கிளம்பியது.

1936ஆம் ஆண்டு டிசம்பர் ஏழாம் நாளன்று பிரதமர், காமன்ஸ் அவையில் இவ்விவகாரம்பற்றி இலைமறைகாய் போன்ற ஓர் அறிக்கையைக் கொடுத்தார். துணைக்கேள்விகள் எழுப்பு வதையும் பிரதமர் விரும்பவில்லை. பாராளுமன்றத்தின் முன் னிலையில் அறிக்கை கொடுக்கும்வரை மாற்ற முடியாத முடிவுகள் எதுவும் எடுக்கக் கூடாதென்ற பழைய வேண்டுகோளை வின்ஸ் டன் மீண்டும் வற்புறுத்தினார். அவர் பேச எழுந்தபோது அவையில் சலசலப்பு ஏற்பட்டது. 'பேசாதே! அமர்க!' என்ற ஒலிகள் எழுந்தன. இறுதியாக டிசம்பர் பத்தாம் நாள் காமன்ஸ் அவையின் தலைவர், 'எட்டாம் எட்வேர்டு மன்னர் முடிதுறந்து விட்டார்' என்று அறிவித்தார். அதனைத் தொடர்ந்து பிரதமர் அறிக்கை சமர்ப்பித்தார். அந்நிலையில் எழுந்த விவாதத்தின் போது சர்ச்சில் 'இந்தக் கட்டத்தில் சச்சரவு செய்வது பயன் தராதது மட்டுமன்று, அதனால் தீமையும், தவறும்கூட விளைய லாம். நடந்தது நடந்துவிட்டது. நிகழ்ந்துவிட்டதோ, நிகழத் தவறியதோ வரலாற்றைச் சேர்ந்ததாகும், எனினும், நான் இரண்டு கருத்துகளை மட்டும் கூற விரும்புகிறேன். முதலாவது அரசருக்கும் அவர்தம் அமைச்சர்கட்கும் இடையிலோ,

அமைச்சருக்கும் பாராளுமன்றத்திற்கும் இடையிலோ, அரசு முறைமை பற்றிச் சிக்கல் எதுவும் எக்காலத்திலும் எழவில்லை என்பது தெளிவு. அரசருக்குமேல் பாராளுமன்றத்தின் முதன்மை பற்றி, அல்லது அமைச்சர்களின் அறிவுரைப்படி அரசர் நடக்க வேண்டுமென்ற விதிபற்றி என்றும் பிரச்சினை எழவில்லை, எட்வேர்டு அரசரைப் போன்று அரசியல் சட்டத்தின் விதி முறைகளை உண்மையாகவும், பிரமாணமாகவும் கடைப் பிடித்தவர் இல்லை என்பது எனது துணிபு. உண்மையில் நாட்டின் அமைதியையும், வலிமையையும் காப்பாற்ற அவர் பெரும் தியாகம் செய்திருக்கிறார். இதுவே நான் குறிப்பிட விரும்பும் முதல் கருத்தாகும்.

இரண்டாவதாக, இந்தப் பிரச்சினையில் தொடக்கத்தி லிருந்தே நான் காலம்தாழ்த்த வேண்டுமென்று கதறிக்கொண் டிருந்தேன். இதில் சம்பந்தப்பட்டவர்கள் சிந்தித்துச் செயல் புரியப் போதிய அவகாசம் கொடுக்கப்பட்டால் சமரசமான முடிவு விளையலாமென்பது எனது நம்பிக்கை. அரசர் செய்துள்ள முடிவுக்கு அவர் அவசரப்படுத்தப்பட்டார் என்ற பழிச் சொல்லிற்கு இடம் இருக்கக்கூடாது. இந்த முடிவினை அரசர் தாமாகவே, தன்னிச்சையாகவே எடுத்திருக்கிறார் என்று பிரதமர் இப்போது அறுதியிட்டுக் கூறலாம்......நான் உள்நாட்டு அமைச்சராக இருந்தபோதுதான், இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் எட்வேர்டு அரசரை வேல்ஸ் நாட்டு இளவரசராக்கு கின்ற கம்பீரமான சடங்கு வைபவம் நிகழ்ந்தது......அன்று முதல், அவர் என்னை இங்குக் கண்ணியப்படுத்தத் தவறவில்லை; தமது தனிப்பட்ட அன்பினாலும் நட்புறவாலும் அவர் என்னைக் கவுர வித்திருக்கிறார். நான் எனது தன்னிச்சையான முறையிலும், அதிகாரச் சார்பற்ற வகையிலும் அவர்தம் முன்னோர்களின் அரியணையில் அவரை நிலைபெறச் செய்யச் சட்டத்திற்குட்பட்ட வழிகளையெல்லாம் நான் கையாளத் தவறி இருந்தேனானால் அதற்காக வெட்கப்படுகிறேன்.

'இந்தத் தொன்மையான முடியரசின் வரலாற்றில் எட்வேர்டு அரசரின் ஆட்சியை மாண்புமிக்கதாகச் செய்திருக்கக்கூடிய அரிய பெரிய பண்புகளை, வீரம், எளிமை, பரிவுணர்வு யாவற் றிற்கும் மேலாக நேர்மை ஆகிய பண்புகளை இந்த அருமையான இளவரசரிடம் ஒருங்கே காண முடியும். இத்தகைய பண்புகளே அவரது வாழ்வைத் துன்பமயமான கசப்பான முடிவிற்குக் கொண்டு வந்திருப்பதுதான் இந்தச் சோக நாடகத்தின் கொடு முடியாகும்.......எனினும் இந்நாட்டின் ஏழை மக்கள் அவரை

என்றும் நினைக்கத் தவறமாட்டார்கள். அவர்கள் யாவரும் அவரது தனிப்பட்ட அமைதியையும், அகமகிழ்வையும் உளப் பூர்வமாக ஆசிப்பார்கள் என்பது உறுதி'[1] என்று சர்ச்சில் உள்ளத்தைத் தொடும் வகையில் குறிப்பிட்டார்.

இந்த உருக்கமான உரையுடன் எட்வேர்டின் முடிதுறப்பு விவகாரத்தில் சர்ச்சில் பெற்றிருந்த பணி முடிவுற்றது. அதன் விளைவுகளைப்பற்றிச் சர்ச்சிலே குறிப்பிட்டதுபோல், வரலாறு தான் விடை பகர வேண்டும். முடி துறந்த மன்னரிடமிருந்து இறுதியாக விடை பெற்றுக்கொண்டவர்களில் சர்ச்சிலும் ஒருவர். அண்மையில் காலஞ்சென்ற வின்ட்ஸர் கோமகனார் எட்வேர்டு வெளிநாட்டுப் பயணத்தைத் தொடங்கியபோது தலையணி இல்லாமல் சர்ச்சில் அவரை வழியனுப்பினார். நீர்மல்கிய கண் களுடன், 'மறக்க முடியாத இறுதிநிலையிலும் அவர் சாமான்ய மானவற்றையோ தரக்குறைவானதையோ புரியவில்லை' என்ற அடிகளை முணுமுணுத்துக்கொண்டே தமது கைத்தடியால் தாள லயத்துடன் தரையைத் தட்டிக்கொண்டிருந்தாராம் சர்ச்சில். அரசரின் வாழ்வில் இருள் மண்டிய கட்டத்தில் சர்ச்சில் அவரை ஆதரித்ததால் செல்வாக்கை இழந்திருக்கலாம்; ஆனால், கடமையை நிறைவேற்றிய மனநிறைவு அவருக்கு ஆறுதல் அளித்தது.

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 266-268.

# 15. விட்டுக் கொடுக்கும் கொள்கையின் விபரீதம்

எட்வேர்டின் முடிதுறப்பைத் தொடர்ந்து ஜார்ஜ் மன்னர் அரியணை ஏறினர். தமது வெற்றியின் உச்சநிலையில் பிரதமர் பால்ட்வின் பதவியை ராஜிஞமா செய்தார். பிரபு பட்டத்துடன் மேலவையிலும் அமர்ந்தார். நிதியமைச்சராக இருந்த நெவில் சேம்பர்லேன் புதிய பிரதமரானர். சர்ச்சிலுக்கும் பால்ட்வினுக்குமிடையில் நல்லுறவு நீடித்திருக்குமானல், சர்ச்சில்தாம் பிரதமர் பதவிக்கு உயர்த்தப்பட்டிருப்பார் என்பது உறுதி. பிரிட்டனின் வரலாறு அதிகக் கறைபடா வண்ணமும், ஐரோப்பாவின் வரலாறு அதிக அவலநிலை யுருமலும் இருக்குமாறு அவர் சிறிது காத்திருக்கவேண்டியது விதிவிட்ட வழிபோலும். சேம்பர்லேன் நடைமுறைக் காரியவாதி. ஆனல், தம் நாட்டவரைத் தவிர பிறநாட்டு மக்களின் மனப்போக்குகளைப் பற்றி அறியாதவர். அறிந்துகொள்ளவும் துணியாதவர். கற்பனை ஆற்றலும், மக்களைக் கவரும் திறமும் இல்லாத சேம்பர்லேன் அமைதிக் காலத்திற்கேற்ற அருமையான பிரதமர். உலகத்தின் சூழ்நிலை ஆபத்தான கட்டத்தில் இருக்கின்றபோது முன் நோக்கும், தார்மீகத்துணிவும், சுறுசுறுப்பான அறிவாக்கமும், பிறநாட்டு மக்களைப்பற்றிய ஆழ்ந்த உள்ளுணர்வும் ஒரு பிரதமருக்கு இன்றியமையாதப் பண்புகள். இவை எவையும் சேம்பர்லேனிடம் காணப்படவில்லை. பால்ட்வின் - சர்ச்சில் மோதலின் காரணமாகத் தற்செயலாகப் பிரதமர் பதவியைப் பிடித்துக் கொண்ட சேம்பர்லேனின் ஆட்சி பிரிட்டனுக்கும், உலகத்திற்கும் கேடு விளைவிப்பதாக இருந்தது.

சேம்பர்லேன் தமது அமைச்சரவையில் சர்ச்சிலுக்கு இடமளிக்காததில் வியப்பல்லை. வின்ஸ்டன் சேம்பர்லேனை விஞ்சி விடுவார் என்பது மட்டுமன்று. இருவரின் கொள்கைகளுக்கும் இடையே பெரும் வேறுபாடுகள் இருந்தன. சேம்பர்லேனுக்குச்

சர்வதேச சங்கத்திலும், நாடுகளின் கூட்டுப் பாதுகாப்பிலும் நம்பிக்கை கிடையாது. ஒரு வர்த்தகனைப்போல் பேரம் பேசுவதில் அவர் வல்லவர். ஆக்கிரமிப்பாளர்களாக மாறக்கூடிய எதிரிகளைப் பசப்பு வார்த்தைகளால் வசப்படுத்த முடியும் என்பதுதான் அவரது திட்டம். மக்களின் எண்ணங்களை அவர் கருத்தில் கொள்ளவில்லை. பசுக்களை மேய்ப்பவன் பசித்திருக்கும் புலிகளுடன் பேரம் பேசினால் என்ன நடக்கும்? சேம்பர்லேனின் கதையும் இதுபோல்தான். அவருடைய கொள்கைகளை மக்கள் பலவீனத்தின் சிகரமெனக் கருதியது இயல்புதான்.

பால்ட்வினைப் போலவே சேம்பர்லேனும் 1936ஆம் ஆண்டில் ஸ்பெயின் நாட்டின் உள்நாட்டுப் போரில் தலையிடவில்லை. ஆனால், போர்முற்றிய நிலையில் ஜெர்மனியும், இத்தாலியும் ஸ்பானிய ஃபாஸிஸ்டுகளுக்கு வெளிப்படையாகத் துணை வந்தனர். இவர்களின் பிற்கால ஆக்கிரமிப்புகளுக்கு ஸ்பெயின் ஒத்திகையோ என்று எண்ணத் தூண்டியது. இந்த இக்கட்டான நிலையிலும் சேம்பர்லேன் இத்தாலியை நய வார்த்தைகளால் நல்வழிப் படுத்த முயன்றார். இப் போக்கை எதிர்த்த வெளி நாட்டு அமைச்சர் ஈட்டனை அமைச்சரவையை விட்டு வெளியேற்றினார். இது பிரிட்டன் எதிரிகளுக்கு ஊக்கமளித்தது. நண்பர்கள் நம்பிக்கை இழக்குமாறு செய்தது. 'சர்வாதிகாரிகளின் கொட்டம் அதிகமாகும். ஐரோப்பாவின் சுதந்திர மக்கள் இதனை அபாய அறிகுறியெனக் கண்டு அஞ்சுவார்கள்' என்பது சர்ச்சிலின் கருத்து.

ஈட்டனுக்குப் பின்னர் வெளி விவகாரத்துறையின் பொறுப்பையும் சேம்பர்லேனே எடுத்துக் கொண்டார். 1938ஆம் ஆண்டின் ஒப்பந்தப்படி பிரிட்டன் அபிசினியாவில் இத்தாலியின் ஆட்சியை ஒப்புக்கொண்டதோடு, சூயஸ் கால்வாய் கட்டுப்பாட்டிலும் அதற்குப் பங்களித்தது. மத்தியதரைக் கடலில் படை நடமாட்டம்பற்றிச் செய்தி பரிமாறிக்கொள்ளவும் இருவரும் ஒப்புக்கொண்டனர். சைப்ரஸில் பிரிட்டிஷ் தளத்தை நிறுவுகின்ற யோசனை கைவிடப்பட்டது. சர்ச்சில் இந்தப் போக்கை வன்மையாகக் கண்டித்து, இதனாலெல்லாம் உண்மையான அமைதி ஏற்பட்டுவிடாது என்று எச்சரித்தார். சேம்பர்லேனோ 'கொண்டது விடாத முதலையைப்போல்' தமது முடிவை மாற்றிக்கொள்ளத் தயாராக இல்லை. சில ஆண்டுகளுக்காவது அமைதியை விலை கொடுத்து வாங்கிவிட்டதாக அவர் நினைத்தார் போலும். ஆனால், மேற்கூறிய ஒப்பந்தம் நிறைவேறி ஒன்றரை

ஆண்டுக்குள் சேம்பர்லேனின் 'வசிய வித்தையை' உலகம் கண்டுகொண்டது. சர்ச்சிலின் தீர்க்கதரிசனமும் நிறைவேறியது. 1938ஆம் ஆண்டு மார்ச்சில் ஹிட்லர் ஆஸ்திரியாவைத் தாக்கிக் கைப்பற்றினர். சேம்பர்லேன் பெயரளவில் மறுப்புத் தெரிவித்தார். வாயை மூடிக்கொண்டு வாளாவிருக்குமாறு அவருக்குச் சொல்லப்பட்டது. பாராளுமன்றத்தில் ஒரு மூலையில் அமர்ந்திருந்த சர்ச்சில் ஐரோப்பாவின் ஜனநாயக நாடுகள் இதிலிருந்து கற்றுக்கொள்ள வேண்டிய பாடத்தைச் சுட்டிக்காட்டினர். எவ்வாறு ஹிட்லரின் ஆக்கிரமிப்புத் திட்டம் தொல்லை விளைவிக்கப் போகிறதென்று குறிப்பிட்டார். நாஜிகள் ஆஸ்திரியாவை ஆக்கிரமித்ததால் தென்கிழக்கு ஐரோப்பாவின் பொருளாதார, ராணுவ வளங்களைக் கட்டுப்படுத்த வழி வகுக்குமென்பதை ஐரோப்பிய நாடுகளின் கவனத்திற்குக் கொண்டு வந்தார். குறிப்பாகச் செக்கோஸ்லாவியா நாட்டிற்கு ஆபத்து என்று அபாயச் சங்கை ஊதினர். இந்த எச்சரிக்கைகளை யாரும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. சர்ச்சில் வீணுகப் போர்வெறியைக் கிளப்புகிருர் என்று பலர் அலுத்துக்கொண்டனர்.

கிழக்கில் ருஷ்யர்களும் சர்ச்சிலைப் போலவே நாஜிகளின் தோல்வியைப்பற்றி அக்கறை கொண்டிருந்தனர். ஃபிரான்சின் துணையுடன் செக்கோஸ்லாவியாவிற்கு உதவுவதற்கு ருஷ்யா முன்வந்தது. சர்வதேச சங்கத்தின் அமைப்பின்கீழ் இந்த ஒப்பந்தத்தை மேலும் பல நாடுகளுடன் செய்துகொள்ள வேண்டுமென்பது ருஷ்யாவின் ஆவல். இதற்கும் நெவில் சேம்பர்லேன் செவி சாய்க்கவில்லை. கிரெம்ளின் தலைவர்களின் யோசனையை அவர் ஐயக் கண்கொண்டு நோக்கினர். பிரிட்டனை ஜெர்மனிக்கு எதிராகப் போரில் ஈடுபடுத்த வேண்டுமென்று ருஷ்யர்கள் சாணக்கிய தந்திரம் செய்கிருர்களென்று சேம்பர்லேன் எண்ணினர். ஐரோப்பாவின் அமைதிக்குத் தீங்கு விளைவிக்கக் கூடுமென்று ருஷ்யாவின் யோசனையை அவர் தள்ளிவிட்டார். முதலில் அமெரிக்காவையும், பின்னர் ருஷ்யாவையும் வீசியெறிந்துவிட்டு, சேம்பர்லேன் பிரிட்டனைத் தனியாகத் துண்டித்துக் கொண்டார். இந் நிலையில் சர்ச்சில் தம் முயற்சிகளை விட்டுவிடவில்லை.

## போர் முழக்கமும் பேர் உடன்பாடும்

ஃபிரான்சுடன் நெருங்கிய உறவு கொள்ளவும், வல்லாட்சியாளருக்கு எதிராகப் பேர் உடன்பாடு ஒன்றை நிறுவவும் நாடிய சர்ச்சில் ஃபிரஞ்சு அரசியல், ராணுவத் தலைவர்களுடன் தொடர்ந்து பேச்சு வார்த்தைகள் நடத்தப் புறப்பட்டார்.

ஃபிரஞ்சுப் பிரதமரான பிளௌம் (Blum) போர் அமைச்சரான டலாடியர் (Daladier) ஆகியோரை அவர் சந்தித்தார். தனிப் பட்ட முறையில் பிரிட்டனின் கொள்கையைப்பற்றி அவர் ஒளிவு மறைவில்லாத அறிக்கை கொடுக்க முடிந்தது. பிரிட்டனும் ஃபிரான்சும் எவ்வாறு ஒத்துழைக்க முடியுமென்பதை அவர் விளக்கினார். இந்தச் சந்தர்ப்பத்தில் தான் சர்ச்சில் பால் ரெய்னுடு (Paul Reynaud) என்பவரையும் கண்டு பேசினார். இலண்டன் திரும்பிய சர்ச்சில் வெளிவிவகார அமைச்சகத்தில் ஹாலி ஃபாக்ஸை (Halifax) சந்தித்துத் தமது பேச்சு வார்த்தைகளைப் பற்றிக் கூறினார். சர்ச்சிலின் முயற்சிகளின் விளைவாக நேச நாடுகளான பிரிட்டனும் ஃபிரான்சும் தத்தமுடைய படைவளங் களை ஒன்று திரட்டுவதில் ஒருமுடிவு காண்பதற்கு வழி வகுத்தன.

1938ஆம் ஆண்டு மே திங்களில் ஆற்றிய உரையில் சர்ச்சில் தமது மாற்று வெளிநாட்டுக் கொள்கையைப்பற்றி பொது மேடையில் குறிப்பிட்டார். 'சர்வதேச சங்கத்தின் படைப் பலத்தைப் பெருக்கி அதற்கு ஆதரவாக நிற்கவேண்டும். அதனைச் சீரமைத்து, அதன் அதிகாரத்தை வலுப்படுத்த வேண்டும். இன்று ஒன்றுபட்டு நிற்கும் பிரிட்டன், ஃபிரான்ஸ் ஆகிய இரு நாடுகளின் பலத்தை எதிர்க்கப் பல நாடுகள் இல்லை. நாஜி கொடுங்கோன்மையினால் அழிவை எதிர்நோக்கி நிற்கும் சிறு நாடுகளை அணுகி, அவை தமக்குத்தாமே உதவிக் கொள்ளா விட்டால் அவர்களுக்கு ஃபிரஞ்சு-பிரிட்டிஷ் உதவி இல்லை என்று கூறவேண்டும். இவ்வாறு படைதரித்த பத்து நாடுகள் ஐரோப் பாவில் வலுப்பெறுமானால், போராபத்து குறைந்து அமைதி ஏற்பட வழியுண்டு. இதே நேரத்தில் ஐரோப்பாவிற்குக் கிழக்கே அமைந்திருக்கும் ருஷ்யாவின் உதவியையும் நாம் பெறுதல் வேண்டும். பேரணியாக இருக்கும் பெருநாடாகிய ருஷ்யாவுடன் பொதுத் தன்மையான தொடர்பை ஏற்படுத்திக் கொண்டால், நாஜிகளின் ஆக்கிரமிப்பை முறியடிக்க முடியும், இதற்குப் பதிலாக, நாஜி ஜெர்மனியுடன் சிறப்பான ஒப்பந்தம் செய்து கொள்வதால் ஒருபயனும் ஏற்படாது. இதனால், கட்டுப்பாடுகள் நீக்கப்பெற்ற ஹிட்லர் மைய ஐரோப்பாவில் நாஜி முறையைப் பரப்புவதில் கட்டாயமாக ஈடுபடுவார். எனவே, நமது வெளி நாட்டுக் கொள்கையை மாற்றிக் கொள்ளாவிட்டால் நாஜிக் கொடுமைக்குப் பலியாவோம்' என்று சர்ச்சில் எச்சரிக்கை விடுத்தார்.

ஆனால், பிரதமரோ பேர் உடன்பாட்டுத் திட்டத்தைத் தள்ளுபடி செய்தார். கவர்ச்சிகரமானதாக இருந்தபோதிலும்

அத்திட்டம் நடைமுறையில் செயல்படுத்த முடியாதது என்பது அவரது கருத்து. ஃபிரான்ஸ் செக் நாட்டிற்கு அளிக்க முன்வந்த உறுதி மொழியில்கூடப் பங்குபெற அவர் விரும்பவில்லை. இருள் சூழ்ந்த இந்த நிலையில், கடற்படையினருடன் தொடர்பு கொள்ளவும், உலாச் செல்லவும் சர்ச்சிலுக்குப் பல வாய்ப்புகள் கிடைத்தன. ஜூன் திங்களில் போர்ட்லாண்டில் நீர்மூழ்கிகளை வேட்டையாடும் நடவடிக்கைகளை அவர் நேரில் கண்டார். அவைபற்றி அவர் கொண்டிருந்த ஐயப்பாடுகள் நீங்கின. உலகத்தின் மிக வன்மையான தாய்நாட்டுக் கப்பற்படையின் திறமையைக் கண்டு அவர் வியந்தார்.

சேம்பர்லேனோ தன்னிறைவில் உறுதி தளராமல் இன்னும் அமைதி முயற்சிகளைத் தொடர்ந்து செய்துகொண்டிருந்தார். ஆஸ்திரியாவை விழுங்கிவிட்டு, ஹிட்லர் செக்நாட்டு அரசாங்கத்திற்கு எதிரான பிரச்சாரத்தைத் தூண்டி விட்டார். சுடெட்டென் (Sudeten) பகுதியில் இரு மில்லியன் ஜெர்மன் மக்கள் வாழ்வதால் சுடெட்டென்லாந்து ஜெர்மனிக்குச் சேரவேண்டுமென்பது அவரது கோரிக்கை. ஹிட்லரின் ஆக்கிரமிப்புத் திட்டங்கள் வெளிப்படையானவை. அவரது 'மைன்கேம்ஃப்' (Mein Kamf) அல்லது 'எனது போராட்டம்' என்ற நூலில், அவரது படையெடுப்புத் திட்டங்களைப்பற்றி விரிவாக எழுதியிருந்தார். 1938ஆம் ஆண்டு கோடையில் ஃபிரான்ஸூம், பிரிட்டனும் இறுதியாகப் போர் ஆயத்தத்தில் ஈடுபடவே, அவை நாஜி வல்லாட்சியாளரை எதிர்த்து நிற்கும் என்று உலகம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது.

செக் நாட்டின் எல்லைகளில் ஜெர்மன் படைகள் நிறுத்தப்பட்டன. செக் மக்களும் தற்காப்பு ஏற்பாடுகளைத் தீவிரப்படுத்தினார்கள். ஃபிரான்ஸ் நாடு மாகிஞட் (Maginot) அரணை வலுப்படுத்தியது. பிரிட்டனில் தற்காப்பு ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டன. இந்நிலையில் 'குடைதரித்த' நெவில் சேம்பர்லேன் ஹிட்லரைச் சந்திப்பதற்காகப் பெர்க்டெஸ்கேடன் (Berehtes gaden) நகருக்குப் பறந்து சென்றார். இதனைத் தொடர்ந்து போர் மூளும் என்று அனைவரும் எதிர்பார்த்தனர். ஏற்கெனவே, செக் நாட்டின் எல்லையில் ஹிட்லர் இரத்த வெறிகொண்ட கலவரங்களைத் தூண்டிவிட்டுக் கொண்டிருந்தார். இந்நிலையில் தான் 1938ஆம் ஆண்டு செப்டம்பரில் ஹிட்லர்-சேம்பர்லேன் சந்திப்பு நிகழ்ந்தது. சுடெட்டென்லாந்தை ஜெர்மனிக்குக் கொடுத்துவிட வேண்டுமென்பது ஹிட்லரின் முதல் நிபந்தனை. சேம்பர்லேன் இலண்டன் திரும்பி வந்தார். ஃபிரஞ்சுப் பிரதமரை

யும், வெளிநாட்டு அமைச்சரையும் அழைத்துப் பேச்சு வார்த்தைகள் நடத்தினர். நீண்ட விவாதத்திற்குப்பின் பிரிட்டனும், ஃபிரான்சும் ஹிட்லரின் நிபந்தனையை ஏற்குமாறு செக் அரசாங்கத்திற்குக் கூட்டு அறிக்கை விடுத்தன. இதற்கு உடன்படா விட்டால் ஃபிரான்ஸ் தனது ராணுவ உதவி ஒப்பந்தத்தை ரத்து செய்து விடுவதாகவும் மிரட்டியது. இந்த ராணுவ உதவி ஒப்பந்தங்களில் பங்கு பெற்றிருந்த ருஷ்யா கலந்தாலோசிக்கப்படவில்லை. தனது ஒப்பந்த வாக்குறுதிகளை நிறைவேற்றத் தயாராக இருப்பதாக ருஷ்யா அறிவித்ததையும் கூட ஃபிரான்சும், பிரிட்டனும் புத்திசாலித் தனமாகப் புறக்கணித்தன.

ஃபிரான்ஸ் ஹிட்லரின் போரபாயத்தை அதிகமாக உணர்ந்திருந்ததினல், அந் நாட்டின் படைப்பலம் ஏட்டளவிலாவது பிரிட்டனின் பலத்தைவிட அதிகமாக இருந்தது. ஆனல், பிரிட்டனின் போக்கை அனுசரித்து ஃபிரான்ஸ் செக் நாட்டிற்கு உதவுகின்ற ஒப்பந்தத்தையும் மாற்றிக் கொண்டது. ஃபிரான்சின் நிர்வாகமோ ஊழல்கள் நிறைந்திருந்தது. ஃபிரான்சின் முக்கிய தொழிலதிபர்கள் ஜெர்மனி சார்புடையவர்களாக இருந்தனர். ஃபிரஞ்சுப் படையிலும் நாஜி செல்வாக்கு மிகுந்திருந்தது. எனவே, ஃபிரான்ஸ் போரில் ஈடுபடாமல் ஒதுங்கி நிற்க முயன்றதில் வியப்பில்லை. செக் நாட்டின் நிலை பரிதாபத்துக்குரியது. வேறு வழியின்றி செக் அரசினர் பணிந்தனர். இந்தச் செய்தியை ஹிட்லருக்கு அறிவிக்கச் சேம்பர்லேன் மீண்டும் ஜெர்மனிக்குச் சென்றார். ஆனல், ஹிட்லரோ மேலும் பயங்கரமான கோரிக்கைகளைக் கொண்டு வருவதைக் கண்டு சேம்பர்லேனே அதிர்ச்சியுற்றார். போரைத் தவிர்க்க முடியாதநிலை உருவாகியது. நிலைமையைப் புரிந்துகொண்டு ஃபிரான்சும், பிரிட்டனும் செக் நாட்டைத் தயாராகுமாறு கூறின. பிரிட்டனின் கடற்படைக்கும் எச்சரிக்கை விடுக்கப்பட்டது. சேம்பர்லேனே ஹிட்லரை இன்னும் வசப்படுத்தலாமென்று எண்ணிக் கொண்டிருந்தார். போர்மேகம் திரண்டு கொண்டிருந்தது. இலண்டன் மக்கள் வீடுகளைக் காலி செய்தனர். விமானத் தாக்குதலிலிருந்து தப்பிக்க வாயு முகமூடிகள் வழங்கப்பட்டன. பூங்காக்களில் பதுங்கு குழிகள் வெட்டப்பட்டன. ஹிட்லர் ஐந்து நாள்களுக்குள் தம் கோரிக்கைகள் நிறைவேற்றப்பட வேண்டுமென்று எச்சரிக்கை விடுத்தார்.

ஹிட்லரின் கோரிக்கைகளுக்குப் பணியக் கூடாதென சர்ச்சில் பொது அறிக்கை விடுத்தார். ஹிட்லரின் தொல்லை செக்

நாட்டை மட்டும் பொறுத்ததன்று. ஒவ்வொரு நாட்டின் உரிமைக்கும், ஜனநாயகத்திற்கும் அது ஆபத்து என்று அவர் அறை கூவினர். அவரது கருத்துப்படி ஓநாய்களுக்கு ஒரு சிறு நாட்டை இரையாக்குவதனல், ஐரோப்பாவின் பாதுகாப்பை வாங்கி விடலாமென்பது கானல் நீராகும். பிரிட்டனும், ஃபிரான்சும் தம்முடைய தற்காப்பு ஏற்பாடுகளை முடிப்பதற்குள் ஜெர்மனியின் பலம் பன்மடங்கு பெருகி விடுமென்பது அவரது துணிவு. அமைதியை விரும்பிய பிரதமரோ, முயற்சிகளைக் கைவிடுவதாக இல்லை. மூன்றும் முறையும் ஜெர்மனிக்குச் சென்று ஏதாவது ஏற்பாடு செய்ய முடியுமாவென்ற சாத்தியக்கூறுகளை அவர் ஆராய்ந்து கொண்டிருந்தார். இதுவரை நடைபெற்றிருந்த நிகழ்ச்சிகளைப்பற்றி பிரதமர் காமன்ஸ் அவைக்கு அறிக்கை சமர்ப்பித்துக் கொண்டிருந்த நிலையில் அவருக்கு அழைப்பு வந்தது. இந்த முறை ஃபிரஞ்சு பிரதமரான டலாடியருடன் (Daladier) அவர் ஹிட்லரை மியூனிச் நகரில் சந்தித்துப் பேச ஏற்பாடாயிற்று. இதில் நடுவராக முசோலினியும் இருக்க வேண்டுமென்பது திட்டம்.

### கண்ணியமான அமைதியா? கசப்பான உண்மையா?

இவ்வாறு 1939ஆம் ஆண்டு செப்டம்பர் 29ஆம் நாளில் ஃபிரான்ஸ், பிரிட்டன் பிரதமர்கள் மியூனிச் சென்றனர். பிரிட்டனைவிட ஃபிரான்ஸ் போரை எவ்வாறேனும் நிறுத்த வேண்டுமென்று உறுதி பூண்டிருந்தது. ஏற்கெனவே, கோடஸ் பெர்க்கில் (Godesburg) தள்ளப்பட்ட நிபந்தனைகளை மீண்டும் ஹிட்லர் கொண்டுவந்தார். இவற்றை எவ்வித திருத்தமுமின்றிச் சேம்பர்லேனும், டலாடியரும் அவ்வாறே ஏற்றுக் கொண்டனர். விட்டுக் கொடுக்கும் கொள்கைக்காக செக் நாடு பலியிடப் பட்டது. ஹிட்லர் கோரிய பகுதிகள் அவருக்கு வழங்கப்பட்டன. செக் மக்களுக்கு அவர்கள் நாட்டின் எச்சப்பகுதிதான் எஞ்சியது. அமைதி காத்த வீரராகச் சேம்பர்லேன் நாடு திரும்பினர். மக்கள் ஆரவாரம் செய்து அவருக்கு வரவேற்பளித்தனர். 'ஹிட்லரின் வாக்குறுதி' என்ற துண்டுக் காகிதத்தைத் தம்முடன் கொண்டு வந்தார். இந்தக் காகிதத் துண்டைக் கையில் ஆட்டிக் கொண்டே டவுனிங் வீதியில் கூடியிருந்த மக்களுக்குக் 'காலத்திற் கேற்ற அமைதி' 'கண்ணியம் கலந்த அமைதி' (Piece with Honour) என்று சேம்பர்லேன் பிரகடனப் படுத்தினர். ஆனல், இந்த ஒப்பந்தம் பற்றிய திரைப்படங்கள் இங்கிலாந்தில் திரையிடப் பட்டபோது நாட்டுமக்கள் வெகுண்டெழுந்தனர். பிரதமர் கடும் எதிர்ப்பிற்குள்ளானர். டஃப் கூப்பர் (Duff Cooper) என்ற

அமைச்சர் பிரதமரின் ஒப்பந்தத்தை எதிர்த்துப் பதவியை ராஜினுமா செய்தார்.

அண்மையில் ஏற்பட்ட நெருக்கடியில் போரைத் தவிர்த்த அரசினரின் கொள்கையைப் பாராட்டிச் சான்றிதழ் வழங்கும் நோக்கத்துடன் காமன்ஸ் அவை கூட்டப்பட்டது. உறுப்பினர் களில் பலர் பிரதமரைப் பாராட்டினுர்கள். 'விட்டுக் கொடுக்கும் கொள்கையின் வீரரான' (Hero of Appeasement) சேம்பர்லேன் நாடுபோற்றும் நல்லவராகி விட்டார். உள்நாட்டிலும், வெளி நாட்டிலும், ஜெர்மனியிலும்கூட சேம்பர்லேனுக்குப் புகழ் மாலேகள் குவிந்தன. போர் தவிர்க்கப்பட்டதால், மக்கள் விடுதலே பெற்றவர்கள்போல் வெற்றிவிழாக் கொண்டாடினர்.;

இந் நிலேயில், நாசம் நிகழும் என்ற தமது எரிச்சரிக்கைக்குப் பரிவுகாட்டாத மக்களுக்கு உரை நிகழ்த்தச் சர்ச்சில் எழுந்தார்.

'எல்லாம் முடிந்துவிட்டது. செக்நாடு மௌனமாக, கை விடப்பட்டு, சிதைக்கப்பட்டு, அவலமாக இருளில் புதைக்கப்பட்டு விட்டது; மேற்கு நாடுகளுடனும், சர்வதேச சங்கத்துடனும் அது கொண்டிருந்த உறவுகளுக்காக செக்நாடு மீளாத துன்பத்தை அடைந்துள்ளது. இனிமேல் செக்கோஸ்லோவியா சுதந்திரம் பெற்ற நாடாக இருக்க முடியாதென்பது எமது துணிவாகும். சின்னுட்களில் செக்நாடு நாஜீ ஆட்சியில் மூழ்கிவிடும். ஒருவேளே செக் மக்கள் விரக்தி காரணமாக அல்லது பழிதீர்க்கும் நோக்கத் துடன் ஜெர்மனியுடன் சேர்ந்து கொள்ளலாம். எனினும், நமது தோல்வி மகத்தானது; முழுமையானது; ஃபிரான்சின் தோல்வி அதைவிடப் பரிதாபகரமானது, நாஜி வல்லரசு என்றும் பிரிட்டனின் நண்பனுக இருக்க முடியாது'[1] என்று சர்ச்சில் குறிப்பிட்டார்.

'பிரிட்டிஷ் பாதுகாப்பினேப் புறக்கணித்ததால் நம்நாடு போரில்லாமலே தோல்வி கண்டிருக்கிறது. இத் தோல்வி நம்மை யெல்லாம் எதிர்நோக்கி இருக்கும் கசப்பான உண்மையின் முன்னேடியாகும். அறநெறிப் பண்பும், வீரவுணர்வும் மீண்டும் உயிர் பெற்ருலன்றி, பிரிட்டன் பண்டைய நாள்களில் இருந்தது போன்று உரிமையுடன் தலேநிமிர்ந்து நிற்காது' என்று, அவர் வேதனேயுடன் எச்சரித்தார். கடந்த ஐந்தாண்டுக் காலத்தின் வீணுன நல்ல கருத்துகளின், கோழைத்தனத்தின், பிரிட்டிஷ் வன்மையின் பின்வாங்குதலின் விளேவுதான் செக்நாட்டுச் சோக நாடகம்' என்பதையும் அவர் குறிப்பிடத் தவறவில்லே.

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 276.

'போர் என்று பேசுவோரெல்லாம் பித்தர்கள்' என்று கருதப் படும் நிலைதான் கடந்த ஐந்தாண்டுகளில் ஏற்பட்டுள்ளது. வன்மைக்கும், பாதுகாப்பிற்கும் புகழ் பெற்றிருந்த பிரிட்டன், நல்லது செய்ய நல்ல திறம் பெற்றிருந்த பிரிட்டன், தோல்வி கண்ட எதிரிக்கும் தாராளம் வழங்கக்கூடிய தாய்நாடு, ஜெர்மனி யின் குறைகளைத் தீர்த்திருக்கக்கூடிய ஒருநாடு, ஜெர்மனி படை தரிப்பதைக்கூடத் தடுத்து நிறுத்தி இருக்கக்கூடிய பிரிட்டன் கடந்த ஐந்தாண்டுகளில் பாதுகாப்பில்லாத பரிதாபத்துடன் காட்சியளித்ததைச் சர்ச்சில் கண்டார். மனம் வெதும்பினார். இந் நிலைக்குப் பொறுப்பேற்க வேண்டிய பிரிட்டிஷ் அரசினரைச் சாடினார். அவர்கள், எதிரி படை தரிப்பதைத் தடுப்பதிலும், பிரிட்டன் பலத்தைப் பெருக்குவதிலும் தவறி விட்டார்கள். சர்வதேச சங்கமாகிய மாபெரும் நிறுவனம் இழிவு படுத்தப்பட்டு விட்டது. பழைய தவறுகளைச் சரிக் கட்டியிருக்கக் கூடிய கூட்டு ஒப்பந்தங்களும், நேச உடன்பாடுகளும் புறக்கணிக்கப்பட்டன. இவ்வாறு பிரிட்டனின் சோதனை மிகுந்த கட்டத்தில் போதுமான தேசீயப் பாதுகாப்பும், பன்னாட்டுக் காப்புநிதியும் இன்றி இருப் பதற்கு நாட்டின் தலைவர்களே காரணம் என்பதைச் சர்ச்சில் தெளிவாக விளக்கினார்.

ஜெர்மன் மக்களிடம் பரிவு கொண்டிருப்பதாகவும், அவர் களுடன் உறவு கொள்வது கடினமில்லையென்றும் கூறிய சர்ச்சில், ஜெர்மன் மக்களிடம் அதிகாரம் இல்லை என்றும், ஜெர்மனியின் தற்போதைய அரசினருடன் நட்புறவு கொள்வதென்பது முடியாது என்றார். பிரிட்டிஷ் ஜனநாயகமும், நாஜி எதேச் சாதிகாரமும் இரு துருவங்கள் போன்றவை. கிறிஸ்தவ அற நெறிக் கொள்கைகளைக் காற்றிலே பறக்கவிட்டு, மக்களை வாட்டி வதைப்பதில் அகமகிழ்வு கொள்ளும் ஓர் அராஜக அரசை பிரிட்டிஷ் ஜனநாயகம் நம்பமுடியுமா? என்பதுதான் சர்ச்சில் எழுப்பிய வினா. இத்தகைய நாட்டின் செல்வாக்கு வட்டத்தினுள் பிரிட்டன் இழுக்கப்படுவது, நாட்டின் வருங்காலத்தை நிர்ண யிக்கும் தலைவிதியை ஜெர்மனி நிச்சயிக்கும் நிலைதான் அவல மானது. எனவே, பிரிட்டன் தனது பழைய சுதந்திர நிலையைப் பெற வேண்டுமென்றால் அதன் விமானப் படைப் பலத்தைப் பெருக்குவதுதான் சிறந்தவழி என்பது சர்ச்சிலின் கருத்து. பிரிட்டனின் விசுவாசமான குடிமக்களை, வீரப் பெருமக்களை சர்ச்சில் குறை கூறவில்லை. போர் தவிர்க்கப்பட்டதற்காக பரவசக் கூத்தாடும் மக்கள் பெரியதொரு உண்மையையும் அறிந்துகொள்ள வேண்டும். அதாவது, பிரிட்டனின் பாது காப்பு முயற்சிகள் புறக்கணிக்கப்பட்டிருக்கின்றன. பிரிட்டனின்

வரலாற்றில் ஒருமைல் கல்லே மக்கள் கடந்து வந்திருக்கிருர்கள் என்பதை அவர்கள் அறியவேண்டும். ‘பிரிட்டன் துலாக் கோலில் நிறுக்கப்பட்டு விட்டது. அதன் சக்தி போதுமானதாக இல்லே. இது மட்டுமன்று. இன்னும் நடக்க வேண்டியவை பாக்கி இருக்கின்றன’ என்ற எண்ணக் குமுறல்கள் வெடித்து வந்தன சர்ச்சிலின் துயரமிக்க நெஞ்சத்திலிருந்து.

சர்ச்சில் தமது நீண்ட உரையை முடித்தபோது கையொலி ஆரவாரம் இருக்கவில்லே. காமன்ஸ் அவையின் மனநிலேக்கு அவரது போக்கும், பேச்சும் ஒத்திருக்கவில்லேயோ? அன்று மியூனிச்சில் விட்டுக் கொடுத்த வரலாற்றைச் சர்ச்சில் தாக்கியதை இன்று பொதுமக்கள் ஒத்துக் கொள்ளுகிருர்கள். ஆனல், அவர் அதனே மக்கள் மன்றத்தின் முன் படைத்தபோது அவரை வெறுத்த வர்களின் எண்ணிக்கைதான் அதிகம். சேம்பர்லேன் அமைதியைக் காக்க மேற்கொண்ட நடவடிக்கைகளேச் சர்வ கட்சிகளும் வரவேற்றன. ‘ஜனநாயக நாடுகளெல்லாம் ஹிட்லரிடம் தோல் வியைக் கண்டன’ என்று சர்ச்சில் குறிப்பிட்டதை எதிர்த்துக் கண்டனக் குரல்கள் கிளம்பின. இறுதிவரை உறுதி குலேயாத சர்ச்சில் சொல்ல வேண்டியவற்றைச் சொல்லி, விடுக்க வேண்டிய எச்சரிக்கைகளே விடுத்தார்; அவர் கூறியவாறே சகலமும் நிறை வெய்தின.

‘மியூனிச் அமைதி ஏற்பாடு’ நிறைவேறியதால் ஹிட்லரின் படைத் தலேவர்கள் அவரைப் பதவி நீக்கம் செய்வது தடுக்கப் பட்டது என்ற ஒரு கதை கூறப்பட்டதுதான் இந்தக் கேலிக் கூத்தின் சிகரமாகும். தனது பேராசைத் திட்டங்களால் ஜெர்மனியை அழிவுப் பாதையில் ஹிட்லர் செலுத்திவிடக் கூடுமென்று நம்பிய அவர்தம் படைத்தலேவர்கள் அவரைக் கைது செய்ய திட்டம் தீட்டினர்களாம். ஆனல், சதிகாரரின் சூழ்ச்சிகள் நல்ல முறையில் அமைக்கப்படாததால், மியூனிச் சந்திப்பு அதனேத் தகர்த்து விட்டதாம். சேம்பர்லேன் தனிப்பட்ட முறையில் தலேயிட்டு ஹிட்லரின் உயிரைக் காப்பாற்றி விட்ட தாகப் பிரச்சாரம் நடந்தது.

மியூனிச் விவகாரம் சேம்பர்லேன் நடத்திய ‘வசிய நாடகத்தின்’ இறுதிக் கட்டம் மட்டுமன்று. அதன் நிறைவு பாகும். ஃபிரான்சும், பிரிட்டனும் புனித ஒப்பந்தத்தை மீறி செக் நாட்டைச் சீரழிய விட்டார்கள். தமக்குத் துணேயாக நிற்கக்கூடிய ஒரு ஜனநாயக நாட்டை, ஐரோப்பாவின் சிறந்த ஆயுதங்களேயும், வீரர்களேயும் உருவாக்கக்கூடிய தொன்மை

வாய்ந்த பொஹிமியாவை அநியாயமாக எதிரிக்குத் தாரை வார்த்தார்கள். மூடி வைக்கப்பட்ட மர்மம் வெடித்து வெளி யாயிற்று. ஒத்திவைக்கப்பட்ட போர், எரிமலையெனச் சீறி யெழுந்தபோது, 'மியூனிச் விவகாரம் இழிவும் தவறும் நிறைந்த அவலம்' என்பதை பிரிட்டன் உணர்ந்தது. பிரதமர் செய்தது நியாயம் என்பதைத் தர்க்க ரீதியாக நிறுவலாம். ஆனுல், ஜெர்மனியின் படைப்பலம் பன்மடங்கு பெருக்கப்பட்டபோது, ஃபிரான்சும், பிரிட்டனும் நலிவுற்றுக் கிடந்ததை யார்தாம் மறுக்க முடியும்? மேலும், ஹிட்லர்தாம் செக் நாட்டில் ஜெர்மன் மக்கள் வாழும் பகுதியை மட்டும் விரும்புவதாகக் கூறியது எவ்வளவு மகத்தான பொய் என்பதைச் சேம்பர்லேன் ஏன் புரிந்து கொள்ளவில்லே ?

விட்டுக் கொடுக்கும் கொள்கை வதைபட்டு மண்ணேக் கவ்விக் கிடந்தநிலே, பிரிட்டனும், ஃபிரான்சும் தங்களது பலத்தைப் பெருக்கிக் கொள்ளப்பெற்ற ஒரு வாய்ப்பு என்றும் சிலர் சமாதானம் கூறினுர்கள். இதனைச் சர்ச்சில் காரசாரமாகத் தாக்கினுர். 'மியூனிச்' என்ற ஈரசைச்சொல் அவமானச் சின்னமாக, நாடு காட்டிக் கொடுக்கப்பட்டதன் நினேவுக்குறியாக வரலாற்றில் இடம் பெற்று விட்டதை யாரும் மறுக்க முடியாது. செக்நாடு பலி செய்யப்பட்டதால் ஜெர்மனியின் முந்திய பலத் துடன் செக் நாட்டின் வெடிமருந்துச் சாலேகளும் அவர்கள் வசமாயின. சுடெட்டென்லாந்துப்பகுதியில் நுழைய அனுமதிக்கப் பட்ட ஹிட்லர் அனேத்துச் செக்கோஸ்லாவியாவையும் கபளீகரம் பண்ணுவார் என்பது மறுக்கமுடியாத உண்மை. மியூனிச் சரணுகதியின் வேர்க்காலேக் காண வேண்டியது வேறிடத்தில். 1935ஆம் ஆண்டு தேர்தலுக்காகப் பிரிட்டனும் ஜெர்மனியும் செய்து கொண்ட கடற்படை ஒப்பந்தம், பிரிட்டன் படைகளேப் பெருக்கப் புறக்கணித்தது, அபிசினியப் பிரச்சினேயில் சர்வதேச சங்கத்தின் முடிவு, ரைன்லாந்தில் ஜெர்மன் படைகள் நுழை வதைத் தடுக்க ஃபிரான்ஸ் மறுத்தது ஆகிய காரணங்களெல்லாம் மியூனிச் அவல நாடகத்தை உருவாக்கின. ஜெர்மனியும் இத்தாலியும் ஸ்பெயினில் தலேயிட்ட போதும், ஹிட்லர் ஆஸ்திரியாவை விழுங்கிய போதும், சர்வதேச சங்கம் எதிர்ப்புத் தெரிவித்தபோதும், பிரிட்டிஷ் அரசினர் படை பெருக்குவதைப் பற்றி, எவ்வித அக்கறையும் எடுத்துக் கொள்ளவில்லே.

ருஷ்யாவில் போல்ஷிவிக் நஞ்சை அறுப்பதற்கு வன்மையான நாஜி ஜெர்மனி மட்டுமே தக்க மருந்து என்று ஹிட்லர் செய்து வந்த பிரச்சாரம் மியூனிச் குழறுபடிக்கு ஒரு காரணமாகும்

இங்கிலாந்தின் அறிவாளிகளும், உயர் எண்ணம் கொண்டவர்களும்கூட ஹிட்லரின் பிரச்சாரத்தில் மயங்கி, ஜெர்மனியின் பேராசையையும், போரபாயத்தையும் சரிவர உணரத் தவறி விட்டனர். இதனுல், மியூனிச் வீழ்ச்சியின் பின்னரும் மேலை நாட்டு ஜனநாயக வல்லரசுகள் ருஷ்யாவுடன் தொடர்பு கொள்ள நேர்மையான முயற்சிகள் எடுக்கவில்லை. தேசீயப் பாதுகாப்பு, நாட்டின கவுரவம் இவற்றிற்கு மேலாக இங்கிலாந்தின் அரசியல் கருத்துகளும், இலண்டன் நகர வணிகர்களின் நலன்களும் கொடி கட்டிப் பறந்தன. போர் தொடங்கும் நிலையிலுங்கூட இலண்டன் நகர வணிகர்கள் ஜெர்மனிக்கு ராணுவ உதவிகள் வழங்கிக் கொண்டிருந்தனர். இவற்றையெல்லாம் தடுக்கக் கையில் அதிகாரம் இருந்தும்கூட, பிரிட்டிஷ் அரசாங்கம் ஹிட்லருக்கு எதிராகத் தனது சுண்டு விரலைக்கூட அசைக்கவில்லை.

### விட்டுக் கொடுக்கும் கொள்கையின் வீழ்ச்சி

ஹிட்லரின் சலசலப்புகள் சேம்பர்லேனைக் கதிகலங்கச் செய்தன. நல்ல வாய்ப்புகளைப் பயன்படுத்த விரும்பாதவர்களும், உலகத்தில் இருக்கிருர்களே யென்று அவர் வேண்டா வெறுப்பாக ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று. தொடக்கத்தில் இருந்த உற்சாகம் குறைந்தவுடன் மியூனிச் நாடகத்தைப்பற்றி மக்கள் ஏமாற்றம் கொண்டுள்ளார்கள் என்பதைப் பிரதமர் உணர்ந்தார். நாஜிகளுடன் இலண்டன் நகரம் கொண்டிருந்த வாணிகத் தொடர்புகளைப்பற்றி மக்கள் கவலை கொள்ளத் தொடங்கினுர்கள். 1939ஆம் ஆண்டில் விட்டுக் கொடுத்துச் சமரசம் செய்யும் கொள்கைக்கு ஹிட்லர் மரண அடி கொடுத்தார். ஃபிரான்சும் பிரிட்டனும் மியூனிச்சில் ஏற்பட்ட மானபங்கத்தை மறைத்துக் கொள்வதற்காகச் செக் நாட்டின் புதிய எல்லைகளைப் பாதுகாப்பதாக உறுதியளித்தன. 1939ஆம் ஆண்டு மார்ச்சில் ஹிட்லர் செக் நாடு முழுவதையும் கைப்பற்றினுர். பொஹிமியாவும், மொரேவியாவும் ஜெர்மனியுடன் இணைக்கப்படவே, செக்கோஸ்லாவியாவில் பொம்மை அரசு நிறுவப்பட்டது.

சேம்பர்லேன் இதற்குப் பெயரளவில் மறுப்புத் தெரிவித்தார். அவரால் செய்யக்கூடியது அவ்வளவுதானே? ஹிட்லரைப் பேச்சு வார்த்தைகளால் வசப்படுத்த முடியாதென்ற ஞானேதயம் அவருக்கு இப்பொழுதுதான் ஏற்பட்டிருந்தது. ஹிட்லருக்கு எதிராகக் கண்டிப்பான நடவடிக்கைகள் எடுக்க வேண்டியதன் அவசியத்தையும் அவர் உணர்ந்தார். மார்ச்சுத் திங்கள் 31ஆம் நாள் ஹிட்லர் போலந்தைத் தாக்கினுல், அந் நாட்டிற்குப் பிரிட்டன் ராணுவ உதவி வழங்குமென்றும் அவர் வாக்குறுதி

அளித்தார். சேம்பர்லேனின் புதிய வாக்குறுதி ஒரு விநோதமான அடையாளமாகத் தோன்றியது. செக் நாட்டைப் பொறுத்த வரை கோழைத்தனமான கொள்கையை ஆதரித்துவிட்டு, பிரிட்டிஷ் மக்களுக்குச் சம்பந்தமில்லாத ஒரு நாட்டின் போரில் அவர்களை ஈடுபடுத்துவது நம்ப முடியாத புதிராக இருந்தது. அதிகத் தொலைவில் இருந்த போலந்திற்கும் பிரிட்டனுக்கும் என்ன சம்பந்தம்? அப்படியென்றால் இந்த வாக்குறுதியைக் கொண்டு சேம்பர்லேன் ஹிட்லரை மிரட்ட நினைப்பதன் பொருள் என்ன? அல்லது பிரிட்டிஷ் மக்களிடம், தாம் இழந்துவிட்ட செல்வாக்கை மீண்டும் பெற இதுவொரு புதிய உத்தியா?

சேம்பர்லேன் தாம் கொடுத்த வாக்குறுதியை நிச்சயமாக நிறைவேற்றுவாரா என்பது இங்குப் பிரச்சினை அன்று. படையைப் பெருக்குகின்ற முயற்சியும் பெரும் அளவில் மேற்கொள்ளப் படவில்லை. வழங்குபொருள் அமைச்சகத்தை நிறுவுமாறு சர்ச்சில் வலியுறுத்தி வந்தது, இன்னும் செயலாக்கம் பெறவில்லை. போர்மூளும் என்ற எண்ணமே பிரதமருக்கு இருப்பதாகத் தெரியவில்லை. 1939ஆம் ஆண்டு ஏப்ரல் ஏழாம் நாள் முசோலினி அல்பேனியாவைத் தாக்கினார். இதற்கு மறுப்புத் தெரிவிப்பதைப்பற்றி சேம்பர்லேன் அக்கறைப்படவில்லை. போலந்திற்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டுமென்றால் ருஷ்யாவுடன் கூட்டுச் சேர வேண்டுமென்று லாயிட் ஜார்ஜும், சர்ச்சிலும் வற்புறுத்தி வந்தார்கள். பல மாதங்கள் ஃபிரான்சுடன் கலந்தாலோசித்த பின்னர், ஒரு முக்கூட்டு உடன்பாடு செய்து கொள்ளுமாறு ருஷ்யாவிற்குச் சேம்பர்லேன் அழைப்பு விடுத்தார். பல நாள் பேச்சு வார்த்தைகள் தொடர்ந்தன. பாதுகாப்புப் பட்டியலில் பால்டிக் நாடுகளையும் சேர்த்துக் கொள்ளுமாறு ருஷ்யா வற்புறுத்தியது. பிரிட்டன் அதனை விரும்ப வில்லை.

ஜூன் திங்கள் 29ஆம் நாளில் காமன்ஸ் அவையில் சர்ச்சில் உரையாற்றுகையில், 'தாமதமின்றி ருஷ்யாவுடன் வன்மையான கூட்டுறவு ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். இதில் பால்டிக் நாடுகளையும் சேர்த்துக் கொள்வதில் தவறில்லை' என்று குறிப்பிட்டார். சேம்பர்லேனோ இன்னும் ஒரு முடிவிற்கும் வரவில்லை. பயனற்ற பேச்சு வார்த்தைகளால் ஸ்டாலின் சலிப்படைந்தார். இதனிடையில் ஜெர்மனியும் ருஷ்யாவின் கூட்டுறவில் அக்கறை காட்டத் தொடங்கியது. ஆகஸ்டு 23ஆம் நாளில் ஜெர்மனியும், ருஷ்யாவும் பரஸ்பரம் ஒருவரையொருவர் ஆக்கிரமிப்பதில்லை என்று ஒப்பந்தம் செய்து கொண்டன. 1939ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் நாள் ஹிட்லர் போலந்தைத் தாக்கினார்.

சேம்பர்லேன் மீண்டும் காமன்ஸ் அவையில் தோன்றிய போது அவரது உறுதியற்ற நிலையைப்பற்றி முணுமுணுப்புகள் எழுந்தன. இன்னும் பிரிட்டன் 'மதில் மேல் பூனையாக' இருக்க வேண்டுமா வென்ற கண்டனக் குரல்கள் ஒலித்தன. சேம்பர்லேன் இறுதியில் உறுதி கொண்டார். செப்டம்பர் திங்கள் மூன்றும் நாள் ஞாயிறன்று காலை 11மணிக்கு ஜெர்மனிமீது போர் தொடுத்திருப்பதாக பிரிட்டன் அறிவித்தது. அன்று மாலையே ஃபிரான்சும் போரில் இறங்கியது. இதுவரை மனித குலம் கண்டிராத பயங்கரமான, பேரழிவான போரில் உலகம் இறங்கி விட்டது.

# 16. பாருலகை உலுக்கிய பயங்கரப் போர்

ஏமாற்றம் நிறைந்த ஆண்டுகள் இறுதியாக எல்லைமீறி விட்டன. உயர் நோக்கம் கொண்ட ஓர் அரசியல்வாதிக்குத் தம்முடைய எண்ணங்களைச் செயல்படுத்தக்கூடிய வாய்ப்பு மறுக்கப்படுவதைவிட பெரிய துன்பம் எதுவும் இருக்கமுடியாது. அதிலும் தம்முடைய எண்ணங்களை ஏற்றுக் கொள்வதில்தான் நாட்டின் பாதுகாப்பும், ஏன்? அது உயிர் பிழைக்கக்கூடிய உறுதிப்பாடும் இருக்கின்றன என்று நம்புகின்ற ஓர் அரசியல் வாதிக்கு இந்தத் துன்பம் சகித்துக் கொள்ள முடியாததொன்று. சேம்பர்லேன் விட்டுக் கொடுக்கும் வசிய வித்தையை நிகழ்த்திக் கொண்டிருந்தபோது, சர்ச்சில் வெறும் பார்வையாளராகவும், அதன் விமர்சகராகவும் மட்டுமே இருக்க முடிந்தது. விரைவாக முன்னேறிக் கொண்டிருந்த நிகழ்ச்சிகளைத் தடுக்கச் சக்தியின்றி அவர் இருந்த நிலையில் பிரிட்டன் தனது பாதுகாப்பு உறுதியிலிருந்து, ஆபத்தை எதிர்நோக்கும் பயங்கர நிலைக்கு இறங்கி விட்டிருந்தது. இராணுவ இயந்திரத்தினைக் கையாளுவதில் தமக்கு வாய்ப்பு வரவேண்டுமென்று சர்ச்சில் ஆவலோடு எதிர் நோக்கி இருந்தார்.

அங்கலாய்ப்பும், ஆவலும் நிறைந்திருந்த இந்தத் தொல்லைகளிலிருந்து தப்பி மனநிறைவு கொள்வதற்குச் சர்ச்சில் மீண்டும் வரலாறு எழுதுகின்ற எழுத்துப் பணியில் புகுந்துவிட்டார். 'டியூக் ஆஃப் மால் பரோவின்' வாழ்க்கை வரலாற்றை எழுதி முடித்து வெற்றி கண்ட, சர்ச்சில், ஆங்கிலம் கூறும் நல்லுலக மக்களின் வரலாற்றை எழுத முனைந்தார். அட்லான்டிக் பெருங்கடலின் இருமருங்கிலுமிருந்து திகழ்ந்த தமது முன்னோர்களின் வரலாற்றைத் தக்கவொரு பொருளாக அவர் தெரிந்தெடுத்தார். புகழ் பூத்த இந்தப் பெரியார்களின் சாதனைகளிலிருந்து ஆறுதலும், ஊக்கமும் பெற முடியுமென்று அவர் நம்பினர். இவர்கள்தாம் இங்கிலாந்தினுடையவும், அமெரிக்காவி

னுடையவும் பெருமைகளுக்கு அடிகோலியவர்கள். பழைய தலைமுறையைச் சேர்ந்த அரசியல் வல்லுநர்கள் புரிந்த தவறுகளை, இந்தத் தலைமுறையின் தலைவர்களின் குறைபாடுகளுடன் ஒப்பிட்டுக் காட்டி அவைகளிலிருந்து பாடங்களைக் கற்கவேண்டுமென்பதும் அவரது ஆவல் போலும்'!

1939ஆம் ஆண்டின் தொடக்கத்தில் சர்ச்சில் மூன்றும் வில்லியம் அரசரின் ஆட்சிக்காலத்தைப் பற்றிய வரலாற்றில் ஈடுபட்டிருந்தார். பதினேழாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் சிறந்திருந்த கட்சித் தலைவர்கள், விட்டுக் கொடுக்கும் கொள்கையை விடாமல் பற்றிக்கொண்டிருந்த தற்கால டோரிக் கட்சித் தலைவர்களை அவருக்கு நினைவூட்டினார்கள். ஐரோப்பாவில் போர்முரசு கொட்டிக்கொண்டிருந்த நிலையில், முன்னாளைய தலைவர்கள் அமைதி, சிக்கனம் என்பவற்றின் பெயரால் நாட்டின் வன்மைக்குக் குழி பறித்திருந்தார்கள். இவர்களின் செயலுக்கும், தற்காலத் தவறுகளுக்கும் அதிக வேறுபாடுகள் இல்லையென்பது சர்ச்சிலின் கருத்து. இவ்வாறு சர்ச்சில் நூல்களுக்கு இடையில் தம்மைப் புதைத்துக்கொண்டு தீவிர எழுத்தில் ஈடுபட்டிருந்த நிலையில்தான் ஐரோப்பாவின் நிகழ்ச்சிகள் வேகமாக முன்னேறிக் கொண்டிருந்தன, ஹிட்லர் தமது போர் வெறியைத் தணிக்க இரைக்குமேல் இரை போட்டுக்கொண்டிருந்தார். பிரேக் நகரம் வீழ்ந்தபோது, மியூனிச்சின் வேடம் கலைக்கப்பட்டது.

ஏற்கெனவே குறிப்பிடப்பட்டதுபோல் ஹிட்லரின் அடிகளைப் பின்பற்றி முசோலினி அல்பேனியாவைக் கபளீகரம் செய்தார். 'விட்டுக்கொடுத்து வசியப்படுத்தும் கொள்கை' புதைக்கப்பட்டுவிட்டது. ஏமாற்றத்தால் வெறிகொண்ட சேம்பர்லேன் போலந்து நாட்டிற்கு உதவிகளை வாக்களித்தார். ருஷ்யாவுடன் உடன்பாடு செய்வதைக் கோட்டை விட்டு, அந்தப் பெருமையை ஜெர்மனிக்கு வழங்கிவிட்டார். இந் நிலையில் பிரிட்டனின் வன்மையை அதிகரிக்கச் சில நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. பிரதேசப்படையின் எண்ணிக்கை இருமடங்காக்கப்பட்டது, வழங்கு பொருள் அமைச்சகம் கருநிலையில் உருவாகியது. கட்டாய ராணுவச் சேவை அறிவிக்கப்பட்டது. இந்த முறைகளினால் உடனடியான விளைவுகள் ஏற்பட முடியா. பாராளுமன்றச் சட்டத்தினாலோ, மந்திரவாதியின் கோலினாலோ, நவீனப் படையொன்றை படைத்துவிட முடியாது. படைவீரர்களை உருவாக்கி, அவர்களுக்குப் படைக்கலங்களை வழங்குவதென்பது பல ஆண்டுகளாகச் செயல்படுத்தப்படவேண்டிய பெரும் பொறுப்பாகும்.

மேற்கூறிய நடவடிக்கைகள் உளப்பூர்வமாக நிறைவேற்றப் பட்டனவா ? என்பது ஐயத்திற்குரியது. இன்னும் 'ஹிட்லர் மனம் மாறிவிடமாட்டாரா? போலந்தைப் புறக்கணித்துவிட மாட்டாரா?' என்றுகூடச் சிலர் நம்பிக்கொண்டிருந்தார்கள். ஹிட்லரின் போர் வெறியைத் தூண்டிவிடக்கூடிய எந்தக் காரி யத்திலும் ஈடுபடக்கூடாது என்பதில் நாட்டங்கொண்டிருந்த சேம்பர்லேன் தமது அமைச்சரவையை வலுப்படுத்துவதிலோ அல்லது அதில் இடம்பெற வின்ஸ்டன் சர்ச்சிலே அழைப்பதிலோ அக்கறை காட்டவில்லே. ஆனால், சர்ச்சில் அமைச்சரவையில் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டுமென்று சேம்பர்லேனின் சகாக் களும், ஆலோசகர்களும் வற்புறுத்தி வந்தார்கள். பிரிட்டிஷ் பொதுமக்களின் எண்ணம் மகத்தான முறையில் மாற்றங் கண்டு வந்தது. கடந்த காலத்தின் அமைதிக் கொள்கை காற்றிலே பறக்கவிடப்பட்டது. விட்டுக் கொடுக்கும் கொள்கையின் எதிரி யான சர்ச்சிலின் தீர்க்கதரிசனங்களேக் காலம் உண்மையாக் கியது. அன்று அவர் விடுத்த எச்சரிக்கைகள் அப்போது தள்ளப் பட்டபோதிலும், அவை யாவும் முற்றிலும் வீண் போகவில்லே.

### சர்ச்சில் மீண்டும் வரவேண்டும் !

சர்ச்சிலின் அபாய அறிவிப்புகள் நிறைவேறிக்கொண்டிருந்த நிலேயில், அவருக்கு அரசில் இடமளிப்பது நியாயந்தானே! சுவரொட்டிகளும், சுலோகங்களும் 'வின்ஸ்டன் மீண்டும் வர வேண்டும்' என்று முழங்கத்தொடங்கின. 'டெய்லி டெலிகிராஃப்' ஏட்டில் கேம்ரோஸ் (Camrose) பிரபு சர்ச்சில் அமைச்சரவையில் இடம் பெறுவதை ஆதரித்து எழுதினர். பீவர் புரூக் (Beaver brook) பிரபுவின் செய்தித்தாளும் அவ்வாறே வலியுறுத்தியது. 'டைம்ஸ்' பத்திரிகையும் பழையனவற்றை மறந்து சர்ச்சிலின் வாய்ப்புகளே மறைமுகமாக ஆதரித்தது. எனினும், வெறுப் புணர்ச்சிகள் எளிதாக மடிந்துவிடுவதில்லே. இந்த இக்கட்டான நிலேயிலும் சர்ச்சில் மீண்டும் பதவி பெறுவதைச் சிலர் எதிர்த் தார்கள். சில டோரிக் கட்சிப் பாராளுமன்ற உறுப்பினர்கள் அவரை 'ஆத்திரக்காரர்' என்றும், 'ஆபத்தானவர்' என்றும் எச்சரித்தனர். 'சர்ச்சில் வந்தால் உடனே போரைத் தொடங்கு வார்' என்று சிலர் கூக்குரலிட்டனர். 'டொமினியன் அரசுகள் சர்ச்சிலே விரும்பவில்லே' என்ற கருத்தும் நிலவி வந்தது.

1939ஆம் ஆண்டு ஆகஸ்டில் காமன்ஸ் அவை கோடை விடுமுறைக்காகக் கலேந்தது. இரண்டு மாத விடுமுறையில் ஒருவேளே சேம்பர்லேன் மீண்டும் ஒரு மியூனிச்சை நடத்திவிடலா மென்று பல உறுப்பினர்கள் அஞ்சினுர்கள். எனவே, பல

கட்சிகளைச் சேர்ந்த தலைவர்கள் காமன்ஸ் அவையை மூன்று வாரங்களுக்கு மட்டும் ஒத்திவைத்தால் போதுமென்ற கருத்தைக் கூறினார்கள். பிரதமரோ இவ்வாறு அஞ்சினவர்களின் ஆதாரமற்ற பீதியைக் கேலி செய்தார். அவர்தம் ஆதரவாளர்களில் ஒருவரே பிரதமரின் கேலிச்சொற்கள் நாட்டைப் பிளந்துவிடும் என்று கண்டித்தார். 'இன்னும் ஒரு திங்களில் நாம் போருக்குச் செல்லக்கூடும். ஒருவேளை போரில் மடியவும் கூடும்' என்று ரொனல்டு கார்ட்லண்டு (Ronald Cartland) என்ற உறுப்பினர் எச்சரித்தார். அச்சொற்களைக் கேட்ட வேறு ஒரு உறுப்பினர் 'ஓ'வென்று உச்சுக்கொட்டினார். 'ஆயிரக்கணக்கான இளைஞர்கள் தங்களுடைய விடுமுறையைத் தியாகம் செய்துவிட்டுப் பயிற்சி முகாம்களில் இருக்கிறார்கள். இந்த ஜனநாயக நிறுவனத்தில் நமக்கு நம்பிக்கை உண்டு என்று காட்ட அடிக்கடி இந்த அவையில் கூடுகின்ற சிறிய பணியைக்கூடச் செய்யக் கூடாதா?' என்று கார்ட்லண்டு அவரைக் கேலிசெய்து உறுப்பினருக்கு உள்ளத்தில் படுமாறு உரைத்தார்.

ஒரே ஆண்டில் கார்ட்லண்டின் சொற்கள் உண்மையாயின. மான்ட் காசல் (Mont Cassel) என்ற இடத்தில் நடந்த போரில் கார்ட்லண்ட் உயிரிழந்தார். அவருடைய சொற்கள் இன்னும் சர்வாதிகாரிகளுடன் சமரசங்காணும் நோக்கத்துடன் நாட்டைத் திசை திருப்பிக்கொண்டும் நழுவிக்கொண்டும் 'விட்டுக் கொடுக்கும் கொள்கையின் சவப்பெட்டியில் அறையப்பட்ட ஆணிபோல்' இருந்தன. கார்ட்லண்டு என்ற இளம் உறுப்பினரும், அவர்தம் இளந்தலைமுறைகளும் கடந்தகாலம் இழைத்த தவறுகளைச் சீர்ப்படுத்துகின்ற பொறுப்பை எடுத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. விட்டுக் கொடுக்கும் கொள்கை எவ்வளவு தான் நல்ல கருத்துடன் அமைந்தாலும் அது நாட்டைக் காப்பாற்றாது என்பது உறுதி.

இவ்வாறு விவாதங்களும், எதிர்வாதங்களும் நிகழ்ந்து கொண்டிருந்த நிலையில் மாகினோட் அரணைப் (Maginot Line) பார்வையிடுமாறு சர்ச்சிலுக்குப் ஃபிரான்ஸ் நாட்டிலிருந்து வந்த அழைப்பை ஏற்று அவர் அங்குச் சென்றார். அவருடன் முதல் போரின் பெரும் வீரரான மேஜர் ஜெனரல் ஸ்பீயர்ஸும் (Spears) சென்றார். இருவரும் அரணைச் சுற்றிப் பார்வையிட்டனர். ஃபிரான்ஸ் நாட்டுப் படைத்தலைவர்களுடன் உரையாடினர். அரண் சிறப்பாக அமைக்கப்பட்டிருந்தது. ஆனால், அதன் காவலர்கள் தற்காப்பு ஒன்றையே நினைத்துக்கொண்டிருப்பதாகச் சர்ச்சிலுக்குத் தோன்றியது. அரணின் கோடியில் மனிதர்

புகமுடியாத தேரைக்காடுகளை இயற்கை அரணாக ஃபிரஞ்சுக் காரர்கள் எண்ணி இறுமாந்தனர். சர்ச்சிலோ 'ஜெர்மனி உருவாக்கும் பெரும் படையினர் விமானத் தாக்குதல்களின் போது பதுங்குவதற்கு இந்தக் காடுகளைப் பயன்படுத்துவார்கள்' என்று விளக்கிக் கூறினார். அவர் முன் அறிவித்ததுபோலவே ஃபிரான்சின் ஆர்டென்ஸ் (Ardennes) காடுகள் ஜெர்மனிக்கு வெற்றிப்பாதையாகவும், ஃபிரஞ்சுப் படைத் தந்திரங்களின் புதைகுழியாகவும் மாறின.

வீடு திரும்பிய வின்ஸ்டன் ஹிட்லரின் தாக்குதல்களை எதிர் பார்த்திருந்தார். ஜெர்மனியும், ருஷ்யாவுமாகிய எதிரிகள் ஒப்பந்தம் செய்திருந்தார்கள். போலந்து கொள்ளையில் ஸ்டாலி னுக்கும் பங்கு கிடைத்தது. பிரிட்டனும் ஃபிரான்சும் தாம் கைவிட்ட போலந்தைக் காக்க முன்வந்தனர். இரண்டாவது மியூனிச் நிகழுமென எதிர்பார்த்து ஏமாற்றமடைந்த ஹிட்லர் போருக்காகத் துடித்துக்கொண்டிருந்த தமது படைவெறியை அவிழ்த்துவிட்டார். இந்த நிலையில்தான் வின்ஸ்டன் சர்ச்சி லுக்கு நாட்டின் அழைப்பும் விடுக்கப்பட்டது. உரிமை பெற்ற மக்களின் தனிப்பெரும் தலைவனாக, தமது வாழ்நாள் பணியின் உச்சகட்டத்திற்குச் சர்ச்சில் உயர்ந்தார். இதுநாள்வரை அவர் தயாரித்து வந்த பணியின் நிறைவு நெருங்கிக்கொண்டிருந்தது. மீண்டும், சர்ச்சில் கடற்படைத்துறை அமைச்சராக நியமிக்கப் பட்டார். இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் இதே பதவிக்குச் சர்ச்சிலை ஆரவாரத்துடன் வரவேற்ற மக்கள் இன்று அமைதியாக இருந்தனர். பாருலகை உலுக்கிய பயங்கரப் போர் அவர் களின் அஞ்சாநெஞ்சத்தில் அச்சத்தை மூட்டியிருந்தது.

படைக்குறைப்புப் பிரச்சாரமும், சர்வதேச சங்கத்தின் ஆதரவும் நவீன போரின் அழிவுக் கருவிகளைப்பற்றிக் குறிப்பாக வாயுப்போரின் பயங்கர சாதனங்களைப் பற்றி மக்களிடத்தில் பெரும் பீதியை உருவாக்கி இருந்தன. அரசினரும் போரின் விளைவாக நிகழக்கூடிய துன்பங்களைப் படம் பிடித்துக்காட்டி, தமது விட்டுக்கொடுக்கும் கொள்கைகளுக்கு, ஆதரவு தேடி வந்திருந்தனர். முதல் உலகப்போரைவிடத் தற்போது விமானத் தாக்குதலால் அதிக நாசம் உண்டாகும் என்று கூறப்பட்டது. ஸ்பெயினில் ஜெர்மன் குண்டு விமானங்களும், சீனாவில் ஜப்பா னின் விமானத் தாக்குதல்களும் செய்திருந்த நாசவேலைகள் திரைப்படங்களாகக் காட்டப்பட்டன. எனவே, போர் மூண் டதும் இலண்டனும், அது போன்ற பெருநகர்களும் நிர்மூலமாக் கப்படும் என்று பலர் நம்பினார்கள். இந்நிலையில், பல அரசினர்

செயலகங்களும், வாணிக நிறுவனங்களும், குடிமக்களும், கூட்டங் கூட்டமாக இடம் பெயரத் தொடங்கினுர்கள். பள்ளிச்சிறுர் களேயும், குழந்தைகளுடன் தாய்மார்களேயும் இடம் விட்டுக் காலி செய்கின்ற திட்டங்கள் செயல்படுத்தப்பட்டன. முதல் ஓரிருநாள்களில் ஒன்றரை மில்லியன் மக்கள் இடம்பெயர்ந்தனர். நகர்களில் பிறந்து வளர்ந்த இளேஞர்கள் கிராமப்புறங்களேப் படையெடுக்கத் தொடங்கினுர்கள். புதிய சூழ்நிலேயில் இவர்கள் புதிய பாடங்களேக் கற்றதோடு, கற்றிருந்த பழைய பாடங் களேயும் களேந்தெறிய வேண்டியதாயிற்று.

எதிர் நோக்கப்பட்ட ஆபத்துக்களிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக மேற்கூறிய நடவடிக்கைகளே மக்கள் கவலே தோய்ந்த முகங்களுடனும், எவ்வித ஆரவாரமுமின்றி மேற் கொண்டு வந்தனர். தங்களேத் தாக்கவரும் எதிரி, வனவிலங் கினேப் போன்று இரத்த வெறிகொண்டவன் என்பதை மக்கள் அறிவார்கள். மனிதப்பண்பின் உந்துதல்களேயும், நீதியுணர் வையும், புனித ஒப்பந்தங்களேயும், நாகரிகமான போர் நெறியின் விதிகளேயும் மீறக்கூடிய எதிரி அவன் என்பதும் வெள்ளிடை மலேயாகும். எனவே, மூண்டிருந்தது முழுமையான போர்— போர்வீரன், பொதுமகன், பெண்டிர், குழந்தைகள் என்ற பாகுபாடில்லாமல் யாவரையும் துன்பத்தில் ஆழ்த்தக்கூடிய நிறைபோர். எனினும், இந்தப் பயங்கரச் சூழ்நிலேயிலும் மக்களின் உள்ளங்கள உயர்ந்து நின்றன. ஆண்டு பலவாக அவர்களே அச்சுறுத்தி வந்த பயங்கரம் இன்று அவர்களே நேருக்கு நேர் விழித்துப் பார்த்துப் பேய்ச்சிரிப்புச் சிரித்தது. ஆனுல், அவர்கள் அஞ்சி ஓடவுமில்லே. அதனே எதிர் நோக்கினுர்கள். சவாலேச் சந்திக்கத் தயாராகிவிட்டார்கள். விட்டுக்கொடுக்கும் மாயையாகிய வெட்கக்கேடு வீழ்ந்துவிட்டது. மக்களின் மனே நிலேயைச் சர்ச்சில் சித்திரித்தார். சேம்பர்லேன் போர் அறிக் கையை வெளியிட்டவுடன் சர்ச்சில் கூறியதாவது :

'வெளியுலகில் போரின் பயங்கரப் புயல்கள் வீசலாம். சண்டமாருதத்தின் சீற்றத்திற்கு நாடுகள் பல பலியாகலாம். ஆனுல், இந்த ஞாயிறு நாளின் காலேயில் நம் உள்ளங்களில் அமைதி நிலவுகிறது.......இந்தப் போர்...அதன் அடிப்படைத் தன்மையில் அதனே நோக்குகின்ற போது தனி நபரின் உரிமைகளே நிலேநாட்ட வேண்டிய ஊடுருவ முடியாத பாறையாக அமைக்கப் படவேண்டும்......இந்தப் போர் மனிதனின் முழுத் தகுதியையும் புத்துயிருடன் நிலேபெறச் செய்ய வேண்டிய புனிதப் போராகும்'[1]

[1]Churchill—A Portrait, Philip Guedalla, p. 283.

சர்ச்சிலின் கருத்துகளைப்பற்றி நாடு முழுவதும் எவ்வித ஐயப்பாடும் தொனிக்கவில்லை. நாட்டின் பொது எண்ணத்தைத் தான் அவர் வெளியிட்டார். பால்ட்வினின் சோர்வும், சேம்பர் லேனின் சரணுகதியும் சரியென்று விளக்க வருங்கால வரலாற் றிஞர்கள் சாக்குபோக்குகளைக் கூற முன்வருவார்களாஞல், அதற்கு மக்கள் பொறுப்பாளிகள் அல்லர். அரசினர் போர் வெறி கொண்டவர்கள் என்று தாறுமாருகக் குற்றஞ்சாட்டிக் கொண்டிருந்த அமைதிக் கட்சி எதுவும் நாட்டில் இருக்கவில்லை. நாட்டு மக்களின் மனச்சான்று அதனைத் தள்ளிவிடும் வரை, அரசினர்தாம் அமைதிக் கட்சியாக விளங்கி வந்தார்கள். இந் நிலையில் மக்களுக்கு மிக்க மனநிறைவு கொடுத்த காரியம் என்ன வென்ருல் போர் தொடங்கியதும், சேம்பர்லேன் உடனடியாக அமைச்சரவையைத் திருத்தி அமைத்ததாகும். இதில் அன்டனி ஈடன் டொமினியன்களின் அமைச்சராகவும், வின்ஸ்டன் சர்ச்சில் கடற்படைத் துறையின் அமைச்சராகவும் நியமனம் பெற்ருர்கள். வின்ஸ்டனைப் பொருத்தவரை அவரை அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ளுமாறு மக்கள் பல காலமாக வற்புறுத்தி வந்திருந்தார்கள். அவரது வரவால் பிரிட்டனின் போர் முயற்சி களில் புது ஊக்கம் பிறந்தது என்பது துணிவு.

## போர்ப் பணியில் வீர மறவர்

கடுமையான உழைப்பிற்குப் பெயர்போன சர்ச்சில் புதிய பணியில் இரவு பகலாக ஈடுபட்டு உழைத்தார், கப்பற்படை யினைத் தயார் செய்து இயக்க வேண்டிய பொறுப்பு பெரும் பணியாகும். கடற்படைக்குத் தேவையான கப்பல்களை உரு வாக்குவது, கடற்கண்ணிகளைப் பொறுக்கும் பணியை அமைப் பது, கடல்தளங்களைக் கட்டுவது, பழைய தளங்களைச் சீர்ப் படுத்துவது ஆகியவற்றின் மூலம் கடற்படையின் வன்மையை அதிகரிப்பது போன்ற பணிகளை அவர் மேற்பார்வையிட்டார். எதிரியின் வர்த்தகக் கப்பல்களை ஒழித்துக் கட்டி, எதிரியின் நீர் மூழ்கிகளையும், பிரிட்டிஷ் வணிகக் கப்பல்களைத் தாக்கும் நாசகாரிகளையும், வேட்டையாட வேண்டும். ஜெர்மனியைக் கடற்படை கொண்டு முற்றுகையிட வேண்டும். நடுநிலை வகித்த நாடுகளின் கப்பல்களைச் சோதிக்க வேண்டும். இத்தியாதி பணிகளை வேறு சர்ச்சில் செய்து முடிக்க வேண்டியிருந்தது. தொடக்கத்தில் கடல்தான் பிரிட்டனின் ஒரே போர்க்களமாகவும், கடற்படை அதன் வன்மையான ஆயுதமாகவும் இருந்தது. படைப் பலத்தை மீண்டும் பெருக்க வேண்டுமென்று கூறப்பட்ட போதிலும், மியூனிச் அபாயச் சங்கு ஊதப்பட்ட பின்னும்,

வின்ஸ்டன் பலமுறை வேண்டுகோள்கள் விடுத்தும், பாதுகாப்பு ஏற்பாடுகள் காலத்திற்கேற்ற வகையில் செய்யப்படவில்லை ஜெர்மனியின் 'லோப் வாஃபே' (Loft Waffe) வான்படை ஸ்பெயினில் இரத்தக் களறி கண்ட பின்னரும், பிரிட்டிஷ் வான் படையின் முன்னேற்றம் காணப்படவில்லை. தரைப்படைக்கும் போதிய பயிற்சி இல்லை. எனவே, இரக்கமற்ற எதிரியை, நல்ல முறையில் போருக்குத்தயார் செய்திருந்த ஜெர்மனியை எதிர்க்கப் பிரிட்டன் தயார் செய்யப்படவில்லை. ஆனால், ஹிட்லர் தம் வான்படைகளை மேற்குமுனை நாடுகளுக்கு உடனே அனுப்பாமல், கிழக்கில் போலந்தை அழிப்பதில் ஈடுபட்டிருந்தது பிரிட்டன் பெற்ற தவப்பேறுகும்.

ஜெர்மனியின் தரைப்படையும் வான்படையும் போலந்தில் ஈடுபட்டிருந்த நிலையில், அதன் கடற்படைகள் பிரிட்டனின் கப்பல்களை அழிப்பதில் தமது கவனத்தைச் செலுத்தி வந்தன. முதல் உலகப் போரில், முதல் ஈராண்டுகளின் பின்னர் தான் ஜெர்மனி தனது நீர்மூழ்கிகளின் பலத்தை அறிவித்தது. இந்த முறை எடுத்த எடுப்பிலேயே ஜெர்மனியின் 'யூ' படகுகள் பிரிட்டனுக்குச் சொந்தமான 'அதீனு' (Atthena) என்ற பயணிகள் கப்பலை எச்சரிக்கை இல்லாமல் மூழ்கடித்தன. இது போர் தொடங்கிய அதே நாளில் நிகழ்ந்தது. இது தவருக நடந்த நிகழ்ச்சி போல் ஜெர்மனியின் பிரச்சார பீரங்கியான கோயபெல்ஸ் (Goebbels) முழங்கிய போதிலும், 'யூ' படகின் தலைவர் விசாரணைக் குட்படுத்தப்பட்டபோதிலும், ஜெர்மனி வரம்புமீறிய தாக்குதல்களைப் பெருங்கடல்களில் நடத்திக் கொண்டிருந்தது. போர் தொடங்கிய பதினைந்து நாட்களில் பிரிட்டனைச் சேர்ந்த கடல் வழிகளில் 111,000 டன் நிறையுள்ள பிரிட்டிஷ் கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன. இது தவிர, ஃபின்லாந்து, ஹாலந்து, நார்வே, சுவீடன், கிரேக்க நாடு, பெல்ஜியம் போன்ற நடுநிலை நாடுகளின் வணிகக் கப்பல்களும் வரையறையின்றி அழிக்கப் பட்டன. முதல் உலகப் போரின் அனுபவங்களைக் கருத்தில் கொண்ட அமெரிக்கா சில வட்டாரங்களில் அமெரிக்கக் கப்பல்கள் செல்லக் கூடாதென்று தடை விதித்தது. போரில் ஈடு பட்டிருக்கும் நாடுகளுக்குச் சொந்தமான கப்பல்களில் பயணம் செய்ய வேண்டாமென்றும் அமெரிக்கக் குடிமக்களுக்கு எச்சரிக்கை விதிக்கப்பட்டது.

ஹிட்லரைப் போலவே சர்ச்சிலும் முதல் போரின் பாடங்களை மறக்கவில்லை. ஜெர்மன் நீர்மூழ்கிகளுக்கு எதிரான நடவடிக்கை களில் சர்ச்சில் உடனடியாக ஈடுபட்டார், பெருங் கடல்களில்

ஜெர்மன் வணிகக் கப்பல்கள் பிரிட்டிஷ் கடற்படையினுல் சிறைப் பிடிக்கப்பட்டன. போர் தொடங்கிய முதல் மாதத்திலேயே ஜெர்மனி அழித்ததைவிட அதிக எண்ணிக்கையான ஜெர்மன் வணிகக் கப்பல்கள் கைப்பற்றப்பட்டன. இதனைத் தொடர்ந்து பிரிட்டிஷ் கடற்படையினரிடம் அகப்பட்டுக் கொண்டாலும் பிரிட்டனின் இரக்க சிந்தனையை வேண்டிச் சிப்பந்திகளைத் தப்புவிக்கின்ற உத்தியை ஜெர்மன் கையாளத் தொடங்கியது. 'யூ' படகுகள் (U Boats) இரக்கமின்றி வேட்டையாடப்பட்டன. 1939ஆம் ஆண்டின் முடிவிற்குள் ஜெர்மனி தனது 'யூ' படகுகளின் (U Boats) பாதியை இழந்து விட்டதாகச் சர்ச்சில் அறிவித்தார். ஆனுல், ஜெர்மனியின் இரு 'யூ' படகுகள் வெற்றி பெற்றன. அவற்றில் ஒன்று பிரிட்டனின் பழைய விமானந் தாங்கும் கப்பலான 'கரேஜியஸ்' (Courageous) என்ற கப்பலை டார்ப்பிடோ செலுத்தி அழித்தது. மற்ருென்று பிரிட்டிஷ் போர்க் கப்பலான 'ராயல் ஓக்கை' (Royal Oak) மூழ்கடித்தது. 1939ஆம் ஆண்டு நவம்பரில் படைதாங்கிய பிரிட்டிஷ் வணிகக் கப்பலான 'ராவல் பிண்டியும்' ஜெர்மனியால் மூழ்கடிக்கப் பட்டது.

பிரிட்டிஷ் கடற்படை ஜெர்மனிக்குப் பதிலடி கொடுப்பதில் பின்தங்கியிருக்கவில்லை. 1939ஆம் ஆண்டு டிசம்பர் 14ஆம் நாளில் ஜெர்மன் போர்க் கப்பலான 'அட்மிரல் கிராஃப் ஸ்பீ' (Admiral Graf Spee) இந்திய, தென் அட்லான்டிக் பெருங்கடல்களில் வணிகக் கப்பல்களை வேட்டையாடிக் கொண்டிருந்த நிலையில் அதனை மூன்று பிரிட்டிஷ் போர்க் கப்பல்களான 'அக்கிலஸ்' (Achilles) 'எக்ஸடர்' (Exeter) 'அஜாக்ஸ்' (Ajax) ஆகியவை தடுத்து நிறுத்தின. இம்மூன்று கப்பல்களில் பீரங்கி வசதிகள் அதிகமில்லாதிருந்தும், அவை எதிரிக் கப்பலைத் தாக்கி, குண்டுமாரி பொழிந்து, உருகுவே நாட்டுக் கடலில் தஞ்சம் புகுமாறு செய்தன. ஹிட்லரின் ஆணையின் பேரில் அது சரணடையவே அதன் கப்பல் தலைவர் தற்கொலை செய்து கொண்டார். நெல்சன் வழிவந்த பிரிட்டிஷ் கடற்படையின் அற்புதமான சாதனை இது. 'பிளேட் ஆற்றுப்போர்' (River Plate) பிரிட்டிஷ் மக்களின் இதயங்களுக்கு ஆறுதல் அளிக்கும் என்று 'எக்ஸடர்', 'அஜாக்ஸ்' கப்பல்களின் வீரர்களைப் பாராட்டும் வகையில் நடைபெற்ற ஒருவிழாவில் சர்ச்சில் குறிப்பிட்டார்.

இத்துடன் இந்தப் போர் முடியவில்லை. 'கிராஃப்ஸ்பீ' மூழ்கடித்த கப்பல்களிலிருந்து சிறைப் பிடிக்கப்பட்டிருந்த மூன்னூறு

பிரிட்டிஷ் கடற்படை வீரர்கள் 'ஆல்ட்மார்க்' (Altmark) என்ற மற்றொரு ஜெர்மன் கப்பலுக்கு மாற்றப்பட்டு விட்டார்கள். இந்தக் கப்பல் பிரிட்டிஷ் கப்பற்படைக்குப் போக்குக் காட்டி விட்டு நார்வே கடல்களில் மறைந்திருந்தது. சர்ச்சில் விமானங்களை அனுப்பி, ஆய்ந்து 'ஆல்ட்மார்க்கைக்' கண்டுபிடித்து அதனை வேட்டையாடி அழித்தார். பிரிட்டனின் 'கோஸாக்' (Cossack) கப்பலின் சிப்பந்திகளைக் கண்டதும், 'ஆல்ட்மார்க்கில்' சிறைப்பட்டிருந்த பிரிட்டிஷ் கைதிகள் 'நமது கடற்படை வந்து விட்டது' என்று ஆனந்தக் கூத்தாடினார்கள். அவர்கள் மீட்கப்பட்டு வீரர்களாக வீடு திரும்பினார்கள். இதே கைதிகளைப் பெர்லின் வீதிகளில் இழுத்தடித்து மானபங்கம் செய்ய எண்ணியிருந்த ஹிட்லரின் கனவுகள் மண்ணாகி விட்டன. அடிபட்ட புலிபோல் அங்குமிங்கும் உறுமிக் கொண்டிருந்தார். அவர் படும் பாட்டைக் கண்டு உலகம் பரிதாபப்பட்டது.

சர்வதேசச் சட்டப்படி நார்வேயின் பிரதேசக் கடலில் புகுந்த எதிரியைத் தாக்கிய வின்ஸ்டனின் செயல் சரியா தவறா என்பது ஒரு புறம் இருந்தாலும் அவரது நடைமுறை அறிவுக் கூர்மையை யாவரும் பாராட்டினார்கள். எதிரி மட்டும் நாள் தவறாமல் சர்வதேசச் சட்டங்களை மீறிக் கொண்டிருக்கும் போது, மனித மாண்பிற்கே முரண்பட்ட வகையில் மக்களைக் கொன்று குவித்து 'கொள்ளை! கொலை!' என்று கூக்குரலிடும் ஹிட்லரிடமிருந்து அவன் கைப்பற்றிய இரையை மீட்டதுபற்றி யார்தான் மகிழ்ச்சி கொள்ளாமல் இருக்க முடியும்? நாஜிகள் வெளியிட்ட கோபக் குமுறல்களையும், அறநெறி பாழாகி விட்டதாக எழுப்பிய வேதனைக்குரல்களையும், நியூயார்க் ஹெரால்ட்–டிரிபியூன் (New york Herald-Tribune) பத்திரிகை நகைச்சுவை ததும்ப விமர்சித்தது. 'இவ்வாறு கூக்குரலிடும் மக்கள் மிருக சக்தியைத் தாம் வழிபடும் கடவுளாக்கிக் கொண்டுள்ளவர்களால் ஆளப்படுகிறவர்கள். இவர்கள் கிழித்தெறியாத புனித ஒப்பந்தங்கள் இல்லை......போலந்து மக்களை இரக்கமின்றிக் கசாப்புச் செய்தவர்கள்...... எச்சரிக்கை எதுவுமின்றி ஆயிரக்கணக்கான பயணிகளைக் கொன்றவர்கள்...... இவர்கள் அறநெறியைப்பற்றி ஓலமிடுவது விந்தையே!' என்று குறிப்பிட்டு 'ஆடு நனைகிறதென்று ஓநாய் அழுத' கதையை உலகத்திற்கு நினைவூட்டியது.

ஜெர்மனி போலந்தைத் தாக்கியது ஹிட்லரின் மின்னல் வேகத் தாக்குதலின் முதல் சோதனையின் பிரமாதமான வெற்றியாகும். செப்டம்பர் திங்களின் முதல் நாள் தொடங்கிய தாக்குதல் பதினைந்து நாட்களில் போலந்தின் படைகளைச் சின்ன

பின்னப் படுத்தியது. போலந்தின் அரசினர் ருமேனியாவின் எல்லையில் புகலிடம் தேடினர். செப்டம்பர் பதினறும் நாளில் ஜெர்மன் படைகள் போலிஷ் யூக்ரேன் (Polish Ukraine) பகுதியை அடைந்து விட்டன. இந் நிலையில் ருஷ்யா துணைக்கு வந்தது. ஏனெனில், :கிழக்குப் போலந்தில் ஏராளமான ருஷ்யர்களும், யூக்ரேனியர்களும் இருந்தனர். இந்தப் பகுதிகள் ஜெர்மனியின் கைகளில் சிக்கி விடுவதை ஸ்டாலின் விரும்பவில்லை. 1939ஆம் ஆண்டு ஆகஸ்டில் ஜெர்மனியும் ருஷ்யாவும் செய்துகொண்ட ஒப்பந்தப்படி நாரெவ் (Narew) விஸ்டுலா (Vistula) சான் (San) ஆகிய ஆறுகள் இரு நாட்டின் செல்வாக்குப் பிராந்தியங்களுக்கு எல்லைகளாக இருந்தன. போலந்து அரசின் வீழ்ச்சி ஸ்டாலினுக்குத் தக்க வாய்ப்பளித்தது. போலந்தில் அரசு இல்லாத நிலையில் அதனுடன் செய்யப்பட்ட ஆக்கிரமிப்பு எதிர்ப்பு ஒப்பந்தம் காலாவதியாகி விட்டது என்று ஸ்டாலின் கூறினர். உடனே, மேற்கு யூக்ரேனிலும், மேற்கு வெள்ளை ருஷ்யாவிலும் இருந்த மக்களின் உயிரையும், உடமைகளையும் பாதுகாக்கப் படைகளையும் அனுப்பி வைத்தார். ஜெர்மன் படைகள் பின் வாங்கின. செப்டம்பர் 29ஆம் நாளில் கையெழுத்தான ஒப்பந்தப்படி போலந்து மீண்டும் துண்டாடப்பட்டது. இதன் படி ருஷ்யா தான் முன்னர் இழந்திருந்த பைலோ-ருஷ்யாவையும் (Byelo-Russia) மேற்கு யூக்ரேன் பகுதியையும் பெற்றுக் கொள்ளவே, மைய, மேற்குப் போலந்தை ஜெர்மனி எடுத்துக் கொண்டது.

போலந்து அழிக்கப்பட்டபின் பிரிட்டனும், ஃபிரான்சும் தமக்கு எதிராகப் போரைத் தொடர்வதில் பொருளில்லை என்று ஹிட்லர் வாதாடினர். இந்த இருநாடுகளும் போலந்திற்காகவே போரில் இறங்கின. ஆனல், அவை போலந்தைக் காப்பாற்ற முடியவில்லை. பிரிட்டிஷ், ஃபிரஞ்சுப் படைகளின் ஒரு சிறிய பகுதிகூட போலந்தின் போர்க்களங்களில் ஈடுபடவில்லை. மேற்கு ஜனநாயக நாடுகளின் ஒரு விமானங்கூட ஹிட்லர் போலந்தின் நகரங்களைத் தாக்கி அழித்துக் கொண்டிருந்த போது அதனைத் தடுக்கவில்லை. எனவே, அவர்கள் போலந்திற்கு அளித்த உடன்பாடு வெறும் அடையாளம் என்பது தெளிவு. இப்பொழுது போலந்து இல்லையாதலால், பிரிட்டனும், ஃபிரான்சும் போரை நிறுத்த வேண்டியது தானே! போலந்து மீண்டும் உயிர்பெறப் போவதில்லை. ஆகவே, போரைத் தொடர்ந்து நடத்திப் பல்லாயிரக்கணக்கான உயிர்களைப் பலி வாங்க வேண்டியது அவசியமா! இவையெல்லாம் ஹிட்லர் பேசிய தர்ம நியாயங்கள்.

சர்ச்சிலும் அவர்தம் அடியார்களும் தம்முடைய கொள்கைகளை மாற்றிக் கொள்ளாவிட்டால், ஹிட்லர் தொடர்ந்து போர் செய்வதாக அறிவித்தார். சர்ச்சிலும் அவர்தம் அடியார்களும் தமது கருத்தை மாற்றவில்லை. அதுவே மேலோங்கி நின்றது. பிரிட்டன் மியூனிச் வெட்கக்கேட்டைக் களைந்தறிந்து விட்டது. அந்தப் பெயரைக் கேட்டாலே அவர்கள் வெகுண்டனர். நவம்பர் 12ஆம் நாளில் சர்ச்சில் ஆற்றிய வானொலி உரையில் நாட்டின் இந்தப் புதிய மனநிலையை எதிரொலித்தார்.

'நவீன உலகத்தில் பிரிட்டனும், ஃபிரான்சும் எந்தக் கருத்துக்களுக்காக நிற்கின்றனவோ அவையாவும் வெல்வது உறுதி என்றும், ஹிட்லரும், நாஜி ஆட்சியும், ஐரோப்பாவிற்கு ஜெர்மனியாலும், பிரெஷ்யாவினாலும் ஏற்படக்கூடிய தொல்லைகளும் முரியடிக்கப்பட்டு அழிவது திண்ணம் என்றும் கூறிக் கொள்ளுகிறேன். இந்த உண்மையினைச் சந்திக்க ஒவ்வொருவரும் உறுதி பூணுவோமாக' என்ற சர்ச்சிலின் தீர்க்கதரிசன சங்க நாதம் மக்களின் செவிகளில் ஒலித்துக் கொண்டிருந்தது.

### போரில் திடீர்த் திருப்பம்

ஸ்டாலின் ஹிட்லரின் 'எனது போராட்டத்தை' ஊன்றிப் படித்தவர். மேற்கு ஐரோப்பாவைப்பற்றி ஹிட்லர் என்ன திட்டங்கள் கொண்டிருந்தாலும், அவர் மேற்கு ருஷ்யாவைக் கைப்பற்றுவது மட்டும் உறுதி என்பதை ஸ்டாலின் அறிந்திருந்தார். காலம் கனிகின்ற நிலையில் ஹிட்லர் ருஷ்யாவுடன் செய்திருந்த ஒப்பந்தங்களை ஊதித் தள்ளி விட்டு, அவர் இப்பொழுது செய்திருந்த நட்புறவுகளை உதறிவிட்டுத் தாக்குதல்களில் ஈடுபடுவார் என்று ஸ்டாலின் உறுதியாக நம்பினார். அந்த அவலமான நாள் வருவதற்கு முன்னதாகவே ஜெர்மனியின் படைக்கும், ருஷ்ய பூமிக்கும் இடையில் ஒரு பாதுகாப்பு மெத்தையை அமைப்பது நல்லது; கிழக்குப் போலந்தை ஒட்டிய நீண்ட பிரதேசத்தை இதற்குப் பயன்படுத்துவது நல்லது என்று ஸ்டாலின் முடிவு செய்தார். இதற்காகப் பால்டிக் நாடுகளையும் பயன்படுத்தலாம். எனவே, ஸ்டாலின் ஜெர்மனியுடன் ஒப்பந்தம் செய்துகொண்ட அதே நாளில் எஸ்தோனியா (Estonia) வுடனும் ஒரு பரஸ்பர உதவி ஒப்பந்தத்தைச் செய்து கொண்டார். இதனால் எஸ்தோனியாவில் ருஷ்யர்கள் கடல்தளங்களையும், விமானத் தளங்களையும் நிறுவிக் கொள்ள முடிந்தது. மூன்று நாள்களின் பின்னர் லாத்வியாவும் (Latvia) அது போன்றவொரு ஒப்பந்தத்தைச் செய்து கொண்டது. அடுத்து, ருஷ்யாவிற்குத்

தளங்களை வழங்குமாறு ஃபின்லாந்து (Finland) அழைக்கப் பட்டது. ஆனால், ஃபின்லாந்தில் செல்வாக்குப் பெற்றிருந்த தலைவர்கள் ருஷ்யாவின் ஆதிக்கத்தை எதிர்க்கிறவர்கள். முக்கிய தலைவராக இருந்த ஃபீல்ட் மார்ஷல் மானர்ஹைம் (Mannerheim) என்பவர் வன்மையான ஜெர்மன் ஆதரவாளர். முதல் உலகப் போரில் ஜெர்மனியின் சார்பில் ஃபின்லாந்து படைகளைக் களத்தில் இறக்கியவர். எனவே, ஸ்டாலின் வேண்டுகோள்கள் மறக்கப் பட்டன. நவம்பர் திங்களில் ருஷ்யா தனது எண்ணத்தைப் படைப்பலங் கொண்டு நிறைவேற்ற முடிவு செய்தது. ருஷ்யா எதிர்பார்த்ததைப் போன்று ஃபின்லாந்து படைகள் வீராவேச மாகப் போராடி ருஷ்யப் படைகளை முறியடித்தன.

ஸ்டாலின் நிலை தர்ம சங்கடமாகி விட்டது. ருஷ்யத் தோல்வியைக் கண்டு உலகம் வியந்தது. ஸ்டாலின் தமது முழுப் படைப் பலத்தையும் வெளிப்படுத்தி, ஹிட்லரைக் கிளறிவிட விரும்பவில்லை. ருஷ்ய பலத்தை ஹிட்லர் குறைத்து எடை போட வாய்ப்பளித்தால்தான், அவர் ருஷ்யாவைத் தாக்குகின்ற போது ருஷ்யா தனது முழு உருவத்தைக் காட்ட முடியும் என்பது ஸ்டாலினின் திட்டம். ஆனால், ஃபின்லாந்து விவகாரம் இழு பறியாக இருந்ததோடு அந்தச் சிறுநாட்டின் வீரத்திற்கு உலகத் தின் பரிவும், ஆதரவும் பெரும் அளவில் கிடைத்துக் கொண்டி ருந்தன. இத்தாலிய வான்படையினரும், ஸ்வீடனின் தொண்டர் களும்அதற்குத் துணைவந்தனர். பிரிட்டனும் படைக்கலங்களையும் தளவாடங்களையும் ஃபின்லாந்தில் குவித்தது. நார்வேயிடம் பிரிட்டன் தன் அவசரப்படையை அனுமதிக்க அனுமதிகோரியது. நார்வே அனுமதி மறுத்தது, பிரிட்டனுக்கு நல்ல காலம் என்று கூறவேண்டும். போரை விரைவில் முடிக்க விரும்பிய ஸ்டாலின், 1940ஆம் ஆண்டு ஃபிப்ரவரியில் தமது கனரக ஆயுதப்படை கொண்டு ஃபின்லாந்தின் தற்காப்பு அமைப்புகளைத் தகர்த்தார். மே திங்கள் 12ஆம் நாள் சமரச உடன்படிக்கை கையெழுத் தானது. ஃபின்லாந்து வளைகுடாவில் ருஷ்யா கடற்படை, வான்படைத் தளங்களைப் பெற்றது. இது தவிர கரேலியன் பூசந்தியை (Karelian Isthumus) அடுத்திருந்த நிலமும் ஜெர்மனி யின் கையில் விழாதபடி காப்பாற்றப்பட்டது.

ஃபின்லாந்தின் போரின் விளைவுகள் மிக முக்கியமானவை. ருஷ்யாவின் தொடக்க காலத் தோல்வி அதன் ராணுவ பலம வன்மையாக இல்லை என்ற கருத்தை உறுதிப்படுத்தியது. பொது வுடைமையின் எதிரியான சர்ச்சில், ருஷ்யாவின் தோல்விக்குப் பொதுவுடைமைத் தத்துவத்தின் கீழ் ருஷ்யமக்கள் நலிவுற்றது

தான் காரணம் என்று குறிப்பிட்டார். சர்ச்சிலைப் போலவே ஹிட்லம் ருஷ்யாவின் உண்மையான பலத்தைப்பற்றித் தப்புக் கணக்குப் போட்டார். இதன் அடிப்படையில்தான் ஹிட்லர் மேற்கே பிரிட்டனையும், ஃபிரான்சையும் தீர்த்துக் கட்டாமல், கிழக்கில் தமது கவனத்தைச் செலுத்தினார். ஆனால், மேலைநாடுகளையும் ஹிட்லரையும் போல் ஸ்டாலின் தமது முதல் தோல்வியைப்பற்றி தவறான எண்ணம் கொள்ளவில்லை. ஃபின் லாந்து படையெடுப்பில் குறைபாடுள்ளதாகக் காணப்பட்ட காரணங்களை நிறைவு செய்வதில் அவர் ஈடுபட்டார்.

நாஜி அரசிற்கு எதிரான போராட்டத்தின் மையம் சர்ச்சில் தாம் என்று ஹிட்லர் தனிமைப்படுத்திக் கூறியதில் உண்மையுண்டு. சேம்பர்லேனுடன் விட்டுக் கொடுக்கும் கொள்கையில் ஒத்துழைத்த அமைச்சர்களும், பிறரும் போர் உணர்ச்சி இல்லாதவர்கள் என்று கூறுவது தவறாகாது. போர் தொடங்கிய முதல் மாதங்களில் பிரிட்டன் கடலில் மட்டுமே, கடலுக்கு மேலுள்ள வான்பகுதிகளிலுமே எதிர்ப்பு நடவடிக்கைகளை மும்முரமாக நிகழ்த்திக் கொண்டு வந்தது. ஜெர்மனியின் நகருக்குமேல் பறந்த பிரிட்டிஷ் விமானங்கள் குண்டுகளைப் பொழியாமல் துண்டுப் பிரசுரங்களைத்தான் பொழிந்து வந்தன. போர் தொடங்கிய ஒரு வாரத்திற்கெல்லாம் பிரிட்டனின் அவசரப் படை ஃபிரான்சில் வந்திறங்கியது. ஃபிரஞ்சுப் படைகளுடன் இணைந்து, புகழ்பெற்ற மாகினுட் அரணைக் காப்பதில் அவை முனைந்தன. இரு படைகளும் எதிரிமீது சிறுசிறு தாக்குதல்களை நடத்திக் கொண்டு, எதிரி சுடத் தொடங்குவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தன. அவைகளின் வான்படைகள் ஜெர்மனியில் ரோந்துலாக்கள் சென்று வந்தன. ஆனால், குண்டுகளைப் பொழிவதில் அவைகள் அதிக கவனமாக இருந்தன.

ஹிட்லர் ஜெர்மனியின் எல்லையில் சீக்ஃபிரிட் (Siegfried) அரணைக் கட்டத் தொடங்கினார். ஆர்க் விளக்குகளின் உதவியுடன் இரவு பகலாகக் கட்டுமான வேலைகள் நடந்தன. குண்டு வீச்சிற்கு இந்த அரண் அருமையான தாக்குதல் குறியாக இருந்த போதிலும், அதன்மீது ஒரு குண்டு கூட வீசப்படவில்லை. சீக்ஃபிரிட் அரணைத் (Siegfried Line) தவிர்ப்போம் என்று பிரிட்டிஷார் பாடுவதற்கு அனுமதிக்கப்பட்டார்களே யொழிய அதனைத் தவிர்ப்பதற்கு அனுமதிக்கப்படவில்லை. ஹிட்லருக்குத் தீங்கிழைக்காத வரையில் அவரும் தமக்குத் தீங்கிழைக்க மாட்டார் என்று பிரிட்டனும், ஃபிரான்சும் நம்பின. ஆனால், ஹிட்லரைப் பற்றிய முடிவில் அவர்கள் மீண்டும் தவறு செய்தார்கள். சிறிது

காலத்திற்கு ஹிட்லர் மேல் நாடுகளைத் தாக்காமல் விட்டு வைத்தாரென்றால் அது அன்பினாலோ, அல்லது அச்சத்தினாலோ அன்று சரியான நேரத்தில் அடிப்பதற்கு அவர் தயார் செய்து கொண்டிருந்தார். பாய்வதற்காகத் தான் புலி பதுங்கியது. பிரிட்டன் உலகத்திய அதிக வன்மையான படைப்பலத்துடன் இறுதிவரைப் போராடுவதாகச் சூளுரைத்த போதிலும், அரசாங்கம் போதிய தயார்ப்பு இல்லாமல் குழம்பிக் கொண்டிருந்தது. நாட்டு மக்கள் அனைவரையும் போருக்குத் திரட்டுவதிலோ, போதிய அளவு வெடி மருந்துகளைச் சேர்த்து வைப்பதிலோ கெடுபிடியான முயற்சி எதுவும் எடுத்துக் கொள்ளவில்லை. 1939ஆம் ஆண்டு ஆகஸ்டு முதல் அக்டோபர் வரை உள்ளிட்ட காலத்தில் வேலையற்றோர் தொகை அரை மில்லியனுக்கும் அதிகமாக உயர்ந்தது.

நடுநிலை வகித்த நாடுகள் இவற்றை வெறுப்புடன் நோக்கிக் கொண்டிருந்தன. பிரிட்டனும் ஃபிரான்சும் போலந்தைக் காப்பாற்றுவதற்காக வீறுப்புடன் போரைத் தொடங்கின. ஆனால், உண்மையில் அந்நாட்டைக் காப்பாற்ற அவைகள் எதுவும் செய்யவில்லை. அமெரிக்கர்கள் இதனை 'போலிப் போர்' எனக் கேலி செய்தார்கள். பிரிட்டிஷ். ஃபிரஞ்சு அரசியல் வல்லுநர்கள் 'ஜெர்மனியினிடமிருந்து சம்பளம் பெறுகின்றவர்களா?' என்ற வினா கிளம்பியது; அல்லது ஹிட்லர், வீராவேசமான பேச்சுகளாலும், துண்டுப் பிரசுரங்களைப் பொழிவதனாலும் அஞ்சி நடுங்கி விடுவாரென்று அவர்கள் எதிர்பார்த்தனரா? இவ்வாறு பிரிட்டிஷ் மக்கள் அமைதியிழந்து காணப்பட்டனர். ஃபிரான்சில் நிறுத்தப்பட்டிருந்த பிரிட்டிஷ் படைகளின் மனவுறுதி குலைவதாகச் செய்திகள் வந்தன. இத்தகைய ஒரு பரிதாபகரமான நிலையில் ஹிட்லரை பிரிட்டிஷ் படைகள் எவ்வாறு தோற்கடிக்க முடியும்?

இதன் அடிப்படை உண்மை என்னவென்றால் சேம்பர்லேன் போர்வுணர்வே இல்லாமல் இருந்ததுதான். போரை அறிவித்த நிலையிலும் கூட, 'நான் எதற்காக இதுநாள் வரை உழைத்து வந்தேனோ, எதனை நம்பிக் கொண்டிருந்தேனோ, எதனை எதிர்பார்த்திருந்தேனோ, அது தகர்ந்து பண்ணோடு மண்ணாகி விட்டது'[1] என்று முறையிட்டுக் கொண்டார். போரின் வெளிப்படையான செயல்களில் தம்மை ஈடுபடுத்தவே அவர் சிரமப்பட்டார். இறுதி மோதலைத் தடுப்பதற்கு அல்லது ஒத்திப்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 287

போடுவதற்கு ஏதாவது வாய்ப்புக் கிடைக்காதா வென்றுகூட விரும்பினார். ஆனால், இவ்விதம் தடுமாற்றங்கள் எவையும் இல்லாத சர்ச்சில் கடற்படைத் துறையைப் பொறுத்த வரையில் உண்மையான போரை நடத்துவதில் தமக்கு முடிந்தவைகளை யெல்லாம் செய்தார். இவ்வாறு தமது அமைச்சரவை சகாக்களுக்கு உண்மையாக இருக்க வேண்டுமெனச் சர்ச்சில் எவ்வளவு தான் முயன்ற போதிலும், அவர்களின் செயலற்ற தன்மையைக் கண்டு அவர் பொறுமை இழக்க வேண்டியதாயிற்று. 1940ஆம் ஆண்டு ஜனவரி 27ஆம் நாளில் அவர் காமன்ஸ் அவையில் பேசிய பொழுது......

'நாட்டின் உழவினைப் பெருக்க வேண்டும். உணவுப் பொருள்களை அதிகம் விளைவித்து, நாம் உற்பத்தி செய்யும் பயிர்களுக்கு ஏற்றவாறு உண்ணவேண்டும். இதனால் நாம் நம் கடற்படையினரின் சுமைகளைக் குறைத்து அவர்கள் எதிரியை முனைப்புடன் தாக்குவதில் ஈடுபட உதவ முடியும். நம்மீது எப்போது அடிவிழும் என்று வரையறையில்லாமல் நாம் எப்பொழுதும் காத்திருக்க நான் விரும்பவில்லை. அடுத்த அடி எப்பொழுது விழும், எங்கிருந்து விழும் என்பதைக் கூட கண்டுபிடிக்க முடியாத அளவிற்கு ஹிட்லர் அதிசயிக்குமாறு செய்ய வேண்டும்'[1] என்று சர்ச்சில் குறிப்பிட்டார். பிரிட்டனின் தொழிலாளர் தொகை அதிகரிக்க வேண்டுமென்றும், போர்த் தளவாட உற்பத்தித் தொழில்களில் பெண்களை ஈடுபடுத்த வேண்டுமென்றும் சர்ச்சில் திட்டங்களை வகுத்தார். இவ்வாறு செயல்படாவிட்டால் பிரிட்டனும், ஃபிரான்சும் இணைந்து மேற்கொண்டுள்ள சுமையில் பிரிட்டன் தன் பங்கைச் செய்ய முடியாமல் தோல்வியே கிடைக்குமென்று அவர் எச்சரித்தார்.

சர்ச்சிலின் மறுப்புகளையும் எதிர்ப்புகளையும் காதில் போட்டுக் கொள்வார் இல்லை. மார்ச்சுத் திங்களில் போரின் போக்கைப் பற்றிச் சேம்பர்லேன் அறிக்கை சமர்ப்பித்த காலை ஜெர்மனிக்கு எதிராகப்பிரிட்டன் எடுத்துள்ள நடவடிக்கைகளைப்பற்றி ஒன்றுமே குறிப்பிடவில்லை. பிரிட்டன் யாருடன் போர் செய்து கொண்டிருக்கிறது என்பதே தெளிவாக இல்லை. பிரிட்டன் ஈடுபட்டுள்ள சாகசங்களினால் வெற்றி கிடைக்காதென்றும், ஆபத்தும் அழிவுமே நேரிடும் என்றும் அவர் கோடிட்டுக் காட்டினார். பிரிட்டிஷ் போர் அமைப்பு இன்னும் குறையுள்ளதென்றும், போக்குவரத்துகளையும், கப்பல் தொழிலையும் சீரமைக்க வேண்டுமென்பதையும் அவர் குறிப்பிடத் தவறவில்லை.

1. Churchill—His Life and Times, Malcom Thomson, p. 291.

காலந்தாழ்க்கும் உத்தியும், எதிரியுடன் போரிடுவதைத் தவிர வேறெதிலும் ஈடுபடத் தயாராக இருந்த நிலையும் போரை வெல்வதற்கான வழிகள் அல்ல. சேம்பர்லேனின் இறுமாப்பு எவ்வளவு தூரத்திற்குச் சென்றுவிட்டதென்றால், ஏப்ரல் திங்களில் அவர் 'ஹிட்லர் வாய்ப்பைத் தவற விட்டுவிட்டார். இனி இங்கிலாந்தைத் தாக்கமாட்டார்' என்றுகூட அறுதியிட்டுக் கூறினர். ஹிட்லரின் உண்மை இயல்பை உள்ளபடி உணர்ந்து கொள்ள அவருக்குத் திறமை இல்லை என்பதை இந்தக் கூற்று விளக்கியது. சேம்பர்லேன், நாடு தன்னை அர்ப்பணித்துக்கொண்டிருந்த போரின் தன்மையையும் உய்த்துணரவில்லை. நார்வேயையும், டென்மார்க்கையும் தாக்கி ஹிட்லர் சேம்பர்லேனுக்குப் பதிலிறுத்தார். இது முதல் 'போலிப்போர்' முடிவுற்று, பயங்கரப்போர் தொடங்கியது. இந்தக் கடுமையான காலத்தில் அரசினரின் கையாலாகாத தன்மையினல் அன்று. ஆனல், கடற்படை அமைச்சரின் வீராவேசமான பேச்சுகளால்தான் பிரிட்டன் உணர்ச்சிபெற்றது. இவ்வாறு பேசுவதற்குச் சர்ச்சிலுக்கு உரிமையுண்டு. எனெனில், அவர் தலைமை ஏற்றிருந்த துறைதான் போரில் ஈடுபட்டிருந்தது. நாட்டு மக்களின் உணர்ச்சிகளையெல்லாம் அவர் பேச்சுகளில் வடித்துக்கொடுத்தார். அவர் நாட்டு மக்களின் குரலாக மாறினர். அவர்களின் நோக்கங்களைப் பறைசாற்றும் எக்காளமாகிச் சங்கென முழங்கினர்.

போர் தொடங்கியகாலை, கடற்படைத் துறையின் அலுவல்கள் காரணமாகச் சர்ச்சிலுக்கு அதிகம் பேசுகின்ற வாய்ப்புகள் கிடைக்கவில்லை. ஆனல், 1939ஆம் ஆண்டு அக்டோபர் முதல் நாள் தொடங்கி, போரின் போக்கைப்பற்றி அவர் வானொலியில் தொடர்பாகப் பல உரைகளை ஆற்றினர். வானொலிப் பேச்சாற்றலில் அவர் வல்லவர் என்பதை உலகம் உணர்ந்தது. அவருடைய வளமான சொல்நடையும், நகைச்சுவையும் வானொலிக்கு மிகவும் பொருத்தமாக இருந்ததால், அவரது நேர்மையான ஒளிவுமறைவற்ற பேச்சாற்றலை மக்கள் கேட்டு மகிழ்ந்தனர். அக்டோபரில் அவர் நிகழ்த்திய வானொலி உரையில், 'இரத்தக்கறையும், ஊழலும் படிந்த கரங்களைக் கொண்ட ஹிட்லரும், அவரது சிறு கூட்டமும் ஆதரவற்ற ஜெர்மன் மக்களை அடக்கி ஆள்கின்றவரைக்கும், அவர்களின் கடும்பிடியைத் தளர்த்தாதவரையிலும் வெற்றி கிடைக்காது' என்று குறிப்பிட்டார். 'நாம் போரைத் தொடங்கிவிட்டோம்; போரைத் தொடர்ந்து செய்கிறோம்; இறைவனின் துணையுடன் உரிமையையும், நாகரிகத்தையும் காக்கும் காவலர்களாக நாம் முன்னேறுவோம்; முன்னேறிக்கொண்டே இருப்போம்' என்ற

அவரது முழக்கம் நாடெங்கும் ஒலித்தது. நவம்பரில் அவர் ஆற்றிய உரையில் நாஜிகள் நடுநிலைமை நாடுகளின்மீது வீசிய குலைநடுக்கம் தரும் அச்சுறுத்துதலையும், அவர்களின் பிரச்சார பீரங்கி உலகெங்கும் பரப்பிவரும் நச்சுப்பிரச்சாரத்தையும் வன்மையாகக் கண்டித்தார். 'கயவனுகிய ஹிட்லர் வன்செயலுக்காகத் தயாரித்து வருகிறுன். நாஜிகள் பொறுமைக் கண்களுடன் மேலைநாடுகளைக் குறி வைத்திருக்கிறுர்கள். அவற்றைக் கால்களுக்கு அடியில்போட்டு மிதித்துக் கொள்ளையடிக்க விரும்புகிறுர்கள்......இந்தச் சாபக்கேடான ஆதிக்கத்தை அழித்தால் தான் சகல நாட்டு மக்களிடையே ஒற்றுமை வளரும்' என்ற சொற்கள் சர்ச்சிலின் போர்ப்பரணியின் சிதறல்கள்.[1]

### வருவது உரைத்த வல்லவன்

பிரிட்டிஷ் கடற்படையின் மகத்தான சாதனைகள் சர்ச்சிலின் பாராளுமன்ற உரைகளுக்கும், பொதுமேடைப் பேச்சுகளுக்கும் சிறப்பான அடிப்படையாக அமைந்தன. நடுநிலைமை நாடுகளின் அவலநிலை சர்ச்சிலின் உள்ளத்தை வெகுவாகத் தொட்டது. 'ஒன்றுபட்ட கூட்டு முயற்சியில்லாமல் போர் விரைவில் முடியப் போவதில்லை' என்று சர்ச்சில் எச்சரித்தார். அவருடைய தீர்க்க தரிசனங்கள் இன்னும் நிறைவேறிக் கொண்டிருந்தன; சில மாதங்களுக்குள் சர்ச்சில் கூறியது போன்று, நடுநிலைமை நாடுகள் ஒன்றன்பின் ஒன்ருக முதலையின் வாய்க்குப் பலியாயின. 1940ஆம் ஆண்டு ஏப்ரல் 4ஆம் நாளன்று ஜெர்மன் படைகள் நார்வேயினுள் புகுந்தன.

இந்தத் துரோகச்செயலான படையெடுப்பைக் கண்டு உலகம் அதிசயித்தது. சம்பந்தப்பட்ட நார்வே, டென்மார்க் அரசுகளே இதனை எதிர்பார்க்கவில்லை. சேம்பர்லேன் வழக்கம் போல் இதனை நம்பவில்லை. சர்ச்சில் நார்வேயின் மேற்குக் கடற்கரைக்கு அப்பால் கடற் சுரங்கங்களைப் புதைக்குமாறு வற்புறுத்தி வந்தார். ஏப்ரல் 8ஆம் நாளில் அவ்வாறே சுரங்கங்கள் புதைத்திருப்பதாக அறிவிக்கப்பட்டதும், சர்ச்சிலின் துணிச்சலை ஜெர்மன் பத்திரிகைகள் கடுமையாகத் தாக்கின. நிராயுதபாணியாகவும், ஆதரவற்றும் நின்ற சிறு நாடான டென்மார்க்கு ஹிட்லருக்குப் பணிந்து ஜெர்மனியின் பாதுகாப்பை ஏற்றுக்கொண்டது. நார்வே நாட்டின் அரசு எதிர்த்த போதிலும், சிலரின் துரோகச்செயல்கள் அரசினரைத் திடுக்கிடச்

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 294.

செய்தன. நாஜி ஆதரவாளர்களும், ஜெர்மனியின் உளவாளி களும் எதிரியுடன் ஒத்துழைத்துத் தாய்நாட்டின் வாயில்களை அவர்களுக்குத் திறந்துவிட்டனர். நார்வேயின் தேசபக்தர்களும், படைவீரரும் இதைக் கண்டு செயலற்று நின்றனர். எதிர்ப்புச் சக்திகளைத் திரட்டி அமைப்பதற்குள் நாட்டின் முக்கிய துறை முகங்களும், விமானத் தளங்களும் எதிரிகளின் வசமாகிவிட் டிருந்தன. நார்வே மன்னரும், அவர்தம் ஆலோசகர்களும் கிராமங் கிராமமாக வேட்டையாடப் பட்டனர். நார்வேயின் நாஜித் தலைவரான கர்னல் குவிஸ்லிங் (Quisling) தலைமையின் கீழ் 'எர்சாட்ஸ்' (Ersatz) என்ற பொம்மை அரசு நிறுவப்பட்டது.

இதற்குள் ஹிட்லரின் உள்நோக்கம் தெளிவாகியது: பிரிட்டன் தான் ஹிட்லரின் பெரிய எதிரி; பிரிட்டனைத் தோற்கடிக்க வேண்டுமெனில் அதனைக் கடலில் நெருக்கவேண்டும். நார்வே யின் கடற்கரையில் பல நல்ல துறைமுகங்கள் இருந்ததால் ஜெர் மனியின் கடற்படை அட்லாண்டிக் பெருங்கடலுக்குள் நுழைந்து, பிரிட்டிஷ் தீவுகளின்மீது இடைவிடாத கண்விழிப்பு கொண் டிருக்க முடியும். ஹிட்லர் டென்மார்க்கையும், ஃபாரோ தீவு களையும் (Faroe Island) ஐஸ்லாந்தையும், தென் கிரின்லாந்தை யும் கட்டுப்படுத்த முடியுமானல், ஜெர்மனி பிரிட்டனை மேற் கிலும், வடக்கிலும் சுற்றி வளைத்துக்கொள்ள முடியும். இந்த அபாயத்தைச் சர்ச்சில் சரிவர உணர்ந்திருந்தார். ஏப்ரல் 10ஆம் நாளன்று ஜெர்மனியின் தாக்குதல்களுக்கு எதிராக ஃபரோஸ் தீவுகளில் பிரிட்டனின் காப்பரண் நிறுவப்பட்டது. இவ்வாறு பிரிட்டிஷ் கடற்படை வடகடலுக்குப் பாதுகாப்பளித்தது. பிரிட்டிஷ் நாசகாரி 'ரினோன்' (Renown), ஜெர்மன் கப்பலான 'ஷார்ன்ஹோர்ஸ்டை'த் (Sharnhorst) தாக்கி நாசம் செய்தது. அடுத்த சில நாட்களில் பல ஜெர்மன் கப்பல்கள் மூழ்கடிக்கப் பட்டன. பிரிட்டிஷ் நீர்மூழ்கிகளும் ஜெர்மன் கப்பல்களுக்குச் சரக்குகளும். தளவாடங்களும் செல்வதை முரியடித்தன. சிறிய நார்வே கடற்படையும், பிரிட்டிஷ் வான்படையும் குண்டுவீச்சில் ஈடுபட்டன. போரினல் ஏற்பட்ட நாசம் அதிகரித்தது. ஆயிரக் கணக்கில் பிணங்கள் நார்வே, ஸ்வீடன் கடற்கரைகளில் குவிந்தன.

இந்த நெருக்கடியில் பிரிட்டிஷ் கடற்படையின் துணை கொண்டு சர்ச்சில் புரிந்த சாதனைகள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை. ஆனல், கடற்படையின் சாதனைகள் பெருமை பெற வில்லை. நார்வேயின் படைகளுக்கு உதவ வந்த பிரிட்டிஷ் படைகள் வான்பாதுகாப்பின்றி இன்னல்பட்டன. ட்ரோன்ஜெம்,

(Trondhjem) என்ற இடத்தை நேரடியாகத் தாக்கவேண்டு மென்ற யோசனைக்கு சேம்பர்லேன் ஆதரவளிக்கவில்லை. ஆபத்துகள் நிறைந்த இந்தத் தாக்குதல் ஒன்றே வெற்றிக்கு இட்டுச் செல்லக்கூடிய ஒரே வழி. ஆனால், இதற்குள் ஜெர்மன் படைகள் ட்ரோன்ஜெமிற்குள் நுழைந்துவிட்டதால், அவர்களை நார்வேயிலிருந்து பின்வாங்கச் செய்யும் நம்பிக்கைகள் யாவும் சீர்குலைந்தன. மே திங்கள் 2ஆம் நாளில் மூன்று வாரங்களுக்குப் பின் பிரிட்டிஷ் படைகள் நாம்சோஸ் (Namsos), அண்டால்ஸ் னெஸ் (Andalsnes) ஆகிய இடங்களிலிருந்து 'வெற்றிகரமாக' வெளியேறின. நார்வே முழுவதும் நாஜிகளுக்குப் பலியிடப் பட்டது. நார்வே நாட்டிற்கு உதவவந்த பிரிட்டிஷ் படைகளின் அவலமான தோல்வியைக் கண்டு மக்களின் மனக்கசப்பு அதி கரித்தது. சேம்பர்லேனும், அவர்தம் 'முதிய தோழர்களும்' போரில் நாட்டை நடத்துகின்ற முறை கண்டு மக்கள் வெகுண் டனர். இவர்களின் பண்புகளும், குணவியல்புகளும் எவ்வளவு சிறப்பாக இருந்தாலும், ஹிட்லரை எதிர்ப்பதற்கு இவர்களுக்குத் திறமை போதாது; விட்டுக்கொடுக்கும் போக்கினால் ஏற்பட்ட கோழைத்தனம், சரணாகதிக்கும், பின்வாங்குதலுக்கும் வழி வகுக்குமோ?' என்று மக்கள் கலங்கினார்கள்.

மே திங்கள் ஏழு, எட்டாம் நாள்களில் நார்வே படை யெடுப்பின் தோல்வியைப் பற்றி காமன்ஸ் அவை காரசாரமாக விவாதித்தது. பல தவறுகளாலும். தக்க காலத்தில் தயாராக இல்லாததாலும் படையெடுப்புத் தோற்றதென்று விளக்குவதில் பிரதமர் தோல்வி கண்டார். லிபரல் கட்சியினரும், தொழில் கட்சியினரும், அரசினர் கட்சியினரும் போர்க் கொள்கையை வன்மையாகத் தாக்கினார்கள். கடற்படைக்கு மட்டும் அரசு உதவியிருந்தால் 'ட்ரோன்ஜெம்' கைப்பற்றப்பட்டிருக்கும் என்று கூறப்பட்டது. சேம்பர்லேன்மீது வீசப்பட்ட கண்டனக் கணை களில் மிகக் கூர்மையானது அமெரியிடமிருந்து வந்தது. ஆலிவர் கிராம்வெல் எச்சப் பாராளுமன்றத்தை (The Rump) நோக்கிக் கூறிய இறுதி வார்த்தைகளை அமெரி நினைவூட்டினார். 'நீண்டநாள் இங்கே அமர்ந்திருக்கும் நீ புரிந்துள்ள பணிதான் என்ன? வெளியேறு. இறைவனின் பெயரால் கேட்கிறோம்; தொலைந்து போ'[1] லாயிட் ஜார்ஜின் கண்டனம் இதைவிடக் கடுமையாக இருந்தது. சேம்பர்லேன்மீது கண்டனத் தீர்மானம் கொண்டுவரப்பட்டது. அவையிலுள்ள நண்பர்கள் தம்மைக்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 300.

காப்பாற்றும்படி அவர் வேண்டினர். இந்தச் சந்தர்ப்பத்தில் லாயிட் ஜார்ஜ் கூறினர்.

'பிரதமரின் நண்பர்கள் யாரென்பது இங்கே பிரச்சினை யன்று. நட்பைவிட இது பெரிய காரியமாகும். நமது வன்மை யான எதிரியைப் போரிலும் அமைதியிலும் சந்தித்தவர் நமது பிரதமர் என்பதை அவர் மறக்கக்கூடாது......பிரதமர் நாட்டு மக்களைத் தியாகங்கள் புரியுமாறு கேட்கிருர்......நாட்டுத் தலைமை தக்க வகையில் இருக்கும்வரை தியாகங்களுக்குக் குறைவு இருக்காது என்று கூறிக்கொள்ளுகிறேன்......பிரதமர் தம் தியாகத்திற்குச் சான்று தரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளு கிறேன்......இந்த நிலையில் நாடு வெற்றி நடைபோட பிரதமர் செய்யவேண்டிய மகத்தான பணி பதவியைத் துறப்பதுதான்'[1]

உண்மையான விசுவாசத்துடன் சர்ச்சில் தமது தலைவரைப் பாதுகாப்பதற்காக முழுப் பொறுப்பையும் தம்மீது சுமந்து கொண்டார். தோல்வியின் காரணம், 'கடந்த ஐந்தாண்டுகளில் பிரிட்டனின் படைவன்மை, குறிப்பாக வான்படை வன்மை எதிரியின் வன்மைக்கு ஈடுகொடுக்கும் வகையில் அதிகரிக்கவில்லை' என்பதுதான் அவரது வாதம். கடற்படையைப் பொறுத்தவரை 'ட்ரோன்ஜெம்' மீது நேரடித் தாக்குதலைவிட மறைமுகத் தாக்குதல் செலவைக் குறைக்குமென்று அரசினர் எண்ணியதாக அவர் சமாதானம் கூறினர். அவையினர் தங்கள் முடிவுகளைச் செய்து கொண்டனர். முப்பத்தொன்பது அரசு ஆதரவாளர் களும், முப்பத்துமூன்று கன்சர்வேடிவ்களும் எதிராக வாக்களித் தனர். சேம்பர்லேன் சிகப்பு விளக்கின் பொருளைப் புரிந்து கொண்டார். மே திங்கள் 10ஆம் நாள் லிபரல்களும், தொழிற் கட்சியினரும் கூட்டமைச்சரவைக்கு அழைக்கப்பட்டனர். பிரத மராகப் பதவி ஏற்கச் சர்ச்சிலுக்கு அழைப்பு வந்தது.

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 302.

# 17. தாயகம் காத்த தலைவன்

## குருதி! கடும் உழைப்பு! கண்ணீர்!

சேம்பர்லேன் பிரதமராக இருந்தால் கூட்டமைச்சரவையில் பங்குபெற முடியாதென தொழிற் கட்சியினரும், லிபரல்களும் மறுத்துவிட்டனர். இதற்குள் மகத்தான மே 10ஆம் நாளில் ஜெர்மனி ஹாலந்தையும் பெல்ஜியத்தையும் தாக்கிவிட்ட தாகச் செய்தி வந்தது. அதே நாள் மாலையில் சேம்பர்லேன் பதவி துறந்தார். வின்ஸ்டனை அழைக்குமாறும் அரசருக்கு அறிவுரை பகர்ந்தார். இவ்வாறு வீரப்பெருமகனும் வெல்திற வல்லுநருமாகிய வின்ஸ்டன், நீண்டநாள் ஒத்திவைக்கப்பட்ட நல்ல வாய்ப்பினைப்பெற்று, தாயகத்தின் தனிப்பெரும் தலைவ ரானார். 1940ஆம் ஆண்டு மே திங்களில் பிரிட்டன் ஆன்மிகத் தீயினால் புனிதப்படுத்தப்பட்டது. நாடு மனமாற்றங்கண்டது. புதிய ஊக்கமும் ஆக்கமும் பெற்றுத் தியாகங்களை மேற்கொள்ளத் துள்ளியோடி வந்தது. நாட்டின் பொருளாதார வாய்ப்புகள் நிலை குலைந்திருந்தாலும், அவற்றின் கால்கள் மட்டும் கற்பாறையில் ஊன்றி நின்றன. நாட்டு மக்கள் தம் முன்னோர் அறிந்திருந்த ஒரு பேருண்மையை அதாவது 'உயிரைவிட மானமே பெரிது' என்ற மூலமந்திரத்தை உணர்ந்தார்கள்.

இந்தக் கொள்கையின் முழு வடிவமாக அவர்கள் வின்ஸ டனைக் கண்டதால், அவரைத் தம் உள்ளங்களிலே ஏற்றி வைத்தார்கள். இந்த உண்மை மறக்கப்பட்டும், மறுக்கப்பட்டும் நாடு நலிவுற்ற நிலையில் மக்களுடன், இந்த உண்மைக்குச் சான்று பகரும் சத்தியவந்தனாக விளங்கியவர் வின்ஸ்டன். 'நாட்டுத் தலைமை நல்ல முறையில் இருக்கும்வரையில் நாட்டு மக்கள் தியாகங்களுக்கு அஞ்சமாட்டார்கள்' என்று லாயிட் ஜார்ஜ் அறைகூவியிருந்தார். நாட்டை எதிர்நோக்கியிருந்த ஜீவமரணப் போராட்டத்தில் வின்ஸ்டன்தான் தக்க தலைவர் என்பதை

எல்லாக் கட்சியினரும், மக்கள் பிரிவினரும் ஐயமற ஒப்புக்கொண்டார்கள். போர் தொடங்குவதற்கு முன்னரே மக்களில் பெரும் பகுதியினர் அவரை நம்பிக்கை ஒளிவீசும் தாரகையாக வாழ்த்தி வணங்கினுர்கள். 1940ல் நாடு முழுவதும் இந்த நம்பிக்கையில் பங்கு கொண்டது. இது வீரத்தலைவனின் வெற்றி வாய்ப்பு. வரலாற்றை எழுதிக்கொண்டிருந்தவன் வரலாறு படைக்கிருன். ஓவியம் தீட்டியவன் காவியத் தலைவனுகிருன்.

சேம்பர்லேனைத் தள்ளிவிட்ட தொழில் கட்சியினரும், லிபரல்களும் சர்ச்சிலின் தலைமையில் கூட்டமைச்சரவையில் பணி புரிய அவர் விடுத்த அழைப்பை உடனே ஏற்றுக்கொண்டனர். பதவி ஏற்ற மறுநாளே, ஐந்து உறுப்பினர்களைக் கொண்ட அமைச்சரவையின் உட்குழுவை அவர் அறிவித்தார். அதில் அட்லி, கிரின்வூட் ஆகியோர் இடம் பெற்றிருந்தனர். மே திங்கள் 13ஆம் நாள் சர்ச்சில் காமன்ஸ் அவையின்முன் தமது அமைச்சரவைப் பட்டியலைச் சமர்ப்பித்தார். இதில் பழந்தலைவர்களும், கடந்த ஐந்தாண்டுகளாக அவர்களைத் தாக்கி வந்தவர்களும் தோளோடு தோள் சேர்ந்து நின்றனர். யார்மீதும் பகைமை பாராட்டாத பண்புகொண்ட சர்ச்சில் தாம் வெற்றி வாகை சூடி நின்ற நேரத்தில், தமக்குமுன் அரசியல் களத்தில் வீழ்ந்துபட்டுக்கிடந்த பழைய சகாக்களைப் பழிவாங்க விரும்பவில்லை. தமக்கே இயல்பாகவுள்ள தாராள குணத்துடன், நாட்டின் புதிய சூழ்நிலைக்கு ஏற்ப புதிய ஊக்கத்துடன் அவர்கள் பணிபுரிவார்களானுல் அவர்களுக்கும் தமது நேசக்கரத்தை நீட்ட ஆயத்தமா யிருந்தார்.

புதிய யுகம் அறிவித்த செய்தியை வின்ஸ்டன் பிரதமராகக் காமன்ஸ் அவையில் ஆற்றிய முதல் உரையில் குறிப்பிட்டார்.[1]

'இந்த அமைச்சரவையில் பங்கேற்றிருப்பவர்களுக்கு நான் கூறியதையே இந்தப் பேரவையின் முன்னும் கூற விரும்புகிறேன். குருதி, கடும் உழைப்பு, கண்ணீர், வியர்வை இவற்றைத் தவிர வேறெதையும் நான் தருவதற்கில்லை. மிகவும் கடுமையான சோதனை நம்மையெல்லாம் எதிர்நோக்கி இருக்கின்றது. இன்னும் எத்தனையோ மாதங்கள் நாம் போராட வேண்டியிருக்கிறது, துன்புறவேண்டியிருக்கிறது. எனது கொள்கை என்னவென்று கேட்கிறீர்களா? நீரிலும், நிலத்திலும், வானிலும் நமது சர்வ சக்தியுடனும், இறைவன் நமக்குத் தரக்கூடிய வல்லமையுடனும்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson p. 304.

போராடவேண்டியதே. மனித குலம் செய்துள்ள அக்கிரமத்தின் நீண்ட, இருண்ட, துயரத்துக்குரிய பட்டியலையும் விஞ்சும் கொடிய அராஜகத்தை எதிர்த்துப் போராடவேண்டும். எனது நோக்கம் என்னவென்று கேட்கிறீர்களா? இதோ! ஒரே வார்த்தையில் விடை தருகிறேன். அதுதான் 'வெற்றி', எப்பாடுபட்டும் வெற்றி! அச்சுறுத்தல்களையும் எதிர்த்து வெற்றி! வெற்றிப் பாதை எவ்வளவு நீண்டிருந்தாலும், கடினமாக இருந்தாலும் வெற்றி! ஏனெனில் வெற்றியின்றி நமக்கு வாழ்வில்லை...... எனவே, நமது ஒன்றுபட்ட வன்மையுடன் செல்வோம். வெல்வோம்.'

இந்த அறைகூவலுக்காகத்தான் நாடு இத்தனை காலமும் காத்திருந்தது. 'குருதி, கடும் உழைப்பு, கண்ணீர், வியர்வை!', தம் குறிச்கோள் நன்மையாக இருந்ததனால் தியாகங்கள் புரிய மக்கள் தயாராகிவிட்டனர். பயங்கரமான தீமைக்கு எதிராகத் தாங்கள் போராடுவதாக மக்கள் உள்ளத்திலே உறுதிகொண்டனர். தம் தலைவரின் உள்ளக்கிளர்ச்சியும், நம்பிக்கையும் மக்களையும் பிடித்துக் கொண்டன. இத்தகையதொரு நம்பிக்கை அப்போது தேவைப்பட்டது. ஏனெனில் சர்ச்சில் நாட்டுத் தலைமையை ஏற்றுக்கொண்ட நேரம் நாட்டினைப் பேரபாயம் சூழ்ந்திருந்த மிக இக்கட்டான இருண்ட நேரமாகும். கி. பி. ஆறும், ஏழாம் நூற்றுண்டுகளில் பிரிட்டனை டியூட்டானியக் கூட்டங்கள் தாக்கிச் சிதைத்த பின், இத்தகையதொரு கடும் சோதனையான காலம் அதன் வரலாற்றிலேயே ஏற்பட்டதில்லை. ஒன்றரை நூற்றுண்டுகளுக்குமுன் நிகழ்ந்த நெப்போலியனின் படையெடுப்புகூட இத்தனை ஆபத்தானதாய் இருக்கவில்லை. நெப்போலியனின் ஆட்சி ஹிட்லரின் கொடுங்கோன்மையைப் போன்று அராஜகமாக இருக்கவில்லை. இவ்வாறு சர்ச்சில் தலைமை ஏற்றபோது நாடு தனது தலைவிதியை நோக்கி அண்மித்துக் கொண்டிருந்தது.

### ஹாலந்தும், பெல்ஜியமும் பலியாகுதல்

ஹிட்லர் ஹாலந்தையும், பெல்ஜியத்தையும் தாக்குவாரென்பது திறமை படைத்த பார்வையாளர்கள் ஏற்கெனவே முன்னறிவித்திருந்தனர். ஆனால், இவ்விரு நாடுகள் தமக்கு வரவிருப்பதைச் சற்றும் உணராமல், பிரிட்டனுடனும் ஃபிரான்சுடனும் சேர்ந்து கூட்டுப் பாதுகாப்பு உடன்பாடுகளைச் செய்து கொள்ளாமல் இறுமாந்து இருந்துவிட்டன. நடுவுநிலைமை என்ற வன்மையற்ற திரையைப் போட்டுக்கொண்டு சிறிதுகால அமைதியைப் பெரிய விலைகொடுத்து வாங்கினுர்கள். ஹிட்லரின்

வெற்றிப் பட்டியலில் அவர்கள் நாடுகள் இடம் பெற்றிருந்ததை அவர்கள் அறியார்போலும்? மே திங்கள் 10ஆம் நாள் காலை மூன்று மணியளவில் ஹிட்லர் இந்நாடுகளைத் தாக்கினர். ஆறு மணிக்கெல்லாம் ஹாலந்து அமைச்சரும், பெல்ஜிய நாட்டுத் தூதுவரும், பிரிட்டனின் உதவியைப் பெறுவதற்காக, வெளி விவகார அமைச்சரான ஹாலிஃபாக்ஸ் பிரபுவைச் சந்தித்தனர். கதியற்ற இந்த நாடுகளுக்கு உதவும் நடவடிக்கைகள் உடனே மேற்கொள்ளப்பட்டன. பெல்ஜியத்தின் எல்லையிலிருந்த பிரிட்டிஷ், ஃபிரஞ்சுப்படைகள், நாஜிகளின் முன்னேற்றத்தை வீணில் எதிர்த்துப் போராடிக்கொண்டிருந்த உள்நாட்டுப் படைகளுக்கு ஆதரவாக இணைந்தன. ஹிட்லர் இந்தத் திருப்பத்தை எதிர் பார்த்திருந்ததால் தெற்கே லக்ஸம்பர்க் (Luxeombuorg) கிலிருந்தும், பெல்ஜிய ஆர்டெனஸிலிருந்தும் (Ardennes) வன்மையாகத் தாக்கினர். இந்த மலைப்பகுதியானது தற்காலப் போருக்கு உகந்ததன்று என்று ஃபிரஞ்சுக்காரர்கள் புறக்கணித்திருந்தார்கள்.

இதே சமயத்தில் இவ்விரு நாடுகளின்மீதும் இடைவிடாத குண்டுவீச்சினல் குழப்பத்தை உண்டாக்கினர் ஹிட்லர். விமான நிலையங்களிலும், பிற கேந்திரங்களிலும் பாரசூட் துருப்புகளையும் பெரும் அளவில் இறக்கினர். ஜெர்மன் விமானத் தாக்குதலினல் ராட்டர்டாம் (Rotterdam) நகரின் பெரும் பகுதி அழிவுற்றுப் பல்லாயிரக்கணக்கில் மக்கள் கொல்லப்பட்டார்கள். ஹாலந்தின் அரசியார் இங்கிலாந்தில் அடைக்கலம் புகுந்தார், டச்சு படைத்தலைவர்கள் சரணடையுமாறு வீரர்களுக்கு உத்தர விட்டார். மே 15ஆம் நாள் நெதர்லாந்து படையின் சரணகதி கையெழுத்தாகியது. பெல்ஜியத்தில் மேலும் பதினைந்துநாள்கள் வரை போர் நடந்தது. அங்கே பிரிட்டிஷ் படையின் இடப்புற அணி, பெல்ஜிய நாட்டுத் துருப்புகளின் தொடர்பு கொண்டிருந்தது. மே 16ஆம் நாளன்று ஜெர்மன் துருப்புகள் ப்ரஸல்ஸ் (Brussels) நகரைச் சூழ்ந்துகொண்டன. அடுத்த நாள் ஆன்ட்வெர்ப் (Antwerp) வீழ்ந்தது. ஊடுருவ முடியாத லீஜே (Liege) கோட்டைகளைப் பாரசூட் வீரர்கள் கைப்பற்றிக்கொண்டனர். நாமூர் (Namur) நகரும் வீழ்ந்தது. லூவேன் (Louvain) நகர நூலகம் மீண்டும் தீக்கிரையாகியது. மே 27ஆம் நாளில் பெல்ஜிய அரசர் லியோபால்டு (Leopold) ஜெர்மன் படையின் தலைமைச் செயலகத்திற்கு, பெல்ஜியப் படைகள் சரணடைந்து விட்டதாகச் செய்தி அனுப்பினர்.

இதனிடையில் தெற்கில் மியூஸ் (Meuse) ஆற்றைச் செடான் நகருக்கருகில் டாங்குகளைக் கொண்டு கடந்துவிட்டனர். அவர்கள் வடகிழக்கு ஃபிரான்சை நோக்கி விரைவாக முன்னேறினார்கள். இவர்களைத் தடுக்க ஃபிரஞ்சுப் படைகள் வன்மையற்றிருந்த நிலையில் கால்வாயை வலுப்படுத்தவும், விரிவு செய்யவும் மேலும் படைகள் குவிந்தவண்ண மிருந்தன. கால்வாயின் வடக்கில் போலோன் (Boulogne), கலே (Calais), டன்கிர்க் (Dunkirk) நகரங்களை விரைவில் சூழ்ந்துகொள்ள முடியும். இவ்வாறு பிரிட்டிஷ் படையும், முதல் ஃபிரஞ்சுப்படையும் எஞ்சியிருந்த ஃபிரஞ்சுப் படைகளிலிருந்து துண்டிக்கப்பட்டுவிட்டன. அவைகளின் தளங்களை இழந்து அழிவை எதிர் நோக்கிக்கொண்டிருந்தன. மே 23ஆம் நாள் போலோன் வீழ்ந்தது. கலேயின் பாதுகாப்பிற்காக வந்த பிரிட்டிஷ் படையை ஜெர்மானிய படைகள் நெருக்கிக்கொண்டிருந்தன. வீரர்கள் பலர் உயிர்த் தியாகம் செய்ததால் பிரிட்டிஷ்படை காப்பாற்றப்பட்டது. டன்கிர்க்கைச் சுற்றித் திரள்வதற்காக அது காலத்தை எதிர்பார்த்திருந்தது.

இவை யாவும் ஹிட்லர் பெற்ற மின்னல்வேக வெற்றிகளாகும். பதினேழு நாள்களில் ஹிட்லர் ஹாலந்தையும், பெல்ஜியத்தையும் சங்காரம் செய்துவிட்டு, வட ஃபிரான்சில் ஃபிரஞ்சு பிரிட்டிஷ் படைகளையும் தோற்கடித்துவிட்டார். முதல் உலகப்போரில் கெய்செர் நான்காண்டுக் காலம் முயன்றும் பெற முடியாத கால்வாய்த் துறைமுகங்களையும் ஹிட்லர் கைப்பற்றிக் கொண்டார். வடக்கே ஃபிளாண்டர்ஸ் (Flanders), பிக்கார்டி (Picardy) பகுதிகளைக் கடந்து ஜெர்மன் படைகள் புகழ்பெற்ற மாகினுட் அரணை வளைத்துவிட்டன. கடந்த இருபதாண்டுகளாக ஃபிரான்ஸ் இந்தக் காப்பரண்மீது தனது செல்வத்தையெல்லாம் கொட்டியிருந்தது. சிறந்த பொறியியல் நிபுணர்கள் படைத்த கான்கிரிட் விந்தை கரும்பூதமெனச் செயலற்றுக் கிடந்தது ஒருபுறம். எந்தப் படை வெள்ளத்தைத் தடுப்பதற்காக இந்தக் காப்பரண் எழுப்பப்பட்டதோ அதனைப் பின்னிருந்து தாண்டி ஃபிரான்சின் இதயபாகத்துள் எதிரிகள் அணி அணியாக நுழைந்துவிட்டனர்.

வட ஃபிரான்ஸ் வழியாக ஜெர்மன் படைகள் விரைவாக ஃபிரான்சிற்குள் நுழைந்துவிட்டதை பிரிட்டிஷ் மக்கள் நம்பக் கூட முடியவில்லை. முதல் போரின்போது இதே பகுதியில் அகழிப் போர்ப்படைகளின் முன்னேற்றத்தைத் தடை செய்த விதத்தை அவர்கள் மறக்கவில்லை. முக்கிய படைக்கு முன்

பாய்ந்துவரும் இந்தப் பறக்கும் முன்னணியைத் தாக்கி முறியடிக்காமல் ஃபிரஞ்சுக்காரர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் என்று பிரிட்டிஷ் மக்கள் வினவினார்கள். போர்முனையிலிருந்து பிரிட்டனுக்குத் திரும்பியவர்கள் மூலம்தான் இதன் காரணங்களும் ஃபிரான்சில் நிகழ்ந்துகொண்டிருந்த சில நிகழ்ச்சிகள் பற்றியும் செய்திகள் வரத்தொடங்கின. உண்மை என்னவெனில் பிரிட்டிஷ் ஃபிரஞ்சுப் படைகள் எதிரியின் கவசமணிந்த மோட்டார் அணிகளினால், விமானப்படையின் துணைகொண்டு இதற்கு முன்னர் நடைபெற்றிராத வேகத்துடன் தாக்கப்பட்டுள்ளன. இதைவிட அதிர்ச்சி தந்த செய்தி என்னவென்றால் ஃபிரஞ்சுப்படையில் நாஜி ஆதரவாளர்கள் மலிந்திருந்தார்கள் என்பதுவே. படை அதிகாரிகளில் சிலர் 'காகௌலார்ட் (Cagowlord) என்ற இயக்கத்தை உருவாக்கி இருந்தனர். இது ஃபிரஞ்சு ஜனநாயகத்தை வீழ்த்திவிடத் திட்டம் தீட்டிக்கொண்டிருந்த ஓர் இரகசிய ஃபாஸிஸ்டு நிறுவனமாகும்.

விட்டுக்கொடுக்கும் கொள்கை செல்வாக்குப் பெற்றிருந்த காலத்தில் சர்வதேச சங்கத்தின்மூலம் பாதுகாப்புக் கிடைக்கும் என்ற நம்பிக்கைகள் தகர்ந்து போய்விட்டன. ஃபிரஞ்சு அரசியல் வாதிகளுக்குள் இரு வேறான கொள்கைப் பாகுபாடுகள் கிளம்பின. இவர்களுள் ஒரு கட்சியினர் ஜெர்மனியை இன்றும் எதிரியாகக் கருதியதோடு, பிரிட்டனுடன் கூட்டுச் சேர்வதில்தான் ஃபிரான்சின் நம்பிக்கையே இருக்கிறது என்ற கொள்கையுடையவர்கள். அடுத்த கட்சியினர் ஜெர்மனி வளரும் வல்லரசு என்றும், பிரிட்டன் அதனை எதிர்க்கத் தயாரில்லை, மனமில்லை, எனவே, ஜெர்மனியின் ஆதரவைத் தேடுவதுதான் அறிவுடைமை என்றும் கருதினர். ஹிட்லர் தமது சோஷியலிஸ்டு, கம்யூனிச எதிரிகளை வெல்வதற்கு அதிக நேரமாகாது. இவ்வாறு ஃபிரான்சின் அரசியல் வல்லுநர்கள் கொள்கை வேறுபாடுகளால் அலைக்கழிக்கப்பட்டுக் கொண்டிருந்த நிலையில் ஃபிரான்ஸ் சக்தியின்றி முடங்கிக் கிடந்தது. அதன் படைத்தலைவர்கள் ஒருவருக்கொருவர் குழிபறிக்கவே, ஃபிரான்சின் போர் முயற்சிகளும் வீழ்ச்சி யடைந்தன.

பிரதமர் என்ற முறையில் இதுபற்றிய சகல இரகசியச் செய்திகளும் சர்ச்சிலுக்குக் கிடைத்தன. இவற்றைச் சேம்பர்லேன் காதில் போட்டுக்கொள்ளவேயில்லை. இத்தகைய கசப்பான உண்மைகள் யாவும் அவருக்கு இனிக்கப்போவதில்லை. நிலைமை எவ்வளவு படுமோசமாகி விட்டதென்பதையும், ஃபிரான்சின் போராட்டத்தைத் தொடர முடியாத நிலையையும்

சர்ச்சில் தெளிவாக உணர்ந்தார். அவர் நாட்டு மக்களுக்கு விடுத்த முதல் வானொலிச் செய்தியில் இதனைக் குறிப்பாக உணர்த்தினார். ஜெர்மன் படைகள் ஃபிரான்சின் எல்லைகளை மீறிக்கொண்டு சோம் ஆற்றுக்களங்களுக்குள் புகுந்துவிட்டன; நிலைமை இன்னும் ஓரிரு நாள்களில் அதிக மோசமாகலாம். நேசப்படைகளின் முன்னணியில் ஏற்பட்டுள்ள பிளவை சமாளிக்கலாம் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது. இதனை மறைக்கவும் அவர் விரும்பவில்லை. நன்கு பயிற்சி பெற்ற, வன்மையான படைகள் இயந்திர வாகனங்களின் தாக்குதல்களுக்கு அஞ்சி நடுங்கக்கூடான. எனினும், வெகு சீக்கிரம் ஐரோப்பாவில் நிலைமை மோசமான முறையில் திசை திரும்பக்கூடும் என்ற அச்சம் அவருக்கு இருந்தது.

'ஃபிரான்சில் நடக்கும் போரின் கெடுபிடி குறைந்ததும் அடுத்து, ஜெர்மனி பிரிட்டிஷ் தீவுகளைத் தாக்கும். அத்தகைய இக்கட்டான நெருக்கடி நிலை ஏற்படுகின்றபோது நாம் எவ்வித நடவடிக்கையும், ஏன்? மிகக் கண்டிப்பான நடவடிக்கைகளையும் எடுக்கத் தவறமாட்டோம்; மக்களின் முழுச்சக்திக்கு உட்பட்ட இறுதி மூச்சுவரை உள்ள சகல முயற்சிகளையும், தியாகங்களையும் செய்யுமாறு அழைப்பு விடுப்போம். மானத்திற்காகவும், வாழ்விற்காகவும், உரிமைக்காகவும் நாம் தொடுக்கின்ற போராட்டத்திற்கு நமது சொத்தின்மீது நாம் கொள்ளும் நலத்தையும் தொழிற்சாலைகளில் உழைக்கும் நேரத்தையும் தியாகம் செய்வது கூட இணையாகாது'.......என்று சர்ச்சில் டிரினிட்டி ஞாயிறு (Trinity Sunday) திருவிழாவன்று உரை நிகழ்த்தினார்.'[1] 'நமது நாடும், புனிதத் திருப்பணிப் பீடங்களும் களங்கப்பட்டுச் சிதைவதைவிட நாம் போரில் சிதைவது நலம்தரும். இறைவன் திருவுளப்படியே ஆகட்டும்' என்ற ஆன்மீகத் தொனியுடன் அவரது உரை முடிவுற்றது பலருக்குத் துன்பம் நீக்கும் மருந்தாக இருந்தது.

### எதையும் தாங்கும் இதயன்!

பிரிட்டிஷ் தீவுகளுக்கும் போர் வரப்போகிறதென்று வின்ஸ்டன் எச்சரித்தது தம்மையோ, தமது நாட்டு மக்களையோ ஏமாற்றும் நோக்கத்துடன் கூறப்பட்ட கற்பனைச் சொற்களல்ல. பிரிட்டிஷ், ஃபிரஞ்சுப்படைகள் இயந்திர வாகனத் தாக்குதல்களை எதிர்த்து நிற்க முடியும் என்பதை அவர் அறிவார். ஆனால், தேசத்துரோகச் செயல்கள் மறைந்திருந்து சதி செய்யு

[1]Churchill–His Life and Times, Malcolm Thomson, p. 310.

மானுல் உள்ளிருந்தே கோட்டை காட்டிக் கொடுக்கப்படும் என்பதும் அவருக்குத் தெரியும். மே திங்கள் 27ஆம் நாளில் பெல்ஜிய அரசர் முன்னறிவிப்பின்றி திடீரெனச் சரணடைந்தது மிக அதிர்ச்சி தரும் பேரிடியென நேசநாடுகளைத் தாக்கியது. முதலில் லியோபால்டு அரசரும் தேசத்துரோகியோ என்று ஐயுற்றனர். பின்னர் கிடைத்த சான்றுகள் அவர் மீதிருந்த களங்கத்தை நீக்கின. மேலும் போரிட முடியாது என்ற நிலையை அறிந்ததும், தம் நாட்டுமக்கள் அநியாயமாகப் பலியிடப்படக் கூடாதென்ற நல்லெண்ணத்துடனே அவர் சரணடைந்தார். அவர் என்றும் ஹிட்லருடன் சமரசம் செய்துகொள்ளவில்லை. ஆனுல், ஜெர்மன் படையெடுப்பாளர்களிடம் தம்மைக் கைதியாக ஒப்படைத்தார். அவர் எடுத்த முடிவு சரியோ தவருே, ஆனுல், அது தன்னலத்தின் அடிப்படையில் எடுக்கப்படவில்லை என்பது மட்டும் உண்மை.

ஆனுல், அரசரின் சரணுகதி பிரிட்டனையும், ஃபிரான்ஸையும் சிக்கலில் ஆழ்த்தியது. மே 28ஆம் நாளன்று காமன்ஸ் சபையில் சர்ச்சில் இந்த நெருக்கடிபற்றி அறிவித்தார். பிரிட்டனின் இருபதாயிரம் அல்லது முப்பதாயிரம் வீரர்களைக்கூட மீட்க முடியுமாவென்பது கேள்விக்குறியாக இருந்தது. அதே சமயத்தில் சர்ச்சில் கீழ்க்கண்ட எச்சரிக்கையையும் விடுத்தார்.

'தாங்கமுடியாத செய்தியைத் தாங்கிக்கொள்ளத் தயாராகுமாறு இந்தப் பேரவையினரைக் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தப் போரிலே ஏற்படக்கூடிய எத்தகைய அபாயமும், நாம் உறுதிப்பாடு கொடுத்திருக்கின்ற உலகத்தின் பாதுகாப்பை மேற்கொள்ளும் பணியினின்று நம்மை விடுவித்துக்கொள்ள வழிவகுக்காது என்று மட்டும் கூற விரும்புகிறேன். மேலும், அவற்ருல் நம்மை நாமே மீண்டும் உயிர்ப்பித்துக்கொள்ளக்கூடிய அளவில் நம்முடைய நம்பிக்கைகளையும் அழிக்கவிடக் கூடாது. முன்னர், பல சந்தர்ப்பங்களில் நம் வரலாற்றில் அழிவுகள் மூலமும், துயரத்தின் மூலமும் நமது எதிரிகளை இறுதியாக முரியடித்திருக்கிருேம் என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது.'

வட ஃபிரான்சில் இருந்த பிரிட்டனின் முழுப்படையும் சரணடையுமென்பது அன்று எதிர்பார்க்கப்பட்டது. டன்கிர்க் என்ற சிறு துறைமுகம் மட்டுமே அவர்களின் வசம் இருந்தது. எதிரியின் விமானப் படைப்பலம் மிகவும் அதிகமாக இருந்தது. அடுத்த வாரத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் பிரிட்டனின் வரலாற்றில் இடம் பெற்றுள்ளன. ஜெர்மன் படையின் முழுப்

பலமும், டாங்குகள், ஆயுதப்படை குண்டுவீச்சு விமானங்கள் யாவும் வெறியுடன் செலுத்தப்பட்டன, டன்கிர்க்கிற்கு இட்டுச் செல்லும் சிறிய குறுகலான பூமியை பிரிட்டிஷ், ஃபிரஞ்சுப் படைகள் பற்றிக்கொண்டிருந்தன; இதனிடையில் டன்கிர்க்கின் இக்கட்டான நிலைபற்றிய செய்திகள் தென்கிழக்கு இங்கிலாந்தின் கடற்பகுதிகளெங்கும் காட்டுத்தீப்போல் பரவின. உடனே, உல்லாசப்படகுகள், மீன்பிடி படகுகள், தேம்ஸ் ஆற்றுக் கப்பல்கள்' உயிர்காக்கும் பழம்படகுகள் ஆகிய நாவாய்களைக் கொண்ட சிறிய கப்பல்படை யொன்று, பிரிட்டிஷ் வீரர்களை மீட்டுக்கொண்டு வருவதற்காகப் புறப்பட்டன. டிரேக்கும், ஹாக்கின்சும், பிரோமிஷரும் இருந்திருந்தால் இந்தப் படையின் முன்னணியில் நின்றிருப்பார்கள். தம் முன்னோர்கள் நிகழ்த்திய தீரச்செயல்களைச் செய்வதற்காகப் பிரிட்டனின் மக்கள் தமக்குப் பழக்கமான கடலின்மீது அணிவகுத்துச் சென்றனர்.

இந்த வீரமக்கள்மீது இயற்கை ஆசி பொழிந்தது. அந்த வாரத்தில் புயல்களும், சண்டமாருதங்களும் கட்டுப்படுத்தப் பட்டிருந்தன; காற்றுகள் அடங்கவே, அமைதியற்ற ஆங்கிலக் கால்வாய் அலைகளின்றி சாந்தமாக இருந்தது, நீலவானின்கீழ் கோடையின் நீண்ட கதிரொளியிலும், விண்மீன்களும், வெட்டரி வாள்போல் நின்ற வெண்மதியும் ஒளியேற்றிய குறுகிய இரவு களிலும் மேற்கூறிய சிறு படகுகளின் படை இளைக்காமல், சளைக் காமல் முன்னேறிச் சென்றுகொண்டிருந்தது. டன்கிர்க் துறை முகத்திலிருந்து நீரைக்கடந்து வந்திருந்த மக்கள் நிவாரணப் படகுகளுக்காகக் காத்துக்கொண்டிருந்தனர். பிரிட்டிஷ் கப்பற் படைக்குச் சொந்தமான கப்பல்கள் அனைத்தும், இருநூற்று இருபதிற்கும் அதிகமான கப்பல்களும் அங்கே பாதுகாப்பிற்காக விரைந்து வந்தன. சிறிய படகுகளே அறுநூற்று ஐம்பதிற்கும் அதிகமாக இருந்தன. இவை யாவற்றையும் எதிரியின் 'யூ' படகுகளிடமிருந்தும் 'இ' படகுகளிடமிருந்தும் பாதுகாக்க வேண்டும். பிரிட்டிஷ் விமானப்படை 'ஸ்பிட்ஃபயர்' (Spitfire) விமானங்களையும், வான் அணிகளையும் ஜெர்மனியின் லோப் வாஃபே படைக்கு எதிராக இறக்கி இருந்தன. இதுவே, ஜெர் மனியின் வான்படைக்கு எதிராகப் பிரிட்டிஷ் பாதுகாப்புத் துறை எடுத்துக்கொண்ட முக்கிய வன்மையான எதிர்ப்பு முயற்சி யாகும்.

ஜூன் 4ஆம்நாளுக்கு முன்னர் டன்கிர்க் கடற்கரையே காலி செய்யப்பட்டது. பிரிட்டிஷ் சிறுபடகுப் படையின் இறுதிப் படகும் வீடு செல்லும் வீரர்களை ஏற்றிக் கொண்டு திரும்பி

விட்டது. பிரிட்டிஷ் படையின் 85 விழுக்காட்டிற்கும் அதிகமான வீரர்கள் பத்திரமாக வீடு சேர்க்கப்பட்டார்கள். ஃபிரஞ்சுப் படையின் பெரும் பகுதியினரும் அவ்வாறே காப்பாற்றப் பட்டனர்; சரியாக ஒரு வாரத்தின் (முன்னர்) இவர்கள் யாவரையும் ஹிட்லரின் கொடுங்கரங்கள் கொல்வதற்குத் தயாராக இருந்தன. இப்பொழுது எதிரிகள் வெறுமணலில் ஓடுகின்ற வரிகளைத்தான் வெறித்துப் பார்த்துக் கொணடிருக்க வேண்டியதாயிற்று. பெல்ஜியத்திற்கும், ஹாலந்திற்கும் எதிராக ஜெர்மனியின் விமானப்படை பயன்படுத்திய பயங்கரமான போர் முறைகளைக் கண்டு பிரிட்டன் பீதி கொண்டது. விமான தளங்களைக் கைப்பற்றுமாறு இறக்கப்பட்ட பாராசூட் வீரர் களும், எதிரிக்கு வழியைத் தயார் செய்யச் சிவிலியன் உடையில் திரிந்த எதிரியின் உளவாளிகளும், நாசவேலைக்காரர்களும், தந்த தொல்லைகளுக்கு எதிராகப் பிரிட்டனின் பரம்பரையான கடற் படை அதிக பாதுகாப்பு அளிக்க முடியவில்லை. எதிரி, பிரிட்டன் மீதும் இதே மாதிரியான தாக்குதலைச் செய்வதாக இருந்தால். நாட்டைப் பாதுகாக்க நாட்டு மக்கள் அனைவரும் தமது சக்தியை ஒன்று திரட்டுமாறு வன்மையான அறைகூவல் விடுக்கப் பட்டது.

புதிய போர் அமைச்சரான அன்டனி ஈடன் மே 14ஆம் நாளில் உள்நாட்டுப் பாதுகாப்பிற்காக 'உள்நாட்டுப் பாது காப்புத் தொண்டர் படை' தயாராகும் என்று அறிவித்தார். ஜெர்மானிய பாரசூட் தாக்குதல்களிலிருந்து தம் வட்டாரங் களைப் பாதுகாக்க ஒவ்வொரு நகரத்திலும், கிராமத்திலும் மக்கள் இப்படைக்குத் திரட்டப்பட்டனர். சிறு துப்பாக்கி களும், கத்திகளும், பிற ஆயுதங்களும் தாங்கிய இத்தொண்டர் படையினர் (L. D. V.) 'உள்நாட்டுப் பாதுகாப்புத் தொண்டர் படை' என்ற விலாசத்தைத் தம்மீது தரித்துக் கொண்டனர். பள்ளிகளிலும், விளையாட்டுத் திடல்களிலும் பயன்படாத மன்றங் களிலும், இவர்களுக்குப் பயிற்சியும், தாக்குதலின் போது தெரு விளக்குகளை அணைப்பதுபற்றிய அறிவுரைகளும், கொரில்லாப் போர்ப் பயிற்சியும் அளிக்கப்பட்டன. சாலைப் பிரிவுகள், பாலங்கள், வாயுநீர்த் திட்டங்கள் போன்ற கேந்திரமான நிலையங்களைப் பாதுகாக்கும் பொறுப்பு அவர்களுக்குக் கொடுக்கப் பட்டது. அமெரிக்காவிலிருந்து ஆயுத உதவி வருகின்ற வரை யிலும் இவர்கள் ஜெர்மன் பாராசூட் வீரர்களிடமிருந்து தப்பு வதற்குச் சிரமப்பட்டனர். ஆனால், இறுதிவரைப் போராடி உயிர் துறக்கும் துணிவும், மனவுறுதியும் இவர்களுக்கு ஆயுதங் களாக உதவின.

**தனித்து நின்று போராடுவோம்!**

ஃபிளாண்டர்ஸிலும் (Flanders) வட ஃபிரான்சிலும் ஜெர்மனியின் மின்வேகத் தாக்குதலினால் நேச நாடுகளின் முனைகள் சிதைந்து கொண்டிருந்தபோது, தம்மைப் பதிவு செய்து கொள்வதற்காகத் திரண்டு வந்த இந்தத் தொண்டர்படை, பிரிட்டனின் உணர்ச்சிப் பிழம்பாக விளங்கியது. பிரிட்டிஷார் தங்கள் வாய்களை இறுக மூடிக் கொண்டிருந்த நிலையில் அவர் களின் வருங்காலம் இருண்டு காணப்பட்டது. நாஜி போர் இயந்திரத்தைக் கட்டுப்படுத்தி முறியடிக்கின்ற நம்பிக்கை மறைந்துவிட்டது. ஆனால், சரணடைவதென்பது முடியாத காரியம். சமரசம் செய்து கொள்வது நினைக்க முடியாத தொன்று. ஜூன் 4ஆம் நாளில் காமன்ஸ் அவையில் சர்ச்சில் நிகழ்த்திய உரையில் இந்த உறுதியைக் கம்பீரத்துடன் சுட்டிக் காட்டினார். அவர் போரின் போக்கையும், டன்கிர்க்கில் நடந்த அற்புதத்தையும் சுட்டிக் காட்டினார். அவருடைய உரைகளைச் சொற்கள் என்பதைவிடச் செயல்கள் என்று குறிப்பிடுவது மிகப் பொருத்தமாகும். இவைதாம் வரலாற்றை உருவாக்குகின்றன. வரலாற்று முக்கியத்துவம் பெற்ற ஐரோப்பாவின் நெருக்கடி நிலையில் சர்ச்சில் ஆற்றிய உரை அத்தன்மை பெற்றது.

சர்ச்சில் பெல்ஜியத்திலும், வட ஃபிரான்சிலும் ஜெர்மனியின் தாக்குதல்களைப்பற்றிக் குறிப்பிட்டார். டன்கிர்க்கிற்குச் செல்லும் வழியைப் பாதுகாத்துக் கலே நகரில் நின்ற 4000 துப்பாக்கி வீரர்களின் தன்னலமற்ற தியாகத்தை அவர் புகழ்ந்து பாராட்டினார். தமக்கே உரிய தனிச் சிறப்பான பாணியில் டன்கிர்க்கி லிருந்து பிரிட்டிஷ் வீரர்கள் காப்பாற்றப்பட்ட மகத்தான கதையைக் குறிப்பிட்டார். அதே நேரத்தில் நிலைமை எவ்வளவு இக்கட்டாக இருக்கிறதென்பதையும் அவர் மறைக்க முயல வில்லை. வீரர்கள் காப்பாற்றப்பட்ட போதிலும், பல்லாயிரக் கணக்கான போர்த்தளவாடங்களும், படைக்கலங்களும் முற்றி லும் இழக்கப்பட்டு விட்டன என்பதை நினைவுறுத்தினார். மீண்டும் பிரிட்டிஷ் வீரர்களுக்காக ஆலைகளில் படைக்கலங்கள் தயாரிக்கப்படும் என்றும் அவர் குறிப்பிட்டார்.

'ஒவ்வொருவரும் தத்தம் கடமைகளைச் செய்வார்களானால், எவையும் புறக்கணிக்கப்படாமல் இருக்குமானால், மிகச் சிறப்பான ஏற்பாடுகள் செய்யப்படுமானால் நமது நாட்டைப் பாதுகாக் கின்ற நிலையை நாம் மீண்டும் பெற முடியும். போர்ப் புயலி லிருந்து தப்பி, கொடுங்கோன்மைத் தொல்லையை வீழ்த்துவோம்.

தேவையானல் இந்தப் போராட்டம் காலங் காலமாகத் தொடரும். அவசியமானல் தனித்து நின்றும் போராடுவோம்' என்று சர்ச்சில் அறைகூவிய போது அதனைக் கேட்டவர்கள் 'தனித்து நின்று போராடுவோம்' என்ற சொற்களின் பொருளை உணர்ந்து கொண்டனர். பிரிட்டன் கூட்டுநாடான ஃபிரான்சின் தலைமையும், அரசாங்கமும் எவ்வளவு சீர்குலைந்திருந்ததென்பதை அவர் உணர்ந்திருந்தார். ஃபிரான்ஸ் தோற்றாலும், பிரிட்டன் இறுதிவரை போராட உறுதி படைத்துள்ள தென்பதையும் அவர் அறிவார். இந்தச் சந்தர்ப்பத்தில் அவர் கூறிய சொற்கள் பிரிட்டனின் சொல்ல முடியாத உறுதியின் வெளிப்பாடாகக் காலத்தின் வழியிலே ஒலித்துக் கொண்டிருக்கும்.

'ஐரோப்பாவின் பெருநிலப் பகுதிகளும், பழம்பெரும் நாடுகளும் நாஜிகளின் 'கெஸ்டாபோ' (Gestopo) இரகசியப் படைக்கும், பிற அராஜக இயந்திரங்களுக்கும் பலியிடப் பட்டாலும், நாம் தோல்வியுறப் போவதில்லை. பின்வாங்கப் போவதில்லை. இறுதிவரை நாம் போராடுவோம். ஃபிரான்சில் போராடுவோம். கடல்களிலும், பெருங்கடலிலும், வானிலும், உலைவில்லா உறுதியுடனும், தளர்வில்லாத் தன்னம்பிக்கையுடனும் போராடுவோம்; கடற்கரைகளிலும், எதிரி காலூன்றும் தளங்களிலும், வயல்களிலும், வீதிகளிலும், குன்றுகளிலும் அவர்களை எதிர்த்துப் போராடுவோம்; முரியடிப்போம்; சரணடைய மாட்டோம். இந்தத் தீவோ அதன் பெரும் பகுதியோ எதிரியிடம் சிக்கிப், பட்டினியால் வதங்கும் நிலை ஏற்பட்டாலும்—அவ்வாறு என்றும் ஏற்படாதென்பது எனது உறுதி—பிரிட்டிஷ் கடற்படையாலும். ஆயுதங்களாலும் பாதுகாக்கப்படுகின்ற கடல் கடந்த பிரிட்டிஷ் பேரரசு போராட்டத்தைத் தொடரும். இறைவன் விதிக்கின்ற வரையிலும் பழைய உலகத்தை மீட்கத் தன் சர்வ வலிமையுடனும், சக்தியுடனும் புதிய உலகம் உருவாகும்' என்று வீராவேசமாகக் கூறினர்.[1]

பின்னர், 'நாம் சரணடையப் போவதில்லை' என்றார் வின்ஸ்டன். 'அப்படியே ஆகட்டும்' என்று நாட்டுமக்கள் ஆமோதித்தனர். ஆனல், ஃபிரான்ஸ் நாட்டிலோ மக்களைத் திரட்டி வழி நடத்தவொரு சர்ச்சில் இல்லை. பிரிவுபட்டு, ஊழல்மிக்க அரசியல்வாதிகளின் பிடியில் சிக்கியதால் நாடு உறுதியுடன் போர் புரியக்கூடிய உருவத்தில் இருக்கவில்லை. இங்கிலாந்தின்

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 312.

துண்டுபடுத்தப்பட்ட தனிமை, தோல்விக்குப் பின்னும் மக்களை ஒன்று திரட்டி மீண்டும் தயார் செய்யக் கூடிய அளவிற்குக் கால வசதியைக் கொடுக்க வல்லது. ஃபிரான்சிற்கோ இத்தகைய மூச்சு விட்டு இளைப்பாறும் வசதி இல்லை. வடக்கிலே நேசப் படைகளை நாசமாக்கி, பிரிட்டிஷ் வீரர்களை டன்கிர்க் வழியாக வீட்டிற்கு அனுப்பிய எதிரியின் அடி, ஃபிரான்சின் உடல்மீது விழுந்த மரண அடியாகும். உண்ணப்போகும் நேரத்தில் தமது இரையைப் பறிகொடுத்த ஹிட்லரின் நேரடித் தாக்குதலுக்குப் பிரிட்டன் குறியாக இருந்தது. ஜெர்மன் படைகள் சோம் ஆற்றை நோக்கிச் சென்றன. கிழக்கில் ஓய்ஸி (Oise) ஆய்ஸ்னி (Aisne) ஆறுகளைக் கடந்து அவர்கள் சாம்பெய்னே (Champagne) ஊடுருவினர்கள். மேற்கில் அவர்கள் சீயன் (Seine) ஆறு வழியாக ரூவனை (Rowen) நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தனர். புதிய பிரிட்டிஷ் படைகள் அனுப்பப்பட்டன. ஆனால், ஆறுயிரம் வீரர்களை ஜெர்மானியர் திடீர்த் தாக்குதல் செய்து கைப்பற்றினர். கடல் தொடங்கி ஆர்கோனே (Argonne) வரைக்கும் ஃபிரான்சின் மீது பல்முனைத் தாக்குதல் நடத்தப் பட்டது. எதிர்க்க வன்மையற்ற நிலையில் ஜூன் 10ஆம் நாளில் பாரிஸ் தாக்கப்படுவது உறுதியாயிற்று.

## இத்தாலியும் போரில் இறங்கியது

இதுவரை நடுநிலைமை வகித்துவந்த இத்தாலிய சர்வாதிகாரி முசோலினி ஃபிரான்சின் வீழ்ச்சியைத் தக்க சமயமாகக் கருதிப் போரில் இறங்கினர். இத்தாலிக்கும் இங்கிலாந்திற்கும் இடையேயுள்ள பரம்பரையான தொடர்புகளை எடுத்துக் காட்டி முசோலினியைப் போரில் இறங்க வேண்டாமெனச் சர்ச்சில் வேண்டிக் கொண்டார். இதனை முசோலினி காதில் போட்டுக் கொள்ளவேயில்லை. ஜூன் 11ஆம் நாளன்று ஃபிரஞ்சு அரசினர் பாரிஸ் நகரைக் கைவிட்டு, முதலில் தூர்ஸ் (Tours) நகரினுக்கும் பின்னர் போர்டோ (Bordeaux) நகரினுக்கும் இடம்பெயர்ந்தனர். வீதி வீதியாகப் பாரிஸ் போராடுமென்று அவர்கள் அறிவித்த போதிலும், இந்த வீறுப்பு உணர்ச்சிகள் விரைவில் மறைந்து விட்டன. ஜூன் 13ஆம் நாளான்று பாரிஸ் மாநகரம் ‘திறந்த நகரமென’ அறிக்கையிடப்பட்டது. அடுத்த நாள் ஜெர்மானியர் பாரிஸிற்குள் நுழைந்தனர். ஃபிரான்சுடன் இறுக்கமான நட்புறவு கொண்டிருந்த சர்ச்சில் கலவரமுற்றிருந்த அதன் அரசியல் வல்லுநர்களின் மனத்தைத் திடப்படுத்த முயன்றார். பாரிஸ் மாநகரம் வீழ்ச்சியுற்ற அதே நாளில் சர்ச்சில் பிரிட்டிஷ் பெருமக்களின் உறுதியைப் புதுபித்துக் கூறியதாவது,

'ஃபிரான்சிலும், பிரிட்டிஷ் தீவுகளிலும், பெருங்கடல்களிலும், ஆகாயத்திலும், எங்கெங்கு நடக்குமோ அங்கெல்லாம், இறுதி மூச்சுவரை நம் சக்திகளைப் பயன்படுத்திப் போரின் அழிவுகளைச் செப்பனிடுவதில் நமது சுமையைப் பிறருடன் பகிர்ந்து கொண்டு நாம் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்த உறுதி பூண்டுள்ளோம். ஃபிரான்ஸ் ஆபத்தினின்றும் தனது பழைய கண்ணியத்துடன் தலைநிமிர்ந்து நிற்கின்ற வரைக்கும் நாம் போராட்டத்தை நிறுத்தப் போவதில்லை. தவறிழைக்கப் பட்ட மக்களும், அடிமைப்படுத்தப்பட்ட நாடுகளும் விடுதலை பெறும் வரைக்கும் நாஜிக் கொடுங்கோன்மையின் அச்சுறுத்தலிலிருந்து நாகரிகம், உரிமைபெறும் வரையிலும் நாம் ஓய்ந்திருக்கப் போவதில்லை.'[1]

சர்ச்சிலின் உறுதிமொழிகள் காலத்தால் செய்யப்பட்ட கைங்கரியமாகக் கருதப்பட்டன. ஹிட்லரிடம் சரணடைய வேண்டுமென்று ஃபிரான்சின் அரசியல்வாதிகளில் ஒரு வன்மையான பகுதியினர் விரும்பினார்கள் என்பதைச் சர்ச்சில் அறிவார். ஆனால், எதிரிகள் மேலும் மேலும் தாக்கிக் கொண்டிருந்த நிலையில் ஃபிரான்ஸ் உயிருக்காகத் தப்பியோடும் அகதிகளையும், கைவிடப்பட்ட ராணுவ அமைப்புகளையுமே தினம் காணுகின்ற குழப்பமிக்க நாடாக மாறிக் கொண்டிருந்தது. ஜூன் 16ஆம் நாளில் பிரிட்டன் தன்னால் முடிந்த சகல உதவிகளையும் ஃபிரான்சிற்குச் சர்ச்சில் அறிவித்தார். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நிலவுவது போன்ற ஒரு கூட்டாட்சியில் ஃபிரான்சும், பிரிட்டனும் இணைய வேண்டுமென்றும் அவர் ஆலோசனை கூறினார். இரு நாடுகளும் பொதுவான குடியுரிமையையும், இணைந்த பாதுகாப்பு அமைப்புகளையும், வெளிநாட்டு நிதி, பொருளாதாரக் கொள்கைகளில் கூட்டுறவையும் கொண்டிருக்க வேண்டுமென்று விரும்பினார். இந்த ஐக்கியத்தின் விவகாரங்களை ஒரே ஃபிரான்ஸ்-பிரிட்டிஷ் போர் அமைச்சரவை இயக்க வேண்டும். இதன் மூலம் பிரிட்டிஷ் பேரரசின் சகல மூலவளங்களும் ஃபிரான்சின் பணிக்குப் பயன்படுத்தப்படும். நலிவுற்று நிலைகுலைந்து கொண்டிருந்த ஒரு கூட்டுறவு நாட்டிற்கு இதைவிடக் கருணைமிக்க ஒரு திட்டத்தை யாரும் வழங்கி இருக்க முடியாது.

'ஐயோ! பிரிட்டன் ஃபிரான்சை விழுங்கப் பார்க்கிறது' என்று ஃபிரான்சின் ஆளும் வர்க்கத்தினரில் சிலர் கூக்குரலிட்டார்கள். நாள் முழுவதும் அமைச்சரவைக் கூட்டங்கள் நடை

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 315.

பெற்றன. இறுதியில் ஃபிரஞ்சுப் பிரதமர் ரேனுட் (Reynaud) ராஜிநாமா செய்யவே, மார்ஷர் பெட்டேய்ன் (Petain) அரசாங்கத்தின் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். உடனே பெட்டேய்ன் ஜெர்மனியுடன் சமரசம் கோரினர். பிரிட்டனுடன் சேர்வதை விட, ஃபிரான்சின் வன்மையான எதிரிகளான ஹிட்லருக்கும், நாஜிகளுக்கும் அடிமையாவதற்குப் பெட்டேய்னும் அவர்தம் சகாக்களும் தயங்கவில்லை. பெட்டேய்னும் (Petain) லாவாலும் (Laval) தங்களுடைய முடிவைப்பற்றி என்ன நினைத்திருந்தாலும், இதுபற்றி ஃபிரஞ்சு மக்கள் கலந்தாலோசிக்கப் படவில்லையாதலால், நாடே ஸ்தம்பித்து நின்றது. அவர்களுக்கு உலகமே அழிந்துவிட்டதாகத் தோன்றியது. வெல்லப்பட்ட நாடுகளை ஜெர்மனி நடத்திய விதத்தைக் கவனித்துக்கொண்டிருந்த அவர்களுக்குத் தம் இனிய தாய்நாடு பிழைக்காது என்பது ஐயமறத் தெரிந்தது. இந்த நிலையில்தான் போரின் அற்புத மொழிகளில் ஒன்று பேசப்பட்டது.

ரேனுட் அரசு ஜூன் 6ஆம் நாளில் ஜெனரல் டி காலே (de Gaulle) வெளி விவகாரத்துறையின் துணைச் செயலராக நியமித்திருந்தது. ஃபிரான்ஸ் நிலைகுலைந்து, ரேனுட் அரசு வீழ்ச்சியுற்றபோது டி கால் எப்படியோ இங்கிலாந்திற்குத் தப்பிச் சென்றுர். ஜூன் 18ஆம் நாளன்று அவர் இலண்டனிலிருந்து ஃபிரான்ஸ் நாட்டு மக்களுக்கு வானொலியில் ஒரு செய்தி விடுத்தார். ஃபிரஞ்சு அதிகாரிகளும், பொறியாளர்களும், கைவினைத்தொழிலாளரும், அனைத்து மக்களும் தமது தலைமையில் அணி திரளுமாறு அறைகூவல் விடுத்தார். ஃபிரான்ஸ் ஒரு களத்தில் தோல்வியுற்றதே யன்றி, போரின் இறுதித் தோல்வி அடையவில்லை என்று இடித்துக் கூறினர்.

'என்னதான் நிகழ்ந்தாலும், ஃபிரஞ்சு எதிர்ப்புத் தீயானது அணைந்துவிடவில்லை. அதனை அணைத்துவிடவும் கூடாது. நான் தீர ஆராய்ந்து கூறுகிறேன். ஃபிரான்ஸ் வீழ்ந்துவிடல்லை.' நமக்குத் தோல்வியைத் தந்திருக்கின்ற அதே முறைகளைக் கொண்டு ஒருநாள் நாம் வெற்றிபெறுவது உறுதி' என்று முழங்கினர். டி காலே 'இரண்டாவது சர்ச்சில்' என்று கருதிவிட முடியாது. என்றுலும், அவரது உறுதிப்பாடும், உருக்கமான வேண்டுகோளும் அழிவின் வாயிலில் நின்றுகொண்டு விடுக்கப் பட்ட காரணத்தால் வரலாற்றில் இடம்பெற்றன. ஃபிரா[illegible] அறிவு அழிந்துவிடவில்லை. உடைந்த உள்ளங்கள், [illegible] வறண்டுபோன இதயங்கள் டி காலின் சொற்[illegible]

யென வரவேற்றன. குனிந்திருந்த தலைகள் நிமிர்ந்து நின்றன. ஃபிரான்ஸ் மீண்டும் வாழவேண்டும். புதிய ஃபிரான்சின் எழுச்சிக்காக அவர்கள் காத்திருக்கவேண்டும், உழைக்கவேண்டும். அதன் வரவை எதிர்கொண்டு அழைக்க வேண்டும்.

ஜூன் 25ஆம் நாளில் ஃபிரான்சின் வீழ்ச்சிக்கு முன்னர் தமக்கும் ரேனுட் அரசிற்கும் இடையே நடந்த பேச்சுவார்த்தை களைப்பற்றி பிரிட்டிஷ் காமன்ஸ் அவைக்கு அறிக்கை சமர்ப்பித்தார். ஃபிரான்சின் கடற்படையைப் பிரிட்டனிடம் ஒப்படைக்க ரேனுட் ஒப்புக்கொண்டிருந்தும், பெட்டேய்ன் செய்துகொண்ட உடன்படிக்கையினுல், கடற்படையை இத்தாலியும், ஜெர்மனியும் கட்டுப்படுத்துகின்ற நிலைமை எழுந்துள்ளதாக அவர் அறிவித்தார். சர்ச்சிலின் நிலை இருதலைக்கொள்ளி எறும்புபோல் இருந்தது. ஒருபுறம் பிரிட்டனின் அழிவு உறுதி என்ற அவல நிலை; மறுபுறம் இதுவரை நட்புறவும், போர்க் கூட்டுறவும் கொண்டிருந்த ஃபிரான்ஸ் வீழ்ச்சியுற்றிருக்கும் நிலை. பெட்டேய்னின் துரோகத்தால் தாம் மிகவும் கசப்பான ஒரு நடவடிக்கையை எடுக்கவேண்டிய நிர்ப்பந்தத்தில் இருப்பதாகக் குறிப்பிட்டார். அதாவது எப்படியாவது ஃபிரான்சின் கடற்படை நாஜிகளின் கைகளில் விழாதபடித் தடுக்க வேண்டும்.

ஜூலை 3ஆம் நாள் சர்ச்சில் உறுதியாகவும், விரைவாகவும் செயல்படத் தொடங்கினுர். பிரிட்டனின் துறைமுகங்களில் இருந்த ஃபிரஞ்சுக் கப்பல்கள் எளிதாகக் கைப்பற்றப்பட்டன, அவ்வாறே அலெக்சாண்டிரியாவில் நின்ற கப்பல்களும் சரணடைந்தன. ஆனுல், அல்ஜீரியாவில் உள்ள ஓரான் (Oran) துறைமுகத்தில் இருந்த நவீன ஃபிரஞ்சு கடற்படையின் வன்மையான பகுதியும், 'டன்கிர்க்' (Dunkirk), 'ஸ்டிராஸ்பர்க்' (Strasbourg) என்ற இரு போர்க்கப்பல்களும் பிற நாசகாரிகளும், துணைப் போர்க்கப்பல்களும் அவ்வளவு எளிதாகக் கைப்பற்றப்படும் என்று கூறுவதற்கில்லை. வன்மையான பிரிட்டிஷ் கடற்படை யொன்று ஓரான் துறைமுகத்திற்கப்பால் தோன்றி ஃபிரஞ்சு கடற்படைத் தலைவரை ஒன்றில் பிரிட்டிஷ் படையுடன் சேர்ந்துகொள்ள அல்லது மேற்கு இந்தியத் தீவுகளுக்குச் சென்றுவிடுமாறு கோரியது. இந்த இருவழிகளைப் பின்பற்ருவிடில், ஃபிரஞ்சுப் படை ஜெர்மானியர் கைகளில் சிக்கி, பிரிட்டனுக்குத் தொல்லையாகாமல் அவற்றை மூழ்கடிக்க வேண்டியதுதான் அடுத்த வழி. ஃபிரஞ்சுப் படைத்தலைவர் ஜெர்மன் ஆணையின்படி மேற்கூறிய எந்தத் திட்டத்தையும்

ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். இதனைத் தொடர்ந்து சிறிய தாக்குதல் நடைபெற்றது. ஃபிரஞ்சு கடற்படையினர் துப்பாக்கிச் சூடு நடத்தியபோதிலும் பிரிட்டிஷ் படைக்கு அதிக சேதம் ஏற்படவில்லை, 'ஸ்டிராஸ்பர்க்' கப்பலும், ஒரு சில போர்க் கப்பல்களும் சேதமடைந்தனவென்றாலும், 'டன்கிர்க்' மார் சேய்சுக்குத் தப்பி ஓடிவிட்டது; இதன் முக்கிய விளைவு என்ன வெனில் பிரஞ்சு கடற்படை ஹிட்லருக்குப் பயனற்றதாகப் போய்விட்டது. இது தவிர ஓரான் தாக்குதலை நடத்துமாறு ஆணை பிறப்பித்த சர்ச்சிலை எளிதாகப் பணியவைக்க முடியா தென்ற பாடத்தையும் ஹிட்லர் தெரிந்துகொண்டார்.

### பிரிட்டன்மீது பயங்கரக் குண்டுமாரி

ஃபிரான்ஸ் போரிலிருந்து விலகியதும் ஹிட்லர் தமது முழு கவனத்தையும் வெறியையும் பிரிட்டன்மீது காட்டத் தொடங் கினார். ஆனால், இதற்கு அவர் நல்லமுறையில் தயாராக வேண்டும். தாக்குதலின் முதல் கட்டத்தின் பொறுப்பை ஹிட்லர். 'கோயரிங்' (Goering) தலைமையில் இருந்த லோஃப் வாஃபே (Luftwafe) என்ற வெல்ல முடியாத வான்படையிடம் ஒப்படைத்திருந்தார். இப்படைதான் பெல்ஜியம், போலந்து, ஹாலந்து, ஃபிரஞ்சு ஆகிய நாடுகளை நாசம் செய்து சரணடையச் செய்திருந்தது. ஹிட்லர் பிரிட்டனின் கடற்படையையும், துறைமுகங்களையும், கப்பல் தளங்களையும் தகர்த்துவிட்டுத்தான் விமானத் தாக்குதலைத் தொடங்கத் திட்டமிட்டிருந்தார். இதன் படி விமான நிலையங்களும், பிரிட்டிஷ் விமானப்படையும் நாசம் செய்யப்படும். பின்னர், ஆங்கிலக் கால்வாயின்மீதும், தென் கிழக்கு இங்கிலாந்தின்மீதும் ஜெர்மனியின் விமானப்படை முழு மேலாண்மையை நிலைநிறுத்தும். இதனைத் தொடர்ந்து இலண்டன் மாநகரத்தையும் பிற முக்கிய நகரங்களையும், நாட்டின் உயிர்த்துடிப்பான மைய நிலையங்களையும் விமானத் தாக்குதல் செய்வதால் நாடே ஸ்தம்பித்துவிடும். இதற்குள் ஜெர்மன் தரைப்படை பாரசூட் வீரர்களுடன் ஃபிரஞ்சுக் கடற் கரையிலிருந்து கால்வாயைக் கடந்து இங்கிலாந்திற்குள் அலை யலையாக புகவேண்டும். இவை யாவும் ஹிட்லரின் கனவுகள்.

சர்ச்சில் வாளாவிருக்கவில்லை. பிரிட்டிஷ் வான்படையின் பலத்தைப் பெருக்குவதில் முழுமூச்சுடன் ஈடுபட்டார். நாட்டின் படைகளில் ஒன்றரை மில்லியன் வீரர்களே இருந்தனர். 'பிர தேசப்படையினர்' ஒரு மில்லியன்வரை அதிகரிக்கப்பட்டிருந் தனர். கடற்கரைப் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. சாலைகள், ஆறுகள், கால்வாய்கள் ஓரங்களில் தற்காப்புச்

சுவர்கள் எழுப்பப்பட்டன. இடங்களைக் குறிக்கும் பெயர்ப் பலகைகள் அகற்றப்பட்டன. சர்ச்சில் முன்னர்க் குறிப்பிட்டது போல் நாட்டு மக்கள் எதிரியை 'கடற்கரைகளிலும், வயல் களிலும், வீதிகளிலும்' என்மையாகத் தாக்கிப் போராடத் துணிந்துவிட்டார்கள். ஜூலை 2ஆம் நாள் இங்கிலாந்தைத் தாக்குகின்ற 'கடல் அரிமாத் தாக்குதல்' திட்டத்தைத் தொடங்க வேண்டுமென்று ஹிட்லர் முதலில் நாள் குறிப்பிட்டிருந்தார். ஆங்கிலக் கால்வாய்மீதும், தென்கிழக்கு இங்கிலாந்திலும் ஆதிக்கம் பெறுவது இதன் முதல் தேவையாகும். ஜெர்மனியின் விமானப்படை ஆங்கிலக் கால்வாயிலும், தென்கடற்கரைத் துறைமுகங்களிலும் இருந்த பிரிட்டிஷ் கப்பல்களைக் குறியாகக் கொண்டது. சாதகமில்லாத காலநிலை காரணமாக பிரிட்டனின் எதிர்ப்பு அதிகரிக்கவே, கோயரிங் ஜெர்மன் குண்டுவீசும் விமானங்களைத் திருப்பிப் பெறவேண்டியதாயிற்று. பிரிட்டிஷ் கடற்படை எந்தத் துறைமுகத்திலிருந்தும் வெளியேற்றப்பட வில்லை.

இதற்குள் பிரிட்டிஷ் விமானப் படையைத் தகர்க்கின்ற பெரும் தாக்குதலுக்காக கோயரிங் தயார் செய்தார். ஆகஸ்டு 5ஆம் நாள் (கழுகுநாள்) தொடங்கி, நான்கு நாட்கள் நீடிக்க வேண்டுமென்பது அவரது திட்டம். ஆனால், தாக்குதல் 12ஆம் நாளன்றுதான் துவங்கியது. பிரிட்டிஷ வான்படைக்கு எதிராக லோஃப்வாஃபேயின் முழுச்சக்தியும் பயன்படுத்தப்பட்டது. தென்கிழக்கு இங்கிலாந்திலுள்ள விமானத் தளங்களும், ராடார் நிலையங்களும் தாக்கப்பட்டன. ஆனால், பிரிட்டிஷ் விமானப் படையினர் குறைந்த எண்ணிக்கையுள்ளவராக இருந்து போதிலும், எதிரிக்கு அதிக நாசத்தை விளைவித்துப் புகழைத் தட்டிக்கொண்டு போனார்கள். ஆகஸ்டு 20ஆம் நாளன்று சர்ச்சில் காமன்ஸ் அவையில் விமான வீரர்களுக்கு வரலாற்றுப் புகழ் பெற்ற வெற்றிமாலையைச் சூட்டினர்.

'நமது தீவிலுள்ள ஒவ்வொரு வீட்டினதும், நமது பேரரசி லுள்ள ஒவ்வொருவனதும். ஏன் அகில உலகமெங்குமுள்ள மக்க ளினதுமுடைய நன்றி நமது பிரிட்டிஷ் விமான வீரர்களுக்கு உரியது! ஆனல், குற்றம் புரிந்துள்ள எதிரி நாடு மட்டும் இதில் பங்கு கொள்ளாது. நம் வீரர்கள் இன்னல்களை எதிர்த்து நின்று, இடைவிடாது எழுந்த சவால்களையும், உயிரைக் குடிக்கக்கூடிய ஆபத்தையும் கண்டு அஞ்சாமல். தம்முடைய மனவுறுதியாலும், கடமையுணர்வாலும் போரின் போக்கையே மாற்றிவிட்டிருக்

கிறார்கள். சிறிய எண்ணிக்கை கொண்ட வீரப்பெருமக்களுக்குப் பெரும் அளவில் மக்கள் கடப்பாடுடையவர்களாக இருக்கும் ஒரு நிலை மானிடப்போரின் வரலாற்றிலே இதைவிட எங்கும் காண முடியாது!'[1]

1940ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்களின் இறுதி வாரத்தில் ஜெர்மன் விமானப் படையினர் தமது தாக்குதல்களை இலண்டனுக்கு அருகிலுள்ள விமான நிலையங்களின்மீது திருப்பினார்கள். இரு வாரங்கள் தொடர்ந்து தாக்குதல்கள் நடைபெற்றன. பிரிட்டிஷ் விமானப் படையின் போரிடும் கையிருப்பு விமானங்களின் எண்ணிக்கை குறைவாக இருந்தது. விமான ஓட்டிகளும் போதிய அளவில் இருக்கவில்லை. எனினும் பிரிட்டிஷ் வீரர்கள் ஆவேசமாகப் போராடி எதிரிக்குப் பலத்த நாசத்தை உண்டு பண்ணினார்கள். ஆனால், ஹிட்லரின் காலத்திட்டம் காத்திருக்க முடியாது.

ஹிட்லர் செப்டம்பர் 15ஆம் நாளில் தமது 'கடல் அரிமா' தாக்குதல் திட்டத்திற்குத் தயாராக இருக்குமாறு உத்திர விட்டார். ஜெர்மனியின் தரைப்படையும், கடற்படையும் தயாராக இருப்பதாக அறிவித்தபோதிலும், விமானப்படை மட்டும் அத்தகைய உறுதியை அளிக்க முடியவில்லை. பிரிட்டிஷ் விமானப் படையின் ஆற்றலும், போராடும் விமான ஓட்டிகளின் திறமையும் ஜெர்மனியின் எண்ணங்கள் நிறைவேறுவதற்குத் தடையாக நின்றன. செப்டம்பர் 11ஆம் நாளன்று ஹிட்லர் தாக்குதலைத் தொடங்குவதைப்பற்றி முடிவு செய்யவில்லை. இதற்குள் ஜெர்மனியின் விமானங்கள் இலண்டன் நகரின் இதய பாகத்தைத் தாக்கிக் கொண்டிருந்தன. ஆங்கில நிர்வாகத்தின் மைய நிலையங்களையும் இலண்டனின் கப்பல் துறைகளையும் தகர்க்க வேண்டுமென்பது கோயரிங்கின் திட்டம். மீண்டும் பிரிட்டிஷ் விமானப் படைகள் ஜெர்மன் விமானங்களைத் தாக்கி விரட்டி அடித்தன. செப்டம்பர் 14ஆம் நாள் வரையிலும்கூட ஹிட்லர் தமது முடிவைச் செய்யவில்லை. ஆங்கிலக் கால்வாயில் நின்ற ஜெர்மன் கப்பல்கள்மீது பிரிட்டிஷ் விமானப் படைகள் பலத்த தாக்குதல் செய்தன. கலே, போலோன், ஆஸ்டெண்ட், செர்பூர்க் ஆகிய துறைமுகங்களை பிரிட்டிஷ் விமானங்கள் தாக்கின. செப்டம்பர் 17ஆம் நாளன்றும் ஹிட்லர் முடிவு செய்யாத நிலையில் அவரது 'கடல் சிங்கத் திட்டம்' கைவிடப்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 317.

பட்டது. எனினும். பிரிட்டனை அச்சுறுத்துவது மட்டும் நிற்கவில்லை. எதிரியின் அடி ஒவ்வொன்றிற்கும் தக்க பதிலடி கொடுக்பட்டது.

ஜெர்மன் விமானங்கள் இரவுகளில் இலண்டனைத் தாக்கி வந்தன. ஆகஸ்ட் 26, 27ஆம் நாள்களில் இரவு தாக்குதல்கள் முதல் முறையாகச் செய்யப்பட்டன. செப்டம்பர் 8ஆம் நாள் கோயரிங் வட ஃபிரான்சிலுள்ள தலைமைச் செயலகத்திலிருந்து ஜெர்மன் மக்களுக்கு வானொலியில் கூறிய செய்தியாவது: 'இலண்டன் மாநகரத்தின் மீது பயங்கரமான தாக்குதல் நடந்து கொண்டிருக்கிறது; பிரிட்டிஷ் பேரரசின் இதயமான இலண்டனைத் தாக்குகின்ற பெரும் பொறுப்பை அடால்ஃப் ஹிட்லர் என்னிடம் ஒப்படைத்திருக்கிறார்.' செப்டம்பர் 11ஆம் நாளில் 'ஹாம்பர்கர்' (Hamburger) ஏடு லண்டன் நகரை நாசம் செய்வது தான் ஜெர்மனியின் நோக்கம் என்று குறிப்பிட்டது. இரண்டு வாரங்களில் இலண்டனின் வாழ்க்கையே அஸ்தமித்து விடுமென அப் பத்திரிகை ஆருடம் கணித்திருந்தது. ஜெர்மன் விமானத் தாக்குதல்களினால் நாடே நிலைகுலைந்து நாசமாகப் போவதால் இங்கிலாந்தை நேரடியாகத் தாக்கக் கூட அவசியமில்லை என்று அவர்கள் கனவு கண்டு கொண்டிருந்தார்கள்.

1947ஆம் ஆண்டு மே திங்கள் 14ஆம் நாளன்று காமன்ஸ் அவையில் 'பிரிட்டன் போரில்' ஜெர்மன் விமானப் படைக்கு ஏற்பட்ட இழப்புகளைப் பற்றிய புள்ளி விவரங்கள் சமர்ப்பிக்கப் பட்டன. 1940ஆம் ஆண்டு ஜுலை 11ஆம் நாள் தொடங்கி அக்டோபர் 31ஆம் நாள் வரை 2376 ஜெர்மன் விமானங்கள் பழுதுபட்டதாக ஜெர்மனியே ஒப்புக் கொண்டது. அதே நாளில் ஜெர்மனியின் பூச்சாண்டிகளுக்கு சர்ச்சில் தக்க பதிலிறுத்தார்.

### நலியாத வாழ்வு அழியாத வாழ்வு

'இத்தகைய கொடூரமான, ஒழுங்கற்ற, வேண்டுமென்றே செய்யப்படும் விமானத் தாக்குதல்கள் ஹிட்லருடைய படையெடுப்புத் திட்டத்தின் ஒரு பகுதியாகும். ஏராளமான பொது மக்களையும், பெண்களையும், குழந்தைகளையும் கொன்று குவிப்பதால் இந்த மகத்தானப் பேரரசுப் பெருநகரின் மக்களை அச்சுறுத்திப் பணிய வைத்து விடலாமென்றும், அவைகளை அரசினர் மீது ஒரு சுமையாக ஏற்றி வைக்கலாமென்றும் ஹிட்லர்

கனவு காண்கிறார்: இதன் மூலம், ஹிட்லர் தயாரித்து வருகின்ற பயங்கரமான படையெடுப்புத் திட்டத்திலிருந்து மக்களின் கவனத்தை அவர் திசை திருப்ப முயலுகிறார். ஆனால், ஹிட்லர் பிரிட்டிஷ் நாட்டின் வீரவுணர்வையும், இலண்டன் மக்களின் கடின உள்ளத்தையும் பற்றி அறியமாட்டார். நம் முன்னோர்கள் பாராளுமன்ற நிறுவனங்களை அமைப்பதில் பெரும் பங்கேற்ற காரணத்தால், தமது உயிரைவிட உரிமையை அதிகமாக மதிக்கிறவர்கள் என்பதை அவர் அறிவாரா?

ஹிட்லர் என்ற இந்தத் தீயவன், ஆன்மாவை அழிக்கின்ற வெறுப்புணர்ச்சியின் உறைவிடம். பழங்காலத் தவறுகளின், வெட்டுக் கேடுகளின் அசுர வடிவம். அறத்திற்கு புறம்பான, கொலைகளாலும், அழிவாலும் நமது நாட்டு மக்களின் உணர்வுகளை ஒழித்துக் கட்டக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறான். ஆனால், அவனது செயல்களின் விளைவாக இங்கும், உலகமெங்கும் பிரிட்டிஷ் உள்ளங்களில் நெருப்பைத் தான் மூட்டியிருக்கிறான். இலண்டன் நகரில் அவன் பற்றவைத்த தீ எரிந்து வெந்து சாம்பலாகிய பின்னரும் மக்களின் உள்ளத் தீ கொழுந்து விட்டுப் பிழம்பாக எரியும். அகில ஐரோப்பாவிலும் நாஜிக் கொடுங்கோன்மையின் இறுதி அடையாளங்களை எரிக்கும் அணையாத நெருப்பினை அவன் மூட்டி விட்டிருக்கிறான். புதிய உலகும் பழைய உலகும் இணைந்து மனித உரிமைகளின் ஆலயங்களைப் புதுப்பிக்கின்ற வரையும், மீண்டும் அழிக்க முடியாத வகையில் மனித கண்ணியத்தை உறுதியான அடிப்படைகளில் அமைக்கின்ற வரையிலும் ஹிட்லர் பற்றவைத்த தீ அழியாது, அணையாது[1].

ஜெர்மனி பிரிட்டன் போரிலும், அதனைத் தொடர்ந்து இலண்டன் போரிலும் நிகழ்த்திய மும்முரமான விமானத் தாக்குதல்கள் சர்ச்சிலுக்குத் தக்க வாய்ப்பளித்தன. நிலைகுலைக்க முடியாத, நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்த பிரிட்டிஷ் எதிர்ப்பு உணர்வின் சின்னமாகவும், குரலாகவும் தன்னை ஆக்கிக் கொள்ளச் சர்ச்சில் இந்த வாய்ப்பினை முழுவதும் பயன்படுத்தினார். எங்கெல்லாம் குண்டுகள் மாரிபோல் பொழியப்பட்டனவோ, அங்கெல்லாம் வின்ஸ்டன் விரைந்தார். இத்தகைய அழிவுக் காட்சிகளின் நடுவே நிற்கும் அவரது உறுதியான உருவத்தின் நிழல்படங்கள் மக்களுக்குப் பழக்கமாகி விட்டன. வீடிழந்து வீதிகளில் அலைந்த மக்களுக்கு அவர் ஆறுதல் கூறி

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 322.

உற்சாக மூட்டுவார்: அவரது உருவமும், அவர் கூறும் இன் மொழிகளும் அவர்களுக்குப் புதிய நம்பிக்கையையும், ஊக்கத்தை யும் வழங்கும். 'துன்புறும் மக்களின் இதயங்களிலிருந்து நாம் ஊக்கத்தையும், உயிர் பிழைக்கும் உணர்வையும்' பெறுவோம், என்று அவர் உரத்த குரலில் முழக்குவார்.

'கயமை நிறைந்த எதிரியின் தாக்குதல்களுக்கு எதிராக நமது உள்ளங்களை இரும்பாக்கிக் கொண்டு உறுதியுடனும், தளர்ந்து விடாமலும் போரைத் தொடர்ந்து நடத்துவோம்' என்ற அவரது குரலொலி நாடெங்கும் எதிரொலித்தது. பொருள்கள் நாசமாவதாலோ, மக்கள் கொன்று குவிக்கப்படுவதாலோ, பிரிட்டிஷ் பேரரசு தனது புனிதமான குறிக்கோளிலிருந்து நழுவி விடாது என்பது அவரது அறைகூவல். 'நாம் நலிந்து போகாம லிருப்போமானுல், நமது வாழ்வு மகத்தானது' என்ற பேரொ லியை மக்களுக்குக் கற்றுக் கொடுத்தார். படையெடுப்பில் ஹிட்லர் கண்ட தோல்வியானது பிரிட்டனின் வரலாற்றுப் புகழ் மிக்க வெற்றியென்றும், பிரிட்டனின் முன்னேற்றப் பாதையில் மிக முக்கியமான ஒரு மைல் கல் என்றும் கூறி நாட்டு மக்களின் நெஞ்சுறுதியை வலுப்படுத்தினர்.

அவ் வாண்டு மாரிக்காலம் முழுவதும் எதிரியின் தாக்குதல்கள் தொடர்ந்து நடைபெற்றன. இருள் மூடியவுடன் அபாயச்சங்குகள் ஓலமிடும். விமான எதிர்த்தாக்குதல் பீரங்கிகள் முழங்கும். விடியும் வரை குண்டுகள் வீசப்படும் ஓசை கேட்டுக் கொண் டிருக்கும்; கடல்துறைகளில் எரியும் நெருப்புத் தியை உமிழ்ந்த வண்ணமிருக்கும். கிழக்கு இலண்டனில் சிறு வீடுகளைக் கொண்ட வீதிகள் தரை மட்டமாக்கப்பட்டன. ஆனல், இலண்டன் நகர மாந்தரின் மனவுறுதி மட்டும் அழிக்கப்பட வில்லை. 'எதையும் தாங்குவோம்' என்பது அவர்களின் விருது மொழியாகி விட்டது. ஹிட்லரே தமது வீணை முயற்சியில் சோர்வு காணும் வரை அவர்கள் எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டனர். வெல்ல முடியாத மக்களை நசுக்குவதற்கு நாஜித் தலைவன் வேறுவழி தேட வேண்டியதாயிற்று.

இரவு குண்டுவீச்சுகள் பிற நகர்கள் மீதும் நடைபெற்றன. பிரிஸ்டலும், பர்மிங்ஹாமும், கார்டிஃபும் தாக்கப்பட்டன. நவம்பர் 15ஆம் நாளில் கவன்ட்ரி (Coventry) மீது காட்டு மிராண்டித்தனமாகத் தாக்குதல் செய்யப்பட்டது. அங்கு வாழ்ந்த மக்களின் வீடுகளின் மீது வெறித்தனமாகக் குண்டுவீச்சு நிகழ்த்தப்

பட்டது. இன்னலும், இடையூறும் சூழ்ந்த போதிலும், ஆலைகளில் அதிகமதிகமாக வெடிமருந்துகள் உற்பத்தி செய்யப்பட்டன. 1941ஆம் ஆண்டு வசந்தத்திற்குள் விமானத் தாக்குதல்கள் அடிக்கடி நிகழ்ந்தன. இரண்டோர் சமயம் இலண்டனும், பிற ராஜதானித் தலைநகர்களும் வன்மையான தாக்குதல்களுக்கு உள்ளாயின. ஆனால், குண்டு வீசப்படும் இரவுகளின் எண்ணிக்கை குறைந்து கொண்டு வந்தது. ஜூன் திங்களில் ஹிட்லர் ருஷ்யாவின் மீது பாயத் தொடங்கினார். இலண்டனுக்கு மேல் ஆகாயம் மேக மூட்டமின்றி இருக்கவே, நகர மாந்தர் விநோதமான உணர்வுடன் துயில் கொள்ளத் தொடங்கினார்கள். இதுவரை அவர்கள் கேட்டுப் பழக்கமான குண்டுப் பேரிரைச்சல் இனிக் கேட்கவில்லை; இருள் விலகியது.

# 18. சர்வாதிகாரிகள் சரிந்தனர்

தியாகங்களின்றிப் போரை வெல்ல முடியாது என்பதில் சர்ச்சில் நிறைந்த உறுதி கொண்டிருந்தார். உயிரற்ற தற்காப்பு ஏற்பாடுகளில் மட்டும் ஈடுபடுவது தோல்விக்காகக் காத்திருப்பது போலாகும் என்று வின்ஸ்டன் நம்பினார். அவர் பிரதமராகப் பதவியேற்ற இரண்டரை ஆண்டுக் காலத்தில் பிரிட்டன் பெரும் பாலும் தற்காப்பில் முனைந்திருந்த போதிலும், சாகசமான வீரச் செயல்களிலும் ஈடுபடத் தயங்கவில்லை. போரின் தொடக்கத் திலேயே சர்ச்சில் ஆபத்தைத் துச்சமாக மதித்தார். இத்தாலி போரில் இறங்கியதும் மத்தியதரைக் கடல்பகுதி மூடப்பட்ட துடன், அது போர்க்களமாகவும் மாற்றப்பட்டது. இத்தாலி யிடம் கணிசமான அளவு கப்பற்படையும் விமான தளங்களும் இருந்தது மட்டுமின்றி, ஆப்பிரிக்காவிலுள்ள இத்தாலியப் பகுதிகளிலிருந்தும் பிரிட்டிஷ் பேரரசின் அச்சாணிகளான சூயசை யும். எகிப்தையும் இத்தாலி தாக்கவும் முடியும். பிரிட்டனிலோ ஹிட்லரின் படையெடுப்பைப் பற்றிய கவனமெல்லாம் இருந்தன. அதனைச் சமாளிப்பதில் நாட்டின் சக்தி அனைத்தையும் பயன் படுத்துவதில்தான் சர்ச்சிலின் சிந்தனையும், செயலும் இருந்தன. இந் நிலையில் சர்ச்சில் டாங்குகளையும், பிரங்கிகளையும்,:படைவீரர் களையும் இத்தாலிக்குத் தாமதமின்றி அனுப்பி வைத்தார்; ஆப்பிரிக்க முனையைச் சுற்றிச் செல்ல மூன்று மாத காலமாகும் என்றாலும், அவர் துணிவுடன் மேற்கொண்ட இந்த நடவடிக்கை யின் விளைவாகப் பிரிட்டிஷ் பேரரசு காப்பாற்றப்பட்டதென்றால் அது மிகையன்று.

'மத்தியதரைக் கடலை இத்தாலியின் ஏரி ஆக்குவேன்' என்று கர்வமாகக் கொக்கரித்த முசோலினி தனது கனவை நிறைவேற்று வதற்காக ஆவன செய்ய முற்பட்டான். மால்டாவின் மீது தினமும் குண்டுகள் பொழியப்பட்டன. லிபியாவிலிருந்து கிழக்குப் பகுதியில் எகிப்து தாக்கப்பட்டது. அபிசினியாவிலும், எரிட்டிரி

யாவிலும் (Eritrea) இருந்து சுடான் தாக்கப்பட்டது. தவிரவும் அபிசினியாவிலும், இத்தாலிய சோமாலிலாந்திலும் (Somaliland) இருந்து கென்யா (Kenya) தாக்கப்பட்டது. 1940 ஆகஸ்டில் பிரிட்டிஷ் சோமாலிலாந்தில் இத்தாலியப் படைகள் நுழைந்தன. பதினைந்து நாட்கள் வீரமாகப் போராடிய பின்னர் பிரிட்டன் கென்யாவை இழந்தது. ஆனால், முசோலினியின் எகிப்திய தாக்குதல் விரைவாக வெற்றி பெறவில்லை. அலெக்சாண்டிரியாவில் நிறுத்தப்பட்டிருந்த பிரிட்டனின் மத்தியதரைக் கடற்படை வன்மையாக எதிர்த்தது. தீவுகள் சூழ்ந்த கிரேக்க நாடு முசோலினிக்குச் சாதகமான ஒரு தளமாக அமைந்தது. ஆஸ்திரியாவை ஹிட்லர் கைப்பற்றியது போல, முசோலினி கிரேக்க நாட்டை விழுங்க எண்ணினார். கிரேக்க மக்கள், பண்டைய மராதன் (Marathon) தர்மாபைலே (Thermopylae) களங்களில் காட்டிய வீராவேசத்துடன் போராடினார்கள். பிரிட்டிஷ் விமானங்கள் உதவிக்கு விரைந்தன. இத்தாலியப் படைகள் அல்பேனியாவிற்குள் (Albania) புகலிடம் தேட வேண்டியதாயிற்று.

இதற்குள் சர்ச்சில் அனுப்பி வைத்த டாங்குகளும், ஆஸ்திரேலியா, நியூஸிலாந்து படைகளும் எகிப்தை வந்தடைந்தன. பிரிட்டிஷ் கடற்படையின் விமானப் பிரிவு டாரென்டோவில் (Toranto) இத்தாலிய கடற்படையைத் தாக்கி மூன்று போர்க் கப்பல்களை முடமாக்கி, பல கப்பல்களையும் அழித்தது. நான்கு வாரங்களுக்குப் பின்னர் மேற்கு எகிப்திற்குள் நுழைந்த இத்தாலியப் படைகளைத் தளபதி வேவல் (Wavell) தமது சிறு படையுடன் தாக்கினார். சிதி பரானி (Sidi Barrani) வீழ்ச்சியுறவே பல்லாயிரக் கணக்கான வீரர்கள் சிறைப்பட்டனர். இதனைப் பயன்படுத்திக் கொண்டு வேவல் லிபியாவிற்குள் ஜைழந்தார். சோலும் (Sollum) பார்டியா (Bardia) போன்ற நகரங்கள் அடுக்கடுக்காக வீழ்ந்தன. தெற்கில் பிரிட்டிஷ் படைகள் சோமாலிலாந்தையும், எரிட்டிரியாவையும் தாக்கின. 1941ஆம் ஆண்டு ஜனவரி 24ஆம் நாளில் பேரரசர் ஹேய்லி செலாஸி (Haile Selassie) அபிசினியாவிற்குள் வெற்றி வீரராக நுழைந்து இத்தாலியப் படையெடுப்பாளருக்கு எதிராகத் தமது வீரப்படையை நடத்திச் சென்றார். ஆண்டு முடிவதற்குள் போரின் நிலையே மாறிவிட்டது. மத்திய கிழக்கில் நேசநாடுகளின் நிலை மேலும் ஆபத்தாக இருந்த போலும், நம்பிக்கை இழப்பதற்கு வழி இருக்கவில்லை. போரைத் தொடங்கும்போது முசோலினி எண்ணியிருந்ததற்கு அதிகமாக இப்பொழுது அவர் வாங்கிக் கட்டிக் கொண்டார்.

ஒரு காலத்தில் இத்தாலியரின் ஒழுக்கத்தை உறுதிப்படுத்திய தற்காகவோ, அதன் வளங்களை முன்னேற்றியதற்காகவோ, முசோலினியின் சாதனைகளைச் சர்ச்சில் பாராட்டியிருந்தாலும், காற்றைக் குடித்த தவளைபோல் பேராசையினால் உப்பி ஊதிப்போன 'போலி சீசரான' முசோலினியின் போர் வெறியும், போரார்வமற்ற இத்தாலிய மக்கள் அமைதியாக வாழ்ந்த அண்டை நாடுகளைத் தாக்குமாறு அவர்களைத் தூண்டிவிட்ட துரோகச் செயலும், அவர்மீது இப்பொழுது வெறுப்பை வளர்த்துக்கொண்டிருந்தன. உண்மையான போரில் இறங்கியபோது முசோலினியின் ராணுவபலமும், கடற்படை வன்மையும் சூன்யமாகக் காட்சியளித்தன. முசோலினியைக் கேலிசெய்து சர்ச்சில் குத்திக் காட்டிய போதெல்லாம் மக்கள் பிரதமரின் நகைச்சுவை நிறைந்த நையாண்டிகளை ரசித்தனர். அக்டோபர் 21ஆம் நாளில் ஃபிரஞ்சு மக்களுக்கு ஆற்றிய வானொலி உரையில் சர்ச்சில், 'ஐரோப்பாவின் பண்புமிக்க மக்களை ஹிட்லர் வன்முறையாலும், வஞ்சகத்தாலும் பணியவைத்தார். ஆனால், அவரது சிறிய இத்தாலிய சகாவோ நம்பிக்கையுடனும், தீராப்பசியுடனும், அதே நேரத்தில் பயந்து பயந்தும் ஹிட்லரின் நிழலில் பதுங்கிப் பாயப்பார்க்கிறார்' என்று குறிப்பிட்டார். இத்தாலிய சர்வாதிகாரி தனக்குப் பழக்கமான இரத்த வெறிபிடித்த முறையில், புகழும், சாகா வரமும் பெற்ற சிறு நாடான கிரேக்க நாட்டை மிருகத்தனமான முறையில் தாக்கியதற்காக நாட்டின் வெறுப்புணர்ச்சியைப் படம்பிடித்துக் காட்டினார். முசோலினியின் கழுத்தைச் சுற்றி வளைத்துக்கொண்டு, இத்தாலி நாட்டிற்கு அவகேடாக இருக்கும் பாதகங்களும், பழிகளும் நீங்கி, நீதி நிலை நாட்டப்படும் வரை உலைவில்லாத வன்மையுடன் ஆக்கிரமிப்பாளனைத் தாக்கியே தீரவேண்டுமெனச் சர்ச்சில் வீரசபதம் செய்தார்.

முசோலினிக்குக் கர்வம் தலைக்கேறியது. ஹிட்லரின் அனுமதியுடன் இத்தாலிய விமானங்களைக் கொண்டு இலண்டன்மீது குண்டுகளைப் பொழியப் போவதாக வீறாப்புப் பேசினார். அவ்வாறே இருபது இத்தாலிய விமானங்கள் தேம்ஸ் ஆற்றின் மீது பறந்தன. பிரிட்டிஷ் போர் விமானங்கள் தீயை உமிழ்ந்து கொண்டு அவைகளை விரட்டியடித்தன. ஏழு விமானங்கள் டோவரில் வீழ்ந்து அழிய, ஒரு குண்டுகூட இலண்டன்மீது வீசப்படவில்லை. டிசம்பர் 23ஆம் நாள் இத்தாலிய மக்களுக்கு விடுத்த கிறிஸ்மஸ் செய்தியில் சர்ச்சில் இத்தாலிக்கும், இங்கிலாந்துக்கும் இடையேயுள்ள தொன்மையான நட்புறவை நினைவுறுத்தி, அழிவு அவர்களை ஆட்கொள்ளுமுன் போரிலிருந்து விலகிக்

கொள்ளுமாறு எச்சரித்தார். 'உங்கள் விமானங்கள் இலண்டன் மீது குண்டுகளை வீச முயல்கின்றன. ஆனால், எமது படை உங்களது ஆப்பிரிக்கப் பேரரசைத் துண்டு துண்டாகக் கிழித் தெறிந்துவிடும்' என்று நினைவுறுத்தினார். இத்தனைத் தொல்லை களும் சர்வாதிகாரப் பேராசை கொண்ட ஒரு தனி மனிதனின் வெறிச் செயல்கள் என்றும், பண்டைய பெருமை பெற்ற ரோம் திருநகரின் காப்பாளனாக நியமிக்கப்பட்ட முசோலினி இரத்த வெறிபிடித்த காட்டுமிராண்டிகளின் துணையுடன் அழிவைத் தேடுகிறான் என்பதையும் விளக்கினார். இதுவே இத்தாலிய வரலாற்றின் சோகக் கொடுமுடி.

ஃபிரான்சைத் தாக்க வேண்டாமென்று முசோலினிக்குச் சர்ச்சில் விடுத்திருந்த வேண்டுகோளுக்கு இத்தாலிய சர்வாதிகாரி தந்த பதிலையும் அவர் படித்துக் காட்டினார். 'அமைதியை விரும்பியவர்கள் யார், போரைத் தெரிந்துகொண்டவர்கள் யார் என்று அடையாளம் கண்டுகொள்ள முடியும். இத்தனைக்கால முயற்சிகளுக்குப் பின் இத்தாலியைப் போரில் ஈடுபடுத்த ஒரு மனி தனுக்குத்தான் துணிவு இருந்தது. இன்றைய இத்தாலியின் நிலை என்ன? பதினெட்டாண்டு சர்வாதிகார ஆட்சியின் பின்னர் 'டியூசே' (Duce) தம்மை நம்பும் இத்தாலிய மக்களை எங்கு நடத்திச் சென்றிருக்கிறார். மக்கள் தெரிந்துகொள்ள வேண்டிய மாற்றுவழி என்ன இருக்கிறது? அகில பிரிட்டிஷ் பேரரசின் உக்கிரமான தாக்குதலை, அதன் வான்வழியாகவும், கடல்வழியாகவும், ஆப்பிரிக்காவிலும் தரும் தாக்குதலை, கிரேக்க நாட்டினர் எதிர்ப்பைத் தாங்கிக்கொண்டு பதிலடி தருவதைத் தவிர வேறு வழிதான் என்ன? அல்லது ப்ரெனெர் (Brenner) கணவாய் வழியாக அட்டிலாவைத் (Attila) தமது பயங்கரப் படையுடனும், கெஸ்டாபோ (Gestapo) இரகசியப் போலிஸ் படையுடனும், அழைத்து இத்தாலிய மக்களைப் பாதுகாக்கச் செய்வதுதான் மாற்றுத் திட்டமாகும். இந்த நிலைக்குத்தான் ஒரே மனிதன் உங்களை அழைத்து வந்திருக்கிறான்.[1] இந்தப் பதிலைப்பற்றிச் சர்ச்சில் ஏப்ரல் 27ஆம் நாள் வானொலியில் தமது கருத்தைத் தெரிவித்தார்.

'அடிபட்ட ஓநாயான முசோலினி தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக இத்தாலி நாட்டை ஜெர்மன் பேரரசிற்கு அடகு வைத்திருக்கிறான். இவன் பசிவெறியுடன் மட்டுமன்று, வெற்றி மமதையுடனும், ஜெர்மன் புலிக்கு அருகில் நடமாடுகிறான்'[2] என்று குறிப்பிட்டார்.

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 333.
[2] Ibid, p. 334.

## அமெரிக்கா அழைப்பை ஏற்றது

மனித குலத்தின் கதியை மகத்தான உயர் சக்தியொன்று நிர்ணயித்து வருகிறது என்ற உண்மையை ஏற்றுக்கொள்ள வேண்டும். மனித நாகரிகமானது திக்குமுக்காடிக்கொண்டிருந்த இக்கட்டான நிலையில், நீதியையும், அறநெறியையும் காப்பாற்றுவதில் தெய்வத்திருவருள் துணை நின்றது. பிரிட்டனின் தலைவராக விளங்கிய பிரதமர் தமது பிறப்பாலும். ஜனநாயக, கிறிஸ்தவ மரபுகளாலும் அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் பிணைக்கப்பட்டிருந்ததும் தெய்வத் திருவுள்ளமோ? ரேண்டால்ஃப் பிரபு அமெரிக்க ஆரணங்கைத் தம் வாழ்க்கைத் துணைவியாகத் தெரிந்துகொண்டபோது, தாங்கள் பெற்ற மூத்தசெல்வம் தமது இரட்டைப் பாரம்பரியத்தால் இருபெரும் நாடுகளையும் இணைத்து, இதுவரை உலகம் கண்டிராத மகத்தான ஒரு குறிக்கோளை நிறைவேற்றுவதில் மாபெரும் பங்கேற்கும் என்பதைச் சிறிதுகூட எண்ணியிருக்கமாட்டார்கள். அமெரிக்கர்களுடன் வின்ஸ்டன் கொண்டிருந்த நட்புறவு அவர்களுக்குள் சுமுகமான இணக்கத்தை ஏற்படுத்தி இருந்தது. சர்ச்சிலின் துணிவும், அமைதியற்ற தன் முனைப்பும், சொல்லாண்மையும், வீரச்செயல்களும் அமெரிக்கர் விரும்பும் பண்புகளாகத் திகழ்ந்தன. எப்படியும் ஒருநாள் அமெரிக்கா நேச நாடுகளின் சார்பில் போரில் இறங்குமென்ற எண்ணம் பரவலாக இருந்தபோதிலும், அவைகளின் கூட்டுறவு எவ்வாறு அமையும் என்பது ஐயத்திற்குரியதாகவே இருந்து வந்தது. சர்ச்சில் இங்கிலாந்தின் பிரதமரானதும் அமெரிக்கர்களின் மனப்போக்கு மாறியது. தாராள மனம்படைத்த ஜனாதிபதி ஃபிராங்கிளின் ரூஸ்வெல்ட் (Franklin Roosevelt) உலகத்தின் உரிமைக்காக நடக்கும் போராட்டத்தில் அமெரிக்காவின் எல்லையற்ற வளங்களைப் பயன்படுத்துவதற்கு உறுதி பூண்டார்.

போர் தொடங்கிய காலத்தில் அமெரிக்கர்களிடம், பிரிட்டனுக்கு ஆதரவான உணர்வுகளைவிட நாஜி எதிர்ப்பு உணர்ச்சிகளே அதிகமாக இருந்தன. 1940ஆம் ஆண்டு மே 10ஆம் நாளுக்குப் பிறகு குறிப்பான மாற்றம் ஏற்பட்டது. ஜூன் திங்களில் ரூஸ்வெல்ட் நேச நாடுகளுக்குச் செய்யும் உதவியைக் கூறி உரை நிகழ்த்தினார். பிரிட்டனுக்கு அமெரிக்கா உதவுவதையே ஆதாரமாகக் கொண்டு ரூஸ்வெல்ட் மூன்றாவது முறை ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு இதுவரை அமெரிக்க வரலாற்றில் நிகழ்ந்திராத சாதனையைப் புரிந்து காட்டினார். செப்டம்பரில் ஆங்கிலோ – அமெரிக்க உடன்பாடு செய்யப்பட்ட

பின் பிரிட்டன் அமெரிக்காவிற்குச் சில விமான கடல் தளங்களைக் கொடுத்து, அதற்குப் பதில் ஐம்பது நாசகாரி கப்பல்களைப் பெற்றுக்கொண்டது. எந்தச் சந்தர்ப்பத்திலும் பிரிட்டிஷ் கடற் படை சரணடையவோ, மூழ்கடிக்கப்படவோ விடமாட்டோம் என்றும் பிரிட்டன் அமெரிக்காவுக்கு உறுதி கூறியது. ஆனால், இந்த அவலநிலையெல்லாம் இனி ஜெர்மனியின் கப்பற்படைக்குத் தான் ஏற்படும் என்று சர்ச்சில் உறுதியாக நம்பினார். 'அமெரிக்கா ஜனநாயகத்தின் படை வீடாக' மாறவேண்டுமென ரூஸ்வெல்ட் குறிப்பிட்டார். கிரேட் பிரிட்டனுக்கு மேலும் மேலும் உதவி செய்வதில் அமெரிக்கா பின்வாங்கப் போவதில்லை என்றும் அவர் உறுதி கூறினார். உலகத்தின் ஜனநாயக நாடுகளின் உரிமையைக் காப்பதில் அமெரிக்கா அக்கறை கொண்டுள்ளதென்றும், அதற்காக அமெரிக்காவின் ஊக்கமும், வளங்களும், நிர்வாக சக்தியும், அதிக அளவில் விமானங்களும், கப்பல்களும், டாங்கு களும். பீரங்கிகளும் வழங்கப்படும்' என்றும் ரூஸ்வெல்ட் 1941ஆம் ஆண்டு ஜனவரியில் நடைபெற்ற காங்கிரஸ் அவையில் குறிப்பிட்டார்.

இந்தப் புகழ்பெற்ற பேச்சில்தான் ரூஸ்வெல்ட் நான்கு முக்கிய மானிட உரிமைகளைப்பற்றியும் குறிப்பிட்டார். பேச்சு உரிமை, கடவுளை எங்கும் வழிபடும் உரிமை, தேவைகளைப் பெறும் உரிமை, அச்சமின்றி வாழும் உரிமை என்பவைகளே அந்த அடிப்படை உரிமைகள். ஜனவரி 9ஆம் நாளன்று நிகழ்த்திய உரையில் சர்ச்சில் கவிஞர் லாங்ஃபெல்லோ (Longfellow) எழுதிய 'த பில்டிங்க் ஆஃப் த ஷிப்' (The Building of the ship) என்ற கவிதையைப் படித்துக் காட்டினார். இதனை ஜனாதிபதி ரூஸ்வெல்ட் சர்ச்சிலுக்கு அன்பளிப்பாக அனுப்பி இருந்தார். உரையின் முடிவில் சர்ச்சில் மக்களிடம் கேட்டுக்கொண்டதாவது :

'மூன்று முறை ஜனாதிபதி பதவி ஏற்றவரும், 130 மில்லியன் மக்களின் ஒப்பற்ற தலைவருமான பெருமகனுக்கு உங்கள் பெயரால் என்ன விடை தரச்சொல்லுகிறீர்கள்? நான் ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டிற்குக் கொடுக்கப்போகும் பதில் இதுதான். எங்களை நம்புங்கள். உங்களது பற்றுறுதியையும் ஆசியையும் எங்களுக்கு அருளுங்கள். தெய்வத்திருவருளால் எல்லா நலமும் கூடிவரும். நாங்கள் தவறவோ, தோல்வி காணவோ போவதில்லை. நாங்கள் நலிவுற்றுப் பட்டினிகிடக்கப் போவதில்லை. போர் விளைவிக்கும் திடீர் அதிர்ச்சியோ கண்விழிப்பின் நீடிய இடர்ப்பாடுகளோ,

களைப்போ எங்களை ஆட்கொள்ள முடியா; சாதனங்களைத் தந்தருள்வீர் சாதித்துக் காட்டுகிறோம்'[1].

சர்ச்சிலின் நேரடியான நேர்மையான பேச்சை அமெரிக்கர்கள் பாராட்டினார்கள். மார்ச்சுத் திங்களில் அமெரிக்கா காங்கிரஸ் மகாசபை பிரிட்டனுக்கு உதவி அளிக்கும் மசோதாவை இயற்றியது. இதனைத் தொடர்ந்து போர்த்தளவாடங்களும், உணவும் பிரிட்டனுக்குள் குவிந்தவண்ணமிருந்தன. 1941ஆம் ஆண்டு கிறிஸ்மஸ் செய்தியில் ஹிட்லர் 'இதுவரை ஜெர்மனியின் வரலாறு கண்டிராத மாபெரும் வெற்றியைப் புத்தாண்டு பெற்றுத் தரும்' என்று ஜெர்மன் மக்களுக்கு உறுதி கூறினார். அதே நேரத்தில் அவரது கையாளான முசோலினியின் தோல்விகளைக் கண்டு ஹிட்லர் வெறுப்படைந்திருக்கவேண்டும். கிரேக்க நாட்டையும், எகிப்தையும் கைப்பற்றி அச்சு நாட்டுப் படைகள் மத்தியகிழக்கு வழியாகத் தெற்கிலிருந்து ருஷ்யாவிற்குள் ஊடுருவவும், இந்தியாவைத் தாக்கவும் வழிவகுக்கும் பணி இத்தாலியிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. ஆனால், கிரேக்க நாட்டில் இத்தாலியப் படை படுதோல்வி கண்டதுடன், தனது ஆப்பிரிக்கப் பேராசையும் வெகு விரைவாக இழந்து கொண்டிருந்தது. இதனிடையில் முழு அளவில் ஜெர்மனியின் படைப்பலத்தைப் போரில் பயன்படுத்த ஹிட்லர் முடிவு செய்தார். பல்கேரியாவும், யூகோஸ்லாவியாவும் அச்சு நாடுகளின் கூட்டில் சேருமாறு வற்புறுத்தப்பட்டன. தமது டாங்குகளையும், 'ஆப்பிரிக்கப் படை' என்ற சிறந்த பயிற்சி பெற்ற வீரர்களையும் வீழ்ச்சி கண்டுகொண்டிருந்த இத்தாலியப் படைகளுக்கு உதவியாக டிரிப்போலி (Tripoli) க்கு அனுப்பிவைத்தார். சிரியா, ஈராக், பாரசீகம் போன்ற நாடுகளையும் தன்பக்கம் இழுத்துக்கொள்ள ஜெர்மனியின் தூதர்கள் முயன்று கொண்டிருந்தனர்.

பல்கேரியா அச்சக்கூட்டில் இணைந்த உடனே ஜெர்மன் படைகள் அந்நாட்டின் வழியாக கிரேக்க நாட்டின் எல்லையை நோக்கி விரைந்தன. யூகோஸ்லாவியாவின் ஆளுநரான இளவரசர் பாலும் (Paul) மக்களின் வெறுப்புக்கிடையே ஜெர்மனிக்குப் பணிந்தார். இதனைத் தொடர்ந்து ஏற்பட்ட திடீர் ராணுவப் புரட்சியில் பாலின் அரசு வீழ்த்தப்பட்டு, பீட்டர் அரசர் தலைமையில் தேசீய தற்காப்பு அரசு அமைக்கப்பட்டது. ஜெர்மனியின் விமானங்களும், டாங்குகளும் 'யூகோஸ்லாவியா

[1] Churchill—His Life and Times, Malcom Thomson, p. 336.

விற்குள்ளும், கிரேக்க நாட்டிற்குள்ளும் புகுந்தன. இவ் விரு நாடுகளும் பிழைப்பது அரிதென்றாலும், அவற்றிற்குப் போதிய உதவி வழங்கச் சர்ச்சில் முன்வந்தார். 'யூகோஸ்லாவியாவின் ஆன்மா விழித்துக் கொண்டது. அந் நாட்டின் போராற்றல் மிக்க இனத்தின் கோபக் கனலிலிருந்து பிறந்த புதிய இயக்கத் திற்கு' ஆதரவு அளிக்கும் வகையில் புதிய யூகோஸ்லாவிய அரசு பிரிட்டனால் அங்கீகரிக்கப்பட்டது. வேண்டிய உதவிகளெல்லாம் வழங்கப்பட்டன. கிரேக்கரும், துருக்கியரும் உரிமை காக்கும் பணியில் உதவி வாக்குறுதி பெற்றனர்.

இந்நிலையில் வேவல் தனது லிபியா படையெடுப்பை நிறுத்திக் கொண்டு, படைகளை பால்கன் நாடுகளுக்குத் திரும்பவேண்டிய தாயிற்று. ஆனால், ஜெர்மனியின் கவசப் படைகளும், விமானப் படையும் சர்வ வல்லமை பெற்றிருந்தன. பிரிட்டிஷ் முன்னேற் றத்தைத் தடுக்க ஹிட்லரால் தூண்டி விடப்பட்ட இத்தாலிய கப்பற்படை மாடாபென் (Matapan) முனைப் போரில் முரியடிக்கப் பட்டது. ஆறு போர்க்கப்பல்களை எதிரி இழந்தது. ஆனால், நேசப்படைகளுக்கு ஒரு சிறிய இழப்பும் ஏற்படவில்லை, தரைப் படையின் சாதனை அவ்வளவு சிறப்பாக அமையவில்லை. ஏப்ரல் 8ஆம் நாளில் முன்னறிவிப்பின்றி ஹிட்லர் யூகோஸ்லாவியாவைத் தாக்கி பெல்கிரேட் (Belgrade) நகரின்மீது குண்டுமாரி பொழிந் தார். ஒரு மாதத்திற்குள் ஹிட்லரின் படைகள் ஹங்கேரி முதல் பல்கேரியா வரை ஊடுருவி, கிரேக்க நாட்டிற்குள் நுழைந்து கிரேக்க பிரிட்டிஷ் படைகளை முரியடித்தது. எஞ்சியிருந்த படைகள் வெளியேற்றப்பட்டன. மற்றுமொரு மாதம் பிரிட்டிஷ் படை கிரிட் தீவில் உறுதியாகப் போரிட்டது. இறுதியில் தோல்வி ஏற்பட்ட போதிலும் பிரிட்டன் கிரேக்க நாட்டிற்குக் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றிய மனநிறைவு பெற்றது.

இதற்கிடையில் வட ஆப்பிரிக்காவில் நேசப் படைகளின் நலிவு காரணமாக லிபியாவில் பிரிட்டிஷ் படை பின் வாங்கியது. தோப்ருக் (Tobruk) காப்பரணைத் தவிர பிறவிடங்களிலிருந்து படைகள் எகிப்து எல்லை வரைக்கும் வாபஸாகி விட்டன. ஈராக்கில் ஜெர்மனியின் சூழ்ச்சியின் விளைவாக ஏற்பட்ட திடீர்ப் புரட்சியில் ஹிட்லர் ஆதரவாளரான ரஷிட் அலி (Rashid Ali) அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்டார். அவர் உடனே ஈராக்கில் பிரிட்டிஷ் விமானத் தொடர்புகளை அறுத்துவிட்டார். சிறிய போராட்டத்தின்பின் ரஷிட் அலி பாரசீகத்திற்குத் தப்பி யோடவே, பிரிட்டனுக்கு ஆதரவான ஓர் அரசை அராபியர்

பாக்தாத்தில் நிறுவினார்கள். சிரியாவை ஆண்டுவந்த ஃபிரஞ்சு விச்சி (Vichy) அதிகாரிகளுடன் சிரியாவையும், ஈராக்கையும் கைப்பற்றி வட கிழக்கிலிருந்து எகிப்தைச் சுற்றி வளைத்துக் கொள்ள முடியுமென்று ஹிட்லர் நம்பினார். சிரியாவிற்குள் ஜெர்மன் உல்லாசப் பயணிகள் கூட்டங்கூட்டமாகச் சரியவே, அதன் விமான நிலையங்களில் ஜெர்மனியின் விமானங்கள் வந்திறங்கின. ஜூன் 8ஆம் நாளில் பிரிட்டிஷ், சுதந்திர ஃபிரஞ்சுப் படைகள் சிரியாவில் அச்சு நாடுகளின் அபாயத்தை எதிர்க்க முனைந்தன. விச்சித் தளபதியான டென்ட்ஸ் (Dents) முரியடிக்கப்பட்டு பிரிட்டிஷ் நிபந்தனைகளை ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று.

அச்சுப் படைகளுக்கு எதிராக மத்திய கிழக்கிற்குச் செல்லும் வழியைத் தடை செய்வதுதான் இறுதியாக எடுக்க வேண்டிய நடவடிக்கை. ஆகஸ்டில் பிரிட்டனும், ருஷ்யாவும் பாரசீகத்திற்குள் ஒரே நேரத்தில் படைகளை அனுப்பின. பாரசீகக் குடாவிலிருந்து ருஷ்யாவிற்கு பிரிட்டிஷ் வழங்கு பொருட்களைக் கொண்டு செல்ல ஒரு நேர்வழியை அமைப்பது நேச நாடுகளின் திட்டமாகும். பாரசீக மன்னர் ஷா சிறிய எதிர்ப்பின் காரணமாகத் தம் மகன் சார்பில் முடி துறந்தார். ஜெர்மானியர் மூட்டை முடிச்சுகளுடன் வெளியேற்றப்படவே, மத்திய கிழக்கில் கிரேக்கத் திட்டங்களுக்கு விளைவிக்கப்பட்ட தொல்லை மறையத் தொடங்கியது. முக்கிய கேந்திரமான சூயஸ் கால்வாயின்மீது இனி, எத்தகைய தாக்குதலும் செய்ய முடியாது. ஜெர்மனிக்கும் ருஷயாவிற்கும் இடையில் உடன்பாடு இருந்த போதிலும், ஹிட்லர் ருஷ்யர்மீது முழு நம்பிக்கை கொண்டிருக்கவில்லை. ஐரோப்பாவில் இன்னும் நாஜிகளுக்கு எதிராக நின்ற ஒரே நாடான பிரிட்டனைப் பணிய வைப்பதில் ருஷ்யாவை நம்ப முடியுமா என்பது தான் ஹிட்லரின் ஐயப்பாடு. ஹிட்லரும், யூக்ரேனையும் ருஷ்யாவின் மேற்கு மாநிலங்களையும் ஒருநாள் வெல்லக் கூடும் என்பதை ஸ்டாலின் அறிவார். எனவே, பிரிட்டனையும் ஹிட்லர் வீழ்த்தி விட்டால், ஜெர்மனியை எதிர்ப்பதில் ருஷ்யா மட்டுமே தனித்து நிற்க வேண்டிய நிலை ஏற்படும் என்பதை ஸ்டாலின் உணர்ந்திருந்தார்.

பிரிட்டன்மீது தாம் முதலில் போர் தொடுத்ததற்காக ஹிட்லர் வருந்தினார். ஏனெனில், ருஷ்யாவை முதலில் தீர்த்துக் கட்டுவது எளிதாக இருந்திருக்கு மென்பது அவரது முடிவு. பிரிட்டனுடன் போரை நிறுத்திக் கொண்டு இதற்கிடையில் ஸ்டாலினைத் தோற்கடித்தாலென்ன என்று யோசித்தார்.

பிரிட்டிஷ் பொதுமக்கள் யாவரும் பொதுவுடமை எதிர்ப் புணர்ச்சி கொண்டவர்கள். எனவே, ருஷ்யாவின் உதவிக்கு வரமாட்டார்கள் என்று ரிஃபென்டிராப் (Riffentrop) ஹிட்லருக்கு உறுதி கூறினர். ஹிட்லரின் திட்டப்படி அவரது கையாளும். உதவி ஃபியூரருமான (Deputy Fuehrer) ருடால்ஃப் ஹஸ் (Rudolf Huss) மே திங்கள் 10ஆம் நாளன்று விமானத்திலிருந்து ஸ்காட்லாந்தில் இறங்கினர். ஹாமில்டன் கோமகனின் (Duke of Hamilton) துணையுடன் ஃபாஸிஸ்ட்டு ஆதரவாளர்களைத் திரட்டிச் சர்ச்சிலை விலக்கி விட்டு, போல்ஷிவிக் ருஷ்யாவிற்கு எதிராகப் பிரிட்டனை ஜெர்மனியுடன் கூட்டுறவு கொள்ளுமாறு செய்ய வேண்டுமென்பது ஹஸ்ஸின் எண்ணமாகும். ஹாமில்டனை நம்பியது, பிரிட்டிஷ் மக்கள் சர்ச்சிலை விரட்டி விடுவார்கள் என்று நம்பியது, ஃபாஸிஸ்டு ஆதரவாளர்கள் பிரிட்டனில் இருக்கிறார்கள் என்று எண்ணியது ஆகியவை யாவும் தப்புக் கணக்குகள். ருஷ்யாவுக்கு எதிரான ஜெர்மனியின் சதி வேலையை இரகசியமாக அறிந்த சர்ச்சில் அதுபற்றி ஸ்டாலினுக்கு எச்சரிக்கை செய்தார். ஹஸ் திட்டம் வெற்றி பெறவில்லை. எனினும், ஹிட்லர் தம் முயற்சிகளை விட்டு விடவில்லை. ருஷ்யாவின் எதிர்ப்பை ஆறே நாட்களில் அடக்கி விடலா மென்றும், நெப்போலியன் செய்த தவறுகளைத் தாம் செய்யப் போவதில்லை என்றும் ஹிட்லர் இறுமாப்புக் கொண்டார். ஜூன் 22ஆம் நாளில் ருஷ்யாமீது தாம் பொறுமை இழந்துவிட்டதாகக் கூறி, ருஷ்ய எல்லைக்குள் தம்முடைய 'பான்ஸர்' (Panzer) படையணிகளை அனுப்பினர்.

இக்கட்டான நிலை உருவாகியது. பிரிட்டன் ஹிட்லரை எவ்வளவு வெறுத்ததோ, அவ்வளவு அதிகமாகப் பிரிட்டிஷ் மக்களும், அமெரிக்கரும் போல்ஷிவிக் கொள்கையை வெறுத்தனர். புதிதாக உருவாகி இருந்த நாஜி-போல்ஷிவிக் மோதலுக்கு எதிராக மேலை நாடுகள் கடைப்பிடிக்க வேண்டிய வழியென்ன? இதில் சர்ச்சில் எவ்வித குழப்பமும் கொள்ளவில்லை. அவர் பொதுவுடமைக் கொள்கையை விரும்பவில்லை என்றாலும், ஜெர்மன் ராணுவ ஆதிக்கமே உலக அமைதியின் முதல் எதிரி என்பதை அவர் முற்றிலும் உணர்ந்திருந்தார். இந்த ராணுவ வெறிக்கு நாஜி இனவெறி என்ற எண்ணெய் ஊற்றப் பட்டது. ருஷ்யாவிற்கு உதவுவதாகச் சர்ச்சில் உடனடியாக அறிவித்ததால், நாஜிகளுக்கு எதிர்ப்பான முனை உறுதி செய்யப் பட்டது. ருஷ்யாவை ஜெர்மனி தாக்கிய அதே நாளில் சர்ச்சில் தமது கொள்கையை அறிவித்ததுடன் நாஜிகளின் துரோகச் செயல்களைப் பச்சையாகத் தாக்கினர்.

'ஹிட்லர் பச்சை இரத்தம் பரிமாறும் பேராசையும், கொள்ளையடிக்கும் இச்சையும் கொண்ட திருப்தி செய்ய முடியாத தீமைகளின் அசுரன். இரத்த வெறிகொண்ட இந்தத் தரங்கெட்ட கீழ்மகன் தனது இயந்திர சக்தி படைத்த படைகளைக் கொலையும், கொள்ளையும், அழிவும் செய்யுமாறு புதிய களங்களை நோக்கி அனுப்புகிறான்......ஹிட்லரின் வெற்றியால் அகில ஐரோப்பாவும் அழிகின்ற போதிலும், சீனாவில் வாழும் 400 முதல் 500 மில்லியன் மக்களும், 350 மில்லியன் இந்தியர்களும் ஆழங்காண முடியாத இழிவுப் படுகுழியில் வீழ்வதற்கும் வகுக்கப்பட்ட வழியுமாகும், இந்த இழிவின்மீது பேய்ச் சின்னமான ஸ்வாஸ்திகா பொறிக்கப்படும்' என்ற அருமையான சொற்களை அவர் பயன்படுத்தினார்.

ருஷ்யாவின் உழவர்கள் அமைதியாகத் தம் முன்னோர்கள் பயன்படுத்திப் பலன் கண்ட பூமியில் உழைத்து உருக்குலைகின்ற நிலையில், அவர்களை ஹிட்லரின் ஹூணப்படையின் வீரர்கள் பயிர்களை அழிக்கும் விஷக் கிருமிகளைப்போல் நாசம் செய்கின்ற காட்சியைச் சர்ச்சில் படம் பிடித்துக் காட்டினார். பொதுவுடைமையைப் பற்றித் தாம் முன்னர்க் கூறியவைகளனைத்தையும் மறுக்கப் போவதில்லை என்றும் சர்ச்சில் சுட்டிக் காட்டினார்.

'எனினும், எமது குறிக்கோள் ஒன்றே ஒன்றுதான். மாற்ற முடியாத ஒரே நோக்கம்.....அதாவது ஹிட்லரையும், நாஜிக் கொடுமையின் சாயலையும் அழித்து ஒழிக்க நாம் உறுதி பூண்டுள்ளோம்..... இதிலிருந்து நாம் மாறப் போவதில்லை. ஹிட்லருடனும், அவரது கூட்டத்தாருடனும் நாம் பேச்சு வார்த்தைகள் நடத்தப் போவதில்லை......அவரைக் கடலிலும், வானத்திலும், நிலத்திலும் எதிர்த்துப் போராடுவோம்...... இறைவன் அருளால் அவரது கொடுமையிலிருந்து உலகத்தைக் காப்பாற்றுவோம்......நாஜிகளை எதிர்க்கின்ற எவனுக்கும், எந்த நாட்டிற்கும் நமது உதவியுண்டு. இதுவே நமது கொள்கையும், அறிக்கையுமாகும்'[1] என்று கூறி ருஷ்யாவிற்கு உதவ பிரிட்டன் உறுதி செய்துள்ளதென்பதையும் அறிவித்தார்.

இந்த அறிக்கையைப் பிரிட்டிஷ் மக்கள் வரவேற்றனர். அவர்களின் மனத்தில் இருந்த குழப்பங்கள் நீங்கின. போல்ஷிவிக் கொள்கையின் முதல் எதிரியான சர்ச்சிலே ஹிட்லருக்கு எதிராக ஸ்டாலினுக்கு உதவ முன் வருவாரானால், அவரைப் பின்பற்ற

[1]Churchill–His Life and Times, Malcolm Thomson, p. 342.

மற்றவர்கள் தயங்க வேண்டியதில்லை. போரென்றால் அதற்குப் பல காரணங்கள் இருக்கும். பிரிட்டனைப் பொறுத்த வரையில் நாஜிக் கொள்கையாகிய நீதி, நம்பிக்கை, மனிதத் தன்மை, சமயப்பற்று, நேர்மை ஆகியவற்றிற்கு எதிராக விடுத்த சவாலை ஏற்று ஈடுபட்ட அறப்போர், ஆன்மீகப் போர் இது என்பதில் ஐயத்திற்கே இடமில்லை. இத்தகைய உலகியல் சார்பற்ற காரணங்களே ஹிட்லரின் ஆக்கிரமிப்பை எதிர்க்கப் பிரிட்டிஷ் மக்களைத் தூண்டி விட்டு ஒற்றுமைப் படுத்தியது. இதே காரணங்கள்தாம் அமெரிக்காவின் வன்மையான அறநெறி உணர்வுகளையும், இலட்சிய வீறுகொண்ட பொதுமக்கள் எண்ணத்தையும் தூண்டி விட்டு நாஜிகளுக்கு எதிராக ஒன்றுபடச் செய்தன.

### அட்லாண்டிக் சாசனம் பிறந்தது

இதற்குள் உலகின் பல நாடுகள் போரில் ஈடுபட்டன. 'அமைதித் திட்டத்தின் உத்தேச நிபந்தனைகளைப்பற்றித் திட்டவட்டமான அறிக்கை சமர்ப்பிப்பது இன்னும் சாத்தியமில்லை' என்று வின்ஸ்டன் எண்ணினாலும். 'எந்தக் கொள்கைகளின்மீது போர் தொடுக்கப்பட்டிருக்கின்றது என்ற விளக்கமும், எந்த அடிப்படையில் போர் முடியும்போது அமைதி நிபந்தனைகள் அமைய வேண்டுமென்னும் வரையறையும் வகுக்கப்பட வேண்டும்' என்பதையும் அறிய அவர் விரும்பினார், பிரிட்டனைப் பொறுத்த வரை இவையாவும் அவ்வளவு அவசியமில்லை என்றாலும், நிலைகுலைந்து கிடந்த நேச நாடுகளுக்காகவும், நடுநிலைமை நாடுகளுக்காகவும் அவை தேவைப்பட்டன. இவ்வாறே ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டும் எண்ணியதால், இருநாட்டுத் தலைவர்களும் இது பற்றியும், இரு நாடுகளுக்கும் பொதுவான பல பிரச்சினை பற்றியும் சந்தித்துப் பேச வேண்டுமென்று ஏற்பாடாயிற்று.

இவர்களின் சந்திப்பு அமெரிக்கக் கடற்கரைக்கு அப்பால் நாஜி உளவாளிகளுக்கு மறைவான இடத்தில் கடலில் நடக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. சர்ச்சில் பிரிட்டனின் புதிய போர்க் கப்பலான 'பிரின்ஸ் ஆஃப் வேல்ஸ்' (Prince of Wales) கப்பலிலும் ரூஸ்வெல்ட் அமெரிக்க 'அகஸ்டா' கப்பலிலும் பயணம் செய்தனர். இவர்களுடன் ராணுவ ஆலோசகர்களும், தூதாண்மை வல்லுநர்களும் சென்றனர். இவர்கள் நடத்திய பேச்சு வார்த்தைகளின் விளைவாக அட்லான்டிக் சாசனம்' (The Atlantic Charter) உருவாயிற்று. இது இரு நாடுகளுக்கும் பொதுவான தேசீயக் கொள்கைகளின் சில பொது விதிகளைக் கொண்ட அறிக்கையாகும். இந்த விதிகளின் மீதுதான் வருங்

கால உலகத்தில் நல்ல நிலைமை நிலவ அவர்களின் நம்பிக்கைகள் யாவும் அமைந்திருந்தன. சாசனத்தில் எட்டு சிறிய பிரிவுகள் அடங்கியிருந்தன. சாசனத்தில் பிரிட்டனும், அமெரிக்காவும் தமக்குள் ஆக்கிரமிப்புச் செய்வதில்லையென்றும், சம்பந்தப்பட்ட நாட்டுமக்கள் விரும்பினுலொழியப் பிரதேச ரீதியான மாற்றங்களைச் செய்வதில்லை என்றும் குறிப்பிடப்பட்டிருந்தன. எல்லா நாடுகளுக்கும் சுயாட்சியும், சமத்துவமான பொருளாதார வாய்ப்புகளும், முன்னேற்றமும், சமூக உறுதிப்பாடும், அச்சமின்றி வாழவும் தேவைகளைப் பெற உரிமையும், ஆக்கிரமிப்பு வெறி கொண்ட நாடுகளின் ஆயுத நீக்கமும், சர்வ ரீதியில் நிலையான பாதுகாப்பு ஏற்பாட்டை நிறுவுவதும், அவசியமென சாசனம் கோரியது. சாசனத்தின் விதிகள் விரிவும், பொது நோக்கும் கொண்டிருந்ததோடு, அச்சு நாடுகள் நசுக்கப்பட்ட பின்னர் எத்தகையதொரு உலகம் அமைய வேண்டுமென்பதையும் அவை தெளிவாகக் காட்டின. அத்தகைய உலகில் ஜனநாயக உரிமையும், தோழமையும், தீவிர முன்னேற்றமும், அதிக மனித நலமும் விளங்கும்.

நாடு திரும்பிய வின்ஸ்டன் அமெரிக்காவுடன் நடத்திய பேச்சு வார்த்தைகள் பற்றி நாட்டுமக்களுக்கு வானெலியின் மூலம் கூறினர். இத்தகைய பேச்சு வார்த்தைகள் உலகத்தில் தீய சக்திகளுக்கு எதிராக நல்ல சக்திகளை ஒன்று திரட்டுவதில் அமெரிக்காவிற்கும், பிரிட்டனுக்கும் இடையேயுள்ள அடிப்படையான ஒற்றுமையின் சின்னம் என்பதைச் சர்ச்சில் குறிப்பிட்டார். உலகத்தை எதிர்நோக்கி இருந்த நெருக்கடியான கட்டத்தில் ஆங்கிலம் பேசும் நாடுகள் எவ்வாறு உலகத் தலைமையை ஏற்றுக் கொள்ளுகின்றன என்ற வரலாற்று முக்கியத்துவம் பெற்ற நிகழ்ச்சியே இம்மாநாடு என்பதையும் அவர் சுட்டிக் காட்டினர். அவர் ஹிட்லரின் ருஷ்யப் படையெடுப்பையும், ருஷ்ய மக்களின் வன்மையான எதிர்ப்பையும், அங்கு நடக்கும் பயங்கரமான கொலைகளையும் பற்றிக் கூறினர். ஐரோப்பாவில் 16ஆம் நூற்றுண்டில் நடந்த மங்கோலியப் படையெடுப்பின் பின்னர், மக்கள் இரக்கமின்றியும், மிருகத்தனமாகவும் கொல்லப்படுவது இப்பொழுதுதான் என்றும் சுட்டிக் காட்டினர். பின்னர் அட்லாண்டிக் சாசனத்தின் சில பகுதிகளுக்கு விளக்கம் தரும் முறையில்,

'அமெரிக்க ஜனதிபதியும், பிரிட்டனின் பிரதிநிதியும் நாஜிக் கொடுங்கோன்மையை வீழ்த்தத் தம்முடைய இரு நாடுகளின் பெயரால் இணைந்து உறுதி பூண்டுள்ளனர். அமெரிக்கா போரில் எவ்வளவு ஈடுபாடு கொண்டுள்ள தென்ற வினவிற்கு விடை

தெரிந்தவர் ஒரே மனிதன் தான் உண்டு, இதுவரை ஹிட்லர் அமெரிக்காமீது போர் தொடுக்கவில்லை என்ருல், அது அமெரிக்க நிறுவனங்கள் மீது அவர் கொண்டுள்ள அக்கறையினுல் அன்று. அவர் தகுந்த சாக்குப் போக்கைக் கண்டுபிடிக்க முடியாமல் இருப்பதுதான் காரணம். இதுவரை ஹிட்லர் ஆறு நாடுகளுக்கு மேல் கொன்று வீழ்த்தி விட்டார். உண்மைக் காரணத்தை ஹிட்லர் பின்பற்றி வரும் முறையில் காணலாம். அந்த முறை என்னவென்ருல், 'நாடுகளை ஒன்றன்பின் ஒன்ருக விழுங்குவது என்பதுதான்' என்று கூறி முடித்தார். ஜனநாயக நாடுகள் தமக்குள் ஒன்றுபட்டு எதிர்க்காததுதான் ஹிட்லரின் வழியை இலகுவாக்கி விட்டது? எனவே, இனியாவது சுதந்திரத்தை மதிக்கும் நாடுகள் ஒற்றுமையுடன் செயல்படவேண்டும். அடுத்து போர் பற்றிய திட்டங்களை ஆராய அமெரிக்க, பிரிட்டிஷ், ருஷ்யத் தலைவர்களுக்குள் ஒரு மாநாடு மாஸ்கோவில் நடக்க விருக்கிறது என்றும் சர்ச்சில் அறிவித்தார்.[1]

எவ்வளவு திவிரமான தீர்மானமாக இருந்தாலும், அதனுல் மட்டும் வின்ஸ்டன் மனநிறைவு அடைந்துவிட மாட்டார். அட்லாண்டிக் மாநாடு சாசனத்தைப் பெற்றெடுத்தது. சாசனத்தின் குறிக்கோள்களை அடைவதற்கும் நடைமுறையில் ஒத்துழைப்பதற்கும் சாசனம் உடன்பாட்டைத் தோற்றுவித்தது. ஆகஸ்ட்டு 24ஆம் நாள் ருஷ்யா உட்பட நேச நாடுகள் யாவும் சாசனத்தை ஏற்றுக் கொண்டன. ஆகஸ்ட்டு 29ஆம் நாளில் மாஸ்கோ மாநாடு தொடங்கியது. இரு நாள்களில் மாநாடு கண்ட உடன்பாட்டின் படி பிரிட்டனும், அமெரிக்காவும் ருஷ்யா கேட்கும் உதவிகளையெல்லாம் கொடுத்துதவ இசைவு தெரிவித்தன. ஜெர்மன் படைகள் ருஷ்யாவிற்குள் முன்னேறிச் சென்ற போதிலும், ஹிட்லர் எதிர்பார்த்த அளவு விரைவு ஏற்படவில்லை. ருஷ்யாவின் படைத் தயாரிப்புகளைக் கண்டு ஹிட்லரே அதிர்ச்சியுற்ருர். தாம் தோற்கடித்து விட்டதாக எண்ணிய ருஷ்யா உயிர் பெற்றெழுவது போல் இருந்தது. நவம்பர் தொடங்கியும் ஜெர்மனியின் படைகள் மாஸ்கோவை நெருங்க முடியவில்லை. தென் ருஷ்யாவிலிருந்து அவைகள் பின்வாங்கத் தொடங்கின. கடுங்குளிர் காலம் தொடங்கியதும் நெப்போலியனின் மாபெரும் படை ருஷ்யாவின் பனிபடர்ந்த சமவெளிகளில் அனுபவித்த தொல்லைகளை ஜெர்மன் படைகளும் எதிர்நோக்கத் தொடங்கின. வட ஆப்பிரிக்காவிலும் ஹிட்லர் பின்வாங்க வேண்டியதாயிற்று. பிரிட்டிஷ் கப்பல்கள்மீது தொடுக்கப்பட்ட 'யூ' படகுப் போரும்

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 346.

தக்க பயன் தரவில்லை. பிரிட்டனுக்குள் அமெரிக்கத் தள வாடங்கள் குவிந்த வண்ணமிருந்தன.

### கிழக்கு முனையில் ஜப்பான்

இந் நிலையில் ஹிட்லர் அச்சு நாடுகளின் கூட்டமைப்பில் உறுப்பினரான ஜப்பானையும் போரில் இறங்குமாறு அழைக்க வேண்டியதாயிற்று. கடந்த ஐந்தாண்டுகளாக ஜப்பானுக்கும், சீனாவிற்கும் இடையே போர் நடந்து கொண்டிருந்தது. மேற்குப் பசிஃபிக் பிராந்தியத்தையும், கிழக்கு ஆசியாவையும் வெல்ல வேண்டுமென்பது ஜப்பானின் திட்டம். இதற்கு அமெரிக்காவும் பிரிட்டிஷ் பேரரசும் தடைகளாக இருந்தன. ஹிட்லரைப் போலவே ஜப்பானும் அகில உலகமெல்லாம் ஆள வேண்டு மென்று இரகசியத் திட்டம் வைத்திருந்தது. ஜப்பானை அமெரிக் காவுடன் மோதவிட்டு, ருஷ்யாவிற்கும், பிரிட்டனுக்கும் அமெரிக்க உதவி கிடைக்காதவாறு திசை திருப்ப வேண்டுமென்று ஹிட்லர் விரும்பினார். ஜப்பானும் அமெரிக்காவைத் தாக்க நப்பாசை கொண்டது. அவர்களுக்குத் தமது வெல்ல முடியாத பலத்தின் மீது அளவற்ற நம்பிக்கை இருந்தது. ஜப்பானுக்கும், அமெரிக்காவிற்கும் இடையே கருத்து வேறுபாடுகள் நிலவிய பல பிரச்சினைகளைப் பற்றிப் பேச்சு வார்த்தைகள் நடத்த ஜப்பான் வாஷிங்டனுக்கு ஒரு நட்புத் தூதுக்குழுவை அனுப்பியது. இவ்வாறு பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருக்கும் பொழுதே 1941ஆம் ஆண்டு டிசம்பர் 7ஆம் நாளில் ஹாவாய் தீவுகளிலுள்ள பேர்ல் (Pearl) துறைமுகத்தில் நிறுத்தப் பட்டிருந்த அமெரிக்க கடற்படையை ஜப்பானிய நீர்மூழ்கிகள் தாக்கின. அநேக கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன. எதிர்பாராத தாக்குதல் கண்டு அமெரிக்கா அதிர்ச்சியடைந்தது. இதே நேரத்தில் பிலிப்பைன் தீவுகளில் இருந்த குவாம் (Gwam) வேக் மிட்வே, (Wake, Midway) போன்ற அமெரிக்கத் தளங்களையும் ஜப்பான் தாக்கியது. நான்கு நாள்களின் பின்னர், ஹிட்லர் அமெரிக்கா மீது போர் தொடுத்தார். அத்துடன் நில்லாமல் ஜனாதிபதி ரூஸ்வெல்ட்தான் உலகப்போரைத் தொடங்க சதி செய்தாரென்றும், ஜெர்மனியை எதிர்க்குமாறு போலந்து மக்களைத் தூண்டினாரென்றும் அதிர்ச்சியுற்று நின்ற ஜெர்மானி யருக்கு அறிவித்தார். அடுத்த நாள் இத்தாலியும் ஹிட்லரின் வழியைப் பின்பற்றியது.

தூரக் கிழக்கில் ஜப்பான் வெகு விரைவாக முன்னேறி வந்தது. ஜப்பான் விமானங்கள் பிரிட்டிஷ் கடற்படையின் கண்களெனத் திகழ்ந்த 'பிரின்ஸ் ஆஃப் வேல்ஸ்', 'ரிபல்ஸ்'

(Repulse) என்ற இருபெரும் கப்பல்களை மூழ்கடித்து விட்டன. ஆனால், பிரிட்டன் அமெரிக்க நாடுகளின் இணைந்த கடற்படை வன்மை அச்சுக் கூட்டைச்சேர்ந்த மூன்று நாடுகளின் பலத்தை விட மேலும் பன்மடங்கு அதிகமாக இருந்தது. வருங்காலம் இன்னும் இடர்ப்பாடு மிக்கதாக இருந்த போதிலும், பிரிட்டன், அமெரிக்கா, ருஷ்யா, சீனா ஆகிய நாடுகளின் பின்னால் மக்களின் நம்பிக்கையும், உணர்வுகளும் ஒன்றுபட்டு நின்றன. சின்னாட் களுக்கு முன்னர், 'உலக மக்களில் ஐந்தில் நான்கு பங்கினர் நேச நாடுகளின் பக்கம் இருக்கின்றனர்' என்று சர்ச்சில் குறிப்பிட்டது சரியான மதிப்பீடு இல்லை. கயமைத்தனம் கொண்டவர்களின் கூட்டமும், அவர்களின் ராணுவ வெறியும். கட்சி அமைப்புகளும் மனித குலத்தின் மீது பெரும் தீமையைக் கொண்டு வந்துள்ளன வென்றும், இத்தகையவர்களுக்கு இந்தத் தலைமுறை சரியான பாடம் கற்பிக்காவிட்டால் அது பெரிய வெட்கக் கேடென்றும் சர்ச்சில் குறிப்பிட்டார். சர்ச்சில் 1941ஆம் ஆண்டு டிசம்பரில் அமெரிக்காவுக்குச் சென்றபோது அவருக்கு மகத்தான வர வேற்புக் கிடைத்தது அவரும் ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டும் போர் ஏற்பாடுகளைப் பற்றிப் பேச்சுவார்த்தைகள் நடத்தினார்கள். இதற் குள் உலகப்போர் முழு உருவம் எடுத்திருந்தது. நேசநாடுகளும், அச்சு நாடுகளும் ஒவ்வொரு போர்க்களத்திலும் எதிர்த்து நின்றன.

ருஷ்யாவில் செஞ்சேனை ஜெர்மானியர்களை எதிர்த்தது. ஜெர்மன் படை ருஷ்யாவின் கடுமையான குளிரைத் தாங்கும் அளவிற்குத் தளவாடங்களைப் பெற்றிருக்கவில்லை. வட ஆப் பிரிக்காவிலும் பிரிட்டிஷ் படைகள் வெற்றி பெற்றுக்கொண்டு வந்தன. ஆனால், பஸிபிக் கேந்திரத்தில் நேசப்படைகள் அவ்வளவு முன்னேற முடியவில்லை. கிறிஸ்மஸ் விழாவன்று ஹாங்காங் ஜப்பானிடம் சரணடைந்தது. மலேயாவிற்குள்ளும் ஜப்பானியர் நுழைந்து விட்டனர். போர்னியோவும், ஷாவா ராக்கும் (Sawarak) தாக்கப்பட்டன. பஸிபிக்கில் ஒன்றன்பின் ஒன்றாகத்தீவுகள்யாவும் ஜப்பானியர் வசமாயின. பிலிப்பைன் தீவுகளிலும் அவர்கள் இறங்கிவிட்டனர். மக் ஆர்தர் (Mac-Arthur) தலைமையில் அமெரிக்கர்கள் வன்மையுடன் எதிர்த்தும் பயன் விளையவில்லை, பர்ல் துறைமுகத் (Pearl Harbour) தாக்கு தலினால் வெகுவாகப் பாதிக்கப்பட்டிருந்த அமெரிக்கக் கடற் படையும் உதவிக்கு வரமுடியவில்லை. இந் நிலையில் வின்ஸ்டனின் அமெரிக்க வருகையும், அவரது ஆளுமையும் அமெரிக்கர்களுக்குப் புத்துணர்ச்சி யூட்டின. டிசம்பர் 26ஆம் நாளன்று அமெரிக்க காங்கிரஸ் சபையில் உரையாற்றுகின்ற சிறப்புக் கவுரவம் சர்ச்சி

லுக்கு வழங்கப்பட்டது. போரின் நிலையை ஒளிவு மறைவின்றி விளக்கியும், நேச நாடுகளுக்கு வெற்றி வாக்குறுதி கொடுக்கா விட்டாலும், சர்ச்சிலின் பேச்சில் திண்ணமான நம்பிக்கை தொனித்தது.

பிரிட்டனும் அமெரிக்காவும் பெரும் போருக்குத் தக்க முறையில் தயாராகவில்லை என்றும், அளவுகடந்து மிகுதியாக வுள்ள அவ்விரு நாடுகளின் மூலவளங்கள் முழுவதும் பயன் படுத்தப்படவில்லை என்றும் சர்ச்சில் தமது உரையில் குறிப் பிட்டார், எனினும், போரில் பிரம்மாண்டமான முன்னேற்றம் ஏற்பட்டுள்ளதென்றும், இன்னும் ஓராண்டில் நிலைமை உறுதிப் படும் என்றும் அவர் கூறினர். 1943ஆம் ஆண்டுவாக்கில இரு நாடுகளும் தாமே பெரும் அளவில் முனைந்திட முடியும் என்றும் சர்ச்சில் தீர்க்கதரிசனமாகக் குறிப்பிட்டார். போரின் பயங்கரங்களைப்பற்றி அவர் குறிப்பிட்டதைப் பலர் விரும்பாமல் இருந்திருக்கலாம். ஆனல், எவ்வளவு கசப்பாக இருந்தாலும், உண்மையைக் கூறவேண்டியது அவசியம். தாங்கள் எதற்காகப் போராடினர்களோ, அந்த இலட்சியத்தில் பற்றுதல் இருக்கும் வரையிலும், வெல்ல முடியாத மனவுறுதி துணை நிற்கும்வரை, ஈடேற்றம் ஏற்படுவது உறுதி.

அமெரிக்கா, உரிமை காக்க அறப்போர் தொடங்கியுள்ள தென்றும், உலகில் நசுக்கப்படும் ஐரோப்பியர்களின் நம்பிக்கை யாவும் அமெரிக்காவின் மீதேயுள்ளதென்றும் சர்ச்சில் குறிப் பிட்டார். உலகம் மறக்க முடியாத அளவிற்கு ஜப்பானியர்கள் பாடம் கற்றுக்கொள்ளும் வரை நேச நாடுகள் ஓய்ந்திருக்கப் போவதில்லை. அமெரிக்காவும், பிரிட்டனும் இணைந்து கண்ணி யத்துடனும், நீதியுடனும், அமைதியுடனும் போராடி இறுதியில் வெற்றி பெறும் என்றும் முழங்கினர். பின்னர், கனடா நாட்டுப் பாராளுமன்றத்திலும் அவர் உரை ஆற்றினர். எதிரி களின் ஆக்கிரமிப்பிற்கு உட்பட்ட நாட்டுமக்கள் அமைதியான முறையில் எதிர்த்துக்கொண்டிருக்க வேண்டுமென்றும், அவர்கள் விடுதலை பெறும்நாள் விரைவில் வரும் என்றும் ஊக்கம் அளித்தார். எனவே, நாம் முழுமுனைப்புடன் நமது பணியில் ஈடுபடுவோம். நம்மை எதிர்நோக்கியுள்ள சோதனைகள் பல வாகும். எனினும், நல்ல உள்ளத்துடனும், உறுதியான நம்பிக் கையுடனும், என்ன துன்பம் வந்தாலும், எத்தனை தியாகம் செய்ய வேண்டுமென்ருலும் உண்மையான, விசுவாசமுள்ள தோழர்களாக இறைவன் அருளால் இறுதிவரை இணைந்து நிற்போம்' என்று கூறி முடித்தார்.

# 19. வெற்றித் திருமகன் வின்ஸ்டன்

1942ஆம் ஆண்டு எதிரியுடன் மரணப்பிடியில் ஈடுபட நேச நாடுகளைத் தயாரிக்கும் ஆண்டு என்று சர்ச்சில் தீர்க்க தரிசனம் கூறியது மிக உண்மையாகும். நேச நாடுகள் தங்களின் பிரம்மாண்டமான சக்திகள் யாவற்றையும் ஒன்றுதிரட்டும் வரை காத்திருப்பதே அறிவுடைமை என்று அவர் முடிவு செய்தார். எப்படியும் அச்சு நாடுகளின் பலத்தில்மேல் உயர்வன்மை பெற்று, சரியான காலத்தில் அவர்களைத் தாக்கி வெற்றியை உறுதிப் படுத்த முடியும் என்று சர்ச்சில் திண்ணமாக நம்பினார். எனவே, அவ்வாண்டு முழுவதிலும் நேச நாடுகள் பெரும்பாலும் தற்காப்புப் போரே செய்து வந்தன. போரின் இழப்பும் அதிகரித்துக்கொண்டு வந்தது. தூரக் கிழக்கிலிருந்தும், ருஷ்யா விலிருந்தும் நாள்தோறும் அவலமான செய்திகளே வந்துகொண் டிருந்தன. ஆனால், வருங்கால நடவடிக்கைகளுக்கான தயாரிப் பையும், நீரிலும், நிலத்திலும், வானிலும் எதிரியை அழிக்கத் தயாராகிக் கொண்டிருந்த கருவிகளின் முன்னேற்றத்தையும், போர் வீரர்களையும், போர்த் தளவாடங்களையும் இரகசியமாகக் குவித்துக்கொண்டிருந்ததையும் செய்தி அறிக்கைகள் வெளியிட முடியாத நிலையில் இருந்தன.

வின்ஸ்டனைப் பொறுத்தவரையில் 1942ஆம் ஆண்டு அவருக்கு இடைவிடாத செயல் மிகுந்த ஆண்டாகும். அங்கு மிங்கும் பறந்து சென்று நேச நாடுகளைச் சிதறிப்போகாமல் இணைத்து நிற்கவும், போர்த் திட்டங்களை ஒன்றுபடுத்தவும் அவர் முழுமூச்சுடன் உழைத்து வந்தார். ருஷ்யாவுடன் பிரிட்டனின் உறவும், ஒத்துழைப்பும் அதிகரிக்கவேண்டியிருந்தது. உள் நாட்டில் எவ்வித ராணுவ முனைப்புகளையும் காண முடியாமல் பொறுமை இழந்து வெகுண்டு கொண்டிருந்த மக்களை ஊக்கப் படுத்தவும், சாந்தப்படுத்தவும் சர்ச்சிலின் பணி தேவைப் பட்டது. தணிக்க முடியாத செயலாண்மைத் திறம் பெற்ற

தனிப்பெரும் தலைவனாக வின்ஸ்டன் விளங்கியது பிரிட்டன் பெற்ற பேறேயாகும்.' அவருக்கு ஒருநாளில் இருபத்திநான்கு மணி நேரம்கூடப் போதாதென்ற நிலை ஏற்பட்டது. தூரக் கிழக்கில் நேச நாடுகளுக்கு அடுக்கடுக்காகத் தோல்விகள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. பிரிட்டிஷ், டச்சு, அமெரிக்கக் குடியேற்றப் பகுதிகளில் எதிரியின் தாக்குதல்களைத் தாங்கக்கூடிய அளவிற்குப் பாதுகாப்பு ஏற்பாடுகள் இன்னும் அமையவில்லை. குடியேற்ற நாடுகளின் ஆட்சி முறையும் வீரமும், ஊக்கமுமின்றிச் சோர்ந்துகிடந்தன. ஜப்பானின் படையெடுப்புகளைச் சமாளிக்க முடியாமல் அவை வீழ்ந்துகொண்டிருந்தன.

மலேயா நம்ப முடியாத அளவு வேகமாக வீழ்ந்தது. பிரிட்டிஷ், இந்தியப் படைகள் சிறப்பான முறையில் போரிட்ட போதிலும் ஜப்பானியர்களின் போர்த் தந்திரங்களும், ஊடுருவல் முறைகளும் நேசப் படைகளைத் திணறச்செய்தன. ஜப்பானின் விமான சக்தியும் பன்மடங்கு அதிகமாக இருந்தது. பிரிட்டிஷ் விமானங்கள் மிகவும் பழையனவாகவும் இருந்தன. வேறு வழி யின்றி நேச நாட்டுப் படைகள் சிங்கப்பூருக்குப் பின்வாங்கின; அந்தத் தளம் தாக்குதலுக்குத் தயாராக இல்லாத காரணத்தால் சரணடைந்தது. இதனைத் தொடர்ந்து டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகள் தாக்கப்பட்டு அவையும் விரைவில் எதிரியின் கைவச மாயின. அடுத்து ரங்கூனும் வீழ்ச்சியடையவே, ஜப்பான் படைகள் பர்மாவிற்குள் புகுந்தன. அவர்களின் கடற்படை இந்துப் பெருங்கடலில் அந்தமான் தீவுகளைக் கைப்பற்றியது; இந்தியாவின் கிழக்குக்கரையில் பல கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்ட தோடு சென்னை மாநிலத்திலுள்ள துறைமுகங்களும் குண்டு வீச்சுக்கு இரையாயின. மே 6ஆம் நாளில் அமெரிக்க தற்காப்பின் இறுதித்தளமான பிலிப்பைன் தீவுகளும் வீழ்ச்சியடையவே, ஜப்பான் பல்லாயிரக்கணக்கான மைல்கள் பரப்புள்ள நிலத் திற்கும், நீருக்கும் எதிர்ப்பில்லாத ஆதிக்கத்தைப் பெற்றது. ஆசியப் பேரரசை நிறுவவேண்டுமென்ற ஜப்பானின் கனவு பலித்துவிடும்போல் தோன்றியது.

பிப்ரவரி 15ஆம் நாள் வின்ஸ்டன் புத்தாண்டின் முதல் வானொலி உரையை நிகழ்த்தினார். இதுவரை ருஷ்யா அழிக்கப் பட்டுவிடவில்லை என்ற செய்தி எல்லாருக்கும் ஆறுதல் அளிக்கு மென்றும், மாரிக்காலத்தில் ருஷ்யா மிகவும் வீராவேசமாக எதிரியை எதிர்த்துப் போராடி வருகிறதென்றும் அவர் குறிப் பிட்டார். ஹிட்லர் தோல்வி காண முடியாது என்ற புனை கதையை ருஷ்யா பொய்யாக்கிவிட்டதென்றும், ருஷ்யாவின்

கடுங்குளிரில் ஜெர்மன் படைகள் அழிவும், தோல்வியும், படுகொலையுமே கண்டு வருகின்றனவென்றும் சர்ச்சில் அறிவித்தார். நாஜிகள் நேச நாடுகளின் கழுத்தையும், ஃபாஸிச இத்தாலி அவற்றின் இடையையும் நெரித்துக்கொண்டிருக்கின்ற நிலையில் ஜப்பானின் தாக்குதலுக்கு நேச நாடுகள் தக்க முறையில் தயாராகவில்லை என்பதை அவர் ஒப்புக்கொண்டார். இன்னும் பல மாதங்களுக்குக் கடுமையான போர் புரியவேண்டுமென்று அவர் கேட்டுக்கொண்டார். பல துரதிர்ஷ்டங்களும், பயங்கரமான இழப்புகளும், துயரங்களும் அவர்களை எதிர்நோக்கியுள்ளன. ஆனால், ஒன்றுபட்டு நின்றால், புதிய சோதனையையும் வென்று மீள முடியும் என்று சர்ச்சில் நம்பிக்கை தெரிவித்தார். 'இதுவரை நாம் தோற்கவில்லை. இனியும் தோல்வி காணப்போவதில்லை. உறுதியுடன் ஒன்றுபட்டு புயலை நோக்கிப் புயலை எதிர்த்து முன்னேறுவோம்'[1] என்று வீரகர்ஜனை செய்தார்.

ஆசியாவில் ஜப்பானின் முன்னேற்றம் இந்தியாவைப் போரபாயத்திலிருந்து காப்பாற்றுவதில் இந்தியர்களின் ஒத்துழைப்பை நாடுகின்ற கட்டத்தை உருவாக்கியது. போர் தொடங்கிய போது இந்திய அரசாங்கம் ஜெர்மனிக்கு எதிராக, பிரிட்டனுடன் சேர்ந்து ஒத்துழைத்தது. இதனை எல்லா அரசியல் கட்சிகளும், மக்கள் பிரிவுகளும் வரவேற்றன. 1940ஆம் ஆண்டு வேனிற்காலத்தில், ஜெர்மனிக்கு எதிராகப் பிரிட்டன் தனித்து நின்று போராடிக்கொண்டிருந்தபோது காந்திஜியும், காங்கிரஸ் தலைவர்களும் பிரிட்டனிடமிருந்து சுயாட்சி பெறும் நோக்கத்துடன் ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கினார்கள். இதனை நிறுத்துமாறு விடுக்கப்பட்ட வேண்டுகோள்களும், விண்ணப்பங்களும் பயனற்றுப்போயின. எனவே, பிரிட்டிஷ் அதிகாரிகள் நாட்டைக் காப்பாற்றுவதற்காக இந்தியத் தலைவர்களின் மீது அடக்குமுறைகளைப் பயன்படுத்தி, அவர்களைச் சிறையில் தள்ளவேண்டியதாயிற்று.

### இந்தியச் சிக்கல்

1930ஆம் ஆண்டில் நடைபெற்ற வட்டமேசை மாநாடு முடிந்ததிலிருந்து இந்தியப் பேரரசில் டொமினியன் பொறுப்பாட்சியை நிறுவுவதற்கு வழிவகுக்கக்கூடிய இந்திய அரசியல் அமைப்புத் திட்டத்தின் நிபந்தனைகளுக்கு உடன்படுமாறு பிரிட்டன் இந்தியர்களை வேண்டிக் கொண்டிருந்தது. இந்த முயற்சிகள் யாவும் வீணாகிவிட்டன. இந்தியாவின் மிகப்பெரிய

[1]Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 353.

அரசியல் தனிக்கட்சியான காங்கிரஸ், பெரும் முஸ்லிம் சிறு பான்மையினருடனே, இந்தியாவின் பரப்பளவில் ஐந்தில் இரு பகுதிகளுக்கும், மொத்த மக்கள் தொகையில் கால்பகுதிக்கும் உரிமையாளர்களாக இருந்த இந்திய சுதேச மன்னர்களுடனே உடன்பாடு கொள்ள மறுத்துவிட்டது. காங்கிரஸ் கட்சியில் முக்கியமானவர்களாக இருந்த தலைவர்களிடம் எவ்விதப் பாது காப்புமின்றி இந்திய சிறுபான்மைச் சமூகங்களை ஒப்படைப்பதை பிரிட்டன் விரும்பவில்லை. அமைதியான உடன்பாடு எதுவும் சாத்தியமில்லையா? எதிரி, நாட்டின் வாயிலில் போர் முரசு கொட்டிக்கொண்டிருக்கும் நிலையில் காங்கிரஸின் ஒத்துழை யாமை இயக்கம் சற்றும் விரும்பத்தக்கதன்று,

இந்தியா பொறுப்பாட்சி பெறுவதுபற்றி வின்ஸ்டன் அதிக உற்சாகம் காட்டவில்லை. ஆனால், அதனை நாட்டின் பொதுக் கொள்கையாக அவர் ஒப்புக்கொண்டார், வரவேற்றார். இந்தப் பிரச்சினையில் முரண்பட்ட கொள்கைகள் கொண்டிருந்த பல்வேறு மக்கள் பகுதிகளுடன் பேசி ஒரு சமரச முடிவை ஏற்படுத்த சர்ச்சில் ஒரு துணிகரமான முயற்சியை மேற்கொண் டார். 1942ஆம் ஆண்டு மார்ச்சு 11ஆம் நாள் இந்தியப் பிரச்சினைபற்றி ஒரு முடிவு காண அரசின் திட்டங்களுடன் சர் ஸ்டிராஃபோர்டு கிரிப்ஸ் (Sir Strafford Cripps) போக இருப்பதாக சர்ச்சில் அறிவித்தார். இத் திட்டங்களின்படி போர் முடிவுற்ற வுடனே இந்தியாவிற்கு டொமினியன் நிலையும், பொறுப்பாட்சி யும் வழங்கப்படும் என்று கூறப்பட்டது. இந்தத் தூதுக்குழு விற்கு கிரிப்சைத் தேர்ந்தெடுத்தது மகிழ்ச்சிகரமான செய்தி. ஏனெனில், கிரிப்ஸ் திறமையுடைய வழக்கறிஞர் மட்டுமல்லர், இந்தியர்களின் கோரிக்கைகளின்பால் பரிவுகொண்ட இடதுசாரி அரசியல் வாதியுங்கூட. களங்கமில்லாத நேர்மையுடையவர் என்ற புகழும் அவர் பெற்றிருந்தார். எனினும், அவரிடம் வைராக்கியமும், தன்முனைப்பும் அதிகமிருந்தன. இடதுசாரி சோஷியலிஸ்டாக இருந்தும்கூட சிலகாலம் அவர் தொழிற்கட்சி யிலிருந்து தள்ளி வைக்கப்பட்டிருந்தார். நடைமுறையில் அவர் தனிநபர் கொள்கையுடையவராததால், எவ்வளவு பெரும் பான்மையினரது முடிவாக இருந்தாலும், தமது சொந்த முடிவு களைத் தவிர மற்றவர்களின் முடிவுகளை ஒப்புக்கொள்ளாதவர். ஆனால், அவரது நேர்மையும், நலம் நாடும் நோக்கமும் ஐயத் திற்கு அப்பாற்பட்டவை. எனவே. எவ்வித ஏமாற்று முறை களையோ, தில்லுமுல்லுகளையோ அவர் கொண்டுவருவார் என்று இந்தியர்கள் நம்ப இடமேயில்லை. ஏனெனில், பிறரை ஏமாற்று வது என்பது அவரது இயல்பிற்குப் புறம்பானதொன்று.

காங்கிரஸ் கட்சி, முதலில் கிரிப்ஸ் திட்டங்களை வரவேற்ற போதிலும், பின்னர்க் காந்திஜியின் ஆணைக்கு இணங்க காங்கிரஸ் அவற்றைப் புறக்கணித்துவிட்டது. ஒருவேளை பிரிட்டன் இந்தியாவைப் பாதுகாக்கச் சக்தியற்றது என்று காந்திஜி எண்ணியிருக்கலாம். எனவே, இந்தியா ஜப்பானுடன் தனியாகப் பேச்சு வார்த்தைகள் நடத்தும் அளவிற்கு உரிமை பெற்றிருக்கவேண்டுமென்று அவர் கோரினர். ஆனல், இந்தியா பிரிட்டிஷ் பேரரசில் இருக்கும்வரைக்கும் பிரிட்டன் இதனை அனுமதிக்காது. நிலைமை ஆபத்தாகவே இந்தியாவிற்குப் பிரிட்டிஷ் படைகளும், தளவாடங்களும் பெரும் அளவில் அனுப்பப்பட்டன. இவை யாவும் நன்னம்பிக்கை முனையைச் சுற்றி, மடகாஸ்க்கர் தீவிற்கு வடக்கு வழியில் அனுப்பப்படவேண்டியிருந்தன. மடகாஸ்க்கரை அச்சு நாடுகளுக்கு ஆதரவான விச்சி அரசின் சகாவான கவர்னர் - ஜெனரல் அனெட் (Annet) என்பவரின் வசமிருந்தது. இவர் ஜப்பானியர்களுக்கு உதவி செய்து மடகாஸ்க்கரை ஓர் எதிரித் தளமாக ஆக்கிவிடக்கூடிய ஆபத்து இருந்தது. இதனைத் தவிர்க்க அனுப்பப்பட்ட படை, தீவின் வடபகுதியைக் கைப்பற்றிக் கொண்டது. நீண்ட போராட்டத்தின்பின் தீவு முழுவதும் விச்சி அரசு வசமிருந்து கைப்பற்றப்பட்டு சுதந்திர ஃபிரான்ஸ் அரசினரிடம் ஒப்படைக்கப்பட்டது. இவ்வாறு இந்தியாவிற்குச் செல்லும் பிரிட்டனின் கடல் வழி ஆபத்தின்றிப் பாதுகாக்கப் பட்டது.

1942ஆம் ஆண்டு கோடையில் நேச நாடுகளுக்கு மிகவும் சோதனையான காலமாக இருந்தது. மே திங்களின் இறுதியில் ஜெர்மனி மீண்டும் ருஷ்யாவைத் தாக்கியது. கடந்த கோடையில் இழந்த பகுதிகளை மீண்டும் பெற்று, ருஷ்யாவின் மையப் பகுதியிலும், தென் பகுதியிலும் வேகமாக முன்னேறின. ஜூலை முதல் நாள் செபாஸ்டபூல் (Sebastapool) வீழ்ச்சியுற்றது. மறு வாரத்தில் மாஸ்கோவின் தென்கிழக்கு வரைக்கும் ஜெர்மன் படை முன்னேறியது. வெரோனெஸ் (Veronez) நகரம் வீழ்ந்து விட்டதாக ஹிட்லர் அறிவித்தார். ஆனல், உண்மையில் நகரம் வீழ்ச்சியடையவில்லை. எனவே, வால்கா ஆற்றின் மீதிருந்த ஸ்டாலின்கிராடு நகரத்தை எதிரிகள் வன்மையாகத் தாக்க முயன்றனர். படையின் ஒரு பகுதி பாகு (Baku) பகுதியிலுள்ள எண்ணெய்க் கிணறுகளைக் கைப்பற்ற விரைந்தது. அவ்வாண்டுக் கோடையிலும், வேனிற்காலத்திலும் ஸ்டாலின்கிராடினைக் கைப்பற்றப் பெருமுயற்சி நடைபெற்றது. ஆனல், ருஷ்யர்களின் வைராக்கியமும், விடாமுயற்சியும் ஜெர்மானியரைத் திகைக்க வைத்தன. ஒருகாலத்தில் அழகுமிக்க நகரமாகவும், சோவியத்

ருஷ்யாவின் நகர அமைப்புத் திட்டத்தின் சிகரமாகவும் கருதப் பட்ட ஸ்டாலின்கிராடின் ஒவ்வொரு அங்குல நிலத்தையும் புனித பூமியாகக் கருதி அதனை மீட்க ருஷ்யர்கள் வீராவேச மாகப் போராடிக் கொண்டிருந்தனர். நகரம் வீழ்ந்ததென்று மீண்டும் ஹிட்லர் விடுத்த அறிக்கை பொய்யாகிவிட்டது. உலக வரலாற்றிலே இதுவரை நடந்திராத இந்த அற்புதக் காட்சியைக் கண்டு உலக மக்கள் வியந்தனர். வட ஆப்பிரிக்காவிலும் பிரிட்டிஷ் படை பின்வாங்கியது. அச்சுநாடுகள் இறுதி வெற்றி யைப்பற்றி எவ்வளவு உறுதியாக இருந்தனவென்றால், முசோலினி வெற்றி விழாவிற்கே ஏற்பாடு செய்துகொண்டிருந்தார். ஆனால், எல் அலாமெய்ன் (El Alamein) பகுதியில் ஜெர்மன் படை தடுத்து நிறுத்தப்பட்டது. வெற்றி விழா நடைபெறவில்லை.

இதனைத் தொடர்ந்து மேற்கு முனையில் போரைத் தொடர வேண்டுமென பிரிட்டனில் ஆர்ப்பாட்டம் தொடங்கியது. இந்தக் கூச்சலைக் கிளப்பியவர்களில் முக்கியமானவர்கள் பொது வுடைமைவாதிகள். இதுவரையிலும் இவர்கள் நாஜிகளுக்கு எதிராக நடத்தப்படும் போரை 'முதலாளித்துவத்தின் போர்' என்று கூறிப் பிரிட்டிஷ் மக்களின் அதிருப்தியைச் சம்பாதித்துக் கொண்டவர்கள். ஆனால், சர்ச்சில் இவர்களின் கோரிக்கையின் பேரில் எவ்வித அவசரக்கோலமான நடவடிக்கையையும் எடுக்கத் தயாராக இல்லை. டார்டனலஸ், கிரிட் விவகாரங்களைப்பற்றி சர்ச்சில் மறந்துவிடவில்லை. எதிரி வன்மை பெற்றிருந்த கடற் கரைப் பகுதிகளில் போர் துவங்குவதிலுள்ள சிரமங்களைச் சர்ச்சில் அறியாதவரல்லர். அதே நேரத்தில் பிரிட்டிஷ் மக்கள் அறிந் திராத ஒரு நடவடிக்கையை மேற்கொள்ள அவர் திட்டமிட் டிருந்தார். பிரிட்டனின் படையெடுப்பு முறைகளைப் பரிசோதிக் கவும் இத்திட்டம் உதவக்கூடும் என்பது அவரது கருத்தாகும்.

பிரிட்டனின் விமானத் தாக்குதல்களும், கடற்படைத் தாக்குதல்களும் புதிய ஊக்கத்துடன் தொடர்ந்து நடத்தப் பெற்றன. பிரிட்டிஷ் ஆலைகளிலும், கப்பல் தளங்களிலும் உற்பத்தி அதிகரித்திருந்தது. மார்ச் 27ஆம் நாளன்று கப்பல் துறைகளையும், வானொலி நிலையத்தையும் அழிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் செயின்ட் நாசேயர் (St. Nazaire) துறைமுகத் தின்மீது தாக்குதல் செய்யப்பட்டது. ஆகஸ்டு 19ஆம் நாளில் கனடா படையினர் டியப்பி (Dieppe) துறைமுகத்தைத் தாக்கி வீராவேசமாகப் போரிட்டனர். மே திங்கள் இறுதிவரை ஜெர்மனி மீதும் ஜெர்மனி ஆக்கிரமித்திருந்த பகுதிகள்மீதும் குண்டுவீச்சு அதிகரித்தது. விரைவில் கோலோன் நகரும், ப்ரெமெனும்

(Bremen) தாக்கப்பட்டன. ஜுலை திங்களில் ரூர்ப் பள்ளத் தாக்கும், ஹாம்பர்க்கும் கடும் குண்டு வீச்சுக்கு இரையாயின. இதனைத் தொடர்ந்து பிரிட்டனின் விமானத் தாக்குதல்கள் போரின் முக்கிய அமிசமாகி விட்டன. எதிரியின் தொழில் தளங் களைத் தாக்குவதும், அவனது போக்குவரத்துகளை அழிப்பதும் நடைமுறைகளாகி விட்டன.

## பசிபிக் முனையில் ஜப்பானின் படுதோல்வி

பசிஃபிக் முனையில் போரின் போக்கு மாறுதலடைந்தது. மே திங்களில் ஆஸ்திரேலியாவை நோக்கி முன்னேறிய ஜப்பானின் கப்பல் படை, பவளக் கடலில் (Coral Sea) வன்மையான தொரு அமெரிக்கப் படையிடம் சிக்கிச் சின்னாபின்னமாக்கப்பட்டது. மிட்வே தீவுக்கு (Midway Island) அருகில் நடைபெற்ற மற்றொரு போரிலும் எதிரிக்குத் தோல்வியே ஏற்பட்டது. இருபது ஜப்பான் கப்பல்களும், மூன்று விமானம் ஏற்றிச் செல்லும் கப்பல்களும் அமெரிக்கர்களால் மூழ்கடிக்கப்பட்டன. நியூகினியாவிற்கு (New Guinea) கிழக்கில் மில்னி குடாவில் (Milne bay) நிறுத்தப் பட்டிருந்த ஆஸ்திரேலிய கப்பற்படைகளைத் தாக்கும் ஜப்பானின் முயற்சியும் முரி யடிக்கப்பட்டது. சாலமோன் தீவுகளில் (Solo-mons) தங்கள் பலத்தை உறுதிப்படுத்திக்கொண்ட அமெரிக் கர்கள் அங்கிருந்த ஜப்பானியத் தளங்களை ஒன்றன்பின் ஒன்றாகக் காலி செய்தனர். நேச நாடுகள் தம்மிலே பலவீனமான இயல் புடைய கூட்டுறவு நாடுகளாகவே செயல்பட்டன. இத்தகைய கூட்டுறவுகள் சிதைந்துபோகாமல் ஒற்றுமையாக வைத்திருந்தது போரின் இறுதி வெற்றிக்கு வின்ஸ்டன் செய்த மகத்தான பணியாகும். இதற்காக அவர் கிழக்கு நாடுகளுக்கும் மேற்கு நாடுகளுக்கும் பல தூதுக் குழுக்களை அனுப்பியதோடு, படைத் தலைவர்கள், உணவு, போர்த்தளவாடங்கள் வழங்குதல், கப்பல் போக்குவரத்து ஆகிய துறைகளில் கூட்டு முயற்சியுள்ள பல கூட்டுக் குழுக்களையும் அமைத்தார். இத்துடன் நேச நாட்டு அரசுகளுடன் பேச்சு வார்த்தைகள் நடத்துமாறு அவர்களையும் சென்று கண்டார்.

1942ஆம் ஆண்டு ஜுனில் ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டுடன் அடுத்த இரகசியத் திட்டங்களைப்பற்றிக் கலந்தாலோசிக்க சர்ச்சில் அமெரிக்கா சென்றார். அவர் சென்ற நேரம் நல்ல முறையில் அமையவில்லை. அப்பொழுதுதான் ஆப்பிரிக்காவில் டோபுருக் (Toboruk) வீழ்ந்த செய்தியை ரூஸ்வெல்ட்டு அவருக்கு அறிவித்தார். இந்த நெருக்கடியில் 20,000 வீரர்களும், உணவு

களும் தளவாடங்களும் பெரும் அளவில் கைப்பற்றப்பட்டதாகச் செய்தி கிடைத்தது. லிபியாவிலும் ஆச்சின்லக் (Auchinleck) பின்வாங்கினர். ஆனல், ரூஸ்வெல்ட்டும் சர்ச்சிலும் தம் திட்டங்களை வகுப்பதில் பின்வாங்காமல், எதிரிமீது நேசநாட்டுப் போர்ச் சக்தியை மிகவும் பெரிய அளவில் குவிக்க வேண்டுமென்று அறிவித்தார்கள். இந்தத் திட்டங்கள் அமல் செய்யப்படுமா என்பது கூட இரகசியமாக இருந்தது. தாய்நாடு திரும்பிய வின்ஸ்டன், காமன்ஸ் அவையைச் சந்தித்தபோது நேசப் படைகள் ஆப்பிரிக்காவில் கண்டிருந்த தோல்வியைப்பற்றியும், ஐரோப்பாவில் எதிரியின்மீது வன்மையான நடவடிக்கைகள் எடுக்கத் தவறியது பற்றியும் அதிருப்திக் குரல்கள் எழுந்தன. சர்ச்சில் லிபியாவில் ஏற்பட்ட வருத்தத்திற்குரிய தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. எனினும், மால்டாவை (Malta) அற்புதமான வகையில் பாதுகாத்தது நம்பிக்கை தரும் சாதனையென சர்ச்சில் குறிப்பிட்டார். அமெரிக்கக் கப்பற்படை வன்மை விரைவாக அதிகரித்துக் கொண்டுவந்தது. அவ்வாறே பிரிட்டனின் டாங்கு உற்பத்தித் திறம் பன்மடங்கு பெருகியது. ருஷ்யாவிற்கும், ஆப்பிரிக்காவிற்கும் பல ஆயிரக்கணக்கான டாங்குகள் அனுப்பப்பட்டன. இந்தியாவின் படைத்திறன் முன்னேறியிருந்தது. ருஷ்யா பிரம்மாண்டமான அளவில் போராடிக் கொண்டிருந்தது. இறுதியில் காமன்ஸ் அவை, சர்ச்சிலை எவ்வளவுதான் குறை கூறினலும், அவரை மாற்றுவதற்கு முன் வரவில்லை.

இதற்கிடையில் சர்ச்சில் ஸ்டாலினைச் சந்திப்பதற்காக கிழக்கு முனைக்குச் சென்றார். வழியில் அவர் கெய்ரோவில் இறங்கி, மத்திய கிழக்குப் பிராந்தியத்திற்குத் தளபதியாக அலெக்சாண்டரையும், எட்டாவது படைக்குத் தலைவராக மான்ட்கோமரியையும் (Montgomery) நியமிக்க ஏற்பாடுகளைச் செய்தார். பின்னர் எல் அலாமெய்னில் தங்கிவிட்டுப் பாரசீகம் வழியாக மாஸ்கோவை அடைந்தார். ஸ்டாலினுடன் போர்த் திட்டங்களைப்பற்றிய பேச்சுகள் மீண்டும் தொடங்கின. அவ்வாண்டு கோடையில் ருஷ்யப் படைகள்தாம் ஜெர்மனியின் தாக்குதல்களை எதிர்த்துப் போராடிக்கொண்டிருந்தன. மேற்கு ஐரோப்பாவில் இரண்டாவது முனையைத் தொடங்க முடியாததன் காரணத்தைச் சர்ச்சில் ஸ்டாலினிடம் விளக்கினர். இருவரும் வட ஆப்பிரிக்க, மத்தியதரைக் கடல் தாக்குதல் திட்டங்களைப்பற்றி விவாதித்தனர். இவை யாவும் ஸ்டாலினுக்கு மகிழ்ச்சி தரவில்லை, ஸ்டாலின்கிராட் பகுதியிலும். காகஸஸ் பிராந்தியத்துலும் ஜெர்மனியின் தீவிரத் தாக்குதல்கள்

ருஷ்யாவை அழுத்திக்கொண்டிருந்தன. பிரிட்டிஷ் படைகள் ஃபிரான்சில் வந்திறங்குமானால் அதனால் தமக்கு நிவாரணம் கிடைக்குமென்று ஸ்டாலின் எதிர்பார்த்தார். எனினும், அவர் ஆங்கிலோ - அமெரிக்க முடிவுகளை ஏற்றுக்கொண்டு, இருதலைவர்களும் வன்மையான நட்புறவை நிலைநாட்டினார்கள். பின்னர், சர்ச்சில் பாரசீகம் சென்று ஷாவுடன் மனம்விட்டுப் பேசினார். அங்கிருந்து கெய்ரோ சென்ற வின்ஸ்டன் மத்திய கிழக்கு முனையில் முக்கிய தலைவர்கள் அனைவரையும் சந்தித்து உரையாடினார். ஆகஸ்டு 17ஆம் நாளன்று நாடு திரும்பிய சர்ச்சிலைப் பிரிட்டிஷ் பொதுமக்கள் மகிழ்வுடன் வரவேற்று நன்றி செலுத்தினார்கள்.

சர்ச்சிலின் சுற்றுலா நீண்டதாக இருந்தபோதிலும் மிகப் பயனுள்ளதாக இருந்தது. நேச நாடுகளின் போர் முயற்சிகள் வேறுபாடுகளின்றி ஒருமுகப்பட்டிருந்ததோடு, போரின் அடுத்த கட்டத்தைப்பற்றியும் செயல் உடன்பாடு கொண்டிருந்தனர். செப்டம்பர் 8ஆம் நாளில் பிரிட்டிஷ் படை முன்னைவிட பன்மடங்கு வன்மை பெற்றிருப்பதாகச் சர்ச்சில் காமன்ஸ் அவையில் அறிவித்தார். ஸ்டாலினுடன் தாம் நடத்திய பேச்சு வார்த்தைகளைப் பற்றியும் அவர் குறிப்பிட்டார். ருஷ்யாவில் இருந்த காலை நாஜிக் கொடுமைகளைம்பற்றித் தாம் கேட்டவைகளைச் சுட்டிக்காட்டி, இக் கொடுமைகளின் மூல கர்த்தாக்களை நீதிமன்றத்தின் முன் கொண்டுவரத் தமது அரசாங்கத்தின் உறுதியையும் சர்ச்சில் எடுத்துரைத்தார்.

ஜெர்மன் படைகள் ஸ்டாலின்கிராடையும், மால்டாவையும் தீவிரமாகத் தாக்கின. எல் அலாமெயினைக் கைப்பற்ற முயன்ற ரோமல் பின்வாங்க வேண்டியதாயிற்று. பிரிட்டிஷ் விமானங்கள் ஜெர்மன் தளங்கள்மீது இரவுகளில் ஐந்நூறு டன் எடையுள்ள குண்டுகளை வீசின. அமெரிக்கக் கப்பல் தளங்களிலிருந்து கப்பல்கள் நிறைந்து வழிந்து கொண்டிருந்ததைப் பாராட்டி சர்ச்சில் வாழ்த்துச் செய்தி அனுப்பினார். அக்டோபர் 23ஆம் நாளில் ரோமலை மான்ட்கோமரி மிக வன்மையாகத் தாக்கினார். ஜெர்மன் வழங்கு பொருள் தொடர்புகள் தகர்க்கப்பட்டன. நவம்பர் 4ஆம் நாள் எதிரி நிலைகுலைந்து தமது ஆதிக்கத்தில் இருப்பதாக மான்ட்கோமரி அறிவித்தார். 40,000 பேர் சிறைப்பட்டனர். அவை போன்ற எண்ணிக்கையினர் கொல்லப்பட்டனர். இத்தாலியரை விட்டுவிட்டு ஜெர்மனி ஓட்டம் பிடித்தது.

**ஆப்பிரிக்க முனையில்!**

நவம்பர் 8ஆம் நாளில் ஆப்பிரிக்க முனையில் வரலாறு கண்டறியாத பெரும் படையெடுப்பு நிகழ்ந்தது. அட்லாண்டிக் பெருங்கடலில் இரகசியமாகத் திரட்டப்பட்டு வந்த அமெரிக்க, பிரிட்டிஷ் படைகள், திடீரென அல்ஜீரியாவையும், மொராக்கோவையும் தாக்கின. ஃபிரஞ்சு வட ஆப்பிரிக்காவிற்குள் படைகள் புகுந்தன. சில இடங்களில் ஃபாஸிச மனப்போக்குள்ள படைத்தலைவர்கள் விச்சி காப்பரணகளை எதிர்த்துப் போரிடுமாறு பணித்தார்கள். எனினும், படையெடுப்பை முறியடிக்க முடியவில்லை. இந்தத் தாக்குதலில் அமெரிக்கர்கள் பெரும் முனைப்புக் காட்டினார்கள். பிரிட்டிஷ் கடற்படை 'யூ' படகுகளைத் தாக்கி அழித்துக்கொண்டிருந்தபோது, பிரிட்டிஷ் தரைப்படை வட டியூனிசியாவில் ஜெர்மனியின் எதிர்ப்புகளைத்தாங்கி வன்மையாகப் போராடிக்கொண்டிருந்தது. போர் நடவடிக்கைகளின் மிக உயர்ந்த அதிகாரம் யாவும் அமெரிக்கப் படைத்தலைவரான தளபதி ஐஸனோவரிடமிருந்தன. இது மிகச் சிறந்த எற்பாடு என்றாலும், அதிலும் ஒரு குறைபாடு இருந்தது. அமெரிக்கர்களுக்கு ஐரோப்பிய அரசியல் வெல்திறத்தில் அதிக அனுபவம் இல்லாத காரணத்தால், பிரிட்டிஷ் அரசியல் வல்லுநர்களால் அவர்கள் நடத்தப்படுவதைக் கண்டு சிறிது அச்சம் கொண்டனர். பிரிட்டிஷாரின் நெருங்கிய நண்பராகிய தளபதி டி காலே (De Gaulle) அமெரிக்கர் தமது விவகாரங்களில் தலையிட அனுமதிக்கவில்லை. ஆனால், பிரிட்டன் இரகசியமாக நீர்மூழ்கியில் ஃபிரான்ஸிலிருந்து கோண்டுவந்திருந்த தளபதி கிரோட் (Giraud) என்பவரிடம் அதிக நம்பிக்கை கொண்டிருந்தார்கள், இதற்குள் அட்மிரல் டார்லான் (Darlan) இதுபற்றிச் செய்தி அறிந்து அமெரிக்கப் படை இறங்குவதைக் காண அல்ஜீரியாவிற்குள் நுழைந்துவிட்டார். வெற்றிபெறும் கட்சியில் மாறிக்கொள்வதென்பது அவரது திட்டம். தளபதி கிரோட்டுடன் துணைநின்று ஃபிரஞ்சு வட ஆப்பிரிக்காவை அமைதியான முறையில் பணியவைத்துவிடலாமென்று அவர் யோசனை கூறினார். ஆனால், நாஜித் தொடர்புடைய டார்லானை நாட்டுப் பற்றுள்ள ஒவ்வொரு ஃபிரஞ்சுக்காரனும் வெறுத்தான் என்பது அமெரிக்கர்களுக்குத் தெரியாது. நேச நாடுகளுக்கும், ஃபிரான்சிற்கும் இடையே நிலவிய நெருங்கிய நட்புறவுகளை டார்லான் அழித்துவிடக்கூடிய அபாயகரமான நிலை உருவாகியது. ஆனால், அதிர்ஷ்டவசமாக டிசம்பர் 24ஆம் நாளன்று டார்லான் கொலை செய்யப்பட்டதால், ஜெர்மனிக்கு எதிராக ஃபிரான்ஸின் ஒன்றுபட்ட ஒத்துழைப்பு மீண்டும் நிலைபெற வழி ஏற்பட்டது.

வட ஆப்பிரிக்காவில் நிகழ்ந்த ஆங்கிலோ அமெரிக்கப் படையெடுப்பைத் தொடர்ந்து, போரில் பெரும் மாற்றம் ஏற்பட்டது. நேச நாடுகளின் கையோங்கி நின்றது. இது முதல் ஹிட்லரும் அவரது துணைக் கோள் நாடுகளும் தம்மைப் பாதுகாப்பதிலேயே அக்கறைகொள்ள வேண்டியதாயிற்று. படிப்படியாகப் பின் வாங்கிய நாஜிகள் தமது இறுதித் தோல்வியை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தார்கள். ஹிட்லர் எல்லாவிதமான எதிர்ப்பு நடவடிக்கைகளையும் மேற்கொண்டார். ஃபிரான்ஸின் பிற பகுதிகளையும், மத்தியதரைக் கடலின் மையப் பகுதியையும், கைப்பற்ற ஹிட்லர் முன்னேறினர். ஆங்கிலோ – அமெரிக்கத் தாக்குதல்களை முரியடிக்க வேண்டுமெனில் இனி விச்சி அடியாட்களையும், லவால், டார்லான் போன்ற சந்தர்ப்பவாதிகளையும் நம்பிக்கொண்டிருப்பதில் பயனில்லை என்பதை ஹிட்லர் உணர்ந்து கொண்டார். டியூனிசியாவிற்குள் ஜெர்மன் படைகள் குவிந்தன. இத்தகைய தற்காப்பு ஏற்பாடுகள் நேச நாட்டுப் படையெடுப்பைத் தாமதப்படுத்த முடியுமேயன்றி, தவிர்த்துவிட முடியாது.

நவம்பர் 10ஆம் நாளில் சர்ச்சில் 'மேன்சன் ஹவுசில்' உரையாற்றியபோது அவருக்கே உரியதான நம்பிக்கையும், முக மலர்ச்சியும் அவரிடம் மேலோங்கி நின்றன. 'இது முடிவு அன்று, முடிவின் துவக்கமுமன்று. ஒரு வேளை தொடக்கத்தின் முடிவு போலும்' என்று அவர் குறிப்பிட்டார். அதே உரையில் எகிப்திய போரைப் பாராட்டினர். ஃபிரான்ஸ் மீண்டும் தனது பேரரசின் துணையுடன் தலைநிமிர்ந்து நின்று வெற்றிபெறும் என்று வாழ்த்துக் கூறினர். பிரிட்டனைப் பொறுத்தவரை அவர்கள் வேறெவருடைய மண்ணிற்கும் ஆசைப்படவில்லை என்றும், தமது பொன்னாட்டைப் பாதுகாக்கவே பிரிட்டன் போரிடுகிறதென்றும் சர்ச்சில் தெளிவுபடுத்தினர். 'நான் பிரிட்டிஷ் பேரரசைக் கலைத்து விடுவதற்காகப் பிரிட்டிஷ் மன்னரின் பிரதமராகவில்லை; அந்தப் பணி என்றாவது நிறைவேற்றப்படுமானால் அதற்கு வேறொருவரைத்தான் தேடவேண்டும். மேலும் ஜனநாயக அமைப்பின்கீழ் அத்தகைய நடவடிக்கையை மேற்கொள்ள நாட்டு மக்களைக் கலந்தாலோசிக்கவேண்டும்' என்று கூறிச் சர்ச்சில் பிரிட்டனின் போர்க் கொள்கைகளைக் குறை கூறியவர்களுக்குச் சாட்டை அடி கொடுத்தார். அல்ஜீரியத் தாக்குதலைத் தொடர்ந்து ருஷ்யாவில் இருந்த ஜெர்மன் படைகள் மேற்கு முனைக்குத் திருப்பி விடப்பட்டிருப்பதைப் புதியதொரு மாற்றமாகச் சர்ச்சில் பாராளுமன்றத்தில் குறிப்பிட்டார்.

வட ஆப்பிரிக்கப் போர் விரைவாக முன்னேறியது. ஒரே மாதத்தில் எல் அலாமெய்ன் தாக்குதலைத் தொடர்ந்து நேசப் படைகள் ரோமலை எகிப்திலிருந்து வெளியேற்றின. பின்னர் ஜெர்மனியின் விமானத் தாக்குதல்கள் டிரிப்போலிட்டோனியா (Tripolitonia) டியூனிசியா ஆகிய இடங்களில் அதிக வெற்றி பெறவில்லை. அமெரிக்க, ஃபிரஞ்சுப் படைகள் முன்னேறிக் கொண்டிருந்தன. நேசப் படைகளே எங்கும் முன்னேறிக் கொண்டிருக்க, எதிரி பின்வாங்க வேண்டியதாயிற்று. ருஷ்யாவில் ஸ்டாலின்கிராடின் தற்காப்பு பெரும் வெற்றி வாகை சூடியது. ஸ்டாலின்கிராடை எப்படியும் கைப்பற்றுவதைக் குறிக் கோளாகக் கொண்ட ஹிட்லர் தம் படைகளைத் திருப்பிப் பெற மறுத்தார். இதன் விளைவு 300,000 வீரர்களைக் கொண்ட படை சுற்றி வளைத்துக்கொள்ளப்பட்டது. ருஷ்யாவின் பனி யிலும், குளிரிலும் சிக்கிக்கொண்ட படைகள் சரணடையாமல் இறுதிவரைப் போராடி மடியுமாறு ஹிட்லர் உத்தரவிட்டார். இறுதியாக 1943ஆம் ஆண்டு ஜனவரி 31ஆம் நாளில் ஜெர்மன் தளபதி பாலுஸ் (Paulus) பிற தளபதிகளுடனும் எஞ்சியிருந்த பன்னீராயிரம் வீரர்களுடனும் சரணடைந்தார். இது போரின் மாபெரும் வெற்றிகளில் ஒன்றாகும்.

1943ஆம் ஆண்டு ஜனவரி 13ஆம் நாளில் ஃபிரஞ்சு மொராக்கோவிலுள்ள காஸபிளாங்காவில் (Casablanca) நேச நாடுகள் முக்கியமான ஒரு மாநாட்டைக் கூட்டின. சர்ச்சில் அடிக்கடி அமெரிக்காவுக்குச் சென்று ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டுடன் போர்த் திட்டங்களைப்பற்றிக் கலந்தாலோசித்தார். இந்த முறை ரூஸ்வெல்ட் உடல்நலம் குன்றியிருந்தபோதிலும் அட்லாண் டிக்கைக் கடந்து சென்று அமெரிக்கப் படைகள் வெற்றிபெற்ற இடத்தைச் சென்று கண்டார். அதே நேரத்தில் நேச நாடுகளின் முக்கிய தலைவர்களும் அச்சு நாடுகளைத் தோற்கடிக்கும் திட்டங்களை ஆலோசிப்பதற்காகக் கூடினார்கள். அமெரிக்கா இங்கிலாந்து நாடுகளின் நீர்ப்படை, நிலப்படை, விமானப் படைத் தலைவர்களும், ராணுவ அரசியல் தலைவர்களும் கலந்து கொண்டனர். நாஜிகளைத் தோற்கடிப்பதில் முழுமூச்சுடன் ஈடு பட்டிருந்த ஸ்டாலின் இதில் கலந்துகொள்ள முடியவில்லை. டி காலும், கிரோடும் அழைக்கப்பட்டிருந்தனர். ஃபிரான்ஸ் நாட்டின் தேசபக்தர்களிடையே ஏற்பட்டிருந்த பிளவுகளை நீக்கு வதற்குப் பெரும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

மாநாட்டில் போர்த் திட்டங்கள் யாவும் விளக்கமாகவும், விரிவாகவும் விவாதிக்கப்பட்டு இருநாட்டுத் தலைவர்களின்

உளப்பூர்வமான உடன்பாட்டைப் பெற்றன. இத் திட்டங்களில் ருஷ்யாவிற்கும், சீனுவிற்கும் இயன்ற அளவு தளவாடங்களேயும், பொருட்களேயும் அனுப்புகின்ற ஆலோசனேகளும் இடம் பெற்றிருந்தன. ஆனுல், எந்த நிபந்தனேகளின் அடிப்படையில் போர் நிறுத்தம் செய்யப்படவேண்டும் என்ற திட்டம்தான் காஸபிளாங்கா மாநாட்டின் குறிப்பிடத்தக்க சாதனேயாகும். அச்சு நாடுகளின் நிபந்தனேயற்ற சரணுகதியும், அவர்களின் போர் வன்மையை முற்றிலும் அழித்துவிடுவதும்தான் உலக அமைதி ஏற்படுவதற்கு நேச நாடுகளின் திட்டம் என்பதை ரூஸ்வெல்ட் மாநாட்டுப் பிரதிநிதிகளுக்குத் தெளிவுபடுத்தினுர். இதனே, 'நிபந்தனேயற்ற சரணுகதி மாநாடு' என்று வரலாற்றில் குறிப்பிட வேண்டும் என்றும் அவர் கருத்துத் தெரிவித்தார். நேச நாடுகளின் அண்மைக்கால வெற்றிகளேச் சுட்டிக்காட்டிய சர்ச்சில் காஸபிளாங்கா மாநாடே தாம் கலந்துகொண்ட மிக முக்கியமான, வெற்றிகரமான மாநாடு என்று குறிப்பிட்டார்.

### நாஜிகளின் கொடுமை நினேக்கவும் ஒண்ணுதே!

மாநாடு முடிவுற்றதும் சர்ச்சில் துருக்கி நாட்டிற்குச் சென்ருர். அந் நாட்டுத் தலேவருடன் அவரும், துருக்கி அதிகாரிகளுடன் சர்ச்சிலின் துணேவர்களும் பேச்சுவார்த்தைகள் நடத்தினுர்கள். நட்புறவு கொண்ட நாடான துருக்கியுடன் நல்லதொரு உடன்பாடு செய்யப்பட்டது. பிப்ரவரியில் நாடு திரும்பிய சர்ச்சில் தம் பயணங்கள் பற்றிய அறிக்கையைப் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் சமர்ப்பித்தார். ருஷ்யாவில் நாஜிப் படைகள் எவ்வாறு தோல்வியை அணேத்துக்கொண்டுள்ளனவோ அவ்வாறே பிற பகுதிகளிலும் அவர்களே நிலத்திலும், நீரிலும், வானிலும் தாக்கித் தோற்கடிக்க வேண்டுமென்பதே ஒரே நோக்கமெனக் காஸபிளாங்கா மாநாடு முடிவு செய்துள்ளதை அவர் விளக்கினுர். அச்சுப் படைகளின் 'நிபந்தனேயற்ற சரணுகதி' நேச நாடுகளின் நோக்கம் என்பதால், மக்களேக் கொன்று குவித்து வெற்றிபெற வேண்டுமென்பதன்று, நீதியின் பெயரால் தீயவர்களும், குற்றம் புரிந்தவர்களும் தண்டனே பெற வேண்டுமென்பதே அதன் பொருள் என்று சர்ச்சில் சுட்டிக்காட்டினுர். சர்ச்சில் இத்தகைய எச்சரிக்கை விடுப்பதற்குக் காரணம் இருந்தது. நாஜிகள், தாம் கைப்பற்றிய மக்களே மிருகத்தனமாக நடத்துகிருர்கள் என்ற செய்தி வந்துகொண்டிருந்தது. அவர்கள் பெற்று வந்த தோல்விகள், அவர்களின் இதயத்தைக் கடினமாக்கி மேலும், பல குரூரச்செயல்களேப் புரியத் தூண்டின என்பதில் ஐயமில்லே.

ருஷ்யாவில் ஜெர்மன் படைகள் மக்களைச் சிறைப்பிடித்து அடிமைகளாக்கின. இளம்பெண்களை மானபங்கம் செய்தன. சிறைப்பட்டவர்கள் வரையறையின்றி அழிக்கப்பட்டார்கள். எஞ்சியோரிடமிருந்த உணவுப் பொருட்களைப் பறிமுதல் செய்து அவர்கள் பட்டினியால் இறக்குமாறு செய்தன. குடிசைகளும் கோவில்களும் தீக்கிரையாயின. கலாச்சாரக் கருவூலங்களாகத் திகழ்ந்த பொருட் காட்சிசாலைகள், நூலகங்கள், கலைக்கூடங்கள், நினைவுச்சின்னங்கள் யாவும் அழிக்கப்பட்டன. நாஜிக் கொடுமையின் உச்சகட்டமான வெறிச்செயல்கள் போலந்து நாட்டில் நிகழ்ந்தன. ஜெர்மன் மக்களைக் குடியேற்றும் எண்ணத்துடன் ஹிட்லர் போலந்து மக்கள் தொகையை அணுவணுவாக அழித்து வந்தார். குழந்தைகள் ஜெர்மனிக்கு நாடு கடத்தப்பட்டனர். உழவர்கள் வெளியேற்றப்பட்டனர்; உடல் உரம்பெற்றவர்கள் அடிமைகளாக்கப்பட்டனர். ஒரு சிலர் எங்கு அனுப்பப்பட்டார்கள் என்பதே தெரியாது. அங்கே அப்பாவி மக்கள் ஆயிரக் கணக்கில் கொல்லப்பட்டார்கள். யூத மக்கள் பல்லாயிரக் கணக்கில் நச்சுவாயு அறைகளில் (Gas chambers) கொல்லப்பட்டு, இயந்திரங்களின் உதவியால் தோண்டப்பட்ட குழிகளில் புதைக்கப்பட்டனர். 1942ஆம் ஆண்டின் முடிவிற்குள், இரண்டரை மில்லியன் போலந்து மக்களும், ஒரு மில்லியன் யூதர்களும் வன்முறைக்குப் பலியானார்கள். ஹாலந்து, பெல்ஜியம், ஃபிரான்ஸ் ஆகிய நாடுகளிலிருந்தும் யூதர்களைக் கடத்திச்சென்று போலந்தின் முகாம்களில் பலி ஆடுகளைப்போல் நாஜி வெறியர்கள் கொன்று குவித்தார்கள்.

பின்னர் ஜெர்மனிக்குள் நுழைந்த நேசப் படைகள் நாஜிகளின் கோரத்தாண்டவம் நடைபெற்ற முகாம்களைக் கண்டனர். இவைபற்றிய செய்திகளைக் கேட்க உலகமே அதிர்ச்சியுற்றது. 'பெல்சென்' (Belsen) என்பது மிருகத்தனமான கொடுமையைக் குறிக்கும் இழிசொல்லாகக் கருதப்பட்டது. யூத இனத்தின்மீது ஹிட்லர் கொண்டிருந்த வெறுப்பு அவர்களை உலகத்தை விட்டே அழித்துவிட அவரைத் தூண்டியது. அதுபோலவே. ஜெர்மனியில் நாஜிக் கட்சி ஆட்சியை எதிர்த்தவர்களும் பல்லாயிரக்கணக்கில் பலியிடப்பட்டனர். இத்தகைய கொலை முகாம்களின் அதிகாரிகள் பின்னர் விசாரணைக் குட்படுத்தப்பட்ட போது வெளியான திடுக்கிடும் தகவல்களும், இந்த முகாம்களிலிருந்து தப்பியவர்கள் கூறிய சோகக்கதைகளும் நாஜிகளின் இரக்கமற்ற உள்ளத்தை உலகிற்குப் பறைசாற்றின. எனவே, இவற்றை வின்ஸ்டன் கடிந்துரைத்ததும், இந்தக் கயவர்கள்மீது தண்டனை

கோரியதும் எவ்வளவு பொருத்தமானவை என்பதை ஊகித் தறிந்துகொள்ள முடியும்.

ஜெர்மனியர்களைப் போலவே, ஜப்பானும் தன்னிடம் சிறைப் பட்டவர்களை மிருகத்தனமாக வதைத்தது. தன் நலனுக்காகச் செய்யப்படும் யாவும் சரியானவை என்பது ஜப்பானின் கொள்கை. ஏப்ரல் 21ஆம் நாளன்று ஜப்பான் டோக்கியோ விமானத் தாக்குதலில் சிறைப் பிடிக்கப்பட்ட சில அமெரிக்க விமான வீரர்களைத் தூக்கிலிடுவதாக அறிவித்தது. தூரக் கிழக்கில் ஜப்பானின் மின்வேக முன்னேற்றத்தின்போது வீழ்ந்த பல்லாயிரக்கணக்கான ஐரோப்பியக் கைதிகள் முகாம்களில் இழிவான நிலையில் வைக்கப்பட்டிருந்தனர், அவர்களைச் சென்று காண நடுநிலைமை வகித்த நாடுகளுக்குக்கூட அனுமதி வழங்கப் படவில்லை. இவர்கள் துன்புறுத்தப்பட்டனர்; பட்டினியால் வாடி உயிர் துறக்கப்பட்டனர்; பலர் பிணிகளுக்கு இரையாயினர். ஜப்பானியர்களின் வெறிச் செயல்களைச் சர்ச்சில், 'மிருகத் தனமானவை, அவர்கள் புரிந்த அர்த்தமற்ற கொடுமைகள் என்று வருணித்தார். ஹிட்லர் அழிக்கப்பட்ட பின் பிரிட்டனின் முழுப் பலமும் ஜப்பானின் நகரங்களையும், ராணுவத்தளங் களையும் எரித்துப் பொசுக்குவதில் ஈடுபடுத்தப்படும் என்றும் அவர் எச்சரித்தார்.

### இரண்டாம் கெட்டிஸ்பர்க்

1943ஆம் ஆண்டு மே திங்கள் 11ஆம் நாளில் சர்ச்சில் மீண்டும் ரூஸ்வெல்ட்டைச் சந்தித்தார். இந்த முறை ஜெர்மன் படைகள் டியூனிஸியாவில் சரணடைந்து விட்டதாகவும், அச்சு நாடுகளிடமிருந்து அனைத்து வட ஆப்பிரிக்காவும் மீட்கப்பட்டு விட்டதாகவும் செய்திகள் அவருக்குக் கிடைத்தன. அவர் முன்னொரு சமயம் அமெரிக்காவிற்கு வருகை தந்தபோது ஜெர்மன் படைகள் ருஷ்யாவிற்குள் வெற்றி மமதையுடன் புகுந்து கொண்டிருந்தன. ருஷ்யர்கள் மகத்தான முறையில் தற்காப்பு ஏற்பாடுகளைச் செய்து எதிரிகளை விரட்டிக் கொண்டிருந் தார்கள். சர்ச்சில் வட ஆப்பிரிக்காவில் ஆங்கிலோ-அமெரிக்கப் படைகள் பெற்ற வெற்றிகளைப்பற்றி அமெரிக்க காங்கிரஸில் உரையாற்றினர். 'இரண்டாம் உலகப் போரின் கெட்டிஸ்பர்க் களம்' வெல்லப்பட்டு விட்டதென்றும், இறுதி வெற்றி அண்மித் திருக்கிற தென்றும் சர்ச்சில் குறிப்பிட்டார். வரும் வழியில் சர்ச்சில் வட ஆப்பிரிக்காவில் ஈட்டனைச் சந்தித்து, டிகாலிக்கும், கிரோடுவுக்கும் இடையில் விச்சி அரசிடமிருந்தும் நாஜிகளிட மிருந்தும் மீட்கப்பட்ட ஃபிரெஞ்சுப் பகுதிகளை நிர்வகிப்பதுபற்றிப்

பேச்சு வார்த்தைகளைத் தொடங்கி வைத்தார். இங்கிலாந்து திரும்பியதும் ஃபிரஞ்சுத் தலைவர்களுக்குள் ஏற்பட்ட உடன்பாடு பற்றிக் காமன்ஸ் அவைக்கு அவர் அறிவித்தார்.

சர்ச்சில் வாஷிங்க்டனில் இருந்தபோது வெர்ஜினியாவில் ஹாட் ஸ்பிரிங்க்ஸ் (Hot Springs) என்ற இடத்தில் முக்கியமான தொரு மாநாடு கூடிற்று. அங்கே நாற்பத்தொன்பது நாட்டுப் பிரதிநிதிகள் போர் முடிவுற்றதும் உலகத்தின் உணவு வளங்களைத் திரட்டி, மனித குலத்தைப் பட்டினியிலிருந்து பாதுகாப்பதெனத் தீர்மானம் கொண்டு வந்தனர். போரினால் பாதிக்கப்பட்ட நாடுகளுக்குப் புது வாழ்வு அளிப்பது பற்றியும் முடிவுகள் செய்யப் பட்டன. ஜூன் 11ஆம் நாளன்று ஐக்கிய நாடுகளின் நிவாரணப் புது வாழ்வு நிர்வாக உடன்பாட்டு அறிக்கை வெளியிடப்பட்டது. ஜூன் 30ஆம் நாளில் 'ஹிட்லர் வீழ்த்தப்பட்டதும் ஜப்பானை நசுக்குவதில் பிரிட்டன் மும்முரமாக ஈடுபடும்' என்று சர்ச்சில் அறிவித்தார். நேச நாடுகளுக்குச் சாதகமாகவே போரில் திருப்பமும் ஏற்பட்டது. ஜூலையில் ஜெர்மன் படைகள் மீண்டும் ருஷ்யாவைத் தாக்கிப் பின்னடைந்தன. நேசப்படைகள் மத்திய தரைக் கடல் பகுதியில் சிசிலித் தீவைத் தாக்கின. ஐந்தே வாரங்களில் தீவு கைப்பற்றப்பட்டவுடன் அங்கு எஞ்சியிருந்த அச்சுப் படைகள் சரணடைந்தன. ஜூலை 25ஆம் நாளில் முசோலினி வீழ்ந்தார். அத்துடன் ஃபாஸிச ஆட்சியும் வீழ்ந்தது.

ஆகஸ்டில் சர்ச்சிலும், ரூஸ்வெல்ட்டும் கனடாவில் சந்தித் தார்கள். இவர்கள் இருவரும் ஸ்டாலினும் விரைவில் சந்திக்க வேண்டுமென்று ஏற்பாடாயிற்று. போர் முடிவுற்ற பின்னரும் அமெரிக்காவும், பிரிட்டனும் ஒத்துழைக்க வேண்டுமென சர்ச்சில் ஹார்வர்டில் ஆற்றிய உரையில் குறிப்பிட்டார். இரு நாடுகளின் பாதுகாப்பிற்கு மட்டுமின்றி உலகத்தின் அமைதிக்கே அமெரிக்க-பிரிட்டிஷ் நீடித்த கூட்டுறவு அவசியமென்று அவர் வலியுறுத் தினார். செப்டம்பர் 3ஆம் நாளில் இத்தாலி தாக்கப்பட்டது. அரசர் விக்டர் இமானுவல், பெடாக்லியோ (Badoglio) தலைமை யில் அமைந்திருந்த புதிய இத்தாலிய அரசு உடனடியாகச் சமரசம் செய்து கொண்டது. ஆனால், இத்தாலியில் இருந்த ஜெர்மன் படைகள் மட்டும் போரைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தன. பால்கனில் யூகோஸ்லாவியப் படைகள் ஜெர்மனிக்குத் தொல்லை கொடுத்தன. அசோர்ஸ் (Azores) தீவுகளைப் போர்த்துகல் பிரிட்டனுக்குப் படைத்தளமாக வழங் கியது. அக்டோபர் இறுதியில் அமெரிக்கா, மூன்று வல்லரசுகள்

மாநாட்டில் கலந்து கொண்டது. மாஸ்கோவில் நடந்த இந்த மாநாட்டில் வல்லரசுகள் போர்த் திட்டங்கள், அமைதியின் குறிக்கோள்கள், வருங்காலக் கூட்டுறவு பற்றித் தெளிவான உடன்பாடு கொண்டன. நவம்பரில் யூக்ரேனிலுள்ள முக்கிய நகரமான கீவ் (Kiev) ருஷ்யா வசமாயிற்று. ஹிட்லரின் இறுதித் தோல்வி உறுதியாகி விட்டது.

நேச நாடுகளை ஒன்று திரட்டி ஒன்றுபட்ட செயல் திட்டங்களையும், உடன்பாடுகளையும், தந்திரங்களையும் உருவாக்குவதில் சர்ச்சில் மேற்கொண்ட பயணங்கள் பெரும் பயன் விளைவித்தன. 1943ஆம் ஆண்டின் இறுதியில் பல்வேறு மாநாடுகள் இதன் விளைவாக நிகழ்ந்தன. நவம்பர் 22ஆம் நாளன்று கெய்ரோவில் சர்ச்சிலும், ரூஸ்வெல்ட்டும், ராணுவ, தூதரகத் துணைவர்களுடன் சந்தித்தார்கள். தூரக் கிழக்கு உட்பட எல்லாக் கேந்திரங்களிலும் ஒத்துழைப்புத் திட்டங்கள் வகுக்கப்பட்டன. 1895ஆம் ஆண்டு முதற்கொண்டு ஜப்பான் ஆக்கிரமித்திருந்த பகுதிகள் யாவற்றையும் பறிமுதல் செய்ய வேண்டுமென்று முடிவு செய்யப் பட்டது. ரூஸ்வெல்ட்டும், சர்ச்சிலும், டெஹ்ரான், சென்று ஸ்டாலினைச் சந்தித்தனர். மூன்று வல்லரசுகளும் விடுத்த கூட்டு அறிக்கையில் வருங்கால ஒத்துழைப்புப் பற்றியும், போர்த் திட்டங்கள் பற்றியும் திட்டவட்டமான முடிவுகள் குறிப்பிடப் பட்டிருந்தன. 'நிலத்திலும், நீரிலும், வானிலும் நாம் ஜெர்மனியை அழிப்பதை எந்தச் சக்தியும் தடுத்து நிறுத்த முடியாது'[1] என்று அறிக்கையின் இறுதி வாக்கியம் கூறியது. ரூஸ்வெல்ட்டும், சர்ச்சிலும் மீண்டும் கெய்ரோவிற்குத் திரும்பி துருக்கிக் குடியரசுத் தலைவரைச் சந்தித்து அந் நாட்டுடன் நட்புறவை ஏற்படுத்திக் கொண்டனர்.

இடைவிடாத உழைப்பின் காரணமாக சர்ச்சிலின் உடல் நலம் குன்றியது. நிமோனியா குளிர் ஜுரம் அவரைப் பீடித்துக் கொள்ளவே, அவரது உடல்நலம் பற்றி உலகமே கவலை கொள்ளத் தொடங்கியது. நல்ல காலமாகப் புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டிருந்த சில புதிய மருந்துகளின் விளைவால் பெருந் தலைவரின் அரும் உயிர் காப்பாற்றப்பட்டது. அவருக்கு ஆபத்தில்லை என்பதை அறிய உலகமே மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியது. சில நாட்கள் ஓய்வு கொண்டபின் மீண்டும் 1944ஆம் ஆண்டு ஜனவரியில் லண்டன் திரும்பி, சர்ச்சில் பணிகளைத் தொடர்ந்து

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 360.

கவனித்தார். ஆங்கிலோ-அமெரிக்கப் படைகள் ஹிட்லரின் 'ஐரோப்பியக் கோட்டையை'த் தகர்க்க முடிவு செய்திருந்தன.

ஜெர்மனியின் தொழில் நகரங்கள் மீதும், வட ஃபிரான்சின் விமானத் தளங்கள் மீதும் தீவிரமான குண்டுவீச்சு நடந்தது. பெர்லின் மீது 8000 பவுண்டு எடையுள்ள குண்டுகள் வீசப் பட்டன; ஹாம்பர்க். டஸல்டார்ஃப், கோலோன், ஃபிராங் போர்ட், மான்ஹீம், லூட்வீக் ஷாபன், நீயூரெம்பர்க் ஆகிய நகரங்கள் குண்டுவீச்சுக்கு இரையாகி அழிந்து கொண்டிருந்தன. அமெரிக்க விமானத் தாக்குதல்களினுல் ஜெர்மனியின் போர்த் தளவாட உற்பத்தி தடைப்பட்டது. ஐரோப்பாவிற்குள் நேசப் படைகள் நுழைவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. எதிரியின் முகாம்கள், சாலைகள், ரயில் வழிகள். விமான தளங்கள், பாதுகாப்பு ஏற்பாடுகள் யாவும் தகர்த்துத் தரைமட்டமாக்கப் பட்டன. எனினும் வட ஃபிரான்சில் ஜெர்மன் காப்பரண்களைக் கடந்து முன்னேறுவது அவ்வளவு எளிதன்று என்பதைச் சர்ச்சில் அறிந்திருந்தார். சிறைப்பட்ட ஐரோப்பிய கைதிகளைக்கொண்டு ஹிட்லர் மிக வன்மையான தடுப்பு அரண்களை உருவாக்கி யிருந்தார். மேலும், நேசப்படைகள் ஐரோப்பாவைத் தாக்கு வதற்கு முதலில் துறைமுகங்களைத் தான் கைப்பற்ற முயல் வார்கள் என்பதும் ஹிட்லருக்குத் தெரியும். அதனைத் தடுக்கவும் அவர் தக்க ஏற்பாடுகளைச் செய்யத் தவறவில்லை.

ஆனுல், நேச வல்லரசுகள் எதிரியைத் திறந்த கடற்கரை களில் தாக்குவதற்கு முடிவு செய்தன. மிதக்கும் துறைகளைக் கொண்டு செய் துறைமுகங்கள் அமைக்கப்பட்டன. இது அதிசயிக்கத்தக்க ஓர் புதுமையான கண்டுபிடிப்பு. சர்ச்சிலுக்குப் புதுமைகள் என்ருல் சொல்ல வேண்டுமா? அவரது முயற்சியால் செர்பூர்க் (Cherbourg) லா ஹாவ்ரே (La Havre) என்ற இடங்களை இணைத்து இரு துறைகள் உருவாக்கப்பட்டன. அவற்றின் மூலம் பிரிட்டிஷ், அமெரிக்கப் படைகளை நினைத்த நேரத்தில் மறுகரையில் இறக்கிவிட முடியும். 'மல்பெரி செய் துறைகள்' (Mulberry Harbours) என்ற இந்த மிதக்கும் படகுகள் மிகப் புதுமையான சாதனைகளாகக் கருதப்பட்டன. இந்த அற்புதத்தின் காரண கர்த்தர் சர்ச்சில் என்பதை இங்கே குறிப் பிடத் தேவையில்லை. இது உருவாக்கப்பட்ட நிலையில் இது பற்றிய இரகசியத்தைப் பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் அறிந்திருந்தும் இரகசியம் ஒரு சிறிது கூட எதிரிக்குத் தெரிய வில்லை.

### ஜெர்மனி அடைந்த அதிர்ச்சி

1942ஆம் ஆண்டு ஜுன் 5ஆம் நாள் நள்ளிரவில் நேச நாட்டுப் படைகள் நார்மண்டியின் கரையில் இரவோடு இரவாகக் கொண்டு இறக்கப்பட்டன. விடுதலைப்படைகள் கரையைத் தாக்கத் தொடங்கியபோது எதிரி அடைந்த அதிர்ச்சிக்கு அளவில்லை. நேசப்படைகள் நார்மண்டியில் காலூன்றுதவாறு ஜெர்மன் படைகள் ஆவேசமாகப் போராடின. 'மிதக்கும் பாலங்கள்' தகர்க்கப்பட்டன. எனினும், நேசநாட்டு ஆகாயப் படைகள் வட ஃபிரான்சின் விமான தளங்களை நாசம் செய்தன. ஆகஸ்டு திங்களில் ஜெர்மன் படைகள் சீயன் ஆற்றிற்குத் தெற்கே சுற்றி வளைக்கப்பட்டன. விடுதலை பெற்ற ஃபிரஞ்சுப் படைகள் பாரிசைக் கைப்பற்றின. அமெரிக்காவின் மூன்றும் படையினர் பாரிசிற்குத் தெற்கே விரைந்து லக்ஸம்பர்க்கையும், ஆல்சேய்ஸ் லோரெய்ன் (Alsace-Lorraine) பகுதியையும் நோக்கி முன்னேறின. இதற்கிடையில் பிரிட்டிஷ் படைகள் பெல்ஜியத்திற்குள் புகுந்து பிரஸல்ஸ் (Brussels) நகரைக் கைப்பற்றுமாறு முன்னேறின. ஜெர்மனியர் (V. I.) என்ற பறக்கும் குண்டுகளைப் பொழிந்து இலண்டன் நகரத்தில் பெரும் நாசம் விளைவித்தார்கள்.

சர்ச்சில் ஃபிரான்சில் இருந்து படைகளின் முன்னேற்றத்தைக் கவனித்துக் கொண்டிருந்தார். ஜெனரல் ஐசனோவரும், ஜெனரல் மான்ட்கோமரியும் அவருடன் போர்முனைகளைச் சுற்றிப் பார்வை யிட்டு, வீரர்களுக்கு உற்சாகமும், உணர்ச்சியும் ஊட்டி வந்தனர். ஆகஸ்டில் அவர் இத்தாலிக்குச் சென்று மார்ஷல் டிட்டோவுடன் கலந்துபேசி இத்தாலிய முனைகளைப் பார்வையிட்டார். ஆகஸ்ட்டு 15ஆம் நாளன்று பிரிட்டிஷ், அமெரிக்க, ஃபிரான்ஸ் நாட்டு முப்படைகளும் தெற்கு ஃபிரான்சில் 'ஆபரேஷன் அன்வில்' (Operation Anvil) என்ற தாக்குதல் திட்டத்தை நிறைவேற்றி ஞர்கள். ஆகஸ்டு இறுதிக்குள் அகில ஃபிரான்ஸ் நாடும் ஜெர்மனியிடமிருந்து விடுதலை பெற்றன. இதுவரை இரகசிய மாகப் பிரிட்டனின் உதவி பெற்று வந்த ஃபிரஞ்சு கொரிலாக்கள் வெளிப்படையாகத் தாக்குதல் செய்து விச்சி அதிகாரிகளை வீழ்த்திய போது ஃபிரான்சில் ஜெர்மனியின் ஆதிக்கம் முழுவதும் மறையத் தொடங்கியது. செப்டெம்பருக்குள் லயன்ஸ், போர்டோ உட்பட தென் ஃபிரான்ஸ் முழுவதும் விடுதலை பெற்றது. இதற்குள் பிரிட்டன் பிரஸெல்ஸ் நகரையும் அமெரிக்கர் வெர்டூனையும் கைப்பற்றினார்கள். இவ்வாறு பிரிட்டன், அமெரிக்கா, பிரான்ஸ் மற்றும் நேசப் படைகள் மேற்கில் பெற்ற வெற்றிகளுக்கு இணையாகத் தென்கிழக்கு ஐரோப்பாவில் பிரமாண்டமான வெற்றிகள் குவிந்தன.

இத்தாலியிலும், பிரிட்டிஷ் அமெரிக்கத் துருப்புகள் விடா முயற்சியுடன் முன்னேறின. ஜூன் 4ஆம் நாளன்று நேசப் படைகள் ரோம் நகருக்குள் புகுந்தன. இரு வாரங்களில் லெக் ஹார்ன், ஃபிளாரன்ஸ் நகரங்கள் வீழ்ந்தன. நேசப் படைகள் 'கோதிக் அரணை' நோக்கி விரைந்து கொண்டிருந்தன. இவ் வரண் போ நதிப் பள்ளத்தாக்கைப் பாதுகாக்குமாறு ஹிட்லர் அமைத்திருந்திருந்த வன்மையான ஏற்பாடாகும். ருஷ்யாவும் யூக்ரேனை நோக்கி முன்னேறி வந்தது. ஒடெஸா, செபாஸ்ட்பூல், கிரிமியா ஆகிய பகுதிகள் கைப்பற்றப்பட்டதுடன் ருமேனியாவிற் குள்ளும் ருஷ்யப் படைகள் புகுந்தன. பால்டிக் கடல் முதல் கருங்கடல் வரை செம்படையினர் முன்னேறி பால்டிக் நாடு களிலிருந்து ஜெர்மானியர்களை வெளியேற்றினர். கிழக்குப் போலந் திற்குள் புகுவதற்கும், கிழக்கு பிரெஷ்ய எல்லைக்குள் ஊடுறு வதற்கும் ருஷ்யர்கள் முயன்று கொண்டிருந்தனர், ஆகஸ்டு திங்களின் தொடக்கத்தில் வார்ஸா நகரம் வீழ்ந்து விடும் போல் தோன்றியது. ஆனால், விரைவாக முன்னேறிய ருஷ்யப் படையின் பின்னணியை ஜெர்மன் படைகள் வளைத்துக் கொள்ளும் அவல நிலை ஏற்பட்டது. இத்துடன் மேலும் ஐந்து மாதங்களுக்கு ருஷ்யப் படைகளின் முன்னேற்றம் தடைப்பட்டது. இறுதியாக ருஷ்யப் படைகள் வார்ஸாவைத் தாக்கிய போது அதன் மக்கள் தொகை குறைந்து அழிவே காணப்பட்டது.

1944ஆம் ஆண்டு ஆகஸ்டில் பால்கன் நாடுகளில் ஜெர்மனி யின் ஆதிக்கம் முடிவுற்றது. ருமேனியா ஜெர்மனி மீது போர் தொடங்கியது. ருஷ்யப் படைகள் புகாரெஸ்ட் நகருக்குள் புகுந்தன. பல்கேரியா போரிலிருந்து விலக முயன்றது. செப்டம் பரில் ருஷ்யா பல்கேரியா மீது போர் தொடுத்தது: அக்டோ பரில் நேசப்படைகள் கிரீஸ் நாட்டில் வந்திறங்க, பிரிட்டிஷ் துருப்புகள் ஏதன்ஸ் நகருள் புகுந்தன. இதற்குள் தங்களை ஹிட்லரிடமிருந்து விடுவிக்குமாறு ஹங்கேரி ருஷ்யாவை வேண்டிக் கொண்டது. அக்டோபர் 20ஆம் நாளில் ருஷயப் படைகள் யூகோஸ்லாவியாவின் தலைநகரான பெல்கிரேடை வந்தடைந் ததும், பால்கன் நாடுகளில் எஞ்சியிருந்த ஜெர்மன் படைகள் வாபஸ் பெறத் தொடங்கின, ஃபின்லாந்து ருஷ்யாவுடன் சமரசம் செய்துகொண்டவுடன் ருஷ்யப்படைகள் நார்வேயின் எல்லையை நோக்கி விரைந்தன. ஆயிரம் ஆண்டுகளுக்கு யாரும் அசைக்க முடியாதென்று ஹிட்லர் பெருமையடித்துக் கொண்டி ருந்த ஜெர்மன் பேரரசு சிதையத் தொடங்கியது. ஐந்துமாத காலத்திற்குள் அடுக்கடுக்காய் குவிக்கப்பட்ட இத்தனை வெற்றி

களும் சர்ச்சில் தீட்டிய திட்டங்கள் யாவும் சரியென்பதை மெய்ப்பித்தன.

இத்தகைய வெற்றிப் பெருமிதத்தின் நடுவே சர்ச்சில் செப்டம்பர் திங்களில் கனடாவுக்குச் சென்ருர். அங்கே மேலும் போரைத் தொடர்ந்து நடத்துவது பற்றி ஆலோசனை நடத்த ஜனதிபதி ரூஸ்வெல்ட்டும் வந்திருந்தார். போர் உச்ச நிலையில் இருந்த காரணத்தால் ருஷ்யாவை விட்டுவர முடியாமைக்காக ஸ்டாலின் வருந்திஞர். எனினும், குவிபெக் மாநாடு முடிவுற்றதும் சர்ச்சில் மாஸ்கோவில் ஸ்டாலினைச் சந்தித்து ஹிட்லரின் வீழ்ச்சிக்குப்பின் உலகை எதிர்நோக்கியுள்ள பிரச்சினைகளைப்பற்றிப் பேச்சுவார்த்தைகள் நடத்திஞர். இதற்குள் ஜெர்மனியை நேரடியாகத் தாக்குவதற்காக பிரிட்டிஷ் விமானப்படையினர் நிஜ்மெஜக் நகரில் இறக்கப்பட்டனர். ஆனல், கால நிலை காரணமாக இந்த முயற்சிகள் முழு வெற்றி தரவில்லை. அக்டோபரிலும், நவம்பரிலும் பிரிட்டிஷ், கனடியப் படைகள் ஆன்ட்வெர்ப் நகரையும், அமெரிக்க ஃபிரஞ்சுப்படைகள் அல்ஸேய்ஸ் லோரேன் பகுதியையும் காலிசெய்வதில் முனைப்புக் காட்டினர்கள்.

இதற்குள் ஜெர்மன் படைகள் பால்கனிலிருந்து வெளியேறியதும் பால்கன் நாடுகள் ஒன்றேடொன்று சர்ச்சரவு செய்யத் தொடங்கின. ஆனல், அங்கிருந்த பிரிட்டிஷ் துருப்புகள் புதிதாக நிறுவப்பட்டிருந்த கிரேக்க நாட்டு அரசிடம் அமைதி நிலவுமாறு வேண்டிக்கொண்டன. சர்ச்சில் 1944ஆம் ஆண்டு கிறிஸ்மஸ் நாளில் ஏதென்ஸ் நகருக்குச்சென்று பூசல்களை நல்ல முறையில் முடிவுசெய்து அமைதி நிலவ வழிசெய்தார். மேற்கு முனையில் நேசப்படைகளின் முன்னேற்றம் கால நிலையினல் சிறிது தடையுற்றது. ஆனல், அமெரிக்கப்படைகளின் விடாமுயற்சியால் எதிரி நிகழ்த்திய இறுதித் தாக்குதல் தோல்வியில் முடிவுற்றது. 1945ஆம் ஆண்டு ஜனவரியின் கடுமையான காலநிலையில் ருஷ்யர்கள் எதிர்தாக்குதலைத் தொடங்கினர். இவர்களின் படையெடுப்பின் முன் எதிரிகள் நிலை குலைந்தனர்.

### யால்டா மாநாடும் இறுதித் தாக்குதலும்

1945ஆம் ஆண்டு பிப்ரவரி 4ஆம் நாளன்று பெல்ஜியத்திலிருந்து ஜெர்மன் படைகள் இறுதியாக வெளியேறியபோது, யால்டாவில் மாநாடு ஒன்று கூடிற்று. இங்கே சந்தித்த பெருந்தலைவர்களாகிய ஸ்டாலின், ரூஸ்வெல்ட், சர்ச்சில் ஆகிய மூவரும் ஹிட்லரை இறுதியாக வீழ்த்தி ராணுவ நடவடிக்கைகளை

மாபெரும் முடிவிற்குக் கொண்டு வந்து வெற்றிவாகை சூடுவது மட்டுமின்றி, ஜெர்மனியின் சரணுகதியினைத் தொடர்ந்து அந் நாட்டை ஆக்கிரமித்துக் கட்டுப்படுத்துவது பற்றியும், நாஜிக் கொள்கையின் சுவடு தெரியாமல் அழிப்பது பற்றியும் விரிவாகப் பேச்சுவார்த்தைகள் நடக்கிஞர்கள். மேலும், ஐக்கிய நாட்டு ஸ்தாபனத்தின் அமைப்பு முறைகளையும், போருக்குப்பின் ஐரோப்பாவில் அமைதியை நிறுவுவது பற்றியும், தலைவர்களுக்குள் உடன்பாடு ஏற்பட்டது. ஆனுல், சர்ச்சிலின் வற்புறுத்துதல்களுக்கு எதிராக ரூஸ்வெல்ட், ஸ்டாலினுக்கு வழங்கிய சிலசலுகைகளின் காரணமாகப் பின்னர் சீனு, கொரியா, போலந்து, பால்கன், ஜெர்மனி, ஆஸ்திரியா ஆகிய நாடுகளில் குழப்பங்கள் மேலோங்கி ஐரோப்பாவில் அமைதி ஏற்படுவதில் கால தாமதம் ஏற்பட்டது.

மார்ச்சு திங்களில் ஜெர்மனியை இறுதியாக வீழ்த்துதற்குத் தாக்குதல் தொடங்கியது. பிப்ரவரியில் அமெரிக்கப் படைகள் ஏற்கெனவே ரைன் பள்ளத்தாக்கில் புகுந்து கொண்டிருந்தன. மார்ச்சு 8ஆம் நாளன்று கொலோன் நகரம் வீழ்ந்தது. பிரிட்டிஷ், கனடா படைகள் ரைன் ஆற்றின் மேற்குக்கரையில் முன்னேறிக் கொண்டிருந்தன. இவ்வாறு எம் மருங்கிலும் நேசப் படைகள் சூழ்ந்துகொள்ளவே எதிரியின் வீழ்ச்சி முற்றுப்பெறும் நிலையில் இருந்தது. ஏப்ரல் இறுதிக்குள் எதிரிப்படையின் இருபத்தொரு பிரிவுகள் சுற்றி வளைக்கப்பட்டன. இதற்குள் கிழக்கிலிருந்து ருஷ்ய படைகள் விரைந்தன. டான்ஸிக், கோனிஸ்பர்க், வியன்ஞ போன்ற பெருநகரங்கள் வீழ்ந்துவிட்டன. இத்தாலியில் நேசப்படைகள் போலோஞ்ஞாவைக் கைப்பற்றிக் கொண்டன. ஜெர்மன் விமானப்படையின் அழிவு முற்றுப்பெற்ற நிலையில் பிரிட்டனில் இருட்டடைப்புக் கட்டுப்பாடுகள் கூட ரத்து செய்யப்பட்டன. ஏப்ரல் 24ஆம் நாளன்று ஜெர்மன் தலைவர் ஹிம்லர் கிரேட் பிரிட்டன், அமெரிக்க அரசாங்கங்களிடம் சரணடையத் தயாராக இருந்தார். ஆனுல் ருஷ்யப்பபடைகள் பர்லின் நகரை நோக்கி விரைவாக முன்னேறிக் கொண்டிருந்தமையாலும், பிரிட்டிஷ் படைகள் பிரமென் (Bremen) நகரையும் அமெரிக்கப்படைகள் டான்யூப்பையும் நெருங்கி விட்டதாலும் ஜெர்மனியின் முடிவு உறுதியாகவிட்டது.

மார்ச்சு, ஏப்ரல் மாதங்களில் நிகழ்ச்சிகள் மிக விரைவாக முன்னேறின. 1940ல் நாஜிகளின் வெற்றிகள் எவ்வளவு விரைவாக இருந்தனவோ, அதைவிடப் பன்மடங்கு 1945ல் அவர்களுடைய தோல்விகள் விரைவாக நிகழ்ந்தன. மார்ச்சு இறுதியில் ஜெர்மன்

V 2 ராக்கெட் குண்டுகள் இலண்டன்மீது வீசப்பட்டன. இதுபற்றிப் பாராளுமன்றத்தில் அறிக்கை சமர்ப்பிக்குமாறு சர்ச்சிலைக் கேட்டபோது 'அவை வீசப்பட்டு ஓய்ந்துவிட்டன' என்று பதிலிறுத்தார். ஏனெனில், அதற்குள் கிழக்கு முனையில் ஜெர்மன் படைகள் சின்னாபின்னமாகச் சிதறிக்கொண்டிருந்தன. இத்தாலியும் வெரோனாவும், மிலானும் விடுதலை பெற்றன. ஃபிரான்ஸிலிருந்து தப்பியோட முயன்ற மார்ஷல் பெட்டேய்ன் கைது செய்யப்பட்டார். ஏப்ரல் 28ஆம் நாளன்று முசோலினி கைப்பற்றப்பட்டுக் கொல்லப்பட்டார். அவரது உடல் மிலான் நகரில் தொங்கவிடப்பட்டது. மே 2ஆம் நாள் இத்தாலியில் ஜெர்மன் படைகள் நிபந்தனையின்றிச் சரணடைந்தன. எதிர் நோக்கிவரும் ருஷ்யப் படைகளிடமிருந்து தப்ப முடியாத ஹிட்லர் தற்கொலை செய்துகொண்டார். மே முதல் நாளன்று பெர்லின் நகரம் சரணடைந்தது. 4ஆம் நாள் வடமேற்கு ஐரோப்பாவில் அகில ஜெர்மன் படைகள் ஜெனரல் மான்ட் கோமரியிடம் சரணடைந்தன.

# 20. புயலுக்குப்பின் அமைதி

அகில உலகை அலைக்கழித்த போர் முடிவுற்றது. பொய்யாலும், பித்தலாட்டத்தாலும், கொலையாலும், கொடுமையாலும் மனித உயிர்களைப் பலிகொண்ட இழிவான கொடுங்கோன்மை அழிந்தது. போரினால் ஏற்பட்ட அழிவுகளின் மத்தியில் பிரிட்டிஷ் தலைநகரான இலண்டனில் வெற்றி விழா கொண்டாடப்பட்டது. ஒயிட்ஹால் மன்றத்தின் முன்மாடியில் பிரிட்டிஷ் மக்கள் தமக்கு வெற்றி தேடித்தந்த வெற்றித் திருமகனைக் கண்டு ஆரவாரித்தனர். 'வாழ்க வின்ஸ்டன்' என்று வாழ்த்தொலி எழுப்பினர்;

'மனவுறுதியை இழக்காதீர்! வன்முறைக்கும், கொடுங்கோன்மைக்கும் இடம் கொடாதீர்!'

'முன்னேறிச் செல்வீர்! தேவையானால் தோல்வியின்றிச் செத்துமடிவீர்!'

என்று வின்ஸ்டன் கூறி வந்த வீரமொழிகளை அவர்கள் மறந்து விடவில்லை.[1]

வெற்றி விழா முடிந்ததும் பிரிட்டிஷ் அரசியல் வானில் விரைவான மாற்றங்கள் நிகழ்ந்தன. போர் முற்றிலும் முடியவில்லை. ஆசிய முனையில் இன்னும் ஜப்பான் முறியடிக்கப்படவில்லை. ஆனால், ஜப்பான் தோல்வியைப்பற்றி எவ்வித ஐயப்பாடும் இருக்கவில்லை; அமைதியும், போருக்குப்பின் உலக நிலையும் பெருந்தலைவர்களின் மனத்தைக் கவர்ந்தன. 1935ஆம் ஆண்டிற்குப்பின் பொதுத் தேர்தல் நடைபெறவில்லை. போர் முடிந்ததும் தேர்தல் நடைபெறுமென சர்ச்சில் அறிவித்திருந்

[1] Churchill—His Life and Times, Malcolm Thomson, p. 362.

தார். தொழிற் கட்சியின் போர் முடிந்து புதுவாழ்வை அமைக்கவும், அமைதிக்கால உள்நாட்டுக் கொள்கைபற்றியும் திட்டங்களைத் தயாரித்திருந்தனர். இவற்றை டோரிகளுடன் கூட்டுச் சேராமல் தனிப்பட்ட முறையில் செயல்படுத்த விழைந்தனர். கன்சர்வேடிவ் கட்சித் தலைவர்களின் வெற்றி வாய்ப்புகள் சிறப்பாக இருக்கவில்லை. சுதந்திர ஜனநாயக நாடுகளில் பொதுவாகப் போர்க்காலத்தில் பதவியில் இருக்கும் கட்சி போர் முடிவுற்றதும் எதிர்க்கட்சியால் தோற்கடிக்கப்படுவது நடைமுறையாகும். இவ்வாறு போயர் யுத்தம் முடிவுற்றதும் டோரிகள் பதவி இழந்தனர். முதல் உலகப்போரின் பின் லிபரல் கட்சி தோற்றது. இதே போல் அமெரிக்காவில் ஜனாதிபதி உட்ரோ வில்சனும், ஃபிரான்சின் பிரதமர் கிளமென்ஸோவும் பதவி விலக நேரிட்டது.

1900ஆம் ஆண்டில் போர் நடக்கும்போதே டோரிகள் 'காக்கித் தேர்தலை' நடத்திப் பிரமாதமான வெற்றி கண்டிருந்தார்கள். அதுபோலவே 1918ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தலிலும் அவர்கள் வெற்றி குவித்தார்கள். இதன் முக்கிய காரணம் வெற்றி வீரராகத் திகழ்ந்தவர் பிரதமர் லாயிட் ஜார்ஜ். ஜப்பானுடன் போர் முடிவுறாத நிலையில் கன்சர்வேடிவ்கள் தேர்தலை நடத்தி இருந்தால் ஒருவேளை அவர்களின் பதவிகாலம் நீடித்திருக்க முடியும். ஆனால், புதிய வாக்காளர் பட்டியல் தயாரிக்கப்பட்டு வந்த நிலையில், தேர்தலைத் துரிதப்படுத்துவதைத் தொழிற்கட்சியினர் அனுமதிக்கமாட்டார்கள். எனினும் போர் முடிவுக்கும், புதிய பட்டியலின் வெளியீட்டிற்கும் காத்திராமல் தேர்தலை நடத்துவதெனச் சர்ச்சில் முடிவு செய்தார். அவரே கன்சர்வேடிவ் கட்சியின் தலைவராகத் தேர்தலில் போட்டியிடவும் சம்மதித்தார். ஜப்பானுடன் போர் முடியும்வரை கூட்டமைச்சரவை நீடிக்க உதவுமாறும் அட்லியின் இசைவு கேட்டும் எழுதினார். ஆனால், அட்லியும் தொழில் கட்சித் தலைவர்களும் காலவரையின்றி கூட்டமைச்சரவை நீடிப்பதை விரும்பவில்லை. அக்டோபரில் பாராளுமன்ற அமர்வு முடியும்வரை கூட்டமைச்சரவை நீடிப்பதற்குத் தொழிற்கட்சித் தலைவர்கள் உடன்பட்டனர். அதற்குள் புதிய வாக்காளர் பட்டியல் தயாராக இருக்கும். கட்சி அடிப்படையில் தேர்தலை நடத்திப் புனரமைப்புப் பணிகளைத் தொடர முடியும். இது பற்றிப் பொதுமக்கள் எண்ணத்தை அறிய பொது வாக்கெடுப்பு நடத்தச் சர்ச்சில் முன் வந்தார். இதற்குத் தொழிற்கட்சி லிபரல் கட்சிகளின் ஆதரவு கிடைக்கவில்லை.

## பொதுத் தேர்தலும் பாட்ஸ்டாம் (Potsdam) மாநாடும்

ஜூலையில் பொதுத்தேர்தல் நடைபெறுமென்று சர்ச்சில் அறிவித்து, மே திங்களில் கூட்டமைச்சரவையைக் கலைத்தார். பாராளுமன்றம் கலைக்கப்படுவதற்குள் பல புரட்சிகரமான மசோதாக்கள் நிறைவேற்றப்பட்டன. இவற்றில் குறிப்பிடத் தக்கவை குடும்பப்படி மசோதா, சமூக ஈட்டுறுதி மசோதா, தேசீய சுகாதாரப் பணி மசோதா ஆகியவையாகும். ஆனால், இவையாவும் தேர்தலுக்கு முன் அமுலாக்கப்பட நேரம் கிடைக்கவில்லை. அரசியல் கட்சிகள் விறுவிறுப்பான தேர்தல் பிரச்சாரத்தைத் தொடங்கினார்கள். தொழிற்கட்சியினர் 'எதிர்காலத்தைச் சந்திப்போம்' என்ற திட்டத்தின்படி பாங்குகள், நிலக்கரிச் சுரங்கங்கள், போக்குவரத்து, மின்சாரம், உருக்குத் தொழில் ஆகியவற்றை நாட்டுடைமையாக்கும் கொள்கைகளுக்கு வாக்குறுதி அளித்தனர், கன்சர்வேடிவ் கட்சியினர் தேசீய ஈட்டுறுதி, உழவுத்தொழில் வளர்ச்சி, சுகாதாரம், கல்வி, வீட்டு வசதிகள், நகர அபிவிருத்தி, நிதித்துறை சீர்திருத்தங்கள் ஆகிய திட்டங்களை ஆதரித்தனர். ஆனால், கன்சர்வேடிவ்களின் திட்டங்கள் யாவும் அனைத்துக் கட்சிகளின் கூட்டமைச்சரவையின் பொதுத் திட்டங்களாக மேற்கொள்ளப்பட்டவைகளே.

கன்சர்வேடிவ் தலைவரான பீவர் ப்ரூக் (Beaverbrook) தொழில் கட்சியினர் போல்ஷிவிக்குகளுடன் கூட்டுச் சேர்ந்துள்ளார்கள் என்ற குற்றச்சாட்டைக் கூற முடியவில்லை. ஏனெனில், சர்ச்சில் ஸ்டாலினுக்கு முழு ஆதரவு கொடுத்துப் போர் முயற்சிகளில் அவருடன் ஒத்துழைத்திருந்தார். ஆனால், பிரிட்டிஷ் சோஷியலிசமும் ஜெர்மனியின் தேசீய சோஷியலிசத்தைப் போன்று கொடுமையானதென்றும், பிரிட்டனிலும் இரகசிய ஒற்றர் படை நிறுவனங்கள் அமைக்கப்படலாம் என்றும் மக்களிடம் பிரச்சாரம் செய்து, டோரிகள் தேர்தலில் வெற்றி பெற முடியும். ஜூன் 4ஆம் நாள் சர்ச்சில் வானொலிப் பேச்சின்மூலம் இதனை மக்களுக்கு எடுத்துச் சொல்லியபோது, நாடு அதிர்ச்சியடைந்தது. வெற்றித் திருமகன் என்ற முறையில் சர்ச்சிலை மக்கள் வணங்கவும் தயங்கவில்லை. ஆனால், இழிவான கட்சிக் காழ்ப்புணர்ச்சிகளுக்கு அவர் இடம் கொடுப்பதை அவர்கள் வரவேற்கவில்லை. வேதனையடைந்த வாக்காளர்கள் சர்ச்சில் அமைதிக் காலத்திற்கு ஏற்ற அரசியல் வல்லுநர் அல்லர் என்றும் எண்ணினார்கள். போர் முடிவுறும்வரை சர்ச்சிலின் சகாக்களாக இருந்த அட்லியும், பெவினும், அலக்சாண்டரும், ஹிட்லரையும், கோயரிங்கையும் போலக் கயவர்களாக இருக்க முடியும் என்பதை

மக்கள் நம்பத் தயாராக இல்லை. சர்ச்சிலின் வானொலிப் பேச்சு மாபெரும் அரசியல் தவறு என்பதில் ஐயமில்லை. வெற்றி விழாவின்போது, சர்ச்சில் வெற்றியை உருவாக்கித் தந்த சிற்பி என்றும், உலகின் உரிமையைக் காத்த வீரர் என்றும் உலக நாடுகள் புகழ்மாலைகள் சூட்டின. ஆனால், சர்ச்சிலின் வானொலிப் பேச்சு புதிய பிரச்சினைகளை உருவாக்கியது. ஜூலை 5ஆம் நாள் தேர்தல் நடைபெற்றது. வெளி நாடுகளில் இன்னும் பிரிட்டிஷ் படைகள் தங்கியிருந்த நிலையில் இங்கிலாந்து நாடெங்கும் அமைதியாகத் தேர்தல் நடத்தியது மகத்தான ஒரு சாதனைதான். மூன்று வாரங்களுக்குப் பின்தான் தேர்தல் முடிவுகள் அறிவிக்கப் படவேண்டியிருந்ததால், சர்ச்சில் சிறிய விடுமுறை எடுத்துக் கொண்டார். மீண்டும் ஓவியம் பொழுது போக்காகக் கை கொடுத்தது.

ஜூலை 17ஆம் நாளன்று சர்ச்சில், அட்லி, ஈட்டன், ஜனாதிபதி ட்ருமென், ஸ்டாலின் ஆகியோர் பாட்ஸ்டாம் மாநாட்டில் சந்தித்தனர். இடையில் தேர்தல் முடிவுகள் வெளியாயின. தொழில் கட்சியினர் நாடெங்கும் மகத்தான வெற்றிகளைக் குவித்தனர். தொழில் கட்சிக்கு உறுதியான பெரும்பான்மை கிடைத்தது. சர்ச்சில் ராஜினாமா செய்தார். அட்லி புதிய பிரதமராகப் பதவி ஏற்றார். இதுவரை எந்தச் சாதாரண மனிதனும் பெற்றிராத நாட்டின் உயர்ந்த கவுரவ விருது சர்ச்சிலுக்கு வழங்கப்பட்டது. ஆனால், சர்ச்சில் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. இதுவரை காமன்ஸ் அவையில் பொதுமக்களின் பிரதிநிதியாகவே இருந்துவந்த சர்ச்சில் தம்மை 'சர் வின்ஸ்டன்' என்று கூறிக்கொள்ள விரும்பவில்லை. ஜப்பான் போர் இன்னும் முடிவுறாத நிலையில் போர்புரிவதை அவர் வெகுவாக விரும்பினார். தேர்தலில் அவர் வெற்றி பெறாவிட்டாலும், அவரது மகத்தான சாதனைகள் அவரைக் கட்சிகளுக்கு அப்பாற்பட்ட நாட்டுப் பெருந்தலைவர் என்ற தனிப்பெரும் நிலைக்கு உயர்த்தின. சர்ச்சிலின் கவனம் பிரிட்டிஷ் பேரரசின் பன்னாட்டுப் பிரச்சினைகளின்பால் திரும்பியது.

கன்சர்வேடிவ்களின் தோல்வியின் விளைவாகச் சர்ச்சிலுக்கு நேச நாடுகளின் அவைகளிலும், குழுக்களிலும் இடம் கிடைக்கவில்லை. பாட்ஸ்டாம் மாநாட்டில் சர்ச்சிலுக்குப் பதிலாக அட்லி கலந்துகொண்டார். பாட்ஸ்டாம் மாநாடு இத்தாலி, ருமேனியா, பல்கேரியா, ஹங்கேரி, ஃபின்லாந்து ஆகிய நாடுகளுடன் உடன்படிக்கைகளைச் செய்யுமாறு வெளிநாட்டு அமைச்சர்களைக் கொண்ட ஒரு குழுவை நிறுவியது. போர் முடி

வுற்றதும் ஜெர்மனியைக் கட்டுப்படுத்துகின்ற அரசியல் பொருளாதார நடவடிக்கைகளையும் மாநாடு விவாதித்தது. ஜெர்மனி தரவேண்டிய இழப்பீட்டுத் தொகைகளும் வரையறுக்கப்பட்டன. கிழக்குப் பிரெஷ்யாவை போலந்திற்கும், ருஷ்யாவிற்கும் பகிர்ந்தளித்தது. போர்க் குற்றவாளிகளை விசாரணை செய்வதற்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இவ்வாறு ஐரோப்பா அமைதியை நோக்கி விரைந்துகொண்டிருக்கும்போது தூரக் கிழக்கில் போரின் முடிவு நெருங்கிக் கொண்டிருந்தது. ஜூலை முழுவதும் ஜப்பானின் பெருநகரங்கள் நேசப் படைகளின் குண்டு வீச்சுக்குப் பலியாகி அழிந்தன. சர்ச்சில், ட்ரூமென், சியாங்காய் ஷேக் ஆகிய மூவரும் ஜப்பான் பணியாவிடில் அந் நாடு அழிக்கப்படுமென்று கூட்டறிக்கை விட்டனர்.

ஆகஸ்டு 6ஆம் நாளன்று ஹிரோஷிமா நகர்மீது அணுக் குண்டு வீசப்பட்டது. நான்கு சதுர மைல்களுக்கு நகரம் சின்னா பின்னமாகியது. தப்பித்தவர்கள்கூட அணுக் கதிரியக்கத்திற்குப் பலியாகி விரைவில் மாண்டனர். அணுக்குண்டின் அபார சக்தியைக் கண்டு வெற்றிப் பெருமிதம் கொண்டவர்கள்கூட அதனுடைய அழிவுச் சக்தியைக் கண்டு அஞ்சவேண்டியதாயிற்று. பேராசிரியர் ருதர்ஃபோர்டு அணுவின் தன்மையை ஆராய்ந்து அறிவித்த நாள் முதல் மனித குலத்தின் நலத்திற்காக அதனைப் பயன்படுத்த அறிவியல் மேதைகள் முயன்று வந்தனர். ஆனால், அணுவின் அழிக்கும் திறனைப் போரில் ஈடுபடுத்தும் முயற்சிகளைப் பிரிட்டன், அமெரிக்கா, ஜெர்மனி ஆகிய நாடுகள் ஆராயத் தொடங்கின. அமெரிக்க பிரிட்டிஷ் முயற்சிகளின் விளைவாக முதல் அணுக்குண்டு நியூமெக்ஸிகோ பாலைவனங்களில் சோதிக்கப்பட்டது. இதன் வெற்றி பாட்ஸ்டாம் மாநாட்டில் கூடியிருந்த தலைவர்களுக்கு அறிவிக்கப்பட்டது. சர்ச்சிலும், ட்ருமெனும் இதனை ஜப்பான் நகர்கள்மீது வீசுகின்ற பெரிய முடிவைச் செய்தனர். ஹிரோஷிமாவிலும், நாகசாகியிலும் அணுக்குண்டுகள் வீசப்பட்டபின் ஜப்பான் நிபந்தனையின்றிச் சரணடைந்தது. இது முதல் அணு ஆராய்ச்சிகள் அறிவியல் மேதைகளால் இரகசியமாகக் காப்பாற்றப்பட்டு வந்தன. இவ்வாறு அறிவு வேட்கை தவறான வழியில் திரும்பி மனித இனத்தை வாழ்வின் ஓரத்திற்கன்று, சாவின் வாயிலில் கொண்டு நிறுத்தியது.

ஆகஸ்டு 15ஆம் நாளன்று ஜப்பானைத் தோற்கடித்த வெற்றி விழா உலகெங்கும் கொண்டாடப்பட்டது. தூரக் கிழக்கில் செய்ய வேண்டிய பணி அதிகமிருந்தது. ஜப்பானியப் படைகள்

மலேயா, சிங்கப்பூர், டச்சு கிழக்கிந்தியத் தீவுகள் பர்மா, சீஞ, கொரியா ஆகிய பகுதிகளை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன. அவைகள் விரட்டியடிக்கப்பட்ட பின்னர் பிரிட்டிஷ், டச்சு, ஃபிரெஞ்சு குடியேற்றப் பகுதிகள் ஜப்பானிய ஆக்கிரமிப்பின் பின்னர் மீண்டும் பழைய நிலையைப் பெறவில்லை என்பது தெரிய வந்தது. பொருளாதாரத் துறையில் அவை அழிவுற்றிருந்தபோதி லும், அரசியல் ரீதியாக அவை இனிமேலும் குடியேற்றப் பகுதி களாக இருக்கும் நிலையில் இல்லை. போர் முடிவுற்றதும் புதிய பாராளுமன்றம் கூடியது. தொழில் கட்சி அமைச்சரவை முழுப் பெரும்பான்மையுடன் பிரிட்டனின் வரலாற்றில் முதல் முறை யாக அரசாங்கத்தை அமைத்ததுடன் உள்நாட்டுச் சீர்திருத் தங்கள் பற்றியும், வெளிநாட்டுக் கொள்கை பற்றியும் தனது திட்டத்தை வெளியிட்டது.

போருக்குப்பின் கூடிய பாராளுமன்றத்தில் சர்ச்சிலுக்கு ஆர்வம் ஏற்படவில்லை. அரசினர், தொழில்களை அரசுடமை யாக்கும் திட்டத்தைத் தீவிரப்படுத்தினர். இந்தத் திட்டங்களைச் சர்ச்சில் விரும்பவில்லை என்ருலும், அவற்றை அவர் முடிவில் எதிர்த்து எவ்விதத் தாக்குதல்களும் செய்யவில்லை. போரிஞல் ஏற்பட்ட சோர்வு புதிய மோதல்களில் அவர் ஈடுபாடு கொள் வதைத் தடுத்தது. உள்நாட்டு அரசியலில் தீவிர ஈடுபாடு அவர் கொள்ளவில்லை. எனினும், 1945ஆம் ஆண்டு நவம்பரில் சர்ச்சில் நிகழ்த்திய பாராளுமன்ற உரையில் போரிற்குப்பின் இங்கி லாந்தில் பொருளாதார விரைவு ஏற்படாததற்குத் தொழில் கட்சியே காரணம் என்று குற்றம் சாட்டிஞர். ஆருண்டுகளாகப் பிரிட்டன் போர் சம்பந்தப்பட்ட உற்பத்தியில் ஈடுபட்டிருந்த தால், போர் முடிந்ததும் அதன் பொருளாதாரநிலை சீர் குலைந் தது. பிரிட்டனின் நகரங்கள் பாழாகிவிட்டன; வெளி நாட்டு முதலீடுகள் யாவும் போர் நடவடிக்கைகளில் ஈடுபடுத்தப்பட்டு கரைந்துவிட்டன. இறுதியில் பிரிட்டன் தன்னையும், உலகத்தை யும் காப்பாற்றிய போதிலும், பொருளாதார ரீதியாக திவா லாகிய நிலைதான் விஞ்சியது. தூரக்கிழக்கு நாடுகளை ஜப்பான் அழித்திருந்தது. அங்கிருந்து வந்துகொண்டிருந்த உணவுப் பொருள்களும், மூலப்பொருள்களும் அழிந்துபட்டன. வெளி நாடுகளின் வாணிகத்தையே நம்பியிருந்த பிரிட்டன் மிகவும் பாதிக்கப்பட்டது. உணவுப் பொருள்களைக்கூட வாங்க முடியாத பரிதாபகரமான நிலை உருவாகியது. கூலி உயருமென்றும், வேலைப்பளு குறையுமென்றும், செல்வம் கொழிக்குமென்றும் தொழிற்கட்சி தந்த வாக்குறுதிகள் மக்களின் ஆவலைத் தூண்டி விட்டிருந்தன. நாடே நிலைகுலையும் தறுவாயில் இருக்கும்போது

வேலைப்பளு எவ்வாறு குறையும் என்பது முரண்பாடாகத் தோன்றியது,

போரின்போது அமெரிக்காவின் நிதி உதவி ஓரளவு சுமையைக் குறைத்தது. போர் முடிவுற்றதும் ஜனாதிபதி ட்ருமென் பிரிட்டனுக்கு அனுப்பிவந்த உணவுப் பொருள்கள் பிற தேவைகளின் உதவியை நிறுத்திவிட்டார். எனவே, போரைத் தொடர்ந்து வளம் கொழிப்பதற்குப் பதில், பொருளாதார நிலைகுலைவும், பட்டினியும் நாட்டை எதிர்நோக்கின. இதனை உணர்ந்து அமெரிக்கா 3750 மில்லியன் டாலர் கடன் உதவி தர முன்வந்தது. இந்தக் கடன் உடன்படிக்கையின் சில நிபந்தனைகளைச் சர்ச்சில் எதிர்த்தார். இறுதியில் கடன் ஒப்பந்தம் நிறைவேறியது. இதனிடையில் பிரெசல்ஸ், பாரிஸ், ஏதென்ஸ் முதலிய நகரங்களில் சர்ச்சிலுக்குச் சிறப்புகள் செய்யப்பட்டன. 1946ல் பிரிட்டிஷ் மன்னர் அவருக்கு ஆர்டர் ஆஃப் மெரிட் (Order of Merit) என்ற உயர்ந்த சிறப்பினை வழங்கினார். இதனைத் தொடர்ந்து விடுமுறைக்காக அமெரிக்கா சென்ற சர்ச்சிலைப் பல சிறப்புகள் வந்தடைந்தன. ஜனாதிபதி ட்ருமெனும் சர்ச்சிலும் உலக விவகாரங்கள் பற்றி அடிக்கடி சந்தித்துப் பேசினார்கள். பிரிட்டிஷ் பேரரசிற்கும், பிரிட்டிஷ் பொதுநல அரசிற்கும், அமெரிக்காவிற்கும் இடையே சிறந்ததொரு உறவு இருக்க வேண்டுமென அவர் வற்புறுத்தினார்.

### அரசியல் மூதறிஞர் சர்ச்சில்

அமெரிக்காவிலிருந்து திரும்பிய சர்ச்சில் உடனே மீண்டும் அரசியலில் குதிக்கவில்லை. கன்சர்வேடிவ் கட்சியில் பெயரளவுக்குத் தலைவராக இருந்தவாறே அரசியல் மூதறிஞராக அவர் சில வேளைகளில் பாராளுமன்றத்தில் தோன்றி உரைகள் ஆற்றினார். அதே சமயத்தில் அவர் உலக அரசியலில் அதிக ஆர்வம் காட்டினார். 1946 மே திங்களில் அவர் ஐக்கிய நாடுகளின் சபையில் பேசினார். ஐரோப்பாவின் ஐக்கிய நாடுகளை நிறுவ வேண்டுமென்பது அவரது அறிவுரை. அக்டோபரில் சர்ச்சில் தாய்நாடு திரும்பினார். கன்சர்வேடிவ் கட்சியினர் இன்னும் உற்சாகம் இழந்தவர்களாகவே காணப்பட்டனர். நடைபெற்ற இடைத் தேர்தல்களில் தொழிற்கட்சி ஓர் இடத்தைக்கூட இழக்கவில்லை. கன்சர்வேடிவ் கட்சியின் கொள்கை உரிமை பெற்ற சமுதாயத்தையும், தனிச் சொத்துரிமை கொண்ட ஜனநாயகத்தையும் அமைப்பதே என்று சர்ச்சில் பிளாக்பூல் (Blackpool) மாநாட்டில் குறிப்பிட்டார். அதே சமயத்தில் போரில்

ஜெர்மனியைத் தோற்கடிக்க ஒத்துழைத்த ஸ்டாலின் போர் முடிவுற்றதும் தமது போக்கை மாற்றிக்கொண்டுவிட்டதாகவும், இனிமேலும் கம்யூனிச நாடுகளுக்கும் ஜனநாயக நாடுகளுக்கும் இடையே ஒத்துழைப்பு சாத்தியமில்லை எனவும் கருத்துத் தெரிவித்தார். இந் நிலையில்தான் 'இரும்புத்திரை' (Iron Curtain) நாடுகள் என்ற பொருளாழமுள்ள சொல்லைச் சர்ச்சில் படைத்தார்.

பிரிட்டிஷ் அரசினர் உள்நாட்டுப் பிரச்சினைகளைத் தீர்ப்பதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தபோது இந்தியாவில் உரிமைக் கிளர்ச்சி உச்ச கட்டத்தை அடைந்தது. இந்து முஸ்லிம் சமூகத்தினரிடையும், இந்திய சுதேச மன்னர்களிடையும் இந்திய அரசாங்கத்தை அமைப்பதில் உடன்பாடு ஏற்படவில்லை. பர்மாவும் சுயாட்சி கோரியது. மலேயா நாட்டிற்கு அரசியல் சட்டம் வகுக்கப்பட்டது. சூயஸ் பகுதியிலிருந்து பிரிட்டிஷ் துருப்புகள் வெளியேற வேண்டுமென எகிப்து வற்புறுத்தியது. பாலஸ்தீனத்தில் அராபியர் யூதர் தகராறு முற்றியது. கிரீஸ் நாட்டில் ருஷ்யாவின் ஆதிக்கம் பரவுவதைத் தடுக்கப் பிரிட்டன் வலிமையற்ற ஓர் அரசாங்கத்தை ஆதரிக்கவேண்டியதாயிற்று. பாரசீகத்திலும் ருஷ்யாவின் தலையீடு அதிகரித்தது. ராணுவத் தளங்கள் கோரி ருஷ்யா துருக்கி நாட்டிற்கு அறிக்கை அனுப்பியது. ஃபிரான்ஸ் நாட்டின் குடியரசு அரசியல் அமைப்பு பலத்த சிக்கல்களுக் குள்ளாகி இருந்தது. மேற்கு ஜெர்மனியில் போரின் விளைவுகள் புதிய பிரச்சினைகளை உருவாக்கின. தூரக் கிழக்கில் உருவாகிய உணவுப் பற்றுக்குறை காரணமாக பிரிட்டனில் உணவுப் பங்கீட்டு முறை கொண்டுவரப்பட்டது. இவ்வாறு 1946ஆம் ஆண்டு முழுவதிலும் உள்நாட்டிலும், உலக அரங்கிலும் பல்வேறு தொல்லைகள் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தன. 'பட்ட காலிலே படும்' என்பதுபோல் அதே ஆண்டில் காலநிலை மிகவும் கொடுமையாக மக்களை வதைத்தது. எனினும், 1947ஆம் ஆண்டு பிரச்சினைகள் ஓரளவு தீர்வு காணப்பட்டு அமைதி நிலை ஏற்படும் அறிகுறிகள் தோன்றின.

1947ஆம் ஆண்டின் தொடக்கத்தில் இந்திய வைஸ்ராயாகப் பதவி ஏற்ற மவுண்ட் பேட்டன் பிரபுவின் (Lord Mountbatten) அரும் பெரும் முயற்சிகளின் விளைவாக இந்தியத் துணைக் கண்டத்தை இந்தியா - பாகிஸ்தான் என்ற இரு டொமினியன் நாடுகளாகப் பிரிக்க வேண்டுமென்று உடன்பாடு ஏற்பட்டது. ஆகஸ்டு 15ஆம் நாளன்று மேற்கூறிய இரு சுதந்திர நாடுகள் உதயமாயின. ஆனல், பிரிவினையைத் தொடர்ந்து இரு நாடு

களுக்குமிடையே அவலமான வகுப்புக் கலவரங்கள் தோன்றிக் கிளர்ச்சிகளும் படுகொலைகளும் நடைபெற்றன. இந்தியா - பாகிஸ்தான் நாடுகளின் பிறப்பை அடுத்து, பர்மாவின் சுதந்திர மசோதா நிறைவேற்றப்பட்டது. இத்தகைய நிகழ்ச்சிகள் யாவற்றிலும் சர்ச்சில் ஒரு பார்வையாளர் என்ற முறையில்தான் பங்கு பெற்றார். பிரிட்டிஷ் பேரரசிலிருந்து நாடுகள் பிரிந்து சுதந்திரம் பெறுவதை அவர் விரும்பவில்லை. 1948ல் ஐரோப்பிய ஒற்றுமையைப் பாதுகாக்க ஓர் அமைப்பு வேண்டுமென்பதை வலியுறுத்தி அவர் பேசினார்.

1947ல் இங்கிலாந்தில் பொருளாதாரச் சிக்கல் அதிகமாகியது. பிரிட்டனின் டாலர் பற்றுக்குறை மட்டும் ஓர் ஆண்டில் நானூறு மில்லியனுக்கு மேல் போய்விட்டது. 1951 வரை நீடிக்க வேண்டிய அமெரிக்கக் கடன் ஒரே ஆண்டில் தீர்ந்து விட்டது. விரைவில் அமெரிக்காவிலிருந்து இறக்குமதியாகிய உணவுப்பொருட்கள் குறைக்கப்பட்டன. ஃபிரான்ஸ், இத்தாலி போன்ற நாடுகளின் நிலைமை இதைவிட மோசமாக இருந்தது. 1947 ஜூன் 5ஆம் நாளில் அமெரிக்க வெளி விவகார அமைச்சரான ஜார்ஜ் மார்ஷல் ஐரோப்பிய நாடுகள் ஒத்துழைத்து இந்தப் பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்கவேண்டு மென்று வற்புறுத்தினார். பிரிட்டிஷ் அமைச்சர் பெவின், ஃபிரஞ்சு வெளி விவகார அமைச்சர் பிடால்டு, மாலடோவ் ஆகியோர் பாரிஸில் கூடி மார்ஷலின் திட்டத்தைப் பற்றி விவாதித்தார்கள். மாலடோவ் நீங்கலாகப் பிற தலைவர்கள் ஜூலையில் பதினாறு நாடுகளின் மாநாடு ஒன்றைக் கூட்டினர். இவை யாவும் கூட்டாக பொருளாதார மறுமலர்ச்சி பெறுவதற்கும், தங்கள் தேவைகளை அமெரிக்காவிற்குத் தெரிவித்து உதவி பெறவும் முடிவு செய்தன. 1948ஆம் ஆண்டு ஜூலை 6ஆம் நாள் பெவினும் அமெரிக்கத் தூதுவர் டக்ளசும் மார்ஷல் உதவித் திட்ட ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர்.

அமெரிக்க காங்கிரஸ் ஐரோப்பாவிற்காகப் பெருந்தொகை நிதியை வழங்குமா என்ற ஐயப்பாடு நீங்கியது. மேற்கு நாடுகளுக்கும் ருஷ்யாவிற்கும் இடையேயுள்ள பிளவு அதிகரித்ததின் காரணமாக கம்யூனிஸ்டுகளுக்கு எதிராக ஐரோப்பிய நாடுகளுக்கு நிவாரண நிதி அளிப்பதற்கு அமெரிக்கா முன்வந்தது. மார்ஷல் திட்டமும், ஐரோப்பிய நாடுகளுக்குள் ஏற்பட்ட பொருளாதார ஒத்துழைப்பும் சர்ச்சில் விரும்பிய ஐரோப்பிய கூட்டமைப்பு ஏற்படுவதற்கான சூழ்நிலை ஏற்பட்டது. 1948ஆம் ஆண்டு மார்ச்சில் ஐந்து நாடுகள் கூட்டாகப் பாதுகாப்பு உடன்படிக்கை செய்து

கொண்டன. சர்ச்சிலின் யோசனைப்படி ஹேக் நகரில் (The Hague) 'ஐரோப்பிய மாநாடு' (Congress of Europe) கூடியது. இதன்படி ஐரோப்பிய நாடுகளின் பிரதிநிதிகள் ஐரோப்பிய கூட்டமைப்புப் பற்றிக் கூட்டு ஆலோசனைகளை நடத்தினார்கள். அமைச்சர் பணிகளிலிருந்து ஓய்வு பெற்றிருந்த சர்ச்சில் இந்த ஐரோப்பியக் கூட்டமைப்பு விவகாரத்தில் முழுமூச்சுடன் ஈடுபட முடிந்தது. ஆனால், அதே நேரத்தில் அவர் கன்சர்வேடிவ் கட்சித் தலைவராகவும் இருந்ததால் அவரது ஐரோப்பிய ஒற்றுமை முயற்சிகளைத் தொழிற்கட்சியினர் ஐயக் கண்ணுடன் நோக்கினார்கள். தொழிற்கட்சித் தலைவர்களில் பலர் ஹேக் மாநாட்டில் கலந்து கொள்ளவில்லை.

மே திங்கள் 7ஆம் நாள் சர்ச்சில் தலைமையில் மாநாடு தொடங்கிய போது அவர் ஆற்றிய உரை அவரது அரசியல் வாழ்வில் மிக முக்கியமான உரைகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது 'அகில ஐரோப்பிய ஒற்றுமையே நமது இலட்சியம். மனித உரிமைகளுக்கும், ஜனநாயகத்திற்கும் ஒத்த இயைபுடைய வாழ்க்கை நெறியையும், சமுதாயத்தையும் கொண்டுள்ள ஐரோப்பிய மக்கள் யாவரும் இறுதியில் ஒன்றுபட்டுப் பொது ஈடுபாடு கொள்ளவேண்டுமென்பதே நமது நோக்கமாகும். மக்களின் அரசாங்கம் நிறுவப்பட்டுள்ள எந்த நாட்டையும் இதில் பங்கு கொள்ளுமாறு நாம் வரவேற்கின்றோம்' என்பதுவே சர்ச்சில் முழங்கிய உரையின் சாரமாகும். உலக அமைதி ஏற்பட வேண்டுமென்றும் அவர் கோரினார். மாநாடு அரசியல் பொருளாதாரக் குழுக்களை நிறுவியது. அவற்றின் அறிக்கைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டபின் மாநாடு முடிவுற்றது. பின்னர், சர்ச்சில் நார்வே மன்னரின் விருந்தினராகச் சென்றபோது ஆஸ்லோ பல்கலைக் கழகம் அவரைக் கவுரவித்துப் பாராட்டியது. தொழிற் கட்சியினரின் பிரிட்டிஷ் அரசாங்கம், சர்ச்சிலின் ஐரோப்பிய ஒற்றுமை முயற்சிகளை காமன்வெல்த் பொதுநல அரசிற்கு ஊறுவிளைவிக்குமென்று அஞ்சி ஆதரவு தர மறுத்தனர். மாறாக அமெரிக்க வெளி உறவுத்துறை முழு ஆதரவு அளித்தது.

சர்ச்சிலின் முயற்சிகள் பிரிட்டிஷ் அரசினரின் எதிர்ப்புக்களையும் சமாளித்து வெற்றி பெற்றன. 1949ஆம் ஆண்டு ஐரோப்பிய கவுன்சிலின் தொடக்கக் கூட்டம் பிரெஸல்ஸ் நகரில் கூடியது. அங்கே சர்ச்சிலின் அரசியல் விவேகமும் சாதனைகளும் வெகுவாகப் பாராட்டப் பெற்றன. நாடுகள் பழைய பகைமைகளை மறந்து ஒப்பற்ற பிரிட்டிஷ் அரசியல் வல்லுநரின் தலைமையில் பயனுள்ள அமைதி நோக்கிய ஒத்துழைப்பு முயற்சி

களில் ஈடுபாடு கொண்டன. 1950ஆம் ஆண்டில் பதினைந்து நாடுகள் ஸ்டிராஸ்பர்க் (Strassburg) நகரில் நடந்த ஆலோசனை சபைக்குப் பிரதிநிதிகளை அனுப்பின. காமன்வெல்த் பொதுநல அரசின் பிடியில் சிக்கிக்கிடந்த பிரிட்டன் ஐரோப்பிய கூட்டமைப்பு முயற்சியில் போதிய ஆர்வம் கொள்ளவில்லை. எனினும், ஐரோப்பிய கவுன்சில் பொருளாதாரத் துறையில் சிறந்த முன்னேற்றம் காட்டி, சூமென் திட்டம் (Schumann) போன்ற நல்ல முயற்சிகளை மேற்கொண்டது. ஐரோப்பிய நிலக்கரி - எஃகு உடன்படிக்கையும் செய்யப்பட்டது. இதன்படி ஃபிரான்ஸ், ஹாலந்து, பெல்ஜியம், லக்ஸம்பர்க், இத்தாலி, மேற்கு ஜெர்மனி ஆகிய நாடுகள் தம்முடைய நிலக்கரி - எஃகு மூலவளங்களையும், உற்பத்தியையும் ஒன்று திரட்டி, தமக்குள் தடையில்லாத வாணிகப் பரிமாற்றத்தை மேற்கொண்டன. இவ்வாறு ஐரோப்பிய கவுன்சில் ஐரோப்பிய நாடுகளுக்குள் ஒத்துழைப்பை வளர்க்கும் வன்மையான கருவியாக வளர்ந்ததற்குச் சர்ச்சிலின் முன்னேக்கும், முயற்சிகளும் முக்கிய காரணங்களாகும்.

ஒருபுறம் ஐரோப்பிய ஒற்றுமையில் கருத்தாக இருந்த சர்ச்சில் மறுபுறம் அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் ஒட்டுறவையும், ஒத்துழைப்பையும் வளர்த்தார். 1949ஆம் ஆண்டு வட அட்லாண்டிக் ஒப்பந்தம் (North Atlantic Treaty) கையெழுத்தானது. இதன்படி பிரிட்டனும், அமெரிக்காவும் மேலும் பத்து நாடுகளும் கூட்டாக பாதுகாப்பு ஏற்பாடுகளையும், ஆக்கிரமிப்புத் தடுப்பு நடவடிக்கைகளையும் செய்துகொள்ளத் தமக்குள் உடன்பாடு கொண்டன. நேட்டோ (Nato) எனப்படும் இத்திட்டம் வெறும் தாள் திட்டமன்று. துருக்கி முதல் அமெரிக்கா வரையிலும் மேற்கத்திய உலகில் அமைதியை நிலைநாட்டுவதற்காக வகுக்கப்பட்ட கூட்டுப் பாதுகாப்பு நடைமுறைத் திட்டமாகும். இது போன்று பசிஃபிக் பகுதியில் அமைதியை நிலைநாட்ட அமெரிக்கா அன்சுஸ் (Anzus) திட்டத்தை நிறுவியது. இதில் ஆஸ்திரேலியாவும், நியூசிலாந்தும் இதர பங்காளிகளாக இருந்தனர். இவ்வாறு அமெரிக்காவிற்கும், பிரிட்டிஷ் காமன்வெல்த்திற்கும் இடையே புதியதொரு இணைப்பு ஏற்பட்டது.

### அரசியலுக்கு அப்பால்!

அகில உலக அரங்கில் சர்ச்சிலின் யோசனைகள் இவ்வாறு பெரும் பயன்தரத் தொடங்கின. அதே நேரத்தில் எதிர்க்கட்சித் தலைவர் என்ற முறையில் உள்நாட்டுச் சீர்த்திருத்தங்களில் அவர் ஆக்க பூர்வமான பணி புரிந்தார் என்று கூற முடியாது. அவரது பொருளாதாரக் கொள்கைகள் அவரது இளமைக்காலத்திய

அதாவது 19ஆம் நூற்ருண்டிற்குரிய கருத்துக்களாக இருந்தன. முன்னுளில் அவர் லாயிட் ஜார்ஜ் தலைமையில் சமூக சீர்த்திருத்தங்களில் ஈடுபாடு கொண்டிருந்தார் என்பது உண்மையே. 1911ஆம் ஆண்டிற்குப் பின்னர் அவர் வெளிநாட்டு விவகாரங்களில்தாம் அதிக ஆர்வம் கொண்டார். 1945 முதல் 1950ஆம் ஆண்டு வரை தொழிற்கட்சி அரசின் நாட்டுடைமையாக்கும் நடவடிக்கைகளை அவர் காமன்ஸ் அவையில் கண்டனம் செய்தார். எனினும், கன்சர்வேடிவ் கட்சியில் R. A. பட்லர் (Butler) போன்ற பொருளாதார நிபுணர்கள் இருந்தனர். அவர்கள் பயனுள்ள ஆக்க ரீதியான திட்டங்களைத் தயாரித்து வெளியிட்டனர். இத்திட்டங்களுக்குச் சர்ச்சிலின் ஆசியும் வழங்கப்பட்டது.

பதவியில் இல்லாத காலத்தில் சர்ச்சில் தமது நேரத்தின் பெரும் பகுதியை இரண்டாம் உலகப்போரின் வரலாற்றை எழுதுகின்ற பணியில் செலவிட்டார். 1948ஆம் ஆண்டு தொடங்கிய இந்த வரலாறு ஐந்தாண்டுகளில் ஆறு பகுதிகளாக வெளியிடப்பட்டது. மிகவும் பயனுள்ள வரலாற்றுச் சான்றுகளையும், நிகழ்ச்சிகளையும் கொண்டு வழங்கப்பட்ட சர்ச்சிலின் சொந்தப் படைப்பான இந்நூல் பல தலைமுறையினர் வாசித்து இன்புறவேண்டிய அரிய காவியமாகும். வயது முதிர்ந்து வந்த போதிலும் அவரிடம் ஊக்கம் குறையவில்லை. அவருக்கிருந்த எண்ணற்ற பணிகளின் இடையே அவர் சொந்தப் பண்ணையில் உழவு செய்யவும் தொடங்கினுர். குதிரை ஏற்றத்திலும் அவர் ஈடுபட்டார். அவரது புகழ்பெற்ற குதிரையான காலனிஸ்ட் II (Colonist II) 1950ஆம் ஆண்டு குதிரைப் பந்தயத்தில் கலந்து கொண்டது. ஓய்வு நேரங்களில் ஓவியம் எழுதுவதையும் அவர் நிறுத்தவில்லை. அவர் எழுதிய மூன்று ஓவியங்கள் 'ராயல் அகாடமி' மன்றத்தில் வைக்கப்பட்டன. கலைக்கழகத்தின் சார்பில் அவருக்குச் சிறப்பும் செய்யப்பட்டது.

1950ல் தொழிற் கட்சியின் பொதுத்தேர்தலை நடத்த முடிவு செய்தனர். இத் தேர்தலில் தொழிற் கட்சியினரின் பெரும்பான்மை மிகவும் குறைந்தது. அடுத்த தேர்தலில் சோஷியலிசக் கொள்கைகள் பிழைக்குமாவென்ற வினு எழுந்தது. இந்த நிகழ்ச்சிகளால் உந்தப்பட்ட சர்ச்சிலின் உற்சாகம் தேர்தலில் மீண்டும் குதிக்க அவரைத் தூண்டியது. அட்லியும் அயராது போராடினுர். 1951ல் தொழிற் கட்சியிலுள்ள பிளவு ஏற்பட்டு அனுரின் பெவான் (Aneurin Bevan) என்ற தொழிலாளர் நல அமைச்சர் ராஜினுமா செய்துவிட்டுக் கட்சியில் சில எதிர்ப்பாளர்களுடன் சேர்ந்து அரசாங்கக் கொள்கைகளைத் தாக்கத் தொடங்

கினர். இதனிடையில் நாட்டின் பொருளாதார நிலையும் சீர் கேடுற்றது. 1951ல் அக்டோபரில் பாராளுமன்றம் கலைக்கப் பட்டுப் புதிய பொதுத்தேர்தல் நடத்தும் சூழ்நிலை உருவாகியது. சர்ச்சிலும் அவரது ஆதரவாளர்களும் பெரும் நம்பிக்கையுடன் தேர்தலில் குதிக்க முன்வந்தனர். நாடு இருந்த நிலையில், எதிர்க்கட்சிகளுக்குள் பிளவு ஏற்பட்ட காரணத்தால், கன்சர் வேடிவ்களுக்கு வெற்றி வாய்ப்புகள் அதிகமாக இருந்தன. எதிர் பார்த்தவாறே டோரிகளுக்கு வெற்றி கிடைத்தது. அட்லி ராஜினமா செய்தார். வின்ஸ்டன் சர்ச்சில் அரசாங்கத்தை அமைக்குமாறு அரசர் அழைப்பு விடுத்தார்.

இவ்வாறு தமது எழுபத்தேழாவது வயதில் சர்ச்சிலின் எண்ணம் நிறைவேறியது. இந்தத் தடவை அவர் மக்களால் தெரிந்து கொள்ளப்பட்ட பிரதமராகப் பதவி ஏற்ருர். எனினும், பிரதமர் பதவி அன்று நாடு இருந்த நிலையில் பஞ்சணையாக இருக்கவில்லை. அமைதிக்காலமென்ருலும் அநேக பிரச்சினைகள் அவரை எதிர் நோக்கின. அமெரிக்கா வழங்கிய பெரும் கடன் தொகையின் காலம் முடிவடைந்து, அதனைத் திருப்பித் தருகின்ற முதல் தவணை நாள் நெருங்கியது. ஆண்டிற்கு 700 மில்லியன் பவுன்களாக இங்கிலாந்தின் வெளிநாட்டுக் கடன் அதிகரித்து வந்தது. குறிப்பிட்ட ஆண்டில் இங்கிலாந்தின் தங்க, டாலர் இருப்புத் தொகைகள் 600 மில்லியன் பவுணுகக் குறையும்; நிலக் கரி கையிருப்பு குறைந்து வந்தது. தொழில்கள் நலிவுற்று நாடு திவாலாகும் நிலைமை காணப்பட்டது. கொரியாவில் போர்; மலேயாவில் உள்நாட்டுப் போர்; பாரசீகத்தில் பிரிட்டிஷ் எதிர்ப்பு; எகிப்தில் சூயஸ் சிக்கல்; இன்னேரன்ன பயங்கர நிலையில் சர்ச்சில் பதவி ஏற்ருர்.

# 21. நாடு போற்றிய நல்ல தலைவர்

நாட்டை எதிர் நோக்கியிருந்த பல்வேறு பிரச்சினைகளைக் கண்டு சர்ச்சிலைப் போன்ற ஒரு தலைவர் மனமிடிந்து போகவில்லை. அஞ்சா நெஞ்சத்துடன் பொறுப்பேற்ற தலைவர் நாட்டு மக்கள் மிக்க சிக்கன உணர்வுடன் நடந்து பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்க உதவவேண்டுமென உருக்கமான வேண்டுகோள் விடுத்தார். நாட்டில் நிலையான அரசை அமைப்பதும், நிதி நிலையில் முன்னேற்றம் தேடுவதும், தொழில் முயற்சிகளைத் தடை செய்து வந்த கட்டுப்பாடுகளை நீக்குவதும் சர்ச்சில் வழங்கியிருந்த தேர்தல் வாக்குறுதிகளாகும். அரசரும் நாட்டின் பாதுகாப்புத் திட்டம், வீட்டு வசதித் திட்டம் ஆகியவை பற்றி வாக்குறுதிகளை வழங்கினார். சர்ச்சிலின் ஆட்சியில் தீவிரமான மாற்றங்களும், குழப்பங்களும் ஏற்படலாமென்று எண்ணியவர்கள், மாறாக அதன் நிதானமான போக்கைக் கண்டு வியப்புற்றனர். ஆனால், நடைமுறைச் செயலில் நம்பிக்கை கொண்ட சர்ச்சில் செயல்படுவதில் கருத்தாக இருந்தார். எனவே, செயல் முறைகளில் வன்முறையான மாற்றங்கள் நிகழவில்லை. பொருளாதார நிலை படிப்படியாக முன்னேறியபோது தொழில்கள் மீதிருந்த கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டதுடன், உணவுப் பங்கீடும் தளர்த்தப் பட்டது.

தேர்தல் பிரச்சாரத்தின்போது சர்ச்சில் மீண்டும் பதவிக்கு வந்தால் போர் மூளும் என்று எதிரிகள் அச்சுறுத்தி வந்தார்கள். 'டெய்லி மிரர்' ஏடு அவர் போர் வெறியர் என்று எழுதியதற்காக அதன்மீது அவதூறு வழக்கும் தொடரப்பட்டது. குறிப்பிட்ட ஏடு அவரிடம் மன்னிப்புக் கோரி சமரசம் செய்தது. பழைய குற்றங்களைப் பாராட்டி பழிவாங்குகின்ற இழி குணம் சர்ச்சிலிடம் இருக்கவில்லை. பதவி ஏற்றதும் தம்மை இகழ்ந்த டோரித் தலைவர்களையும், எதிர்க்கட்சித் தலைவர்களையும் பழிவாங்காமல் அவர்களின் மிகச் சிறந்த ஒத்துழைப்பைப் பெற்றார். 1952ஆம் ஆண்டில் சர்ச்சில் அமெரிக்காவுக்குச் சென்று தலைவர் ட்ருமெனைச் சந்தித்தார். அதே ஆண்டு பிப்ரவரியில் ஆங்கில

மன்னரான ஆறுவது ஜார்ஜ் காலமானர். அன்று மாலை அவர் வானொலியில் நாட்டு மக்களுக்குத் துக்கச் செய்தியைத் தெரிவித்து இறந்த மன்னருக்குப் புகழ்மாலை சூட்டினர். அரசர் காலமானபோது எலிஸபெத் இளவரசியார் தம் கணவருடன் கென்யா நாட்டில் இருந்தார். செய்தி கேட்டதும் தாய் நாட்டிற்கு விரைந்தார். சர்ச்சில், அட்லி உட்பட பெருந் தலைவர்கள் இளவரசியாரை விமான நிலையத்தில் சந்தித்து ஆறுதல் கூறி, அவர்கள் ஏற்கவேண்டிய பெரும் பொறுப்புகளில் ஆலோசனையும், துணையும் நல்குவதாக வாக்களித்தனர். அரசரின் இறுதிப்பயணம் தக்க கண்ணியத்துடனும். விமரிசையுடனும் நடத்தப்பெற்றது. இளவரசியார், இரண்டாம் எலிஸபெத் என்று முடிசூடிப் புதிய ஓர் யுகத்தைத் தொடங்கி வைத்தார். 1952ஆம் ஆண்டு முழுவதிலும் சர்ச்சிலின் உள் நாட்டுக் கொள்கை பொருளாதார முன்னேற்றத்தில் ஊன்றி நின்றது. இறக்குமதிகள் கணிசமான அளவிற்குக் குறைக்கப் பட்டன. வங்கிகளின் வட்டி விகிதம் அதிகரிக்கப்பட்டது. அஞ்சல் வரி, பெட்ரோல் வரி, வாகன வரி ஆகியவை உயர்ந்தன. குடும்பப்படிகளும், ஓய்வூதியங்களும் அதிகரிக்கப்பட்டன. இது போன்ற நடவடிக்கைகளின் காரணமாக நாட்டின் பொருளாதார நிலை வெகுவிரைவில் சீரமைக்கப்பட்டது.

வெளிநாட்டுத் துறையிலும் சர்ச்சிலின் விவேகமும், அறிவாற்றலும் வழக்கம்போல் மிளிர்ந்தன. பன்னாட்டுத் தலைவர்களை நேரில் சந்தித்து உறவாடுவதில் சர்ச்சில் பெரும் நம்பிக்கை கொண்டவர். மேற்கு ஐரோப்பாவின் கூட்டுப் பாதுகாப்பிற்காகப் பல தலைவர்கள் திட்டங்களைத் தயாரித்தார்கள். ஆனல், ருஷ்யாவிடமிருந்து ஜெர்மனியைப் பாதுகாப்பதற்கு ஜெர்மனியின் படைப்பலத்தை மீண்டும் பெருக்குகின்ற திட்டத்தை யாரும் ஆதரிக்கவில்லை. 1952ல் ஜனவரியில் ஐரோப்பிய பாதுகாப்புத் திட்டம் (European Defence Committee) ஜெர்மனியின் படைகளும் உள்ளடக்கும் முறையில் நிறுவப்பட்டது. ஃபிரான்ஸ், பெல்ஜியம், ஃபெடரல் ஜெர்மனி, இத்தாலி, லக்ஸம்பர்க், நெதர்லாந்து ஆகிய நாடுகள் இந்த ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டன. இவ்வாறு ஐரோப்பாவின் ஒற்றுமைக்குச் சர்ச்சிலின் திட்டங்கள் வழி வகுத்தன. இதனிடையில் மலேயாவில் கம்யூனிஸ்ட் கொரில்லாக்களின் தொல்லை அதிகரித்தது. சர்ச்சில் ஜெனரல் டெம்ப்ளரை (Templer) மலேயாவின் ஹைகமிஷனராக நியமித்தார்; டெம்ப்ளர் தலைமையில் மலேயாவில் பல சீர்திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. கொரில்லாக்களின் கொட்டத்திற்கு மலேயாவின் முன்னேற்றம் சாட்டையடி

கொடுத்தது. அவர்கள் பெரும் அளவில் சரணடைந்தார்கள். டெம்ப்ளரின் முயற்சியால் அவர்களில் பலர் போலிஸ் படையிலும் இடம் பெற்றார்கள். 1952ல் கென்யா நாட்டிலும் வன்முறைச் செயல்கள் நடைபெற்றன. 'மாவ் மாவ்' (Mau Mau) இரகசிய சங்கங்களின் உறுப்பினர்களாக இருந்த ஆதிக் குடித் தீவிரவாதிகள் நாட்டில் குழப்பத்தை விளைவித்தனர். ஐரோப்பியர்களையும், ஆஃப்ரிக்கர் அல்லாதவர்களையும் அச்சுறுத்தி நாட்டை விட்டு விரட்ட வேண்டுமென்பதே இவர்களின் நோக்கம். இறுதியில் பிரிட்டனின் ஒத்துழைப்பால் இந்தப் பயங்கரக் கிளர்ச்சிக்காரர்களின் கூட்டம் ஒழிக்கப்பட்டது.

வட ஆஃப்ரிக்காவில் எகிப்து நாட்டிலும் குழப்பம் நிலவியது. எகிப்திய அரசாங்கம் ஊழலும், திறமையின்மையும் நிறைந்திருந்தது. அரசவையினரும், அமைச்சர்களும் நாட்டைச் சூறையாடினார்கள். 1952ல் ஜூலையில் ஜெனரல் நாகிப் (Naqib) தலைமையில் ராணுவத் திடீர்புரட்சி ஏற்பட்டு ஃபரூக் மன்னரின் ஆட்சி கவிழ்ந்தது. இராணுவ ஆட்சியினர் நாட்டில் பல சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தனர். இதனிடையில் எகிப்திற்கும், பிரிட்டனுக்கும் இடையே உறவுகள் பலமாகப் பாதிக்கப்பட்டிருந்தன. ஃபரூக் மன்னர் தம் குற்றங்களை மறைத்து, எகிப்தின் சீர்கேட்டிற்குச் சூயஸ் பகுதியில் பிரிட்டிஷ் படைகள் நிறுத்தப்பட்டிருப்பதுதான் காரணம் என்று குற்றம் சாட்டினார். பிரிட்டிஷ் அரசிற்கும், எகிப்தின் ராணுவ ஆட்சிக்கும் இடையே பேச்சு வார்த்தைகள் நிகழ்ந்தன. 1953ல் பிப்ரவரியில் கெய்ரோவில் சூடான் ஒப்பந்தம் (Sudan Agreement) கையெழுத்தாகியது. இதன்படி எகிப்தின் உடன்பாட்டுடன் சூடானுக்குப் புதிய அரசியல் திட்டத்தை வழங்குதற்கு வாக்குறுதி அளிக்கப்பட்டது. படிப்படியாகச் சூடானுக்குச் சுயாட்சி வழங்குவது இதன் நோக்கமாகும். இதனையடுத்துச் சர்ச்சிலின் குடும்பத்திலும் ஓர் ஒப்பந்தம் நிகழ்ந்தது. அவர்தம் மருமகளை கன்சர்வேடிவ் தலைவர் அன்டனி ஈட்டன் திருமணம் புரிந்தார். தமது அரசியல் வாரிசாகவும் அவர் விளங்கும் வாய்ப்பு ஏற்பட்டது.

உள் நாட்டில் சர்ச்சிலின் சிக்கனத் திட்டங்களினால் பொருளாதார நிலை விரைவாக முன்னேறியது. வெளிநாட்டுக் கடன்கள் குறைந்தன. தொழில் துறையில் இலாபத்தைத் தொழிலாளர்களுக்குப் பங்கிடுவது போன்ற கூட்டுப் பங்காளித் திட்டங்களையும் அவர் வெளியிட்டார். அமெரிக்காவில் தேர்தல் சமயமாக இருந்ததால், பிரிட்டிஷ் அமெரிக்க உறவுகள் சிறிது தடைப்பட்டன. குடியரசுக் கட்சியின் சார்பில் ஜெனரல் ஐசனோவர் தேர்தலில்

வெற்றி பெற்று ஜனாதிபதியானார். போர்க்காலத்தில் சர்ச்சிலும், ஐசனோவரும் ஒன்றாகப் பணிபுரிந்த காரணத்தால் இருவருக்கும் இடையில் நல்ல உறவுகள் வளர்ந்தன; காலதாமதம் செய்யாமல் சர்ச்சில் அமெரிக்காவிற்குச் சென்று ஐசனோவரைச் சந்தித்துப் பேச்சு வார்த்தைகள் நடத்தினார். மேற்கு ஐரோப்பாவின் பாதுகாப்பும், அணுசக்தி ஆயுதங்கள் பற்றிய விவரங்களைப் பரிமாறிக் கொள்வதும் பேச்சு வார்த்தைகளில் முக்கிய இடம் பெற்றன.

1953ஆம் ஆண்டு மார்ச்சில் ருஷ்ய சர்வாதிகாரி ஜோசப் ஸ்டாலின் இறந்தார். ஸ்டாலினின் ஆட்சியிலிருந்து விடுபட்டது பற்றி ருஷ்யாவும், உலகமுமே சற்று ஆறுதல் பெற்றன. அவர் ஆட்சியில் ருஷ்யாவிற்கும் பிற நாடுகளுக்கும் இடையே உறவு நிலவ வில்லை. ஸ்டாலினின் வாரிசான மாலங்கோவின் தலைமை யில் ருஷ்யா அதிக முன்னேற்றம் அடைகின்ற அறிகுறிகள் தென்படவில்லை. விரைவில் கிரெம்லினின் தலைவர்கள் ஐரோப்பா விடம் அதிகக் கெடுபிடி காட்டவில்லை. பெர்லினுடன் போக்கு வரத்து வசதிகள் செய்யப்பட்டன. பிரிட்டன் ஒரு மாநாட்டில் கலந்து கொள்ள அழைக்கப்பட்டது. ருஷ்யாவில் சிறைப் பட்டிருந்த கைதிகளுக்குத் தண்டனைக் குறைப்பு வழங்கப்பட்டது. கொரியாவில் கம்யூனிஸ்டுகள் பிணியுற்றோரையும், காயம் பட்டோரையும் பரிவர்த்தனை செய்யத் தயாராக இருந்தனர். சர்ச்சிலின் அழைப்பின் பேரில் யூகோஸ்லாவியத் தலைவரான மார்ஷல் டிடோ பிரிட்டனுக்கு வருகை தந்தார். இதனைத் தொடர்ந்து இரு நாடுகளுக்கும் இடையே நெருங்கிய உறவு வளர்ந்தது; சர்ச்சில் கடைப்பிடித்த வன்மையான பொருளாதார நடவடிக்கைகள் காரணமாக நாட்டின் நிதிவளம் உயர்ந்தது நல்ல செய்தியாகும்.

### சாதாரண சர்ச்சில் சர் வின்ஸ்டன் ஆயினார்

1953ஆம் ஆண்டு ஏப்ரல் 24ஆம் நாள் நாட்டிலும், உலகத் திலும் சர்ச்சிலுக்கு இருந்த மதிப்பையும் செல்வாக்கையும் மனத்தில் கொண்டு பிரிட்டிஷ் பேரரசியார் எலிசபெத் அவருக்கு 'நைட் ஹுட் ஆஃப் தி கார்டர்' (Knighthood of the Garter) என்ற சிறப்பு விருதை வழங்கினார். இந்தச் சிறப்புப் பொதுவாகப் பிரபுக்களுக்கே வழங்கப்படுவதுண்டு. ஆனால், பொதுவாழ்வில் மிகச் சிறப்பான சாதனைகளைப் புரிந்து பெரு மதிப்பிற்குரிய சாமான்யராகத் திகழ்ந்த சர்ச்சிலுக்கு இந்தப் பாராட்டும், புகழும் மிகவும் தகுதியுடையவையாகும். முன்னொரு தடவை சர்ச்சில் இதனை ஏற்க மறுத்திருந்தார். இன்றோ, அவர்

அரசியலிலிருந்து ஓய்வு பெறும்வரை கட்சித் தலைமைப் பதவியிலிருந்து அவரை அசைக்க முடியாத நிலை ஏற்பட்டது. போர்த் திறமுடைய அரசியல் வல்லுநரான சர்ச்சில் உலக அமைதியின் வன்மையான சிற்பியாக மதிக்கப்பட்டார். அவரது படைப்பான 'ஐரோப்பிய கவுன்சில்' ஐரோப்பிய நாடுகளின் ஒத்துழைப்பிற்காகப் பல அரிய திட்டங்களை உருவாக்கியது. பன்னாடுகளின் உறவு பற்றி மே திங்கள் 11ஆம் நாளில் அவர் நிகழ்த்திய உரையைச் சர்வ கட்சித் தலைவர்கள், அரசியல் வெல்திறத்தின் மிக உயர்ந்த சான்றாகக் கருதிப் பாராட்டினார்கள். கிழக்கு நாடுகளுக்கும் மேற்கு நாடுகளுக்கும் இடையேயுள்ள தடைகளைத் தகர்க்க நான்கு வல்லரசுகளான பிரிட்டன், அமெரிக்கா, ருஷ்யா, ஃபிரான்ஸ் ஆகிய நாட்டுத் தலைவர்கள் கூடிப் பேச வேண்டுமென்று அவ்வுரையில் சர்ச்சில் குறிப்பிட்டார். இதனை யாவரும் வரவேற்றனர். ருஷ்யாவின் நிலைபற்றி அமெரிக்கா சிறிது ஐயப்பாடு கொண்டிருந்த போதிலும் சர்ச்சில் மாநாட்டிற்கான வழிவகுத்து பெர்முடா (Bermuda) மாநாடு கூடுவதற்கு ஏற்பாடுகளைச் செய்தார்.

1953ஆம் ஆண்டு ஜூன் 2ஆம் நாள் எலிசபெத் அரசியாரின் முடிசூட்டு விழா சீரும் சிறப்புடனும் நடத்தப்பெற்றது. மக்கள் மகிழ்ச்சி ஆரவாரத்தில் திளைத்தனர். இலண்டன் நகரம் கோலாகல விழாக் கோலம் பூண்டது. சிலர் வீட்டிலிருந்தவாறே தொலைக்காட்சியில் நிகழ்ச்சிகளைக் கண்டு களித்தனர். அரச தம்பதிகளுக்கு அடுத்தபடி சர் வின்ஸ்டன்தான் மக்களின் பாராட்டைத் தட்டிக் கொண்டார் என்றால் மிகையாகாது. அரச விருதிற்குரிய அடையாளங்களை அணிந்து அவர் சென்ற காட்சி கம்பீரமாக இருந்தது. ஆன் அரசியார் சர்ச்சிலின் குல முதல்வரான மால்பரோ கோமகனுக்கு அளித்திருந்த விருதையும் வின்ஸ்டன் அணிந்திருந்தார். மறக்க முடியாத இப் பொன்னாளில் சர்ச்சில் நாட்டு மக்களுக்கு விடுத்த வானொலி உரையில் 'இந்த நாளினைக் கண்டதில் முதியோருக்குப் பெருமிதம் உண்டாயிருக்கும், இளைஞர்கள் இதனைத் தம் வாழ்நாளில் மறக்க முடியாது' என்று குறிப்பிட்டார். விழா முடிந்ததும் கடந்த நான்காண்டுகளாக நடைபெற்று வந்த கொரியாப் போரில் கம்யூனிஸ்டுகளுக்கும், ஐக்கிய நாட்டுச் சபைக்கும் இடையே கைதிகள் பரிவர்த்தனை பற்றிய உடன்பாடு ஏற்பட்டது. விரைவில் போர் நிறுத்தமும் ஏற்பட்டது. எனினும் தூரக் கிழக்கில் தொல்லைகள் ஓய்ந்து விடவில்லை. இந்தோ சீனாவில் கம்யூனிஸ்டு கொரில்லாக்களின் தொல்லைகள் அதிகரித்தன. மையக் கிழக்கில் ஜெனரல் நாசிப் தலைமையில் நிறுவப்பட்ட

எகிப்திய குடியரசு, சூயஸ் பகுதியிலிருந்து பிரிட்டிஷ் படைகள் வெளியேற வேண்டுமென்று வற்புறுத்தியது. இதற்கு அமெரிக்க வெளிநாட்டு அமைச்சரான டல்லஸின் (Dulles) ஆதரவு இருந்தது. ஆப்பிரிக்காவில் கோல்டு கோஸ்ட் (Gold Coast) காலனிக்கு உரிமை வழங்குவதற்கான ஏற்பாடுகளைப் பிரிட்டன் செய்யத் தொடங்கியது.

1953ஆம் ஆண்டு ஜூனில் சர்ச்சில் மிகவும் பிணியுறவே நாட்டு மக்கள் கலக்கம் கொண்டனர். பெர்முடா மூவல்லரசு மாநாடு ஒத்திப் போடப்படுமோ வென்று அஞ்சினர் பலர். செப்டம்பருக்குள் சர்ச்சிலின் உடல்நிலையில் குணம் ஏற்பட்டு ஃபிரான்சிற்கு விடுமுறைக்கும் அவர் சென்று திரும்பினார். டிசம்பர் 4ஆம் நாள் யாவரும் எதிர்பார்த்த பெர்முடா மாநாடு கூடியது. இதில் அமெரிக்கா பங்கு பெறவில்லை என்றாலும், அமெரிக்கா உட்பட நான்கு வல்லரசுகளின் வெளிநாட்டு அமைச்சர்களும் சந்தித்துப் பேச ஐசனோவர் உடன்பாடு தெரிவித்தார். 1954ஆம் ஆண்டு ஜனவரி 25ஆம் நாளில் நான்கு வல்லரசுகளின் வெளிநாட்டு அமைச்சர்கள் பெர்லினில் கூடினார்கள். பிப்ரவரி 19ஆம் நாளன்று மாநாடு தோல்வியில் முடிவுற்றது. கொரியா, இந்தோசீனா பிரச்சினை பற்றி ஆராய வல்லரசுகள்கூட வேண்டுமென்பது இம் மாநாட்டின் முக்கிய விளைவுகளில் ஒன்றாகும். சர்ச்சிலின் பதவிக் காலம் முழுவதிலும் பல பன்னாட்டுப் பிரச்சினைகளில் அவர் கொண்டுவந்த திட்டங்கள் ருஷ்யாவின் ஒத்துழையாமையினால் வெற்றி பெறவில்லை. என்றாலும் ருஷ்யத் தலைவர்களுடன் நட்புறவு கொள்ளுவதற்குச் சர்ச்சில் இடைவிடாது முயன்று வந்தார். அமெரிக்கா ஹைட்ரஜன் குண்டுகளை வீசிச் சோதனைகளை நடத்தியபோது, வல்லரசுகள் ஆயுத பகிஷ்காரம் செய்வது நாடுகளுக்குள் நம்பிக்கை ஏற்படுத்தக் கூடிய சூழ்நிலை உருவாகிய பின்னர்தான் சாத்தியமாகும் என்று காமன்ஸ் சபையில் குறிப்பிட்டார்.

அமெரிக்க அரசாங்கம் ருஷ்யாவுடன் எவ்விதப் பேச்சு வார்த்தைகள் நடத்தவும் தயாராக இருக்கவில்லை. எனவே, சர்ச்சில் ஆலோசனை கூறியதுபோல் ருஷ்யத் தலைவர் மாலன்கோவுடன் (Malenkov) தனிப் பேச்சு வார்த்தைகள் நடத்த அமெரிக்கா தயாராக இல்லை. கொரியா, இந்தோ சீனா பிரச்சினை பற்றிய ஜெனிவா மாநாடு 1954ஆம் ஆண்டு ஏப்ரல் 26ஆம் நாள் கூடி மூன்று மாதங்கள் வரை நீடித்தது. அந் நாடுகளில் பன்னாட்டு மேற்பார்வையில் தேர்தல்களை நடத்தும் ஐக்கிய நாட்டுச் சபையின் கோரிக்கையை ருஷ்யா ஏற்கவில்லை. மாநாடு

தோல்வியுற்றது. கொரியா இரு பகுதிகளாகப் பிரிவதைத் தவிர வேறு வழி தென்படவில்லை. இந்தோசீனாவில் போர் நிறுத்தம் செய்யவும் 1956ல் நாட்டின் வருங்காலத்தை நிர்ணயிக்கவும் தேர்தல்களை நடத்தவும் உடன்பாடு ஏற்பட்டது. ஜூனில் சர்ச்சிலும் ஈட்டனும் அமெரிக்காவுக்குச் சென்று ஐசனோவரையும், டல்லசையும் சந்தித்துப் பேசினார்கள். பின்னர் கனடாவுக்கும் சென்றனர். அமைதியான முறையில் ருஷ்யாவுடன் சகவாழ்வு வாழ்வது சர்ச்சிலின் திட்டம். அமெரிக்காவின் ஒத்துழைப்பின் பெயரால் இதில் வெற்றி காண முடியவில்லை. ஐரோப்பிய கூட்டுப் பாதுகாப்புத் திட்டமும் முறிந்தது. ஆனால், அமெரிக்கா, கனடா பிற மேற்கு ஐரோப்பிய நாடுகள் உட்பட ஒன்பது நாடுகளைக் கொண்ட மாநாடு செப்டம்பரில் இலண்டனில் கூடியது. பிரிட்டன், அமெரிக்கா, கனடா நாடுகளின் பாதுகாப்பு உறுதிமொழியின் பேரில் ஃபிரான்ஸ் மேற்கு ஜெர்மனியின் ஆக்கிரமிப்பிலிருந்து வெளியேறவும், ஜெர்மனியை நேட்டோ கூட்டில் சேர்த்துக் கொள்ளவும் உடன்பட்டது. இந்த உடன்பாட்டின் நிபந்தனைகள் அக்டோபர் 23ஆம் நாளில் பாரிஸில் கூடிய மாநாட்டில் இறுதியாக முடிவு செய்யப்பட்டன. இதன் விளைவாக ருஷ்யா ஜெர்மனியுடன் போருக்குத் தயாராக இருக்கும் நிலையை ஒரு முடிவிற்குக் கொண்டு வந்தது. பிரிட்டிஷ் அரசியல் வாழ்வின் ஒரு வியக்கத்தக்க அம்சம் என்னவெனில், அதன் பல்வேறு கட்சியைச் சேர்ந்த அரசியல் தலைவர்கள் தமக்குள் காழ்ப்புணர்ச்சியின்றி பொது விவகாரங்களில் ஒருங்கிணைந்து செயல்படுவதாகும்.

மேற் கூறப்பட்ட உயர்ந்த பண்பு சர்ச்சிலின் எண்பதாவது பிறந்த தின விழாவில் நன்கு வெளிப்பட்டது. 1954ஆம் ஆண்டு நவம்பர் 30ஆம் நாளன்று அனைத்துக் கட்சித் தலைவர்களும் சர்ச்சிலுக்கு வாழ்த்துக் கூறவும், அவரை அக்காலத்திய மிகச் சிறந்த பெருமகன் எனப் பாராட்டவும் ஒன்றுபட்டு முடிவு செய்தனர். வெஸ்ட்மினிஸ்டர் மாமன்றத்தில் பாராளுமன்ற இரு அவைகளின் உறுப்பினர்கள் திரண்டு வந்து அவருக்குத் தங்கள் பரிசுகளை வழங்கினார்கள். உள்ளத்தைத் தொடுகின்ற இந்த விழாவில் அவருடன் கருத்து உடன்பாடு கொள்ளாத தலைவர்களும் சர்ச்சிலின் பெருமையினை ஈடு இணையற்றதென்று ஒப்புக் கொண்டு பாராட்டினார்கள். அவர் பெற்ற பரிசுகளில் பாராளுமன்ற உறுப்பினர்களில் கிரஹாம் சதர்லண்ட் (Graham Sutherland) தீட்டிய சர்ச்சிலின் ஓவியத்தையும், உறுப்பினர்கள் யாவரும் கையெழுத்திட்ட ஒருநினைவு மலரும் குறிப்பிடத் தக்கவை. விழாவில் அட்லி, கிரென்ஃபெல் (Grenfel), சாலிஸ்பெரி

பிரபு ஆகியோர் உளங்கனிந்த உரையாற்றிப் பாராட்டினார்கள். நாட்டின் நன்றியினை நல்ல தலைவருக்குத் தெரிவித்துக் கொண்டார்கள். மேல் அவையில் அவருக்கு வெள்ளிக் கூஜாக்களும் வழங்கப்பட்டன. அன்று மாலையில் பக்கிங்ஹாம் அரண்மனையில் அரச குடும்பத்தினர் விழாத் தலைவருக்குப் பரிசுகள் வழங்கினார்கள். சர்ச்சிலின் பிறந்த தினத்தைச் சிறப்பிக்க ஒரு பிறந்த நாள் நிதியும் திரட்டப்பட்டது. நாட்டுமக்களும், நண்பர்களும், அவரது நலம் நாடுவோரும் 150 ஆயிரம் பவுன் தொகை கொண்ட காசோலையை அவரது இல்லத்தில் அவரைச் சந்தித்து அன்பளிப்பாக வழங்கினார்கள். அந்தத் தொகை சார்ட்வெல் (Chart well) பண்ணையிலுள்ள தமது இல்லத்திற்கு அறக் கொடையாகக் கொடுக்கப்படும் என்று சர்ச்சில் அறிவித்தார். இவ் வில்லத்தை ஏற்கெனவே அவர் நாட்டுச் சொத்தாக வழங்கியிருந்தது குறிப்பிடத்தக்கது. உலகின் பல பகுதிகளிலிருந்தும் ஆசிச் செய்திகளும், பரிசுகளும் வந்து குவிந்தன. ஒரு ஃபிரிஞ்சு இடதுசாரித் தலைவர் சர்ச்சிலை, 'துணிவு, பெருமிதம், நாட்டுணர்ச்சி ஆகியவற்றின் வாழும் சின்னம்' எனப் புகழ்ந்தார். 'அழியாத புகழ் பெற்று, எண்பதாண்டாகியும் ஊக்கத்துடனும், உற்சாகத்துடனும் திகழ்ந்து, மக்களின் பாராட்டைப் பெறுவது மகத்தான சாதனை' என்று நியூயார்க் டைம்ஸ் எழுதியது. இவ் விழாவில் சர்ச்சில் பெற்ற கடிதங்கள், வாழ்த்துத் தந்திகள் மட்டும் இருபத்தி மூவாயிரத்திற்கும் அதிகமாகும்.'

### பதவி துறத்தல்

பிரதமர் சர்ச்சில் பதவிக் காலத்தின் இறுதியில் லெவான்ஷ் பகுதியில் போர் மேகங்கள் சூழ்ந்தன. எகிப்திலிருந்து பிரிட்டிஷ் படைகள் வெளியேறுவதற்கான உடன்பாடு செய்யப்பட்டது. சூயஸை இழந்த பின்னர் சைப்ரஸ் தீவு பிரிட்டிஷ், நேடோ நாடுகளின் கடல் தளமாக்கப்பட்டது. மையக் கிழக்கில் தனது சொந்த நோக்கங்களைக் கொண்டிருந்த ருஷ்யா இதனை விரும்பவில்லை. அத் தீவிலுள்ள கம்யூனிஸ்டுகள் பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிரான கிளர்ச்சிகளைச் செய்யுமாறு தூண்டி விடப்பட்டனர். ஆர்ச்பிஷப் மக்காரியோஸ் (Makarios) தலைமையில் கிளர்ச்சிகள் தொடங்கின. விரைவில் நிலைமை மோசமாகிப் பயங்கரவாதிகளின் இயக்கங்கள் கிளர்ச்சிகளில் ஈடுபாடு கொண்டன, கிரேக்க சைப்ரஸ் வாசிகள் கொள்ளைக்கும் கொலைகளுக்கும் உள்ளாகிப் பெருந் தொல்லைப்பட்டார்கள்.

சைப்பிரஸ் பிரச்சினை மிகவும் சிக்கலான ஒன்றாகும். தொடக்கத்தில் துருக்கிக்குச் சொந்தமாயிருந்த சைப்பிரஸ்

1878ல் பிரிட்டன் வசமாகியது. பிரிட்டனின் நல்லாட்சியின் கீழ் சைப்பரஸ் வளம் பெறவே கிரேக்கர்கள் அங்கு வந்திறங்கி துருக்கியரின் எண்ணிக்கையையும் விஞ்சி விட்டனர். 1946ல் கொடுக்கப்பட்ட அரசியல் திட்டத்தைக் கிரேக்கப் பெரும்பான்மை நிராகரித்து விட்டது. துருக்கியர்கள் கம்யூனிசம் பரவுவதை விரும்பவில்லை. பிரிட்டனோ தீவின் கேந்திர முக்கியத்துவத்தைக் கருத்தில் கொண்டு அதன் தீவுகள் மீது ஓரளவு கட்டுப்பாடு கொண்டிருப்பதை விரும்பியது. கிரேக்க நாடு சைப்பரஸ் மக்களைத் தம்முடன் இணைய விரும்புவதை வரவேற்று ஆதரவளித்தது. 1954ல் சைப்ரஸிற்குப் புதியதொரு அரசியல் அமைப்புக் கொடுக்கப் பிரிட்டன் முன் வந்தது. இதனை மக்காரியோஸ் தள்ளுபடி செய்யவே, தொடர்ந்து வன்முறைச் செயல்கள் நிகழ்ந்தன. மக்காரியோஸ் நாடு கடத்தப்பட்டார். பிரிட்டிஷ் துருப்புகள் பயங்கரவாதிகளை வேட்டையாடினர். எண்பதாண்டுகளைக் கடந்துவிட்ட சர்ச்சிலின் உடல்நிலை மேலும் தொடர்ந்து பணிபுரிய அவரை அனுமதிக்கவில்லை.

1955ல் சர்ச்சில் தம் பொறுப்புகளை அன்டனி ஈட்டனுக்கு மாற்றினர். எனினும், வெளிநாட்டுக் கொள்கை, ஆயுதக் குறைப்பு, பாதுகாப்பு ஆகிய பிரச்சினைகள் பற்றிய விவாதங்களில் அவர் முக்கிய பங்கெடுத்துக் கொள்ளத் தவறவில்லை. அணு ஆயுதத் தடைபற்றி அவர் தீவிர கருத்துக் கொண்டிருந்தார். கொரியாவில் பயன்படுத்தப்பட்டது போன்ற சம்பிரதாய ஆயுதங்களைக் கொண்டு கம்யூனிஸ்டுகளை எதிர்த்துப் போராடுவதை அவர் ஆதரித்தார். மேற்கு ஜெர்மனியை நேடோ அமைப்பில் சேர்த்துக் கொள்வதையும் அவர் ஆதரித்தார். 1955ஆம் ஆண்டு ஏப்ரல் 5ஆம் நாளன்று சர்ச்சில் பிரதமர் பதவியைத் துறந்தார். 1905ஆம் ஆண்டு தொடங்கிய அவரது பொது வாழ்வு இத்துடன் முடிவுற்றது. அவர்தம் சாதனைகள் இதற்கு முன்னர் எந்தத் தலைவர்களும் ஆற்றியிராத அளவிற்குச் சிறப்பானவை. பாராளுமன்றத்தில் அவர் இன்னும் இடம் பெற்றிருந்தார். அவர் பதவி துறந்தபோது பாராளுமன்றத் தலைவர்கள் அவருக்குப் புகழ்மாலை சூட்டுவதில் ஒருவரோடொருவர் போட்டியிட்டனர். அவருடன் ஒரு யுகம் முடிவுற்றது.

# 22. காவியத் தலைவனின் இறுதிப் பயணம்

சர் அன்டனி ஈட்டன் புதிய பிரதமராகப் பதவி ஏற்ருர். புதிய தலைவரும் சர்ச்சிலும் நீண்ட நாள் அரசியல் தொடர்பு கொண்டிருந்ததுடன் குடும்ப உறவும் செய்து கொண்டவர். நேர்மையும், நெஞ்சுறுதியும் கொண்ட ஈட்டன் வெளி நாட்டு விவகாரங்களில் பழுத்த அனுபவமும், அமைதியை நிலை நாட்டுவதில் அடங்கா வேட்கையும் உடையவர். ஆனல், சர்ச்சிலைப் போன்ற ஆளுமையும், உடல் நலமும் கொண்டவர் அல்லர். எனினும், நாட்டு மக்களால் அவர் மதிக்கப்பட்டார். அவர் பதவி ஏற்றபோது மக்களின் நல்லெண்ணத்தையும், ஒப்புதலையும் ஒருங்கே பெற்ருர். தொடக்கத்திலேயே பொதுத் தேர்தலையும் நடத்தி நல்லதொரு வரவு-செலவுத் திட்டத்தையும் வெளியிட்டார். இந் நிலையில் தொழில் கட்சியினரின் செல்வாக்குக் குறைந்திருந்த காரணத்தால் கன்சர்வேடிவ்கள் சிறந்த வெற்றி பெற முடிந்தது. இத் தேர்தலில் சர்ச்சிலும் வெற்றி பெற்று காமன்ஸ் சபையில் அடிக்கடி தோன்றிப் பயனுள்ள அறிவுரைகளை ஆற்றினுர். பற்றற்ற நிலையில் நின்று பணிபுரிந்த சர்ச்சிலை உலகமே மூதறிஞர் என்று ஏற்றுக் கொண்டதில் வியப்பில்லை.

1955ஆம் ஆண்டு நியூயார்க் நகரில் வின்ஸ்டன் 'சுதந்திர விருது' (Freedom Award) என்ற மிக உயர்ந்த கவுரவத்தைப் பெற்ருர். அமெரிக்கர் அல்லாத குடிமக்களில் இச் சிறப்பைப் பெற்றவர் சர்ச்சில் ஒருவர்தாம். சர்ச்சிலின் 'உரிமை வேட்கை, இன்னலிலும் இணையற்ற உறுதி, வெற்றியில் தலைமை' என்ற உயரிய ஆற்றல்களை மதித்து வழங்கப்பட்டதாக இதற்குரிய பட்டய வாசகம் கூறியது. சர்ச்சில் இந்தப் பாராட்டுதலை நேரில் சென்று பெற்றுக் கொள்ளவில்லையென்ருலும், இவ் விழாவின் போது அவர் ஆற்றிய உரையில் ஆங்கிலோ அமெரிக்க ஒற்றுமையே வலியுறுத்தினுர். சின்னுட்களின் பின்னர் மற்ருெரு பெரும் அமெரிக்க கவுரவமான 'வில்லியம்பர்க் விருது' (William-

burg Award) அவருக்கு வழங்கப்பட்டது. 'நீதிக்காகவும், விடுதலைக்காகவும், ஆற்றியுள்ள பணிகளைப் பாராட்டி வழங்கப்படும் இதனைப் பெற்ற முதல் பெருமகனார் சர்ச்சில் தான். அடுத்த ஆண்டு மே திங்களில் ஐரோப்பிய ஒற்றுமைக்காக அவர் ஆற்றிய பணிகளைப் பாராட்டி 'சார்லமேன் விருது' (Charle maigne Prize) வழங்கப்பட்டது. சர்ச்சிலது பொது வாழ்வின் பிற்பகுதியில் அவர் பெற்ற கவுரங்கள் இவை மட்டுமல்ல. பல நாடுகளின் ஆன்றோர் மன்றங்களும், அறிவாலயங்களும் அவருக்குப் பல பேரறிஞர் பட்டங்களையும், பதக்கங்களையும், பட்டயங்களையும் வழங்கின. அவர் பெற்றிருந்த போர்ப் பதக்கங்களும், விருதுகளும் எண்ணிலடங்காதவை.

தலைமேல் வேலை குவிந்து கிடந்த காலத்திலும் சர்ச்சிலின் பேனா மட்டும் ஓயவில்லை. இரண்டாம் உலகப்போரின் வரலாற்றுடன், ஆங்கிலம் கூறும் நல்லுலக மக்களின் வரலாற்றையும் படைத்த பெருமை அவரைச் சாரும். இதனிடையில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நிதி நிலைமை மனநிறைவு தருவதாக இல்லை. வெளிநாட்டுக் கடன்கள் முழுவதும் தீர்க்கப்படவில்லை. பன்னாட்டு அரங்கில் 1955ஆம் ஆண்டு நான்கு வல்லரசு வெளிநாட்டு அமைச்சர்களின் மாநாடு ஜெனிவாவில் கூடியது. இதன் விளைவுகள் பெரும் அளவில் இல்லாவிடினும், வல்லரசுகளிடையே நட்புறவு நிலவியது. புதிய ருஷ்யத் தலைவர்களான மார்ஷல் புல்கானினும், குருஷாவும் பிரிட்டிஷ் மக்களின் மதிப்பைப் பெற்றனர். 1957ல் மையக் கிழக்கில் கம்யூனிஸ்டுகளின் செல்வாக்கும் பலமும் அதிகரித்தன. எகிப்து அரபு நாடுகளை 'அரபு லீக்' (Arab League) என்ற அமைப்பில் இணைத்தது. இதன் மூலம் மையக் கிழக்கில் பிரிட்டனின் செல்வாக்கை முறியடிப்பதுவே எகிப்தின் நோக்கமாகும். இதற்கு அமெரிக்காவில் ஓரளவு ஆதரவும் கிடைத்தது. பிரிட்டனுக்கு வெளியே நிலைநாட்டப்படும் பிரிட்டனின் செல்வாக்கையெல்லாம் 'குடியேற்றக் கொள்கை' என்றே அமெரிக்காவில் சில அரசியல்வாதிகள் கருதினார்கள்.

1955ஆம் ஆண்டு பிப்ரவரியில் துருக்கி, ஈராக், பாரசீகம், பாகிஸ்தான், பிரிட்டன் ஆகிய நாடுகள் தமக்குள் கூட்டுப் பாதுகாப்பிற்காக 'பாக்தாது ஒப்பந்தத்தை' (Bagdad Pact) செய்து கொண்டன. ருஷ்யா, ஜோர்டானிலும், அரேபியாவிலும் பிரிட்டனுக்கு எதிரான கிளர்ச்சிகளைத் தூண்டிவிட்டது. இஸ்ரேலுக்கு எதிரான போரில் ருஷ்யத் தளவாடங்கள் வழங்கப்பட்டன. எகிப்து நாடு இஸ்ரேலுடன் நீண்ட கொரில்லாப்

போரை நடத்தியது. 1956ஆம் ஆண்டு ஜூலை 26ஆம் நாளன்று எகிப்திய சர்வாதிகாரியான நாசர் சூயஸ் கால்வாயை நாட்டுடைமையாக்கி விட்டதாக அறிவித்தார். நாசரின் செயலை ஒப்புக் கொள்ள முடியாதென்றும், பிரிட்டன் தேவையானால் போர் செய்தும் சூயஸில் தன் உரிமைகளைப் பாதுகாக்கத் தவறாது என்றும் அறிக்கை விடுத்தார். கால்வாய்ப் பிரச்சினையில் அமெரிக்க ஐக்கிய நாடுகள் பிரிட்டனுக்குப் பரிவு காட்டவில்லை. அக்டோபரில் 'இஸ்ரேல் சீனாய் தீபகற்பப் பகுதிக்குப் படைகளை அனுப்பியது. எகிப்திய படைகள் பின்வாங்கின. இஸ்ரேலின் முன்னேற்றத்தின் விளைவாக சூயஸ் பகுதி போர் முனையாகி விட்டது. இதில் ருஷ்யா தலையிடுகின்ற அபாயமும் ஏற்பட்டது. இதனைத் தடை செய்யப் பிரிட்டனும், ஃபிரான்சும் உடனடி நடவடிக்கை எடுக்கத் தொடங்கின. இதன் விளைவுதான் எகிப்திய விமானதளங்களைப் பிரிட்டனும், ஃபிரான்சும் தாக்கிய தாகும். படைகளை அனுப்பு முன்னர் ஆகாயத்தில் தமது பலத்தை நிலைநாட்டுவது அவர்களது திட்டம். ஐக்கிய நாடு களின் சபை இதில் உடனே தலையிட்டது. பிரிட்டன், ஃபிரான்சின் செயலை உலகநாடுகள் ஆக்கிரமிப்பு என்று கண்டனம் செய்தன. இதே நேரத்தில் ருஷ்யத் துருப்புகள் ஹங்கேரி நாட்டின் விடுதலைக் கிளர்ச்சியை நசுக்கின. இங்கே ஐக்கிய நாட்டின் பார்வை யாளர்கள் செல்வதற்கு அனுமதிக்கப்படவில்லை.

இத்தகைய நெருக்கடியான நிலையில் ஈட்டனின் உடல்நிலை மேலும் குன்றியது. 1957ஆம் ஆண்டு ஜனவரி 9ஆம் நாளன்று ஈட்டன் தமது பதவியை ராஜினாமா செய்ய வேண்டியதாயிற்று. ஹெரால்டு மாக்மில்லன் புதிய பிரதமராகப் பதவி ஏற்றார். மாக்மில்லனுக்குச் சாதகமாகச் சர்ச்சில் அளித்த ஆதரவுதான் அவர் இறுதியாக அரசியலில் தலையிட்ட நிகழ்ச்சியாகும். அது முதல் நாட்டின் நடவடிக்கைகளை அவர் நல்ல உள்ளங்கொண்ட ஆர்வத்துடன் கவனிப்பதோடு மனநிறைவு கொண்டார். இதே நிகழ்ச்சிகளில் அவர் முன்னாளில் மிகச் சிறந்த முறையில் ஈடுபாடு கொண்டிருந்தார் என்பதை உலகம் அறியும். எண்பத்திரண்டு வயதான மூதறிஞரின் எஞ்சிய நாள்கள் அமைதியிலும், இள வேனிற் பருவத்தில் பகலவனின் ஒளியைப் போலவும் நாட்டு மக்களின் மரியாதையுள்ள அன்பாலும் உலக மக்களின் உயர்ந்த மதிப்பாலும் நிறைவு செய்யப்பட்டன. பாராளுமன்றத்தில் தந்தைக்குரிய தகுதியை சர்ச்சில் அடைந்தார். 1959ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தலில் மீண்டும் வெற்றி பெற்றார். நான்காண்டுகளின் பின்னர் அவ்வமயம் அவர் காமன்ஸ் அவையில் உரையாற்றினார். அவரது எண்பத்து ஏழாவது பிறந்த நாளை

யொட்டி எதிர்க்கட்சித் தலைவர் பாராளுமன்றத்தில் சூட்டிய புகழ்மாலை மறக்க முடியாத தொன்று. மூன்றரை மில்லியன் பவுன் செலவில் கேம்ப்ரிட்ஜில் 'சர்ச்சில் கல்லூரியை' நிறுவப் பொதுமக்கள் ஓர் அறக் கொடையை நிறுவினார்கள். சர்ச்சில் பிரிட்டனுக்கும், உலக மக்களுக்கும் ஆற்றிய அருந்தொண்டு களின் நிலையான நினைவுச்சின்னம் இக் கல்லூரியாகும். 1958ஆம் ஆண்டு செப்டம்பரில் சர்ச்சில் தம்பதிகள் தமது திருமணத்தின் பொன் விழாவைக் கொண்டாடிய போது, உலகமெங்கணுமிருந்து பாராட்டுகள் வந்து குவிந்தன. ஃபிரான்ஸ் நாடு 'விடுதலை வீரர் விருதை' அவருக்கு வழங்கியது. சர்ச்சில் தம் ஓய்வு நாள்களைச் சார்ட்வெல் (Chartwell) பண்ணையில் அமைதியாகக் கழித்தார். 1958ல் ஒருமுறை நிமோனியா குளிர் சுரத்திற்குப் பலியாகியது தவிர, அவரது உடல்நிலை நன்றாக இருந்தது.

## பெரும் பயணம் முடிந்தது

மக்கள் உள்ளங்களில் மங்காத ஒளியாக நீங்காத இடம் பெற்ற மாபெரும் தலைவரான சர்ச்சில் பிரிட்டனின் முதுபெரும் கிழவர் என்ற சிறப்பைப் பெற்றார். பிரிட்டனின் தலைசிறந்த பொதுமக்கள் தலைவர் படைத்துள்ள பணிகளின் பட்டியல் உலக வரலாறு கண்டிராத வகையில் அமைந்திருந்தது. இது மட்டுமா? உலகத்தின் உரிமை பெற்ற நாடுகளெல்லாம் அவரை உலகின் மகத்தான குடிமகன் என்று வணங்கிப் போற்றின. 1963ஆம் ஆண்டு ஜனாதிபதி கென்னடியின் முயற்சியால் அவருக்கு 'அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கவுரவக் குடிமகன்' என்ற சிறப்புத் தகுதி வழங்கப் பெற்றது. 1964ஆம் ஆண்டு நவம்பர் 30ஆம் நாள் சர்ச்சிலுக்குத் தொண்ணூறு வயது நிரம்பியது. அது முதல் அவர் பாராளுமன்றத்திலிருந்து ஓய்வு பெற்றார். அது காலை அவருக்கு அளிக்கப்பட்ட பிரிவு உபசாரத்தைப் போன்ற தொரு உருக்கமான நிகழ்ச்சி பாராளுமன்ற வரலாற்றில் நடை பெறவில்லை.

1965ஆம் ஆண்டு ஜனவரி 15ஆம் நாளன்று பிரிட்டனும் உலகமும் துக்கத்தில் மூழ்கக் கூடிய செய்தி கிடைத்தது. சர்ச்சில் திடீரெனப் பிணியுற்று மிகவும் கவலைக்கிடமான நிலையில் இருக் கிறார் என்பதே அச்செய்தி. அவரது இல்லத்தின் முன்னே கவலை தோய்ந்த முகத்துடன் மக்கள் வெள்ளம் திரண்டது. மோரான் பிரபு வெளியிட்ட சர்ச்சிலின் உடல்நிலை அறிக்கைகளைக் கேட்கத் தான் மக்கள் அங்கே கூடினார்கள்; ஜனவரி 24ஆம் நாள் காலை எட்டு மணியளவில் காவியத்தலைவரான சர்ச்சில் இவ்வுலக வாழ்வை நீத்தார். உலகமக்கள் தாங்கொணாத் துயரில்

ஆழ்ந்தனர். கண்ணியத்துடன் நீண்ட நல்வாழ்விற்குப் பின்னர் மறைந்த மாவீரனைப் பெருமிதத்துடன் நினைந்து நாவார வாழ்த்தி அஞ்சலி செய்தனர் உலகத் தலைவர்கள். அவரது மறைவிற்காக வருந்தியவர்கள், இருள் சூழ்ந்த காலத்தில் விடுதலை காத்த வள்ளலின் சாதனைகளைப் போற்றினர்.

'எனக்கும் இரண்டாம் உலகப் போரின் பிரம்மாண்டமான களங்களில் என்னோடு தோள் கொடுத்து நின்ற பல்லாயிரக் கணக்கான அமெரிக்கர்களுக்கும், பிரிட்டிஷ் தோழர்களுக்கும் வின்ஸ்டன் சர்ச்சில் ஆங்கில நாட்டின் அரிய வீரத்தின் முழு உருவமாகக் காட்சி அளித்தார். அவர் 1940ல் பிரதமராகிய போது பிரிட்டன் தோல்வியின் விளிம்பைத் தொட்டுக் கொண் டிருந்தது. அதனைக் கண்டு சர்ச்சில் அஞ்சினாரில்லை' என்று அமெரிக்கத் தலைவர் ஐசனோவர் இரங்கல் செய்தி அனுப்பினார்'[1]. நேசப் படைகளின் குறிக்கோள் என்னவென்று சர்ச்சிலைக் கேட்டால் 'வெற்றி! முழுவெற்றி' என்று ஒரே சொல்லில் விடை தருவார். ஈடற்ற பேச்சாற்றலாலும், அசையாத உறுதியுடனும் சர்ச்சில் பிரிட்டிஷ் மக்களை ஒன்று திரட்டினார். இக்கட்டான நிலையில் மக்களுக்கு மனவுறுதி அளித்தார். இரண்டாம் உலகப் போர் உச்சக் கட்டத்தில் இருந்தபோது, வட ஆப்பிரிக்காவில் நேச நாடுகளின் கேந்திரங்கள் வீழ்ந்தபோது, சர்ச்சில் மட்டும் இறுதி வெற்றியைப் பற்றி இடைவிடாமல் பேசிக் கொண்டிருந் தார். விக்டோரியா யுகப் பண்புகளைப் பெற்ற அவருக்கு பிரிட்டிஷ் பேரரசு, காமன்வெல்த் பொது நலவரசு என்றால் உயிர். பிரிட்டனின் குடையின் கீழ் உள்ள மக்களெல்லாரையும் காப்பது அரசாங்கத்தின் பொறுப்பு என்பது அவரது நம்பிக்கை. காமன்வெல்த் நாடுகளிலெல்லாம் விக்டோரியா காலத்துக் கொடையான திறமையான ஆட்சியும், பொதுப் பணித்துறையும் இருக்கின்றனவென்றால் அதன் சிற்பி சர்ச்சில் என்பது மிகை யன்று.

சர்ச்சில் தமது அமெரிக்க வழி மரபுபற்றிப் பெருமை கொள்வார். ஆங்கிலம் கூறும் நல்லுலக மக்கள் யாவரினுடைய இறுதிக் குறிக்கோள் ஒன்றே என்று அவர் நம்பினார். அமெரிக்க இலக்கியங்களிலிருந்து அவர் சரளமாக மேற்கோள்கள் கூறுவார். போர்க் காலம் முழுவதும் ஆங்கில-அமெரிக்க நல்லுறவிற்காகச் சர்ச்சில் அயராது உழைத்தார். எத்தனையோ ஆற்றல்களைப் பெற்று, எத்தனையோ விதவிதமான பணிகளை மேற்கொண்ட

[1] The Churchill I knew—By EISENHOVER D. National Geography Magazine Aug. 1965.

சர்ச்சிலின் சிறந்த பணி அவர் நீதியை விரும்பி அதற்காகப் போராடியதேயாகும். 'வரலாற்றில் ஊறிப் போன ஒரு நாடு தான் ஒரு சர்ச்சிலைப் படைக்க முடியும்' என்பது ஐசனேவரின் திண்மையான முடிவாகும்.

'போரில் உறுதி; தோல்வியில் எதிர்ப்பு;
வெற்றியில் கண்ணியம்; அமைதியில் நல்லெண்ணம்'.

இவ்வாறு சர்ச்சில் தமது புகழ் பெற்ற இரண்டாம் உலகப் போரின் வரலாற்றில் எழுதியுள்ளார்.[1] இதுவே அவரது மறைவிற்குப் பின் அவருக்குச் சூட்டக் கூடிய அரிய புகழ்மாலையு மாகும்.

வெஸ்ட்மின்ஸ்டர் ஆலயத்தில் ஆலிவர் கிராம்வெல், 'அரிமா நெஞ்சன் ரிச்சர்டு' (Richard the Lion Heart) ஆகியோரின் சிலை களுக்கு இடையே வின்ஸ்டன் சர்ச்சிலின் திருவுடல் மக்களின் இறுதி அஞ்சலிக்காக வைக்கப்பட்டிருந்தது. ஜனவரி 30ஆம் நாளன்று நடைபெற்ற இறுதிப் பயணத்தில் மக்கள் வெள்ளம் கரைபுரண்டோடியது. அடிமேல் அடிவைத்து நடுங்கும் குளிரில் நகர்ந்து கொண்டிருந்தனர் மக்கள். ஆலயத்தின் பெரு மண்ட பத்தின் வளைவுகளோ கோதிக் கனவு போன்று தெள்ளிய கூரை முகட்டில் வர்ண ஜாலம் காட்டிக் கொண்டிருந்தன. நடுவே மீளாத் துயில் கொள்ளும் மாவீரனின் பூத உடல் கம்பீரமாகக் கிடத்தப்பட்டிருந்தது. கூப்பிடு தூரத்தில் அவருக்கு மிகப் பழக்கமான காமன்ஸ் அவையின் பெருமண்டபம் அமைதியில் ஆழ்ந்து கிடந்தது. அங்குத்தான் அரை நூற்றுண்டிற்கும் மேலாக அந்த அரசியல் அரிமாவின் வீர கர்ஜனை ஒலித்து ஓய்ந் திருந்தது. அங்குத்தான் அவரது பொது வாழ்வின் வெற்றி களையும் தோல்விகளையும் அவர் பெற்றிருந்தார்.

இரண்டாவது உலகப் போரில் பிரம்மாண்டமான வெற்றி களைக் குவித்த வின்ஸ்டன், இருமுறை பிரதமராகப் பதவியேற்ற சர்ச்சில், 'காமன்ஸ் அவையின் மகவு' என்று அழைக்கப்பட்டதில் வியப்பில்லை. 1964ஆம் ஆண்டு ஜூலை திங்களில் ஒருநாள் சர்ச்சில், முதுமையிலும், தளர்ச்சியிலும், பிணியிலும் களைப் படைந்து காமன்ஸ் அவையில் இருந்து வீடு திரும்பிய போது இருவர் அவருக்குக் கைகொடுத்துதவ வேண்டியதாக இருந்தது. அந் நிலையிலும் தம் குறைகளைப் பொருட்படுத்தாமல் மிகுந்த

[1]The Churchill I knew—By EISENHOVER D. National Geo, Magazine Aug. 1965.

சிரமத்தோடு அவைத் தலைவருக்கு வழக்கமான மரியாதையைச் செலுத்திவிட்டுத்தான் வெளியேறினர். இவையாவும் பழைய நினைவுகள். இன்று கிரனேடியர் காவல் படையைச் சேர்ந்த எட்டு வீரர்கள் அவரது உடலை வெஸ்ட்மின்ஸ்டர் ஆலயத்திலிருந்து வெளியே எடுத்துச் சென்றனர். மேகம் சூழ்ந்து, குளிர் வாட்டிய அத் தினத்தில், அவரது சவப் பெட்டியின் மேல் சுற்றப்பட்டிருந்த நாட்டுக் கொடியின் வண்ணங்கள் கண்ணைப் பறித்தன. தேசியக் கடற்படை வீரர்கள் அவரது உடலைச் சுமந்து சென்றார்கள். சர்ச்சிலின் பொது வாழ்வில் அவருடன் சம்பந்தப்பட்டிருந்த வீதிகளின் இரு மருங்கிலும் மக்கள் தலைகவிழ்ந்த வண்ணம் தம் தலைவருக்கு அஞ்சலி செலுத்தினார்கள்.

பீரங்கிக் குண்டு வெடித்ததும், அவரது திருவுடலைத் தாங்கிய வண்டி கம்பீரமாக நகரத் தொடங்கியது. பாராளுமன்ற வளாகத்திலுள்ள செயின்ட் மார்கெரட் (St. Margaret) தேவாலயம் வளாகத்தின் ஒரு மூலையில் இருக்கின்றது: இங்குத்தான் சாமுவேல் பீப்ஸ், ஜான் மில்டன் ஆகியோரின் திருமணங்கள் நிறைவேறின. இதே ஆலயத்தில்தான் சர்ச்சிலின் திருமணமும் நடந்தது. எண்ணூறு விருந்தினர்கள் வந்திருந்து அந்தப் பிரபலத் திருமணத்தில் கலந்து கொண்டு ஆசி கூறிய நாள்களை மக்கள் நினைத்துக் கொண்டனர். இந் நிகழச்சியின் பின்னர் அரை நூற்றாண்டுக் காலத்தில் சர்ச்சில் வரலாற்று ஆசிரியராகவும், வீரராகவும், பத்திரிகையாளராகவும், அரசியல்வாதியாகவும், பொதுத் தொண்டராகவும் பெரும் புகழுக்கு உரியவராகவும் ஆகி விட்டார். பெருங் கீர்த்தியும், செல்வமும், பாரம்பரியமும் பெற்றிருந்த பெருங் குடும்பத்தின் வழித் தோன்றல் வின்ஸ்டன். குடிச் சிறப்பால் அவரைக் கலைத் தேவதை வந்து அணைத்துக் கொள்ளவில்லை. பள்ளி நாள்களில் கல்வி பெற அவர் பட்ட சிரமங்கள் கொஞ்சநஞ்சமன்று. எனினும், ஆங்கிலத்தை ஐயந் திரிபறக் கற்றார். நினைவாற்றலால் நம்ப முடியாத சாதனைகளைச் செய்து காட்டினார். முயற்சியாலும் நல்ல காலத்தாலும் அவர் இராணுவத்தில் சேர்ந்து முன்னேற வழி பிறந்தது.

விக்டோரியா பேரரசியாரின் வீரயுகத்தில் இளைஞர்கள் களம் புகுந்து கடமையாற்றுவதில் பேரார்வம் கொண்டிருந்தார்கள். தேடிய வாய்ப்பெல்லாம் சர்ச்சிலுக்குக் கிடைத்தன. படிப் படியாக அவர் சாதித்த போர்ச் சாதனைகள் விரிவாக முன்னர்க் கூறப்பட்டுள்ளன. இவை யாவற்றையும் மக்கள் கூட்டம் நினைந்து நினைந்து நன்றி கூறியது. இதற்குள் இசைப் பேரறிஞர் ஹேண்டலின் (Handel) 'இறுதிப் பயணம்' என்ற இசைப்

பண்ணின் கம்பீரமான ஒலி தொனிக்க, தலைவரின் திருவுடலைச் சுமந்து சென்ற வண்டி வெள்ளை மாளிகையை அடைந்தது. நடைபாதையில் பார்வையாளர்கள் கவலை தோய்ந்த முகத்துடன் தலைவரின் இறுதித் தரிசனத்திற்காக நின்றனர். ஃபிரான்ஸ், பெல்ஜியம், ஹாலந்து, டென்மார்க்கு, நார்வே போன்ற நாட்டு மக்கள் தமது விடுதலையைக் காத்த வீரருக்கு அஞ்சலி செய்வதற்காகத் தம்தம் கொடிகளைத் தாங்கிக் கொண்டு நீர்மல்கிய கண்களுடன் நின்றனர். வழியில் இரு போர்களில் உயிரிழந்தவர்களுக்காகக் கட்டப்பட்ட நினைவுச் சின்னத்தை ஊர்வலம் கடந்து சென்ற போது கொடிகளெல்லாம் தாழ்த்தப்பட்டன. அடுத்து பிரதமரின் இல்லமான டவுனிங் வீதி பத்தாம் எண் இல்லத்தில் இரு விளக்குகள் மட்டும் எரிந்து கொண்டிருந்ததை மக்கள் கண்ட போது, அங்கே நாட்டுத் தலைவன் ஆற்றிய நற்பணிகளை நினைக்கத் தவறவில்லை. நேசப் படைகள் தோல்வி மீது தோல்வி கண்டு, நம்பிக்கை இழந்த நிலையிலுங்கூட 'வருங்காலத்தின் விதியை நிர்ணயிக்கும் பொறுப்பிலிருந்து நான் விலகப் போவதில்லை' என்று வீர சங்கல்பம் செய்த வெற்றித் திருமகனை மக்கள் கொண்டாடினர். 'உழைப்பு, கண்ணீர், வியர்வை இவையே என் காணிக்கை' என்ற ஒலி அவர்களின் செவிகளில் ரீங்காரம் செய்து கொண்டிருந்தது.

1945ல் போர் முடிவுற்று வின்ஸ்டன் பதவி விலக நேர்ந்த போதும் நாட்டு மக்களுக்கு விடுத்த இறுதிச் செய்தியில் அவர்கள் தலைவருக்கு நல்கிய முழு ஒத்துழைப்பிற்காக நன்றி கூறினார். இறுதிப் பயணத்தில் படைவீரர்கள் அமைதியாக அணிவகுத்து நின்றனர். வெள்ளை மாளிகையை நோக்கி ஊர்வலம் நெருங்கிய போது, வீரர்கள் தங்களுடைய துப்பாக்கியை ஏந்தி நின்றனர். போர் முரசுகள் ஒலிக்கவில்லை. தலை குனிந்த வண்ணம் அவர்கள் நின்றனர். கருப்புத்துணி போர்த்தப்பட்ட கடற்படை முரசுகள் சவப்பறை ஒலிக்க, ஊர்வலம் டிரஃபால்கர் சதுக்கத்தை அடைந்தது. அங்கே, வீரர் நெல்சனின் சிலை கம்பீரமாக நின்றது. தம்முடன் போரிட்டு மடிந்த மன்னர்களையும், தளபதிகளையும் ஏளனத்துடன் நோக்குவதுபோல் நெல்சன் நின்றார். பீரங்கி வண்டியில் மீளாத் துயில்கொள்ளும் தலைவர் பண்டைய வெற்றிகளிலும், பெருமைகளிலும் பெரும் பங்கேற்றவர். உலக மகா வீரர்களின் வரிசையில் மகத்தான இடத்தைப் பெற்றவர். தேசீயக் கலைக்கூடத்தில் ஒருநாள் அவரது பேரால் ஒரு நினைவுச் சின்னம் நிலைபெறும் என்பதிலும் ஐயமில்லை. ஊர்வலம் இலண்டன் நகர வீதிகளின் வழியே செல்கையில் மக்களும், வீரர்களும் ஜெர்மன் குண்டுவீச்சுகளுக்குப் பலியான நகரை

நினைத்தபோது தங்களையும், தங்களது அழகு நகரத்தையும் காப்பாற்றித் தந்த வின்ஸ்டனையும் மனமாரப் போற்றி நன்றி கூறினார்கள். எவ்வாறு உலக வரலாற்றிலே இல்லாதவாறு சிறு எண்ணிக்கையினரான பிரிட்டிஷ் வான்படை வீரர் பெரும் எண்ணிக்கையினராக இருந்த பிரிட்டிஷ் மக்களைக் காப்பாற்றினார்கள் என்று சர்ச்சில் குறிப்பிட்ட போற்றுரையை நெஞ்சார நினைந்து அவரை வாழ்த்தினார்கள்.

முதுமையாலோ பிணியின் காரணமாகவோ நடக்க முடியாதவர்கள்கூட, தம் இல்லங்களிலிருந்து தொலைக்காட்சியின் மூலம் தலைவரின் இறுதிச் சடங்குகளைக் காணக்கூடிய வாய்ப்பிருந்தும், சிரமங்களைப் பாராமல் அவரது இறுதிப்பயணத்தில் பங்கு பெற்றுத் தமது மரியாதையைச் செலுத்துவதற்காக நேரில் கலந்துகொண்டனர். பிரிட்டனின் வரலாற்றில் முதல் முறையாக பிளிட் வீதியின் பத்திரிகையாளர்கள் கருப்புநிறக் கழுத்தணியைத் தரித்துக் கொண்டிருந்தனர். தங்களில் ஒருவராக இருந்து பிரதமராக உயர்ந்த மாமேதைக்கு அஞ்சலி செய்ய அவர்கள் வரலாற்றையே மாற்றினார்கள் போலும்! ஊர்வலம் இறுதியாகச் செயின்ட் பால் (St. Paul's) பேராலயத்தை அடைந்தது. இந்தப் பிரம்மாண்டமான கோவிலின் கம்பீரமான கோபுரம் இருண்டிருந்த வான்முகட்டைக் கிழித்துச் செல்வதுபோல் இருந்தது. ஆலய வாயிலின் அருகில் வின்ஸ்டனின் சவப் பெட்டியைச் சுமந்து வந்த வீரப் பெருமக்கள், சர்ச்சிலின் சாதனைகளில் பங்குபெற்ற சக தோழர்கள் வாளாவிருந்தனர். கோவிலின் கதவுகள் திறக்கப்பட்டன. போரில் வீழ்ந்த வீரர்கள், வெலிங்டன் போன்ற மாவீரர்கள் ஆகியோரின் சிலைகளையும், சமாதிகளையும் கடந்து சர்ச்சிலின் திருவுடல் ஆலயத்தின் நடுவில் வைக்கப்பட்டது. ஆலய இசைக் குழுவினர் சர்ச்சிலுக்கு மிகவும் பிரியமான 'குடியரசின் களப்பரணி' (Battle Song of the Republic) என்ற போர்ப் பண்ணை முழக்கினார்கள். 'வின்ஸ்டன் முழக்கிய எக்காளத் தொனி கேட்டவர்கள் பின் வாங்கமாட்டார்கள்' என்பதே பாடலின் கருப் பொருளாகும். இப் பண்ணை ஆக்கியவர் அமெரிக்க ஜூலியா வார்ட் ஹோவ் (Julia Ward Howe) என்றாலும், அது இங்கிலாந்தின் வீரமகனாகிய சர்ச்சிலுக்கும் பொருந்தும். சர்ச்சிலின் அன்னையார் அமெரிக்கர் என்பதில்தான் அவர் எத்தனை பெருமை கொண்டிருந்தார்! சர்ச்சில் தம் அன்னையின் சமாதியை இரகசியமாகச் சந்தித்து, மலர் சார்த்தி மாதாவுடன் மனமுருகிப் பேசுவார். போரில் வெற்றி கிடைக்குமாறு மௌனப் பிரார்த்தனை செய்வார்.

ஆலயத்திலிருந்து ஊர்வலம் தொடர்ந்து தேம்ஸ் ஆற்றினைக் கடந்தபோது குழல் இசைகள் ஒலித்த காட்சி உலகமே மறைந்த மாவீரனுக்காகப் புலம்பி அழுவதுபோல் இருந்தது. இலண்டன் டவர் (Tower of London) என்ற புராதனக் கோட்டையைக் கடந்து அவரது சடலம் எடுத்துச் செல்லப்பட்டது. பின்னர் 'ஹேவன் கோர்' (Havengore) என்ற படகில் ஆற்றைக் கடந்து செல்ல, பீரங்கிகள் முழங்க கடற்படையைச் சேர்ந்த இசைக்குழு வினர் 'ரூல் பிரிட்டானியா' (Rule Britania) என்ற எழுச்சி மிக்க கீதத்தை ஒலிக்க, புகழ்பெற்ற ஆங்கிலப் பெருமகன் இறுதி முறை யாக நீரில் இறங்கினார். ஒரு நூற்றாண்டின் வரலாறு முடி வுற்றதுபோல் தோன்றியது. வின்ஸ்டன் தம் பெற்றோர்களுக்கு அருகே துயில் கொள்கின்றான். பிளேடன் கல்லறைத் தோட் டத்திலிருந்து பார்த்தால் தூரத்தில் சர்ச்சிலின் பிறந்த இட மாகிய பிளென்ஹிம் மாளிகையைக் காணலாம். கல்லறையில் இறுதிப் பிரார்த்தனைகள் ஐந்து நிமிடம்கூட நீடிக்கவில்லை. முதல் பிரார்த்தனை முடிவுற்றதும் சர்ச்சில் சீமாட்டியார் சமாதியைக் கடந்து வணங்கிச் சென்றார். அதனைத் தொடர்ந்து சர்ச்சில் குடும்பத்தார்கள் ஒவ்வொருவரும் மௌனமாகத் தலை குனிந்து மறைந்த தம் குடி முதல்வருக்கு வணக்கம் செலுத்தினார்கள். இது முடிவுற்றதும் புதிய சமாதியை மலர்ப்போர்வை யொன்று மூடிக்கொண்டது. குடியரசுத் தலைவர்களும், மன்னர்களும் ரோஜா, டூலிப் மலர்களால் அஞ்சலி செய்தனர். கிளெமென் டைன் சீமாட்டியார் 'எம் அன்புக் கணவர் வின்ஸ்டனுக்கு' என்று வாசகமிட்டுச் சாத்திய மலர்வளையம் உள்ளத்தை உருக் கியது. ஆனால், இதனைவிட மக்கள் உள்ளங்களைத் தொட்ட மற்றொரு மலர் அஞ்சலியை அதிகாலையில் போர் நினைவுச் சின்னத்தில் மக்கள் கண்டனர். அதில், 'வின்ஸ்டன் ஸ்பென்சர் சர்ச்சிலுக்கு இந்த பிரிட்டிஷ் தீவும், உலகமும் மிகவும் கடமைப் பட்டுள்ளது. அவருக்காக மீளாத்துயரம் கொள்கிறது. உமக்கு நன்றி அண்ணலே' என்று எழுதப்பட்டிருந்தது.[1]

சர்ச்சிலின் இறுதிப்பயணம் ஒரு வெற்றிப் பவனி என்றால் அது உண்மைதான். ஆங்கில நாடும், அனைத்துலக நாடுகளின் குடும்பமும் துக்கத்தால் தலை குனிந்து நின்ற காட்சியை விட, அங்கே அவர்கள் வாழ்வுபெற்றுத் தலைநிமிர்ந்து நின்ற முறைதான் குறிப்பிடத்தக்கது. தமக்கு வாழ்வு தந்த பெரு மகனுக்கு அவர்கள் அஞ்சலி செய்து நின்ற பெருமிதமான

[1] 'Be Ye men of Valour' London News, Feb 1965.

காட்சியே காட்சி. அரசர்களும், அரசிகளும், பிரதமர்களும், குடியரசுத் தலைவர்களும் பேராலயத்தின் மகத்தான விமானத்தின்கீழ் துயில் கொள்ளும் பெருமகனைக் கண்டு மரியாதை செலுத்த வந்தனர். என்றாலும் அந் நிகழ்ச்சி மனித முயற்சிகளும், உணர்வுகளும் எந்த அளவிற்கு உயரக்கூடும் என்பதையும், அவை எவ்வாறு பரிணமிக்கும் என்பதையும், விளக்கிக் காட்டும் ஒரு விழாவாகவும் விளங்கியது. அதனை ஈமச் சடங்கு என்கிறார்கள். என்றாலும் ஒரு சில வரலாற்று நிகழ்ச்சிகள்தாம் இத்தகைய முழுமை பெற்று விளங்கக்கூடியவை. இலண்டன் மாநகரத்தின் வரலாற்று மேடையில் தமக்குரிய பாத்திரங்களைத் தாங்கி நாடகமாடியவர்கள் ஆயிரமாயிரம் பேர். இதற்கு வரலாறு விளக்கவுரை தருகின்றது. ஆன்றோர் கூட்டம் அணி வகுத்துச் சென்றது. அவர்களின் திருமுகத்தில் கண்ணியமும். கட்டுப்பாடும், கடமையும் ஒளிர்ந்தன. இசைக்குழுவினர் சோகமான, பெருமிதம் தொனிக்கும் பண்களை, மனிதன் ஆண்டாண்டு காலமாக மரணத்தை நினைவுபடுத்திக் கொள்ளுமாறு ஆக்கிய துன்பியல் பண்களை ஒலித்து ஓயவில்லை. வின்ஸ்டனின் தொண்ணூறுவது வயதைக் கொண்டாடுவது போன்று பீரங்கிகள் அதிர்வெடிகளை முழங்கிக் கொண்டிருந்தன. கம்பீரமாகப் பட்டொளி வீசிப் பறக்கும் கொடிகள் கவிந்த தலையுடன் வணக்கம் செலுத்திக் கொண்டிருந்தன. பிக் பென் (Big Ben) கடிகாரம் அமைதியாக நின்ற பொழுது காலமே செயலிழந்து நின்றுவிட்டதுபோல் தோன்றியது.

வின்ஸ்டன் சர்ச்சிலின் மறைவிற்காகச் செய்யப்பட்ட இறுதிச் சடங்குகளில் துன்பியலே தொனிக்கவில்லை. மக்கள் எதற்காக அழுதார்கள், கண் கலங்கி நின்றார்கள்? உரிமை பெற்ற உலகை எழுச்சி கொள்ளுமாறு தூண்டிய ஒரு பெருமகன் வாழ்ந்திருந்த பொன்யுகம் மறைந்து போகிறதே யென்றுதான் அவர்கள் சோகத்தின் சிகரமாய் நின்றார்கள். ஆளுமையின் உச்சியில் தாம் கண்ணியம் பெற்று ஆகாயம் அளவு உயர்கின்ற நிலையினை, தங்கள் பிரதமரின் மரணம் மறைக்கின்றதே என்றுதான் மக்கள் கண்ணீர் வடித்தார்கள். பிரதமர் ஹெரால்ட் வில்சன் விடுத்த இரங்கல் செய்தியில், 'சர்ச்சில் தமது நிறைவான வாழ்வில் வரலாற்றைப் படைத்தார். இப்பொழுது அமைதியில் துயில் கொள்கிறார். வரலாற்றை மக்கள் படிக்கின்ற போதெல்லாம் அவர் படைத்த வரலாற்றை அவர்கள் நினைத்துக்கொள்வார்கள்' என்று கூறியது மிக உண்மையாகும். 'கருவிலே திருவுடைய இக் கரும வீரரின் மரணத்தால் உலகமே வறுமை யடைந்து விட்டது' என்று பிரிட்டிஷ் பேரரசியார் குறிப்பிட்டார்கள்.

அமெரிக்க ஜனாதிபதி ஜான்சன் 'சர்ச்சில் வரலாற்றின் மகவு, அவர் சொன்னவையும், சாதித்தவையும் என்றும் சாகாமல் வாழக்கூடியவை' என்று பாராட்டினார். 'சர்ச்சிலின் மறக்க முடியாத சாதனைகளும், பணிகளும் பல நூற்றாண்டுகளுக்கு மக்களின் உள்ளங்களில் போற்றிப் பாதுகாக்கப்படும்' என்று இந்தியக் குடியரசுத் தலைவர் இராதாகிருஷ்ணன் அவர்கள் போற்றுரை வழங்கினார்கள். இவ்வாறு எந்த மக்களுக்காகச் சர்ச்சில் தம் வாழ்நாளெல்லாம் பணியாற்றினாரோ, அவர்களின் இதயங்களில் என்றும் வாழ்கிறார்.

## 23. சர்ச்சில் ஓர் அரசியல் வல்லுநர்

சர்ச்சிலின் அரசியல் வாழ்வு அரை நூற்றாண்டு நீடித்தது. அவரது பொது வாழ்வினைப் பற்றி எழுந்துள்ள சர்ச்சைகளும், திறனாய்வுகளும், தாக்குதல்களும் பலவாகும். குறிக்கோளில்லாத சந்தர்ப்பவாதி யென்றும், அரசியலில் சாகசம் புரியவந்த வாய்ச் சொல் வீரர் என்றும் சிலர் அவரை ஒதுக்கி விடுவதுண்டு. எனினும், பரந்த நோக்குடன், அவருக்கே உரிய தனிப்பட்ட முறையில், ஒவ்வொரு பிரச்சினையையும் அணுகும் திறம்படைத்த முன் நோக்கமுடைய 'அரசியல் வல்லுநர்' என்ற தகுதி பெறத் தமக்கு உரிமையுண்டு என்று சர்ச்சில் விவாதிக்கிறார். அவரது சாதனைப் பட்டியலைக் காண்கின்றபோது அவர் கோருகின்ற உரிமை நேர்மையானதென்பதைக் காலம் மெய்ப்பிக்கின்றது. அவரது பொது வாழ்வின் தொடக்கத்திலிருந்தே சர்ச்சில் அரசியல் வல்லுநரேயன்றி வெறும் அரசியல்வாதி மட்டும் அல்லர். சிலர் அரசியல் வாழ்வை அடக்கமான முறையில் தொடங்கிப் படிப்படியாக வளர்ச்சியடைந்து அரசியல் வல்லுநராக முழுமை பெறுவார்கள். ஆனால், சர்ச்சிலோ மேல் மட்டத்தில் அரசியலில் புகுந்தவர். அவர்தம் தந்தையார் நிதி அமைச்சராக இருந்து கன்சர்வேடிவ் கட்சி ஜனநாயகப் பண்பு களைப் பெறக் காரணமாக இருந்தவர்.

எனவே, சர்ச்சிலுக்குத் தொடக்க காலத்திலேயே பல அமைச்சர்கள், அமைச்சர்களாகப் பொறுப்பேற்க இருந்தவர்கள் ஆகியோரின் நட்புறவு கிடைத்தது. முப்பத்துமூன்றாம் வயதில் அவரே அமைச்சர் பதவி பெறவும் முடிந்தது. பாராளு மன்றத்தில் இறுதி வரிசையில் அமராமல், முன்னணி அரசியல் வாதியாக இருந்தார். எதிலும், கட்சியின் போக்கிற்கு அடங்கி விடாமல், தனித்து நிற்பது அவரது இயல்பாகும். டோரிக் கட்சி யினராகவோ, லிப்ரல் கட்சியினராகவோ, உயர் குடியாள ராகவோ, ஜனநாயக வாதியாகவோ - எந்த நிலையில் அவர்

இருந்தாலும் என்றும் அரசியல் வல்லுநராகவே அவர் திகழ்ந்தார். அவரை அறிவு மேதை என்று போற்றலாம். அல்லது செருக்குற்றவர் என்று தூற்றலாம். ஆனால், எந்த நிலையிலும் அவரை அடையாளம் கண்டுகொள்ள முடியும். சர்ச்சில் தாமாகவே கற்று முன்னேறியவர். அரசியல் வெல்திறந்தான் அவர் கற்ற கல்வியின் கருப்பொருள். கிப்பன், மெகாலே போன்ற வரலாற்றறிஞர்களின் கருத்துகளையும், வழி முறைகளையும் கற்றுக்கொள்ள வேண்டுமென்றும், தொன்மை வாய்ந்த ஆன்றோர்களின் எண்ணங்களை நிகழ்காலத்திற்குப் பயன் படுத்த வேண்டுமென்றும் அவர் நூல்களை விரும்பிப் படித்தார். பாராளுமன்ற நடவடிக்கைகளை நுணுக்கமாக ஆராய்ந்து, அவற்றைப் பற்றித் தாம் என்ன கூறியிருப்பாரோ, அவற்றையெல்லாம் தம் குறிப்புகளில் குறித்துக் கொள்வார். தமது சொந்த அனுபவப் பின்னணி இல்லாத எந்த அரசியல் விவாதங்களிலும் அவர் பங்கெடுத்துக் கொள்வதில்லை. அவரது உள்ளம் வளமான வண்டல் போன்றது. ஒவ்வொரு பிரச்சினையையும் அவர் அறிவாற்றல் கொண்டு ஆராய்வதுண்டு. ஆனால், ஓர் அரசியல் வல்லுநன் வெறும் தத்துவரீதியான ஆய்வு நடத்திப் பயனில்லை.

சர்ச்சில் ஒரு குறிப்பிட்ட பிரச்சினை பற்றிய செயலாக்கங்களையும் ஆராய்வதுண்டு. சர்ச்சில் 'பழமை விரும்பி' என்பதை யாரும் மறுக்க முடியாது. பழம் பெரும் தொன்மை வாய்ந்த இங்கிலாந்தையே அவர் பாதுகாக்க விரும்பினார். போர் முடிவுற்றதும் சகலமும் உள்நாட்டிலும் சரி, வெளிநாட்டிலும் சரி, பழமையின் அடிப்படையில்தான் அமையும் என்பது மக்கள் அறியாத வொன்றன்று. 1939ல் இரண்டாம் உலகப்போர் மூண்டதும், சர்ச்சில் மீண்டும் கடற்படைத் துறையின் தலைவரானார். தமக்கு உடன்பாடாகாத சகாக்களுடன் இணைந்து அவர் பணியாற்றவேண்டிய நிலை ஏற்பட்டது. கழிந்தவைகளை ஒழிந்தவைகளாகக் கருதி மறந்து விடுவது சர்ச்சிலின் இயல்பு. அமைச்சர் என்ற முறையில் போருக்குத் தேவையான வேகத்தையும், விறுவிறுப்பையும் மக்கள் அவரிடம் எதிர்பார்த்தனர். எனினும், பிறருடன் ஒத்துழைக்கின்ற பண்புநலம் அவரிடம் ஏற்படாத நிலை மீண்டும் உருவாகியது. பிரதமர் நெவில் சேம்பர்லேன் சர்ச்சில் தம்மையே பிரதமராக எண்ணிக்கொண்டு நடக்கிறார் என்றுகூட ஒருமுறை குறை கூறினாராம். சர்ச்சில் சேம்பர்லேனைப் போலன்றி ருஷ்யாவினுடையவும், அமெரிக்காவினுடையவும் நட்புறவை விரும்பினார். பன்னாட்டு உறவுகளின் மதிப்பைப் பல ஆங்கிலேயர்களைப்போலச் சர்ச்சிலும் உறுதியாக

நம்பியவர்; ருஷ்யாவும் ஜெர்மனியும் ஒரு நாள் நேர் எதிரிகளாக மாறிவிடவும் கூடும் என்பதைச் சர்ச்சில் எதிர்பார்த்தார். ருஷ்யா போலந்தின் கீழ்ப்பகுதிகளையும், ஃபின்லாந்தையும் தாக்கியதைச் சர்ச்சில் எதிர்க்கவில்லை. அதே நேரத்தில் ஜெர் மனியரை பிரிட்டிஷ் கடற்படைகள் தாக்கித் தகர்த்தெரியு மென்பது சர்ச்சிலின் எண்ணம். ஆனால், பின் நிகழ்ச்சிகள் கடற் படையுடன் வான்படையும் ஒத்துழைக்க வேண்டியதின் அவசி யத்தை வலியுறுத்தின. இதனைச் சர்ச்சில் உணரத் தவறியது அவரது போர் வெல்திறத்தில் உள்ள முரண்பாட்டைக் காட் டியது. எனவே, நார்வேயில் நிகழ்ந்த தவறு மத்திய தரைக் கடல் பகுதியிலும், சிங்கப்பூரிலும் மீண்டும் நிகழ்ந்தது.

நார்வே சிக்கல் கன்சர்வேடிவ் கட்சியில் கருத்து வேற்றுமை களை உருவாக்கியது. இந் நிலையில் சர்ச்சில் பிரதமரானார். எளிதாக எல்லா அதிகாரங்களையும் கைப்பற்றினார். கன்சர்வேடிவ்கள் முக்கிய பதவிகளைப் பெற்றனர். அரசினருக்கு நிர்வாகத்துறை, வணிகப் பெருங்குடி மக்கள் ஆகியோரின் ஆதரவு கிடைத்தது. போரின் தேவைகள் காரணமாக ஏற்படக்கூடிய சமூக அரசியல் மாற்றங்கள் மட்டுமே நிகழுமென சர்ச்சில் வலியுறுத்தினார். சர்வ கட்சிகளின் ஆதரவு அவருக்குக் கிடைத்தது. மிக உயர்ந்த பதவிகளிலெல்லாம் சர்ச்சிலின் தலைமை விளங்கியது. இந்த வாய்ப்பிற்காக அவர் தமது ஆயுள் முழுவதும் தயார் செய்து வந்தார். சர்ச்சில் ஒரு சிறந்த அரசியல் வல்லுநர். உயரிய பண்புகளைப் பெற்றிருந்த அவர் போர்க்காலத்தில் எவ்விதம் நாட்டிற்குப் பணிபுரிந்தார் என்பதிலிருந்துதான் அவரது அர சியல் வெல்திறத்தை நாம் மதிப்பிட முடியும். பாதுகாப்புத் துறை அமைச்சராக, முப்படைகளின் தலைவர்கள் மீது அவர் முழு மேல் அதிகாரம் கொண்டிருந்ததால் போரின் கேந்திரங் களைக் கட்டுப்படுத்துவதில் பிரதமர் லாயிட் ஜார்ஜைவிட சர்ச்சில் அதிக திறமையுடன் செயல்பட முடிந்தது. போர்த் திட்டங்களில் ஒருமைப்பாடும் ஒற்றுமையும் காண முடிந்தது.

### தனித் தன்மை பெற்ற தலைவர்

'வெளிநாட்டு விவகாரங்களில் சர்ச்சில் முழு அதிகாரம் கோரினார். அதுகாலை வெளிநாட்டு அமைச்சராக இருந்த அன்டனி ஈட்டனுக்கும் சர்ச்சிலுக்கும் இடையேயுள்ள நட்புறவு அவர் தமது தனிப்போக்கில் நடவடிக்கைகளை மேற்கொள்ள உறுதுணையாக இருந்தது. சர்ச்சிலின் வெளிநாட்டுக் கொள்கை அவரது உள்ளுணர்வாலும், பக்குவப்பட்ட சிந்தனைகளின் விளை

வாகவும் தாமாகவே உருவாக்கிக் கொண்டதாகும். அவர் பிரச்சார சாதனங்களையும், வானொலிப் பேச்சுகளையும் எந்த நேரத்திலும் தமக்காகப் பயன்படுத்திக் கொள்வார். அவர் தம் வானொலிப் பேச்சுகள் மக்களால் மிகவும் விரும்பப்பட்டன. பாராளுமன்ற உரைகளும், செய்தித்தாள்களும் அவர் தம் வன்மை மிக்க ஆயுதங்களாகும். சாதாரண மக்கள், தத்தம் அன்றாடப் பணிகளை ஆற்றிக்கொண்டு நாட்டையும், விடுதலையையும் காக்கும் பொறுப்பையும் தம்மிடம் விட்டுவிட வேண்டுமென்பது சர்ச்சிலின் விருப்பமாகும். வல்லாட்சிப் பண்புகள் நிறையப் பெற்ற சர்ச்சில் விவாதங்கள் மூலம் தமது மனவலியை மக்கள் மேல் திணிக்க முடிந்தது. விவாதம் செய்வதற்கு அவர் என்றும் அஞ்சியவரல்லர். நியாயமான விவாதத்தின் பின்னர் தம் விருப்பங்கள் ஏற்றுக்கொள்ளப் படுவதையே அவர் விரும்பினர். அவரை எதிர்த்தவர்கள் பெர்து வாழ்வில் நிலைபெறவில்லை. சர்ச்சிலின் அரசியல் அரியணையின் அருகில் அவருடைய எதிரிகள் நெருங்க முடியா. ஹாலிஃபாக்சும், ஸ்ட்ராஃபோர்டும் கிரிப்சும் அவருக்குத் தொலைவிலேயே இருந்தனர். அன்டனி ஈடனைச் சர்ச்சில் தம் அன்பு மைந்தனைப்போல் கருதினர். அவரிடம் கட்சிச் சார்பற்ற நிபுணர்களும், சிவில் பணியாளர்களும் மட்டுமே அமைச்சர்களாக வெற்றி பெற முடிந்தது. தொழிலாளர் அமைச்சராக இருந்த பெவின் மட்டும் இதற்கு ஒரு விதி விலக்காவார்.

எத்தனையோ குறைபாடுகள் இருந்தும் சர்ச்சில் பிரிட்டனின் போர்க் கொள்கைகளை இயக்கும் உயர் அதிகாரம் பெற்றிருந் தார். பிரிட்டனின் போர்முனைத் திட்டங்கள் யாவும் அவர் வசமிருந்தன. ஹிட்லரைப் போன்று அவரும் படைத்தலைவர் களின் திட்டங்களில் தலையிட்டார். இது நவீனகாலப் பிரிட்டனில் அரசியல் வல்லுநர்கள் புரிந்திருக்கும் தனிப்பெரும் சாதனை யாகும். ஹிட்லரைத் தோற்கடித்து ஜெர்மனி பெற்றிருந்த வெற்றிகளைக் குலைப்பதே பிரிட்டனின் போர்க் குறிக்கோள் எனறு அவர் வகுத்தார். ஜெர்மனி சரணடைய வேண்டும், நேசப் படைகள் முழு வெற்றி பெற வேண்டுமென்ற கருத்தில் அவருக்கும் நாட்டு மக்களுக்கும் கருத்து வேறுபாடுகள் எவையும் இல்லை. சர்ச்சிலின் தீவிர போக்குகளை அனைவரும் பகிர்ந்து கொள்ளவில்லை என்பது உண்மை. 1940ஆம் ஆண்டு அமைதி கோரி ஹிட்லருடன் பேச்சுவார்த்தைகளை நடத்த சில முயற்சிகள் நடந்தபோதும்கூட, சர்ச்சில் தம் கொள்கைகளில் உறுதி பூண்டிருந்தார். ஹிட்லரைத் தோற்கடிப்பதுதான் அவரது வாழ்வின் ஒரே நோக்கமாகும். பிரிட்டிஷ் பேரரசின் பெருமை

யையும், அதன் சமூக அமைப்பையும் பேணிக் காக்க அவர் விரும்பினாலும், இவை யாவும் அவருக்கு இரண்டாம் படியான குறிக்கோள்கள்தாம். எனவே, சர்ச்சில் பிரிட்டிஷ் மக்களின் உணர்ச்சிகளைப் பிரதிபலித்தார் என்பதில் ஐயமில்லை. மக்களிடம் அவர் செல்வாக்குக் கொண்டிருந்ததற்கும் காரணங்கள் இல்லாமல் இல்லை. 'அவருடைய பண்புமிக்க வழி முறைகள், இலக்கியச் சுவையுள்ள சொற்பொழிவுகள் இவற்றை என்றும் விட்டுக்கொடுக்க மாட்டார். வெற்றிக்காக எந்தத் தியாகத்தையும் செய்யத் தயங்கமாட்டார்' என்ற முழு நம்பிக்கை- இவை யாவும் அவரது சிறப்பை உயர்த்தின. 'வெற்றி பெற்றே தீருவோம்' என்பது பிரிட்டிஷ் மக்களின் ஒரே குரலாக ஒலித்தது. வெற்றிக்கு அவர்கள் கொடுத்த விலை என்ன என்பது கேள்வி அன்று. அதற்குச் சர்ச்சில் மட்டுமே முழுப் பொறுப்பாளி ஆக மாட்டார்.

சர்ச்சில் பிரிட்டிஷ் மக்களுக்குப் புதியதொரு உறுதியை அளித்தார். ஜெர்மன் படைகளுக்கு முன்னால் சிதைந்து கொண்டிருந்த ஃபிரஞ்சு மக்களுக்கும் அதே உறுதியை வழங்க முயன்று அவர் தோல்வி கண்டார். ஒரு சில போர்க் கோஷங்கள் ஃபிரஞ்சு மக்களின் உணர்ச்சிகளுக்கு உயிர் கொடுக்குமென்று அவர் தப்புக் கணக்குப் போட்டார். பிரிட்டிஷ் கடற்படையின் நிகரற்ற வன்மையில் தளராத நம்பிக்கை கொண்டிருந்த சர்ச்சில் பிற நாட்டு விவகாரங்களில் தலையிடாமல் ஒதுங்கி நின்றார். ஜெர்மனியின் கடற்படை முயற்சிகள் அவரது உறுதியைக் குலைக்க முடியவில்லை. இந்த ஜெர்மனியின் எதிர்ப்பைக் கண்டு அவர் அஞ்சப்போவதில்லை. எனவே, ஜெர்மன் - ஃபிரஞ்சு சமரசம் ஏற்பட்ட பின்னர் ஹிட்லருக்கு எதிராகப் போரைத் தொடர வேண்டுமென அவர் ஃபிரஞ்சு மக்களின் ஆவலைத் தூண்டினார். இதற்குத் தலைமை தாங்க டிகால் தாம் சிறந்தவர் என்பதையும் அவர் கண்டார். டி காலைத் தொடர்ந்து ஆதரித்தார். சர்ச்சிலுக்கும், டி காலுக்கும் இடையே இருந்த சில ஒற்றுமைகள்தாம் இதற்குக் காரணமாகும். இவர்கள் இருவரும் மரபு வழியான சிறப்பிற்கும், பற்றுறுதிக்கும் சின்னங்களாக விளங்கினார்கள். இறுதியில் தோல்வி கண்ட நாடான ஃபிரான்ஸ் வெற்றி பெற்றது.

1940ஆம் ஆண்டு கோடையில் பிரிட்டிஷ் மக்களிடையே மகிழ்ச்சி ஆரவாரம் பெருக்கெடுத்தது. இதன் முக்கிய காரணம் பிரிட்டனைத் தாக்கிய ஜெர்மன் விமானப் படைகள் சின்னா பின்னமாக்கப்பட்டு ஓட்டமெடுத்ததுதான். இந்த வெற்றியால் ஊக்கு

விக்கப்பட்ட சர்ச்சில் மற்றவர்களுக்கு உணர்ச்சி யூட்டுவதற்கு இதனைப் பயன்படுத்தினர். இந் நாட்களில் மக்களிடையே சர்ச்சிலின் செல்வாக்கு உறுதியாக நிலைபெற்றது. மக்கள் உணர்ச்சி வயத்தால் ஒற்றுமைப்பட்டிருந்த நேரத்தில் அவர் களுக்காகத் தலை நிமிர்ந்து பேசிய மாவீரன் என்ற அடிப்படையில் தான் அவரது சிறப்பு அடங்கி இருந்தது. தன்னலம் நாடும் எந்த அரசியல்வாதியும் இதனைத் தனது சொந்த செல்வாக்கை வளர்க்கப் பயன்படுத்தி இருப்பான். ஆனல், சர்ச்சிலுக்கோ பதவியும், புகழும் ஒரு பொருட்டாக இருக்கவில்லை.

1940ஆம் ஆண்டின் அரசியல் நடவடிக்கைகளில் விளங்கிய நடைமுறைத் தன்மை தான் சர்ச்சிலின் அரசியல் வெல்திறத் திற்கு உரைகல்லாக இருந்தது. ஆபத்தின் உச்ச கட்டத்திலும் அவர் இறுதி வெற்றியைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தார். ஜெர்மனியோ வெற்றிகளைக் குவித்துக் கொண்டிருந்த நேரம். பிரிட்டிஷ் பேரரசின் துணைகொண்டும் பிரிட்டனின் மூலவளங்கள் ஜெர்மனியின் சக்திக்கு ஈடு கொடுக்க முடியாத நிலையில் இருந்தன. எனினும், பிரிட்டனின் முயற்சிகள் வெறும் தற்காப்போடு நின்று விடவில்லை; ஹிட்லருடன் சமரசம் செய்துகொள்ளப் போவ தில்லை என்ற உறுதிப்பாட்டின் இயல்பான விளைவுதான் இது. 'தோல்விக்குப் பதிலடி வெற்றிதான். இதனை விரும்பினல் மட்டும் போதாது, அடைந்தே தீரவேண்டும்' என்ற வீர வைராக்கியம் சர்ச்சிலை ஆட்டிப் படைத்தது. இதன் அடிப்படை பிரிட்டிஷ் பேரரசிலும், அதன் வன்மையிலும் அவர் கொண்டிருந்த அசைக்க முடியாத நம்பிக்கையாகும். பிரிட்டன் வெற்றி பெற்றிருக்கா விட்டால் சர்ச்சிலின் வாழ்க்கைப் பணியே விழலுக்கு இரைத்த நீராக ஆகியிருக்கும். நடுநிலை வகித்த ருஷ்யாவும், அமெரிக்காவும் ஒருநாள் போரில் ஈடுபட்டே தீர வேண்டுமென்றும் சர்ச்சில் நம்பினர்.

ஓர் அமெரிக்க-பிரிட்டிஷ் உடன்பாடு உருவாகிக் கொண்டிருக் கிறது என்று அவர் எண்ணியது தவருகும். ஹிட்லரைத் தோற் கடிக்க விரும்பிய அமெரிக்கா, பிரிட்டிஷ் பேரரசைக் காப்பதில் அக்கறை கொள்ளவில்லை. அமெரிக்கப் பாதுகாப்பிற்குப் பிரிட் டனின் உதவி தேவை என்ற அளவோடு ரூஸ்வெல்ட்டும் நிறுத்திக் கொண்டார். சோவியத் ருஷ்யாவைப் பொறுத்த வரையில் சர்ச்சிலுக்கு உணர்ச்சி வழியான ஈடுபாடு கிடையாது. ஜெர்மனி யும், ருஷ்யாவும் எதேச்சதிகார நாடுகள் என்ற வகையில் இரு நாடுகளுக்கும் இடையே உண்மையான கூட்டுறவு ஏற்படும் என்று சர்ச்சில் நம்பவில்லை. சோவியத்தின் அனைத்துலகக்

கம்யூனிசப் பிரச்சாரத்தைப் பற்றியும் அவர் அக்கறைப் படவில்லை. ருஷ்யாவின் வன்மையை அவர் குறைத்து மதிப் பிட்டார். ஹிட்லரைத் தோற்கடிப்பதில் ருஷ்யாவை விட அமெரிக்காதான் அதிகத் துணைபுரியமென்று அவர் கருதினூர். ருஷ்யாவும் அமெரிக்காவும் தம்முடன் இணைந்துதான் பிரிட்டன் வெற்றி பெற முடியுமென்பது சர்ச்சிலின் கருத்து அன்று. இங்குச் சர்ச்சிலின் இரு வேறுன தன்மைகளைக் காணமுடியும். ஒரு சர்ச்சில் நேச நாடுகளின் பேரணியை உருவாக்கி அது சிதைந்து விடாமல் காத்தவர். மற்றொரு சர்ச்சில் பேரணியின் துணை யின்றியே பிரிட்டனின் போர்த் தந்திரங்களை இயக்கியவராவார்.

### போரியல் மறவர்

ஜெர்மனியின் மீது குண்டுகளைப் பொழிவதற்காகப் பிரிட் டனின் விமானப்படை மிகச் சிறந்த முறையில் தயார் செய்யப் பட்டது. பிரிட்டனின் தொழிற்சாலைகள் குண்டுகளை உற்பத்தி செய்தன; தரைப்படை இரண்டாம் இடத்தைத் தான் பெற்றது. செய்தித் தொடர்புகளையும், தொழில் தளங்களையும் சிதைப் பதற்காக மட்டுமே குண்டுகள் வீசப்படவேண்டு மென்ற அறநெறி பேசப்பட்டது. ஆனுல், ஜெர்மன் மக்களின் மன உறுதியைக் குலைப்பதற்காக குண்டுகள் சரமாரியாக வீசப் பட்டன. இவை பிரிட்டிஷ் மக்கள் சிலரின் எதிர்ப்பையும் கிளப்பின. மத்தியதரைக் கடல் பகுதியில் பிரிட்டன் எகிப்தை யும், ஜிப்ரால்டரையும் கேந்திரமாகக் கொண்டிருந்தது. இத்தாலி போரில் குதித்ததாலும், ஃபிரான்சின் தோல்வியாலும் 1943ஆம் ஆண்டுவரை பிரிட்டிஷ் போர்க் கப்பல்கள் மத்தியதரைக் கடலுக்குள் செல்வது தடைப்பட்டது. எனவே, மத்திய கிழக்கில் எண்ணெய் வளங்களைப் பாதுகாக்கப் பிரிட்டிஷ் கடற் படை உதவியது. எகிப்து, துருக்கிப் படைகளும், பிரிட்டனும் சேர்ந்து பால்கன் நாடுகளை முறியடிக்க முடியும் என்பதும் சர்ச்சிலின் கனவாகும். நவீன படைப் பலம் இல்லாத துருக்கி ஜெர்மனியை முறியடிக்கும் என்றும் அவர் எண்ணியதும் விந்தை தான். இத்தகைய முரண்பாடுகளுக்கெல்லாம் விளக்கம் காண வேண்டுமெனில், சர்ச்சில் இலட்சிய வாதமும், நடைமுறைச் செயலாக்கமும் கலந்த ஒரு பிறவி என்பதை உணர வேண்டும்.

சர்ச்சில் எதிர்பார்த்த துருக்கிக் கூட்டுறவு ஏற்படவில்லை. மாருக மத்திய தரைக்கடல் பகுதியில் இத்தாலியின் கையோங் கியது. முசோலினி ஹிட்லரின் வலையில் சிக்கினூர். எனவே, பிரிட்டன் விரும்பியோ விரும்பாமலோ இத்தாலியை எதிர்த்துப் போராட வேண்டியதாயிற்று. மத்தியதரைக் கடல் வெற்றிகள்

பிரிட்டிஷ் மக்களுக்குப் புதிய ஊக்கத்தை அளித்தன: சர்ச்சிலின் சார்புகளின் காரணமாகவும், பின் நிகழ்ச்சிகளின் விளைவாகவும், வட ஆப்பிரிக்கா சர்ச்சிலின் போர்த் திட்டத்தின் அச்சாணி யாகியது. பால்கன் நாடுகளைத் தாக்குவது சர்ச்சிலின் எண்ணம். கிரேக்க நாட்டைத் தாக்குவதற்கு அவர் ஊக்கமளித்தார். பிரிட்டன் தலைகுனியும் வகையில் இந்த முயற்சி முறியடிக்கப் பட்டது. கிரிட் தீவைக் கைப்பற்றும் முயற்சியும் தோல்வி யுறவே, அதன் பொறுப்பையும் சர்ச்சில் ஏற்க வேண்டிய தாயிற்று. இவ்வாறு மத்திய தரைக்கடல் பகுதியில் அவர் தலை யிட்டதால் மேலும் பல பலிகளைக் கொடுக்க வேண்டியிருந்தது. ஐரோப்பிய போரபாயத்தையும், தூரக் கிழக்கில் ஜப்பானின் ஆபத்தையும் அவர் புறக்கணித்தார். இந் நிலையிலும் பிரிட்டன் உய்ய வேண்டுமெனில் அமெரிக்காவின் நட்புறவு அவசிய மென்பதைச் சர்ச்சில் மறக்கவில்லை. பிரிட்டன் தனது பொருளா தாரச் சுதந்திரத்தைப் பேணும் முயற்சியை நிறுத்திவிட்டு, போரைத் தொடர்ந்து நடத்தி அமெரிக்காவின் உதவியை எதிர் பார்த்திருக்கும் முக்கியமான முடிவைச் சர்ச்சில் எடுத்தார். போர் முடிந்ததும் அமெரிக்கா பிரிட்டனைப் பழைய நிலைக்கு உயர்த்து மென அவர் எண்ணினர். பிரிட்டிஷ் மக்களோ இன்று நடக்க வேண்டியதற்காக வருங்காலத்தைத் தியாகம் செய்யத் தயாராக இருந்தனர்.

அமெரிக்காவுடன் போர் உதவி உடன்பாடு செய்யப்பட்டது. ஆனல், அமெரிக்கா இன்னும் போரில் ஈடுபடவில்லை. தனித்து நின்றே பிரிட்டன் வெற்றிபெற முடியும் என்று ரூஸ்வெல்ட் நம்பினர். ஆனல், காலம் செய்த கோலத்தால் பிரிட்டனுக்குப் பிறிதொரு நாட்டின் நட்புறவு கிடைத்தது. 1941ஆம் ஆண்டு ஜூன் திங்களில் ருஷ்யாவைப் பிரிட்டன் ஆதரிப்பதாகச் சர்ச்சில் அறிக்கையிட்டார். இதுவும் அவர் செய்த மகத்தானதொரு முடிவு. அவரது அரசியல் வெல் திறத்திற்கு மற்றுமோர் சான்று. மேலும் அமெரிக்காவைப் போரில் இழுக்க வேண்டுமென்பதில் சர்ச்சில் உறுதியாக இருந்தார். ஜப்பான் அமெரிக்காவைத் தாக்கினல் பிரிட்டன் ஒருமணி நேரத்தில் போர் அறிக்கையிடும் என்ற வாக்குறுதியைச் சர்ச்சில் வழங்கிவிட்டு, அமெரிக் காவும் அத்தகையதொரு அறிக்கையை வழங்கும் என்றும் எதிர் பார்த்தார். ஆனல், அவர் ஏமாற்றமடைந்தார். வெறியூட்டும் பிரிட்டனின் போர் முழக்கங்கள், தூரக் கிழக்கில் ஜப்பான் பிரிட்டிஷ் பேரரசிலைத் தாக்கத் தூண்டியது. ஆனல், பேர்ல் துறைமுகத்தின்மீது ஜப்பான் நிகழ்த்திய தாக்குதல் அமெரிக் காவை நேரடியாகப் போரில் இறக்கியது. ஒரே சமயத்தில்

தூரக் கிழக்கிலும், ஐரோப்பாவிலும் அமெரிக்காவின் உதவியைப் பிரிட்டிஷ் பேரரசின் பாதுகாப்பிற்கு ஊறு விளைவிக்காதவாறு பயன்படுத்த வேண்டிய பெரும் பொறுப்பைச் சர்ச்சில் ஆற்ற வேண்டியிருந்தது. இரு முனைகளிலும் அமெரிக்காவின் உதவி கிடைத்தது. சர்ச்சில் எதிர்பார்த்ததற்கு மாறாக முசோலினி தோற்கடிக்கப்பட்டார்.

ஆனால், பிரிட்டிஷ் பேரரசின் பாதுகாவலரான சர்ச்சில் 'அதன் வீழ்ச்சி விழாவிற்குத் தலைமை தாங்க வேண்டியதாயிற்று.' சிங்கப்பூரின் வீழ்ச்சி அவருக்குப் பலத்த அடியாகும். அழகான சொற்களால் சர்ச்சில் செயலாக்கம் காட்ட முடியவில்லை. வான் படையின் முக்கியத்துவத்தை நன்குணர்ந்திருந்த சர்ச்சில் பிரிட்டிஷ் பேரரசின் பெயரை வைத்து ஜப்பானை அச்சுறுத்த எண்ணியதின் மர்மம் புரியவில்லை. 1942ல் முப்பெரும் வல்லரசுகள் தமது வன்மையை உறுதி செய்யத் தொடங்கின. பசிஃபிக்கில் அமெரிக்காவும், அட்லான்டிக்கில் பிரிட்டனும், ஸ்டாலின் கிராட்டில் ருஷ்யாவும் நிலைபெற்றன. அதுமுதல் கூட்டுப் பேரணியின் சார்பில் சர்ச்சில் தமது அரசியல் வெல்திறத்திற்கு அரிய சான்றுகளைக் காட்டினார். போர் முடியும் வரை பிரிட்டனின் முன்னணி நிலையை அவர் காத்து வந்தார். இதனால் பிரிட்டனின் மூலவளங்களும், ஏற்றுமதிகளும் கரைந்தன. ஆனால், சர்ச்சில் அமெரிக்காவின் நல்லெண்ணத்தில் எல்லையற்ற நம்பிக்கை கொண்டிருந்தார். ஆனால், உண்மையில் சர்ச்சிலுக்கும் ரூஸ்வெல்டிற்கும் இடையே தனிப்பட்ட உறவுதான் விஞ்சியது.

ஆங்கிலோ-சோவியத் உறவும் வளர்ந்தன. போர் முடிவுற்றதும் சோவியத் ருஷ்யா பெரும் வல்லரசாக வளரும் என்பது எதிர்பார்க்கப்பட்டது. எனவே, வருங்கால ஐரோப்பாவில் ருஷ்யாவின் நிலைபற்றிச் சர்ச்சில் சிந்திக்கத் தொடங்கினார். ஹிட்லரின் தோல்வியைப் பற்றிக்கூட அவர் அதிகம் எண்ணவில்லை. ருஷ்யாவின் எழுச்சி அசுர உருவங்கொண்டு அவரை அச்சுறுத்தியது. ருஷ்யாவின் வளர்ச்சிக்குத் தடையாக வன்மையான ஜெர்மனி எழ வேண்டுமென்று அவர் நம்பியதாகவும் இன்று சிலர் கருதுகின்றனர். அதே நேரத்தில் ஜெர்மனியை முற்றிலும் முரியடிக்க வேண்டுமென்ற உறுதிப்பாட்டிலிருந்து அவர் என்றும் பின்வாங்கவில்லை. போர் முடிந்ததும் சோவியத் ருஷ்யாவுடன் பேரம் பேசவும் அவர் விரும்பினார். இதில்தான் அவருக்கும் ரூஸ்வெல்ட்டிற்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டது. தெளிவாகக் கூற வேண்டுமென்றால், ஐரோப்பாவைத் துண்டாட வேண்டுமென்பது சர்ச்சிலின் எண்ணம். போர் முடிவுற்றதும்

அமெரிக்கா ஐரோப்பிய விவகாரங்களிலிருந்து விலகிக் கொள்ளும் என்ற நம்பிக்கையில், அவர் ஐரோப்பாவைப் பிரிட்டனுக்கும், ருஷ்யாவிற்கும் இடையே இருபெரும் செல்வாக்குக் கேந்திரங் களாகப் பகிர்ந்துவிட வேண்டுமென்பது அவரது கனவு. தடுக்கப் படாவிட்டால் கிழக்கு ஐரோப்பிய நாடுகள் ருஷ்யாவிற்கு எதிரான அரசுகளை அமைக்கு மென்பது ஸ்டாலினின் மதிப்பீடு. யூகோஸ்லாவியாவில் தனிப்பட்ட கம்யூனிஸ்டு அரசு நிலை பெற்றது. சர்ச்சிலின் போர்க்கால வெல்திறத்திற்கு டிடோவின் எழுச்சியைச் சிறந்த எடுத்துக் காட்டாகக் கூறலாம். எனவே, சர்ச்சிலின் ஐரோப்பியக் கொள்கையில் புதுமை ஒன்றுமில்லை. போர் முடிவுற்றதும் அனைத்து நாடுகளும் தத்தமது முன்னிலைக்கு வந்து விடுமென்பது அவரது உறுதி. போர்க் காலத்தில் எழுந்த ஜனநாயக உணர்வுகள் அவரைப் பெரும் அளவில் கவரவில்லை. அவரது தாராள மனப்போக்கு மீண்டும் தலைகாட்டியது. போர்க் காலத்தில் வெறுத்தது போல் அவர் ஜெர்மனியரை இப்பொழுது வெறுக்கவில்லை. ஜெர்மனியரைக் கொல்வதையும், ஜெர்மனி யரின் குற்ற விசாரணைகளையும் அவர் வெறுத்தார். அடுத்த போரில் தோல்வியடையாமல் இருக்க வேண்டுமெனில் நீயூரெம் பர்க் விசாரணை போன்றவைகளைத் தவிர்க்க வேண்டுமென்று அவர் குறிப்பிட்டார்.

### ஒன்றே செய்! அதுவும் நன்றே செய்!

சர்ச்சில் கொள்கையின் பிழிவே இதுதான். ஹிட்லரை முரியடிக்கும் வரை அவர் வேறெதிலும் ஈடுபாடு கொள்ளவில்லை. ஹிட்லர் முரியடிக்கப்பட்டபின் ஜெர்மனியைப் புனரமைப்ப திலும், ருஷ்யாவிற்கு எதிராக ஜெர்மனிக்கு ஆயுதங்களை வழங்க வேண்டுமென்ற கருத்தை முதல் முதல் ஆதரித்துப் பேசியவரும் சர்ச்சில்தாம். அபாய எச்சரிக்கைகளை அள்ளி வீசுவது அவரது இரத்தத்தில் கலந்துவிட்ட ஒன்றாகும். ஹிட்லரை எதிர்த்தவர் ஸ்டாலினை விட்டுவிடப் போவதில்லை. அவரின் திட்டத்தில் ஐரோப்பிய விவகாரங்களில் அமெரிக்காவையும் ஈடுபடுத்த வேண்டுமென்பதும் ஒன்றாகும். ஆனால், ரூஸ்வெல்ட் இருக்கும் வரை இதுவெறும் இலட்சியமாகவே இருக்கும். சர்ச்சில் கம்யூனிச அபாயத்தையும், பிரிட்டனில் தொழிற்கட்சி அரசு வருமானால் ஏற்படக்கூடிய விளைவுகளையும் நன்கு உணர்ந் திருந்தார். சோவியத் ருஷ்யாவுடன் சமரசம் தேவை எனவும் அதனைத் தாம் மட்டுமே செயல்படுத்த முடியுமென்றும் அறிவித் தார். முதுமையிலும் சர்ச்சில் எவ்வாறு அரசாங்க நிகழ்ச்சிகளில் அழுத்தமான செயலாக்கம் கொண்டார் என்பதற்கு இது ஒரு

சிறந்த எடுத்துக்காட்டு. சிக்கல்களுக்காகவே சர்ச்சில் வாழ்ந்தார் போலும். 'சிக்கல்கள் இல்லை யென்றால் சர்ச்சிலும் இல்லை' என்பதும் உண்மைதான்.

சர்ச்சில் வளமான பண்பு நலன்களைப் பெற்றவர். இள வயதில் எதற்கும் வெகுண்டெழுகின்ற தன்மை அவரிடம் விளங்கிய போதிலும் காலப்போக்கில் யாவருடைய அன்பிற்கும், மதிப்பிற்கும் உரியவரானார். பிரிட்டன் வரலாற்றின் மிக நெருக்கடியான கட்டத்தில் பிரிட்டிஷ் மக்களுக்கே உரிய இறுதி வரை குலையாத உறுதியைச் சர்ச்சில் தம்மிடத்திலிருந்து வெளிப் படுத்தினார். இரண்டாம் உலகப் போரின் காலத்தில் வாழ்ந் திருந்த எந்த ஆங்கிலேயனும் சர்ச்சிலைக் கண்டு வியக்காமல் இருக்க முடியாது. அவரிடம் குறைகள் பல இருந்த போதிலும் பிரிட்டனின் பெருமையைக் காக்கவும், கடமையை ஆற்றவும் அவர் என்றும் திகைத்தது கிடையாது. 'பிரிட்டனுக்கு முடி வற்ற நண்பர்களோ, முடிவற்ற எதிரிகளோ இல்லை. இங்கி லாந்தின் நலன்கள் மட்டுமே முடிவில்லாதவை' என்று ஒருமுறை பால்மர்ஸ்டன் குறிப்பிட்டது மிக உண்மையாகும். இது பெரும் அளவில் சர்ச்சிலுக்கும் பொருத்தமாகும். சர்ச்சிலின் நோக்கு அடிப்படையில் எழுச்சியற்றதாக இருந்தது. தம்மால் கூடிய வரையிலும் இன்னல்களைப் போக்க அவர் முயன்றார். பிரச்சினை களைத் தீர்க்க முடியாமல் நிலைமை மோசமாகிவிடினும் அவரிடம் துயரைச் சிதறடிக்கும் முக மலர்ச்சிக்குக் குறைவிருக்காது. இடர்ப்பாடுகளிலிருந்து அவர் ஊக்கம் பெறுவார். மற்றவர் களுக்கும் உணர்வூட்டுவார். போர்களை இயக்குவதில் அவர் தம்முடைய உந்துதல்களுக்கும், ஆத்திரமான நடவடிக்கைகளுக்கும் பலியாவதுண்டு. ஆனால், அவர் உலகப் போரில் மகத்தான வெற்றி பெற்றார் என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

பிரதமர் என்ற வகையில் தம்மைக் காமன்ஸ் சபையின் தொண்டன் என்று அவர் கூறிக் கொள்வதில் பெருமைப் படுவார். சம காலத்திய காமன்ஸ் அவைக்கோ, பிரிட்டிஷ் மக்களுக்கோ சர்ச்சில் பணி புரியவில்லை. ஏனெனில் பொதுமக்களும் தம்மைப் போலவே அரசியலமைப்பினுடையவும், பேரரசினுடையவும் மரபுவழி வந்த உயர்ந்த தகுதிகளுக்குத் தாம் பணிபுரிய வேண்டு மென்று சர்ச்சில் எதிர்பார்த்தார். காமன்ஸ் அவையில் அவர் பயன்படுத்தும் சொற்கள் வன்மையின் சொல்லம்புகளைப் போன்றவை. சில சமயங்களில் அவரே அச்சொற்களுக்கு அடிமை யாவதும் உண்டு. மெக்காலேயின் இலக்கிய நடையையும், தமது நூற் புலமையையும் உண்மைநிலை என்று நம்பிச் சில சமயங்

களில் பொருளற்ற சொல்நயத்திற்கு மனித உயிர்களைக் கூட அவர் பலியிட்டார்.

தீவிரமான தனியுரிமைக் கோட்பாட்டின் பின்னணியில் சர்ச்சில் ஒரு பழைமை விரும்பியாகத் திகழ்ந்தார். மகத்தான துணிவு, எல்லையற்ற ஊக்கம், பரிவுணர்வு ஆகிய பண்புகள் அவரிடம் நிறைந்து விளங்கின. இக் குணநலன்கள் அவர்தம் வன்மையான எதிரிகளையும் நிலைகுலையச் செய்யும். பிரச்சினைகளை எதிர்த்துச் சமாளிக்கும் உத்திகளைக் கண்டு பிடிப்பதில் அவரிடம் குறைவற்ற வளம் காணப்பட்டது. இடர்ப்பாடுகளுக்கு அஞ்சிப் பணிவது சர்ச்சிலின் இயல்பில் இல்லை. படைப்பாற்றல் பெற்ற அரசியல் வெல்திறத்தை அவரிடம் காண்பதரிது. பிரச்சினைகள் விடும் சவாலை ஏற்பதில் அவரிடம் முடிவில்லாத நெகிழ்ச்சியும், உலைவில்லாத உற்சாகமும் காணப்பட்டன. வருங்காலத்தைப் பற்றிய நோக்கு அவரிடம் இலங்கவில்லை. ஆனால், கடந்த காலத்தைக் குலைத்து விடாமல் பாதுகாக்கும் உணர்வே அவரிடம் மேலோங்கி நின்றது. பிரிட்டிஷ் மக்கள் அவரை எழுச்சியுறச் செய்தனர். அவரோ அவர்களின் ஆவலை நிறைவேற்றவில்லை. பிரிட்டிஷ் ஆளும் வர்க்கம் அவரை என்றும் அடக்கியே வைக்கப் பார்த்தது. அவரோ அவர்களைப் பேணிக் காக்கத் தம் வாழ் நாளெல்லாம் முயன்றார். 'அவர் ஒரு தொடக்க மல்லர்; ஒரு முடிவுதான்......மகத்தான இறுதி முடிவு......அவர் நிறைவு செய்கிறவரேயன்றி, வருவது உரைக்கும் தீர்க்கதரிசி அல்லர்' என்று ஒருமுறை பிஸ்மார்க்கைப் பற்றிக் கூறப்பட்ட சொற்கள் சர்ச்சிலுக்கும் பொருந்தும்.

சர்ச்சிலிடம் விளங்கிய வரலாற்று உணர்ச்சி அவரது அரசியல் வெல்திறத்திற்குத் தக்கதொரு பக்க பலமாக இருந்தது. அவர் வரலாற்றை எழுதிய முறையில் இந்த வீர உணர்ச்சி மேலோங்கி நின்றது. அவர் போரில் வீரசாகசங்களை எவ்வாறு விரும்பினாரோ, அவ்வாறே போரின் பயன்களையும் போற்றினார். உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் அவர் சவால்களைத் தூண்டினார். முழுமையான வெற்றிகளை முதற்கண் நாடுவார். பின்னர்தான் சமரசத்தை நாடுவது அவரது கொள்கை. இரு உலகப் போர்களிலும், போயர் போரிலும், அயர்லாந்து கலவரங்களிலும் அவரது போக்கு இதுவாகத் தான் இருந்தது. பிரிட்டிஷ் தொழிலாளர் களிடத்திலும் இந்தக் கொள்கையின் அடிப்படையில் தான் அவர் அணுகினார். இக் கொள்கைதான் பின் போர் முடிந்து, அவர் நிறுவிய நினைவுச் சின்னமொன்றிலும் பொறித்து வைக்கப் பட்டது. 'போரில் உறுதி; தோல்வியில் எதிர்ப்பு; வெற்றியில்

மாண்பு; அமைதியில் நல்லெண்ணம்' என்பதுதான் அதன் வாசகம்.

திறம் பெற்ற நிபுணர்களிடமிருந்து அறிந்து கொள்ளும் ஆவல் சர்ச்சிலிடம் இருந்தது. சமூகச் சீர்திருத்தங்கள் பற்றியும், போர்க் காலத்தில் போரின் நுணுக்கங்கள் பற்றியும் தகுதி பெற்றவர்களிடமிருந்து அவர் கற்றுக் கொண்டார். இது தற்கால அரசியல்வாதிகளிடம் காண முடியாத ஒரு பண்பு; ஆனால், பொருளாதாரத் துறையின் நுணுக்கங்களை மட்டும் அறிந்து கொள்ள ஏனோ அவர் அதிக ஆற்றல் பெற்றிருக்கவில்லை. இது அவரிடம் காணப்பட்ட ஒரு குறைபாடாகும். மேலும், எக் காரியத்தையும் செய்யத் தொடங்கி விட்டால் உடனடியாகப் பயனை எதிர்பார்ப்பதும் அவர் வழக்கம். இதில் அவரிடம் பொறுமையின்மை காணப்பட்டது. தம்மைப் போலவே மற்றவர்களும் ஒத்த வேகத்துடன் செயல்பட வேண்டுமென்று அவர் எதிர்பார்த்தார். உற்சாகத்தின் காரணமாகக் கொள்கையின் உறுதிப்பாடுகளை விட்டுக் கொடுக்கிறவர் என்ற குற்றச்சாட்டுகளையும் அவர் சிலவேளைகளில் ஏற்க வேண்டியிருந்தது. அவர் பொறுப்பற்றவராகக் கூடப் பலருக்குத் தோன்றினார். இத்தகைய அவப் பெயர் அவர் வாழ்வு முழுவதும் அவரைத் தொடர்ந்தது.

சர்ச்சிலின் அரசியல் வாழ்வின் தொடக்கம் அவர்தம் அபூர்வமான ஆற்றல்களையும், பண்புகளையும் வெளிப்படுத்தியது. போயர் போரில் அவர் நிகழ்த்திய அற்புதமான சாதனைச் சிறப்புகளுடன் அவர் பாராளுமன்றத்தில் அடியெடுத்து வைத்தார். ஆனால், பாராளுமன்றத்தில் போயர்களுக்குப் பரிவு காட்ட வேண்டுமென அவர் பரிந்துரைக்கத் தொடங்கிய போது பலர் அவரைக் குறை கூறினார்கள். தவிரவும், பிரிட்டனின் பாதுகாப்பிற்குக் கடற்படை மட்டுமே போதும் என்றும், பிரிட்டனுக்கு உகந்தது தடையில்லா வாணிகமே என்றும் அவர் துணித்து நின்று அறை கூவினார். படிப்படியாக அவர் கன்சர்வேடிவ் கட்சியிலிருந்து விலகி, லிபரல் செல்வாக்கில் இறங்கி லாயிட் ஜார்ஜின் நெருங்கிய நண்பராகி விட்டார். இந்த வளர்ச்சியில் அவரிடம் அறிவு ரீதியான ஓர் உறுதிநிலை இருந்தது. ஆனால், சர்ச்சில் அதனை அளவிற்கு அதிகமாக வளர்த்துக் கொண்டது அவரது தனிப் பண்புகளில் ஒன்றாகும். சர்ச்சிலின் தீவிரவாதம் அவரே வளர்த்துக் கொண்டது. இந்த விஷயத்தில் அவருக்குக் குரு அவரே தான்.

சமூக சீர்திருத்த ஆதரவாளராக லாயிட் ஜார்ஜ் அமைச்சரவையில் சர்ச்சில் இடம் பெற்றார். தொழிலாளர் நல

நிலையங்கள் வேலை யற்றோருக்காகப் பெரும் பணி புரிந்தது. இவற்றைச் சர்ச்சில் நிறுவியிருந்தார். சர்ச்சிலின் தீவிர வாதத் திற்கும், லாயிட் ஜார்ஜின் தீவிர வாதத்திற்கும் இடையே ஆழ்ந்த வேறுபாடுகள் ஏற்கெனவே வெளிப்படத் தொடங்கின. பொருளாதாரக் கெடுபிடித் தன்மையைச் சர்ச்சில் குறைக்க முயன்றார். புதிய சமுதாயத்தை உருவாக்குகின்ற சமூக நல அரசை அவர் விரும்பினார். அதுகாலை ஏற்பட்ட வேலைநிறுத்தங் களின் போதும் இரு தலைவர்களுக்கும் இடையேயுள்ள தீவிர வாதத்தின் தன்மை புலப்பட்டது. ஜார்ஜ் அடிக்கடித் தொழி லாளர்களுக்கு விட்டுக் கொடுக்கும் மனப்போக்குக் கொண்டிருக்க, சர்ச்சிலோ படையையும், சட்டத்தையும் கொண்டு அவர்களை எதிர்த்து அடக்குவதில் ஈடுபட்டிருந்தார். வேலை நிறுத்தம் செய்துள்ளோர் வேலைக்குத் திரும்பிச் சென்றாலன்றி அவர்களின் கோரிக்கைகள் கவனிக்கப்பட மாட்டாவெனச் சர்ச்சில் வற்புறுத்திக் கூறினார். 1945ஆம் ஆண்டு சர்ச்சில் தேர்தலில் தோல்வியுற்றதன் காரணத்தைத் தேடுகிறவர்கள் முப்பதாண்டு களின் முன்னர் நடைபெற்ற இந்தத் தொழிலாளர் போராட் டத்தை நினைவு கூர்வார்களாக.

பெண்களுக்கு வாக்குரிமை கோரியவர்களுடன் சர்ச்சில் கொண்டிருந்த தொடர்பிலும் அவரிடம் விளங்கிய கருணையும், கோபமும் இணைந்திருப்பதைக் காணலாம். பெண்கள் வாக் குரிமையை அவர் உற்சாகமாக ஆதரித்தார். உரிமைப் போராட்டம் உச்சக்கட்டத்தை அடைந்தபோது இன்னும் சர்ச்சில் அவர்களை அடக்கத் தயாராகவில்லை. போராட்டக் காரர்கள் அவரை அச்சுறுத்தினார்கள். அவரோ அஞ்சிப் பின் வாங்கவில்லை. ஜெர்மனியிடம் சர்ச்சில் கொண்டிருந்த மனப் போக்குத்தான் அவரது தீவிரவாதத்தின் கொடுமுடியாகும். இது அவரது தீவிர வாதத்தின் நிலையற்ற தன்மையைக் காட் டியது. இது போலவே அயர்லாந்தின் சிக்கலிலும் அவர் போராடத் தயாராக இருக்கவில்லை; மிரட்டலுக்குப் பதில் மிரட்டல் என்ற தத்துவத்தின் அடிப்படையில் அவர் செயல் பட்டார். இவை யாவற்றையும் முதல் போரில் அவரது போக்கு விஞ்சிவிட்டது. போருக்குத் தயாரோ இல்லையோ, போரில் குதித்துவிட மட்டும் அவர் முடிவு செய்தார். பிற அமைச்சர் களுக்கு மேல் போர்த் தந்திரங்களில் சர்ச்சில் பெரும் முனைப்புக் காட்டினார். டார்டனலஸ் பூசந்தியைத் தாக்குகின்ற மிகத் துணிச்சலான திட்டம் சர்ச்சிலிடம் உருவானது.

**போரும் அமைதியும்**

டார்டனலஸ் திட்டத்தைப் பற்றிப் போதிய ஆய்வுகள் செய்யாமலே அதனை எவ்வாறேனும் செயல்படுத்திய தீர வேண்டுமென்று சர்ச்சில் விடாப்பிடியாக இருந்தார். கான்ஸ்டான்டிநோபிலின் வீழ்ச்சி ஜெர்மனியை நிலை குலைந்துவிடும் என்று அவர் கனவு கண்டார். திட்டம் வெற்றி பெறவில்லை. சர்ச்சிலின் இத்தகைய சாதனைகளைச் சரிவர மதிப்பிடுவது எளிதன்று. டார்டனலஸ் திட்டத் தோல்வி சர்ச்சில் திறமையான முடிவுகளை ஆத்திரப்பட்டுச் செய்கின்றவர் என்ற அவப்பெயரை உண்டாக்கியது. போர் முடிவுற்ற பின்னர்தான் அவர் அரசியல் வல்லுநர் என்ற தகுதிக்கு உயர முடிந்தது. ஜெர்மனியின் வீழ்ச்சிக்குப் பின்னர், ஜெர்மனியுடன் சமரசத்தை முதலில் சர்ச்சில் ஆதரித்தார். ஜெர்மனிக்கு உணவு அனுப்புவதையும், அதனைச் சர்வதேச சங்கத்தில் சேர்த்துக் கொள்வதையும் வலியுறுத்தினர். அதுபோலவே, சர்ச்சில் முன்னுளில் ருஷ்யாவின் நட்புறவை விரும்பினர். ஆனல், போருக்குப் பின்னர் போல்ஷிவிக்குப் புரட்சி ருஷ்யாவின் மரபொழுக்கங்களைச் சின்னுபின்னப் படுத்தியகாலை, சர்ச்சில் வெகுண்டெழுந்தார். போல்ஷிவிக்குகள் ஐரோப்பிய நாகரிகத்தையே அழிக்கிருர்கள் என்று அவர் அபாயக்குரல் எழுப்பினர்.

எனினும், சர்ச்சிலிடம் தீவிர உணர்ச்சிகளுக்கும், தாராளக் கொடைகளுக்கும் குறைவிருக்கவில்லை. போர் முடிந்ததும் போர் வீரர்கள் தாயகம் திரும்புவதில் அவர் சீரிய அக்கறை காட்டினர். போர்க் காலத்தில் பொருளீட்டியவர்கள்மீது வரி விதிக்கத் தூண்டினர். லாயிட் ஜார்ஜுடன் சேர்ந்து காலனிகளின் நட்புறவை நிறுவினர். பிரிட்டிஷ் பேரரசின் பெருமையை நிலை நாட்டுவதற்கு அவர் போராட என்றுமே தயங்கியதில்லை. மையக் கிழக்கில் பிரிட்டனுக்காகப் புதிய செல்வாக்குக் கேந்திரத்தை நிறுவி ஜிப்ரால்டர் முதல் பாரசீகக் குடாவரை பிரிட்டிஷ் படைப்பலத்தைப் பெருக்கினர். இவர்தம் முயற்சிகள் இரண்டாம் போர் முடியும்வரை அப்பகுதியில் பிரிட்டிஷ் செல்வாக்கும், வன்மையும் ஒப்புயர்வற்ற நிலையில் பெருகுவதற்கு வழி வகுத்தன. பாலஸ்தீனத்தில் யூதர்களையும், அராபியர்களையும் இணைத்து வைப்பதில் வேறெந்த அரசியல் வல்லுநரையும்விட சர்ச்சில் அதிக முயற்சிகளைச் செய்தார் என்பது உண்மை. T. E. லாரன்ஸ் என்பாரின் முயற்சியால் ஈராக் நாட்டில் அரபியர்களின் நட்பு பிரிட்டிஷாருக்குக் கிடைத்தது. பழைய எதிரியான துருக்கியில் கெமால் பாஷாவின் நட்புறவைச் சர்ச்சில்

விழைந்து பெற்ருர். சர்ச்சிலின் தனித்தன்மையான தந்திரத்தால் துருக்கிய சிக்கல் தீர்க்கப்பட்டது. இவ்வாறு அரசியல் வல்லுந ராக 1905 முதல் 1922 வரை சர்ச்சில் பொது வாழ்வின் முதல் பகுதியில் அவர் பெறற அனுபவங்களும், வெற்றிகளும் தோல்வி களும் அவரை ஏற்கெனவே கண்டவாறு இரண்டாவது பகுதிக்குத் தயார் செய்தன.

1922ஆம் ஆண்டு சர்ச்சில் பொதுத்தேர்தலில் தோல்வி யுற்றதைச் சர்வகட்சிகளும் வரவேற்றன. இதன் காரணம் என்ன? ஓர் அரசியல் வல்லுநர் பெற்றிருக்கவேண்டிய அருங்குணங்களில் ஒன்றினைச் சர்ச்சில் பெற்றிருக்கவில்லை. அதாவது, மற்றவர்கள் தம்மைப் புரிந்துகொள்ளச் செய்யும் அருந்திறல் அவரிடம் அமைந்திருக்கவில்லை. ஒரு சிலரைத் தவிர அவருக்கு அரசியல் நண்பர்கள் கிடையா. அந்த ஒரு சிலரும் அவரைப் போலவே பணிந்து போகாத தனிமை கொண்டிருந்தமையால் மக்களின் நம்பிக்கையைப் பெறவில்லை. ஒவ்வொரு பிரச்சினையிலும் அவர் முனைப்புக் காட்டியதும், தாமாகவே சொந்தக் கருத்துக்களை அறுதியிட்டுச் சொல்வதும் அவரது சகாக்களுக்கு எரிச்சலூட் டியது. அவர் வெளி விவகாரத்துறையில் தலையிடுவதாகக் கர்ஸான் முறையிட்டார். சர்ச்சில் தம்மையே பிரதமராக நினைத்துக்கொண்டு நடப்பதாக ஆஸ்குவித்தும், லாயிட் ஜார்ஜும் குற்றம் சாட்டினுர்கள். போனுர்லா தாம் என்றுமே சர்ச்சிலை எதிர்ப்பதாக வெளிப்படையாகக் கூறினுர். கட்சியைப் பற்றியோ அல்லது அதன் ஆதரவாளர்களுடன் உடன்பாடு கொள்ள வேண்டுமென்பது பற்றியோ சர்ச்சில் அக்கறைப்படுவ தில்லை. அவரைப் பொறுத்தவரைக் கட்சி என்பது அவரைப் பதவியில் இறுத்தும் ஒரு கருவியே யன்றி, அவர் பணி புரிய வேண்டிய ஓர் அமைப்பு அன்று. தமது சொந்தக் கொள்கை உறுதியைப் பொறுத்து அவருக்கு ஐயப்பாடுகள் எழுவதில்லை. பிரிட்டிஷ் பேரரசின் மகிமைக்காகப் பணிபுரியும் ஜனநாயகத்தின் ஒருங்கியைந்த உரிமைகளுக்காகவும், கொள்கைகளுக்காகவும் இடைவிடாது பாடுபடுவது அவரது தணியாத வேட்கை; இந்தக் கொள்கை உறுதியை மற்றவர்கள் கண்டுணரவில்லை. தொழி லாளர்களுக்கு அவர் நண்பர், ஆனுல், தொழில் சங்கங்களுக்கு எதிரி. பிரம்மாண்டமான கடற் படையெடுப்புகளை ஒருசமயம் அவர் எதிர்ப்பார்; அடுத்த சமயம் அவற்றை ஆதரிப்பார்; பிரபுக்கள் சபையைத் தாக்கிப் பேசுவார். அதே குரலில் அதன் உரிமைகளுக்காகப் போராடுவார். பெண்களின் வாக்குரிமை இயக்கத்தை ஆதரிப்பார். அதனை முரியடிக்கவும் சூளுரைப்

பார். போல்ஷிவிக்குகளை எதிர்ப்பதில் மட்டும்தான் அவரது கொள்கை மாறவில்லை;

சர்ச்சிலிடம் அசாதாரணமான துணிச்சல் காணப்பட்டது. ஒரு பிரச்சினையின் பலாபலன்களைக் கணித்துக்கொண்டிருப்பதை விட அதனைச் சந்திப்பதில் அதிக துணிச்சல் காட்டினார். எதிர்ப்புகளைக் கண்டால் அதிக எளிதாக உணர்ச்சி வயப்படுவார். 'சர்ச்சில் பொங்கினால், கொடுங்கோலர்களின் தன்மை அவரிடம் வெளிப்படும்' என்று ஒருசமயம் பீவர் ப்ருக் (Beaver Brook) பிரபு அவரைப் பற்றிக் குறிப்பிட்டார். தம்முடைய செயல்கள் மற்றவர்கள் மீது எவ்வித விளைவுகளை உண்டாக்கும் என்பதைப் பற்றி அவர் அக்கறைப்படவில்லை. ஆவேசமுடன் அவர் போராடினாலும் நல்லெண்ணமும், நகைச்சுவையும் அவரிடம் மிகுந்து காணப்படும். விட்டுக் கொடுக்காமல் அவர் வாதாடும்போது மற்றவர்களும் அவ்வாறே பதில் கொடுக்க வேண்டுமென்பது அவரது விருப்பம். அவர் காட்டும் கசப்புணர்ச்சிகளை அக்கணமே மறந்துவிட வேண்டுமென அவர் எதிர்பார்த்தார். தோல்விகளும், தொல்லைகளும் அவருக்கு அதிக பொறுமையைக் கற்றுத் தந்தன. பொது வாழ்வில் வீழ்ச்சி கண்டபோது, சர்ச்சில் நீரிலிருந்து எடுத்து வெளியே எறியப்பட்டதுபோல் ஆனார். 'போல்ஷிவிக்குகளை ஒழிப்பேன்' என்ற அவரது கோஷம் எடுபடவில்லை. லிபரல் கட்சியில் பிடிப்பு இல்லாததால், மீண்டும் கன்சர்வேடிவ்களை நாடினார். பால்ட்வினின் கருணையால் நிதியமைச்சரானார், எனினும், நிதித்துறையில் அவர் அரிய சாதனைகளைப் புரிய முடியவில்லை. 'பேரரசி விக்டோரியவின் பொன்யுகம்' மீண்டும் மலரவேண்டும் என்ற கனவுகளைத் தவிர, நிதித்துறையில் சர்ச்சில் குறிப்பிடத்தக்க பணிகளை ஒன்றும் புரியவில்லை.

உள்நாட்டு விவகாரங்களில் புத்துணர்வும், போராட்ட உணர்வும் மேலோங்கி இருந்த காலம் அது. நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் சிக்கலில் தொழிலாளர்களிடம் பரிவு காட்டினார் சர்ச்சில். ஆனால், அவர்கள் எதிர்த்துப் போராடத் தொடங்கியதும் பதிலடி கொடுத்தார். பொது வேலை நிறுத்தத்தை வரவேற்றார். பால்ட்வின் சமரசம் செய்ய முற்பட்டபோது, சர்ச்சில் வேலை நிறுத்தத்தை உள்நாட்டுப் போராக மாற்றினார். தொழிற் சங்கங்களை ரத்து செய்ய விரும்பினார். படைப்பலம் கொண்டு பழைய போல்ஷிவிக் கற்பனை எதிரியைத் தாக்கினார். அவ்வாறே பெரும் அளவில் நிலைகுலைதலின்றி வேலை நிறுத்தம் நின்றது. பால்ட்வினின் அருமுயற்சியால் மீண்டும் தொழி

லாளர்களிடையே நல்லிணக்கம் ஏற்பட்டது. ஆலைத் தொழிலாளர்களுக்கும் சர்ச்சிலுக்கும் இடையே இருந்த பிளவு விரிவடைந்தது. பிரிட்டிஷ் மக்களில் பெரும் பகுதியினர் தொழிலாளி வர்க்கம் என்பதைச் சர்ச்சில் எண்ணினரோ என்னவோ ?

சர்ச்சிலின் அமைதியற்ற உள்ளம் புதியதொரு பிரச்சினையின்பால் நாட்டம் கொண்டது. இந்தியச் சிக்கலைத் தமக்கு நல்லதொரு வாய்ப்பாகக் கருதினர் சர்ச்சில். இந்தியாவிற்குப் படிப்படியாகச் சலுகைகள் வழங்கி இறுதியாக டொமினியன் நாட்டு நிலை வழங்குவதென்ற கொள்கையில் சர்வகட்சிகளும் உடன்பாடு கொண்டிருந்தன. இந்தச் சலுகைகளை வழங்குகின்ற விரைவைப் பற்றித்தான் சர்ச்சை எழுந்தது. காந்தியடிகளின் தலைமையில் இந்தியத் தேசியவாதிகள் வன்முறையற்ற அறப் போரைத் தொடங்கியபோது, சர்ச்சில் இந்தச் சவாலை எதிர்க்க முன் வந்தார். தமது இளமையில், தாம் கண்ட இந்தியாவை நினைவுபடுத்திக் கொண்டு. இந்திய சுதேச மன்னர்களை வீர வுணர்ச்சியோடு போற்றிப் புகழ்ந்தார். இந்திய விவகாரம் அவருடைய சிந்தனையைச் சுற்றி வட்டமிட்டது. அவருக்கு இது கடுமையான சிக்கல் மிகுந்ததொரு கால கட்டமாகும். பால்ட்வின் – சர்ச்சில் பிளவு முற்றி உறவு முரிந்தது. பதவியைத் துறந்த சர்ச்சில் தனிமையில் நின்று போராடினர். மூன்று மில்லியன் பிரிட்டிஷ் மக்கள் வேலையின்றி வாடினர்கள். 1931ஆம் ஆண்டு பொன் நாணயத் திட்டம் கைவிடப்பட்டது. முதல் போருக்குப் பின் வெளிநாட்டில் நிறுவப்பட்டிருந்த அமைதியும், பாதுகாப்பும் நிலைகுலைந்தன. ஜெர்மனியில் ஹிட்லரும் நாஜிகளும் வெற்றி நடை போட்டனர். இந்நிலையில் அறிவாக்கம் பெற்ற அரசியல் வல்லுநராகக் கருதப்பட்ட சர்ச்சிலோ இந்திய சுதேச மன்னர்களிடம் கொண்ட பற்றை விடாமல் இருந்ததோடு, இந்தியாவிற்குப் பொறுப்பாட்சிச் சலுகைகள் வழங்குவதையும் எதிர்த்தார். இத்தகைய மன்னர் வழிபாட்டைப் பிரிட்டிஷ் பொது மக்கள் விரும்பவில்லை.

பிரிட்டனைப் பல்வேறு பிரச்சினைகள் எதிர்நோக்கி இருந்த போது, சர்ச்சில் ஏன் புறக்கணிக்கப்பட்டார்? என்பது புரியாத புதிராக இருக்கிறது. இதற்கு ஒருவகையில் சர்ச்சில் பொறுப்பாளியாவார். பிரிட்டிஷ் பொதுமக்களின் எண்ணத்தில் அவர் நிலையூன்றி நிற்க முடியவில்லை. இந்தியாவிற்குப் பொறுப்பாட்சிச் சலுகைகள் வழங்க வேண்டுமென்பதைச் சரியாகவோ தவருகவோ பிரிட்டிஷ் பொதுமக்கள் ஏற்றுக்கொண்டு விட்டனர். சர்ச்சிலின் எதிர்ப்பை அவர்கள் பொருளற்ற தடையாகக் கருதி

ஞர்கள். தவிரவும் அந் நாளைய பெரிய பொருளாதாரப் பிரச்சினைகளுக்குச் சர்ச்சில் எவ்விதப் பரிகாரமும் தேடவில்லை. முதல் போருக்குப்பின் சர்ச்சில் போரில் வென்றவர்கள் ஆயுதக் குறைப்புச் செய்வது பற்றிப் பேசினர். பின்னர் அவரே தனித்து நின்று இப் பிரச்சினையை எதிர்த்தார். பிரிட்டிஷ் விமானப் படையின் பலத்தை அதிகரிக்க வேண்டுமென்று அறைகூவினர். சர்ச்சிலின் அறைகூவலைப் பிரிட்டனும் ஃபிரான்சும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. பொதுமக்களில் பலர் அவரது போக்கை எதிர்மறைப் போக்காகக் கருதினர்கள். ஜெர்மனியை எதிர்க்க வேண்டுமெனில் அதற்காக வெறும் ஆயுதபலப் பெருக்கத்தை மட்டும் வைத்துப் பூச்சாண்டி காட்டக்கூடாதென்றும், உயர்ந்த நோக்கங்கள் வேண்டுமென்றும் நம்பப்பட்டன. சர்வ தேச சங்கமும் அதன் கூட்டுப் பாதுகாப்புத் திட்டமும் சுட்டிக் காட்டப்பட்டது. ஜப்பானும், இத்தாலியும் ஆக்கிரமிப்புகளைத் தொடங்கியபோது, சர்ச்சில் வாளாவிருந்தார். முசோலினியை அவர் போற்றியதோடு ஃபாஸிசம் ஹிட்லருக்கும், போல்ஷிவிக்குகளுக்கும் எதிர்ச்சக்தியாக இருக்குமென்று அவர் எதிர்பார்த்தார். அதே சமயத்தில் பிரிட்டனின் ஆதரவில்லாமல் சர்வதேச சங்கம் நலிவுற்றுக் கொண்டிருந்தது.

1936ஆம் ஆண்டில் ஹிட்லர் ரைன்லாந்தைக் கைப்பற்றினர். சர்ச்சில் முசோலினியிடம் காட்டியது போன்று ஹிட்லரிடம் பரிவு காட்டவில்லை. தாமதமாகவேனும் சர்வதேசக் கூட்டுப் பாதுகாப்பிற்குத் துதிபாடத் தொடங்கினர் சர்ச்சில். எனவே, பல ஆண்டுகளாக அவர் இழந்திருந்த செல்வாக்கையும், ஆதரவையும் மீண்டும் பிரிட்டிஷ் பொது மக்கள் அவருக்குக் கொடுப்பதுபோல் தோன்றியது. ஆனல். கைக்கெட்டியது வாய்க்கு எட்டாததுபோல், எட்டாம் எட்வேர்டு மன்னரின் திருமண விவகாரம் சர்ச்சிலின் பொது வாழ்வில் ஒரு திருப்பத்தைக் கொண்டு வந்தது. அரசருக்காகச் சர்ச்சில் போராடியதில் அவரது அரசியல் வெல்திறம் வெளிப்படவில்லை. பிரிட்டிஷ் பொதுமக்களின் எண்ணம் அரசருக்கு எதிராக இருந்தது. சர்ச்சில் அரசரின் தோல்வியுற்ற கொள்கைக்காக வீராவேசமாகப் போராடினர். விவேகமான அரசியல் வல்லுநர் மௌன விரதம் காக்கவேண்டிய சந்தர்ப்பங்கள் பல உண்டு. ஆனல், இது சர்ச்சிலின் இயல்பிற்கு முற்றிலும் மாறுபட்ட ஒன்ருகும். 1936ஆம் ஆண்டு டிசம்பரில் எட்வேர்டு மன்னர் முடிதுறந்தபோது, பால்ட்வின் வெற்றி முரசு கொட்டினர். சர்ச்சிலோ மீண்டும் மதிப்பிழந்து தனிமையில் வாடினர்.

இந்தத் தோல்வியிலிருந்து சர்ச்சில் எளிதாக மீள முடிய வில்லை. பிரிட்டன் வேகமாகப் படைப்பலத்தை அதிகரிப்பதைக் கண்டார். ஜெர்மனிக்கு நிகராகப் பிரிட்டனின் விமானப் படைப்பலம் அதிகரித்தால்தான், வலிமையின் அடிப்படையில் சலுகைகளை வழங்கலாம் என்பது அவரது நம்பிக்கை. இதனி டையில் ஸ்பெயினில் உள்நாட்டுப் போர் தொடங்கியது. இடது சாரி குடியரசு அரசாங்கம் ஜெனரல் ஃபிராங்கோவின் தலைமை யில் தேசீயப் புரட்சியை எதிர்த்துப் போராடியது. இத்தாலியும் ஜெர்மனியும் ஃபிராங்கோவை வன்மையாக ஆதரித்தன. இந்தப் போராட்டம் ஜனநாயகத்திற்கும், ஃபாஸிசத்திற்கும் இடையே எழுந்த பெரும் பூசலாகும். சர்ச்சில் யாருடனும் கூட்டுச் சேர முடியாத தர்ம சங்கடமான நிலை ஏற்பட்டது. பிரிட்டிஷ் அரசாங் கத்தின் தலையிடாக் கொள்கையை அவர் ஆதரிக்க வேண்டிய தாயிற்று. எனவே, ஃபாஸிசத்திற்கு எதிராக ஜனநாயகத்தின் காவலனாக அவர் செயல்படத் தவறிவிட்டார். 1938ல் ஹிட்லர் பல ஆக்கிரமிப்புகளைச் செய்தபோது சர்ச்சில் படைப்பலத்தை அதிகரிக்கும் கொள்கையை வன்மையாக ஆதரித்தார். ஜெர் மனிக்கு எதிராகக் கூட்டணியை உருவாக்க வேண்டுமென்று நம்பினார். ஆனால், அவருடைய நம்பிக்கைகள் உண்மை நிலையின் அடிப்படையில் அமையவில்லை. போல்ஷிவிக் கொள்கையின் கொடுங்கோன்மைகளைச் சர்ச்சில் ஒருகணம் மறந்தார். ஆனால், சோவியத் ருஷ்ய அரசு உடனடியாகக் கூட்டணியில் சேருகின்ற சாத்தியக்கூறும் அமையவில்லை. எனவே, விரும்புகின்ற நாடு களைப் பாதுகாப்புப் பேரணியில் சேர்த்துக்கொள்வது என்ப தோடு சர்ச்சிலின் திட்டம் செயல்பட வேண்டியதாயிற்று. புதிய போக்குடைய புதிய ஐரோப்பாவை இன்னும் காணமல், பழைய ஐரோப்பாவிலேயே சர்ச்சில் இன்னும் பற்றுக்கொண்டிருந்தார்.

சர்ச்சில் கண்ட கூட்டுப் பாதுகாப்புப் பேரணி ஐரோப்பா விற்கு மட்டும் உரியது. ஜெர்மனிக்கு எதிரான ஒரு கூட்டணி. இத்தாலி கூட்டணியில் சேரும் என்று அவர் நம்பிக்கொண் டிருந்தார். தூரக் கிழக்கில் சீனவையும், ஜப்பானையும் பரிந்து கொண்டு பிரிட்டன் நடுநிலைமை வகிக்க வேண்டும். பிரிட்ட னுக்கும், அமெரிக்காவுக்கும் இடையே சர்ச்சில் நெருங்கிய நட் புறவை விரும்பினர். அமெரிக்கா போர்த் தளவாடங்களையும், மூலப்பொருள்களையும் தாராளமாக வழங்கினலும், ஐரோப்பிய நாடுகளே ஜெர்மனியை முறியடிக்க முடியும்; தனித்து இருக்க விரும்பும் அமெரிக்கா போரில் ஈடுபடாது; எனவே, பாது காப்புத் திட்டத்தை அமெரிக்க நட்புறவுக் கோணத்தில் நின்று நோக்கினல் போதும் என்று சர்ச்சில் நம்பினர். அவர் ஜெர்

மனியின் ஆயுத பலத்தையும், போர் அபாயத்தையும் மிகைப் படுத்திக் கூறினர்; நாஜிகளின் அமைப்பு முறை வீழ்ச்சியுறும் என்பது அவரது துணிவு. சர்ச்சிலின் வன்மையே இதன் அடிப் படையில்தான் அமைந்திருந்தது. இன்னல் பல பட்டாலும் இறுதி வெற்றி பிரிட்டனுக்கே என்ற போர் முழக்கம் மற்ற வர்களை ஆவேசம் கொள்ளச் செய்தது. ஜெர்மனியுடன் சமரசம் செய்வது தேவையற்றதென்றும், தன்மானக் கேடானதென்றும் மற்றவர்களை எண்ணத் தூண்டியது. இறுதியில் 'சர்ச்சில் வெற்றியின் சிற்பி' என்ற எண்ணம் பிரிட்டிஷ் மக்களின் உள்ளங் களில் நிலைபெற்றது. இத்தகையதொரு நம்பிக்கையை ஐரோப் பாவின் கூட்டணி நாடுகளிலும் ஏற்படுத்துவதில் சர்ச்சில் அவ்வளவு வெற்றி பெறவில்லை.

இதுகாறும் சர்ச்சில் எவ்வளவு தூரம் ஓர் அரசியல் வல்லுந ராக விளங்க முயன்றார் என்பதைக் கண்டோம். இது பற்றி இன்னும் வரலாற்றாசிரியர்களுக்குள் இறுதியான முடிவுகள் ஏற்படவில்லை. வரலாறுதான் அவரது சாதனைகளைப்பற்றித் தீர்ப்புக் கூற முடியும். சர்ச்சில் தாமாகவே உழைத்துக் கற்று வாழ்வில் முன்னேறியவர். அவர் கற்ற கல்வியின் மையப் பொருளே அரசியல் வெல்திறந்தான். மேலும், எதிலும் தனித்து நிற்பதே அவரது இயல்பு. டோரியாகவோ, லிபரலாகவோ, உயர்குடியாளனாகவோ, ஜனநாயக வாதியாகவோ என்றும் அவர் அரிய ஓர் அரசியல் வல்லுநராகவே நின்றார். அவரது வழி வகைகளில் தனித்தன்மை புலப்பட்டது. இதில், அவர் விடாக்கண்டனாக இருந்தமையால் மற்றவர்களை அவர் தம்மைப் புரிந்து கொள்ள வைக்க முடியவில்லை. அதற்காக அவர் அக்கறைப்படவுமில்லை. அறிவுக் கூர்மையும், அரசியல் முன் னோக்குமுடைய அரசியல் வல்லுநர் என்ற தகுதிக்குச் சர்ச்சில் உரிமை கோருகிறார். அவர் கோருகின்ற உரிமை எவ்வளவு தூரம் நியாயத்திற்குக் கட்டுப்பட்டது என்பதை வரலாறுதான் எண்பிக்க முடியும். உலகம் இந்த உண்மையைப் புரிந்து வரு கிறது. இன்று சர்ச்சிலைப் பொறுப்பற்ற அரசியல் வல்லுநராக எண்ணித் தள்ளி விடுகிறவர்கள் யாரும் இல்லை என்பது உண்மை.

# 24. சர்ச்சில் ஓர் அரசியல் வாதி

வின்ஸ்டன் சர்ச்சில் அரசியலை வாழ்க்கையாகக் கொண்டவர். 'எல்லா வகையிலும் அவர் அரசியலை வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டவர். அத் தொழிலுக்காகச் சிறந்த பயிற்சியையும் பெற்றிருந்தார் சர்ச்சில்' என்று, பீவர் ப்ருக் கூறுகின்றார். அவருடைய பிற சாதனைகள் குறிப்பாக, அவர் எழுதிய நூல்கள் அவரது அரசியல் பணிக்கு இன்றியமையாத் துணைகளாகவே இருந்தனவன்றி, அதற்குப் போட்டியாக எழவில்லை; முதல் உலகப் போரில்தான் அவர் முழு மூச்சுடன் அரசியலில் குதிக்கின்ற வாய்ப்பு ஏற்பட்டது. ஒருவேளை சர்ச்சிலின் அரசியல் பணி எந்தப் பயனும் விளைவிக்காமலிருக்கலாம். வெள்ளை மாளிகையிலும், வெஸ்ட்மினிஸ்டர் சூழலிலும் தமது வாழ்வைக் கழிக்காமல், அரசியல் சார்பற்ற சூழ்நிலையில் அவர் நீண்ட காலம் வாழ்ந்து பணிபுரிந்திருந்தால் அவருக்கு அதிக நன்மை ஏற்பட்டிருக்கக் கூடும். ஆனால், உண்மை என்னவென்றால், தொடக்க காலத்திலிருந்தே சர்ச்சிலுக்கு 'அரசியல்' வாழ்வின் மூச்சாக இருந்தது. சர்ச்சில் இளைய பிட்டையும் ஃபாக்ஸையும் (Fox) போலப் பிறப்பிலே அரசியலில் நுழைந்தவர். அவர்தம் இளமைக்கால அனுபவங்கள் ஆழ்ந்த நாட்டுப் பற்றிலும், ஈடுபாடுகளிலும் உருவாக்கப்பட்டவை. இக்காலத்தில் ஓரளவு அரசியலில் தோல்வி கண்டிருந்த சர்ச்சிலின் தந்தையாரின் செல்வாக்கு மகனிடம் அதிகமாக இருந்தது.

1900ஆம் ஆண்டு இருபத்தாறு வயதினரான வின்ஸ்டன் ஓல்டாம் தொகுதியின் கன்சர்வேடிவ் உறுப்பினராகக் காமன்ஸ் அவையில் நுழைந்தார். அவர் தந்தையார் ரேண்டால்ஃப் பிரபு இறந்து ஐந்தாண்டுகளே ஆகியிருந்தன. அவரைப் பற்றி வன்மையான நினைவுகள் மேலோங்கி இருந்த நேரம் அது; சர்ச்சிலுக்கு ஒருமுகமான ஆதரவு கிடைக்காததில் வியப்பில்லை. இன்னல்களைத் தாங்கி எதிர் நீச்சல் போட அவர் தயாராக

இருந்தார். வீர வாழ்க்கையில் அவருக்கு மிகுந்த பற்று இருந்தது. தமக்கு எதிராக இருந்த துவேஷ உணர்வுகளை உதறித் தள்ள சில காலம் பிடித்தது. இளம் வயதில் வின்ஸ்டன் தம் அபிலாஷைகளை மூடி மறைக்க முடியவில்லை. இங்கிலாந்தில் இளமைப் பருவமானது பொறுமையுடனும் அடக்கத்துடனும் தாங்கிக்கொள்ளப்பட வேண்டிய ஓர் இடைவேளையாகக் கருதப் பட்டது. ஆனால், சர்ச்சிலுக்கு அரசியல் வாழ்வில் அடக்கம் என்பது பிடிக்காது. மேலும், அரசியலில் நாணயத்துடன் இருப்பது அவரை மிகவும் கவர்ந்தது. எதை மறைப்பது என்பது அவரால் முடியாத ஒரு காரியம். அவர் தம் தந்தையாரைப் போலவே பாராளுமன்றத்திலும், வெளியிலும் நடந்துகொண் டார். 'சர்ச்சில் செல்வாக்கை இழப்பது உறுதி; அமைதியற்ற தன்னல நாட்டமுள்ள அவருடைய பண்புகளும், தார்மீகப் பக்குவம் அவரிடம் இல்லாமையும் அவர் பலரின் வெறுப்பைத் தேடிக்கொள்ள வழி செய்யும்' என்று 1903ஆம் ஆண்டிலேயே பேயாட்ரிஸ் வெப் (Beatrice Wei) என்ற அம்மையார் குறிப்பிட் டார்கள். அதே அம்மையார் சர்ச்சிலின் தன் முனைப்பையும், துணிவையும், சிறந்த மரபுகளையும், பிற திறமைகளையும் பாராட்டவும் தவற வில்லை.

1901 முதல் 1905 வரை வின்ஸ்டன் தம்தந்தையாரின் வாழ்க் கைப் பணியை மீண்டும் உருவாக்குவார் என்று தோன்றியது. எதிரிகளுடன் போராடுவது, கொள்கைகளுக்காக வாதிடுவது ஆகியவற்றில் ஈடுபாடு கொண்டார். தொடக்கத்திலிருந்தே தனிப்பட்டு நிற்கத் தொடங்கினார். ஹியூ செசில் (Hugh Cecil) பிரபுவின் ஆதரவாளர்களுடன் சேர்ந்துகொண்டு, தந்தையார் நிறுவ முயன்ற 'நான்காவது கட்சி'யின் நினைவுகளை மீண்டும் கிளறி விட்டார். இதே சமயத்தில் வின்ஸ்டன் தந்தையாரின் வாழ்க்கை வரலாற்றை எழுதிக் கொண்டிருந்ததும் குறிப்பிடத் தக்கதொன்றாகும். தொடக்க முதலே வின்ஸ்டனின் முறைகளில் வலிந்து தாக்கும் இயல்பு வெளிப்பட்டது. புகழ்பெற்ற தலைவர் களைத் தாக்குவதால் சிறப்புப் பெறலாம் என்ற சபலம் அவருக்குத் தட்டியது. 'காமன்ஸ் அவையில் கையொலி எழுப்பிப் பாராட்டுப் பெறுவது சர்ச்சிலுக்கு மூச்சுக்காற்றுப் போன்றது' என்று, அவரைப் பற்றி லாயிட் ஜார்ஜ் 1907ஆம் ஆண்டு ஒரு தனிக் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். ஒரு நடிகரைப் போல முன்னணி முக்கியத்துவம் பெறவும், அவையோரின் பாராட்டு தலைப்பெறவும் சர்ச்சில் விரும்புவார். அக் காலத்தில் வன்மை யான அரசியல் பெரியார் ஒருவரைத் தாக்கி அதன்மூலம் அரசி யலில் முன்னுக்கு வருவது குறுக்கு வழியாக, ஆனால், ஆபத்தான

வழியாகக் கருதப்பட்டது. இம் முறையில் ரேண்டால்ஃப் பிரபுவும், லாயிட் ஜார்ஜும் வெற்றி கண்டவர்கள். அவ்வாறே சர்ச்சிலும் போர்த்துறை அமைச்சராக இருந்த செயின்ட் ஜான் ஃபிரட்ரிக் (St. John Frederick) என்பாரைத் தாக்குவதோடு தொடங்கினர். அடுத்து ஜோசஃப் சேம்பர்லேன் சர்ச்சிலின் தாக்குதலுக்கு இலக்கானர். இவ்வாறு அவர் கன்சர்வேடிவ் கட்சியை விட்டு விலகுவதற்குள் அரசாங்கத்தைக்கூட விட்டு வைக்கவில்லை.

தொடக்க காலத்தில் சர்ச்சிலின் அரசியல் பேச்சுகளில் காணப்பட்ட வன்மை குறிப்பிடத்தக்கது. 1900ஆம் ஆண்டு தேர்தல் பிரச்சாரத்தில் அவர் லிபரல் கட்சியினரை 'தரங் கெட்டவர்கள், கபடவேடதாரிகள், கண்டது விழுங்கிகள்' என்றெல்லாம் வசைமாரி பொழிந்தார். 'வளைக்குள் நுழைந்து கொள்ளும் தவளைபோல் லிபரல்கள் பொதுமக்களின் பார்வையி லிருந்து மறைந்து கொண்டிருக்கிறர்கள்; அவர்கள் வெளிப்படு கின்றபோது டோரிகள் அவர்களை அணுவணுவாகத் துண்டித்து விடுவார்கள்' என்றும் அவர் குறிப்பிட்டார், 1903ஆம் ஆண்டில் சர்ச்சில் பால்ஃபோர் பிரபுவைத் தனிப்பட்ட முறையில் கடுமை யாகத் தாக்கினர். 'மன்னிக்க முடியாத மகத்தான அறியாமை கொண்டவர்' என்று பால்ஃபோரைச் சர்ச்சில் வர்ணித்தார். பால்ஃபோரின் அமைச்சரவை கொலை செய்ய வேண்டிய கொள்கை எதுவுமில்லை யென்றும், அவர்கள் எத்தகைய இழிவையும் வெட்கமின்றி ஏற்றுக்கொள்வார்கள் என்றும் சர்ச்சில் இரக்கமின்றிப் பழித்தார். இத்தகைய சூழ்நிலையில் கன்சர் வேடிவ்களும், லிபரல்களும் அவரை வெறுக்கத் தொடங்கியதில் வியப்பில்லை. எனினும், சமகாலத்திய தலைவர்களிடையே சர்ச் சிலின் நாவன்மை அவரது ஆளுமையைக் கவர்ச்சி பெறச் செய்தது. சர்ச்சிலின் சொல்லாற்றலின் சிறந்த முக்கியத்துவம் அவரது அரசியல் வாழ்வின் போக்கை நிர்ணயித்தது.

நினைத்தவுடனே பேசும் 'திடீர்ப் பேச்சாளர்' அல்லர் சர்ச்சில். அவரது சொல்லாற்றலில் சில குறைபாடுகள் இருந்தன. அவரது குரல் எடுப்பாக இருக்கவில்லை. 'எஸ்' (S) என்ற எழுத்தைத் தெளிவாக உச்சரிக்க முடியாத காரணத்தால் அவரது பேச்சுத் தெளிவில்லாமலும் கவர்ச்சியில்லாமலும் இருக்கும். தவிர, பாராளுமன்றத்திலும், பொது மேடைகளிலும் நிற்கும்போதுகூட அவரின் நினைவோட்டம் ஆற்றொழுக்காக இராது. ஏற்கெனவே, எழுதி மனப்பாடம் செய்து கொள்ளாத எந்தப் பொருள் பற்றியும் பொது மேடையில் அவரால் பேச

முடியாது. எதையும் மனப்பாடம் செய்துவிடும் நினைவாற்றலில் அவரை யாரும் விஞ்சியது இல்லை என்பது அவர் பெற்ற பெரும் பேறுகும். முதலிலிருந்தே காமன்ஸ் அவையின் அல்லது பொது மக்கள் மன்றத்தின் மனநிலை என்னவென்பதை அறிய முயன்று அதற்கு ஏற்றவாறு தம்முடைய கருத்துகளையும், விவாதங்களையும் தயாரித்து அவர்களின் முன்னர் வைப்பது வழக்கம். இன்றுபோல் அன்றும் காமன்ஸ் அவை விறுவிறுப்பு மிகுந்தும், மாறுகின்ற தன்மை பெற்றும், திறனாய்வு நடத்தும் அரங்கமாகவும் இருந்தது. இத்தகைய அவையின் முன் கருத்துகளையும், விவாதங்களையும் எடுத்துச் சொல்வதில் உள்ள சிரமங்கள், அவையில் செல்வாக்குப் பெற விழைகின்றவர்களின் அவாக்களைச் சிதறடித்துவிட முடியும். இதனை நன்கறிந்த வின்ஸ்டன் தம் உரைகளை நன்கு திட்டமிட்டுக் கவனத்துடன் தயாரித்தார். சர்ச்சிலின் தனிப்பட்ட உரையாடல்கள் அவர் எழுதியவற்றை விடச் சிறந்தவை என்று பூத்பி பிரபு (Lord Boothby) குறிப்பிடுகின்றூர். இவ்வளவு சிறந்த நாவன்மை படைத்த சர்ச்சில் மக்கள் மன்றங்களின் முன்னர் தாம் நிகழ்த்திய உரைகளை முன்னதாகத் தயார் செய்யவேண்டிய நிலை இருந்தது என்பது விந்தையாக இல்லையா? 'எனது நாவினுல் பேசி எழுத்துகளில் வடித்து, நான் வாழ்கின்றேன்' (I live from mouth to Hand) என்று அவர் கூறுவது மிக உண்மையாகும்.

### பேச்சும் எழுத்தும்

சர்ச்சிலின் அரசியல் உத்திகளும், கட்சி மாற்றங்களும் அவருக்குப் பல அனுகூலங்களைக் கொண்டு வந்தன. லிபரல்கள் ஆட்சி செய்த பத்தாண்டுகளில் அவர் தொடர்ந்து பதவியில் இருந்தார். இக்காலை அவர் பல வெற்றிகளையும் சாதனைகளையும் குவிக்க முடிந்தது. 1900 முதல் ஐந்தாண்டுகளில் அவர் விரைவாக முன்னேறினூர். அதற்காக அவர் பெரும் விலை கொடுக்க வேண்டியிருந்தது. 1905ஆம் ஆண்டு குடியேற்ற அமைச்சகத்தில் அவர் துணைச்செயலாளராகப் பொறுப்பேற்றபோது தாம் வெறும் பேச்சாளர் மட்டும் அல்லர் என்பதைத் தெளிவுபடுத்தினூர். பேச்சும் எழுத்தும்தாம் ஓர் அரசியல் வாதியின் இன்றியமையாத ஆயுதங்கள். ஆற்றொழுக்கான அலங்கார நடையில் பேசுவது ஆங்கில நாட்டின் இயல்பிற்கு என்றும் பொருந்தியதில்லை. ரேண்டால்ஃப், ஆஸ்குவித், ரோஸ்பெரி, சர்ச்சில் ஆகியோர் தங்களுடைய நீண்ட உரைகளை வெகு கவனமாகத் தயாரிக்க வேண்டியிருந்தது. சர்ச்சிலின் நாவன்மையைப் பற்றிப் பேசுவோர் முக்கியமானதொன்றைக் கவனிக்கவேண்டும்.

சொந்த சொற்களின் குரலைப் பாராளுமன்றத்தில் எதிரொலிக்கச் செய்யவேண்டும். லாயிட் ஜார்ஜ் அவையினரை மகிழ்விக்க முயன்றார். சர்ச்சிலைப் பொறுத்தவரை இந்தக் குறைபாட்டிற்கு இடமில்லை. 'மக்களை ஆட்டிப்படைக்கின்ற பேச்சுகளை யாரிடமும் கற்றுக்கொள்ளவில்லை' என்று, சர்ச்சிலைப் பற்றி 1898ஆம் ஆண்டிலேயே ஸ்வென்ஸ் குறிப்பிட்டார். சர்ச்சில் பிறப்பால் அத்தகைய ஆற்றலைப் பெற்றவர். அழகான சொற்களை அள்ளிவீசுவது அவருடைய பண்புகளை உயிரோட்டம் போன்றது. 1897ஆம் ஆண்டு, தாம் எழுதிய 'ஸ்கேஃபோல்டிங் ஆஃப் ரெட்டரிக்' (Scafolding of Rhetoric) என்ற நூலில், பேச்சுகளின் சக்தியையும் பேச்சாளர்களின் உத்திகளையும் பற்றிக் குறிப்பிடுகிறார். 'முயற்சித் திருவினையாக்கும்' என்று சர்ச்சில் அனுபவத்தில் உணர்ந்தது. எனவே, நினைத்ததைப் பேசிவிட எண்ணாமல், இலக்கியச் சுவையுடன் தம் உரைகளை உருவாக்குவதில் அவர் கவனம் செலுத்தினார்.

இத்தகையதொரு பண்பினால் சர்ச்சில் நன்மை பெற்றாரா? என்ற வினா எழலாம். தம்மிடம் முறையாகத் தென்பட்டதைக் கடின உழைப்பினால் நிறை செய்து அதனைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார் என்பது மறுக்க முடியாத உண்மை. இதற்குத் துணிவும் உழைப்பும் தேவைப்பட்டன. சர்ச்சில் தம் உரைகளை எழுதினார்; நூல்களில் பேசினார்' என்றும் கூறலாம். சர் ஹெரால்ட் நிக்கல்சன் கூறியதுபோல், 'நாவீறு கொண்ட சொற்பெருக்குடன் அசாதாரண உரையாடல் திறனும், சொல்லாற்றலும் பெற்றிருந்தது சர்ச்சிலின் நாவன்மையின் சிறந்த அமிசம்' என நிலைத்துவிட்டது. இதனை உருவாக்கியது சர்ச்சிலின் உலையாத உழைப்பு என்பது குறிப்பிடத்தக்கது. 1901ஆம் ஆண்டு சர்ச்சில் ஆற்றிய முதல் காமன்ஸ் உரையை ஆறு வாரங்களாகத் தயாரித்தார். இது பரபரப்பூட்டும் வெற்றிச் சொற்பொழிவாகக் கருதப்பட்டது. கட்சிப் பிரச்சாரத்தின்போதும் சர்ச்சில் வன்மையான சொற்பொழிவுகளை ஆற்றினார். அப்பொழுது அவருக்கு முப்பது வயதுகூட ஆகவில்லை.

ஏற்கெனவே, பேச்சினாலும், எழுத்தினாலும், இலக்கிய நடை மேலோங்கிச் சிறப்புப் பெற்றார் சர்ச்சில். அநேகமாக ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் வெளியிலிருந்து ஒரு கருத்து அவரைக் கவரும். பின்னர் அவரது கூர்மையான மூளையில் அது தங்கி வன்மை பெறும். பின்னர் அவரின் சொல்திறத்தில் அது சுழலவே அதனைச் சரியான கருத்து என்று உறுதி செய்வார். கிரேக்கர்

களின் முறைப்படி சர்ச்சில் சொற்களின் அடிமையாவார். அவரைக் கவருகின்ற கருத்துகளுக்கு, இசைப்புலவர்கள் இசை வடிவம் தருவதுபோல், சொல்வடிவம் தீட்டுவார். அவை சர்ச்சிலின் சொல்திறன் என்றும் இயந்திரத்தில் வார்க்கப்படும் உண்மைகளாகிவிடும். சர்ச்சிலின் எழுத்துகள் அவருடைய ஓவியங்களைப் போன்று கண்ணைப் பறிக்கும் வண்ணங்களுடன் திகழ்ந்தன. தம் பேச்சுகளில் சொல் சிலம்பாடுவதையும், மக்களை உணர்ச்சி வெறிகளில் மட்டுமே தூண்டிவிடும் அமைப்புகளையும் அவர் விரும்புவதில்லை. சர்ச்சிலிடம் செயல்தான் உண்டு. மாற்றெதிர் செயல் கிடையாது. அடுத்தது காட்டுவது அவரது இயல்பன்று. அடுத்தவர்களையும் தமது அளவிற்கு ஏற்றபடி வாதித்து மாற்றிக்கொள்வது எவ்வாறு என்பது அவருக்குத் தெரியும்.

சொல்திறனை மட்டும் அடிப்படையாகக் கொள்ளும் பேச்சாற்றல் முறையில் உள்ள ஒரு பெருங்குறை என்னவென்றால், இதில் நம்பிக்கையுள்ளோர் தமது வன்மையை விரைவில் இழந்துவிடுவதாகும். சர்ச்சில் பிறரின் கருத்துகளைக் கேட்பதில்லை. தமது தெளிவான அழகான கருத்தோட்டத்தை எதிரியின் சலிப்புத்தட்டும் எண்ணங்களால் தடை செய்ய விடமாட்டார். தமது எண்ணமே சரியானதென்று நினைக்கும்போது மற்றவர்களைப்பற்றி ஏன் அவர் அக்கறைப்படப் போகிறார்? மற்றவர்களுடன் அவர் வாதிடுவதில்லை. தமது கருத்தை மற்றவர்கள் ஏற்றுக்கொள்ளுமாறு விளக்குவதுதான் அவரது வேலையாகும். பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் சொல்வன்மையின் 'அன்டோனைன் காலம்' (Antonine Age) என்ற காலகட்டத்தில்தான் சர்ச்சில் உருவானார், முதல் உலகப்போருக்குப் பின் பிரிட்டிஷ் அரசியல் அமைப்பில் ஏற்பட்ட பல மாறுதல்களால் பிரிட்டிஷ் அரசியல் வாத அரங்கிலும் பல முக்கியமான, நுட்பமான மாற்றங்கள் உண்டாயின. மேலும், வானொலி என்ற முக்கிய செய்தித் தொடர்பு, சாதனம் நிலைபெற்று விட்டதாலும் முற்றிலும் மாறுபட்ட உத்திகளைக் கையாள வேண்டியதாயிற்று. பால்ட்வின், ரூஸ்வெல்ட், ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் ஆகியோர் வானொலி முறைக்குத் தக்கவாறு தங்களின் பேச்சுகளை அமைத்துக் கொண்டார்கள்.

சர்ச்சிலின் சொல்லாயுதம் வன்மை படைத்தது. அதனைக் கொண்டு அவர் புகழவும் செய்யலாம், வசைமாரிகளைப் பொழியவும் செய்யலாம். அவருடைய வசைப் பேச்சுகளில் நகைச்சுவையும், இகழ்ச்சித்தொனியும் மிளிர்ந்தன. ஒவ்வொரு முக்கிய

மான அவர்தம் உரையும் புள்ளி விவரங்களையும் விலாத நுணுக்கங்களையும் கொண்டு கவனமாக உருவாக்கப்பட்டவை. 1906ஆம் ஆண்டில் அமைச்சராக அவர் நிகழ்த்திய முதல் உரை தோல்வி கண்டது. அது முதல் அவர் கவனமுடன் உரைகளைத் தயாரித்து ஒத்திகை நடத்திய பின்னர்தான் அரங்கேற்றுவார். சொல்வன்மை என்பது வெறும் உத்திகளைப் பொறுத்தது மட்டுமன்று. பேச்சில் பேசுகிறவரின் ஆளுமையும் குணநலன்களும் வெளிப்படவேண்டும். சர்ச்சிலின் பேச்சுகள் அவர்தம் பண்புகளை வெளிப்படுத்தின. சொல்லாற்றல் பெற்றவனின் மனத்திடத்தை யாராலும் அழிக்க முடியாது. இதன் உண்மையைச் சர்ச்சிலின் வாழ்க்கையே விளக்கும். காலம் கனிந்தபோது சர்ச்சில் மிகச்சிறந்த முறையில் தம்மைத் தயாரித்துக்கொண்டிருப்பதை உணர்ந்தார். 1905ஆம் ஆண்டு அமைச்சரானபின் சர்ச்சில் ஒரு முறை கட்சி மாறினார். இதனால், அவர்மீது வெறுப்பு உணர்ச்சி வளர்ந்தது. அவரைப் போன்று கட்சியின் மனக்கசப்புகளை உற்சாகத்துடன் சமாளிக்கக்கூடியவர்கள் ஒரு சிலர்தாம். சவாரி செய்வதற்குக் குதிரை எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் அரசியல் வாழ்விற்குக் கட்சி என்பதைச் சர்ச்சில் உணர்ந்தார். கட்சிக்கு அடிமையாகாமல் விநோதக் கூட்டுகளிலும், கட்சி மாற்றங்களிலும் அவர் ஆர்வம் கொண்டிருந்தார்.

சர்ச்சிலின் அரசியல் வாழ்வு முழுவதிலும் அவர் கன்சர்வேடிவ்களுடன் மோதிக் கொண்டார். 1901 முதல் 1904 வரை சொந்தக் கட்சிக்குள்ளே அவர் புரட்சிக்காரராக இருந்தார். அடுத்த பத்தாண்டுகளில் அவர் எதிரிகளின் பக்கம் சேர்ந்தார். 1917 முதல் 1922 வரை அவர் லாயிட் ஜார்ஜின் அமைச்சரவையில் இருந்த போதிலும் கன்சர்வேடிவ்கள் அவர்பால் விருப்புக் கொள்ளவில்லை. 1924ல் மீண்டும் கன்சர்வேடிவ் ஆனார். 1930ல் மீண்டும் கட்சித் தலைமையுடன் மோதினார். 1939ல் இரண்டாம் உலகப் போர் தொடங்கும் வரை சர்ச்சில் ஒரு புரட்சியாளராகவே இருந்தார். 1940ல் பரஸ்பர நன்மைகளின் காரணமாக கன்சர்வேடிவ்களும் சர்ச்சிலும் இணைந்தனர். ஆனால், ஒருவர் மீது ஒருவர் விழிப்புடன் இருந்தனர். சில காலம் சர்ச்சில் லிபரல் கட்சியில் இருந்தாலும் அவரிடம் கன்சர்வேடிவ் கொள்கைகள் வன்மையான அடிப்படைகளாக விளங்கின. ஆஸ்குவித் அமைச்சரவையில், சமூக சீர்திருத்தங்களில் இயல்பான உற்சாகத்துடன் ஈடுபட்டார். அத்துறையில் அவருடைய சாதனைகள் குறிப்பிடத் தக்கவை. தொழிலாளர் நல நிலையங்கள், தொழிலாளர் விபத்துச் சட்டம், நிலக்கரிச் சுரங்கச் சட்டம்

ஆகிய சீர்திருத்தங்களை அவரது நேரடியான தலையீட்டாலும், உற்சாகத்தாலும் பிறந்தவை. 'ஓர் அமைச்சரின் ஆளுமை ஒரு சில மாதங்களில் சமூகச் சட்டத்தின் போக்கையே மாற்றக்கூடும் என்பதற்குச் சர்ச்சிலின் சாதனைகள் எடுத்துக்காட்டு' என்று வில்லியம் பீவரிட்ஜ் குறிப்பிட்டார்.

இத்தகைய பணிகள் எவ்வளவு ஆழமான விளைவுகளை ஏற்படுத்தும் என்பதைச் சில லிபரல்கள் உணராமல் இல்லை. மனிதாபிமானம் கொண்ட உயர் குடியாளர்கள் தொழிலாளர்களுக்கு உதவும் நிலை பிரிட்டனில் உருவாக வேண்டுமென்று சர்ச்சில் விரும்பினார். சர்ச்சிலின் முற்போக்குக் கொள்கைகளை அவர்தம் உரைகளிலும், 'லிபரலிசம் அண்டு தி சோஷியல் பிராப்ளம்' (Liberalism and the Social Problem) என்று அவர் எழுதிய நூலிலும் காணலாம். சர்ச்சிலும் சில நண்பர்களும் முயன்றும் 1918 வரை தனித் திட்டம் கொண்ட லிபரல் கட்சி அமையவில்லை. 'லிபரல் கட்சியின் சீர்திருத்தங்கள் தீவிரப் போக்கின்றி மிதப் போக்குக் கொண்டிருந்தால் வெற்றி பெறும் என்பது சர்ச்சிலின் நம்பிக்கை. படிப்படியாக, நாள்தோறும், ஆண்டுதோறும் லிபரல்கள் பல்லாயிரக்கணக்கான மக்கள் விரும்பும் சீர்திருத்தங்களைக் கொண்டுவர முடியும் என்பது அவரது துணிவு. லிபரல் கட்சியின் இலட்சியம், புறக்கணிக்கப் பட்ட கோடானுகோடி மக்களின் நலமாக இருக்க வேண்டும். விஞ்ஞானமும் நாகரிகமும் படைத்திருக்கும் அமைப்புகளைத் தகர்த்தெறிவது நமது நோக்கமன்று. ஆனால், மக்களுக்குள் ஏற்றத்தாழ்வுகளை விளைவிக்கும் பிளவுப் பாதாளங்களை மூடி விட வேண்டும்' என்பவையெல்லாம் சர்ச்சிலின் கொள்கைகள்.

1908ஆம் ஆண்டு டண்டி இடைத்தேர்தலில் சர்ச்சில் பெற்ற தோல்வி அவர் சோஷியலிசக் கொள்கைகளைத் தாக்குமாறு தூண்டியது. 'சோஷியலிசமும் லிபரலிசமும் இரு துருவங்கள். இவற்றிற்கிடையேயுள்ள பிளவு நிலையானது. சோஷியலிசம் செல்வ வளங்களைச் சின்னா பின்னமாக்கிச் சிதறடிக்க விழைகிறது. லிபரலிசம் வறுமையை நீக்கி வாழ்வை உயர்த்த முயல்கிறது. சோஷியலிசம் தனியார் நலன்களை அழிக்கத் தேடுகிறது. லிபரலிசமோ தனியார் நலன்களைப் பேணிப் பாதுகாக்கிறது. சோஷியலிசம் விதி முறையை உயர்த்தும். லிபரலிசம் மனிதனை உயர்த்தும்' என்ற மறக்கமுடியாத உரையொன்றை சர்ச்சில் ஆற்றினார். தொழிலாளர் கட்சியிலும், லிபரல்கள் சிலரிடமும் சர்ச்சிலின் லிபரல் கொள்கையைப்பற்றி ஐயப்பாடுகள் எழுந்தன. சோஷியலிசத் தாக்குதல்கள் எரியும் நெருப்பில் எண்ணெயை

வார்த்தன. 1911ஆம் ஆண்டு ரயில்வே வேலை நிறுத்தத்திலும், தென் வேல்ஸ் நிலக்கரிச் சுரங்கச் சிக்கல்களிலும் சர்ச்சில் நிதானமும் திறமையும் காட்டினார். வட்டார அதிகாரிகளைக் கலக்காமலே சர்ச்சில் 50,000 போர் வீரர்களைத் திரட்டி முக்கிய கேந்திரங்களில் அவர்களை நிறுத்தி வைத்தார். இந்த நிகழ்ச்சிகள் சர்ச்சிலின் குணவியல்புகளை வெளிப்படுத்தின. 'சிட்னித் தெரு முற்றுகையில்' (Sydney street Blockade) அவரே முன்னின்று பாதுகாப்பு ஏற்பாடுகளை நடத்தினார். தொழிலாளர் சர்ச்சில் உறவில் இது ஒரு திருப்பு முனையாகும்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மற்றொரு முக்கிய விஷயத்திலும் சர்ச்சில் தம் கருத்துகளை மாற்றிக் கொண்டார். லாயிட் ஜார்ஜுடன் சேர்ந்து கடற்படையின் செலவுகளைக் குறைக்கின்ற போராட்டத்தில் ஈடுபட்டார். 1911ஆம் ஆண்டில் ஏற்பட்ட அகதிர் சிக்கலுக்கு முன்னர் சர்ச்சிலின் கருத்து மாறுதலடைந்தது. அவரது இயல்பிற்கு ஏற்றபடி ஒருகோடியிலிருந்து மறுகோடிக்குத் தாவுவார். முற்போக்கு அரசியல், மக்கள் வரவு-செலவுத் திட்டம், தடையில்லா வாணிகம். அமைதி, சீர்திருத்தம் ஆகிய போர் முழக்கங்கள் யாவும் புதிய பிரச்சினைக்கு முன்னர் பொய்யுநக் கொண்டு தோன்றின. அயர்லாந்து மட்டுமே அவருக்கு உண்மைநிலை பெற்றதாகத் தோன்றியது. சர்ச்சில் கடற்படைத் தலைமைக்கு மாற்றலான போது அவரது 'சமூக சீர்திருத்த' யுகத்திற்கும் ஒரு அமைதியான முடிவு ஏற்பட்டது. புதிய பணியில் எவ்வளவோ ஊறி விட்டாரென்றால், சமூக சீர்த்திருத்தக் குறிக்கோளே ஒத்தி வைக்கப்பட்டது. இவ்வாறு லிபரல் கட்சியில் அவரது செல்வாக்குக் குறைந்து வருகையில், கன்சர்வேடிவ் கட்சியில் அவர் மீதுள்ள அவ நம்பிக்கை அதிகரித்தது. இதனைத் தூண்டிவிட்டது அயர்லாந்துப் பிரச்சினையாகும்.

அல்ஸ்டரிலுள்ள ஒன்பது கவுன்டிகளின் வருங்காலத்தைப் பற்றி இங்கிலாந்தின் இரு கட்சிகளுக்குள்ளும் பெரும் பிளவு ஏற்பட்டது. அல்ஸ்டரின் போராட்டம் நியாயமானதென்று 1886ல் ரேண்டால்ஃப் பிரபு அறிவித்தார். 1912ல் அயர்லாந்து பாராளுமன்றத்தில் அல்ஸ்டர் தென் அயர்லாந்திற்குக் கீழ்ப்பட்டிருக்க வேண்டுமென்ற அச்சம் தோன்றிய போது அல்ஸ்டரின் போர் முழக்கம் மீண்டும் கேட்டது. சர் எட்வர்ட் கார்சன் (Sir Edward Corson) என்பவர் அல்ஸ்டரின் புதிய தலைவராக விளங்கினார். புதிய கன்சர்வேடிவ் தலைவரான போனர்லா தனிப்பட்ட முறையிலும், அரசியல் ரீதியாகவும்

25

பிரிட்டனுக்கும் அல்ஸ்டருக்கும் இடையேயுள்ள உறவுகளைப் பாதுகாக்கச் சூளுரை எடுத்துக் கொண்டவர். தொடக்க முதலே அயர்லாந்துப் பிரச்சினை கசப்புணர்ச்சியும் அபாயமும் கலந்த ஒரு பிரச்சினையாகி விட்டது. இவை இன்னும் மோசமாகும் என்ற அறிகுறிகளே தோன்றின. ரேண்டரல்ஃபின் மகன் என்ற முறையில் சர்ச்சில் நிலை தர்ம சங்கடமாக இருந்தது. அல்ஸ்டருக்குத் தனிப்பட்ட கவனம் தேவை என்பது சர்ச்சிலின் சொந்த கருத்தாகும். ஆனால், பொதுவில் அவர் போர் எண்ணம் கொண்டிருப்பதாகவும், போரைத் தூண்டுவதாகவும் தோன்றியது. 1912ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் அவர் பெல்ஃபாஸ்டிற்குச் சென்று வந்தார். இத் துணிகரமான பயணத்தாலும் மக்களின் கொதிப்பு அடங்கவில்லை. சர்ச்சிலின் பிராட் ஃபோர்டு (Broad ford) சொற்பொழிவு அல்ஸ்டர் மக்கள் அரசாங்கத்தை எதிர்க்குமாறு தூண்டியது. போர்க் கப்பல்கள் ஸ்காட்லாந்தின் மேல் கரையில் நடமாடின: குராக் கிளர்ச்சியில் (Currgh Mutiny) சர்ச்சிலின் நெருங்கிய நண்பரும் போர் அமைச்சருமான சீலி என்பார் முக்கிய பங்கு பெற்றார். போர்க்கப்பல் திருப்பி அழைக்கப்பட்டன. சீலி போர் வீரர்களால் மானபங்கமடைந்து பதவி துறக்கும்படியாயிற்று. அயர்லாந்து சிக்கலை அமைதியான முறையில் தீர்க்க முடியுமென்ற நம்பிக்கை குறையலாயிற்று. இவை யாவற்றிலும் சர்ச்சில் கட்சியின் நல்லெண்ணத்தைப் பெற தாம் நாடியதாகவே தமக்கே இயல்பான முறையில் கள்ளங் கபடமின்றிக் கூறுகின்றார்.

## முதல் உலகப் போர்

1914ல் உலகப் போர் தொடங்கிய போது உள்நாட்டுச் சிக்கல்கள் முழுவதும் ஓயவில்லை. 1905ஆம் ஆண்டு முதலே வளர்ந்து வந்த அரசியல் வேகமும், கன்சர்வேடிவ் லிபரல் கட்சிகளுக்கு இடையேயுள்ள கசப்புணர்ச்சிகளும் மறையவில்லை: போர்க் காலத்தில் கட்சிச் சண்டைகள் கைவிடப்பட்டபோதிலும் பகையுணர்வும், நம்பிக்கைக் குறைவும் இன்னும் உள்ளூற வெந்து கொண்டிருந்தன. போர் தொடங்கிய மூன்று மாதங்களில் பிரிட்டிஷ் கடற்படையின் சாதனைகள் பிரிட்டிஷ் பொதுமக்களுக்கு அதிர்ச்சியைக் கொடுத்தன: 'கோபன், 'ப்ரெஸ்லாவ்' என்ற ஜெர்மன் கப்பல்கள் மத்தியதரைக் கடலில் நேச நாட்டுக் கப்பல்களுக்குப் போக்குக் காட்டி விட்டுக் கான்ஸ்டான்டிநோபிள் சென்று மறைந்தன. துருக்கி போரில் இறங்கியது. செப்டம்பரில் வட கடலில் மூன்று பிரிட்டிஷ் கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன. கொரோனெல் என்ற இடத்தில் அட்மிரல் வான் ஸ்பீயின் (Von Spec) கடற்படை பிரிட்டிஷ் கப்பற் படையை முறியடித்தது.

இந்தியப் பெருங் கடலில் 'எம்டன்' என்ற ஜெர்மன் நீர்மூழ்கி பிரிட்டிஷ் கப்பல்களின் நடமாட்டத்தைத் தடை செய்தது. டிசம்பரில், ஜெர்மன் நீர்மூழ்கிப் படை மூன்று கீழ்க் கடற்கரை நகரங்களைத் தாக்கி 137 பேரைக் கொன்று, 592 பேரைக் காயப் படுத்தியது. 'அடேசியஸ்' (Adacious) என்ற பிரிட்டிஷ் போர்க் கப்பல் நாசமடைந்தது பற்றிப் பத்திரிகைகளில் பிரசுரிக்க வேண்டாமென அமைச்சரவை விவேகமான முடிவு செய்தது. பிரிட்டிஷ் கடற்படைமீது கண்டனத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. கடற்படையைக் கண்டிப்பது கடற்படைத் துறைத் தலைவரைக் கண்டிப்பதுபோல் தானே!

இந்த நிகழ்ச்சிகள் அதிர்ச்சியைத் தந்தது மட்டுமன்று; பிரிட்டிஷ் கடற்படையின் மேலாண்மைக்கு அபாயங்களாகவும் தோன்றின. கடற்படையின் முதல் தளபதியான பிரின்ஸ் லூயிஸ் பேட்டன் பர்க் (Prince Luis Battenburg) பத்திரிகைகள் செய்த கண்டனத்தால் பதவி துறந்தார். அவருக்குப் பதிலாக வயது முதிர்ந்து ஓய்வில் இருந்த ஃபிஷர் பிரபுவைச் (Lord Fisher) சர்ச்சில் நியமித்தார். கடற்படையின் தோல்விகளை கன்சர் வேடிவ் ஏடுகளான 'தி டைம்ஸ்' (The Times) 'தி மார்னிங் போஸ்ட்' (The morning post) என்பவை வன்மையாக விமரிசனம் செய்தன. இதைத் தவிர வேறு இரு நிகழ்ச்சிகளும் சர்ச்சிலின் செல்வாக்கைக் குறைத்தன. செப்டம்பரில் ஜெர்மனிக்கு எதிராக டன்கிர்க் நகருக்குப் பிரிட்டிஷ் கப்பற்படையை அனுப்ப வேண்டு மென்று ஃபிரான்ஸ் யோசனை கூறியது. கிச்சினரின் வேண்டு கோளின்படி சர்ச்சில் இதன் தலைமையை ஏற்றார். தரைப்படை யும், கடற்படையும் கலந்த சிறுபடையினரின் உத்திகளை 'டன்கிர்க் சர்க்கஸ்' (Dunkirk Circus) என்று கேலி செய்தனர். டன்கிர்க் சர்க்கஸ் வெற்றியின்றி முடிவுற்றது. அக்டோபரில் இது போன்ற ஆன்ட்வெர்ப் பாதுகாப்பு நடவடிக்கைகளில் சர்ச்சில் பெற்ற பங்கு மீண்டும் அவரைப் பலத்த கண்டனத்திற்கு இலக்கு ஆக்கியது. டன்கிர்க் நிகழ்ச்சியை விட ஆன்ட்வெர்ப் விவகாரம் சர்ச்சில் மீது அநீதப் பழி சுமத்தியது. இது பற்றி சர்ச்சில் பதவி விலகுவதாக அறிவித்த போது காமன்ஸ் அவையில் அது பலத்த சிரிப்பைத் தான் உண்டாக்கியது. சர்ச்சிலின் நாடகப்பாணி நடவடிக்கைகள் அவரது அழிவிற்கு வழிகோலின. ஆன்ட்வெர்ப் வீழ்ந்தது. அத்துடன் 2500 வீரர்களும் மடிந் தனர். இதன் பழியையும் அவர் ஏற்றுக் கொள்ளவேண்டிய தாயிற்று. எனினும் தாம் பதவியில் இருந்து பொறுப்புணர்ச்சி யுடன் நடந்து கொண்டதற்காகச் சர்ச்சில் மனநிறைவு கொண்டார்.

இந்த இரு நிகழ்ச்சிகளிலும் இராணுவப் புகழ் பெறும் நோக்கம் சர்ச்சிலின் ஆர்வத்தைத் தூண்டியது. அவரிடத்தில் இதனை ஒரு வெறியாகப் பலர் கண்டனர். உள்ளக் கிளர்ச்சியும், செயலாக்க ஆர்வமும், புகழ் விருப்பும் ஒருபுற மிருந்தாலும், மறுபுறம் சர்ச்சில் மனச் சோர்வும், உற்சாகத் தளர்வும் கொண்டார். செயலாண்மை வெறி சில வேளைகளில் அவரிடம் தன் முனைப்பாகவும் மாறி விடும். 1914 முதல் சர்ச்சிலின் மனப் போக்கில் உன்னதமான உயர் நோக்கங்களைக் காணலாம். பிரிட்டிஷ் படைகள் வெற்றி பெற வேண்டுமென்பதே அவரது கவலை. இந்த நோக்கத்தை நிறைவேற்றுவதில் அவரிடம் காணப் பட்ட செயலாக்க வெறி தூய்மையானது. கடமையுணர்வும், தன்னலத்திற்கு அப்பாற்பட்ட தன்மையும் பெற்றது. 'நாம் ஓர் அரசியல்வாதி என்பதை மறந்து அவர் பணி ஆற்றினார். எனவே, அவர் அரசியல் தந்திரங்களை மறந்தார்'' என்று பீவர் ப்ருக் கூறு கின்றார்.

### டார்டனலஸ் நிகழ்ச்சி

இதுகாறும் கூறப்பட்டவை 1915ல் நிகழ்ந்த டார்டனலஸ் நிகழ்ச்சியின் பின்னணியாகும். 1914ஆம் ஆண்டின் இறுதியில் துருக்கிக்கு எதிராக ருஷ்யா உதவி கோரியது. டார்டனலஸ் படையெடுப்பைப் பற்றிச் சர்ச்சில் ஆலோசனை கூறினார். போர் ஆலோசனை சபை சர்ச்சிலின் வாதத்திறனையும் ஆர்வத்தையும் கண்டு வியந்தது. பிப்ரவரி 19ஆம் நாளன்று கடற்படைத் தாக்குதல் தொடங்கியது. பிரிட்டனுக்கு முதலில் வெற்றிகள் கிடைக்கவில்லை. தொடர்ந்து நடவடிக்கைகளை மேற்கொள்ளப் போர்த் தளவாடங்களை அனுப்புமாறு சர்ச்சில் வற்புறுத்தினார். சர்ச்சிலின் நண்பரான ஈயான் ஹாமில்டன் (Ian Hamilton) தலைமையில் 29ஆம் படைப்பிரிவு மார்ச்சு 18ஆம் நாளில் வந்திறங்கியது. அதே நேரத்தில் பிரிட்டிஷ் கடற்படைத் தாக்குதல் பலத்த சேதத்துடன் முற்றிலும் முரியடிக்கப்பட்டது. ஏப்ரல் 25ஆம் நாளன்று இருபடைத் தாக்குதல் செய்யப் போர் ஆலோசனைக் குழுவின் அதிகாரமின்றியே முடிவு செய்யப்பட்டது. மே 9ஆம் நாள் நடந்த தாக்குதலில் 20000 வீரர்கள் பலியாகி யும் காலிப்போலி தீபகற்பத்தைக் கைப்பற்ற முடியவில்லை. ஃபிஷர் பதவி துறந்தார். அமைச்சரவையே கவிழ்கின்ற சூழ் நிலையும் உருவாகியது!

சர்ச்சிலின் நிலையை யாரும் எளிதாக யூகிக்க முடியும். கன்சர்வேடிவ்-லிபரல் கூட்டு அமைய வேண்டுமெனில் சர்ச்சில் பதவி துறக்க வேண்டுமென்று நிபந்தனை விதிக்கப்பட்டது.

சர்ச்சில் தம்மைக் காப்பாற்றிக் கொள்ள வீணில் போராடினர்; தமது வீழ்ச்சிக்குத் தாம் காரணமில்லை என்று பொதுவா அரசியல்வாதிகள் கூறிக் கொள்ளும் சாக்குப் போக்கை அவரும் சொல்லிக் கொண்டார். சர்ச்சில் முழுவதும் அரசாங்கத்தி லிருந்து வெளியேற்றப்படவில்லை. லங்காஸ்டர் கோமக நாட்டின் சான்சலராகவும், புதிய டார்டனலஸ் குழுவின் உறுப்பின ராகவும் தொடர்ந்து பணியாற்றினர். கடற்படை அமைச்சகத் தலைமையைத் துறந்த பின்னும், காலிப்போலியில் பிரிட்டிஷ் படைகளின் வன்மையைப் பெருக்கும்படி வற்புறுத்தி வந்தார். டார்டனலஸ் விவகாரம் சர்ச்சில் கண்ட முதல் அரசியல் தோல்வி யாகும். இந்தப் புயல் உருவாகும் வரை அவர் தமக்கு எதிராகத் தனிப்பட்ட பகைமை இருப்பதை அறியவில்லை. பழைய சகாக்களில் கிச்சினர் மட்டுமே அவரிடம் பரிவு விசாரித்தார். 'சர்ச்சில் விலகியபின் கடற்படைத் துறையில் உரிமைத் தென்றல் வீசுகிறது' என்று அட்மிரல் பேயாட்டி குறிப்பிட்டாராம். போர் முறைகளைப் பற்றி ஒன்றுமே அறியாதிருந்தும் அதில் தலையிட்டுத் தோல்வி கண்ட ஒருவரின் பெயராக டார்டனலஸ் விவகாரத்தில் சர்ச்சிலின் பெயர் வரலாற்றில் எழுதப்படுமென்று அட்மிரல் வெம்மிஸ் குறிப்பிட்டார். அட்மிரல் ஜெலிகோ சர்ச்சிலைப் பிரிட்டிஷ் பேரரசிற்குப் 'பொது அபாயம்' என்று வர்ணித்தார். 'முடியாததை முயன்றவர்' என்று இரத்தினச் சுருக்கமாக அரசர் டார்டனலஸ் தோல்வியை விளக்கினர். 1920 முதல் 1930 வரை, இவ்வாறு சர்ச்சில் பல்வேறு கண்டனங் களுக்கு உள்ளானர். டார்டனலஸ் தோல்வியின் முழுப் பொறுப்பைச் சர்ச்சில் மேல் சுமத்துவது நியாயமில்லை தான்; எனினும் அவருக்கு எதிரான உணர்ச்சிகள் மேலோங்கி இருந்த தற்கும் காரணங்கள் இல்லாமல் இல்லை.

அமைச்சரவையிலிருந்து சர்ச்சில் அடைந்த வீழ்ச்சி, அரசியலி லிருந்து அவர் வெளியேற்றப்படப் பீடிகையாக இருந்தது. இது பற்றித் தம்முடைய உணர்ச்சிகளை அவரே வெளியிட்டார். 'ஆழ் கடலிலிருந்து வெளியேற்றப்படும் கடல் விலங்கினைப் போல், கடலின் ஆழத்திலிருந்து மேலே தூக்கப்படும் முத்துக் குளிப் பவனைப் போல் என் இரத்த நாளங்கள் அழுத்தம் காரணமாக வெடித்து விடுவன போல் இருந்தன. எனது உடலின் தசைகள் ஒவ்வொன்றும் செயலுக்காகத் துடித்துக் கொண்டிருக்கையில், முன் வரிசையில் அமர்ந்து சோக நாடகத்தைக் காணும் பார்வை யாளனின் நிலைக்கு நான் பலவந்தமாகத் தள்ளப்பட்டேன்; என்ன கொடுமை இது' என்று மனம் கசந்து எழுதினர்.

1915ஆம் ஆண்டு ஆக்ஸ்டில் கர்லிப்போலி படையெடுப்பு இன்னும் நடந்து கொண்டிருந்தது: பல உயிர்ப் பலிகளுக்குப் பின்னும் பிரிட்டிஷ் படைகள் சாரி பேய்ர் (Sari Bair) மலையின் உச்சியை அடைகின்ற முயற்சியில் வெற்றி பெறவில்லை. 'அந்தப் பயங்கரமான கொடுமுடி வெல்லப்படாமல் கொழுந்து விட்டு எரிந்தது' என்று சர்ச்சில் குறிப்பிட்டார்.[1] படைகளைத் திரும்பப் பெறுகின்ற யோசனையைச் சர்ச்சில் எதிர்த்தார். திருத்தி அமைக்கப்பட்ட டார்டனலஸ் குழுவில் அவருக்கு இடமில்லை.

கூட்டு அமைச்சரவையிலும், கன்சர்வேடிவ் கட்சியிலும் சர்ச்சிலின் உறவுகள் சுமுகமாக இல்லாத நிலையில் அவர் பதவி துறந்தார். அகழிப் போரில் பங்கு பெறுவதற்காக ஃபிரான்சிற்கும் செல்லத் தயாரானார். அதற்குமுன் காமன்ஸ் அவையில் அவர் ஆற்றிய உரையைப் பலர் பரிவுடன் கேட்ட போதிலும் அவரது வீழ்ச்சிக்காகக் கவலைப்பட்டவர்கள் எவருமிலர். ஆறு மாதங்கள் ஃபிரான்சில் செலவிட்டபின் 1916ஆம் ஆண்டு மீண்டும் காமன்ஸ் அவைக்குத் திரும்பினார். அவருக்கு அரசியலில் புது வாழ்வு உண்டா? என்று கேள்விக்குறி எழுந்தது. சர்ச்சிலின் திறமைகள் படையில் தவறான முறையில் பயன் படுத்தப்பட்டன என்பது பற்றி இரு கருத்துகளுக்கு இடமில்லை. சர்ச்சிலைப் போன்ற வன்மையான அரசியல்வாதி யொருவர் பாராளுமன்றத்தின் இறுதி வரிசையில் அமர்ந்திருப்பது சகித்துக் கொள்ளக் கூடிய தொன்றன்று. 1917ஆம் ஆண்டு மே திங்களில் சர்ச்சில் காமன்சில் ஆற்றிய உரையில் லாயிட் ஜார்ஜையும் விஞ்சி விட்டார். சர்ச்சில் அமைச்சரவையில் எதிர்ப்புகளையும் தள்ளி விட்டு இடம் அளிக்க லாயிட் ஜார்ஜ் முடிவு செய்தார். சர்ச்சில் லாயிட் ஜார்ஜுடன் கூட்டுச் சேர்ந்தது அவரது அரசியல் வாழ்வில் முக்கியமானதொரு கட்டமாகும். 1918ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் பழைய லிபரல்கட்சி பூண்டோடு அழிந்தது. ஆஸ்குவித் ஆடம்பரமில்லாமல் மறைந்தார். கட்சியற்ற லாயிட் ஜார்ஜ் பிரதமராக நீடிக்க கன்சர்வேடிவ்களின் துணையை நாடினார். 1922ஆம் ஆண்டு வரை லாயிட் ஜார்ஜின் கூட்டு அமைச்சரவை நீடித்தது. ருஷ்ய போல்ஷிவிக்குகளுக்கு எதிராக லாயிட் ஜார்ஜின் கொள்கை, அயர்லாந்து சிக்கலின் தோல்வி ஊழல்கள் ஆகிய முக்கிய காரணங்களால் அமைச்சரவை செல்வாக்கை இழந்தது. ஹெரால்டு லாஸ்சி 1919ல் எழுதியது போல், 'லாயிட் ஜார்ஜ் சொந்த ஆதாயத்திற்காகப் பிரிட்டிஷ் பொது வாழ்வின் முழு உறவையும பலியிட்டார்.'

[1] Churchill—Four faces and the Man' J. A. P. Taylor. p. 21

## ருஷ்யச் சிக்கல்

1919ஆம் ஆண்டு ஜனவரியில் சர்ச்சில் போர்த்துறை அமைச்சரானர். சர்ச்சிலுக்கும் அவரது அமைச்சரவை சகாக்களுக்கும் இடையே எழுந்த முதல் கருத்து வேறுபாடு ருஷ்யாவில் இருந்த பிரிட்டிஷ் படைகளைப் பற்றியதாகும். ஜெர்மனியின் தோல்விக்குப்பின் இந்தப் படைகளின் வருங்காலம் பெரும் கேள்விக்குறி யாகிவிட்டது. இவற்றை போல்ஷிவிக்குகளுக்கு எதிராகப் பயன்படுத்துவதில் சர்ச்சில் பெரும் கவனம் செலுத்தி வந்தார். லாயிட் ஜார்ஜ், போனர்லா, ஆஸ்டின் சேம்பர்லேன் ஆகியோர் ருஷ்யாவில் பிரிட்டிஷ் தலையீட்டை எதிர்த்ததால் அமைச்சரவையில் கருத்து வேறுபாடுகள் வளர்ந்தன. போர் அமைச்சர் என்ற முறையில் சர்ச்சில் அமைச்சரவையின் முடிவுகளையும் எதிர்த்து ருஷ்ய விவகாரங்களில் பிரிட்டிஷ் தலையீட்டை நீடித்தார். சர்ச்சிலுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே ஏற்பட்டிருந்த பழைய பிளவின் மற்றொரு கட்டத்தை ருஷ்யச் சிக்கல் குறித்தது. ருஷ்யப் புரட்சிக்கு பிரிட்டிஷ் தொழிற் கட்சியின் ஆதரவு இருந்தது. சர்ச்சிலைப் போன்று போல்ஷிவிக் கொள்கை மீதுள்ள வெறுப்பை வெளியிட்ட அமைச்சர்கள் வேறு எவரும் இல்லை. 1919ஆம் ஆண்டு ருஷ்யாவில் பிரிட்டிஷ் படைகளை வைத்திருப்பது பற்றித் தொழிற் சங்கங்களும், தொழிற்கட்சியும் கிளர்ச்சி செய்தபோது சர்ச்சில் அதன் முக்கிய இலக்கானர். தலையீட்டுக் கொள்கை அமைதியாகக் கைவிடப் பட்டது. இந்தப் பிரச்சினையில் சர்ச்சிலின் பங்கையும், அவர் ஆற்றிய உரைகளின் கடுமையையும் யாரும் மறக்கவில்லை.

இந் நிலையில் அயர்லாந்தைப் பலப்படுத்தச் சர்ச்சில் எடுத்துக் கொண்ட முயற்சிகள் அவருடைய செல்வாக்கை அதிகம் பாதிக்க வில்லை. அமைச்சரவையில் அவருடைய பேச்சுகளில் கடுமை தொனித்த போதிலும் அவரது பொது அறிக்கைகளில் போர்வெறி இருக்கவில்லை. 1922ஆம் ஆண்டு கோடை கூட்டமைச்சரவைக்குக் கடுமையான சோதனை காலமாகும். போனர் லா உடல்நிலை காரணமாகப் பதவி விலகினலும் பொது வாழ்வை விட்டு விலகவில்லை. அவரது தலைமையில் லாயிட் ஜார்ஜுக்கு எதிராகக் கன்சர்வேடிவ் எதிர்ப்பு உருவாகியது. புதிய கன்சர்வேடிவ் தலைவர் ஆஸ்டன் சேம்பர்லேன் கட்சி உணர்வுகளைச் சரியாகப் புரிந்து கொள்ளாதவர். சர்ச்சிலின் நண்பரான பெர்க்கென்ஹெட் பிரபுவும் அவ்வாறே கட்சியின் உணர்வுகளுக்கு அப்பாற்பட்டவர்தாம். பல்வேறு காரணங்களினல் கூட்டுயிஅமைச்சரவைன் நாள்கள் கணக்கிடப்பட்டு வந்தன.

மீண்டும் சர்ச்சிலைச் சிக்க வைத்தார்கள். அட்டாடார்க் முஸ்தாஃபா கெமாலின் தலைமையில் எழுந்த துருக்கி தேசீய இயக்கம் கிரேக்க நாட்டை அச்சுறுத்தியது. துருக்கிப் படைகள் டார்டனலஸின் நடுநிலைப் பகுதிகளைத் தாக்குகின்ற அபாய நிலை ஏற்பட்டது. பிரிட்டிஷ் படைகொண்டு இதனை எதிர்க்க வேண்டுமென்று யோசனை கூறப்பட்டது. மீண்டும் சர்ச்சிலின் பெயர் அடிபட்டது. 1922ஆம் ஆண்டு செப்டம்பரில் நிகழ்ந்த 'சானக் நிகழ்ச்சி' (Chanack Crisis) கூட்டு அமைச்சரவையைப் பூண்டோடு அழித்தது. போர்நிலை உருவாகிறதைக் கண்டு நாடு திகிலடைந்தது. பிரிட்டிஷ் டொமினியன் நாட்டுப் பிரதமர்கள் சர்ச்சில் போர் உதவிகோரி விடுத்த அறிக்கையைச் செய்தித் தாளில் படித்தனர். அதிகார பூர்வமான அறிக்கையின்றி அவர்கள் செய்வதறியாமல் திகைத்தனர். கான்ஸ்டான்டி நோபிலில் இருந்த பிரிட்டிஷ் ஜெனரல் ஹாரிங்டன் கெமாலுக்கு இறுதி எச்சரிக்கை விடுக்கும் அமைச்சரவை ஆணையைத் தட்டிக் கழித்தார். சிக்கல் தீர்ந்தது. அமைச்சரவை கவிழ்ந்தது.

கட்சிக்குள் ஒற்றுமையின்மையால் அமைச்சரவை வீழ்ச்சியுற்றது. கன்சர் வேடிவ்கள் கூட்டு அமைச்சரவையிலிருந்து விலகினார்கள். போனர்லா புதிய பிரதமரானார். குடல்வால் அழற்சி காரணமாக அறுவை சிகிச்சை செயயப்பட்டு ஓய்வு பெற்றுக் கொண்டிருந்த சர்ச்சில், 'எனது குடல் வாலுடன் பதவியும் பறி போயிற்று' என்று நகைச்சுவை ததும்பக் குறிப்பிட்டார். சில வாரங்களுக்குள் பாராளுமன்றததில் அவரது இடமும் போயிற்று. டண்டித் தொகுதி அவரை மீண்டும் தேர்ந்தெடுக்கவில்லை. 'இருபதாண்டுகள் தொடர்ந்து காமன்ஸ் அவையில் உறுப்பினராக இருந்து, பல உயர் பதவிகளை வகித்த சர்ச்சில் அரசியல் வாழ் வழிந்த பாலைவனத்தில் தலை சாய்க்க இடமின்றி, கட்சியின்றி, தலைவரின்றி, தொண்டரின்றித் தவித்தார்'. சர்ச்சிலின் பொது வாழ்வின் விளைவுகள் அதிகமில்லையென்று கூறலாம். கன்சர்வேடிவ்களும், தொழிற்கட்சியினரும் சர்ச்சிலின் தோல்வியைக் கண்டு மகிழ்ந்தனர். அரசியல் அரங்கில் அவருக்குத் தலைசாய்க்க இடமில்லை. பழைய சகாக்களில் லாயிட் ஜார்ஜ் நீங்கலாகச் சர்ச்சிலைப் போன்று உயர்பதவிகள் வகித்தவர்கள் யாருமில்லை. எனினும், அவரது ஆளுமை தனித்தன்மை பெற்று விளங்கியது. தந்தையாரைப் போன்று பொதுமக்களைக் கவர்ந்திழுக்கும் காந்த சக்தி அவரிடம் இருந்தது. காமன்ஸ் அவையிலும், பொதுமேடைகளிலும் அவரிடம் வெளிப்பட்ட ஆற்றல்கள் மிகச் சக்தி வாய்ந்தவை. எந்தக் கோணத்தில் நின்று

நோக்கினாலும் சர்ச்சில் முன்னணியில் நிற்கக்கூடிய ஒரு பெருமகன் என்பது தெளிவு.

'சர்ச்சில் வித்தை' என்று பொதுவாகக் கூறப்படும் ஆற்றல்களில் வெறுப்பும் விருப்புமாகிய பண்புகள் சர்ச்சிலிடம் கலந்திருந்தன. அவரிடம் வெறுப்புணர்ச்சியே அதிகம் காணப்பட்டது. சர்ச்சில் நம்பிக்கைக்குத் தகுதி அற்றவரென்றும், விஷயங்களை மிகைப்படுத்திக் கூறுகிறவரென்றும் கருத்து நிலவியது. அவர் குடும்பத்தில் மனக்கோளாறு இருந்திருக்குமோவென்று ஐயுறுவாரும் உண்டு. இவையெல்லாம் வெறும் யூகங்களே 'அபாயம் சூழும் வேளையில், ஆழ்கடலின் அலைகள் எழுந்து அச்சுறுத்தும் சூழ்நிலையில் அதனைக் கண்டு சிரிக்கும் தலைவர் தேவை என்ற காலம் மலையேறி விட்டது. புயல்களைத் தேடி அலைகிறவனை விட அமைதியை நாடுகிற தலைவனைத் தான் நாடு விரும்பியது. அமைதி நிலவும் நாள்களில் அமைதியை விரும்பும் ஒருவரே தேவைப்பட்டார்'. 'நிதானமும், அமைதியும், விவேகமும் சர்ச்சிலிடம் இல்லையே! அவரை நம்புவது எப்படி?' என்பதுதான் பலருடைய கருத்தாக இருந்தது. தமக்கு இத்தனை எதிர்ப்புகளும் எதிரிகளும் இருப்பது சர்ச்சிலுக்கு வியப்பைத் தந்தது மக்கள் அவரை வெறுத்தார்கள் என்பதை விட அவர் மீது நம்பிக்கை கொள்ளவில்லை என்பது தான் பொருத்தமானது. பீவர் புருக் கூறியது போன்று சர்ச்சில் லிபரல்களையும் டோரிகளையும் தம்பால் இணைத்துக் கொள்ளத் தவறி விட்டார்.

லாயிட் ஜார்ஜ் கூட்டமைச்சரவையின் வீழ்ச்சியைத் தொடர்ந்து நாட்டில் குழப்பநிலை நீடித்தது. கன்சர்வேடிவ் தலைவர்களான ஆஸ்டன் சேம்பர்லேன், பால்ஃபோர், பெர்க்கென் ஹெட் ஆகியோர் புதிய அரசை ஆதரிக்கவில்லை. லிபரல்களும் ஒதுங்கி நின்றனர். சர்ச்சில் அடிப்படையில் கன்சர்வேடிவ் மனப்போக்குடையவர். வெளிநாட்டில் போல்ஷிவிக் கொள்கையும் உள்நாட்டில் சோஷியலிசமும் அவரை டோரி கன்சர்வேடிவ் ஆக இருக்கும்படி வற்புறுத்தியது. 1922ஆம் ஆண்டுத் தேர்தலில் சர்ச்சிலின் வலதுசாரிப் போக்கு உறுதிப்பட்டது. அவர் மேற்கு லீசெஸ்டர் தொகுதியில் தடையில்லா வாணிகத்தை ஆதரித்துத் தேர்தலில் போட்டியிட்டார். நாலாயிரம் வாக்கு வித்தியாசத்தில் தோற்றார். தேர்தலின் விளைவு சர்ச்சிலுக்குச் சாதகமாக இருந்தது. 'தொழில் கட்சியினர் அரசுப் பொறுப்பு ஏற்கத் தகுதியற்றவர்' என்று சர்ச்சில் அன்று கூவினார். போல்ஷிவிஸம், சோஷியலிசம் கொள்கைகள் மட்டில் சர்ச்சில் கொண்டிருந்த அச்சம் அவரை வன்மையான கன்சர்வேடிவ் ஆக்கியது

துனியார் முயற்சி அவர் உயிர் மூச்சு. 1924ஆம் ஆண்டு வெஸ்ட் மினிஸ்டர் இடைத் தேர்தலில் சர்ச்சில் சோஷியலிஸ்டுகளை எதிர்த்துப் போட்டியிட்டார். பால்ட்வின் நடுநிலைமை வகித்தார். அமெரி போன்ற தலைவர்கள் வெளிப்படையாக அதிகார பூர்வமான கன்சர்வேடிவ் வேட்பாளரை ஆதரித்தார்கள். பல கன்சர்வேடிவ் பாராளுமன்ற உறுப்பினர்கள் சர்ச்சிலை ஆதரித்தார்கள். இறுதியில் நாற்பத்து மூன்று வாக்குகளில் சர்ச்சில் தோற்றார். இதுவும் நன்மைக்கே. அவர் வெற்றி பெற்றிருந்தால், கட்சிக்குள், துரோகி என்னும் பட்டம் வாங்கியிருப்பார். இதனைத் தொடர்ந்து பல மேடைகளில் சோஷியலிச எதிர்ப்புப் பிரசாரத்தைத் தொடங்கினார். கம்யூனிஸ்ட் தலைவரான சின்னோவிவ் (Zinoviev) பிரிட்டிஷ் கம்யூனிஸ்டுகளுக்கு எழுதியதாகக் கூறப்பட்ட கடிதம் ஒன்று வெளியிடப்பட்டது. எவ்வாறு கம்யூனிஸ்டுகள் 'செல்களின்' (Cells) மூலம் உலக நாடுகளில் ஊடுருவுகிறார்கள் என்பதைச் சர்ச்சில் 'வீக்லி டிஸ்பாச்' ஏட்டில் அம்பலப்படுத்தினார்.

அதே ஆண்டில் சர்ச்சில் பெரும்பான்மை வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்பட்டார். கன்சர்வேடிவ் கட்சியில் மீண்டும் சேர்ந்தபோது அதன் போக்கு இடதுசாரிச் சார்புடையதாக இருந்தது. 1929 முதல் 1939 வரை சர்ச்சில் கண்ட தோல்வியின் இரகசியம் இந்தப் புதிய திருப்பத்தில்தான் புதைந்து கிடந்தது. விக்டோரியா காலத் தலைவரான வின்ஸ்டனுக்குப் புதிய கருத்துகள் உடன்பாடு இல்லை. பழைய கூட்டு அமைச்சரவையில் இருந்த கன்சர்வேடிவ்களுக்குப் புதிய பதவிகள் அளிக்கப்பட்டன. ஆஸ்டன் சேம்பர்லேன் வெளிநாட்டு அமைச்சராகவும், பெர்க்கென்ஹெட் இந்தியக் காரியதரிசியாகவும், சர்ச்சில் நிதியமைச்சராகவும் நியமிக்கப்பட்டனர். 1924 முதல் 1929 வரை சர்ச்சில் நிதியமைச்சராக இருந்த காலம் அவருக்கு அதிக வெற்றியைத் தரவில்லை. அவரது பொன் நாணய மீட்புத் திட்டம் வரவேற்கப்படவில்லை. 'எனினும், ஒரு மேதையின் திறமை அவரது ஊக்கத்திலும் வளத்திலும் பல திறப்பட்ட பயிற்சிகளிலும் தாம் அடங்கியிருக்கிறது. அவரது ஆர்வம் மகத்தானது. அவரது வரவு செலவுத் திட்டங்கள் திறமையாக உருவாக்கப்பட்டுச் சீரிய முறையில் சமர்ப்பிக்கப்பட்டன' என்று பூத்பி பாராட்டினார்.

அடுத்த பத்தாண்டுகளுக்குப் போர் மூளாது என்ற நம்பிக்கையில் சர்ச்சில் படைத்துறை நிதியைச் சீரமைக்கும் திட்டங்களை வகுத்தார். ஆனால், பேயாட்டி குறிப்பிட்டதுபோல் வெளி ஆபத்துகள் 'காளான் போன்று' கிளம்பின. அவர் எதிர்பாராத

யோர் மூண்டதற்குச் சர்ச்சில் பொறுப்பு அல்லர். சர்ச்சில் கடற்படையைப் பெருக்குவதில் கவனத்தைச் செலுத்தினர். இதனுல் அமைச்சரவையில் சிக்கல் ஏற்படும் சூழ்நிலை உருவாகிப் பால்ட்வினின் முயற்சியால் சமரசம் ஏற்பட்டது. எனினும், பால்ட்வினுக்கும் சர்ச்சிலுக்கும் இடையே அடிப்படை வேறுபாடுகள் இருந்து கொண்டுதான் இருந்தன. 1929 கோடையில் பொதுத் தேர்தல் நடந்தது. பால்ட்வினின் அமைச்சரவை கவிழ்ந்தது. எனினும், கன்சர்வேடிவ் கட்சியில் சர்ச்சிலின் நிலை உறுதிப்பட்டது. 'பால்ட்வினின் அமைச்சரவை வீழ்ந்த மண்மேடுகளில் சர்ச்சில் எவரஸ்டாக நின்ருர்' என்று ஆஸ்குவித் வர்ணித்தார். ஆனுல், நிதித்துறை நிபுணர் என்ற முறையில் சர்ச்சில் தோல்வியே கண்டார்.

## பிரிட்டிஷ் பேரரசும் சர்ச்சிலும்

சர்ச்சிலின் பேரரசுக் கொள்கை நாட்டுப் பற்றை அடிப்படையாகக் கொண்டது. சர்ச்சில் தமது இருபத்தினுன்காம் வயதின் பின்னர் இந்தியா, ஆப்பிரிக்கா, தென்கிழக்கு ஆசியா, ஆஸ்திரேலியா, நியூஸிலாந்து ஆகிய நாடுகளுக்குச் சென்றதில்லை. நம்பிக்கையூட்டும் லிபரல் பேரரசுக் கொள்கையைச் சர்ச்சில் ஆதரித்தார். ஆனுல், பொதுநலவரசுக் கொள்கையிலோ பேரரசின் தடையில்லா வாணிகக் கொள்கையிலோ அவருக்கு அதிக ஆர்வம் இருக்கவில்லை. அயர்லாந்து, தென் ஆப்பிரிக்க யூனியன், இந்தியா ஆகிய பிரச்சினைகளில் சர்ச்சில் குறிப்பிட்ட மனப்போக்குக் கொண்டிருந்தார். இந் நிலையில் சர்ச்சிலின் நெருங்கிய நண்பரான பெர்க்கென்ஹெட் வெளிநாட்டு அமைச்சராக இருந்தது அவப்பேருகும். அவர் இந்தியாவிற்குப் பொறுப்பாட்சி வழங்குவதை எதிர்த்து வந்தார். சர்ச்சில் பால்ட்வின் அமைச்சரவையில் விசுவாசமுள்ள அமைச்சராக இருந்த போதிலும், பல பிரச்சினைகளில் அவருக்கும் பால்ட்வினுக்கும் கருத்து வேறுபாடுகள் இருந்தன. 'த கேதரிங் ஸ்டார்ம்' (The Gathering Storm) என்ற நூலில் தம் கருத்துகளைப் பற்றி சர்ச்சில் வெளிப்படையாகக் குறிப்பிட்டுள்ளார். இதனிடையில் இர்வின் பிரபு இந்தியாவிற்கு டொமினியன் நாட்டு நிலை வழங்குவதை ஆதரித்தது கன்சர்வேடிவ்களைப் பேரிடியெனத் தாக்கியது. **'இந்தியாவிற்கு டொமினியன் நிலை வழங்கும் தீமையிலிருந்து பிரிட்டிஷ் பேரரசையும், பிரிட்டனையும் பாதுகாப்பதற்காகச் சக்திகள் ஒன்று திரட்டப்படும்' என்று சர்ச்சில் எச்சரிக்கை விடுத்தார்.**

1930ல் பால்ட்வின் தலைமைக்கு ஆபத்து ஏற்பட்டது. இடைத்தேர்தலில் அவருக்கு எதிரான வேட்பாளர்கள் ஆதரிக்கப்பட்டனர். நம்பிக்கையில்லாத் தீர்மானங்கள் தயாராகிக் கொண்டிருந்தன. இந்தியா பற்றிய சர்ச்சிலின் உரைகளில் ஆவேசம் தொனித்தது. இந்தியத் தலைவர்களுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தும் பிரச்சினையில் சர்ச்சில் எதிர்க்கட்சிச் செயல் குழுவிலிருந்து இராஜினுமா செய்து பாராளுமன்றத்தில் மூலையில் ஒதுங்கிவிட்டார். காந்தியக் கொள்கைகளைத் தாக்கினர். இந்தியக் காங்கிரசின் கைக்கு ஆட்சி மாறினல் ஏற்படக் கூடிய விளைவுகளைப் பற்றியும் பயங்கரமான எச்சரிக்கைகள் விடுத்தார்.

'இங்கிலாந்தில் இன்று 45 மில்லியன் மக்கள் வாழ்கிறார்கள். இவர்களில் பெரும்பாலோர் உலகில் நாம் பெற்றிருக்கும் பொருளாதார, அரசியல் பேரரசின் வன்மையினுல்தான் உயிர் வாழ முடிகிறது. அறிவீனத்தையும் கோழைத்தனத்தையும் மறைத்து, நன்மை செய்கிறேமென்று நினைத்துக்கொண்டு, நம்மையே நாம் ஏமாற்றிக்கொண்டு இந்தியாவிலிருந்து விலகுவோமானுல் இரத்த வெறியான குழப்பமே அங்கு விஞ்சும். தாயகம் திரும்பும் உங்களைப் பஞ்சம்தான் வரவேற்கும்' என்று சர்ச்சில் ஆவேசமாகக் குறிப்பிட்டார். இத்தகைய எச்சரிக்கைகள் அவர்தம் பேச்சிலும், எழுத்திலும் அடிக்கடி வெளிவந்தன. 'இந்தியாவில் பொறுப்பாட்சி ஏற்படுமானுல் வேலையில் இருக்கும் இரண்டு மில்லியன் மக்கள் நாளைக்கே வேலையிழந்து நிற்பார்கள். பிரிட்டிஷ் பேரரசின் நிலை அழியுமானுல் நாட்டு மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பங்கினர் இடர்ப்படுவார்கள்' என்றும் வானெலிப் பேச்சில் சர்ச்சில் அறை கூவினர். சர்ச்சில் அடிக்கடி காந்தியடிகளைத் தாக்கிப் பேசினர். அவரைக் 'குழப்பம் விளைவிக்கின்ற வெறியன்' என்றார். 'மிடில் டெம்பிள் வழக்கறிஞர் திரு. காந்தி கீழ்நாடுகளில் திரியும் ஒரு பக்கிரியைப் போல, அரை நிர்வாணக் கோலத்தில் நமது வைஸ்ராயின் மாளிகை வாயிலில், நமது பேரரசின் பிரதிநிதிகளுடன் சமநிலையில் பேச்சு வார்த்தைகள் நடத்த வருவது அருவருப்பும், அபாயக் குறியும் ஆகும்' என்று பழித்துப் பேசினர்.[1]

பால்ட்வினும் சர்ச்சிலும் பாராளுமன்றத்தில் இது சம்பந்தமாகப் பலமுறை பயங்கரமாக மோதிக்கொண்டனர். ஒருமுறை இருவரும் உணர்ச்சி வயப்பட்ட நிலையில் செக்கச்சிவந்த முகத்

[1] Churchill—Four faces and the Man. J. A. P. Taylor. p. 99.

யுடன் சர்ச்சில் பிரதமர்மீது பாய்ந்து விடுவாரோவென பலர் அஞ்சினர். நின்றுகொண்டு விவாதித்த பால்ட்வின் உணர்ச்சிகளை அடக்கிக்கொண்டு பொறுமையின் சின்னமாக விளங்கினார் ஆறு மாதங்களில் தொழிற்கட்சி அரசு கவிழ்ந்தது. பால்ட்வின் தேசீய அரசின் துணைப் பிரதமரானார். அவரைக் குறை கூறியவர்களில் சிலர் அவரை ஆதரிப்பதைத் தவிர வேறு வழி காண வில்லை. சிலர் முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு வாய் மூடி மௌனிகளாயினர். 1935ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் இயற்றப்பட்டபோது இந்தியா பெயரளவில் டொமினியன் நிலை பெற்றது. சர்ச்சிலின் கோபம் தணியவில்லை- 1931 முதல் 1935 வரை பதவி வகித்த தேசீய அரசில் அவருக்கு இடம் இல்லை. பாராளுமன்றத்தின் இரு சபைகளின் தேர்வுக் குழுக்களில் அவர் சேர மறுத்தது அவர் இந்திய சீர்திருத்தங்களின் எதிரி என்பதை விளக்கிக் காட்டியது.

சர்ச்சில் புரிந்த மகத்தான தவறு அவர் விடுத்த அபாய அறிவிப்புகளிலும், பிற உரைகளிலும் பயன்படுத்திய தரக்குறைவான நடையாகும். அவர் காந்தியடிகள் நேருஜி போன்றவர்களை 'கயமையும், கெடுமதியும் கொண்ட பிராமணர்கள் என்றும் அவர்கள் பேரரசின் செல்வங்களை யெல்லாம் கொள்ளையடிக்கத் துடிக்கிறார்கள்' என்றும் கூறியதை யாரும் அதிகம் நம்பவில்லை. 'இங்கிலாந்தே விழித்தெழு' போன்ற அபாயச் சங்குகளை அவர் அடிக்கடி ஊதிக் கொண்டிருந்ததால், அவை மக்களிடையே எடுபடவில்லை. தம்மைப் பற்றிப் பிறர் குறை கூறச் சகியாத சர்ச்சில் மற்றவர்கள்மீது தாம் எய்த கேலிக் கணைகளை மட்டும் எளிதில் மறந்துவிடுவார். அவரது இந்தியா சுதந்திர எதிர்ப்புப் பிரச்சாரம் அவர் ஒரு கன்சர்வேடிவ் என்பதை ஐயமறக் காட்டியது. 1936ல் சர்ச்சில் அரசியல் நிலை ஒருவாறு முன்னேறியது. அவரது ஜெர்மன் அபாய அறிவிப்புகளில் உண்மை இருப்பதாகத் தெரிந்தது. இத்தாலி அபிசினியாவைத் தாக்கிய விவகாரத்தில் வெளிநாட்டு அமைச்சர் ஹோர் (Hoare) பதவி துறந்தார். பால்ட்வினும் பிணியுற்றார். டிசம்பரில் எட்டாவது எட்வேர்ட் மன்னரின் திருமண விவகாரம் அம்பலமாகியது.

எட்வேர்ட் மன்னரின் முடிதுறப்புப் பிரச்சினையில் சர்ச்சிலின் போக்கு அவரை மகத்தான நண்பராகவும், விவேகமற்ற அரசியல் வாதியாகவும் மக்கள் முன் நிறுத்தியது. காமன்ஸ் சபை அரசரை முடிதுறக்குமாறு வற்புறுத்துவதாகச் சர்ச்சில் குற்றம் சாட்டினார். நாட்டின் மனப்போக்கை அவர் சரிவர

ஒப்புத்துணரவில்லை. திருமதி சிம்சனை நாட்டின் பிரபல கட்சிகள் மட்டுமல்ல, அரச குடும்பத்தினரும், டொமினியன் நாட்டுப் பிரதமர்களும் ஏற்றுக்கொள்ளவில்லை. டிசம்பர் 7ஆம் நாளன்று அவர் மன்னரை ஆதரித்துக் காமன்ஸ் அவையில் உரையாற்றிய போது குழப்பமே ஏற்பட்டது. ஆனால், சர்ச்சில் அரசரைக் காக்க முயன்றாரே யன்றி அரசை அழிக்க விரும்பவில்லை. 1937ல் அரசர் முடிதுறப்பின் பின்னர் சர்ச்சில் ஜெர்மனிக்கு எதிராகப் பிரிட்டன் படைப்பலத்தை அதிகரிக்க வேண்டுமென்று வன்மையாக வற்புறுத்தினர். ஹிட்லரைப் போன்றதொரு தலைவன் நாட்டிற்குத் தேவை என்றும்கூட குறிப்பிட்டார்.

## இரண்டாம் போரும் சர்ச்சிலும்

1938ல் ஐரோப்பியப் போர் சூறாவளி அடிக்கத் தொடங்கியது. இதுகாலை சர்ச்சிலின் செல்வாக்கு நலிவுற்றிருந்தது. எனினும், அவர் மனமிழந்துவிடாமல் உறுதியுடனும், தன்னடக்கத்துடனும் தொடர்ந்து செயல்பட்டார். அவர் எழுப்பிய போர் அச்சங்கள் மக்களிடம் அவர் எதிர்பார்த்த உணர்ச்சிகளைத் தூண்டவில்லை. வெளிநாட்டு அமைச்சர் அன்டனி ஈட்டனின் ஆதரவாளர்களும் சர்ச்சிலை ஒதுக்கிவிட்டனர். மியூனிச் நிகழ்ச்சியின் பின்னர்தாம் நாஜிகளின் வன்மை பிரிட்டனின் கண்களைத் திறந்தது. 1939ல் கோடையில் முக்கிய நாளேடுகள் சர்ச்சிலை அமைச்சரவையில் சேர்த்துக்கொள்ளுமாறு வற்புறுத்தின. அவரைப் 'போர்மறவர்' என்றும், 'படைத் துறை வல்லுநர்' என்றும், அன்று ஹெர்பர்ட் மாரிசன் வர்ணித்ததன் உண்மையெல்லாம் இப்பொழுதுதான் மக்களுக்குப் புரிந்தது, போர் வந்தது. அத்துடன் சர்ச்சிலும் அமைச்சரவைக்குள் வந்தார். கடற்படைத் துறை அமைச்சகம் அவருக்குக் கொடுக்கப்பட்டது. இரண்டாம் உலகப் போர் தான் சர்ச்சிலைப் பிரதமராகக்கியது என்ற கூற்று முற்றிலும் உண்மையானது.

1939 முதல் 1940 வரை போர் விறுவிறுப்பு இல்லாதிருந்த கட்டத்தில் பிரிட்டிஷ் கப்பற்படை பல சாதனைகளைப் புரிந்தது; சர்ச்சில் இவற்றை மிகைப்படுத்தினர். அவரது ஊக்கத்தையும் உணர்ச்சியையும் போற்றாமல் இருக்க முடியாது. 1940ல் காமன்ஸ் அவை சேம்பர்லேன் மீது நம்பிக்கை இழந்த போது சர்ச்சில் தாம் அவரது வாரிசு என்பதை யாரும் நம்பவில்லை; ஏனெனில் பழைய நினைவுகள் இன்னும் வட்டமிட்டுக் கொண்டிருந்தன, காமன்ஸ் அவையில் அவர் ஆற்றிய முதல் உரை தான் சூழ்நிலையை மாற்றியது. சர்ச்சிலின் புகழ் பெற்ற

''செந்நீரும், வியர்வையும், கண்ணீரும் சிந்திப் போராடுவோம்'' என்ற பேச்சு உண்மையில் ஒரு திருப்பு முனையாக இருந்தது. பிரிட்டிஷ் மக்களைத் தியாகமும் தொண்டும் செய்ய வருமாறு அவர் விடுத்த புனிதப் போர் அறைகூவலாக இந்தப் பேச்சு கருதப்பட்டது. இந்தப் போர்க்குரல் உலகமெங்கும் ஒலித்தது. பிரிட்டன் போரிடத் துணிந்து விட்டதென மேற்கு நாகரிகத்தின் பல்லாயிரக்கணக்கான நண்பர்களின் உள்ளமெல்லாம் குளிர்ந்தது. பிரிட்டன் ஹிட்லருடன் சமரசம் செய்து கொள்ளுமோ வென்ற ஐயப்பாடு இந்த உரைக்குப்பின் மறைந்தது. எதிரியைப் போராடி முரியடிக்கத் தலைவன் கொடுக்கும் தவறில்லாத குரல் சங்கென முழங்கியது. 1940ஆம் ஆண்டு கோடையில் நாடெங்கும் காணப்பட்ட குதூகலத்தை குழந்தைகள் கூட மறந்திருக்க முடியாது. 'நம்மீது காலதேவன் நன்மைகளைப் பொழிந்திருக் கிறான். இந்த எழுச்சியூட்டும் நாள்களில் வாழ்ந்திருப்பதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்' என்று சர்ச்சில் கூறிய போது மக்கள் கொண்ட உணர்ச்சி வெள்ளந்தான் அவர்கள் இறுதியில் வெற்றி பெற்ற இரகசியம் என்பதை மறக்க முடியுமா?

சர்ச்சிலின் நிறை வாழ்வும், அவர்தம் போர் அனுபவங்களும், உயர் பதவிகளும், ஏமாற்றங்களும், ஏக்கங்களும் வெற்றியும் தோல்வியும் இரண்டாம் உலகப் போரில் நிறைவெய்தின. வாயிட் ஜார்ஜ் செய்த தவறுகளைச் சர்ச்சில் செய்யவில்லை. போர்க் காலக் கூட்டமைச்சரவையின் தலைவராக, போர்த் தந்திரங்களைக் கட்டுப்படுத்துவதில் சர்ச்சில் கண்ணும் கருத்துமாய் இருந்தார். போர் முடிவுற்றதும் கன்சர்வேடிவ்கள் முரியடிக்கப் பட்டனர். இதன் காரணங்களோ பலப்பல. கன்சர்வேடிவ் தேர்தல் பிரச்சாரத்தில் சர்ச்சில் மாபெரும் தேசீய வீரரெனக் காட்டப்பட்டார். பழங்கால முறையில் அமைந்த இந்த நாடகத்தில் சர்ச்சில் பெற்றிருந்த பெரும் புகழும், மதிப்பும் வீணடிக்கப்பட்டன. போருக்குப் பின் சர்ச்சில் தமது வாழ்வில் முதல் முறையாக எதிர்க்கட்சித் தலைவரானார். அவர் தமது எண்பதாவது வயதினை அடைந்த போது தான் கடலை மூடி யிருக்கும் பனித்திரை விலகுவது போல், அவர் மீதிருந்த ஐயப் பாடுகளும், அதிருப்திகளும் விலகின.

சர்ச்சில் எழுதிய 'சாவ்ரோலா' என்ற நவீனத்தின் இறுதிக் கட்டம் அவரது சொந்த வாழ்க்கையையே நினைவூட்ட வல்லது. நாடு கடத்தப்பட்ட விடுதலை வீரனை 'சாவ்ரோலா' நாடு திரும்ப வேண்டுமென்று லாரேனியா குடியரசின் மக்கள் விரும்பு கிறார்கள். அதே போல் தொழிற்கட்சியின் ஆட்சிக்குப் பின்

சர்ச்சில் அரசியலுக்குத் திரும்புகிறார். சர்ச்சிலின் அரசியல் பணிகள் நீடித்த நுணுக்கமான ஆர்வத்தையும், சர்ச்சையையும் தூண்டும் செயல்களாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. சாத்தம் பிரபுவின் (Earl Chatham) கால முதல் எந்த அரசியல் தலைவரின் வாழ்விலும், சர்ச்சிலை வந்தடைந்ததுபோல் வெற்றியும் புகழும் சென்று சேர்ந்ததில்லை. நாற்பதாண்டுகளுக்கு மேல் தோல்வியுடன் போராடிக் கொண்டிருந்த ஓர் அரசியல் வாழ்வுடன் போர்க்காலத் திறமையும், அமைதிக் கால அரசியல் வெல்திறமும் பின்னிப் பிணைந்துள்ளதைச் சர்ச்சிலின் பொது வாழ்வில் காண்கிறோம். ஒரு நாள் சர்ச்சிலின் பொது வாழ்வு முழுவதும் விருப்பு வெறுப்பின்றி ஆராயப்படும் என்பது உறுதி.

சர்ச்சிலைச் சிலர் ஐயக் கண்ணோடு நோக்கியது ஏன்? அவரிடம் விளங்கிய அறிவுத் திறத்தைக் கண்டு பொறாமையினாலா? அவரைச் சுற்றியிருந்த ஐயப்பாடுகள் சிலவற்றிற்குத் தக்க காரணங்கள் இருந்தன. சர்ச்சில் என்ற தனி நபரையும், சர்ச்சில் என்ற அரசியல்வாதியையும் பிரித்துக் கூற முடியாது. வீரமும், நேர்மையும், கடும் உழைப்பும் அவரிடம் விளங்கிய உயர்ந்த பண்புகளாகும். 1915, 1922, 1930ஆம் ஆண்டுகள் ஆகிய மூன்று கால கட்டங்களில் அவரது செல்வாக்கு மீட்க முடியாத அளவிற்குக் குறைந்தது. எனினும் விடாமுயற்சியாலும், மனவுறுதியாலும் இந்த இடையூறுகளைக் கடந்தார். சர்ச்சில் நட்புரிமை கெடாத நண்பர். சூழ்ச்சித் திறனற்ற அரசியல்வாதி. கடுமையாகப் போராடுவார். ஆனால், அவரது நாவன்மை பிறரைச் சுடாது. அவரிடம் விளங்கிய இயல்பான மனிதாபிமானமும், பரிவுணர்வும் சில எதிரிகளை உருவாக்கியது. அவரைக் குறை கூறியவர்களுக்கு அளவேயில்லை. அவரது பெருந்தன்மை சில சமயங்களில் மிகைப்படுத்தப்படும். அவரது அரசியல் வாழ்வின் விறுவிறுப்பையும், அதில் அவர் ஊறித் திளைத்த முறையையும் நோக்குகின்ற போது, அவர்தம் குணவியல்புகளில் பகையுணர்ச்சி இல்லாதிருந்தது குறிப்பிடத்தக்க பண்பாகும்.

சர்ச்சிலின் தோல்விகளுக்கும், குணவியல்புகளுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. அவரிடம் பெரும் அளவில் தன்முனைப்பு இருந்தது. வருங்காலத்தைப் பற்றி அவரிடம் இருந்த உறுதிப்பாடு வன்மையானது. இந்தப் பண்புகளில்லாவிடில் அவர் வாழ்வில் கண்ட தோல்விகளில் அமிழ்ந்து அழிந்திருப்பார். எனினும், மக்களின் எண்ணிறந்த பிரச்சினைகளைக் காண முடியாமல் இவை திரையிட்டன. 'தனக்கு முன் வேறே தலைவன் இலலை' என்பது

சர்ச்சிலின் தலையாய நம்பிக்கைகளில் ஒன்றாகும். இத் தகைய குறைபாடுகள் அமைதிக் காலத்தில் மக்கள் அவர்மீது நம்பிக் கையை இழக்கச் செய்தாலும் போர்க்காலத்தில் வெற்றியைத் தருகின்ற வீரப் பண்புகளாய்த் திகழ்ந்தன. பொதுமக்களுடன் தொடர்பு இல்லாதிருந்தது சர்ச்சிலின் தோல்விக்கு முக்கிய காரணங்களில் ஒன்றாகும். சொல்லழகான நடையில் ஒரு கருத்தைச் செலுத்துவதில் அவரிடம் இருந்த பிடிவாதமும், அவரது தனிப் பேச்சிலும், பொதுப் பேச்சிலும் கலந்துறவாடும் பண்பு இல்லாமல் இருந்ததும் பெருங்குறைகளாகும். 'வின்ஸ்டன் தம் உள்ளத்தை அறிந்திருந்தார்; லாயிட் ஜார்ஜ் மற்றவர்களின் உள்ளங்களை அறிந்திருந்தார்' என்று மோல்வி கூறியது உண்மை. இறுதிவரை சர்ச்சில் மக்களிடமிருந்து விலகி இருந்தார். அவர் பெற்ற செல்வமெல்லாம் அவரது கடின உழைப்பின் பயனன்றி வேறில்லை. 'அசைக்க முடியாத உறுதியுடன் உயர் நிலையிலுள்ள ஒருவர் சிறந்ததென்றும், அழகானதென்றும், பின்பற்றக் கூடிய தென்றும், மாண்பு மிக்கதென்றும் கருதுகின்றவைகளை அவர் அறிந்திருந்தார். மாறாக இவ்வுலகின் அழகையும், இயக்கத்தை யும் அழிக்கக் கூடிய அல்லது குறைக்கக் கூடியவற்றை அவர் வெறுத்தார்' என்று ஐசய்யா பெர்லின் குறிப்பிடுகிறார்.

சர்ச்சிலிடம் விளங்கிய புதுமைப் பண்பு கவர்ச்சியான குண வியல்பாகும். சூதாடுவோனின் துணிவு அவரிடம் விளங்கியதற்கு இந்தப் பண்பே காரணமாகும். உள்நாட்டு விவகாரங்களில் மாற்றங்காண அவர் தவறியது பாதகமானதாகும். புதிய தலை முறைகளுக்கு அவர் புதுவழி காட்டவில்லை. அவர் வாழ்வும், வாக்கும், பணியும் அவர் காலத்திற்கு மட்டுமே உரியன. எனவே, இன்றைய சமுதாயம் அவரை ஏற்றுக் கொள்ளாததில் வியப் பில்லை. எனினும், தற்கால மனிதர்களில் சர்ச்சில் மிக அற்புத மானவர் என்பதை இளந் தலைமுறையினரும் ஏற்றுக் கொள்வார் கள். பிரிட்டிஷ் பேரரசு அஸ்தமனமாக வேண்டுமென்பது காலம் விட்ட வழியென்றால் அதன் இறுதிப் பொறி செந்தழலாகக் கொழுந்து விட்டு எரிந்தது. பேரரசின் காலம் முடிவுறுகிறது என்பதைப் புரிந்து கொள்ளாத ஒருவர் அதனை நடத்திச் சென்றார், இதை நம்பிய அவர் பிறரையும் நம்பச் செய்தார். 'கைவிடப் பட்ட நிலையில் நம்பிக்கை யூட்டும் தலைவன் இவனே! இங்கி லாந்து நம்பிக்கை யிழந்து நிற்கும் நிலையில் இவர் மீண்டும் தலைமை யேற்க அழைக்கப்படுவார்' என்று ஹெரால்ட் நிக்கல்சன் கூறியது நிறைவேறியது.

# 25. வரலாற்று ஆசிரியர் வின்ஸ்டன்

வின்ஸ்டன் சர்ச்சில் வரலாற்றுப் பெருமகன், வரலாற்றை எழுதியவன், வரலாற்றைப் படைத்தவன். பிளென்ஹிம் மாளிகையின் புகைப் போக்கிகள் வானத்தின் அமைதியான அழகுடன் போட்டி போட்டுக் கொண்டு கம்பீரமாக நின்றன. பிளென்ஹிம் மாளிகை புகழ் பெற்ற நினைவுச் சின்னமேயன்றி, இல்லிடமன்று. சாதனைப் பட்டியல் பொறிக்கப்பட்டுள்ள கற்களும் வெற்றித் தூண்களும், வீர வளைவுகளும், பல நிகழ்ச்சிகளையும் நாகரிக உணர்வுகளையும், போராட்டங்களையும், வெற்றிகளையும் அங்கே நினைவிற்குக் கொண்டு வரும். பிளென்ஹிமைப் போன்ற தொரு பேரிடத்தை மேற்கு உலகத்தில் வேறெங்கும் காண்பதரிது. அகில இங்கிலாந்திலும் தனியொரு மனிதனின் வாழ்க்கையுடன் தொடர்பு கொண்டுள்ள ஓர் இல்லிடத்தை பிளென்ஹிமின்றி வேறெங்குதான் காண முடியும்? இந்தத் தனிப்பெரும் தலைவன் தான் மால்பரோ கோமகனான ஜான் சர்ச்சில். ஃபிரெஞ்சுப் பேரரசன் பதினான்காம் லூயிசை முறியடித்த மாபெரும் வீரன். விக்குக் கட்சியின் வீரகாவியங்களின் இதயமாக விளங்குவதுதான் பிளென்ஹிம். பிரிட்டிஷ் பேரரசின் மனோரதங்களுக்கு உயிரூட்ட இந்தக் காவியங்கள் எழுந்தன. இத்தகைய பாரம்பரியங்களில் தான் வின்ஸ்டன் சர்ச்சில் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருந்தார்.

பிளென்ஹிமில் பிறந்து, ஸ்வர்ட்டுகள், ஹனோவர்கள் அரசர்கள் காலத்து விக்கு உயர்குடியினரிடம் கல்வி பெற்று வளர்ந்த வின்ஸ்டனின் வாழ்க்கை அரசியல் மேதையாகவும், படைத்திற நிபுணராகவும், வரலாற்று அறிஞராகவும், பகுதி உண்மையும், பகுதி புனைகதைகளும், பகுதி மாண்பும், பகுதி இழிவும் கொண்ட விக்கு விநோதக் கொள்கைகளின் பணியில் கழிந்தது. பாராளுமன்றம் உரிமை, விடுதலை என்றால் வின்ஸ்டனுக்கு மூச்சுக் காற்றாகும். இவை உயர் குடியாளர்களால் உருவாக்கப்பட்ட மரபுகள். தாய் நாட்டை இருள் கவ்வி,

இன்னல்கள் எதிர்த்தபோது இந்த பிளென்ஹிமிலிருந்துதான் வின்ஸ்டன் தாயகத்தை வழி நடத்தினர். வரலாற்று மேதை யான வின்ஸ்டனைச் சரிவர உய்த்துணர வேண்டுமெனில் அவர்தம் மரபுரிமைகளைப் பற்றி அறிந்திருக்க வேண்டும். வின்ஸ்டனைப் பொருத்தவரையில் வரலாறு என்பது இயல்பான நாட்டுப் பண் பியல்புகளின் வளர்ச்சியே ஆகும். இத்தகைய படிமுறை வளர்ச்சியால்தான் ஆங்கிலேயனின் உரிமை வேட்கையும், சுதந்திரமும், நீதியுணர்வும் காலப்போக்கில் பல சோதனைகளின் மூலம் புகழ் பெற்ற அரசாங்க நிறுவனங்களை உருவாக்கியுள்ளன; சர்ச்சில் இத்தகைய படிமுறை வளர்ச்சியின் வித்துகளை இளமை முதலே கண்டு பிடித்தார்.

முதல் எலிசபெத் அரசியார் காலத்தில் இங்கிலாந்து அதன் முழுத் தனித்துவத்தைக் கண்டது. இவை யாவையும் ஸ்வர்ட் அரசர்களின் காலத்தில் அச்சுறுத்தப்படவே, இங்கிலாந்து பூசல் களில் சிக்கியது. இதிலும் தெய்வத் திருவருள் உதவ முன் வந்தது; குடியரசுத் தத்துவத்தில் ஆங்கிலேயன் கண்ட சுவை விரைவில் கசப்பாக மாறவே, மீண்டும் அரச பக்தியின்பால் அவர் மனம் சென்றது. 1688ஆம் ஆண்டின் மாண்புறு புரட்சி நல்லுறவுகளை மீட்டுத் தந்தது. நிலையான பாராளுமன்றமும், அடக்கமான முடியரசும் தோன்றலாயின. விக்குக் கட்சிப் பெருமக்களின் ஆதரவின் கீழ் உரிமை விரும்பும் ஆங்கில மக்கள் ஃபிரான்ஸ் நாட்டுப் பதினுன்காம் லூயிசின் கொடுங்கோன்மையையும், நெப்போலியனையும் எதிர்த்துப் போராடி முறியடித்தனர்; ஊழ் விதித்திருந்த பேரரசு சுவர்கத்தை நோக்கி இங்கிலாந்து முன்னேறியது. தொழில் புரட்சி பல நூற்றுண்டுகளாகப் பேணிக் காக்கப்பட்டு வந்த நிறுவனங்களை வளர்க்க உதவியது. பேரரசும், பேரரசின் மக்களும் உருவாக்கிய பிரச்சினைகள் ஆங்கில மேதைகளின் சிந்தனையைக் கவர்ந்தன. பேரரசு, வரலாறு காணுத வகையில் செல்வமும் உரிமையும் பெற்று விளங்கியது. இத்தகைய அற்புதமான வரலாற்று வளர்ச்சியின் தலைவர்கள் பல நூற்றுண்டுகளாக உருவாக்கப்பட்ட பழம் பெரும் மக்கள். 'இவர் கள் காலத்தால் அழிக்கப்பட முடியாத ஒக்கு மரங்களைப் போன்ற வர்கள்' என்று எட்மண்ட் பர்க் வர்ணித்தார்.

இவையாவும் வெறும் வரலாறு அல்ல. பல தலைமுறைகளாக ஆங்கிலேயர், தொழிலாளர், அரசியல்வாதிகள், கவிஞர்கள், புதினம் புனைவோர் ஆகிய பல நிலையிலுள்ளவர்கள் அவரவர்கள் ஊறித் திளைத்த நிகழ்ச்சிகளுக்குப் பொருளையும், நோக்கத்தையும் கொடுக்குமாறு படைத்த பழமையின் கதைதான் இது. எக்காலத்

திலும் நிகழ்காலத்தை உறுதி செய்வது பழமை. இப் பழமையைச் சர்ச்சில் சலிப்பில்லாமல் பயன்படுத்தினர். அவரது அரசியல் கருத்துகளை உருவாக்க இப்பழமை உதவியது. இந்தியா, ஐரோப்பா அயர்லாந்து ஆகிய நாடுகள் பற்றிச் சர்ச்சலின் மனப் போக்கை இப்பழமை உணர்வுகள் நிர்ணயித்தன. இவை அவரது நாவன்மையையும், நடையழகையும் மறக்க முடியாத அளவு வெறியுணர்வுடன் வீறு கொள்ளச் செய்தன. அவை சர்ச்சிலின் அரசியல் முடிவுகளை முறைப்படுத்தின. அவரது பேச்சிலும், எழுத்திலும் அவை புகுந்து விளையாடின. சர்ச்சில் தாம் மரபுரிமையால் பெற்றுக் கொண்ட இந்த நம்பிக்கைகளின் உண்மையை வெளிப்படுத்தும் வீர வரலாற்றைப் படிப்பதும் வரைவதும் அவரது குறிக்கோளாகும்.

ரசிகர்களுக்குப் பிடித்தமான ராகம் மீண்டும் மீண்டும் காதுகளில் ரீங்காரம் செய்வதுபோல, சர்ச்சிலின் நூல்களிலும் பேச்சுகளிலும் பழமை, மரபுரிமை உணர்வுகள் இடைவிடாது இழையோடிக் கொண்டிருந்தன. சர்ச்சிலின் முதல் படைப்பான 'த ஸ்டோரி ஆஃப் த மலகந்த் ஃபீல்டு ஃபோர்ஸ்' (The story of the Malakhand Field Force) என்ற நூலில் இத் தகைய பழமை உணர்வுகளைக் காணலாம். 'பிரிட்டிஷ் பெருமக்களின் வீர வரலாற்றில் 1897ஆம் ஆண்டு அவர் தம் உயரிய குறிக்கோள்களில் உள்ள பற்றுதலை உலகுக்குப் பறை சாற்றிய ஆண்டாகும். 'பிரிட்டிஷ் மக்கள் மனித குலத்தின் மகிழ்விற்கும் அறிவிற்கும், உரிமைகளுக்கும் தமது சிறந்த பங்கைச் செலுத்தியிருக்கிறுர்கள்' என்ற வீர வரிகளுடன் இந்நூல் முடிக்கப்படுகின்றது. நாற்ப தாண்டுகளுக்குப்பின் சர்ச்சில் 'மால்பரோ—ஹிஸ் லைஃப் அண்டு டைம்ஸ்' (Malborough—His Life and Times) என்ற நூலில் இதே கருத்தை இன்னும் பக்குவமாக எடுத்துக் கூறியுள்ளார்.[1]

சர்ச்சிலைப் பொருத்த வரையில் ஆங்கில இனத்தின் சிறப்பான அறிவுத்திறம் பழமையை உறுதி செய்து, அதனை வளமுடையதாகவும், பேரரசாகவும், மனித உரிமைகளின் காவலராகவும் ஆக்கியது. சர்ச்சில் தாம் படித்தவை கண்டவை ஆகியவற்றின் விளைவாக இத்தகைய வொரு மனப்போக்கை உருவாக்கினுர். பெரும் புகழ் பெற்ற வரலாற்றுசிரியர்களான கிரீன், டிரெவெல்லியன், ஆர்த்தர் பிரையன் ஆகியோரின் நூல்களில் இதே கருத்துகள் காணக் கிடக்கின்றன. அடிப்படையில் உயர் குடியாளர்கள் புனைந்த இந்தக் கதையை இடை நிலையினரும் கற்றறிந்த தொழிலாளர்களும் காலப்போக்கில் ஏற்றுக் கொண்ட

[1] Churchill—Four faces and the Man, J. A. P. Taylor, p. 123

னர். சர்ச்சிலுக்கு வரலாறு என்பது ஓவியக் கலையைப் போல ஒரு பொழுது போக்காகவோ, அல்லது பொருளீட்டும் சாதனமாகவோ இருக்கவில்லை. அவரது பற்றுறுதியின் இதயமே வரலாறுதான். அவர் தொட்டதெல்லாம் வரலாற்று மணம் சிறக்க விளங்கின. அவரது அரசியலின் மூல வேரே வரலாறுதான். இரண்டாம் உலகப்போர் தொடங்கும் நிலையில் சர்ச்சில் ஹிட்லரை ஆங்கில நாட்டின் வரலாற்றைப் படிக்குமாறு கேட்டுக் கொண்டாராம். வரலாற்று மேதையான சர்ச்சில் வரலாற்று நூல்கள் படைத்த ஆசிரியர் சர்ச்சிலை விட உயர்ந்தவர். அவர் தீவிர நம்பிக்கை கொண்டிருந்த பழம் பெரும் காலம் கடந்த நூற்றுண்டில் சிறந்திருந்தது. வரலாற்றின் வேர்கள் எவ்வளவு ஆழமாகச் சர்ச்சிலின் உள்ளத்தை ஊடுருவினவென்றால், இந்த மனநோக்கு அவர் பணி புரிந்த நாட்டு மக்களின் உணர்வுக்குப் பொருத்தமுடையதாக இருந்தது என்பதை வலியுறுத்துவது அவசியமாகும்.

இதன் விளைவாகச் சர்ச்சில் வரலாற்று நூல்களை ஒன்றன்பின் ஒன்ருகப் படைத்தபோது இறுதிவரை வெற்றியே கண்டார். இதற்குரிய காரணங்களை ஆராய்வது நலம். வரலாற்றறிஞர்களை உருவாக்குவதில் அவர்கள் சிறந்திருக்கும் கால கட்டத்தையும், அவர்கள் தோன்றிப் புகழ் பெற்ற குடிகளையும் கவனத்தில் கொள்ளவேண்டியது அவசியம். இவற்றைத் தவிர அவர்களின் தனிப்பட்ட குணவியல்புகளையும், சூழல்களையும், கல்வியறிவையும் ஒப்பு நோக்குவது நல்லது. இந்தப் பொது விதிக்குச் சர்ச்சிலும் கட்டுப்பட்டவர்தாம். சர்ச்சிலுக்கு வரலாற்றறிஞர் என்ற முறையில் தொழிலுக்குரிய பயிற்சி அறவே இல்லை. வரலாற்று விமரிசனம் என்பது அவர் முற்றிலும் அறியாத வொரு கலையாகும். எனவே, அவரது ஆளுமையும், விருப்பு வெறுப்புகளும், உள்ளக் கிளர்ச்சிகளும் அவர் படைத்த வரலாற்று நூல்களில் நேரடியான விளைவுகளை ஏற்படுத்தின. சர்ச்சிலின் இளமைப் பருவம் அத்தனைச் சிறப்பாக அமையவில்லை. அவர்தம் தந்தையார் ஆற்றல் மிக்கவர். ஆடம்பர வாழ்க்கையை விரும்பியவர். அசட்டுத் துணிவு கொண்டவர். விக்டோரியா அரசியார் காலத்து காமன்ஸ் அவையைத் தமது நாவன்மையால் வியப்பில் ஆழ்த்தக் கூடிய திறம் படைத்தவர். இத்தகைய இயல்புடைய தந்தை வின்ஸ்டனை மிகவும் வன்மையாகக் கவர்ந்ததில் வியப்பில்லை. அதே நேரத்தில் தந்தையார் அவரை அச்சுறுத்தவும் செய்தார். ரேண்டாஃப் பிரபு சிறுமதியாளர்களின் இரக்கமற்ற நெஞ்சத்திற்குப் பலியாகி அரசியலில் தோல்வி கண்டு சிறு வயதி

லேயே இறந்தார். தந்தையாரின் கதி இளம் சர்ச்சில் இதயத்தில் ஆழமாகப் பதிந்தது.

இருபதாம் நூற்றாண்டில் ஆங்கில நாட்டில் வாழ்ந்திருந்த அரசியல் மாமேதைகளைப் பற்றிப் புரிந்து கொள்வதற்குச் சர்ச்சில் வழங்கியுள்ள உயர்ந்த படைப்புகளில் ஒன்றாகிய 'த கிரேட் கான்டெம்பரெரிஸ்' (The Great Contemporaries) என்ற நூலை ஊன்றிப் படித்தாலே போதும். தந்தையார் மீது அவர் கொண்டிருந்த ஆழ்ந்த பற்றுதலும், அவரது வீழ்ச்சி அவரை எவ்வளவு தூரம் பாதித்ததென்பதும் அதில் குறிப்பிடப்பட்டுள்ளன. சர்ச்சில் எழுத முனைந்த முதல் வரலாற்றுப் படைப்பே அவர் தந்தையாரின் வாழ்க்கை வரலாறுதான் என்பதில் வியப்பில்லை. சர்ச்சிலின் அன்னையார் இயல்பில் குதூகலம் மிக்கவர். சுகவாழ்வை நாடியவர். அன்பையும் அசட்டையையும் தமது உளநிலைக்கு ஏற்றவாறு வழங்குகியவர். இவர் இளம்சர்ச்சிலின் உளப்பான்மையை வளர்ப்பதில் முக்கிய பங்கு கொள்ளவில்லை. ஆடம்பர வாழ்க்கையை விரும்பிய கணவர் நிலைமைக்கு விஞ்சிய செலவு செய்யுமாறு அவரைத் தூண்டியவர். செல்வத்தில் வளர்ந்த அமெரிக்க சீமாட்டியார் என்ற முறையில் தம்முடைய சொத்துகளை விரையம் செய்தார். தனிப்பட்ட உறவுகளில் அவர் சமூகத் தொடர்புகளை விரும்பினாலும், பெரும்பாலும் அவர் ஒதுங்கியே வாழ்ந்தார். அவர் தம் மக்களுக்காக அன்பு மயமான மனை வாழ்க்கையை அமைத்துத் தரவில்லை.

ரேண்டால்ஃப் பிரபுவின் குழந்தைகளுக்கு உயர்குடி வாழ்வின் ஆடம்பரங்களுக்குக் குறை விருக்கவில்லை. வளர்ப்புத்தாதிகள், செலவு மிக்க பள்ளிகளில் கல்வி, இலண்டன் நகரப் பகுதிகளில் வீடுகள், பிளென்ஹிம், அல்லது அல்த்ரோவில் விடுமுறைகள் போன்ற எல்லா வசதிகளும் இருந்தும் சர்ச்சில் இளமையில் தம்மை எளியவராகவே [கருதினர்; எனினும், உயர்குடியாளர்களின் செல்வ வாழ்க்கை ஒன்று தான் அவருக்கு அறிமுகமான ஒரே வாழ்க்கை. அவர் பெற்ற கல்வியும் அவரது சமூகப் பின்னணியும் ஒரே சீராக இருக்கவில்லை. ஹியூமின் 'ஹிஸ்டரி ஆஃப் இங்கிலண்ட்' (Hume's History of England) மெகாலேயின் 'லேய்ஸ் ஆஃப் ஏன்ஸியன்ட் ரோம்' (Lays of Ancient Rome) ராபர்ட் லூயி ஸ்டீவன்சனின் கதைகள் ஆகியவற்றை அவர் சுவைத்தார். ராணுவப் பள்ளியில் படைத் தந்திரங்களையும், போர் வித்தைகளையும் அவர் விரும்பிக் கற்றார். குதிரை ஏற்றத்திலும், துப்பாக்கி சுடுவதிலும் மகிழ்ந்து ஈடுபட்டார். இந்நிலையில் அவரது வாழ்க்கையில் புதியதொரு திருப்பம் நிகழ்ந்தது.

தந்தையார் இறந்தார். தாயினும் மிக்க பரிவு காட்டி அவரை வளர்த்த தாதியாரும் மறைந்தார். இந்தியாவில் பணி புரியக் கடமை அழைக்கிறது. திடீரென அவரது படைப் பாற்றலின் ஊற்றுக் கால்கள் திறந்து விடப்பட்டன. புகழ் பெறவும், பதவி வகிக்கவும் ஆசை அவரைப் பற்றிக் கொண்டது. இதற்கான அறிவைப் பெறுமாறு இந்தியாவில் அவர் இருந்த காலையில் கிப்பன், மெகாலே, ஆடம் ஸ்மித் போன்ற அறிஞர் களின் நூல்களைப் படிப்பதில் பொழுதைச் செலவிட்டார். 'அனுவெல் ரெஜிஸ்டர்' (Annual Register) என்ற ஆண்டுக் குறிப்புகளின் தொகுதிகள் அவருக்கு ஒழுங்காக அனுப்பப்பட்டு வந்தன. பாராளுமன்ற நடவடிக்கைகளின் பதிவேடான இந்தத் தொகுப்புகளை அவர் ஊன்றிப் படித்து சொந்தக் குறிப்புகளைத் தயாரிப்பார். அவர் விரும்பியது வரலாறு. வன்மையான, அறுதியான உள்ளங்கவரும் இலக்கிய வளம் கொண்ட வரலாறு. இத்தகைய வரலாற்றை அவர் கிப்பனிடமும் மெகாலேயிடமும் கண்டார். அவர் எழுதிய எழுத்துகளில் இந்த இரு மேதைகளின் முத்திரையைக் காணலாம். அடிப்படையில், மகிழ்வும் முனைப்பும் கொண்டிருந்தாலும் துன்ப நிழல் படர்ந்த அவரது வாழ்க்கை, மனித வாழ்வின் சோக நாடகத்தைப் பிரதிபலித்தது.

காலங் கடந்த மணவாழ்க்கையிலும் சர்ச்சில் இன்பம் கண்டார். எனினும், நட்புறவுக் கலை அவருக்கு எளிதாக வரவில்லை, பெர்க்கென்ஹெட், பீவர் ப்ருக், பிரான்டன் பிராக்கன், சேர்வெல் ஆகிய ஒரு சிலரிடம் மட்டுமே அவரது நாட்டம் சென்றது. அவர்களிடம் சர்ச்சில் அசையாத பற்றுக் கொண்டிருந்தார். சர்ச்சில் ஒரு முறை எடுத்துக் கொண்ட முடிவுகளை எளிதாக மாற்றுவதில்லை. பிடிவாதமாக இருப்பது, தமக்குச் சரியெனப்பட்டதை தனித்து நின்றுவது வெளிப் படையாகக் காட்டுவது ஆகியவற்றில் சர்ச்சில் அளவற்ற மகிழ்ச்சி கொள்வார். தனிப்பட்ட வகையில் அறுதியான முடிவுகளை எடுப்பதில் அவரிடம் காணப்பட்ட விருப்பமே இராணுவ அரசியல் வரலாறுகளில் அவர் பற்றுக் கொள்ளத் தூண்டியது. வரலாற்றுப் பெருமக்களின் குணவியல்புகளை விளக்குவதிலும், உற்சாகமான, உத்வேகமான வரலாற்று முடிவுகளை உருவாக்குவதிலும் அவர் உள்ளம் திளைத்தார். சர்ச்சிலின் குண வியல்புகள் உணர்ச்சி வெறி கொண்டு பொங்குவதும் உண்டு. எனினும் அவரிடம் பரிவுணர்ச்சியும் மேலோங்கி நிற்கும். எளிதில் கண் கலங்குவார். அரசியல் வாழ்வில் எளிதில் காணமுடியாத வள்ளன்மையிலும் ஈடுபட்டு விடுவார். சூழ்நிலைக்கு ஏற்றவாறு செயல்படுவதில் தம்மை அறியாமலே இறங்கி விடுவார். இது அவரது சொந்த

வாழ்க்கையில் மட்டுமன்று, வரலாற்றைப் பொருத்த வரையிலும் உண்மையாகும்.

சர்ச்சில் யானையை யொத்த பலம் கொணடிருந்தார். ஊண் உறக்கமின்றி, உற்சாகக் குறைவின்றி, பல்லாயிரக் கணக்கான சொற்களைக் கொண்டு வரலாறு படைக்கின்றவர்களுக்கு இத் தகைய பலம் ஒரு இன்றியமையாத தேவையாகும். சர்ச்சில் எழுதிக் குவித்திருக்கும் வரலாற்று நூல்கள் யாவும் மிகவும் நீள மானவை. எண்ணிறந்த ஆற்றல்களைப் பெற்றிருந்த சர்ச்சிலிடம் சில குறைபாடுகளும் இருந்தன. சர்ச்சிலின் அறிவாற்றல் நுட்ப மான முறையில் வளர்க்கப்பட்டிருந்தது, போதுமானதாக இருந்தது. எனினும், அவை ஒளிவிட்டு மிளிரவில்லை. இதற்காக அவர் தம்மையே குறை கூறிக்கொண்டு மனமீடிநதுவிடவில்லை. பிராய்ட்டையும் மார்க்சையும் அவர் கற்றுத் தேறவில்லை. தத்துவ மேதைகள், பொருளாதார நிபுணர்கள், சமூக விஞ்ஞானிகள் ஆகியோரின் நூல்கள் அவருக்கு அறிவுப்பசியை உண்டாக்கவில்லை. சர்ச்சிலின் கலாச்சாரங்கள் விவிலியம், ஷேக்ஸ்பியர், மில்டன், ஸ்காட், டிக்கன்ஸ், ட்ரோலோப், ருட்யார்ட் கிப்லிங் போன்ருேர் வழங்கிய கலாச்சாரங்களே.

சமூகப் பின்னணியும், உணர்ச்சி இயல்புகளும், பட்டறிவும் தான் வரலாற்றறிஞனை உருவாக்குகின்றன. சர்ச்சில் 'த ஸ்டோரி ஆஃப் த மலக்கந்த் ஃபீல்டு ஃபோர்ஸ்' என்ற நூலில் வர்ணிக்கின்ற எல்லைப்புறப் போர் அனுபவத்தைப் பெற்ற போது, சர்ச்சில் வெறி கொண்ட படைப்பாற்றல் பெற்று, ஆவேசமான மன நிலையைக் கொண்டிருந்தார். போரார்வம் அவரை எவ்வளவு ஆட்கொண்டதென்ருல், எகிப்திலும், போயர் போரில் அவரைக் குதிக்கத் தூண்டியது. இவற்றில் ஈடுபட்டதால் சர்ச்சில் தம் இயல்புகளின் வேட்கையைத் தணித்துக் கொண்டார் என்பதை அவர்தம் நூல்களில் காணலாம். அவர்தம் முதல் அரசியல் முயற்சி களும் ஓல்டாம் தந்த வெற்றிப் போதையில் பிறந்தவை. போரும் அரசியலும் அவரது வாழ்வின் மகத்தான குறிக்கோள்கள். படைப்பாற்றல் கொண்ட கற்பனை ஊற்றுகள் அவரது அளப்பரிய வன்மையின் தசை நார்களாகும். இவைதாம் சர்ச்சிலுக்குச் சிறப்பும், உலகப் பெருமையும், அழியாப் புகழும் தந்தன. முந்த முந்த சர்ச்சில் ஓர் எழுத்தாளன். தொடக்க முதல் அவர் பயிற்சி நிலையிலுள்ள வரலாற்று ஆசிரியன் என்பதை மறக்கக்கூடாது. அதனுல் தான் அவர் அரசியல் வன்மையும், எழுத்துத் திறனும் கலந்த அரிய, அலாதியான மனிதராகத் திகழ முடிந்தது. சர்ச்சில் அக்காலத்திய கிரான்டனைப் போன்று அவர்கள் வாழ்ந்திருந்த

நாட்களின் பெருநிகழ்ச்சிகளில் ஈடுபாடு கொண்டார். அவர்களின் வரலாறுகள் வாழும் வரலாற்றினுடைய கருப்பொருள்கள் என்பது எவ்வளவு உண்மை!

வகைவகையான வரலாற்று நூல்கள்

சர்ச்சில் ஆக்கிய வரலாற்று நூல்களை இரு வகைகளாகப் பிரிக்கலாம். அவை முறையாகத் தொழில் ரீதியாக அமைந்த வரலாறுகளும், சமகாலத்திய நிகழ்ச்சிகளைப் பற்றிய வரலாறுகளுமாகும். இரண்டாவது வகையான வரலாற்றுடன் சர்ச்சில் நேரடியான தொடர்பு கொண்டார். இவை அரை குறை சுய சரிதைகளான 'த ஸ்டோரி ஆஃப் த மலக்காந்த் ஃபீல்டு ஃபோர்ஸ்' முதல் பல தொகுதிகளைக் கொண்ட 'த ஹிஸ்டரி ஆஃப் த செகண்ட் வொர்ல்ட் வார்' (The History of the Second World War) வரையுள்ள நூல்களைக் குறிக்கும். சர்ச்சிலின் சம காலத்திய வரலாற்று நூல்கள் முறையான வரலாற்று நூல்களை விட எண்ணிக்கையிலும், சுவையிலும் உயர்ந்தவைகளாகும். இரண்டாம் வகையான வரலாற்று நூல்கள் சர்ச்சிலை அரசியல் வல்லுநர் என்ற வகையிலும் சமகாலத்திய வரலாற்று ஆறிஞர் என்ற முறையிலும் அவருடைய குணவியல்புகளைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. சர்ச்சிலின் தந்தையாரின் வரலாறும், குல முதல்வரான மால்பரோ கோமகனின் வரலாறும் பக்தி காரணமாக எழுதப் பெற்றவை. இவற்றின் மூலம் கன்சர்வேடிவ் கட்சியினர் தந்தையாருக்குச் செய்த துரோகத்தை வெளிப்படுத்தவும், மெகாலே மால்பரோவின் பெருமையைக் களங்கப் படுத்தியதை நீக்கவும் சர்ச்சில் முயன்றார். 'த ஹிஸ்டரி ஆஃப் த இங்கிலிஷ் ஸ்பீக்கிங் பீபில்ஸ்' என்ற நான்கு தொகுதிகள் கொண்ட வரலாற்று நூல் வழியாக பொருளீட்ட முடியுமென்று சர்ச்சில் கூளுரைத்தார். பல்லாண்டுக் கால உழைப்பின் பயனாக 1956ல் வெளிவந்த இந்தப் படைப்பின் வெற்றியைச் சர்ச்சில் அதிகம் பாராட்ட முடியவில்லை. சர்ச்சில் தந்தையாரைப் பற்றிய வரலாற்று நூல்தான் பல வழிகளில் நிறைவு தந்த படைப்பு எனலாம்.

1906ல் பதிப்பிக்கப்பெற்ற இந் நூல் வெளிவந்த காலை சர்ச்சிலின் அரசியல் அனுபவங்கள் ஆழமற்றவைகளாக இருந்த போதிலும், தந்தையாரின் பொது வாழ்வின் முக்கிய நிகழ்ச்சிகளை அவர் நல்ல முறையில் மதிப்பிட முடிந்தது. மேலும், அவர்தம் தந்தையாரின் நண்பர்களையும், எதிரிகளையும் அவர் தனிப்பட்ட முறையிலும், அரசியல்வாதி என்ற முறையிலும் அவர் நன்கறிந்திருந்தார். பாராளுமன்ற நடவடிக்கைகளை ஊன்றிப் படித்திருந்த

காரணத்தால் அக்காலத்திய முக்கியப் பிரச்சினைகளைப் பற்றித் தெளிவு கொண்டிருந்தார். தந்தையாரின் ஆதார ஏடுகளும் அவர் வசம் இருந்தன. ரோஸ்பெரிப் பிரபுவின் ஆயப்புரையையும் அவர் நன்கு பயன் படுத்தினுர். தம்மிடமிருந்த சில பதிவேடுகளை அவர் வசதியாக நகல் எடுத்தார். சில இடங்களில் தந்தையாரின் மூல உரைகளின் கடுமையான நடையை மாற்றி அமைத்துக் கொண்டார். தந்தையாரின் வரலாற்றை அவர் ஒரு பக்திப் படைப்பாக, நியாய விளக்கமாக எழுதினுரேயன்றி, ஒரு வரலாற்று மதிப்பீடாக அமைக்கவில்லை. ரேண்டால்ஃப் பிரபு தொழிலாளர்களுடன் வாக்குரிமையைப்பற்றி நிகழ்த்திய உரையாடல்கள்தாம் இந்நூலின் விறுவிறுப்பான பகுதிகளாகும். இவ் வாழ்க்கை நூல் அக் காலத்திய வரலாற்று நூல்களில் ஒன்ருகக் கருதப்படுகிறது. ஆனுல், விறுவிறுப்பு மிக்க இந்நூல் ஒருதலைச் சார்புடையது என்பதையும் மறுக்க முடியாது. சர்ச்சிலைவிடப் புகழில் குறைந்தவர் ஒருவர் இதனை எழுதியிருந்தால் இதுவரை அது மங்கி மறைந்து போயிருக்கும். ரேண்டால்ஃபின் குண வியல்புகளையும், உளப்பாங்குகளையும் பற்றிய நுட்பமான ஆய்வு இந்நூலில் இல்லாதது ஒரு குறையாகும். தனி மனிதனுகவும் அரசியல்வாதியாகவும் ரேண்டால்ஃப் பிரபுவின் குண வியல்புகளை அலசி ஆராயாமல் அவரது வாழ்க்கையின் மேல் மட்டத்திய நிகழ்ச்சிகளின் காரண காரியங்களை மட்டும் கண்டுபிடிக்க சர்ச்சில் விழைகிருர்.

மால்பரோ கோமகன் ஜான் சர்ச்சிலின் வரலாறு வின்ஸ்டன் படைத்த மற்ெருரு வரலாற்று நூல். வின்ஸ்டன் தமது குல முதல்வரின் வாழ்க்கை வரலாற்றை எழுத விழைந்ததன் நோக்கம் பொருளீட்டுவது மட்டுமன்று, மெக்காலே களங்கப்படுத்திய மால்பரோவின் உருவத்தை மெருகிட்டு மீண்டும் ஒளிரச் செய்வதாகும். மெகாலேயின் மால்பரோ பதவி ஆசையும், பணப் பேராசையும் பிடித்தவர். அன்று அரசவையின் கவர்ச்சியைத் தமக்கு ஆதாயமாகப் பயன்படுத்திக் கொண்டவராகச் சித்தரிக்கப் படுகிருர். இத்தகைய குற்றச் சாட்டுகளையெல்லாம் இந் நூலில் சர்சில் மறுப்பதற்குப் பெரும் முயற்சி எடுத்திருக்கின்ருர். மால்பரோவின் வரலாற்றை எழுதுவதில் சர்ச்சிலுக்குப் பல அனுகூலங்கள் இருந்தன. அவற்றில் சிலவற்றை அவர் பயன்படுத்திக் கொண்டதுபோல, சிலவற்றைப் புறக்கணித்தார். பல ஆராய்ச்சி மாணவர்கள் பயன்படுத்தக் கூடிய அளவிற்கு அவரிடம் சான்றுகள் இருந்தன. பிளென்ஹிம் ஆயப்புரை அவருக்குத் திறந்து விடப்பட்டது. ஏற்கெனவே ஆர்ச்டீகன் கோக்ஸ் (Archdecan Cox) மால்பரோவின் வரலாற்றைப் பிரம்மாண்டமான முறையில் எழுதி

யிருந்தார். சர்ச்சிலின் துணைவர்கள் தூதரகக் கடிதங்களையும், ஐரோப்பியத் தலைநகரிலுள்ள அரசு ஆதாரங்களையும் படித்தனர். சர்ச்சில் கேட்டுக் கொண்டிருப்பாரானால் இங்கிலாந்தின் ஒவ்வொரு வீட்டிலுமுள்ள ஆயப்புரைகள் அவருக்குத் திறந்து விடப்பட்டிருக்கும். பிளென்ஹிமை அடுத்த லாங்லீட் (Longleat) என்ற இடத்தில் மால்பரோவின் நண்பரான ஹாரின் கடிதங்கள் பல இருந்தன. அவற்றைச் சர்ச்சில் பயன் படுத்தவில்லை; இவ்வாறு நூலுக்குத் தேவையான ஆயப்புரை ஆய்வுகள் மேலெழுந்த வாரியாகவே செய்யப்பட்டன. மால்பரோவின் மருமகனை சண்டர்லண்ட் பிரபுவிடம் (Sunderland) அமைச்சரவைக் குறிப்புகள் பயன்படுத்தப்படவில்லை. இதன் விளைவாக மால்பரோவின் வரலாற்றில் அரசியல் பகுதியைப் பற்றி நாம் புதிதாக எதுவும் அறிந்து கொள்வதற்கில்லை. மால்பரோ வரலாற்றின் சிறந்த பகுதி போர்களைப் பற்றிய வர்ணனைகளாகும். பதினான்காம் லூயிஸ் மன்னரின் நட்பைப் பெற மால்பரோ செய்த அரசியல் வெல்திற சூழ்ச்சிகளும் திறமையாகக் கையாளப்பட்டிருக்கின்றன.

மால்பரோ வரலாற்றின் அமைப்பு அற்புதமாக இருக்கின்றது. சிக்கலான அரசியல் அமைப்பும், வன்மையான கட்சிப் போராட்டங்களும் பின்னணியில் நிற்க, இவற்றை இலண்டன் நகரில் மையத்திலிருந்து இயக்குவது மிகக்கடினம். பல ஐரோப்பிய நாடுகளின் உள்நாட்டு வெளிநாட்டுக் கொள்கைகளையும், பல் துறைச் செயல்களையும் சர்ச்சில் எதிர் நோக்க வேண்டியிருந்தது. போரோ ஏழு பெருங்கடல்களிலும் நடந்தது. இதைத் தவிர இங்கிலாந்தும் ஃபிரான்சும் கனடாவிலும், அமெரிக்காவிலும், மேற்கு இந்தியத் தீவுகளிலும், தூரக்கிழக்கு நாடுகளிலும் ஒன்றையொன்று எதிர்த்துப் போராடிக் கொண்டிருந்தன. இவ்வாறு இருதரப்பினரின் படைகள், கடற்படைகள், அரசுகளின் பெரு மக்களின் வளங்கள், அவர்களை எதிர்த்த பிரச்சினைகளும் அவர் முன் நின்றன. இத்தனை பிரம்மாண்டமான பிரச்சினைகளையும் ஒருங்கமைத்துப் பலதரப்பட்ட கருத்துகளை விளக்குவதற்குப் பகீரதப் பிரயத்தனமும், மகத்தான அறிவும் தேவைப்பட்டன. சர்ச்சில் இந்த மாபெரும் சாதனையைச் செய்து காட்டினார். அவரது நீண்ட வரலாற்று நூல் விறுவிறுப்பாக இருப்பதுடன், ஒன்றையொன்று பின்னிக் கிடந்த சிக்கலான பொருள்களை நாம் உய்த்துணரக் கூடிய அளவிற்குத் தெளிவும் கொண்டு விளங்குகின்றது. வரலாறு என்ற முறையில் இந்நூலில் பல குறைகள் இருந்தாலும், இலக்கியக் கலையின் இணையற்ற படைப்பு என்ற முறையில் இதற்குள்ள தகுதியை மறுக்க முடியாது.

'மால்பரோ' வாழ்க்கை வரலாற்று நூல் என்ற வகையில் வெற்றிப் படைப்பா? என்றால், இல்லை என்றுதான் கூற வேண்டும். மால்பரோவைப் பற்றியும் அவர்தம் மனைவியைப் பற்றியும் சர்ச்சில் வர்ணிக்கின்றபோது அவரிடம் குடி பக்தி மேலோங்கி நிற்கிறது. மால்பரோ புகழையும் பொருளையும், மனைவி சாராளையும் காதலித்தார். மால்பரோக்கள் செல்வத்தைக் குவித்தார்கள், சூழ்ச்சிகள் பல செய்தார்கள்; ஐயத்திற்குரிய வழிகளில் பொருளீட்டினார்கள். இவற்றையெல்லாம் விசாரணை செய்யச் சர்ச்சில் விரும்பவில்லை. மால்பரோ பொருளீட்டுவதை விரும்பினார் என்பதைச் சர்ச்சிலால் மறைக்க முடியவில்லை. ஆனால், இங்கிலாந்தில் வாழ்ந்த சோமன்களில் மால்பரோ எளியவர் என்று வெகு சாதுர்யமாகக் சர்ச்சில் கூறி உண்மையை மறைக்க முயல்வது வேடிக்கையான கூற்று. மால்பரோ இங்கிலாந்தின் வங்கிகளிலும், கிழக்கிந்தியக் கம்பெனியிலும், பிற வர்த்தக நிறுவனங்களிலும் ஏராளமான பணம் போட்டிருந்தார். மால்பரோவைச் சர்ச்சில் தமது நூலில் சீலமும் ஆற்றலும் நிறைந்து, மாந்தருள் அச்சமும், பகையுமில்லாத ஒரு எடுத்துக்காட்டு என்று சித்தரிக்கிறார். இந்நூலின் பெருங்குறை அதில் ஆராய்ச்சிப் பணி இல்லாதது. இங்கிலாந்தின் மரபு வழியான பழமையில் சர்ச்சில் கொண்டிருந்த நம்பிக்கையிலிருந்து அவர் தம்மை விடுவித்துக் கொள்ள முடியவில்லை. வரலாற்றுடன் பின்னிப் பிணைந்து அதனைத் திரித்து விடக்கூடிய பழமையுணர்வுதான் சர்ச்சிலின் எழுத்துகளில் மேலோங்கி நிற்கின்றது.

சர்ச்சிலின் 'ஹிஸ்டரி ஆஃப் த இங்கிலீஷ் ஸ்பீக்கிங் பீபிள்ஸ்' (History of the English Speaking peoples) என்ற நூலில் மேற்கூறிய உணர்வுகள் இன்னும் வெளிப்படையாகத் தெரியும். 1950ல் வயது முதிர்ந்திருந்த சர்ச்சில் கடந்த நாற்பதாண்டுகளின் வரலாற்று அறிவைக் காலத்திற்கு ஏற்றதாகச் செய்யத் தேவையான பெரும் பணியை மேற்கொள்ள முடியவில்லை. மொரான் பிரபுவின் நாள் குறிப்புகளில் சர்ச்சில் நிறைய வாசிப்பது வழக்கம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சர்ச்சிலின் நூல் படிகளைத் திருத்திய மொரான் பிரபு, 'சர்ச்சில் சொற்களைச் சுவைபடக் கூறுவது, அங்கும் இங்கும் சொற்களை மாற்றியமைப்பது, சொற்களின் அமைப்பு முறையைத் தலைகீழாக்குவது, அவற்றை உடைத்துக் கூர்மையாக்குவது, எழுத்துக்கலையின் படைப்பாற்றலைச் சுவைப்பது ஆகியவற்றில் சர்ச்சில் உள்ளம் திளைத்தார் என்று கூறியிருக்கிறார்.'[1] ஆனால், நுட்பமாக எதையும் ஊன்றிப்

1. Churchill—Four faces and the Man, J. A. P. Taylor, p. 138

படைப்பதைச் சர்ச்சில் விரும்பவில்லை. முதுமை இதன் காரண மாகும். 'எனது ஹிஸ்டரி ஆஃப் த இங்கிலீஷ் ஸ்பீக்கிங் பீபில்ஸ் வெளிவந்தபோது, அது 19ஆம் நூற்றாண்டின் அல்லது 20ஆம் நூற்றாண்டின் தொடக்கமாகிய பழமையிலிருந்து வெளிப் படும் ஆவியின் தோற்றம்போல் இருந்தது என்று கூறுகிறார். இந் நூலில் சர்ச்சில் தமது நாட்டுப்பற்றை வெளியிட்டு, ஆங்கில மக்கள் உலகில் தனிப்பெரும் பணிபுரியப் பிறந்தவர்கள் என்ற நம்பிக்கையின் அடிப்படையைச் சிறப்பாக விளக்கியிருக்கிறார். சர்ச்சிலின் அரசியல் வல்லமையையும், சூழ்ச்சித் திறனையும், தொழிலாளர் வர்க்கத்துடனும், இந்தியாவுடனும் முடியரசுட னும் அவர் கொண்டிருந்த தொடர்புகளையும் சரிவர உய்த்துணர வேண்டுமெனில் இந்நூலைப் படிப்பது அவசியமாகும். வரலாற்று நூல் என்ற வகையில் இந்நூல் படுதோல்வி கண்டது. ஆங்கி லேயரின் பழமையுணர்விற்கு இது பெரும் நினைவுச் சின்னம். அந்த அளவில் இது மகத்தான வெற்றி என்று கூறவேண்டும்.

சர்ச்சிலின் ராணுவஅரசியல் வரலாற்று நூலில் சிறப்பாக அமைந்துள்ளது, எதிர்பார்த்ததொன்று. கதையின் போக்கு விறுவிறுப்பாக இருக்கிறது. ஆங்காங்கே சில காரசாரமான இடித்துரைகளும் இடம் பெறும். போர்க்களச் சாதனைகள் உள்ளத்தைத் தொடும் வகையில் அழகான சொல்லோவியங் களாகத் தீட்டப்பட்டிருக்கின்றன. ஆனால் மனிதர்களையும் நிகழ்ச்சிகளையும் பற்றிய அவருடைய முடிவுகள் சம்பிரதாய மானவை. குறிப்பாக உள்நாட்டுப் போரையும் பொதுநலக் குடியரசையும் பற்றிய அவருடைய தற்குறிப்பான விளக்கங்கள் அழகிய சொல்நடையில் போர்த்தப்பட்டுள்ளன. முதலாம் சார்லஸ் அரசர், கிராம்வெல் ஆகியோரின் குணவியல்புகளும் நுட்பமாக ஆராயப்படவில்லை. பியூட்டன்களைக் கேலி செய்யக் கிடைத்த வாய்ப்புகள் நன்கு பயன்படுத்தப்பட்டுள்ளன. அவரது நடை விறுவிறுப்பாகவும், உயிர்த் துடிப்புள்ளதாகவும் இருந் தாலும், மக்களையும் நிகழ்ச்சிகளையும் பற்றிய படப்பிடிப்புகள் கூர்மையாகவும், வன்மையாகவும் இருந்தபோதிலும் வரலாற்றுக் கற்பனைத்திறனையும், மனிதத்தன்மையான பரிவுணர்வையும் அவற் றில் காண முடியவில்லை. போர் வரலாற்றிலுங்கூட நொறுங்கிச் சிதைந்த தலைகள், சரிந்துவிழும் குடல்கள், செங்குருதி ஆற்றில் சின்னாபின்னமாகச் சிதறியோடும் தசைகள், குற்றுயிராய்க் கிடக்கும் வீரர்கள் எழுப்பிய மரண ஓலங்கள், வறுமையும், சமூக அநீதியும், விதியின் சாபக் கேடும், மக்களை வாட்டி வதைத்த அவலம் ஆகியவற்றை அங்கே நாம் காணமுடியாது. போரைப்

போலவே சமூக வரலாற்றிலும் உழைத்து உருக்குலைந்த தொழிலாளர்களைப் பற்றியோ, ஆளும் வர்க்கம் அவர்கள் நடத்திய விதைத்தைப் பற்றியோ அதில் குறிப்புகள் இல்லை. படைத் தலைவர்களும். அட்மிரல்களும். அரசியல் வல்லுநர்களும் காணுகின்ற அரசியல்தான் சர்ச்சிலின் பேனு வரையும் வரலாற்று அரசியல்.

ஆங்கிலம் கூறும் நல்லுலகத்தினர் ஆக்கிக்கொண்ட சிறப்புகளை அவர்களின் இலக்கியம், விஞ்ஞானம், தத்துவம், தொழில் நுட்பம் ஆகிய படைப்பாற்றல்களைச் சர்ச்சிலிடம் தேடுவது வீண் முயற்சியாகும். ஷேக்ஸ்பியர், ஹாப்ஸ், லாக், நியூட்டன். பாய்ல், டேவி, ஃபாரடே, மாக்ஸ்வெல். ருதர்ஃபோர்டு ஆகிய பெருமக்களைப்பற்றி அவர் ஒரு வார்த்தை கூட எழுதவில்லை. தொழிற்புரட்சிக்கும், அதன் சமூக அரசியல்விளைவுகளுக்கும் ஒரு சில பக்கங்களே ஒதுக்கப்பட்டிருக்கின்றன. சுருங்கக் கூறின் பிரிட்டன் உலக நாகரிகத்திற்குத் தந்துள்ள அருங்கொடைகளில் பெரும்பகுதி விடப்பட்டிருக்கிறது. இக் குறைபாடுகள் மனித சமுதாயத்தைக் கட்டுப்படுத்தி, அதனை மாற்றுகின்ற ஆழ்ந்த நோக்கங்களைப் பற்றிச் சர்ச்சில் அறிந்துகொள்ளவில்லை என்ற பெருங்குறையைக் கோடிட்டுக்காட்டுகின்றன. சர்ச்சிலின் உள்ளம் பழமை மரபுகளில் ஊறிக் கிடந்தது.

இங்கிலாந்தின் சிக்கலான வகுப்புப் பிரிவினைகளும், தொழிலாளர் சமுதாயச் சூழலில் படைமான்ய முறை தொடர்ந்து வாழப் போராடியதால் ஏற்பட்ட பிரச்சினைகளும் அவரது பிடியில் சிக்கவில்லை. 'ஆங்கில நாட்டு மக்கள் தங்கள் அரசரையும், பாராளுமன்றத்தையும் போற்றி நிற்கின்றவரை எது வந்தாலும் எதிர்த்தே தீரவேண்டும்' என்ற வீர வைராக்கியம் சர்ச்சிலிடம் ஆழமாகப் பதிந்திருந்தது. பிரிட்டிஷ் மண் மீதும், மக்களிடமும் சர்ச்சில் அன்பும் கடமையுணர்வும் கொண்டிருந்த போதிலும், அவர்களின் வருங்காலத்தைப்பற்றி அவர் சிந்திக்கவில்லை. பழைமையில்தான் இங்கிலாந்தின் இதயத் துடிப்பு இருப்பதாகச் சர்ச்சில் நம்பினார். பிரிட்டிஷ் கனவான்கள் தங்கள் உரிமைகளுக்காக அரசரை எதிர்த்து நடத்திய போராட்டமே இங்கிலாந்து வரலாற்றின் கருவாகச் சர்ச்சிலுக்குத் தெரிந்தது. எனினும் சர்ச்சிலின் ஆற்றல்கள், கதை சொல்லும் சக்தி, அமைப்புகளின் பிடிப்பு, வளமான முதிர்ச்சிபெற்ற நடை யாவும் சிறப்பான கொடைகள். அதுபோல் அவருடைய குறைகளும் தெளிவானவை, அவர் எழுத எடுத்துக்கொண்ட பொருள்களை

விட இந்நூல்கள் அவரது உள்ளத்தை வெள்ளிடைமலைபோல் ஒளிரச் செய்கின்றன.

முறையான வரலாற்று நூல்கள் சர்ச்சில் எழுதிய வரலாற்று நூல்களின் ஒரு பகுதியே, த ஸ்டோரி ஆஃப் த மலக்கந்த் ஃபீல்டு ஃபோர்ஸ்' 'த ரிவர் வார்' (The River War) போன்ற சிறிய விறு விறுப்பான போர் நிகழ்ச்சிகள் தொடங்கிக் பல தொகுதிகளைக் கொண்ட இரண்டாம் உலகப் போர்களின் வரலாறுகள்வரை இந்நூல்கள் பல நிகழ்ச்சிகளைப் பற்றியவை. இவற்றை இன்னும் சிறு பிரிவுகளாகப் பிரித்தால் அவை சர்ச்சிலின் இளமைப் பருவத்திய தீரச் செயல்களைப் பற்றிய கதைகள், இரண்டாம் உலகப்போர் நூல்கள், 'த கிரேட் காண்டெம்பரரிஸ்' வர்ணிப்பது போன்று சர்ச்சிலின் நண்பர்களைப் பற்றிய மதிப்பீடுகள்—எனப் பலதரப்பட்ட படைப்புகளாகும். தொடக்க கால வீரச்செயல் களில் அவரது ஆளுமை தெளிவாக இடம் பெறுகின்றது. அவர் முதல் நூல் வெளிவந்தபோது இளவரசரே அவரைப் பாராட்டி ஞர். சமுதாயம் அதனை வரவேற்றது. நடை பழையதெனினும் உயிர்த்துடிப்பு இருந்தது. எழுத்துலகம் அவரை அழைத்தது. சர்ச்சில் படைத்துறைப் பணியை விட்டு விடவும் இல்லை; அவரது பசித்த பேனாவைப் பட்டினி போடவும் இல்லை.

வாழ்வில் எதிர்பாராத ஏற்றம் ஏற்படவே, சூடானில் கிச்சினர் படையில் சர்ச்சிலுக்கு உயர் பதவி கிடைத்தது. இதன் விளைவு 'த ரிவர் வார்' என்ற நூல். இப்படைப்பு சர்ச்சில் ஓர் எழுத் தாளருக்குரிய இயல்புகளைக் கொண்டிருக்கிறார் என்பதை உறுதி செய்தது. நூல் வெளிவருவதற்குள் அவர் படையிலிருந்து விலகினார். 'த மார்னிங் போஸ்ட்' (The Morning Post) என்ற செய்தித்தாள் நிறுவனம் அளிக்க முன்வந்த ஊதியமும், 'த ரிவர் வார்' நூலின் வெற்றியும் அவரைப் படையை விட்டு விலகத் தூண்டின. 'த ரிவர் வார்' நூலில் எகிப்தில் இங்கிலாந்தின் ஈடு பாடு, கார்டனின் தோல்வி, ஓம்தூர்மான் நிகழ்ச்சி ஆகிய யாவும் அழகுற இடம் பெறுகின்றன. ஓம்தூர்மானில் அவரே பங்கு பெற்ற காரணத்தால் அதனை விவரிக்கும்போது அவர் எழுத்தில் உயிர்ப் பொறிகள் பறப்பதைக் காண்கிறோம். போர்த் தந்திரங்கள், த ரேட்ன் போர் முறைகள், படைகளின் முன் னேற்றம், வெடிமருந்து யாவும் கதைக்கு விறுவிறுப்பூட்டு கின்றன. 'த ரிவர் வார்' நல்ல மதிப்புரைகளைப் பெற்றது. சர்ச்சிலின் எழுத்தார்வத்தையும், படைப்புத்திறனையும் வெளி யிட்ட அந்நூல் வரலாற்று இலக்கியத்தில் சிறப்பிடத்தைப் பெற்றது.

'த ரிவர் வார்' அச்சேறிக்கொண்டிருக்கும் போதே தென் ஆப்பிரிக்காவில் போர் மேகங்கள் மூண்டன. 'மார்னிங்போஸ்ட்' நிறுவனத்துடன் சர்ச்சில் உடன்பாடு செய்துகொண்டார். களம் நோக்கிப் புறப்பட்டார் போர். நிருபர். அதன் விளைவாக மேலும் இருநூல்கள் பிறந்தன. ஃபிரம் லண்டன் டு லேடிஸ்மித்' (From London to Lady Smith) 'ஈயான் ஹாமில்டன்ஸ் மார்ச்சு' (Ian Hamiltons March) ஆகிய இருநூல்களும் முறையே 14,000, 8000 படிகள் விற்பனையாயின. இவை பெரும்பாலும் அவர் மார்னிங்போஸ்டில்' எழுதிய கட்டுரைகளின் தழுவல்களே ஆகும். இந்நூல்சள் அவருக்கு வரலாற்றாசிரியன் என்ற முறையில் புகழ் தேடித் தரவில்லை. எனினும் அவரது கதைத் திறன், ஆய்வுணர்ச்சி, நடையழகு ஆகியவை பாராட்டப்பட்டன.

### காலத்தை வென்ற கதைகள்

சர்ச்சில் உலகப் புகழ்பெற்ற அரசியல் வல்லுநர் என்ற காரணத்தால் அவர்தம் நூல்கள் அழிவிலிருந்து தப்பின. எனினும் அவற்றின் வாழ்க்கை வரலாற்று முக்கியத்துவம் அதிக மாகும். அவர் தமது சொந்த வரலாற்றை எழுதுவதன் மூலம் தம் வாழ்க்கையைத் தொடங்கினார். சர்ச்சிலின் இரண்டாம் உலகப்போர்களின் வரலாற்றைப் படித்தால், அதில் விநோத மான பல விவரங்களை அறிந்து கொள்ளலாம். 'த வொர்ல்ட்' கிரைசிஸ், (The world Crisis) த அன்னோன் வார் (The Unknown War) ''ஈஸ்டர்ன் ஃபிரன்ட்'' (The Eastern Front) 'த ஆஃப்டர் மாத்' (The After Moth) முதலியவை முதல் உலகப்போர் பற்றிய ஆறு தொகுதி ஆராய்ச்சியாகும். சர்ச்சிலின் இரண்டாம் உலகப்போர் வரலாற்றுடன் இதனை ஒத்திட்டுப் பார்த்தால், முதல் உலகப் போர் வரலாறு ஒட்டுச் சேர்க்கைபோல் தோன்றுகிறது. டார்டனலஸ் நிகழ்ச்சிக்குப்பின் சர்ச்சிலிக்குத் தேசிய ஆயப்புரைகளின் பயன் கிடைக்காமல் போனது இதற்கு ஒரு காரணமாக இருக்கலாம். எனவே, இவை பெரிதும் சொந்த ஆதாரங்களின் அடிப்படையில் எழுதப்பட்ட தனிப்பட்ட வரலாறுகள் போல்தாம் தோன்றுகின்றன. இவற்றைப் போர்பற்றிய நம்பகமான செய்திகளாகக் கொள்ள முடியாது. 'த வொர்ல்ட் கிரைஸிஸ்' என்ற நூலில் அக்காலத்திய அரசியல் வல்லுநர்கள், கடற்படைத் தளபதிகள் ஆகியோர் பற்றிய கூர்மையான உள்ளாய்வு குறிப்பிடத் தக்கது. இந் நூலில் குறிப்பாக லாயிட்ஜார்ஜின் படைப்பாற்றலையும், அழுத்தைதத்தையும் பற்றிச் சர்ச்சில் குறிப்பிடுவது சிறப்பன தொரு பகுதியாகும்.

'த வொர்ல்ட் கிரைஸிஸில்' இடம்பெறும் போர்க்களங்கள் அழகு மிக்க வர்ணனைகள். எனினும் அவற்ருல் வரலாற்றுப் பயன் அதிகமில்லை. அவை படித்து அநுபவிக்கத் தக்கவை. ஆனுல், இப் பகுதிகள் லாயிட் ஜார்ஜின் வெல்திறத்தை அழுத்தமாக விவரிக்கின்றன. சர்ச்சில் சொல்திறனில் சுவையின்மையும் இருக்குமென்பதற்கு அதே நூலில் அவர் எழுதியுள்ள ருஷ்யப் புரட்சியில் ஸார் மன்னரின் முடி துறப்புப் பற்றிய பகுதி சிறந்த எடுத்துக்காட்டாகும். 'த வொர்ல்ட் கிரைஸிஸ்' சமநிலை இல்லாத நூல்; அதன் பெரும் பகுதி சுவையும், தெளிவும் இல்லாமல் இருக்கின்றது. ஆளுமைகள் பற்றி ஆழ்ந்த ஊடுருவும் ஆராய்ச்சி இன்றி வெறும் கதை கூறுவது போல் இருக்கின்றது. இதே:பண்பு 'த கிரேட் கான்டெம்பரரீஸ்'' என்ற நூலிலும் வெளிப்படுகின்றது. தம்முடன் பாராளுமன்றத்தில் இருந்தவர்கள், தீவிர அரசியலில் ஈடுபட்டவர்களைப்பற்றி எழுதும் போது சர்ச்சில் நுண்ணறிவைத் தூண்டும் வகையில் எழுதுகிருர். ஆன்ருேர் என்ற வகையில் மக்கள் எவ்வாறு நடந்து கொண்டார்கள் என்பதை விளக்குவது அவரது வரலாற்று நோக்கின் புதிய அளவுகோலாகும். அவர் அறிந்திராத அல்லது அவருக்குப் பிடிக்காத லெனின், பெர்ஞர்ட் ஷா போன்றவர்களைப்பற்றி எழுதும்போது உள்நோக்கும், கற்பனைத்திறனும் குன்றிட, வெறுப்புணர்ச்சியே மேலிடுவதைக் காணலாம். எனினும் மேற்கூறிய இருநூல்களும் அக்காலத்தைப்பற்றி அறிந்துகொள்வதற்கு ஆதாரங்களாகும்.

## இரண்டாம் உலகப் போர் வரலாறு

1939 முதல் 1945 வரை நடைபெற்ற இரண்டாம் உலகப் போர் பற்றிச் சர்ச்சில் எழுதிய வரலாறு வேறு வகையைச் சேர்ந்தது. அப்போரின் பிடியில் சிக்கிக்கொண்ட ஒரேவொரு அரசியல் வல்லுநர் என்ற வகையில் சர்ச்சில் ஏற்கெனவே இப் பயங்கரப் போரின் வரலாற்றை ஒரு நாள் எழுதவேண்டுமென்று முடிவு செய்தார். எனவே, அவர் போர் சம்பந்தப்பட்ட செய்திகளைச் சேகரிக்கவும், அவற்றைத் தொகுத்து முறையாக அமைக்கவும் தேவையான ஏற்பாடுகளைச் செய்தார். ஆகவே, நிகழ்ச்சிகளும் அவற்றின் கட்டுக்கோப்பான வரலாறும் கைகோத்துச் சென்றன. எனவே, ஆறு தொகுதிகளைக்கொண்ட இரண்டாம் உலகப்போரின் வரலாறு பற்றிய மதிப்பீட்டை அறிஞர்களும் ஆராய்ச்சியாளர்களும் தருவது அவசியமாகும். 1940ஆம் ஆண்டு சர்ச்சில் கடந்த நாற்பதாண்டுகளின் வரலாற்றை வாழ்ந்து

கொண்டும், எழுதிக்கொண்டும் இருந்தார். வருங்காலத்திய வரலாற்றறிஞர்கள் தம்முடைய நூல்களைப்பற்றி என்ன முடிவு செய்வார்களென்றும் அவர் சிந்தித்தார். இந்த முன்னோக்கான சிந்தனை, அவர் எழுதியதைப் பாதித்திருக்கவேண்டும். அவர் தம் குறிப்புகளைப் பிற்காலத்திய வரலாற்று ஆதாரங்கள் என்ற முறையில் மிகக் கவனமாகத் தயாரித்தார். சர்ச்சில் இரண்டாம் போர்க் காவியத்தை எழுத ஈடுபட்டபோது, ஏறத்தாழ ஓராயிரம் ஆண்டுகள் அகில ஐரோப்பிய படைமுறை வரலாறு பற்றிய அறிவும் நினைவுகளும் அவரிடம் மிகுந்திருந்தன. ஜெர்மனியில் ஹிட்லர் மட்டுமல்லாமல் மகா ஃபிரடெரிக்கையும், ருஷ்யாவில் ஸ்டாலின் மட்டுமல்லாமல் மகா பீட்டரையும் பற்றி அவர் அவ்வளவு விவரமும் சேகரித்தார். அது போலவே பெட்டெய்னின் ஃபிரான்ஸ் மட்டுமன்று பதினான்காம் லூயிஸ், நெப்போலியன் போனபார்டு காலத்திய ஃபிரான்சையும் அவர் அறிந்திருந்தார். வரலாற்று உணர்வற்ற வேறொரு அரசியல் வல்லுநராக இருந்திருந்தால் ஃபிரான்சின் வீழ்ச்சியும், ருஷ்யா, ஜெர்மனி போன்ற நாடுகளின் எழுச்சியும் அவரை நிலைகுலைத்திருக்கும். நேச நாடுகளின் கூட்டணி எப்படி வெற்றி பெறும் என்பதைப் பழைய வரலாறு சர்ச்சிலுக்கு அறிவுறுத்தியது.

சர்ச்சிலின் வரலாற்றுப் போர்த் தந்திரங்களைப் பற்றிய அறிவு அவரது முடிவுகளைக் குழப்பி இருக்கவும் கூடும். ஐரோப்பாவின் நேர்முனைத் தாக்குதலைவிட அவர் மத்திய தரைக் கடலுக்கும், பால்கனுக்கும் அதிக முக்கியத்துவம் கொடுத்தார். எனினும், அவரது வரலாற்று உணர்வு அவரது போர்த்தந்திரங்களைப்பற்றிய எண்ணங்களை வளமாக்கின என்பது உண்மை. இரண்டாம் உலகப்போர் வரலாற்றை அவர் தொடங்கிய போது அதற்குரிய செய்திகளை அவர் நன்கு அமைத்து வைத்திருந்தார். அளப்பரிய ஆதார வளங்களுடன் சர்ச்சில் தமது நூலுக்கு அதிகாரபூர்வமான வடிவத்தைக் கொடுக்க முடிந்தது. போரின் பல நிலைகளை அவரே பகுத்துக்கொண்டார். இது வருங்காலத்து வரலாற்றறிஞர்களைப் பாதிக்கும் என்பதில் ஐயமில்லை. இரண்டாம் உலகப்போர்வரலாற்று ஆராய்ச்சியின் மையமாக வரலாற்று ஆசிரியரான சர்ச்சில் விளங்கினார்; என்றும் விளங்குவார். இந்நூலில் ஒருவன் எதிர்பார்க்கக் கூடிய பல குறைபாடுகள் உள்ளன. ஆனாலும், சில பகுதிகளில் கம்பீரம் தொனிக்கிறது. நூல் முழுவதும் பெருந்தன்மையும், கண்ணியமும் செறிந்திருக்

கின்றன. தவிரவும், சர்ச்சிலின் பழமையுணர்வு மனித குலத்திற்கு நல்ல காலம் பிறக்கும் என்ற நம்பிக்கையையும் அடக்கமாகப் பறை சாற்றுகின்றது. இந்நூல் போரையும் அழிவையும் கருப்பொருள்களாகக் கொண்டிருந்தும் உள்ளக் கிளர்ச்சியூட்டும் உன்னதமான படைப்பு என்பதை யாரும் ஏற்றுக் கொள்வார்கள்.

சர்ச்சில் வரலாற்றின் மூலம் தாய்நாட்டு மக்களுடன் உரையாடினர். இதுவே, வரலாறு அவருக்கு ஆற்றிய அருந்தொண்டாகும். இங்கிலாந்தை இருள் சூழ்ந்து பல சோதனைகள் அச்சுறுத்திய காலத்தில் நாட்டு மக்களுக்கு வருங்காலத்தின்மீது நம்பிக்கை யூட்டிய தலைவர்களில் சர்ச்சிலுக்கு இணையானவர்கள் எவருமில்லை. இதனை அவர் சாதிக்க முடிந்ததன் காரணமே வரலாற்றில் அவர் கொண்டிருந்த பிடிப்பும், நம்பிக்கையும்தாம். இங்கிலாந்தின் வரலாறு என்பது விடுதலையும், உரிமையும், வாழ்க்கையில் கண்ணியமும் கோரி மக்கள் நடத்திய நீண்ட போராட்டமே. வறுமையும் பேராசையும் சுரண்டலும் ஒரு பக்கமிருந்தாலும், நாகரிக உயர்வும், செழிப்பும் நாட்டின் முன்னேற்றத்தை நோக்கி இயக்கிக் கொண்டுதான் இருந்தன. அரசியல் உரிமைகளின் காவலன் பிரிட்டன். மேற்கு உலகத்தில் வேறெந்த சமுதாயமும் இத்தனை உரிமையுடனும், துணிவுடனும் நடந்து கொண்டதில்லை என்று கூறலாம். இந்த உண்மைதான் சர்ச்சிலிடம் விளங்கிய சக்தியின் ஊற்றாக இருந்தது. அவருக்கு இடர்ப்பாடு வந்தகாலை இடைவிடாத புத்துணர்வு அளித்தது. இங்கிலாந்தின் தேசீய சின்னங்களும் வரலாற்றின் அடிப்படையில் அமைந்தவை. வரலாற்று நினைவுகள் கவனமாக வளர்க்கப்பட்டவை. வரலாற்று மரபுரிமைகள், நாட்டின் மாளிகைகள், கோவில்கள், கோட்டைகள் யாவும் புனிதமானவை. ஆனால், அவை ஃபிரான்சையும் ருஷ்யாவையும்போல் புரட்சியை நினைவுபடுத்தவில்லை. ஜெர்மனியைப் போல் துண்டுபட்டநாட்டை நினைவுறுத்தவில்லை. அவை வரலாற்றின் தொடர்ச்சியையும் தொன்மையையும் நினைவிற்குக் கொண்டுவரும். வரலாற்றில் ஊறித் திளைத்த ஓர் அரசியல் வல்லுநரால் தான் நாட்டு மக்களைத் தட்டி எழுப்ப முடியும்.

கடந்த காலத்தைப்பற்றிச் சர்ச்சில் கொண்டிருந்த அதே கருத்துகளை வேறுபல வரலாற்றறிஞர்களும் கொண்டிருந்தனர். ஜி. எம். டிரெவல்யனும் பழமையில் பற்றுக்கொண்டவர். அவருடைய நூல்களிலும் உலகத்தைப் பற்றி ஆழ்ந்த கவலையும், அவநம்பிக்கையும் தொனித்தது. அதேபோல் 1939ஆம் ஆண்டு

பிரிட்டிஷ் ஆளும் வர்க்கத்தினிடம் நம்பிக்கையொளி மிளிரவில்லை. வேலையின்மையும், பொருளாதார மந்தமும் மக்களை வாட்டியது. ஆனால், அவர்கள் பெற்றிருந்த பழமையுணர்வின் அடிப்படையில் சர்ச்சில் காலத்திற்குத் தேவையான எழுச்சியை ஊட்டமுடிந்தது. அவரது சொல்லழகில் மக்கள் சொக்கிப்போய் மகுடி கேட்ட நாகம்போல் மயங்கி நின்றார்கள்.

அதேபோல் ஆபத்துகள் நீங்கியதும் பழைமையுணர்வும் நிலைபெறவில்லை. உண்மை நிலை உதயமாயிற்று. பழைமைச் சுவையைக் காட்டி இனிமேலும் அவர் மக்களை ஆட்டிப்படைக்க முடியவில்லை. புதிதாக உருவாகி வந்த விஞ்ஞானிகள், தொழில் நுட்ப வல்லுநர், நகர்ப்புறச் செல்வர்கள் ஆகியோர் பழைமையை உயிரற்ற காட்சிப் பொருளாகவே கண்டனர். அதனை வருங் காலத்திற்கு வழிகாட்ட முடியாத கைகாட்டி மரமாகக் கருதினார் கள். அவர்களுக்குப் பழைமைச் செயல் நம்பிக்கையைச் சிறிதும் ஊட்டவில்லை. எந்தப் பழைமைக்காகச் சர்ச்சில் நாளெல்லாம் உழைத்தாரோ அந்தப் பழமை செத்து மடிந்துவிட்டது. பல வகைகளில் அவரை விக்கு (Whig) மரபின் இறுதிச் சின்னம் என்று கூறலாம். சர்ச்சில் கொள்கை ரீதியான மரபுரிமைகளால் கட்டப் பட்டிருந்தார் என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆறுதலோ அல்லது ஆதாயமோ தேடி அவர் வரலாற்றை நாடிச் செல்ல வில்லை. ஆனால், வரலாறு அவர்தம் பேச்சையும், எழுத்தையும் செயலையும் ஊக்கிய பேருண்மையாகும். சர்ச்சில் தாம் நம்பிய கொள்கைகளின் அடிப்படையே வரலாறுதான். பயங்கரமான சுமைகளைத் தாங்கிக்கொண்டு, அவர் தமது நீண்ட பதவிக் காலத்தில் இடைவிடாது செயல்படுமாறு அவரை இயக்கிய அற்புதமான சக்தியே வரலாறுதான். வரலாற்றிற்காக, வரலாற் றுடன் வாழ்ந்தவர் சர்ச்சில். இன்று வரலாற்றில் அவர் வாழ் கின்றார். பிரிட்டனின் மிகக் கடுமையான சோதனைகளிலிருந்து நாட்டைப் பாதுகாத்து, நாட்டின் நாகரிகமும், உரிமையும் நீண்டநாள் வாழ வழி வகுதத வரலாற்றுப் பெருமகனை, வரலாறு படைத்த நாயகனை நாடு மறக்கவில்லை; உலகமும் மறக்கவில்லை. மறக்கவும் முடியாது;

## 26. போரியல் மறவர் வின்ஸ்டன்

'அறுபதாண்டுகளின் முன்னர் ஆங்கிலோ – அமெரிக்க வழி வந்த சிறுவனொருவன் பொம்மைப் போர்வீரர்களை வைத்துப் போலிப் போர்த் தாக்குதல் செய்து விளையாடிக் கொண்டிருந் தான். அவனைக் கண்டவர் எவரும் அவனைக் கவர்ச்சிகரமான இளைஞன் என்று கூறமாட்டார்கள். சாமர்த்தியமான பேச்சு களோ, பிறரைக் கவரும் தந்திரங்களோ அவனிடம் இருந்ததாகத் தெரியவில்லை. தட்டையான மூக்கு, செந்நிற மயிர்.............. அவனை அறிந்தவர்களுக்கு அவன் 'இளந்துருக்கியன்' என்றுதான் தெரியும்; குறும்புத்தனத்தில் அவனை விஞ்சியவர்கள் இல்லை; பிறரை வம்பிற்கிழுக்கும் சக்திகளின் பிறப்பிடம் அவன்'.

இவ்வாறு 1942ல் டாக்டர் எஸ்மெ விங்க்ஃபீல்டு ஸ்ட்ராட் ஃபோர்டு (Dr. Esmey wingfield Stratford) எழுதிய 'த மேக்கிங் ஆஃப் எ ஹிரோ' (The Making of a Hero) என்ற நூலின் தொடக் கத்தில் குறிப்பிட்ட இந்த வர்ணனை சர்ச்சிலைப் பற்றியதாகும். இந்நூலின் பிந்திய பகுதிகளிலும் இது போன்ற அருமையான படப்பிடிப்புகள் உள்ளன. 'ரேண்டால்ஃப்பிரபுவின் சாதனைகளில் அவரது இறுதித் தோல்வியினுல் களங்கப்படுத்தப்படாத ஒன்று உண்டு. அதாவது லியோனர்டு ஜெரோம் என்பாரின் மகளை ரேண்டால்ஃப் திருமணம் செய்துகொண்ட நிகழ்ச்சியே அது. இவர்கள் பெற்றெடுத்த வின்ஸ்டனின் நாளங்களில் அமெரிக்க இரத்தமும் பிரிட்டிஷ் இரத்தமும் ஓடின. அவரிடம் வீரப் பரம் பரைகளான ஜெரோம்களின் திறனும், சர்ச்சில்களின் ஆற்றலும் சற்றும் குறையாமல் விளங்கின என்பதை அச்சமயத்தில் யாரும் சரிவர உணரவுமில்லை, உணரவும் முடியாது. இக் கருத்தை 1960ல் வெளிவந்த 'த யாங்கி மால்பரோ' (The Yankee Malborough) என்ற நூலில் ஆசிரியர் ஆர். டபிள்யூ. தாம்சன் (R. W. Thomson) வலியுறுத்துகிருர். வின்ஸ்டனிடம் சர்ச்சில் பண்புகளைவிட ஜெரோம் பண்புகள்தாம் அதிகம் காணப்பட்டன.

உரங்கொண்ட ஜெரோம்களிடமிருந்துதான் சர்ச்சில் அதிக பண்பு களைப் பெற்றிருந்தார்.

இளம் வயதில் சர்ச்சில் விளையாடும் பொம்மைப்போர் விளையாட்டுகள் அவரது உள்ளத்தையும் பிற்கால வாழ்வையும் பாதித்தன. அவர் ஹாரோ பள்ளியில் அதிர்ஷ்ட வசமாகச் சேர்ந்தார். வகுப்பின் அடிமட்டத்திலிருந்த போதிலும் படைப் பயிற்சிக்கான நுழைவுத் தேர்வில் வெற்றி பெற்றுர். 1930ஆம் ஆண்டு அவர் எழுதிய தமது சுயசரிதையில் இதைப்பற்றிக் குறிப் பிடுகிருர். அவரிடமிருந்த போர்வீரர் பொம்மைகளால்தான் தமக்கு வாழ்வில் நல்ல தொடக்கம் ஏற்பட்டதென்றும், எவ்வாறு நண்பர் ஜாக்குடன் சேர்ந்து போலித்தாக்குதல்களும் முற்றுகை களும் நிகழ்த்துவாரென்றும், தம்மிடமிருந்த 15,000 பிரிட்டிஷ் பொம்மைகளைப் பற்றியும் அந்நூலில் பெருமையாகக் குறிப்பிடு கிருர். ஒரு நாள் சர்ச்சிலின் தந்தையார் அவரது பொம்மை முற்றுகைகளைக் காண நேர்ந்தது. இருபத்தைந்து நிமிடங்கள் அதையே சுவைத்துப் பார்த்துவிட்டுப் புன்முறுவல் பூத்தார். 'படையில் சேர விருப்பம் உண்டா?' இது தந்தையின் கேள்வி. உடனே இசைவு தெரிவிக்கப்பட்டதும் தந்தை மகனின் சொற்களை நம்பினர். வழக்கறிஞராக ஆக்க நினைத்த மகனைப் படையில் சேர்க்கத் தந்தை முடிவுசெய்தார்.

சாண்டர்ஸ்ட் பள்ளியைவிட்டு விலகி 1895ல் நான்காவது ஹுசார் படையில் சர்ச்சில் முதல் படை ஆணை பெற்றுர். எங்குப் போர் நடந்தாலும் அதில் பங்கு பெற விழைந்தார். இதற்காகத் தமது அன்னையாருடையவும். உயர் பதவியிலுள்ள நண்பர்களு டையவும் செல்வாக்கைப் பயன்படுத்தினர். சில ஆண்டுகளில் கியூபா, இந்தியா, வடமேற்கு எல்லை, சூடான், தென்ஆப்பிரிக்கா ஆகிய இடங்களில் நடந்த போர்களில் பங்கு பெற்றுர். சில வேளைகளில் போர் நிருபராகவும் அவரைக் காணலாம். போர் முரசு ஒலித்தால், போர் முழக்கம் கேட்டால் சர்ச்சிலின் உள்ளம் உவகையால் துள்ளும். இரண்டாம் உலகப்போரில் குண்டு வீச்சு கள் பயங்கரமாக நடக்கும் போது அச்சமின்றி வெளியே செல்வார். 'குண்டுகளின் ஓசை எனக்குப் பிடிக்கும்' என்ற பதிலே அவரிடமிருந்து வரும். போர் புரியும் பரவசம் அவரை மெய் சிலிர்க்கச் செய்யும் என்பதற்குரிய சான்றுகளை அவரது சுய சரிதையில் காணலாம். அவர் பங்குபெற்ற எண்ணிறந்த போர் களின் வர்ணனைகளும், அவர் புரிந்த சாகசச்செயல்களும் அதில் இடம் பெறுகின்றன. போரின் நுட்பங்களை அறிந்து கொள்ளும்

ஆர்வம் அவரிடம் பிற்காலத்தில்தான் ஏற்பட்டது. போர் நிருபராக அவர் பெற்ற பெயரும் புகழும் எந்த இளம்படை அதிகாரியும் பெற்றதில்லை.

சர்ச்சில் ரேண்டால்ஃப் பிரபுவின் மகன் என்பதைவிடச் சொந்தத் தகுதியிலே சிறந்த பெருமை பெற்றுள்ளார். முப்பத்தாறு வயதில் அமைச்சராகி, ஆத்திரத்தால் பதவி துறந்து, வருங்காலத்தை அழித்துக்கொண்டு, மனப்பிணிக்குப் பலியாகி நாற்பத்தாறுவது வயதில் அகால மரணமடைந்த தந்தையாரின் நினைவு அவரைவிட்டு அகலவில்லை. தந்தை உயிரோடு இருந்த காலத்தில் அவர் மகனை அரசியலில் தீவிரப் பங்கு எடுக்க அனுமதிக்கவில்லை. எனினும், சர்ச்சில் தந்தையாரைப் போற்றி வழிபட்டார். ஓம்தூர்மானிலிருந்து ஓல்டாமுக்கு வந்து அரசியலில் புகுந்து முதல் தேர்தலில் தோல்வி கண்டார். மீண்டும் தென் ஆப்பிரிக்கப் போரில் பங்குபெற்றுத் திரும்பி, 1900ஆம் ஆண்டில் தேர்தலில் வெற்றி வாகை சூடினார். தந்தையாரைப்போல இருபத்தைந்தாம் வயதில் காமன்ஸ் அவையில் அமரும் பெருமையைப் பெற்றார். காமன்ஸ் அவையில் படைத்துறைத் திட்டங்களை வன்மையாகக் கண்டனம் செய்தார். தந்தையாரின் கதி அவருக்கும் நேரக்கூடாதெனப் பலர் எச்சரித்தார்கள். இதனால், அவர் கட்சிவிட்டுக் கட்சி மாறும்நிலையும் உருவாகியது. தமது முப்பத்தோராம் வயதில் துணை அமைச்சர் பதவி ஏற்றார். 1908ல் லாயிட் ஜார்ஜின் தலைமையில் நிதி அமைச்சராகவும், வர்த்தகக் குழுவின் தலைவராகவும் பொறுப்பேற்றார். அதே ஆண்டில் சர்ச்சிலின் திருமணமும் நிறைவேறியது. 1910ஆம் ஆண்டு அவர் உள்துறை அமைச்சரானார். பல சமூக சீர்திருத்தங்களை நிறைவேற்றினார்.

இக்காலத்தில் சர்ச்சில் வரையறையற்ற படைத்துறை செலவுகளை எதிர்த்தார். 1911ல் அவர் கடற்படைத் துறையின் தலைமை ஏற்றார். ஜெர்மனியுடன் போர் மூளுகின்ற அபாயநிலை உருவாகிக் கொண்டிருந்தது. சர்ச்சிலின் நெருங்கிய நண்பர்களில் ஒருவராக கார்டர் சீமாட்டி எழுதிய 'வின்ஸ்டன் சர்ச்சில் அஸ் ஐ நியூ ஹிம்' (Winston Churchill as I knew him) என்ற நூலில் குறிப்பிட்டுள்ளதாவது, 'வின்ஸ்டன் அழிக்கும் போர்த் தளவாடங்களைப் பற்றி அக்கறை கொண்டிருந்தார். தகர்ப்பது, சிதறடிப்பது போன்ற சொற்களை எப்பொழுதும் கேட்கலாம். எங்கள் படகு ஏட்ரியாடிக் கடலைக் கடந்த போது நான் அதன் கடற்கரையை வியந்தேன். சர்ச்சிலோ அது குறி வைத்துச்

சுடுவதற்கு அருமையான இடம், பார்வைத் தெளிவு கச்சிதமாக இருக்கின்றதென்று போர் மொழியில் பதிலிறுத்தார். மனிதாபி மான ரீதியில் போரின் விளைவுகளைப்பற்றி அவர் சிந்திக்கவில்லை' என்று கூறுகின்றார்.

இத்தகைய மனப்போக்கிற்கு ஒரு காரணம் சர்ச்சிலுக்கும் தளபதி ஃபிஷருக்கும் இடையே வளர்ந்த நட்புறவாகும் எழுபத் தொரு வயதினரான ஃபிஷரை 1914ல் முதல் போர் மூண்ட போது சர்ச்சில் கடல் தளபதியாக நியமித்தார். காலப் போக்கில் இருவருக்கும் இடையே நட்பு கனிந்தது. பொதுப் பிரச்சினை களைப் பற்றி விவாதிக்கும்போது சர்ச்சிலின் கருத்துகள் பழுக்கக் காய்ச்சிய இரும்புபோல் பாய்ந்து வரும். நெருங்கிய நண்பர்கள் தமது கருத்திற்கு உடன்பாடு காட்டவில்லையென்றால் அதனைத் துரோகச் செயலாக அவர் கருதுவார். அவரது நட்பு எதிரி களால் தகர்க்க முடியாத அரண் போன்றது. அவர் நண்பர் களிடம் கொண்டிருந்த விசுவாசமோ வன்மையானது. அவரது உள்ளத்தின் உட்கதவுகள் முதலில் உறவினர்களுக்கும், பின்னர் நண்பர்களுக்கும் திறநது விடப்பட்டதென்பது உண்மை. சர்ச்சில் கடற்படைத்துறை அமைச்சராய்ப் பொறுப்பேற்ற முதல் மாதத்திலேயே அமைச்சகத்தில் பெரிய மாற்றங்களைக் கொண்டு வந்தார். வடகடல் பிராந்தியத்தில் பீரங்கிகள் நிறுவப்பட்டன. போர்க்கப்பல்கள் கட்டப்பட்டன. கப்பல்களில் நிலக்கரிக்குப் பதில் பெட்ரோல் எரிபொருளாகப் பயன்படுத்தப்பட்டது. அவர்தாம் முதல்முதல் கடற்படையில் நீர் மூழ்கிகளையும், கடற் படை விமானங்களையும் புகுத்தியவர். போர்க்காலத் தேவை களுக்கு ஏற்றவாறு கடற்படையை விரிவு செய்யும் ஏற்பாடுகளும் விரைவு படுத்தும் சிறப்பும் சர்ச்சிலுக்கு உரியனவாகும்.

### முதல் போரும் சர்ச்சிலின் முயற்சிகளும்

1914ல் கடல் தளபதியாக இருந்த லூயிஸ் பேட்டன்பர்க் தமது ஜெர்மன் பிறப்புக் காரணமாக எழுந்த வேறுபாட்டினால் பதவி துறந்தபோது ஃபிஷர் அப்பதவிக்கு நியமிக்கப்பட்டார். விரைவில் ஃபிஷரும் பதவி விலகவே வில்சன் மீண்டும் தலைமை ஏற்க ஒப்புதல் தெரிவித்தார். ஆனால், அமைச்சரவை மாற்றங்கள் பற்றிய வதந்திகள் காரணமாக அவரும் பொறுப்பேற்கவில்லை. 1914ல் முதல் போர் மூண்டபோது சர்ச்சில் தளபதிக்குரிய வீரத்துடன் சவாலை ஏற்றார். 'சர்ச்சில் உடனடியாகப் படை திரட்டக் கோரினார்' என்று ஆஸ்குவித், 'மெமார்ஸ் அண்டு ரிஃப்ளெக்ஸன்ஸ்' (Memoirs and Reflections) என்ற தமது சுய

சரிதையில் குறிப்பிடுகிருர்: போர் தொடங்கியதும் சர்ச்சில் கடற்படை கையிருப்புகளை அழைக்குமாறு உத்தரவிட்டார். போர் மூண்டபோது தலைவர்கள் துயரத்தில் ஆழ்ந்தனர். வின்ஸ்டனே வீரச் செயல்புரியப் பெரும் வாய்ப்பு வந்ததாகக் கருதி உற்சாகத்துடன் இருந்தார். இதற்காக யாரும் அவரைக் குறைகூற முடியாது. கடந்த மூன்ருண்டுகளாகக் கடும் சிரமத்துடன் அவர் கப்பற்படையைத் தயாரித்து வைத்திருந்தார். அதன் சாதனைகளைப் புரியத் தக்க காலம் வந்து விட்டது. சர்ச்சிலின் உள்ளுணர்வு உந்திய செயலாக்கத்தால் மிக முக்கியமான விளைவுகள் ஏற்பட்டன. கடற்படை போராட்டத்தின் வரலாறு 1914 ஜூலை 26ஆம் நாள் முதல் தொடங்கியது. உலக நெருக்கடி காரணமாகக் கடலாதிக்கத்தைப் பிரிட்டன் உடனே ஏற்றுக்கொள்ள முடிந்தது. வடகடலுக்குப் பிரிட்டிஷ் கப்பல்கள் இரகசியமாக விரைநதன. வெளிநாட்டுத் தளங்களுக்கெல்லாம் எச்சரிக்கைகள் பறந்தன. இந்த நடவடிக்கைகள் யாவும் பிரதமரின் இசைவின் பேரில் சர்ச்சில் எடுத்துக் கொண்டவையாகும்.

ஜூலை 9ஆம் நாள் காலை 'கிராண்ட் கடற்படை' போர்ட்லாண்டிலிருந்து போர்த்தளமான 'ஸ்கபா ஃப்ளோ' (Scapa Flow) என்ற இடத்திற்குப் புறப்பட்டன. அன்று முதல் ஜெர்மனியின் இரத்த நாளங்களைக் கண்ணுக்குப் புலப்படாத சக்தி ஒன்று அழுத்தத் தொடங்கியது. இந்த மரணப்பிடி 1918 நவம்பர்வரை தளரவில்லை. இவ்வாறு பிரிட்டன் தனது மரபு வழியான கடற்பலத்தைப் பயன்படுத்த முடிந்தது. இதன் விளைவு திடீர் மின்னல் தாக்குதல்கள் அல்ல. படிப்படியாக எதிரியின் உடலின் உள்ளே புகுந்தேறும் கதிரியக்கம் போலிருந்தது. முதல் உலகப்போரில் பிரிட்டிஷ் கப்பற்படை டிராஃபால்கர் போன்ற பெரும் கடல் வெற்றிகளைப் பெருவிட்டாலும், நேசநாடுகளின் இறுதி வெற்றிக்குப் பெரும் துணை புரிந்தது. போர்க்காலத்தில் உயிரிழப்பைவிட நம்பிக்கை இழப்புத்தான் வெற்றிக்கோ தோல்விக்கோ வழி வகுக்கும் என்பது வரலாறு காட்டுகின்ற உண்மை. நேச நாடுகளின் வெற்றிக்குச் சர்ச்சில் வேறு இரு பணிகளையும் ஆற்றினுர். மார்ன் களத்தில் தரைப்படைக்குக் கடற்படை ஆற்றிய பேருதவி மறக்கற்பாலதன்று. மார்ன் வெற்றி மனப்பாங்கின் வெற்றியாகும். இதே சமயத்தில் வடஃபிரான்சிலும் பெல்ஜியத்திலும் எதிரியின் தொடர்புகளை அறுத்துத் தகர்க்கவும் சர்ச்சில் வெற்றிகரமான திட்டம் தீட்டினுர். மூந்நூறு பேரைக் கொண்ட சிறிய கப்பற்படையொன்றை அனுப்பிச்

சர்ச்சில் அது 40,000 துருப்புகளைக் கொண்டது என்ற வதந்தியைப் பரப்பினர். இச் செய்தி கேட்டு அஞ்சி ஜெர்மன் படைகள் பின்வாங்கின.

சர்ச்சிலின் அடுத்த முனைப்பு இதைவிடப் புகழ்பெற்றது. மார்ன் ஆற்றுப் போரைத் தொடர்ந்து இருதரப்பினரும் 'கடலைப் பிடிக்கின்ற' முயற்சியில் ஈடுபட்டனர். புதிய ஜெர்மன் போர்த் தந்திரியான ஃபால்க்கென்யான் (Falkenhayn) குதிரைப் படைகளைப் பெல்ஜியம் கடற்கரை வரையிலும் நிறுத்தினர். ஆங்கிலக் கால்வாயின் துறைமுகங்களை எதிரி கைப்பற்றினால் பேராபத்து விளையும். சர்ச்சில் இத்தகைய அபாயத்தைத் தடுக்கப் பலமுறை வற்புறுத்தியும் எவ்வித நடவடிக்கைகளும் எடுக்கப்படவில்லை. செப்டம்பரில் ஜெர்மனியர் ஆன்ட்வெர்ப்பைத் தாக்கிய பின்னர்தான் கடற்படைகளை அனுப்ப உத்திரவாகியது எனினும், ஆன்ட்வெர்ப்பின் வீழ்ச்சியைத் தடுக்க முடியவில்லை. ஆனால், ஜெர்மனியர் மேற்கில் மேலும் முன்னேறுவது தடைப்பட்டது. பிரிட்டிஷ் படைகள் வந்திறங்குவதற்குரிய அவகாசம் இந்தத் தந்திரத்தினால் கிடைத்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் சர்ச்சில் தமது பதவியைக்கூடத் துறந்துவிட்டு ஆன்ட்வெர்ப் படைக்குத் தலைமை தாங்க முன் வந்தாராம். சர்ச்சிலின் உள்ளத்தை நன்கறிந்த ஆஸ்குவித் தந்தி மூலம் அவரது முடிவை மாற்றிக்கொள்ளுமாறு கேட்டுக்கொண்டார்.

நேச நாடுகளின் கூட்டணி அகழிப்போரில் இறங்கியபோது ஃபிரான்ஸ் ஜெர்மனியிடம் இழந்த பகுதிகளை மீட்பதில் ஆர்வம் காட்டியது. இதற்கான பல தந்திர உத்திகளைச் சர்ச்சில் அவர்களுக்கு எடுத்துக் கூறினர். எதிரியின் அகழித் தடைகளைத் தகர்க்கச் சர்ச்சில் புதியதொரு ஆயுதத்தைக் கண்டுபிடிப்பதன் அவசியத்தை வலியுறுத்தினர். அவரும் கர்னல் ஸ்வின்டனும் (Col. Swinton) செய்த கூட்டு முயற்சிகளால் 1915ஆம் ஆண்டு கோடையில் 'டாங்கிகள்' (Tanks) என்ற கவச வண்டிகள் பிறந்தன. பிரிட்டிஷ் படைகளின் பெரும் பகுதியை பால்கன் நாட்டிற்கு அனுப்புவதால் செர்பியாவிற்கு உதவலாமென்றும், எதிரியைப் பின்னின்று தாக்கலாமென்றும் லாயிட் ஜார்ஜ் கூறினர். இதனை ஆதரித்த காலியெனி (Gallieni) கான்ஸ்டான்டிநோபிலைக் கைப்பற்றுவது பயன்தரும் என்ருர். அதனைத் தொடர்ந்து ஹங்கேரிக்குள் முன்னேறலாம் என்பது அவரது துணிவு. 1915 ஜனவரியில் ருஷ்யாவின் கிராண்ட் டியூக் நிகோலஸ் காகஸஸ் பகுதியில் ருஷ்யப் படைகளுக்கு உதவியாகத்

துணைப்படைகளைத் தருமாறு கோரினர். சர்ச்சில் டார்டனலசுக்கு எதிராகக் கடற்படை அனுப்பலாமென்று பதிலளித்தார். இக்கடற்படை மார்ச்சுத் திங்களில் டார்டனலஸ் பகுதியில் தாக்குதல்களைத் தொடங்கின. எதிரியின் கடல் கண்ணிகளுக்குப் பல கப்பல்கள் பலியாகவே இந்த முயற்சி கைவிடப்பட்டது. உடனே மீண்டும் தாக்குதல்களைத் தொடர்ந்திருந்தால் துருக்கியரைத் திணரடித்திருக்கலாம். போர் ஆலோசனைச் சபை ஈயான் ஹாமில்டன் தலைமையில் ஒரு தரைப்படையை கான்ஸ்டான்டிநோபிலுக்கு அனுப்பியது. போர்த் தளவாடங்கள் இன்மையாலும் மலைக்குன்றுகளில் பதுங்கியிருந்த துருக்கிப்படைகளின் தொல்லையாலும் பிரிட்டிஷ் படை முன்னேற முடியவில்லை. இவ்வாறு அகழிப் போர் தேக்க நிலைக்கு வந்துவிட்டது.

ஜூலையில் மேலும் ஐந்து படைப்பிரிவுகளைப் பால்கனுக்கு அனுப்பப் பிரிட்டன் முடிவுசெய்தது. இதற்குள் துருக்கியர் பலமும் பன்மடங்கு அதிகரித்தது. ஆனல், இந்த முயற்சியில் நம்பிக்கை இழந்த அரசு படைகளைத் திருப்பிப் பெற விரும்பியது. இதனல் கன்சர்வேடிவ் கட்சிக்குள் சர்ச்சிலுக்கும், கிச்சினருக்கும் இடையே எதிர்ப்பு வளர்ந்தது. 1916 ஜனவரிக்குள் படைகள் யாவும், திரும்பப் பெறப்பெற்றன. புதிய அமைச்சரவை பதவி ஏற்றபோது கடற்படை அமைச்சகத்திலிருந்து சர்ச்சில் விலக்கப்பட்டார். சர்ச்சிலின் பதவி இழப்பு அவரது பொது வாழ்வை அழிக்கின்ற நிலைக்கு அதிர்ச்சி தருகின்ற செய்தியாகும். இதுபோல் 'ஜெர்மனி எனது ஆன்மீக வீடு' என்று கூறியதற்காக ஹால்டேன் பதவி இழந்தார். உலக அரசியலில் அற்பமான சாக்கு போக்குகளைக் காட்டி எவ்வாறு பழி வாங்கினர்கள் என்பதற்கு இவ்விரு பதவித் துறப்புகளும் எடுத்துக் காட்டுகளாகும். முதல் போரின் தொடக்கத்தில் சர்ச்சில் ஆற்றிய பணிகளின் பயன்கள் போர் முடிந்த பின்னர்தான் சரிவர உணரப்பட்டன. அன்ட்வெர்ப் முயற்சி, டார்டனலஸ் படையெடுப்பு, டாங்கிகளின் உற்பத்தி ஆகிய பணிகளின் பயன்அளவிட முடியாதவை. டாங்கிகள் பெரும் அளவில் முழுமை பெற்று இரண்டாவது உலகப்போரில் பயன் படுத்தப்பட்டன. இவற்றைத்தக்க நேரத்தில் பயன்படுத்த வேண்டிய இறுதி ஆயுதமாகக் கொள்ளச் செய்த பெருமை சர்ச்சிலுக்கே உரியது.

### பதவி துறந்த போர் வல்லுநர்

அமைச்சர் பதவி துறந்த சர்ச்சில் லங்காஸ்டர் சான்சலராகப் பதவி ஏற்றூர். போர்ஆலோசனைக் குழுவில் அவர் தொடர்ந்

பதவி வகித்தார். 1915ஆம் ஆண்டு ஆலோசனைக் குழுவி லிருந்து விலக்கப்பட்ட பின்னர்தான் ராணுவப்பணிக்குத் திரும்பி மேஜரானார். ராயல் ஸ்காட் ஃப்யூசிலியர்ஸ் (Royal Scot Fusiliers) என்ற புதுமுறைப் படைக்குத் தலைவரானார். 1916ல் ஃபிரான்சிலிருந்து தாய்நாடு திரும்பி மீண்டும் பாராளுமன்றத்தில் உறுப்பினரானார். இருபத்தாறு மாதங்கள் 'வனந்திர சஞ்சா ரத்தின்' பின்னர் லாயிட்ஜார்ஜ் போர்த் தளவாடத் துறைக்குச் சர்ச்சிலை அமைச்சராக்கினார். காபினெட் தகுதி கிடைக்கவில்லை யெனினும் இன்றியமையாத துறையில் செல்வாக்கு வளர வழி ஏற்பட்டது. கடந்த கால அனுபவங்கள் அவர் இனிமேல் எச்சரிக்கையாக இருக்கவும், அதிகார பூர்வமான கருத்துகளை எதிர்க்காமல் இருக்கவும் அவருக்கு நல்ல பாடத்தைக் கற்றுத் தந்தன. போர்த் தளவாட அமைச்சராகச் சர்ச்சில் அதிக சுறு சுறுப்புக் காட்டவில்லையென்று சர் ஆல்பர்ட் ஸ்டெர்ன் (Sir Albert Stern) குறிப்பிடுகிறார். சர்ச்சிலின் அற்புதப் படைப்பான 'டாங்குகளை' உற்பத்தி செய்வதைக் குறைத்த போதும் சர்ச்சில் வாதாடாமல் வாளா விருந்தார். அப்போதுதான் 'டாங்குகள் உங்கள் குழந்தையாயிற்றே, அவற்றை நெரித்துக் கொல்லப் பார்க்கிறார்கள், அதைப் பார்த்துக் கொண்டு பேசாமல் இருக்கும் நீர் ஒரு நேர்மையற்ற அரசியல் வாதி' என்று சர் ஸ்டெர்ன் (Sir Stern) குற்றஞ்சாட்டினார். இதைக்கேட்ட சர்ச்சில் வெகுண் டெழுந்தார். இருவரும் மோதிக்கொண்டதன் பேரில் ஸ்டெர்ன் பதவி துறந்தார். பின்னர் ஸ்டெர்ன் எழுதிய தமது சுய சரிதை யில் சர்ச்சில் பற்றிய பல கருத்துகளைச் சேர்த்திருந்தார். இவை அவரது மதிப்பைக் குறைக்குமென லாயிட் ஜார்ஜ் கேட்டுக் கொண்டதன் பேரில் ஸ்டெர்ன் அவற்றை நீக்கிவிட்டார். போர் அமைச்சகத்தின் விருப்பப்படி ஸ்டெர்ன் பதவி நீக்கம் செய்யப்பட்டாலும் சர்ச்சில் அவர் மீது பரிவு கொண்டார்; விரைவில் அவரைப் 'பொறித்துறைப் போர் ஆணையாளர்' என்று நியமனம் செய்தார். 1917ல் நிகழ்ந்த கேம்ராய் (Cambrai) போரில் டாங்குகளின் சக்தி ஐயமறத் தெளிவாக்கப் பட்டது. உடனே டாங்குகளின் உற்பத்தி அளவும் விரிவாக்கப்பட்டது.

சர்ச்சிலின் இரண்டாவது உலகப் போர் வரலாற்றின் முதல் தொகுதியில், எவ்வாறு ராம்சே மக்டனல்டின் (Ramsay Macdonald) தலைமையில் அமைந்த தேசிய அரசானது ஹிட்லரின் ஆதிக்க வளர்ச்சியைக் கவனத்தில் கொள்ளத் தவறியதென்றும், பிரிட்டனின் படைப் பலத்தைப் பெருக்கிக் கொள்ளக் காலம் தாழ்த்தியதென்றும் குறிப்பிடுகிறார்

ஆனல், 1918 முதல் 1921 வரை சர்ச்சில் போர் அமைச்சராகவும், விமானப்படைத்துறை அமைச்சராகவும் தம் பணி ஆற்றிய காலத்தில்கூட அவர் படைப்பலத்தைப் பெருக்கத் தவறிவிட்டார் என்பது உண்மை. சர்ச்சில் பதவியில் இருந்த காலததில், 'பிரிட்டிஷ் விமானப்படையைக் குழிதோண்டிப் புதைக்கும் நிலைக்கே கொண்டு வந்துவிட்டார் என்று டைம்ஸ் ஏடு எழுதியது. போர் அமைச்சகத்திலிருந்து இளந்தலைமுறைகளும் சர்ச்சிலின் சாதனைகளைப்பற்றி ஏமாற்றமடைந்தன. 1924 முதல் 1929 வரை சர்ச்சில் நிதி அமைச்சராக இருந்த போதும்கூட படைத்துறைக்கான செலவுகளை அவர் குறைத்தார். 1934 முதல் சர்ச்சில் ஜெர்மனியின் அபாயங்களை உணர்ந்து, ஹிட்லருக்கு எதிரான நடவடிக்கைகள் எடுக்கும் முயற்சிகளைச் செய்து வந்தார். ஜப்பான், இத்தாலி ஆகிய நாடுகளின் ஆக்கிரமிப்புத் திட்டங்களும், சர்வதேச சங்கத்தைமீறுவதும் எவ்வளவு ஆபத்தானவை என்பதைச் சர்ச்சில் முதலில் உணரவில்லை. அதுபோல் ஸ்பானிய உள்நாட்டுப் போரில் ஃபாஸிசத் தலையீட்டின் அபாயத்தையும் சர்ச்சில் அப்போது உணரவில்லை.

பிரிட்டிஷ் பாதுகாப்பு ஏற்பாடுகளைப் பொறுத்தவரையிலும் சர்ச்சிலின் செல்வாக்கு அதிகமில்லை. போர் அமைச்சகத்தை விட்டு வெளியேறிய பின்னர்தான் நீர்மூழ்கிகளின் பலம் எவ்வளவு வன்மையானது என்பதை அவர் உணர்ந்தார். விமானத் தாக்குதல்களுக்கு எதிராகப் பிரிட்டிஷ் போர்க்கப்பல்களின் பலமும் போதாது என்ற உண்மையையும் அவர் பிறகுதான் கண்டு கொண்டார். எதிரிகளின் பொருள் வழங்கும் தொடர்புகளைத் தாக்கித் தகர்க்க முடியும் என்பதை அவர் உணரத் தவறினர். வின்ஸ்டன் இன்னும் நான்காவது ஹுசார் படையின் காலத்தில்தான் இருக்கிருர் என்று மற்றவர்கள் கேலி செய்தார்கள். 1937ல் கூட பெரிய போர் ஏற்படாதென்றும் அதில் தமக்குத் தளராத நம்பிக்கை உண்டென்றும் சர்ச்சில் அடித்துப் பேசினர். இதற்குள் ஹிட்லர் ஆஸ்திரியாவைத் தாக்கினர். அடுத்து செக்கோஸ்லாவியா பலியாகுமென்று அவர் எதிர்பார்த்தார். ஹிட்லருக்கு எதிராகப் பிரிட்டன், ஃபிரான்ஸ் ருஷ்யா கூட்டணி உடனடியாக உருவாகியது. ஹிட்லருடன் சமரசம் செய்ய வெண்டுமென்ற சேம்பர்லேனின் யோசனையைச் சர்ச்சில் எதிர்த்தார். அடுத்த ஆண்டில் ஹிட்லரின் ஆக்கிரமிப்புகள் தொடர்ந்து நடந்தபோது சேம்பர்லேன் தமது பழைய எண்ணத்தை மாற்றிக்கொண்டு போலந்திற்குப் பாதுகாப்பு உறுதியளித்தார்.

### சர்ச்சிலும் இரண்டாம் போரும்

இரண்டாவது உலகப்போர் மூண்டபோது சர்ச்சில் மீண்டும் அமைச்சரவையில் இடம் பெற்றார். கடற்படைத்துறை அமைச்சகத்திற்கு உள்ளேயும், வெளியேயும் பல பணிகள் அவருக்குக் கொடுக்கப்பட்டிருந்தன. போரின் நுணுக்கங்களில் ஊறித் திளைக்கும் சர்ச்சில் சில வேளைகளில் முக்கிய பிரச்சினைகளை விட்டுவிடுவார். ஹிட்லரால் விளையக்கூடிய அபாயங்களை அவர் அறிந்திருந்தாலும், படையின் நுட்பங்களில் அவர் அதிக ஆர்வம் காட்டவில்லை. எனினும் அவரிடம் போரார்வம் மிகுந்திருந்தது. 1940 ஜனவரி 20ஆம் நாள் அவர் நிகழ்த்திய வானொலி உரையில் பிரிட்டனும் ஃபிரான்சும் உறுதியாக நின்று ஹிட்லரை முறியடிக்க வேண்டுமென்று அறைகூவல் விடுத்தார். ஆனால், ருஷ்யா ஃபின்லாந்தைத் தாக்குமென அவர் எதிர்பார்க்கவில்லை. ஃபின்லாந்தின் வீழ்ச்சி ஒருவகையில் பிரிட்டனைக் காப்பாற்றியது என்று கூறவேண்டும். இதனைத் தொடர்ந்து சர்ச்சில் நார்வேயின் அட்லாண்டிக் கடற்கரையாகிய நடுநிலப் பகுதியின்மீது தமது கவனத்தைத் திருப்பினார். உடனே கோசாக் (Cossack) என்ற பிரிட்டிஷ் நாசகாரிக் கப்பல் நார்வேயுக்கு அனுப்பப்பட்டது. ஹிட்லர் நார்வேயும் பிரிட்டனும் கூட்டுச் சேர்ந்திருப்பதாக எண்ணி நார்வேயைத் தாக்கினார். ஜெர்மன் படைகள் நார்வேயினுள்ளும், டென்மார்க்கினுள்ளும் புகுந்தன. ஜெர்மனியின் திடீர் திருப்பம் சர்ச்சலின் திட்டங்களைத் தகர்த்தது. இதற்குப் பழியைச் சேம்பர்லேன் ஏற்றுக்கொண்டு பதவி துறந்தார். சர்ச்சில் பிரதமரானார். இது வரலாற்று விதியின் விளையாடல்களில் ஒன்றாகும்.

ஃபிரான்ஸ் ஜெர்மனிக்கு எதிராக நேரடித் தாக்குதல்களில் இறங்கவேண்டுமென்று சர்ச்சில் கூறியபோது, ஃபிரென்சுப் படையிடம் நவீன எதிர்த் தாக்குதல் ஆயுதங்கள் இல்லை என்பதை அவர் புரிந்துகொள்ளவில்லை. இன்னல் சூழ்ந்த இந்த இருண்ட நேரத்தில்தான் சர்ச்சிலின் போர் வெறி பொலிவுற்றது. சர்ச்சில் எடுத்த முடிவுகள் யாவும் சரியானவை என்று கூற முடியாவிட்டாலும், அவர் காட்டிய முன் மாதிரி பாராட்டிற்குரியது. 1940 ஆம் ஆண்டில் ஜூனில் நடந்த 'டன்கிர்க் நிகழ்ச்சி' மக்களுக்குத் தெம்பூட்டியது. சர்ச்சிலின் போரார்வம் மக்கள் செயலில் ஈடுபடுமாறு அவர்களைத் தூண்டியது. சர்ச்சில் எதிரியின் பலத்தைப் பற்றிப் பல தப்புக் கணக்குகளையும் போட்டார். பாறுங்கற்களை உருட்டிவிடக் கூடிய சக்திகொண்ட எதிரிமீது கூழாங்கற்களை வீசியெறிந்ததுபோல் இருந்தன.

சர்ச்சிலின் சில முயற்சிகள்: நல்ல வேளையாக ஹிட்லர் பிரிட்டனுக்கு விமானங்களையும், நீர்மூழ்கிகளையும் அனுப்பாமல் ருஷ்யாவின் பக்கம் தம் கவனத்தைச் செலுத்தினர். இதனுல் பிரிட்டன் பிழைத்தது.

ஓரானில் இருந்த ஃபிரஞ்சுப் படைகள் மீது செய்யப்பட்ட தாக்குதல் ஃபிரஞ்சுக்காரர்களின் நட்புறவை முரிக்கக்கூடிய அளவிற்கு அறிவற்ற செயல். ஃபிரஞ்சுக் கப்பல்கள் ஜெர்மானியர் கையில் வீழ்வதைத் தடுக்க சர்ச்சில் தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டார். பிரிட்டிஷ் கடல்துறைகளிலிருந்த ஃபிரஞ்சுக் கப்பல்கள் பலவந்தமாகக் கைப்பற்றப்பட்டன, அல்லது மூழ்கடிக்கப்பட்டன. மத்தியதரைக்கடல் பகுதியில் அலெக்சாண்டிரியாவில் அட்மிரல் கன்னிங்ஹாம் (Admiral Cunningham) ஃபிரஞ்சுக் கடற்படைகளின் ஆயுதங்களைப் பறிமுதல் செய்தார். சர்ச்சில் இதில் அதிக அவசர கோலமாக நடந்துகொண்டார் என்பது மற்றவர்களின் கருத்து. ஃபிரஞ்சுக்காரர்களுடன் அவர் சமரசம் செய்திருந்தால் விச்சி ஃபிரான்சை (Vichy France ஜெர்மனிக்குக் கையளிக்கும் அளவிற்குப் பிரிட்டனுக்கும், ஃபிரான்சிற்கும் இடையே பகை வளர்ந்திருக்காது. ஃபிரான்சின் வீழ்ச்சிக்குப்பின், சர்ச்சில் செய்த மிகத் துணிவான முடிவுகளில் ஒன்று, ஆப்பிரிக்காவிற்குப் பிரிட்டிஷ் படைகளை அனுப்பியதாகும் இதனுல் இத்தாலியர் சிதறடிக்சப்பட்டனர். நேச நாடுகளின் முன்னேற்றத்திற்கான புதியதோர் வழி திறக்கப்பட்டது. ஆனுல் இத்தாலி ஆப்பிரிக்காவில் முழுத் தோல்வி காண்பதற்குள் சர்ச்சில் பால்கன் நாடுகளில் புதிய படையெடுப்பைத் தொடங்கினர். இதனுல் ஜெர்மனி கிரீசைத் தாக்கியது. இந்த அவசர நடவடிக்கையினுல் பிரிட்டனின் மதிப்புக் குறைந்தது. பிரிட்டிஷ் படைகளின் தளவாடங்களின் பெரும் பகுதி நாசமடைந்தது. கிரீசுக்குப் படைகளை அனுப்பியதால் ஆப்பிரிக்க லிபியாவில் பிரிட்டன் முழு வெற்றியடைய முடியாமல் போனது. ஜெர்மன் படைகள் கிரேக்கக் கடற்கரையில் புகுந்து கொண்டதால், மீண்டும் பால்கன் மீது படையெடுக்க வழியில்லை.

ஹிட்லரின் ருஷ்யப் படையெடுப்பு பிரிட்டனைப் பாதுகாத்த தென்று முன்னர்க் கண்டோம். ருஷ்யப் படைகள் தோற்ருல் அல்லது முடக்கப்பட்டால் ஹிட்லர் பிரிட்டனைத் தாக்குவது உறுதி. ருஷ்யாவே ஜெர்மனியின் வன்மையின் முன்னுல் சிதறிக் கொண்டிருந்தது. பிரிட்டன் பெற்ற புத்துயிர் குற்றுயிராகக் காட்சியளித்தது. இந் நிலையில்தான் நடுவு நிலைமை வகித்து

வந்த அமெரிக்கா வெளிப்படையாகப் பிரிட்டனை ஆதரிக்கத் தொடங்கியது. ஹிட்லரின் ஜெர்மனியைப் போலன்றி ஜப்பான் கடும் பொருளாதாரச் சிக்கலில் இருந்தது. ஜப்பானுக்கு எண்ணெய் செல்வதை அமெரிக்கா தடுத்தால் அமெரிக்காவுடன் ஜப்பான் போர் தொடுப்பது உறுதி. இந்நிலையில் ஹிட்லர் ஜப்பானுக்கு உதவுவார் என்று எதிர்பார்க்கப்பட்டது. அமெரிக்கக் கப்பல்களை ஜப்பான் தாக்கி அவற்றைப் பெர்ல் துறைமுகத்தில் (Pearl Harbour) மூழ்கடித்தது. 'பிரின்ஸ் ஆஃப் வேல்ஸ்' (Prince of Wales) 'ரிபெல்ஸ்' (Rebels) என்ற இரு கப்பல்களும் மலேயாத் திபகர்ப்பத்திற்கு அப்பால் மூழ்கடிக்கப்பட்டன. மலேயாவும், டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகளும் ஜப்பான் வசமாயின. இத் தோல்விகள் யாவும் சர்ச்சிலின் போர்த் தந்திரங்கள் சரியானவைதானு? என்று ஐயப்பாடு கொள்ள வழி வகுத்தன. 1941 மே திங்களில் பிரிட்டிஷ் பேரரசின் கடல் தளபதியான சர் ஜான் டில் (Sir John Dill) எகிப்தின் பாது காப்பைவிட சிங்கப்பூரின் பாதுகாப்பு அதிக முக்கியமான தென்று சர்ச்சிலுக்கு நினைவூட்டினர். சர்ச்சிலோ இந்தக் கருத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. ஜப்பான் பதுங்கிவிடும் என்றும் தூரக் கிழக்கின் பாதுகாப்பிற்குச் சிறிய படை அனுப்பினுல் போதுமென்றும் சர்ச்சில் நம்பினுர்.

ஜுலை 26ஆம் நாளில் சர்ச்சிலும் ரூஸ்வெல்ட்டும் ஜப்பான் மீது பொருளாதாரத்தடைகளைக் கொண்டுவரத் தொடங்கினுர்கள். எண்ணெய் வழங்குவது நிறுத்தப்பட்டது. இதன் விளைவாக அமெரிக்கா முழுமூச்சுடன் போரில் இறங்கியது. பிரிட்டனுக்குத் தோல்வியில்லை என்பது உறுதியளிக்கப்பட்டது. எனினும்: சர்ச்சில் இப்போரில் ரூஸ்வெல்ட்டிற்கும், ஸ்டாலினுக்கும் அடுத்த முக்கியம்தான் பெற்றுர். சர்ச்சில் ஜனுதிபதி ரூஸ்வெல்ட்டின் தளபதி என்ற நிலைக்கு ஆக்கப்பட்டார். 1942ல் அமெரிக்காவும் ருஷ்யாவும் பிரிட்டஷ் ஆங்கிலக் கால் வாயைக் கடந்து ஜர்மனியைத் தாக்க வேண்டுமென்றன; இதனைச் சர்ச்சிலும் பிரிட்டிஷ் தளபதிகளும் எதிர்த்தனர். இத்திட்டம் நிறைவேற்றப்பட்டிருந்தால் அது பெருங்குழப்பத்தில் முடிந்திருக்கும். ஜெர்மனி ஃபிரான்சில் பல படைப்பிரிவுகளைக் கொண்டு இறக்கி இருந்தது. நேசநாடுகளிடம் படைகளை இறக்கும் விமானங்கள்கூடப் போதுமான அளவிற்கு இல்லை. நேசநாடுகள் ஃபிரஞ்சு வட ஆப்பிரிக்காவில் படைகளை இறக்கினுல் ஐரோப்பாவில் ஹிட்லரின் பிடி தளரும் என்று நம்பினுர்கள்; இது எதிர்பார்த்த விளைவை ஏற்படுத்தவில்லை.

ஐசனேவரின் படைகள் டியூனீசியாவிற்குள் நுழையக் கால தாமதம் ஏற்பட்டதால், ஹிட்லரும் முசோலினியும் மத்திய தரைக்கடலைத் தாண்டிப் பெரும்படைகளை டியூனீசியாவிற்குள் அனுப்பிவிட்டனர். ஆறு மாதங்கள் எதிரிப்படைகள் ஆப்பிரிக்காவில் அடைபடவே, நேசநாட்டுப் படைகள் எளிதாக ஐரோப்பாவிற்குள் புக முடிந்தது. ஃபிரஞ்சு வடஆப்பிரிக்காவில் 'ஆபரேஷன் டார்ச்' (Operation Torch) என்ற போர்த் தந்திரத்தின் சிற்பியே சர்ச்சில் தான். இதன் மூலம் இத்தாலி மீது படையெடுத்து அந்நாட்டைப் போரிலிருந்து அப்புறப் படுத்துவதுதான் நோக்கம். ஆனால், மலைநாடான இத்தாலியில் விரைவாக முன்னேற முடியவில்லை. கெசல்ரிங் (Kesselring) தலைமையில் ஜெர்மன் படைகள் நேசநாட்டு முன்னேற்றத்தைத் தடுப்பதில் வெகு திறமையாகச் செயல் பட்டன. ஆனால், நேச நாடுகளின் இத்தாலியப்படையெடுப்புக் காரணமாகக் கால்வாய்ப்பகுதியில் ஜெர்மனியர் மேலும் தங்கள் பலத்தைப் பெருக்கிக் கொள்வது தடைப்பட்டது. சர்ச்சில் கொண்டு வந்த கால்வாய் படையெடுப்புத் திட்டத்திற்கு ஃப்ரூக் ஆதரவு தர வில்லை. ஆனால், பிரிட்டனைப் பொருத்தவரையில் போர்த் துவேசத்தைத் தூண்டிவிடுவதில் சர்ச்சில் தொடர்ந்து தொண்டாற்றினர். அவரது அறிவும், வளமும் இதில் வெளிப்பட்டன. ஆனல், சில சமயங்கள் அவருடைய கருத்துகளை அவர்தம் படைத்தலைவர்கள்கூட ஏற்றுக்கொள்வதற்குத் தயங்கினர்கள். புதிய போர் முறைகளை அவர் விரைவாக ஒப்புக்கொள்ளவில்லை என்பது ஒரு குற்றச்சாட்டு. அதேபோல் தமது ஆலோசகர்களிடமிருந்து அவர் சிறந்த அறிவுரைகளைப் பெறவில்லை என்பதும் அவரது குறிப்புகளிலிருந்து தெரியவருகிறது.

நேசப் படைகளும் நீண்டகால நோக்குகளைக் கொள்ளாமல், உடனடியான விளைவுகளையே பெரிதும் விரும்பின. (நிபந்தனையின்றி சரணுகதி) என்ற மூலமந்திரமே ஜெர்மானியர்களை ஹிட்லரின் தலைமையில் ஒன்றுபட்டு வீராவேசமாய்ப் போர்புரியத் தூண்டியது. சர்ச்சிலைப் பொருத்தவரையில் அவருடன் பணி புரிந்தவர்கள் யாராயிருந்தாலும் அவரிடம் பற்றுக்கொண்டிருந்தார்கள். பிறரிடம் அவர் அன்பும் பரிவும் கொண்டிருந்தார் என்பது உண்மையன்று. அவர் பிறரைக் குறை கூறுவதிலும், கடிந்து கொள்வதிலும் கருணை காட்டமாட்டார். எப்பொழுதும் பிறரிடம் குற்றங்காணும் எஜமானன் பண்புதான் அவரிடம் காணப்படும். சின மூட்டுவதும், பழிவாங்குவதும் அவர் இயல்பு. ஆனல், அவர் எல்லையற்ற ஆற்றல் மிக்கவர்; நகைச்சுவை நிரம்பியவர்; உல்லாசமும், உற்சாகமும் ஊட்டக்கூடியவர்

பலதுறைகளின் தலைவர்களுடன் அதிகாரத்தொடர்பு கொள்ளும் முறையைச் சர்ச்சில் உருவாக்கினார். இதனால் பல துறைகளின் செய்திகள் அவருக்குக் கிடைத்தன. தனிப்பட்டவர்களின் உறவு களிலும் சர்ச்சில் கடுமையாக இருந்தார். ஆனால் டி.ஈ. லாரன்ஸ் (T.E. Laurance) போன்றாரிடம் தனிப்பட்ட அன்பு கொண்டிருந் தார். 1935ல் அவர் இறந்தபோது அவரது இறுதிச் சடங்கில் சர்ச்சில் கண்ணீர் உகுத்தார்.

'போர்த் தந்திரி' என்ற முறையில், சர்ச்சிலை ஆராய்கின்ற போது, முதல்போரில் அவருடைய சிலதிட்டங்கள் தோல்வியுற்ற தால் அவற்றிற்கான பொறுப்பை அவர் ஏற்க வேண்டியிருந் தது. முக்கிய சாதனைகளில் அவர் பெற்ற பங்கிற்கு ஏற்ற பெருமை அவருக்குத் தரப்படவில்லை. அதே இரண்டாம் உலகப் போரில் அவரது சாதனைகளின் முக்கியத்துவமும் மதிப்பும் மிகைப்படுத்தப்பட்டன. முதல் போரில் அருமையான திட்டங் களை அவசரப்படுத்திக் கெடுத்து விடுவதும், கைவசமுள்ள மூல வளங்களைப் பயன்படுத்துவதைத் தக்க முறையில் மதிப்பிடத் தவறியதும் அவருடைய பெருங்குறைகளாகும். தமக்கு உடன் பாடான கருத்துகளை வலியுறுத்துவதிலும் அவர் திகைத்தார். முதல் போரின் கசப்பான எண்ணங்கள் இதன் காரணமாக இருக்கலாம். சிந்தனையாலும், செயலாலும் அவரை ஒரு புரட்சி வாதி என்று சிலர் குறை கூறுகிறார்கள். இது தவறான ஒரு கருத்தாகும். எனினும் அன்று ஜனநாயக நாடுகளில் வின்ஸ்டன் ஓர் அற்புதமான மனிதராக ஒளி வீசினார். அவர்தம் பண்பு களால் மட்டுமல்லாமல் தீவிர சுய முனைப்பாலும், செயலாக் கத்தாலும் பிறரால் வியந்து பாராட்டப்பெற்றார்.

செயல்படத் தொடங்கிவிட்டால் சர்ச்சிலின் போராட்ட உணர்வு அவரை ஆட்டிப் படைக்கும். உணர்ச்சி வெள்ளத்தில் அவர் கணிப்புகளை விட்டுவிடுவார். நியாய உணர்வு தாமதமாக வெளிப்படும். 1939ல் அவர் பிரதமரான போது அவர் எதிர் நோக்கிய ஆபத்தை அவரால்தடுக்க முடியவில்லை. அவர் எதிர் பாராத மேலும் பெரிய ஆபத்துகள் நெருங்கிக் கொண்டிருந்தன. போர் முடிவுற்றதும் மிகவும் சோர்வுற்ற நிலையில் சர்ச்சில் கூறிய தாக புத்பி எழுதியதாவது, 'வரலாற்றின் இறுதி முடிவு எனது தலைமையின் கீழ் பெற்ற வெற்றிகள் மட்டுமின்றி, அவற்றினால் ஏற்பட்ட அரசியல் விளைவுகளும் உள்ளடங்கும்; இந்த அளவு கோலைக்கொண்டு மதிப்பிடுகின்றபோது நான் சிறந்த பணியாற்றி உள்ளேனா இல்லையா என்பதை நான் உறுதியாகக் கூறமுடியாது'. வரலாற்றில் வின்ஸ்டன் பிரிட்டனையும், மேற்கு நாகரிகத்தை யும், ஜனநாயகத்தையும் காப்பாற்றிய வெற்றித் திருமகனாகப் போற்றப்படுகிறார், போற்றப்படுவார் என்பதில் ஐயமில்லை.

# 27. விந்தை மனிதர் வின்ஸ்டன்

ஒருவர் உயிரோடிருக்கின்ற நிலையில் அவர்தம் குண வியல்பை மதிப்பிடுவதற்கு உளவியல் அறிஞர்களுக்குப் போதிய வாய்ப்புகள் உண்டு. அவர்தம் குணச்சிறப்புகளை அவர்கள் ஆழமாகவும், அந்தரங்கமாகவும் அறிந்து கூறமுடியும். ஆனால், இறந்துபோன ஒருவரின் குணச்சிறப்புகளைச் சரிவரச் சித்தரிப்பது சற்று சிரமமான சாதனையாகும். சி.பி. ஸ்நோ (Snow) என்பார் எழுதிய 'வெரைட்டி ஆஃப் மென்' (Variety of men) என்ற, நூலில் சர்ச்சிலின் குணவியல்புகள் உள நூல் இயலின்படி எளிதில் ஊடுருவமுடியாத அளவு அசாதாரணமானவை என்று குறிப்பிடுகிறார். சர்ச்சிலின் வாழ்வையும், வாக்கையும், செயல்களையும் பற்றி எத்தனையோ நூல்கள் எழுதப்பட்டுவிட்டன. இன்னும் எழுதப்பட்டுக் கொண்டிருக்கின்றன. அவற்றில் அவரது அந்தரங்க வாழ்வைப் படம் பிடித்துக்காட்டும் நூல்கள் அரியனவாகும். ஓர் எழுத்தாளராகவோ ஓவியராகவோ, அல்லது கலைஞராகவோ அவரை ஆராய்கின்றபோது சர்ச்சிலின் உள்ளுணர்வுகள் தெளிவாக வெளிப்படவில்லை என்பது ஒப்புக்கொள்ளப்பட்டவொன்றாகும். உள்ளுணர்வுகளை வெளிப்படுத்துவது என்பது சர்ச்சிலின் இயல்பிற்கு ஒவ்வாததது. சர்ச்சில் ஒரு செயல்வீரர். உள்முக ஆய்வு என்பது சுயநம்பிக்கையற்ற கோழைகளின் துணைவன். கரும வீரர்களின் எதிரி.

சர்ச்சில் இன்றும் போற்றப்படுகின்றவர். 1940ல் அவர் தம் வீராவேசமான பேச்சுகளால்தான் பிரிட்டனும், மேற்கு உலகமும் காப்பாற்றப்பட்டன என்று மக்கள் நம்புகிறார்கள். அனைத்துலக மக்களுக்கு அவர் வீரத்தின் சின்னமாகவும், வடிவமாகவும் திகழ்கிறார். அதே நேரத்தில் அவர் ஒரு மனிதனாகவும் வாழ்ந்தார். மனிதரிடம் பொதுவாக உள்ள உணர்ச்சிகள், நம்பிக்கைகள், தேவைகள் அவரிடமும் இருந்தன. அவரது மனிதத்தன்மையை ஆய்வதும், அவர்தம் குறைபாடுகளைச் சுட்டிக்

காட்டுவதும் அந்தப் பெரிய மனிதருக்குச் செய்யப்படும் நிந்தை அன்று. உயர்குடிப் பிறப்பும், சமூகச் சிறப்பும் அவர் பெற்றிருந்த போதிலும், அவரது வாழ்க்கையின் தொடக்கத்தில் அவரிடம் சில தவருன இயல்புகளும் இருந்தன. அவற்றை அவர் முழு வதும் வெல்லவுமில்லை. வாழ்நாள் முழுவதிலும் அவற்றை வென்று அடக்கிவிட அவர் முயன்ருர் என்பது உண்மையாகும். இந்தக் குறைபாடுகள் இல்லாவிடில் அவர் ஒரு சாமன்ய மனித ராகத்தான் விளங்கியிருப்பார். அவரிடம் மாருத நிலையும், நேர்மை நெஞ்சமும் இருந்திருந்தால் தாய் நாட்டின் உணர்ச் சிகளை அவர் தட்டி எழுப்பியிருக்க முடியாது. 1940ஆம் ஆண்டு பிரிட்டன் நெருக்கடி நிலையில் இருந்தபோது வெறும் அடக்க மான ஒரு தலைவராக இருந்திருந்தால், எல்லாம் அழிந்து விட்ட தெனச் சோர்வடைந்திருப்பார். ஆனல் நம்பிக்கையைத் தம தாக்கிக் கொண்ட ஒருவர் மட்டுமே அந்த இருண்ட வேளையில் மக்களுக்குத் தம்பால் நம்பிக்கையை ஊட்ட முடியும். சர்ச்சில் அத்தகைய ஓர் அதிசய மனிதர். வாழ்நாள் முழுவதும் தமது சொந்த அவநம்பிக்கையுடன் போராடியவர். நம்பிக்கையின் மையை முரியடிக்க முடியும் என்பதை அவர்தாம் மற்றவர் களுக்கு எடுத்துக் கூறமுடியும்.

வின்ஸ்டன் தம் குல முதல்வரான மால்பரோ கோமகனைப் போன்று அடிக்கடி மனச்சோர்விற்குப் பலியாவதுண்டு. இந்த உண்மையைப் புரிந்து கொள்ளாமல் சர்ச்சிலின் குணச் சிறப்பு களை உய்த்துணர முடியாது. இப் பிணியைச் சர்ச்சில் 'கரிய நாய்' (Black Dog) என்றழைப்பார். அவர் தமது வாழ்க்கை யில் பெரும் பகுதியை இச்சோர்வை அழிப்பதில் வெற்றி கண்டார். அவர் முதுமையடைந்தபோது எதிர்ப்புச் சக்தி குறைந்தது. அவரது இறுதி நாள்களின் மனச்சோர்வை மொரான் பிரபுகூட இரட்டடிப்புச் செய்திருக்கிருர். இம் மனப்பிணிக்கு கோதே, ஸீமான், ஹியூகோ, உஃப், லூதர், டால்ஸ்டாய் போன்ற பெரியவர்கள் பலியாகி இருக்கிருர்கள். மனச்சோர்விற்கும், பெருஞ் சாதனைகளுக்கும் தொடர்பு உண்டா வென்பது ஆராய்ச்சிக்குரியது. சிலரின் மனநிலைக்குத் தக்கவாறு இது தூண்டுகோலாகவும் பயன்படுவதுண்டு. மனச்சோர்வு ஒருவரை ஆட்கொள்ளும்போது அவர் மனத்தை இருள் சூழ்கிறது. சுறுசுறுப்புக் குறைந்து மந்தநிலை ஏற்படுகிறது. இதனை மேற்கொள்ள சுறுசுறுப்பான வேலைகளில் ஈடுபடவேண்டும். சர்ச்சில் பரம்பரையில் பெரும்பான்மையானவர்கள் இந்தப் பிணியினல் வருந்தினர்கள் என்று மொரான்பிரபு குறிப்பிடு

கிறர். இவர்களில் மால்பரோவும், ரேண்டால்ஃப் பிரபுவும் குறிப்பிடத் தக்கவர்.

### உளப்பான்மையும் குணமேன்மையும்

வின்ஸ்டனின் உடற் கூறுகளை ஆராய்வதும் அவசியம். ஏனெனில் ஒருவரின் உடற் கூறுகளுக்கும், அவர்தம் குணவியல்பு களுககும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஒருவரின் உளப் பான்மையை அவர்தம் வளர்ப்பும், கல்வியும் பாதிக்கின்றன. சர்ச்சிலின் உடற் கூறுகள் பெரும் அளவில் அவரது குடும்ப மரபைத் தழுவி வந்தவை. சர்ச்சில் எல்லையற்ற சக்தி படைத் தவர். தொண்ணூறு ஆண்டுகள்வரைத் தொண்டு கிழவராக வாழ்ந்தார். எண்பதாவது வயதில் ஒருமுறை இதய நோய், மூன்று முறை குளிர் ஜுரம், இருமுறை பக்கவாதம், இரு அறுவை சிகிச்சைகள் ஆகியவற்றிலிருந்து அவர் மீள முடிந்தது. விரும்பியவாறு உண்பது, மது அருந்துவது, புகைப்பது அவரது வழக்கம். தமது எழுபதாம் வயதுவரை அவர் களைப்படைந்த தாகவே முறையிடவில்லை. இத்தகைய அசாதாரண உடற்கூறு பிறப்பில் அவர் பெற்றிருந்த அனுகூலங்களைப் பொருத்திருந்தது. தொட்டால் துவளும் தன்மையுள்ள இச்சிறுவன் எப்படித்தான் வளர்ந்து பெரிய மனிதர் ஆனுரோ? பள்ளியில் பிற மாணவர்கள் அவரைத் துன்புறுத்துவார்கள். குள்ளமான உருவம்; மெலிந்த தசைவளமில்லாத உறுப்புகள்; வெள்ளரித்துப்போன பெண் தன்மையான உடலில் உரோம வளர்ச்சிகூட இல்லை. திக்கு வாயும் தெளிவற்ற பேச்சும் கொண்ட இச்சிறுவனின் சாதனை அசாதாரணமானது என்று மொரான்பிரபு குறிப்பிடுகிறுர்.

1893ல் சர்ச்சில் எழுதிய ஒரு கடிதத்தில், 'நலிவுற்ற உடல் ஒரு சாபக்கேடு; அன்றுட அலுவல்களினுல் ஏற்படும் களைப்பைக் கூடத் தாங்க முடியவில்லை' என்று எழுதினுர். வின்ஸ்டன் ஐந்தடி ஆறரை அங்குல உயரமும் முப்பத்தியொரு அங்குல மார்பளவும் உடையவராக இருந்தார். இது சான்சலர் தகுதிக்குப் போதுமானதன்று. அவர் கவர்ச்சிகரமான தோற்ற மில்லாத சதுரத் தலையன் என்று ஒரு கவிஞரால் வர்ணிக்கப் பட்டார். வின்ஸ்டனிடம் காணப்பட்ட துணிவு அவரது இயல்பான உடற்கூற்றின் விளைவு அன்று. அவரது மன உறுதி உடலில் இருந்த குறைபாடுகளை ஈடு செய்தது. எனினும் அவரது சொந்த வீரத்தைப் பற்றி உள்மனத்தில் அவருக்குச் சில ஐயப் பாடுகள் இருந்தன. இயல்பாக நல்ல உடற்கட்டுள்ளவர்கள் பொதுவாக ஆபத்துகளைக் கண்டு அஞ்சுவதில்லை. இதற்குச்

சர்ச்சில் விதிவிலக்குப் போலிருந்தார். பள்ளியில் பயின்ற காலை சக மாணவர்கள் அவர்மீது கிரிக்கெட் பந்துகளை எறிந்து அச்சுறுத்தியதை அவர் மறக்கவில்லை. இதை நினைக்க அவருக்கு வெட்கமாக இருக்கும். எனவே, மற்றவர்களைப்போல் தாமும் துணிவு கொண்டிருக்கவேண்டுமென்று அவர் உறுதி கொண்டார். அவரது பதினெட்டாம் வயதில் அவரை விரட்டிக்கொண்டு வந்தவர்களிடமிருந்து தப்ப விளையாட்டாக மரத்தின்மீது தாவிய போது மரணத்தின் பிடியிலிருந்து அவர் தப்பினர். கிரேக்க நாவலர் டெமாஸ்தனிசைப்போல் சர்ச்சிலும் தன்னிடமுள்ள உடற்குறையை விடாமுயற்சியால் வென்றார்.

தமது சொந்த இயல்பிற்கு மாறாக வேறு வழியில் தம்மை பலவந்தமாக மாற்றிக் கொண்டவர் சர்ச்சில். 'நான் விரும்பும் போது கடுமையாகத் தோற்றமளிக்க முடியும்' என்று சர்ச்சில் தமது மருத்துவரிடம் கூறினாராம். எனினும் அவரது புகழ் பெற்ற புகைப்படங்களில் காணப்படுகின்ற 'கடுவன் நாய்' (Bull Dog) போன்ற தோற்றம் முதல் உலகப்போருக்கு முன் அவரிடம் காணப்படவில்லை. பிற்காலத்தில் சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு வலிந்து அத்தோற்றத்தைப் பெற்றிருக்கலாம் என்பது மொரான் பிரபுவின் கருத்தாகும். சுவிட்ஸர்லாந்து நாட்டு உளவியல் அறிஞர் யூங்க் (Yung) என்பாரின் கருத்துப்படி மாந்தரில் உள்நோக்குவாரும், வெளிநோக்குவாரும் என்று இரு வகையினர் உண்டு. வெளிநோக்குவார் பெரிதும் புற உலகின் நிகழ்ச்சிகளிலும், இயல்புகளிலும் ஈடுபாடு உடையவர்கள். தமது சொந்த ஆன்மாவின் ஆழத்தைப்பற்றி அவர்கள் அக்கறைப படுவதில்லை. கட்புலனாகாத கருத்துகள், தத்துவ நுட்பங்கள் அவர்களைக் கவர்வதில்லை. தமது மனநிலையின் காரணங்களை அவர்கள் ஆராய்வதில்லை. அதேபோல் உள்ளுணர்வினால் செயல்படுவோரிடம் தீர்க்கமான முடிவெடுக்கும் இயல்பு இருக்காது. பிறரின் நலத்தைப் பற்றி அவர்கள் அக்கரை கொள்ளார். வருவது நோக்காத தார்மீக உணர்வற்ற சாகசச் செயல்வாதிகள் அவர்கள். சர்ச்சிலின் இளமையில் இந்தக் குணம் காணப்பட்டாலும் அவர் உற்சாக மூட்டுவதில் வல்லவர்.

சி. பி. ஸ்நோவின் கருத்துப்படி சர்ச்சிலிடம் முக்கியமான முடிவுகள் எடுக்கிற திறமை இருக்கவில்லை. எடுத்துக்காட்டாக ஜெர்மனியின் படைப்பலம் ஆபத்தாக இருந்த நிலையில் அவர் ஹிட்லரைச் சரிவரப் புரிந்துகொள்ளவில்லை என்பதாகும்.

ஆனால், இத்தகைய உள்ளுணர்வுகள் நம்பத்தக்கவை அல்ல. சர்ச்சிலின் காலிப்போலித் திட்டத் தோல்வியும், டாங்குகளின் வெற்றியும் இதனைத் தெளிவு படுத்தும். அவரிடம் சிறந்த எண்ணங்கள் ஊற்றெடுத்தாலும் அவரால் நீண்ட நேரம் சிந்திக்க முடியாது. பிறரின் கோவையான வாதங்களை அவரால் தொடர முடியாது. அவருடைய துணைவர்கள் தங்கள் எண்ணங்களை ஓர் அரைத் தாளில் எழுதித் தரவேண்டு மென அவர் ஆணை பிறப்பித்தது இதனை எண்பிக்கும். பிறரின் உணர்ச்சிகளைப் பற்றியோ, கொடுத்த வாக்குறுதிகளை மாற்று வதால் பிறர் மனம் படும் தொல்லைகளைப் பற்றியோ அவர் அக்கறைப் படுவதில்லை.

சர்ச்சில் அமைச்சராகவும், பிரதமராகவும் இருந்த காலை அவர்தம் வளமான கருத்துகளையும், கண்டுபிடிப்புகளையும் பலர் புகழ்ந்து பாராட்டியுள்ளனர். அவருடன் பணி புரிந்தவர்கள் அவரைக் கட்டுப்படுத்தவேண்டிய அவசியமும் இருந்தது. அவருடைய திட்டங்கள் சிலவற்றைச் செயல்படுத்தி இருந்தால் அழிவுதான் ஏற்பட்டிருக்குமென்று அவர்கள் கருதுகின்றனர். சர்ச்சிலை அடிக்கடித் துன்புறுத்திய மனச்சோர்வைப் பற்றி ஆராய்வது நலம். இதைத் தோற்கடிக்க அவர் முயன்றார். வின்ஸ்டன், 'துயரத்தின் மனிதர்' என்று ஓர்பென் (Orpen) என்ற ஓவியர் கூறுகிறார். டார்டனலஸ் விவகாரத்தின்பின் தமது பொது வாழ்வு முடிந்து விட்டதாகவே அவர் விரக்தி கொண்டிருந்தார். தாம் இறந்துவிட வேண்டுமெனவும் தினமும் பிரார்த்தனை பண்ணிக் கொண்டிருந்தாராம். இப்பிணி யுள்ளவர்கள் இளைப்பாற்றிக் கொள்வதில்லை. வல்லந்தமாக ஓய்வு கொண்டால் அவர்களை இருள் சூழ்ந்துகொண்டு விடும். சர்ச்சில் பதவி இழக்கும் போதெல்லாம் அவருக்கு இந்நிலை ஏற்பட்டது. ஓவியம் எழுதுதல், எழுத்துவேலை, கட்டிடவேலை முதலிய பொழுதுபோக்குகளில் அவர் ஈடுபட்டார். இவை யெல்லாம் அவர்தம் மனச்சோர்வைப் போக்கக் கையாண்ட வழிகளாகும். இவையாவையும் அவருக்கு முழுவெற்றித் தர வில்லை. சர்ச்சில் தமது வாழ்வில் எத்தனையோ சாதனைகளைப் புரிந்திருந்தும், தமது உள்ளத்தில் ஏற்பட்ட ஒரு காலியிடத்தைத் தம்மால் நிரப்ப முடியவில்லை என்பதை அவர் உணர்ந்தார். சர்ச்சிலின் மகள் சாரான் எழுதிய 'த திரெட் இன் த டேப்பஸ்ட்ரி' (The thread in the Tapestry) என்ற நூலில் தம் தந்தையாரின் பல குணவியல்புகளைப் படம்பிடித்துக் காட்டுகிறார். அவரைப்

புகழ் பல தேடி வந்தாலும் அவரிடம் மனக்குறையொன்று உண்டென்பதை அவரது குடும்பத்தினர் உணர்ந்திருந்தனர்.

'இறுதியில் நான் ஒன்றுமில்லாதிருக்கிறேன்' என்ற அவரது கூற்று அவரது இளமையில் அவரிடம் ஒரே சீராகக் காணப்பட்ட உணர்வுநிலையை விளக்குகிறது. சிறுவயதில் பெற்றோர்களால் அவர் புறக்கணிக்கப்பட்டது அவரது சோர்விற்கு ஒரு காரணமாக இருக்கலாம். அவர் குறைமாதக் குழந்தையாய்ப் பிறந்ததும் மனத்தில் கொள்ள வேண்டிய கருத்தாகும். நாகரிகச் சூழலில் மூழ்கிக்கிடந்த தாயும் குழந்தையை நன்கு பேணி வளர்க்க முடியவில்லை. சர்ச்சிலின் சிறுவயதில் மனமிடிவுகளிலிருந்து காப்பாற்றியவர் திருமதி எவெரஸ்ட் என்ற அவர் தம் தாதியாவார். இதுபற்றி யாரும் வியப்பு அடைய வேண்டியதில்லை. மனச் சோர்வினால் அவதியுறுவோர் பிறர் தம்மீது ஏன் அன்பு செலுத்துகிறார்கள் என்று கேட்பதில்லை. சிறு வயதில் அவர் பெற்றோர் அவரிடம் போதிய ஆர்வமும் அன்பும் காட்டத் தவறியது குறிப்பிடத்தக்கது. சர்ச்சில் அன்னையாருக்கு எழுதும் கடிதங்களில் தமக்கு அடிக்கடி கடிதமெழுத வேண்டுமென்றும் தம்மை வந்து காண வேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறார். வாழ்வின் இன்னல்களில் ஆறுதல் தரக்கூடிய தாயன்பு அவருக்குக் கிடைக்கவில்லை. எனவே, இக்குறைகளை வேறு வழிகளில் நிறைவேற்றிக் கொள்ள அவர் முயன்றார். அவரிடம் காணப்பட்ட பேராவல் இதற்கு ஓர் எடுத்துக்காட்டு. ஆற்றல் கொண்டவரிடம் ஆவலும் இருப்பதில் வியப்பில்லை. சர்ச்சில் வயலட் போன்ஹாம் சீமாட்டியிடம் (Lady Violet Bonham) 'நாமெல்லாம் பூச்சிகள்; ஆனால் நானொரு மின்மினிப்பூச்சி, (Glow Worm) என்ற கூறினாராம்! சர்ச்சில தமது வீரத்தைக் காட்ட மட்டும் போராடவில்லை. நாட்டின் தலைவிதியை நிர்ணயிப்பதற்குத் திருவருள் தெரிந்தெடுத்த கருவியாகவும் அவர் தம்மைக் கருதினார்.

சர்ச்சிலின் ஆணவமும், பொறுமையின்மையும், பிறரைப் பற்றி அக்கறை கொள்ளாத தன்மையும் அவர் மற்றவர்களோடு கூடிவாழத் தகுதியற்றவராகச் செய்திருக்க வேண்டும். இக்குறைபாடுகள் யாவும் சர்ச்சிலின் பெருந்தன்மைக்கு முன் மறைந்துவிட்டன. சர்ச்சிலைப் போன்ற ஒருவர் எவ்வாறு கடமையுணர்வையும், பற்றுதலையும் உண்டாக்க முடிந்தது? பிறரிடம் சேவைகளை எதிர்பார்க்கும் தன்னலவாதிகள் குழந்தைகள் போல்ஆதரவற்று நிற்கும் நிலையும் ஏற்படுகிறது.

சர்ச்சில் உயர் குடியில் பிறந்தவர். சாமான்யமக்களின் வாழ்வைப் பற்றி அவர் ஒன்றும் அறியமாட்டார்; தாம் ஒரு 'தனிப்பிறவி' என்ற எண்ணமும் அவரிடம் மேலோங்கியிருந்தது. தந்தையாரின் வாழ்க்கை வரலாற்றை அவர் எழுத முடிவு செய்ததே உயர்குடிப்பிறப்பின் பெருமையை உணர்த்துவதற்குத்தான். சர்ச்சில் தம் அன்னையாரைப்பற்றிக் கற்பனை செய்தார். 'அவள் மாலைக்காலத்துத் தாரகை; ஆனால், அவளைத் தொலைவில் நின்று தான் நான் காதலித்தேன்' என்று கூறுகிறார். இவ்வாறு எல்லாப் பெண்களையுமே அவர் அழகுணர்ச்சியுடன் கண்டார்; புதுமைப் பொருள்களாகக் கண்டார். சர்ச்சில் தந்தையாரைப்பற்றிக் கொண்டிருந்த கற்பனை உருவம் ஆதைவிடச் சிறந்தது. அவரை வணக்கத்திற்குரிய வீரராக அவர் வழிபட்டார். தமது இருபதாம் வயதில் தந்தையை இழந்தும், அரவது சொற்பொழிவுகளையெல்லாம் மனப்பாடம் செய்வார். பெற்றோர் அன்பைப் பெறாத குழந்தைகள் கற்பனைப் பெற்றோர்களை உருவகித்துக் கொள்வதுண்டு. அல்லது வெறுப்பு உணர்ச்சிகளைக் கொட்டுவதுண்டு.

## குறைகளும் நிறைகளும்

இளம் வயதில் சர்ச்சிலிடம் பிடிவாதம், அதிகாரத்தை எதிர்த்தல், தன்முனைப்பு ஆகிய குணங்கள் காணப்பட்டன. அவர் பள்ளி வாழ்க்கையை வெறுத்ததாக அவருடைய குறிப்புகளில் காணக் கிடக்கிறது. எனினும், அவர் வீட்டிற்கு எழுதிய கடிதங்களில் மகிழ்ச்சியாக இருப்பதாகக் குறிப்பிடுவது வியப்பாக இருக்கிறது. வின்ஸ்டனைப் போர்வெறியன் என்று குறிப்பிடுவது சரியன்று. ஆனால், எதிரியைத் தீமையின் உருவமாகக் கண்டால் அவனை எதிர்ப்பதில் அவருக்குப் புது ஊக்கம் பிறக்கும். ஹிட்லரை இரக்கமின்றி அழித்தொழிக்க வேண்டுமென்று சூளுரைத்தது இதனால்தான். மனச்சோர்வு கொண்டவர்களிடம் சில வேளைகளில் பெருந்தன்மையும், கருணையுள்ளமும் காணப்பெறும். ஆல்ஃபிரட் டக்ஸ் பிரபுவை எதிர்த்து அவர் ஒரு வழக்கில் வென்றபோது அவருக்கு மகிழ்ச்சி ஏற்படவில்லையாம். இவ்வாறு அழிக்கவொரு கையும், அணைக்க வொரு கையும் கொண்டு முரண்பட விளங்குவது சர்ச்சில் போன்றாரின் பண்பு கொண்டவர்கள் இயல்பு. போரில் அவர் ஈடுபாடு கொண்டாலும் வரம்பற்ற ஆயுதக் குவிப்பு, வரிக் கொள்கை, ஆக்கிரமிப்பு ஆகியவற்றை அவர் கண்டித்தார்.

பிறரின் துன்பங்கண்டு மனம் நெகிழும் பண்பும் சர்ச்சிலிடம் இருந்தது. பேரரசின் ஏகாதிபத்தியத்தின் கீழ் ஏழைகள் படும் பாட்டையும் அவர் அறிந்திருந்தார். சிறைக் கைதிகளிடம் பரிவு காட்டினர். இளம் குற்றவாளிகளின் தண்டனையைக் குறைத்தார். சிறையில் சொற்பொழிவுகளுக்கும், இசை நிகழ்ச்சிகளுக்கும், கைதிகள் படிக்க நூல்கள் வழங்குவதற்கும் ஏற்பாடு செய்தார். போயர் போரின்போது அவர் சிறைப்பட்ட அநுபவம் அவரது மனத்தைவிட்டு அகலவில்லை. மேலும் ஏதாவது வேலையில் ஈடுபட்டுக் கொண்டிருந்தால்தான் அவர் மகிழ்ச்சியாக இருப்பார். சுறுசுறுப்பாக இல்லாவிட்டால் பொறுமை இழந்து காணப்படுவார். மனச்சோர்வுள்ளோரின் இயல்புகளில் ஒன்று மரணத்தைப்பற்றிய உள்ளுணர்வு கொள்வதாகும். மருத்துவமனைகளைக் கண்டால் அவருக்கு அச்சம். உலகத்தில் உள்ள சகல பிணிகளும் தமக்கும் உண்டென்று அவர் எண்ணுவார்.

சர்ச்சிலிடம் காணப்பட்ட மற்றொரு குணம் கீழ்ப்படியாமை, அதிகாரத்தை எதிர்த்து நிற்பது. வரலாற்றைத் தவிர பிற பாடங்களில் ஒளிர முடியாத ஒரு சிறுவன் தன்னுறுதியைக் காட்டக் கையாண்ட வழிகளில் கீழ்ப்படியாமையும் ஒன்றாகும். அவரது சொல்வன்மையும் அவருக்கு உறுதுணையாக இருந்த வளமான கொடையாகும். இளமையில் அவரிடம் காணப்பட்ட இசையார்வம் நன்கு வளர்க்கப்படவில்லை. அதன் இனிமையில் அவர் இன்பமும் ஆறுதலும் பெற்றிருப்பார். அவரது கற்பனை படைப்பாற்றல் கொண்டது. அழகான இலக்கிய நடையை அவர் விரும்பினர். கற்பனை விட்ட வழியில் சில வேளைகளில் சர்ச்சில் சென்றாலும் மீண்டும் உண்மை நிலையைக் கண்டு கொள்வார். கம்பீரமான நடையில் தம்முடைய எண்ணங்களை அமைக்கக்கூடிய ஆற்றல் அவரிடம் இருந்தது. இக் கற்பனை போர்த் தந்திரங்களிலும் வெளிப்பட்டது. இளமையில் சொல்லின் செல்வராக அவர் திகழ்ந்தார். தம்மை ஒரு நாவலராக, பிறப்பிலே நாவலராகக் கருதிப் பெருமைப்பட்டார். அவரது இலக்கியத் திறமும் அவருக்கு நிலைத்த புகழைத் தந்தது.

சர்ச்சில் எழுதிய ''பெயின்டிங் அஸ் ஏ பாஸ்டைம்'' (Painting as a Pastime) என்ற நூலில் ஓவியம் எழுதுவதைக் களத்தில் போர் செய்வதற்கு ஒப்பிடுகிறார். பளிச்சிடும் வண்ணங்கள் அவருக்கு மிகவும் பிடிக்கும். மனச்சோர்வுள்ளவர்கள் மந்த நிலையை மறக்க இடைவிடாத செயலாக்கத்தில் ஈடுபடுவார்கள். மனச்சோர்வு கொண்டவர்கள் தாங்களின்றி

எதுவும் சாத்தியமில்லை என்ற மனப்பான்மை கொண்டவர்கள்' பிறரின் தேவைகளை நிறைவேற்றுவதில் உணர்ச்சியில்லாமலும், தம்முடைய தேவைகளை நிறைவேற்றுவதில் விட்டுக் கொடுக்காமலும் இருப்பார்கள். அவர் அன்பிற்குத் தகுதிபெற்ற ஒரே பொருள் அவர்தாம். அவர்தம் தன்னலத்திற்குக் காரணம் இளமையில் நிறை செய்யப்படாததுதான். இளவயதில் சர்ச்சில் உணவுப்பிரியராக இருந்தாரென்றும், சர்க்கரை திருடியதற்காகத் தண்டிக்கப்பட்டாரென்றும் ஒரு செய்தி உண்டு. சுய புகழ்ச்சி பெறுவதிலும் அவர் ஆர்வம் கொண்டவர். அவர் கூறுவதை மற்றவர்கள் குறைகூறுமல் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று அவர் எதிர்பார்ப்பார். நண்பர்களுக்காக எத்துன்பத்தையும் ஏற்றுக்கொள்ளும் பண்பும் அவரிடம் இருந்தது. அது போலவே நண்பர்களும் தம்மிடம் பழக வேண்டுமென்று அவர் விரும்புவார். புகழ்ச்சி, வெற்றிவேட்கை, பதவிமோகம் யாவும் அவரிடம் குடி கொண்டிருந்தன. இவையாவும் குறைவின்றி அவரைத் தேடி வந்தபோதிலும் அவர் மனக்குறை கொண்டிருந்தார்.

சர்ச்சில் பிறரின் நலன்களைப்பற்றி அக்கறை கொள்ளாதவர் என்று குறை கூறப்படுகிறது. தம்மை அறியாமலே சிலவேளைகளில் அவர் பிறரின் மனத்தைப் புண்படுத்துவார். பிறரைப் புறக்கணிப்பார். இது தன்முனைப்புள்ளவர்களின் இயல்பு. தம் தேவைகளைப் பிறர் நிறைவேற்றும் வரைதான் அவர்களைப் பற்றி அக்கறை கொள்வார். அவரைப்போன்றவர்கள் தனி உலகத்தில் வாழும் குழந்தைகளை ஒத்தவர்கள். மனச்சோர்வை எதிர்த்துப் போராடச் சர்ச்சில் தமது வாழ்நாள் முழுவதும் பயன் படுத்திய கருவிகள் அவருக்கு வெற்றியைத் தந்தன. இளமையில் மனச்சோர்வை ஆட்கொள்ளக் கற்றுக்கொண்ட சர்ச்சிலை முதுமையில் அப்பிணி நசுக்கவில்லை. பின்னர்ப் பதவி விலகி இல்லறத்தின் இன்பத்தில் ஓய்வைச் செலவிட அவர் விரும்பினுர்.

சர்ச்சிலின் நீண்டவாழ்வின் இறுதி நாள்கள் சோகம் நிறைந்தவை. அவர் நீண்ட வாழ்வு பெற்றதையே ஒரு சோகமாகக் கருதுவாரும் உண்டு. வாழ்வின் இறுதியில் தமக்காகக் காத்திருக்கும் வெறுப்புணர்ச்சியை அவர் மறக்கவில்லை. முதுமையில் பலர் தங்களின் இளமைக்கால வாழ்வின் கேலிச்சித்திரங்களாகக் காட்சி தருவார்கள். மனச்சோர்வு கொண்டவர்கள் அந்தப் படுகுழியிலிருந்து எழ முடியாதவர்களாகி விடுவார்கள். மொரான் பிரபு சர்ச்சலின் இறுதியாண்டுகளைப்பற்றி அதிகம் கூறுமல் விட்டு

விடுகிறார். அவரது மரணத்திற்குமுன் அவரிடம் பராமுக நிலை யும் அசட்டையும் மலிந்திருந்தன. பேசுவதைக்கூடக் குறைத்துக் கொண்டார். தீக்காயும் இடத்தில் மணிக்கணக்கில் அமர்ந் திருந்து, மனச்சோர்வின் நரகத்திற்கே சென்று விடுவார். இறுதி நாள்களில் மூளைக்கு இரத்தம் செல்வது தடைப்பட்ட நிலையிலும் அவர் தமது மனச்சோர்வை வெற்றி கொள்வதில் காட்டிய வீரத்தை வியக்காமல் இருக்க முடியாது. காலமெல்லாம் அவர் சுமந்த உணர்ச்சிச் சுமை மிகப் பாரமானது.

சர்ச்சிலிடம் விளங்கிய துணிவு புரியாதவொரு புதிராகும். அவர்தம் வாழ்வில் அடைந்த தோல்விகள், ஏமாற்றங்கள் மனச் சோர்வினால் அவதியுற்ற அவருக்கு வாழ்வில் வெறுப்பையும், விரக்தியையும் உண்டாக்கி இருக்கும். ஆனால், சர்ச்சில் வீரமும், துணிவும், விடாமுயற்சியும் கொண்டு நாட்டின் எதிரிகளை அழித்ததுபோலவே, தமக்குள்ளே இருந்த சோர்வெனும் எதிரியையும் அழித்தார். தாம் எத்தகைய வீரப்பெருமகனாக இருக்க வேண்டுமென்று காலமெல்லாம் கனவு கண்டுகொண் டிருந்தரோ, அக் கனவு 1940ஆம் ஆண்டில் பலித்தது. அவரது வாழ்வின் மகத்தான நேரம் அது! இங்கிலாந்தை இருள் சூழ்ந் திருந்த அந்த நேரத்தில், விவேகமும், நிதானமும் கொண்ட தலைவர் நாட்டிற்குத் தேவைப்பட்டார். எல்லாம் அழிந்த நிலை யிலும் வெற்றிக்கனவுகளைக் காணக்கூடிய ஒரு தீர்க்கதரிசியை, வருவது காணக்கூடிய ஒரு வீர மகனை நாடு தேடிக்கொண் டிருந்தது. அத்தகைய வெற்றித் திருமகன்தான் வின்ஸ்டன். புரிய முடியாத புதிராக இருந்த புதுமையான விந்தை மனிதர் தாம் வின்ஸ்டன் சர்ச்சில். காவியமாகியபின் இன்று காலத் தையும் வென்று கோடானுகோடி மக்களின் உள்ளங்களில் கலந்து நிற்கிறார்.

## வின்ஸ்டன் சர்ச்சிலின் வாழ்க்கையின் முக்கிய கட்டங்கள்
## (1874—1965)

**30-9-1874**—வின்ஸ்டன் சர்ச்சில் பிளன்ஹிம் மாளிகையில் பிறப்பு.

**1888-93**—ஹாரோ பள்ளியில் நான்கரை ஆண்டுகள் கல்வி.

**1893**—ஆறு மாதச் சிறப்புப் பயிற்சிக்குப்பின் சாண்டர்ஸ்ட் இராணுவக் கல்லூரியில் பயிற்சி.

**1895**—தந்தையார் ரேண்டால்ஃப் பிரபுவின் மரணம் —நான்காவது ஹுஸார் படையில் ஆணை பெற்றுக் க்யூபா செல்லுதல் — பத்திரிகை நிருபராக வாழ்க்கைத் தொடக்கம்.

**1896-97**—பெங்களூரில் படை அதிகாரியாகப் பணியாற்றுதல்—வடமேற்கு எல்லை படைப்பணி.

**1898**—எகிப்தில் தளபதி கிச்சினரின் படையில் பணியாற்றுதல்—'மாலகந்து ஃபீல்ட் ஃபோரஸ்' என்ற முதல் நூல் வெளியிடுதல்.

**1899**—படையிலிருந்து விலகி ஓல்டாம் தொகுதியிலிருந்து பாராளுமன்றத்துக்குப் போட்டியிட்டுத் தோல்வியுறுதல்—தென் ஆப்பிரிக்கா படைப்பணியில் போயர்களால் கைப்பற்றப்படுதல்—தப்பி ஓடுதல்—'திரிவர் வார்' 'சாவரோலா' புதினம் வெளியிடுதல்;

1900—ஓல்டாம் தொகுதியில் வெற்றி பெற்றுப் பாராளுமன்ற உறுப்பினராதல், பிரிட்டன்—கானடா அமெரிக்காவில் சுற்றுலா—இலண்டன் டு லேடிஸ்மித், ஈயான் ஹாமில்டன்ஸ் மார்ச் என்ற நூல்கள் வெளியிடுதல்.

1901-1904—கட்சி மாறி, 'தடையில்லா வாணிகக் கொள்கை'யின் அடைப்படையில் லிபரல் கட்சியில் சேருதல்.

1906—லிபரல் அமைச்சரவையில் குடியேற்ற நாடுகளின் துணை அமைச்சராகப் பதவி ஏற்றல்—மான்செஸ்டர் வடமேற்குத் தொகுதியில் பாராளுமன்ற உறுப்பினராகக் தேர்வு—'ரேண்டால்ஃப் பிரபுவின்' வாழ்க்கை வரலாறு வெளியிடுதல்.

1908-1910—வர்த்தகக் கழகத்தின் தலைவராக ஆஸ்குவித் அமைச்சரவையில் பணி—தொழிலாளர் சமூக சீர்திருத்தங்கள் — கிளமென்டைன் ஹோஷியர் என்ற மங்கையைத் திருமணம் புரிதல்—மை ஆஃபிரிக்க ஜர்ணி' என்ற நூல் வெளியிடுதல்.

1909—டையானு சர்ச்சிலின் பிறப்பு.

1910—உள்துறையமைச்சராகப் பதவியேற்றல்—வேல்ஸ் சுரங்கத் தொழிலாளர் வேலை நிறுத்தத்தை அடக்குதல்—

1911—சிட்னி வீதி நிகழ்ச்சி—கடல்படைத் துறைத் தலைவராகுதல்—ஒரே மகன் ரேண்டால்ஃபின் பிறப்பு.

1912-14—கடற்படைப் புதுமைகள்—கவச வண்டிகள் உருவாக்கப்படுதல்—அயர்லாந்தின் சுயாட்சிக் கொள்கையை ஆதரித்தல்.

1914—அன்ட்வெஃப் பாதுகாப்பு ஈடுபாடு—ஃபிஷர் கடல் தளபதியாகுதல்—சாரா சர்ச்சிலின் பிறப்பு.

1915—டார்டனலஸ் கடல் தாக்குதல்—சர்ச்சில் கடற்படைத் துறையிலிருந்து விலக்கப்பட்டு லன்காஸ்டர் மாநிலத்தில் சான்சலர் ஆகுதல்—ஃபிரான்ஸில் சிறிது காலம் படைப் பணி.

1916—படையிலிருந்து விலகி ஒய்வு.

1917—லாயிட் ஜார்ஜ் அமைச்சரவையில் போர்த் தளவாட அமைச்சர் ஆகுதல்.

1918—மேரி கோல்டு சர்ச்சிலின் பிறப்பு.

1919-20—போர் அமைச்சராகப் படைச் சீர்திருத் தங்கள்—ருஷ்யாவிலிருந்து பிரிட்டிஷ் படை கள் வாபஸ் பெறுவதை ஆதரித்தல்.

1921—குடியேற்ற நாடுகளின் அமைச்சர்—அயர் லாந்து சுதந்திர நாட்டுடன் உடன்படிக்கை —மையக் கிழக்கில் ஆலோசகர் — டி. இ. லாரன்ஸின் துணையுடன் அராபியர்களுடன் பேச்சு வார்த்தை.

1922—கெமால் அட்டாட்டர்க், துருக்கி நடுநிலைப் பகுதியில் பிரிட்டிஷ் படைகளைத் தாக்குதல். இதன் விளைவாகச் சர்ச்சிலின் பாராளுமன்றத் தேர்தல் தோல்வி.

1924—மேற்கு எசெக்ஸ் பிரதிநிதியாகத் தேர்தலை வென்று பால்ட்வின் அமைச்சரவையில் நிதி அமைச்சராதல்—மீண்டும் கன்சர்வேட்டிவ் களுடன் சேர்தல்.

1925—முதல் நிதி அறிக்கையில் பொன் நாணயத் திட்டத்தை ஆதரித்தல் — விதவைகள், அனாதைகள் ஈட்டுறுதித் திட்டம் கொண்டு வருதல்.

1926—பொது வேலை நிறுத்தத்திற்குத் தீவிர எதிர்ப்பு.

1927—இத்தாலிய சர்வாதிகாரி முசோலினியைச் சந்தித்தல்.

1929—பால்ட்வின் அமைச்சரவை வீழ்ச்சி—பத்து ஆண்டுகள் அரசியல் ஓய்வு.

1930—'மை யர்லி லைஃப்' என்ற சுய வாழ்க்கை வரலாறு வெளியிடுதல்.

1930-35—இந்திய சுயாட்சிக் கோரிக்கையை எதிர்த்தல். —மால்பரோ வாழ்க்கை வரலாறு நூல் வெளியிடுதல்.

1935—இத்தாலி அபிஸினியாவைத் தாக்கியதைக் கண்டித்தல்—பேரரசுப் பாதுகாப்புக் குழுவின் உறுப்பினர்.

1936—எட்வேர்டு மன்னர் முடிதுறத்தல் விவகாரம் —சர்ச்சிலின் செல்வாக்குக் குறைதல்.

1938—மியுனிச் மாநாட்டை 'போரில்லாத தோல்வி' என்று வர்ணித்தல்.

1939—கடற்படைத் துறையில் தலைவர் ஆகுதல்.

1940—படைத்துறை இணைப்புக்குழுவின் தலைவர்—மே மாதம் பிரதம மந்திரி பதவியையும் போர் அமைச்சர் பதவியையும் ஏற்றுக் கொள்ளுதல்—ஜூன் மாதம் புகழ் பெற்ற டன்கிர்க் சொற்பொழிவு நிகழ்த்துதல்—செப்டம்பரில் நாடு காத்த பிரிட்டிஷ் விமானப்படை வீரர்களுக்குப் புகழ்மாலை சூட்டுதல்—அக்டோபரில் கன்சர்வேட்டிவ் கட்சியின் தலைவராகுதல்.

1941—கிரேக்க நாட்டிற்குப் படைகளை அனுப்பி 'அட்லாண்டிக் போரைத்' தொடங்குதல்—ஹிட்லருக்கு எதிராக ருஷ்யாவுக்கு உதவி—'அட்லாண்டிக் சாசனம்' வெளியிடுதல்—டிசம்பரில் பேர்ல் துறைமுக நிகழ்ச்சிக்குப் பின் ஜப்பானுடன் போர் தொடுத்தல்—ரூஸ்வெல்ட்டைச் சந்தித்தல்.

1941—சிங்கப்பூரின் வீழ்ச்சி—இந்தியாவிற்கு கிரிப்ஸ் தூதுவை அனுப்புதல் — இரண்டாவது வாஷிங்டன் மாநாடு—மாஸ்கோ விஜயம்—பெவரின் திட்டத்தை ஒப்புக்கொள்ளுதல்.

1943—ரூஸ்வெல்ட்டுடன் காசாபிளாங்கா மாநாடு —நிபந்தனையற்ற சரணாகதி அறிக்கை—மூன்றாவது வாஷிங்டன் மாநாடு —டெக்ரானில் ஸ்டாலினைச் சந்திந்தல்.

1944—ஐரோப்பிய வெற்றி விழா அறிக்கை—இரண்டாவது கியுபக் மாநாடு — வர்ஸாவில் ஸ்டாலினை மீண்டும் சந்தித்தல்—பாரிஸ் விஜயம்—கிரீஸில் தலையீடு.

1945—யால்டாவில் சர்ச்சில் ரூஸ்லெல்ட், ஸ்டாலின் ஆகியோர் அமைதித் திட்டம்பற்றிப் பேசுதல் பாதுகாப்பாளர் அரசு அமைத்தல்—ஜூலை பொதுத்தேர்தலில் தோல்வி—எதிர்க் கட்சித் தலைவர்.

1946—'ஆர்டர் ஆஃப் மெரிட்' என்ற விருது பெறுதல்—புகழ்பெற்ற 'இரும்புத் திரை' பேச்சு

1947—ராயல் அக்கடமி சர்ச்சிலின் ஓவியங்களை ஏற்றுக் கொள்ளுதல்

1948—ஹேக் நகரில் ஐரோப்பிய மாநாட்டைத் துவக்குதல்—'இரண்டாவது உலகப்போர் வரலாறு' முதல் பாகம் வெளியிடுதல்.

1949—பாரிசவாயு முதல் தாக்குதல்.

1950—ருஷ்யாவுடன் உச்ச மாநாடு யோசனை—வுட்ஃபோர்டு தேர்தலில் வெற்றி.

1951—சர்ச்சில் மீண்டும் பிரதமராகுதல்—ஜனாதிபதி டிருமனைச் சந்தித்தல்

1952—அமெரிக்கக் காங்கிரஸில் உரையாற்றுதல் —ஐசனேவரைச் சந்தித்தல்.

1953—'நைட் ஆஃப் த கார்ட்டர்' என்ற விருது பெறுதல்—இலக்கியத்திற்காக நோபல் பரிசு —ஃபெர்முடா மாநாட்டில் கலந்து கொள்ளுதல்.

1954—அமெரிக்க ஜனாதிபதியை வாஷிங்டனில் சந்தித்தல்.

1955—ராஜினமா — உட்ஃபோர்டில் மீண்டும் வெற்றி.

1956—ருஷ்யத் தலைவர்கள் பூல்கானின் குருஷாவ்வைச் சந்தித்தல் — ஜெர்மனி விஜயம் — ஆங்கில மக்கள் வரலாறு முதல் இரு பாகங்கள் வெளியிடுதல்.

1963—அமெரிக்கக் கவுரவக் குடிமகன் ஆகுதல்.

1964—வுட்ஃபோர்டில் மீண்டும் வெற்றி.

1965—ஜனவரி 25ஆம் நாள் மறைவு— பிளேடன் கல்லறைத் தோட்டத்தில் மீளாத் துயில்.

## BIBLIOGRAPHY


Adam, Sykes, Wit of Winston Churchill (Leslie Frewin, London, W. C. 1963.)

Berlin, Isaiah, Churchill in 1940 (Murray. 1940).

British Broadcasting Corporation, A Selection from broadcast given in memory of Churchill, 24th to 30th June 1965 (B. B. C. Publications).

Broad (Charlie) Lewis, Winston Churchill—A biography (Sidgwick & Jackson 1963).

Charles Eade, The War speeches of Winston S. Churchill (Cassell, 1945).

Vols. Vol. 1. From the rise of Hitler to the invasion of Russia.
Vol. 2. From June 25, 1941—Sept 6, 1943.
Vol. 3. From Sept 11, 1943—Aug 16, 1945.

Churchill, Sarah, A thread in the tapestry (London, Deutsh 1967).

Churchill, Randolp, Spencer Winston Churchill, (London, Heinemann, 1966, 1967).

5 Vols. Vol. 1. Youth, 1874-1900.
Vol. 2. Young Statesman, 1901-1914.
Vol. 3. 1915-1922.
Vol. 4. 1923-1939.
Vol. 5. 1940-1965.

Churchill, Randolph. The Unwritten Alliance (Cassells London, 1953).

Churchill, Randolp, Stemming the tide—Speeches 1951-1952 (Cassell, 1953).

De Mendelssohn Peter, The age of Churchill, (Thames Hudson 1964).

Denis, Churchill: World War II (abridged) (Cassell London, 1959).

Farrel Alan, Sir Winston Churchill, (Faber London, 1962).

Gardner, Churchill in His times, (Methuen, London, 1968).

Gay Boas, Churchill Sir Winston, Selections from his speeches & Writings, (Macmillan & Co, 1966).

Graebner Walter, My dear Mister Churchill (Joseph. London, 1965).

James Robert Rhodes, Lord Randolp Churchill, (London, Weindenfed & Nicolson, 1969).

James Robert Rhodes, Churchill, (London, Weindenfed & Nicolson, 1965).

Malcolm Thomson, Churchill, His Life & Times, (Odhams, London, 1965).

Maurice Ashley, Churchill and his Times, (London, Secks & Warburg).

Moran Charles McMoran, Winston Churchill: The struggle for Survival, (Eyre Spottiswood & Co. 1966).

Moorehead Alan, Churchill and his world, (London, Thames and Hudson, 1965).

Moris Albert George Samuel, Churchill—A Very great Soul, (International Publishing & Co. London, 1957).

Miller Harry, Churchill: Walk with Destiny—(London, Hutchinson, 1965).

Mozley Charles, The State funeral of Churchill (London, Rainhird, 1965).

Observer The, Churchill His Contemporaries—an observer appreciation—(The Observer Press, 1965).

Relman, Churchill Portrait of Greatness (Sidgwick & Jackson, 1965).

Reynold's Quentin James, All about Winston Churchill, (W. H. Allen, London, 1965).

Taylor, J. P. and others, Churchill four faces and the Man, (London, Allen & Co. 1969).

Thomson Reginald Williams, Churchill, (Allen & Co. London, 1963).

Times The, Sir Winston Churchill—1874-1965 (Heinemann, 1965).

Timothy, Churchill: The Island Race, abridged, The four, vols, of History of English Speaking People, (Cassell London, 1964).

Towers Frederick, Sir Winston Churchill, (London, Macdonald & Co, 1965).

Victor Alexander, Churchill, (London, Heinemann, 1964).

Wheeler Bennet, Sir John, Working with Churchill, (Macmillan & Co, 1968).

Yary Kennelt, Churchill and Beaverbrook, ( Eyre Spottiswood & Co).

*JOURNALS*

National Geographical Magazine, Aug. 1965, Eisenhover – D. D. 'The Churchill I Knew'

London News, Feb, 1965.
Howard Lafay— 'Be Ye Men of Valour'.

*BOOKS BY CHURCHILL:—*

Frontiers & Wars-book covering his life as soldier's and war correspondent, Edited into 2 Volumes (London Eyre Spottish-wood. 1962).

1. Malakand Field Force.
2. The River War.
3. London to Lady Smith.
4. Ian Hamilton's March.

History of English speaking People, 4 Volumes, (Cassell 1958 - 1962).

Vol. 1. The birth of Britain,
Vol. 2. The New world,
Vol. 3. The age of revolution,
Vol. 4. The great democracies.

My early Life: a roving commission. (Odhams Press, London, 1949).

The Roar of Lion, (Baker Ltd, London, 1969).
My African Journey, (London Spearman 1964)
Marlborough, Books — I & II (Harrap 1949).
People's Rights (Cameron Hazlehuth, London, 1970).
Painting as Pastime, (Penguins, 1968).
The World Crisis, (Cassell 1963).
The Second World War, in 6 Vols. (Cassell 1959)

Vol. 1. Their first Hour. May 1940—41.
2. Fall of France.
3. The Grand alliance 1) Germany derives East. 2) War comes to America.
4. The onslaught of Japan & Africa redeemed.
5. Closing the ring, May 43—June 1944. Italy won and Teheran to Rome.
6. Triumph & Tragedy. The tide of victory & The Iron curtain.

## கலைச்சொல் அகராதி
### (ஆங்கிலம் — தமிழ்)

**A**

| | | |
|---|---|---|
| Abdication | — | முடி துறத்தல் |
| Admirality | — | கடற்படைத் தலைமை |
| Agdir Crisis | — | அகதிர் சிக்கல் |
| Air Board | — | விமானக் கழகம் |
| Allied powers | — | நேச நாடுகள் |
| Anti—Aircraft Corps | — | விமான எதிர்ப்புப் படை |
| Appendicitis | — | குழல்வால் அழற்சி |
| Aristocrat | — | உயர் குடியாளன் |
| Armoured Train | — | கவச ரெயில் |
| Artillery | — | பிரங்கிப் படை |
| Atlantic Charter | — | அட்லான்டிக் சாசனம் |
| Atom bomb | — | அணுகுண்டு |
| Attorney General | — | அரசாங்கத் தலைமை வழக்கறிஞர் |
| Axis powers | — | அச்சு நாடுகள் |

**B**

| | | |
|---|---|---|
| Bagdad Pact | — | பாக்தாத்து ஒப்பந்தம் |
| Battle of Britain | — | பிரிட்டன் போர் |
| Battle of the Marne | — | மார்ன் ஆற்றுப் போர் |
| Bayonet Drill | — | துப்பாக்கி முனைப் பயிற்சி |
| Boneless wonder | — | எலும்பில்லா அதிசயம் |
| British Commonwealth | — | பிரிட்டிஷ் பொது நலவரசு |
| British Empire | — | பிரிட்டிஷ் பேரரசு |
| British gazette | — | பிரிட்டிஷ் அரசிதழ் |
| Budget League | — | வரவுசெலவுத் திட்டக் கழகம் |

**C**

| | | |
|---|---|---|
| Cabinet Committee | — | அமைச்சரவைக் குழு |
| Cagou Lord | — | காகௌ லார்டு இயக்கம் |

| | | |
|---|---|---|
| Casablanca Conference | — | காசாபிளங்கா மாநாடு |
| Chanceller of Duchy of Lancaster | — | லங்காஸ்டர் கோமக நாட்டின் சான்சலர் |
| Chanak Crisis | — | சாணக் சிக்கல் |
| Charging Committee | — | இணைப்புக் குழு |
| Charlemagne award | — | சார்ல்மென் விருது |
| Civil War | — | உள்நாட்டுப் போர் |
| Coalition Cabinet | — | கூட்டு அமைச்சரவை |
| Coal mines Act | — | நிலக்கரிச் சுரங்கச் சட்டம் |
| Colvin Memorandum | — | கால்வின் தாக்கீது |
| Commissioner of war machinary | — | போர்ப் பொறித்துறை ஆணையாளர் |
| Congress of Europe | — | ஐரோப்பிய மாநாடு |
| Conservatives | — | கன்சர்வேட்டிவ் கட்சி |
| Coral sea | — | பவளக் கடல் |
| Cripps mission | — | கிரிப்ஸ் தூது |
| Czarist Regime | — | சார் மன்னர் ஆட்சி |

**D**

| | | |
|---|---|---|
| Daily Telegraph | — | டெய்லி டெலிகிராஃப் |
| Dardenelles Enquiry Commission | — | டார்டனலஸ் விசாரணைக் குழு |
| Dardenelles Fiasco | — | டார்டனலஸ் சிக்கல் |
| Defence—Co-ordination department | — | பாதுகாப்பு இணைப்புத் துறை |
| Defence of Antwerp | — | அன்டுவெர்ப் பாதுகாப்பு |
| Dervish | — | டெர்விஷ்கள் |
| Disarmamental Conference | — | படை குறைப்பு மாநாடு |
| Divine Right of Kingship | — | தெய்வீக அரசுரிமை |
| Dominions | — | டொமினியன் நாடுகள் |
| Dunkirk Crisis | — | டன்கிர்க் சிக்கல் |

**E**

| | | |
|---|---|---|
| Economic Sanction | — | பொருளாதாரத் தடைகள் |
| Established Church | — | நிறுவப்பட்ட திருச்சபை |
| Europeon Defence Community | — | ஐரோப்பிய பாதுகாப்புத் திட்டம் |
| Expeditionary force | — | திடீர் தாக்குதல் படை |

